# திருக்குற்றாலத் தலபுராணம்

(பொழிப்புரையுடன்)



திருவாவடுதுறை ஆதீனம்

வெளியீடு எண் 275.

உ
சிவமயம்

# திருக்குற்றாலத் தலபுராணம்

(பொழிப்புரையுடன்)

இது,

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து
இருபத்திரண்டாவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாணதேசிக பரமாசாரிய சுவாமிகள்**
கட்டளையிட்டருளியபடி
வெளியிடப்பெற்றது

திருவாவடுதுறை ஆதீனம்
1973

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் தேவாரம்

பண் – காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

" திருந்த மதிசூடித் தெண்ணீர் சடைக்கரந்து தேவி பாகம்
பொருந்திப் பொருந்தாத வேடத்தால் காடுறைதல் புரிந்த செல்வர்
இருந்த இடம்வினவில் ஏலங் கமழ்சோலை இனவண் டியாழ்செய்
குருந்த மணநாறுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்ப லாவே."

திருச்சிற்றம்பலம்

# அணிந்துரை

திருக்குற்றாலம் என்றவுடன் நம் நினைவுக்கு வருவன குற்றால அருவியும் சாரலுமே. திருக்குற்றால அருவி உலக அற்புதங்களில் ஒன்று. அருவியின் எழில்மிகு தோற்றமும், இயற்கைவளமும் கண்களுக்குத் தெவிட்டாத விருந்து. அருவியும் சாரலும் உள்ளத்துக்கும் உடலுக்கும் ஊட்டமளிக்கின்றன. உடல் நலந்தருவதாகவும் உல்லாசத்துக்கிடமாகவும் நமக்கெல்லாம் தென்படுகின்ற திருக்குற்றாலம் இறையுணர்வை ஊட்டும் திருத்தலங்களுள் சிறந்த ஒன்று என்பதையும் பாடல் பெற்ற பாண்டி நாட்டுத் திருத்தலங்கள் பதினான்கில் ஒன்று என்பதையும் நம்மில் பலரும் நினைப்பதில்லை.

இற்றைக்குச் சற்றேறக்குறைய 1300 ஆண்டுகளுக்கு முன் ''நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும்'' ஞானசம்பந்தர் இந்தத் தலத்துக்கு வந்து அருவியையும் சாரலையும் அனுபவித்து குற்றாலநாதரைக் குறும்பலா ஈசராகக் கண்டு பாடி வழுத்தியிருக்கிறார். ''கூதல் மாரி நுண்துளி தூங்கும் குற்றாலம்'' என்றும், ''கோல மஞ்ஞை பேடையோ டாடும் குற்றாலம்'' என்றும், ''கொல்லை முல்லை மெல்லரும் பீனுங் குற்றாலம்'' என்றும் இனிய தமிழில் பாடியிருக்கிறார். இப்படியெல்லாம் புகழ் பெற்ற குற்றாலத்தின் வரலாற்றை அரியதொரு நூல் வடிவில் காட்டியுள்ளார் திரிகூடராசப்ப கவிராயர்.

இலக்கியங்களில் புகழ் வாய்ந்தது திருக்குற்றாலத் தலபுராணம். இந்நூல் அருமையான வாக்கு; தேனினுமினிய தீந்தமிழ்; இயற்கையையும் இறைவனையும் ஒருசேரக்காட்டும் காட்சி; பாவலர்க்கும் புலவர்க்கும் ரசிகர்க்கும் தெவிட்டாத விருந்து.

> ''வற்றாத வடஅருவி படிந்துசங்க வீதிதனில் வலங்கொண் டேகிப்
> பற்றாத பிறைமவுலிப் பரமனையுந் தேவியையும் பணிந்து போற்றிக்
> கற்றார்க ளுடன்கூடிக் கண்ணுதல்சீர் பாடியொரு கடிகைப் போது
> குற்றாலத் திருந்தவர்கள் கயிலாயத் திருப்பர்கற்ப கோடி காலம்.''

இது குற்றாலத்தின் பெருமை.

> ''ஈயறியாப் பூந்தேனே யெழுத்தறியா மறைப்பொருளே
> காயறியாச் செழுங்கனியே கற்பகத்தின் பசுங்கொழுந்தே
> தாயறியாக் கருவிலிருந் தமுதூட்டுந் தாய்த்துணையே
> நீயறியாச் செயலுண்டோ நிகிலபரம் பரமூர்த்தி.''

இது குற்றாலநாதரின் பெருமை. இப்படி எத்தனையோ கவிதைகளை இந்நூலில் வாரி வழங்கியிருக்கிறார் இந்நூலாசிரியர்.

இந்நூலின் புதுப்பதிப்பு இல்லாத நீண்டநாட் குறையைப் போக்க, திருவாவடுதுறை ஆதீன மகாசந்நிதானம் திருவுள்ளங் கொண்டதன் பயனாய் இப்பதிப்பு வெளிவருகிறது. இந்நூலுக்கும் திருவாவடுதுறை மடத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. அருங்கலை விநோதராகவும், ஆற்றல்மிகு சிவயோகியாராகவும் விளங்கிய, 16-வது பட்டம் மேலகரம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அவர்கள் இந்நூலாசிரியரின் வழித்தோன்றல். அவர்களின்பின் வந்த சந்நிதானங்களும் இந்நூலாசிரியரின் பரம்பரையைப் பேணி வருகின்றனர். சைவத்திற்கும், தமிழுக்கும், கலைகளுக்கும் என்றுமே பேரரணாக நிற்பது திருவாவடுதுறை திருமடம். இத்திருமடத்தின் 22-வது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகளின் திருவருளால் வெளியிடப்படும் இந்நூல் ரசிகர்களுக்குப் பெருவிருந்து. ஆதீன வித்துவான் உயர்திரு க. வச்சிரவேல் முதலியார் அவர்களின் பொழிப்புரை நூலை யாரும் படித்துப் பயனடைய உதவுகிறது. மகாசந்நிதானத்திற்கும் உரை ஆசிரியருக்கும் இலக்கிய உலகமும் சமய உலகமும் என்றும் கடப்பாடுடையது.

இங்ஙனம்,

மதுரை,
15—9—73.

**ம. அ. முருகேசன்** பி. ஏ., பி. எல்.,
துணை ஆணையர், இந்து அறநிலைய ஆட்சித்துறை.

# இப்புத்தகத்தில் அடங்கியவை

உ

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

உ

சிவமயம்

# முகவுரை

திருச்சிற்றம்பலம்

வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர்வேங்கைக்
கொம்பார் சோலைக் கோலவண் டியாழ்செய் குற்றாலம்
அம்பால் நெய்யோ டாடல் அமர்ந்தான் அலர்கொன்றை
நம்பான் மேய நன்னகர் போலும் நமரங்காள் !

— திருஞானசம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

திருக்குற்றாலத் தலபுராணம் பொருட்சிறப்பு, உருவின் திரு, ஆக்கியோன் மேன்மை, பயனின் விழுப்பம் என்னும் நான்கு சிறப்புக் களையும் ஒருங்கே பெற்றுள்ளது; அருமையில் எளிய அழகு உடைய தாய், தமிழ்கற்க விரும்புவோரால் முதற்கண் படித்துணரத்தக்க பெருங்காவியம்; வேதாகமப் பொருட் பிழிவும், செந்தமிழ் வழக்கும் பொருள்துறைகளும் அமைந்து, கற்போர் நெஞ்சம் காமுறச் செய்யும் நலனும் இனிமையும் உடையது.

திருக்குற்றாலம் பாண்டிவள நாட்டில் உள்ளது; அந்நாட்டில் திருப்பதிகம் பெற்றுள்ள பதினுன்கு புனிதத்தலங்களுள் ஒன்று; இயற்கை எழில் மிக வாய்ந்து, தன்கண் உறைவோர்க்கு உயிர், உடல் நோய் தீர்த்து உறுதி பயக்கும் சிறப்பினை உடையது; உலகப் பிரசித்தி பெற்றது.

இது மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்று விசேடமும் உடையதாய், 'படைத்தளித்தழிப்ப மும்மூர்த்திகள் ஆயினை' என்னும் திரு எழுகூற்றிருக்கைத் தொடர்க்கு இலக்கியமாகத் திகழ்வது; திரிகூடம், நன்னகர் முதலிய பெயர்களாலும் வழங்கப் பெறுவது.

இதன் பெருமையும் சிறப்பும் வட மொழியில் உள்ள கந்தமா புராணத்தில், சங்கர சங்கிதை, சனற்குமார சங்கிதை என்னும்

இரண்டு இடங்களிலும் கூறப்பட்டுள்ளது; 270 யாண்டுகளுக்கு முன் திருக்குற்றாலத்தில் வாழ்ந்து வந்த சிவமறையோர் அக்காலத்தில் தம்மோடு உடனாகித் திருக்குற்றால நாதர்க்குத் திருத்தொண்டுகள் புரிந்து வந்த அருட்கவி திரிகூடராசப்ப கவிராயரை, அந்நகர் மகிமையைத் தமிழில் உணர்த்தும்படி வேண்டிக் கொண்டார்கள்; அவ்வேண்டுகோளுக்கு இசைந்து இயற்றப்பட்டதே 'திருக்குற்றாலத் தல புராணம்' என்னும் பெயர் உள்ள பேரிலக்கியம்.

இதன்கண் திரிபு, யமகம், மடக்கு, சிலேடை, முரண் முதலிய அணி நலன்களையும், இயற்கை செயற்கை வருணனைகளையும், சிவாகம விதிகள், தத்துவம், சமயம், அறங்களின் கூறுபாடுகள், உலகியல் முதலியபொருள் நலன்களையும் ஆங்காங்குப் படித்துணர்ந்து இன்புறுதல் கூடும்.

இந்தப் புராணத்தின் உயர் நோக்கு உணர்தற்கு இரண்டு எடுத்துக் காட்டுகள் தரப்படுகின்றன:

திருவைந்தெழுத்து தூலம், சூக்குமம் என்னும் இருவடிவில் வழங்குகின்றது. இவற்றுள் தூல உருவே பெரும்பான்மையாக எடுத்துக் கூறப்படுவது; மக்களுக்குப் பெயராக அமைவதும் அவ்வுருவே; ஆயினும், திருவருள் நாட்டம் பெறச் சிந்தித்தற்குரியது சூக்கும உரு என்பதே குருமரபில் உள்ளது. இதில் ஒருவருக்கு ஐயம் வாராது காத்தற்பொருட்டு இப்புராணத்தில் குறும்பலாச் சருக்கத்தில் பின்வருமாறு கூறப்படுகிறது. 'வேதம் இறைவனை நோக்கி நின்று தவம் புரிகின்றது; அப்போது அதுதூல உருவை வழுத்திச் சூக்கும உருவைச் சிந்திக்கின்றது':

"மூலமந் திரத்தை நோக்கி மூலமீ றில்லா மூர்த்தி
தூலமந் திரத்தை ஏத்திச் சூக்கமந் திரத்தை உன்னி"

— குறும்பலா - 10.

திருவாசகத்தில், திருவேசறவுத் திருப்பதிகத்தில் "பச்சைத் தாள் அரவாட்டீ" என இறைவன் அழைக்கப்படுகிறான். இங்குப் "பச்சை" என்றது தோல் என்னும் பொருளைத்தரும். தோலின் செறிந்த நிலையாகிய செதிளைக் காலாக உடைய அரவைத் தன்வயப் படுத்தி நிற்கும் முதல்வன் என்பது பொருள்.

இதில் ஐயம் வாராமைப் பொருட்டு வானவர் வழிபடு சருக்கம் 14 ஆம் செய்யுளில்,

" தேசமர் திருவெண் ணீறும் செங்கைமான் மழுவும் பச்சைத்
தூசணி மருங்குந் தோன்றத் தோன்றினன் மறைக்குந் தோன்றன் "

என ஆண்டுள்ளார். பச்சைத்தூசு - தோல் உடை.

நூல் ஆசிரியரே கூறுகிறார்: யான் கல்வியின் கேடில்விழுச் செல்வமாம் தன்மையைத் தெரிக்கும்முறையில் இத் தலபுராணமாகிய செல்வியை மக்கள் முன் நிறுத்துகின்றேன்; அவளுக்குத் திருவுரு சிவநெறியே ஆகும்; அவள் இரண்டுகண்களே இரண்டு காண்டங்களாகிய பெரும் பிரிவுகள்; முப்பத்திரண்டு சருக்கங்கள் அவள்தன் இலக்கணத்திற் குறைவுபடாத அழகும் வனப்பும் உள்ள உறுப்புக்கள்; ஆங்காங்கு உள்ள துதிகள் அவள்தன் அணிகலன்கள். இவள் கற்போர் கேட்போருக்கு இம்மை, மறுமை, வீடு என்னும் விழுப்பயன் மூன்றையும் அளித்தருள்வாள்.

நூல்வழி - 11

இங்ஙனம், ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயனைப் பிழிந்து தரும் இப் புராணத்தை இயற்றியருளிய ஆசிரியர் 17-ஆம் நூற்றாண்டின் இறுதியில், திருநெல்வேலி மாவட்டம், திருச்சீவரமங்கை (நாங்குனேரி) வட்டம், விசயநாராயணம் என்னும் ஊரில், பரம்பரைச் சைவ வேளாண் குடியில் தோன்றினவர்; அவ்வூருக்கு அணிமையில் உள்ள சிற்றூரில் அவர்தம் குல தெய்வமாகிய சாஸ்தாவின் திருப்பெயரால், இராசப்பன் எனப் பிள்ளைத் திருநாமம் இடப்பெற்றார்.

இளமையிலேயே, திருக்குற்றாலத்திற்குக் கிழக்கே இரண்டு கல் தொலைவில் உள்ள மேலகரம் என்னும் சிற்றூரை வாழும் இடமாகக் கொண்டு திரிகூட முதல்வனுக்கு உழவாரப்பணி முதலிய திருத் தொண்டுகள் இயற்றி வந்தார். அஞ்ஞான்று ஒருநாள் திருக்குற்றாலக் கூத்தப்பிரான் முனிவர்வடிவில் தோன்றி, இவர்தம் நாவில் தாரபஞ்சாக்கரம் தீட்டி, 'நம்மைச் சொற்றமிழ்பாடி வாழ்க' என்று கட்டளையிட்டு மறைந்தருளினர். அதனால், இவர் 'திரிகூட ராசப்ப கவிராயர்' எனப் பெயர் பெற்று குறும்பலா முதல்வனைப் பாடுவாராயினர்.

இவர் இயற்றிய குற்றாலக் குறவஞ்சி உலகப் பிரசித்தி பெற்றது. புராணமும் குறவஞ்சியும் தவிர மேலும் பன்னிரண்டு பிரபந்தங்கள் இவரால் இயற்றப் பெற்றுள்ளன.

(திருக்குற்றால நாதர் திருக்கோயில் முன்மண்டபம், சித்திர சபை முதலிய திருப்பணிகள் செய்த சொக்கன்பட்டிக் குறுநில மன்னர்

சின்னணஞ்சாத்தேவர் இவருக்கு மேலகரத்தில் வீடு, தோட்டம், நன்செய் நிலம் முதலியவற்றை முற்றூட்டாக அளித்துள்ளார். அக் காலத்துத் தென்னாட்டை ஆண்டுவந்த முத்துவிசயரங்க சொக்கநாத நாயகர் இவர் குற்றாலக் குறவஞ்சி பாடி அரங்கேற்றியதற்கு மகிழ்ந்து இவரைத் திருக்குற்றாலநாதர் சந்நிதி பிரபந்த வித்துவான் ஆக்கி, நிலம் முதலியவற்றை அளித்து கி. பி. 1716ல் செப்புப் பொறுப்புப் பட்டயம் தீட்டியுள்ளார்.

இவர் கால்வழியில் வந்த எல்லோரும் இன்றுவரை கவிராயர் களாக இருந்து இவர்தம் கடமைகளைச் செய்து உரிமைகளை அனுப வித்து வருகின்றார்கள். இவ்வாசிரியர்வழி நாலாந் தலைமுறையில் குற்றாலலிங்க கவிராயர் என்னும் திருநாமமுடையவராய் இருந்தவர் களே திருவாவடுதுறை ஆதீனத்து 16 ஆவது பட்டம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் எனப் பிரசித்தி பெற்றவர்கள்.

இத்துணைச் சிறப்புள்ள திருக்குற்றாலத் தலபுராணத்தின் மூல பாடம் முதற்பதிப்பாகக் கொல்லம் 1044 (கி. பி. 1869) பங்குனித் திங்களில் அச்சாகி உள்ளது. பின் இருமுறை அச்சாகி, நான்காம் பதிப்பு, 1951ல் திருக்குற்றாலத் திருக்கோயில் தருமகர்த்தர்களால் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளது; இப்பதிப்பில் புராண ஆசிரியர் வரலாறு முதலியவைபற்றிய ஆராய்ச்சிக் குறிப்புகளும், மதுரைத் தமிழ்ச்சங்க நூற் பரிசோதகர் திரு. மு. ரா. அருணசலக்கவிராயர் எழுதியுள்ள அரும்பத உரைப் பிற்சேர்க்கையும் தரப்பட்டுள்ளன.

இரண்டு ஆண்டுகளுக்கு முன் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் **இருபத்திரண்டாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாணதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்** மேற் குறித்த நான்காம் பதிப்பின் பிரதி ஒன்றையும் ஆதீன நூல்நிலயத்தில் இருந்த முதற்பதிப்பின் பிரதியையும் ஏட்டுச் சுவடிகளையும் அடியே னிடம் கொடுத்தருளி, இப்புராணத்தின் செய்யுள்களுக்குப் பொழிப் புரை எழுதிவரும்படி கட்டளையிட்டார்கள். அவ்வருளாணையைச் சிரமேற்கொண்டு முயன்றமையால் அப்பணி இதுபொழுது நிறை வுறுவதாயிற்று. நான்காம் பதிப்பின் ஆராய்ச்சியும் அரும்பதவுரையும் முகவுரை பொழிப்புரைகளை எழுதுவதற்குப் பெரிதும் துணைசெய்தன. பல இடங்களில் அச்சுப் பிழையைக்கண்டு உண்மை மூலபாடத்தைத் துணிவதற்கு முதற்பதிப்பும் சுவடியும் உதவியாக இருந்தன. இப்

பணியில் அடியேனை உய்த்து ஆட்கொள்ளும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் திருப்பாதப் போதுகளை அடியேன் சிந்தையிலும் சென்னியிலும்கொண்டு நன்றியறிவோடுகூடிய வழிநிலைப் பெரு வந்தனையைச் செய்து கொள்கிறேன்.

ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் திருவருட் கொடையால் திருக்குற்றாலத் தலபுராணம் பொழிப்புரையுடன் ஆதீனப்பதிப்பாக நல்ல முறையில் வெளிவருகின்றது. இவ்வாதீனத்தின் சிறப்புரிமை பூண்ட திராவிட மாபாடியம் அடிக்குறிப்புக்களுடன் விரைவில் வெளிவர உள்ளது.

அன்பர்கள் அனைவரும் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களது பெருங்கருணைத் திருவுள்ளத்திற்கு நன்றி செலுத்தும் கடப்பாடு உடையவர்களாய், அவர்கள் அருளாசியோடு திருக் குற்றாலத்தல புராணத்தைப் பெற்றுக் கற்றும் கேட்டும் மும்மைப்பயன் களையும் பெற்றுய்வார்களாக!

இங்ஙனம்

திருவாவடுதுறை
19—8—1973

**க. வச்சிரவேல் முதலியார்,**
**ஆதீன வித்துவான்.**

# திருக்கோவையார்

திருச்சிற்றம்பலம்

எழில்வா யிளவஞ்சி யும்விரும் பும்மற் றிறைகுறையுண்
டழல்வா யவிரொளி யம்பலத் தாடுமஞ் சோதியந்தீங்
குழல்வாய் மொழிமங்கை பங்கன்குற் றாலத்துக் கோலப்பிண்டிப்
பொழில்வாய் தடவரை வாயல்ல தில்லையிப் பூந்தழையே.

வழியும் அதுவன்னை யென்னின் மகிழும்வந் தெந்தையுநின்
மொழியின் வழிநிற்கும் சுற்றமுன் னேவயம் அம்பலத்துக்
குழியும்ப ரேத்துமெங் கூத்தன்குற் றாலமுற் றும்மறியக்
கெழியும்ம வேபணைத் தோள்பல என்னோ கிளக்கின்றதே.

திருச்சிற்றம்பலம்

# சருக்க அகராதி

## தானவைபவ காண்டம்

## சிவரகசிய காண்டம்



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்திரண்டாவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாணதேசிக பரமாசாரிய சுவாமிகள்**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருக்குற்றாலத் தலபுராணம்

## தானவைபவ காண்டம்

### பாயிரம்

### காப்பு

புயல்காட்டும் பனிவரையின் பிடிதழுவும்
சிவவேழம் பொருப்பில் வானில்
இயல்காட்டும் இருபிடிசேர் முந்நாலு
துதிக்கையன்முன் ஈன்ற ஞானச்
செயல்காட்டும் ஒருகோட்டின் இருகோட்டு
வெண்பிறைவாழ் செக்கர் வானை
மயல்காட்டும் திருமேனி மழைமதச்செண்
பகக்களிற்றை மனத்துள் வைப்பாம்.

பொழிப்புரை: மேகம் தங்கும் இமயமலையில் தோன்றிவளர்ந்த உமையம்மையாகிய பெண்யானை(யைத்) தழுவும் சிவபிரானாகிய வேழம் முருகப்பிரானைத் தருவதற்குமுன் பெற்ற ஞான ஒழுக்கத்தை விளக்கும் ஒற்றைக்கொம்பினையுடைய செண்பகவிநாயகரை மனத்தில் வைத்து நினைப்போம். அவர் தமது ஒற்றைக்கொம்பைப்போன்ற இருமுனைகளை உடைய வெள்ளியபிறைமதி தங்கிய, செவ்வானம் போன்ற திருமேனியை உடையவர்; குளிர்ந்த மதசலத்தின் பெருக்கையுடைய கன்னங்களை உடையவர்.

முருகப்பிரான், வள்ளிமலையிலும் தேவர் உலகத்திலும் (முறையே) இருந்து வளர்ந்த அழகு விளங்கும் வள்ளியம்மை, தெய்வயானை அம்மை ஆகிய இரு பெண் யானை(களைச்) சேரும் முந்நாலு துதிக்கையன், பன்னிரண்டு புகழை உடைய கைகளை உடையவன்.

விசேடக் குறிப்பு: சிவவேழம் துதிக்கையனுக்கு முன் ஈன்ற செண்பகக் களிற்றை மனத்துள் வைப்பாம் என முடித்துக்கொள்க.

பிடிதழுவும் வேழம், இருபிடிசேர் முந்நாலு துதிக்கையனுக்கு முன்ஈன்ற களிறு என யானைக்கு உரிய இயைபு தோன்றக் கூறியது நயம்.

பிடிதழுவும், இருபிடிசேர் - எழுவாய்த் தொடராகவும், இரண்டாம் வேற்றுமைத் தொகை நிலைத்தொடராகவும் கொள்ள உள்ளன.

## கடவுள் வாழ்த்து

### திருக்குறும்பலா ஈசர்

பூமேவு சதுர்முகத்துப் புத்தேளும்
அவனையுந்தி பூத்த தேவும்
தேமேவு நிலமேவி வான்மேவித்
தினந்தேடத் திரிகூடத்துக்
கோமேவு பழம்பொருளைக் குற்றாலப்
பரஞ்சுடரைக் குறும்பலாவின்
மாமேவு மறைக்கொழுந்தைப் பிறைக்கொழுந்தை
வனைந்தானை வணக்கம் செய்வாம். 1

பொ - ரை : தாமரையில் தோன்றிய நான்முகனும், அக்கடவுளை அங்ஙனம் தோற்றுவித்த திருமாலும் இடம் அகன்ற நிலத்தின் கீழ்க் கிளைத்துச்சென்றும், ஆகாயத்தில் பறந்து சென்றும் நாளும் தேடா நிற்ப, (அவர்க்குத் தன்னைக் காட்டாது மறைத்து) திரிகூட மலையில் பொருந்தி எப்போதும் விளங்கும் பழையோன்; திருக்குற்றால நகரில் விளங்கி நிற்கும் பரஞ்சுடர்; குறும்பலாமரத்து அடியில் வீற்றிருக்கும் திருநான்மறைக் கொழுந்து; மதிக்கொழுந்தை முடிக்கு அணிந்துகொண்டோன் : இவ்வியல்புள்ள சிவபிரானை வணங்குவோம்.

வி - கு : தேம் - இடம்; கோ - மலை.

### குழல்வாய்மொழி அம்மை

இமையவரைக் குலக்கொழுந்து கயிலைவரை
மேருவரைக் கிறைவி வேதச்
சிமையவரைத் திரிகூடச் சிவக்கொழுந்து
மணக்கும்ஒரு செழும்பூங் கொம்பு
கமையவரைப் புரக்கஅருட் கடல்சுரந்து
மடைதிறந்த கண்ணாள் என்னுஞ்
சமையவரைத் தலைவிகுழல் வாய்மொழிஅம்
பிகைதிருத்தாள் தலைமேற் கொள்வாம். 2

பொ - ரை : குழல்வாய்மொழி அம்மை இமயமலை அரசன் வரத்திற் பெற்ற குலத்திருமகள்; சிவபிரான் தேவியாதல்பற்றி, திருக்கயிலை மேருமலை இரண்டிற்கும் உரிமைத்தலைவி; முடியினையும் மூங்கிலையும் உடைய வேதவடிவான திரிகூடமலையில் எழுந்தருளியுள்ள சிவக்கொழுந்தாகிய முதல்வன் மணந்து உடன் கொண்டருளும் செழிய பூங்கொம்பு போல்வாள்; பிறர்செய்யும் மிகுதிக்கண் பொறுமையுடையவர்களைக் காத்தற்பொருட்டுத் திருவுளத்திற் பொங்கி எழும் கருணைக்கடலை நெறிப்படுத்தித்தரும் மடைபோன்ற கண்களை உடையாள்; சமயங்களின் அளவிற்கு முதல்வி: இத்தகைய அம்பிகையின் திருவடிகளை முடிமேற்கொண்டு வணங்குவோம்.

வி - கு : கமை - பொறுமை; சமயவரை - வரை - அளவு.

## சித்திரசபை நடராசர்

வானுகி வளியாகிக் கனலாகிப் புனலாகி வளர்பா ராகி
ஊனுகி உயிராகி ஒன்ருகிப் பலவாகி உலகம் யாவும்
தானுகிப் புறமாகி அகமாகி அறம்வளர்த்தாள் தாளம் ஏந்தக்
கோனுகி நடம்புரியும் சித்திரப்பொற் பொதுவுடையான் கோலம் போற்றி. 3

பொ-ரை: ஆகாயம் முதலிய பூதங்களாகி, உடம்பாகி, உயிராகி, தன்னியல்பில் ஒன்ருகி, காரியவேறுபாட்டால் அறிவு விழைவு செயல் என்ருற்போலப் பலவாகி, உலகெலாம் உள்ளும் புறம்புமாய்க்கலந்து தொழிற்படுத்தியும் பொருட்டன்மையால் அவற்றின்வேருகி, உயிர்கள்பொருட்டு அறங்களைச்செய்துகாட்டும் உமையம்மை கண்டு தாளத்தை ஏந்திச் சதிகளைக்காட்ட, அவ்வம்மைக்குத் தலைவனுகித் திருக்கூத்தியற்றும் அழகிய சித்திரசபை நாயகனது திருவுருவத்திற்கு வணக்கம்.

## செண்பகப்பூங்கோதை அம்மை

அம்பரத்தி னிடைத்தோன்று மாருதம்போ லம்பரத்தி லருளாய்த் தோன்றி
அம்பரத்தி னம்பரவா னெருதனுப்போ லிருதனுவு மமைந்தொன் ருகி
அம்பரத்தின் விசிகரம்போ லத்துவித மாகியண்ட மனைத்து மீன்ருள்
அம்பரத்தி னமர்கடந்த வருள்விழிச்செண் பகக்கோதை யடிசார்ந் துய்வாம்.

பொ-ரை: ஆகாயத்தினின்றும் காற்றுத்தோன்றுதல்போல, அழகிய பரம்பொருளிடத்தில் இருந்து அருளென்னும் குணமாய்ப்பிரிந்து காணப்பட்டு, அங்கு அந்நாளில் அழகிய பாரமாகிய ஆகாயத்தில் தோன்றும் வானவில்லைப் போன்று செம்மையும் நீலமும் ஆக அப்பன் அம்மை என்னும் தம் இருவர் திருமேனிகளும் உடனுகி இருத்தலால் பொருள் தன்மையால் ஒன்றேயாகி, கடலில் தோன்றும் அலைபோலத் தானும் உலகமும் அத்துவிதமாகி (இருமையின் ஒருமையாகி) உலகனைத்தையும் படைத்தவளாகிய செண்பகக்கோதையம்மையின் திருவடிகளைச் சார்ந்து உய்வோமாக. அம்மையின் கண்கள் அம்பையும் அரத்தையும் வெல்லுந்தகைய.

வி-கு: அம்பரம் - ஆகாயம். அம்பரம் - அழகிய பரம்பொருள் (சிவம்); அம்பர் அத்தினம் - அங்கு அந்நாளில்; பர - பாரமாகிய; இருதனு - சிவஞ் சத்திகளின் திருவுருக்கள்; அம்பரம் - கடல்; விசிகரம் - அலை; அம்பு அரத்தின் அமர்கடந்த - எனப் பிரித்துப் பொருள் கொள்க.

## திரிகூட நாதர்

பொன்பூத்த நறையிதழிப் பூமாலை பொன்னரிய மாலை யாகக்
கொன்பூத்த புயங்கவெள்ளிக் கொடிவேய்ந்த சடைப்பவளக் கொடியாம் வீடு
மன்பூத்த மணவறையா மதிவிளக்கா மலர்கண்மதுத் தாரை வார்ப்பத்
தென்பூத்த நதிமாதைச் சீர்வேட்குந் திரிகூடச் சிவன்சீர் வேட்பாம். 5

பொ-ரை: பொன்போன்ற தேன்பொருந்திய கொன்றைமாலையே அரிய பொன்மாலையாக, பெருமையுள்ள நாகங்களாகிய வெள்ளிக்கொடி படர்ந்த

பவளக்கொடி போன்ற சடைமுடியே நிலைபெற்ற மண அறையாக, பிறைமதியே விளக்காக, முடியில் உள்ள மலர்கள் தேனுகிய நீர்த்தாரையை ஊற்ற அழகிய கங்கையாகிய கன்னியைச் சிறப்புடன் மணஞ்செய்துகொள்ளும் திரிகூடமலை இறைவனது புகழை விரும்பிச் சொல்வாம்.

## ஞான பராசத்தி

### வேறு

பூதபல பேதவுயிர் தேககர ணுதிமுறை போகபுவ னுதிகளெலா
மாதியுமை வாணிதிரு வாயகில லோகநிறை வாகவருள் கூருமொருதாய்
நாதர்கயி லாசகிரி வாசர்திரி கூடநட ராசருட னுதவடிவாய்
வேதமொழி யோதிவிளை யாடுகுழல் வாய்மொழிமெய்ஞ் ஞானபரை பாத
[நினைவாம். 6

பொ - ரை: அருண்ஞானவடிவாகிய பராசத்தியார், தோன்றியுள்ள பல வேறுவகைப்படும் உயிர்களுக்குத் தனுகரண புவனபோகங்களைப் பழைய முறைப் படி ஆதிசத்தி, உமை, திரு, வாணி என நின்று எல்லா உலகங்களிலும் நிறை வாக வைத்தருளிய ஒரு தாய் ஆவர்; முதல்வரும் கயிலைமலைவாணரும் திரிகூட நாதரும், அம்பலக் கூத்தருமாகிய சிவபிரானுடன் நாதவடிவில் ஒன்றியிருந்து வேதமொழிகளை ஓதி விளையாடுகின்றவர்; குழலினும் இனிய வாய்மொழியை உடையார்: அவர்தம் திருவடிகளை நினைப்போம்.

## தக்கிணுமூர்த்தி

### வேறு

ஆல்வருக்கந் தனிலுயர்ந்த வடநிழற்கே தென்முகங்கொண் டறவோ ராய
நால்வருக்கு ளிருவருக்கு மொருவருக்கு நவின்றருளி நவிலொ ணுத
நூல்வருக்க மொருவருக்கு நுவலாம னுவன்றனை நுதற்கண் ணுனைப்
பால்வருக்கைக் கனியையருட் பசுந்தேனைப் பரவாமற் பரவல் செய்வாம். 7

பொ - ரை: ஆல் இனத்தில் உயர்ந்த வட ஆலின்நிழலில் தெற்குத்திசை நோக்கி ஞானுசிரியராய் இருந்தருளிச் சனகர் முதலிய நால்வருக்குள் மூவருக்கு வேதாகமப் பொருள் துணிபு உணர்த்தி, ஒருவருக்குச் சொல்லிறந்த ஞான போதகத்தை இருந்தபடி இருந்து உணர்த்தியருளிய நெற்றிக்கண் உடைய பரம் பொருளை, பாலும் பலாக்கனியும் புதியதேனும் அனையானை உள்ளத்தால் பரவு வோம் ஆக.

## மூத்தபிள்ளையார்

கங்கையா ராம்பலைப்பூங் கவுரிநுதற் சிந்துரத்தைக் கயிலை யாளி
செங்கையார் மாதங்கத் திருமுனியைத் தேவேந்தர் திக்கு வேந்தர்
பங்கயா சனர்முதலோர் முடிமலர்த்தும் பியைவலவை பருவப் பாரக்
கொங்கையார் களபத்தைச் செண்பகக்குஞ் சரத்தைமனக் கூடஞ் சேர்ப்பாம்.

பொ - ரை: செண்பகப் பிள்ளையார் கங்கையிற்பூத்த ஆம்பல், உமையம்மையின் நெற்றிச் சிந்துரம் (பொட்டு), திருக்கயிலையில் உள்ள யாளியின் செவ்விய கரத்தமைந்த மாதங்கத் திருமுனி, தேவர்களுக்கு அரசர், திசைகளுக்குத் தலைவர்கள், பிரமதேவர் முதலியோர் முடிகளாகிய மலர்களில் தங்கும் தும்பி, வல்லபையின் இளைய கனத்த கொங்கையில் தங்கும் களபம் எனக் கூறத் தக்கவர், இத்தகைய யானையை நம் உள்ளமாகிய கூடத்திற் சேர்ப்போம்.

வி - கு: ஆம்பல், சிந்துரம், மாதங்கம், தும்பி, களபம் என்னும் சொற்கள் யானை என்னும் பொருளையும் தருவனவாதல் காண்க.

யானைமுகக்கடவுளை யானை எனல் மரபு. மாதங்கம் - பெரிய பொன்மயமான மேரு; கயிலையாளி - சிவபிரான்; திருமுனி - அழகிய யானைக்கன்று.

பிள்ளையாரைக் குறிக்க, கங்கை திருமுடியில் பொருந்திய யானை, உமையம்மை முகத்தில் அணைக்கும் யானை எனச் சிறிது வேறுபட உரைத்துக்கொள்க.

## ஆறுமுகக்கடவுள்

வேறுமுகந் தொறுந்தோறும் பிறந்துழலுஞ் செனனவிடாய் விடுப்ப மூலச்
சேறுமுக மாயைமலங் கழியவிரு வினைப்பழைய தீட்டுந் தீரக்
கூறுமுகந் தொறுமகரக் குழைதாவி வள்ளிதெய்வக் கொடிகட் சேல்பா
யாறுமுகம் பெற்றகொற்றத் தானந்தக் கடல்பரவி யாடல் செய்வாம். 9

பொ - ரை: வேறு வேறு உருவாகவும் பல யுகந்தோறும் பிறந்து இறந்து திரியும் பிறவி வெப்பம் தணியவும், மூலமலத்தின் சத்தி கெடவும், மாயை ஆகிய மலம் நீங்கவும், தொடர்ந்துவரும் இருவினைகளாகிய வாதனை கழியவும் ஆறு முகங்களையுடைய வெற்றி பொருந்திய ஆனந்தக் கடலைப் புகழ்ந்து அதில் முழுகி இன்புறுவோம். சொல்லப்படுகின்ற முகங்கள் தோறும் வள்ளியம்மை தெய்வயானை அம்மையின் கண்களாகிய சேல் மீன்கள் அவர் தம் குழைகளைத் தாவிப் பாய்வனவாக உள்ளன.

வி - கு: சேல் பாய் கடல் என்றது நயம்.

## கலைமகள், திருமகள்

எண்கமலக் கரஞ்சலிப்ப வொருகமலத் தயன்பிறப்பி லெழுதா வண்ணந்
தண்கமலப் பதஞ்சிரமேல் வைத்தருள்வார் குற்றாலத் தமிழ்நூல் வாய்ப்பக்
கண்களெனுங் கருங்கமலங் கரங்களெனும் பசுங்கமலங் கவினப் பூத்து
வெண்கமலத் திருந்தாளைச் செங்கமலத் திருந்தாளை வேண்டல் செய்வாம். 10

பொ - ரை: திருக்குற்றாலநாதர், தாமரையை இடங்கொண்ட அயன்தன் தாமரைபோன்ற எட்டுக்கைகளும் சலிக்குமாறு நம்மைப்பிறப்பில் கிடக்க எழுதாதபடி, தம் தாமரைபோன்ற திருவடியை நம் சென்னியில் வைத்து ஆள்பவர்; அவர்தம் புகழ் கூறும் குற்றாலத் தலபுராணம் என்னும் தமிழ்நூல் நன்கு அமையும்படி, வெண்டாமரையிலும் செந்தாமரையிலும் கண்களாகிய கரிய நீலோற்பலமும் கைகளாகிய பசியதாமரைகளும் அழகுற மலரும்படி வீற்றிருந்தாரை வேண்டிக்கொள்வோம்.

## திருநந்திதேவர்

நேத்திரங்க ளொருமூன்றும் புயநான்கும் விழிமணியு நிரைநூன் மார்புஞ்
சாத்துபுலித் தோலுடையும் வெண்ணீறும் விரிசடையுஞ் சடைமேற் பாம்பும்
காத்திரள்கைம் மான்மழுவுங் கண்ணுதலா மெனத்தோற்றிக் களங்கார்மாற்றி
வேத்திரத்திண் படைதரித்த விடைமுகத்தெம் பெருமானை வேண்டல்
[செய்வாம். 11

பொ - ரை: கண்ணுதற் கடவுள் போன்று கண்கள் மூன்றும், புயம் நான்கும், உருத்திராக்க மணிமாலையும் பூணூலும் அணிந்த திருமார்பும், புலித் தோலுடையும், வெண்ணீற்றுப் பூச்சும், விரிந்த சடையும், அதன்மேல் பாம்பும், கற்பகம்போல் திரண்ட கைகளில் மான்மழுவும் உடையராய், அப்பெருமானின் தான் வேறு என்பது புலப்படும்படி கழுத்தின்கண் கறுப்பு நிறம் தோற்றுவி யாது பிரம்பாகிய திண்ணிய கருவியை ஏந்திய ஆனேற்றின் முகமுடைய திரு நந்திதேவனை வேண்டிக்கொள்வோம்.

## சண்டேசர்

தான்பிறந்த தந்தையையு மினிப்பிறக்கு நிந்தையையுந் தடிந்து சேயென்
ருன்பிறங்கு மழவிடைமே லொருவரழைத் திடவிருவ ரயிர்ப்ப வேகிக்
கான்பொலிதா ரரிபிரமா தியர்க்குமெய்தா விருக்கையெய்திக் கடவுட் சேடம்
வான்புலவர் பெருப்பேறு பெற்றவனை நற்றவனை வழுத்தல் செய்வாம். 12

பொ - ரை: தான் பிறத்தற்குக் காரணமாய தந்தையின் தாள்களையும் மேற்பிறத்தற்குக் காரணமாய் நிந்திக்கப்படும் இருவினைகளையும் ஒருங்கே சேதித்து, இளமையான ஆன்விடை ஊர்ந்த சிவபெருமான் குழந்தாய் என அழைக்க அப்போது மூத்த இளையபிள்ளையார் இருவரும் அழைத்தது தம்மையோ என ஐயுறும்படி இறைவனை அணுகிச்சென்று, அரி அயன் முதலானவர்க்கும் கிடைத்தற்கரிய வாசனைபொருந்திய கொன்றை மாலையும் தொண்டர்க்கு நாயக மாம் பதவியும், சிவப்பிரசாதமும் எய்தி, தேவர்களும் பெறமாட்டாத சிவப்பேறு பெற்ற நற்றவம் உள்ள சேய்ஞலூர்ப் பிள்ளையாரைத் துதிப்போம்.

## திருஞானசம்பந்தர்

மதுரேசர் திருநாட்டு வந்தசமண் கழுவேற மாருச் சைவஞ்
சதுரேற மனுநீதி தழைத்தேறத் திருவேடு தமிழ்சேர் வைகை
எதிரேறத் தொண்டர்குழா மீடேறப் பரசமய விருள்விட் டோடக்
கதிரேறு மணிச்சிவிகை யேறினன் சரணமந்தக் கரணஞ் சேர்ப்பாம். 13

பொ - ரை: மதுரை முதல்வன் திருநாடாகிய பாண்டி நாட்டில் புதிது வந்த சமண்முனிவர்கள் கழு ஏறவும், என்றும் தன் இயல்பு குன்றாத சிவநெறி உயர்ச்சி பெறவும், மனுவறம் தழைத்து ஓங்கவும், திருப்பாசுரம் எழுதப்பெற்ற திருவேடு தமிழ்சேர்ந்த வைகையாற்றின் புனலில் எதிரே ஏறவும், தொண்டர் கூட்டம் செழிக்கவும், பிறசமய இருள் விலகவும், ஒளிவிடும் முத்துச்சிவிகை ஏறி அருளிய திருஞானசம்பந்தர் திருவடிகளை மனத்திற்கொள்வாம்.

## திருநாவுக்கரசர்

திருநீற்றை மெய்யழுத்தி யஞ்செழுத்தை நெஞ்சழுத்திச் சிலைக்கை மார
னுருநீற்றும் பெருமானை யுறவழுத்திச் சமணரெனு மொன்னர் மூட்டும்
பொருநீற்றுக் குடவறையுங் கடகரியும் விடவரவும் புறங்கண் டாழிக்
கருநீத்தங் கடப்பவொரு கற்றோணி யுகைத்தானைக் கருத்துள் வைப்பாம். 14

பொ - ரை: திருநீறு அணிந்து திருவைந்தெழுத்தை எண்ணி, மன்மதன் உருவைச் சாம்பாராக்கிய சிவபிரானை மிகவும் துதித்து, பகைமைகொண்ட சமணர்கள் மூட்டிய சுண்ணும்புக் காளவாய், மதங்கொண்ட கொல்கரி, நச்சரவு என்பவற்றை வென்று, பிறவிக்கடலைக் கடத்தற்குக் கல்லையே தோணியாகச் செலுத்திய திருநாவுக்கரசுநாயனுரைத் தியானிப்போம்.

## சுந்தரமூர்த்தி

புவியாசைக் கழைசுளிந்து தலைவரா வணக்கூடம் புகுந்து பொற்பூண்
டவிராத கொம்பிரண்டு மேவியொரு வல்லிதொடர் தளையை நீவிக்
குவியாரம் புனைபரவை கொங்கையா னையின்பொருட்டுக் குழைதோய் சங்கச்
செவியானைத் தூதுவிட்ட கவியானை தனைத்தினமுஞ் சிந்தை செய்வாம். 15

பொ - ரை: மண் ஆசையாகிய கரும்பை முறித்து, சிவபிரான் கொண்டு வந்த அடிமை ஆவணமாகிய கூடம் புகுந்து, பொற்பூண் அணிந்த இரு கொம்புகளைப் பொருந்தி (பொன் அணி நீங்காத பரவையார் சங்கிலியார் என்னும் பூங்கொம்பு அன்னுரைப் பொருந்தி) ஒரு விலங்கால் வந்த தளையை நீத்து (சங்கிலியார் என்னும் கொடியன்னுர் பூட்டிய கால் விலங்கை - சபதத்தை - நீத்து) முத்துமாலை அணிந்த பரவையாரின் குவிந்த தனமாகிய யானையைப் பெறுதற்பொருட்டுச் சங்கக்குழையானைத்தூதாக அனுப்பிய சுந்தரமூர்த்தியாகிய கவி மதம் பொழிந்த யானையை நாடோறும் சிந்திப்பாம்.

## மாணிக்கவாசகர்

சொன்னவனைத் துளகலையும் பயிலாமாத் தியர்குலத்துத் தோன்றியாங்கோர்
தென்னவனை யரசுரிமைத் திறல்செயுமந் திரியாகித் தென்னர்க் கெல்லா
முன்னவனைப் பின்னுசடை முடியின்மேற் பொன்னின்முடி சூட்டி யாண்ட
மன்னவனை மதுரையிலே குதிரைவிற்கச் சொன்னவனை வணக்கஞ்
[செய்வாம். 16

பொ - ரை: சொல்லப்பெறும் வழக்கில் உள்ள கலை எல்லாவற்றையும் பயின்ற ஆமாத்தியர் குலத்தில் திருவவதாரஞ்செய்து, தம் காலத்து அரசாண்டிருந்த பாண்டிய மன்னனுக்கு அரசுரிமைத் தொழிலைச் செய்யும் மந்திரியாக இருந்து, பாண்டிய மன்னர்களுக்கெல்லாம் முற்பட்டவனும் பின்னி நிற்கும் சடையையுடைய முடியின்மேல் பொன்முடி சூடி ஆட்சிபுரிந்த மன்னவனும் (சோமசுந்தர பாண்டியன்) ஆகிய முதல்வனை மதுரைநகரில் குதிரை விற்கும் சேவகனுக வருவித்த மாணிக்கவாசகப் பெருமானை வணங்குவோம்.

வி - கு: தென்னவனை - தென்னவனுக்கு: உருபு மயக்கம், ஐ - அழகிய எனினும் பொருந்தும்.

## அகத்தியர்

கிளையேந்து மணிநிலவு விரிகூடத் திரிகூடக் கிரிக்கே யாவும்
விளையேந்து புனற்கரகந் தண்டேந்திப் படைத்தபிரான் விடுத்து நேமி
வளையேந்துங் கரத்துமழு மானேந்திப் பசுந்துளவ மவுலிக் காடு
முளையேந்து மதியேந்தத் துதியேந்துந் தமிழ்முனிதாண் முடிமேற்
[கொள்வாம். 17

பொ - ரை: மூங்கிலையுடைய மணிகள் பொருந்திய விரிந்த உச்சிகளை யுடைய திரிகூடமலையில், எவற்றையும் விளையச்செய்யும் நீர்க்கமண்டலமும் தண்டும் ஏந்தி முன்னர்ப் படைத்த முதல்வன் பின்னர் அவற்றை விடுத்து சக்கரமும் சங்கும் ஏந்தித் துளவமாலை முடியிற்சூடித் திருமாலாய் நிற்ப, அக்கரங்களில் முறையே மழுவும் மானும் ஏந்தி, அம்முடியாகிய இடத்தில் பிறைமதியை ஏந்திச் சிவபிராஞகக் காட்சி தரும்படி துதித்தருளிய தமிழ் முனிவராகிய அகத்தியர் திருவடிகளை நம் முடியிற் சூடிக்கொள்வோம்.

## திருத்தொண்டர் எழுபத்திருவர்

தில்லைவா ழந்தணர்பொய் யடிமையிலாப் புலவர்சிவ பத்த ராதி
வல்லவரெம் பெருமான்க ளெழுவரடி பரவியயன் மாலுங் காணு
நல்லசீர் மலர்ப்பாதங் கண்டதிருத் தொண்டரெனு நாயன் மார்க
ளெல்லைதீர் பெரும்புகழா ரறுபத்து மூவர்பத மிறைஞ்சல் செய்வாம். 18

பொ - ரை: தில்லைவாழ் அந்தணர், பொய்யடிமையில்லாத புலவர், பத்தராய்ப் பணிவார்கள் முதலிய ஏழு திருக்கூட்டத்தினர் ஆகிய தொகையடியர் ஒன்பதின்மர் அடிதொழுது, சிவபிரானுடைய அயனும் மாலும் காணுத திருவடிகளைக் கண்ட திருத்தொண்டர், அளவுபடாத பெரும் புகழை உடைய நாயன்மார் அறுபத்து மூவர் பாதங்களை இறைஞ்சுவாம்.

## திருக்கோயிற் பணிசெய்வோர்

காவார்ந்த திரிகூடத் தாணுவுக்கும் வேணுமொழிக் கவுரி யார்க்குந்
தேவாரப் பணிபுரிவா ருழவாரப் பணிபுரிவார் சேவை செய்வார்
பூவாசத்தொடைதொடுப்பார் புகழ்வாசத்தொடைதொடுப்பார் பூசைசெய்
ஆவார்கள் முதலாய வடியார்கட் கடியார்கட் கடிமை செய்வாம். 19 [வார்

பொ - ரை: சோலைகள் நிறைந்த திரிகூட மலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்கும் குழல்வாய் மொழிக் கௌரியம்மைக்கும் உரிய தேவாரப் பணிபுரிவோர், உழவாரப் பணிசெய்வோர், காலந்தோறும் வந்து வணங்குவோர், மணம்பொருந்திய பூமாலைதொடுப்போர், பொருள்சேர் புகழ்மணக்கும் பாமாலை இயற்றுவோர், அருச்சிப்போர் முதலிய அடியார்க்கு அடியராயினர்க்குத் தொண்டு புரிவோமாக.

## இறைவன்திருநாமம் பயில்வார்

நடந்தாலு மிருந்தாலு நின்றாலும் வளர்ந்தாலு நலிவுற் றாலுங்
கிடந்தாலு மயின்றாலும் பயின்றாலுந் துயின்றாலுங் கிரிக டாவிப்
படர்ந்தாலும் விழுந்தாலு மெழுந்தாலுந் திரிகூடப் பரம னாமந்
திடந்தாலு வுறவழுத்துந்தொண்டரடிப்பாதுகைகள் சென்னிசேர்ப்பாம். 20

பொ-ரை: நடத்தல், இருத்தல், நிற்றல், கண்வளர்தல், மெலிதல், கிடத்தல், உண்ணுதல், கலைபயிலுதல், மரணம் வரும் நிலையை அணுகுதல், மலைகளைக் கடந்து செல்லுதல், விழுதல், எழுதல் முதலாக எச்செயலைச் செய்ய நேரினும் திரிகூடநாதன் திருநாமத்தை நாத்தழும்பேறும்படி சொல்லித் துதிக்கும் அடியார்களுடைய பாதுகைகளை நம் சிரத்திற் கொள்வாம்.

## வாழ்த்து

சீதமழை முகில்பொழிக தேசமெலாம் பயிர்விளைக செல்வ மோங்க
மாதர்குழா மக்கள்குழா மனையறங்க ளுடன்பொலிந்து மலிந்து வாழ்க
மேதகுசீர்ச் சைவநெறி வேதநெறி தழைத்தோங்க மேலு மேலும்
பூதலமேற் சிவபெருமா னாலயங்கள் பூசனைகள் பொலிக மாதோ. 21

பொ-ரை: குளிர்ச்சியை உண்டுபண்ணும் மழையை மேகங்கள் காலந் தவறாமற் பெய்க! நாடெங்கும் உழவுசெய்யப்படும் பயிர்கள் நல்ல விளையுளைத் தருக! பெண்டிர் மக்கள் குழுக்கள் இல்லற நெறி வழுவாது நின்று மிகுந்து விளங்கிவாழ்க. வேதநெறியும் அதன் பயனாய் உயர்ந்த சிறப்புடைய சிவநெறியும் மக்களிடைத் தழைத்து மேம்படுக! நிலவுலகில் உள்ள சிவன் திருக்கோயில்கள் சிறப்போடு கூடிய பூசனைகள் சிறப்பாக நடைபெறுக.

கடவுள் வாழ்த்து முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 21

---

## நூல்வழி

காரணமுங் காரியமுங் கற்பனையுங் கடந்துதனிப்
பூரணமாய் நின்றபிரான் புவனமெலாம் படைத்தருளி
ஆரணமு மாகமமு மருங்கலையும் விரித்தருளி
நாரணற்கு நான்முகற்கு நவிலுவன நவின்றருளி. 1

பொ - ரை : உலகப்பொருள்களின் பெற்றியாகிய காரண காரிய இயைபும் மனநினைவுக்கு அகப்படுதலுமாகிய இயல்புகளைக்கடந்து, ஒப்பற்ற, குறைவிலா நிறைவாய் உள்ள சிவபிரான் முதற்கண் எல்லா உலகங்களையும் படைத்து, வேதம் ஆகமம் பிற கலைகள் என்பவற்றைத் தோற்றுவித்துத் திருமாலுக்கும் அயனுக்கும் அவற்றுள் அவர்க்கு வேண்டிய அளவை உணர்த்தி.

செப்பரிய கயிலையின்மேற் றிருநந்தி தேவனுக்கு
வைப்பரிய பொருளைவிரித் துபதேசம் வைத்தருள
ஒப்பரிய சனற்குமரற் குண்மையா வவனுரைப்ப
மெய்ப்பொருளை யுணர்ந்தவனும் வியாதமா முனிக்குணர்த்த. 2

பொ - ரை : சொல்லுதற்கு அரிய திருக்கயிலையில் சீகண்டமூர்த்தியாய் எழுந்தருளியிருந்து திருநந்திதேவர்க்கு, புதையல் போன்ற அரிய பொருள்களை மிகவிரித்து உபதேசித்தருளினர்; அவர் சனற்குமார முனிவர்க்கு அதனை உணர்த்தியருள, அங்ஙனம் உணர்ந்த மெய்ப்பொருளை அம்முனிவர் வியாச முனிவருக்கு உணர்த்தியருளினர்.

சூதனுக்கு வியாதமுனி சொன்னதொகை மூவாறின்
மாதவற்குக் காருடநா ரதம்விண்டு பாகவத
மாதவனுக் குயர்பிரம கைவருத்த மழலோற்கு
மேதகுசீ ராக்கேயம் விதிக்குயர்பற் பம்பிரமம். 3

பொ - ரை : அங்ஙனம் உணர்ந்தவற்றுள் அவ்வியாசர் சூதமுனிவருக்கு பதினெண்புராணங்களை உணர்த்தியருளினர். அவற்றுள், காருடம், நாரதம், விஷ்ணு, பாகவதம் எனப்படும் 4 புராணங்கள் மாதவன் எனப்படும் விஷ்ணுவின் பெருமையைக் கூறும் விஷ்ணுபுராணம் ஆகும்; உயர்ந்த பிரமகைவர்த்தம் என்பது ஆதவன் எனப்படும் சூரியன் பெருமை உரைப்பது; உயர்ந்த சிறப்புடைய ஆக்கிநேயம் என்பது அங்கிதேவனுக்கு உரியது; பதுமபுராணம் பிரம புராணம் இரண்டும் விதி எனப்படும் அயன் பெருமை கூறுவன.

இச்சைபெறு நால்வருக்கு மிருநான்கு வகைபோக
மச்சம்வா மனங்கூர்மம் வராகமாற் கண்டேய
மெச்சுபவி டியங்காந்தம் வியனிலிங்கம் பிரமாண்டம்
அச்சைவ மெனச்சிவபு ராணங்க ளையிரண்டில். 4

பொ - ரை: இங்ஙனம், விருப்பை விளைவிக்கும் நான்கு தேவர்களுக்கு எட்டுப் புராணங்கள் உரியனவாகக் கழிய, மச்சம், வாமனம், கூர்மம், வராகம், மார்க்கண்டேயம், வியந்து பாராட்டப்பெறும் பவிடியம், காந்தம், பெருமையுள்ள இலிங்கம், பிரமாண்டம், சைவம் என்னும் பத்தும் சிவன் பொருள்சேர்புகழ் கூறும் சிவபுராணங்கள் ஆகும்.

காந்தமெனு மகலிடத்திற் கடலேழி லுவர்கழித்துச்
சார்ந்தகட லாறனைய சனற்குமா ரஞ்சூதங்
கூர்ந்தசிவ மால்பிரமங் குமரமெனப் பெயர்குலவும்
ஆர்ந்தபெருஞ் சங்கிதைக ளாறுகு மாங்கவையில். 5

பொ - ரை: அப்பத்தினுள் காந்தத்தில் சனற்குமாரசங்கிதை, சூதசங்கிதை, சிவசங்கிதை, விஷ்ணுசங்கிதை, பிரமசங்கிதை, குமாரசங்கிதை என ஆறு உட்பிரிவுகள் உள்ளன. இவை, இவ்வுலகத்திலுள்ள ஏழு கடல்களுள் உவர்க் கடல் நீங்க எஞ்சியுள்ள ஆறு கடல்களுக்குச் சமமானவை. இவற்றுள்,

கிளர்ந்தபெருஞ் சங்கரசங் கிதையென்னும் பாற்கடலும்
வளம்பெருகுஞ் சனற்குமர சங்கிதையா மதுக்கடலும்
உளந்தனிலொன் ருப்பெருக்கி யுயர்மதிமந் தரமாகக்
குளந்தருகட் புனிதர்திரி கூடமான் மியவமிர்தம். 6

பொ - ரை: விளங்கிய சங்கரசங்கிதையாகிய பாற்கடலையும் வளப்பம் மிகும் சனற்குமார சங்கிதையாகிய தேன்கடலையும் தம் உள்ளத்தில் ஒன்றாகக் கலந்து, தமது உயர்ந்த அறிவையே மத்தாகக்கொண்டு, நெற்றிக்கண்ணை யுடைய சிவபிரானது திரிகூடத்தின் பெருமையாகிய அமுதத்தை.

வி - கு: குளம் - நெற்றி.

முனிசூதன் கடைந்தெடுத்து முதுநாவாந் தருவிகொடு
நனிமேவு மாதவத்து நைமிசா ரணியத்தோர்
இனிதாகச் செவிவாயா லிசைத்தருந்தப் பரிமாறிப்
புனிதமாக் கதிநிறைக்கும் புண்ணியமாக் கதையிதனை. 7

பொ - ரை: சூதமுனிவர் கடைந்தெடுத்து, தமது உயர்ந்த நாவாகிய சட்டுவத்தால் நைமிசாரணியத்து பெருந்தவத்தோர் செவிவாயாக இனிது நுகரும்படி சிவமணம் கலந்து பரிமாறித் தூய வீடுகூடும்படி செய்தது இப்புனித மான பெரிய வரலாறு. இதனை,

வி - கு: தருவி - சட்டுவம், படைக்கும் கருவி.

வடமொழியைத் தென்மொழியா வகுத்துநீ யுணர்த்துகெனத்
திடமொழியா லத்தலத்துச் சிவமறையோர் பணித்தருள
உடனுறைவை திகமறையோ ருறுபொருளை விரித்துணர்த்தக்
குடமுனிபோற் றியபெருமான் றிருவருளாற் குறிக்கொண்டு. 8

பொ - ரை: வடமொழியினின்றும் தமிழ்மொழியில் வகுத்து உணர்த்துக எனத் திருக்குற்றாலத்தில் உள்ள சிவ மறையோர் உறுதி மொழியால் அடியேனுக்குக் கட்டளையிட, அவர்களோடு உடன் உள்ள வைதிக மறையவர் வடமொழியிலுள்ள பொருளை விரித்து உணர்த்த, அகத்தியரால் போற்றப்பட்ட சிவபிரான் திருவருளால் குறித்துக்கொண்டு, (தெரிவிக்கின்றேன் - பாட்டு 11).

## நூற்பொருள் வகை

### வேறு

சித்துநதி நாடுநகர் புராண மூலஞ்
சிகரிதல மருவிமது கங்கை மூர்த்தி
சத்திகுறும் பலவுமந்தா நிலத்தின் பான்மை
தக்கன்மக மகமழிதல் வானோர் பாவம்
புத்தேளிர் பவந்தீர்தல் சம்பு வேடன்
புரியும்வலங் கடகளிறு பரியும் பூசை
வைத்தபெருஞ் சங்கரசங் கிதைசேர் தான
வைபவகாண் டஞ்சருக்கம் பதினெட் டாக. 9

பொ - ரை: சித்திராநதி, திருநாடு, திருநகர், புராணவரலாறு, திரிகூடமலை, திருத்தலம், வடவருவி, சிவமதுகங்கை, மூர்த்தி, பராசத்தி, குறும்பலா, மந்தமாருதம், தக்கன்வேள்வி, அதன் அழிவு, தேவர்கள் சிவத்துரோகமடைதல், அவர் பாவந்தீர்தல், நரியும் வேடனும் வலம் வருதல், யானைசெய்த பூசை என்னும் பதினெட்டும் பற்றிய சருக்கங்கள் சங்கிர சங்கிதைபற்றித் தானவைபவ காண்டம் என முதற்காண்டமாக வைக்கப்பெறும்.

தேவிதிரு வவதாரம் பரமன்வேட்டல்
செங்கண்மால் சிவனுதல் பூசைப் பான்மை
பாவிவன சரன்பேறு வானோர் கும்பன்
பணிவிடைவா சுகிதவஞ்சிற் பரம னுடல்
தாவில்பொருட் கண்டகசே தனன் கவுற்சன்
சமையமிகழ் புட்பகந்தன் றரும சாமி
மேவுகதி நூற்பயனற் சனற்கு மாரம்
விளங்குசிவ ரகசியத்தின் விரிவீ ரேழா. 10

பொ - ரை: உமை திருவவதாரம், திருமணம், திருமால் சிவனுதல், சிவ பூசைமுறை, பாவியாகிய வேடன் கதிபெற்றது, வானவர் வழிபட்டது, குடமுனிவர் வழிபட்டது, வாசுகி தவம்புரிதல், இறைவன் திருநடம், கண்டகசேதனன், கவுற்சன், புட்பகந்தன், தருமசாமி என்போர் கதிபெற்றது, நூற்பயன் என்னும் பதினன்கும் பற்றிய சருக்கங்கள் சனற்குமார சங்கிதையில் உள்ள சிவரகசிய காண்டம்பற்றி இரண்டாங் காண்டமாக இப்புராணத்து வைக்கப்பெறும்.

ஒருமைபெரு சிவநெறியே வடிவ மாக
உபயகாண் டமுங்கருணைப் பார்வை யாக
அருமைதெரி தருசருக்க முறைமை யெல்லா
மவயவங்க ளாகமதி யணிந்த பெம்மான்
கருதுகீர்த் தனங்களணி கலன்க ளாகக்
கற்பவர்கேட் பவர்க்கிருமைக் கதியும் வீடுந்
திருவருள்செய் குற்றாலச் சிவபு ராணச்
செல்விகல்வி யுருமகிமை தெரிக்கின் றேனால். 11

பொ-ரை: சிவபுராணமாகிய திருக்குற்றாலத்தலபுராணம் என்னும் செல்வியின் நூல் உருவத்தின் பெருமையைத் தெரியும்போது, ஒன்றாக உயர்ந்த சிவநெறியே அச்செல்வியின் வடிவு; இருகாண்டங்களும் அவள் தன் அருள் நிறைந்த கண்களாகும்; அரும் பொருள்களை விளக்கும் சருக்கங்கள் முப்பத்து இரண்டும் அவளுடைய அவயவங்கள் ஆகும்; அவற்றுள் கூறப்பெறும் பிறை சூடிய சிவபிரான் புகழுரைகள் எல்லாம் அவ்வவயவங்களில் பூட்டியுள்ள அணி கலன்கள்; இங்ஙனம் கல்வி உருவில் வரும் புராணச் செல்வி தன்னைக் கற்பார்க்கும் கேட்பார்க்கும் இம்மை மறுமை வீடு என்னும் உயர்நலன்கள் மூன்றையும் முறையே அருள் செய்வாள்.

நூல்வழி முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் – 32

## அவையடக்கம்

### வேறு

தோட்டகத் தளிகள் பாயுந் துணர்த்தபூங் கடுக்கை வேய்ந்தார்
ஏட்டகத் தெழுதா வேத மேத்தரும் வரம்பில் சீர்த்தி
நாட்டகத் தறிஞர் முன்னர் நானெடுத் தியம்பும் பான்மை
கோட்டகக் கமல நாப்பண் கொட்டிபூத் தலர்வ தாமால். 1

பொ. ரை: இதழ்களில் வண்டுகள் பறந்துவந்து தங்கும் பூங்கொத்துக்களாக மலரும் கொன்றை மலர்மாலையை அணிந்துள்ள சிவபிரான் பெருமை ஏட்டில் எழுதப்படாத வேதத்தாலும் துதிக்கமுடியாதபடி வரம்புபடாதது; அதனைத் தமிழகத்தே உள்ள அறிஞர் முன்பு யான் எடுத்துக் கூறும் தன்மை நீர்க்கரையின் உள்ளிடத்தே மலர்ந்துள்ள தாமரை மலர்கள் நடுவே பயனற்ற கொட்டிப் பூவும் பூத்துக்காணப்படுதல் போலும்.

புகழ்தரு மறைக்கு மேலோன் புடார்ச்சுன புரத்தின் சீர்மை
நிகழ்தர நிகழ்த்த வல்லை நீகொலென் றெனது நெஞ்சே
இகழ்தர வெழுந்த நாணு மிச்சையுந் தினம்போ ராடி
அகழ்தர நாணந் தோற்ற தாசையே வென்ற தம்மா. 2

பொ - ரை: தன்னைப் புகழும் வேதங்களைக் கடந்த சிவபிரான் இடங்கொண்டு விளங்கும் புடார்ச்சுனபுர (திருக்குற்றாலத்தல)த்தின் சிறப்பு எங்கும் பரவும்படி செய்யுள் இயற்றவல்லையோ நீ என்று என்மனமே என்னை இகழ்ந்தது; அதனால் விளைந்த நாணமும் தலச்சிறப்பை எடுத்துக்கூற வேண்டும் என்று எனக்குள் எழுந்த ஆசையும் நாடோறும் போர்புரிந்து என்னை வருத்தி வந்ததில், முடிவாக நாணம் தோற்றுவிட்டது, ஆசை மேம்பட்டுவிட்டது. அதனால்தான் இப்புராணத்தை இயற்றலானேன்.

தேக்கிய கடுவை முக்கட் டேவனுக் கமுத மாக்கும்
பாக்கியச் செல்வி ஞானப் பாவைசெண் பகப்பூங் கோதை
ஆக்கிய கருணை போற்றி யமலனைப் பரவ லாலென்
வாக்கினில் வழூச்சொ லெல்லா மங்கலச் சொற்க ளாமால். 3

பொ - ரை: நிறைந்த ஆலகால நஞ்சை முக்கட் செல்வருக்கு அமுதம் ஆக்கிய மங்கலச் செல்வியாகிய ஞானமே உருவாகிய சண்பகப் பூங்கோதையின் அறக்கருணையைப் போற்றி, நின்மலனாகிய சிவபிரானைத் துதித்தலால், என் வாயில்வரும் சொற்களுள் குற்றமுடைய சொற்கள் வரின், நஞ்சு அமுதமானாற் போல, அவை குற்றம் நீங்கி மங்கலச் சொற்களாகவேநின்று பயன்தரும்.

செறிந்திலன் சிந்தை யேனுந் தெளிந்திலன் கல்வி கேள்வி
அறிந்திலன் புகலா நின்றேன் ஆதியார் திரிகூடத்து
மறிந்தவான் கங்கை திங்கள் வனைந்தபூ முடிமேல் வேழம்
எறிந்தநீர் தளிருங் கொண்டா ரென்பது தெளிந்து மாதோ. 4

பொ - ரை : என் சிந்தையில் திட்பமும் தெளிவும் இல்லை; கல்வி கேள்விகளும் போதிய அளவு எனக்கு இல்லை. ஆயினும், இப்புராணத்தை இயற்றுவேன் ஆயினன்; திரிகூடத்து முதல்வன் ஆகாய கங்கையினையும் தூவெண் மதியையும் சூடியுள்ள தம் முடியில், ஓர் யானை ஊற்றிய தண்ணீரையும் சாத்திய தளிரையும் ஏற்றுக்கொண்டு அருள்புரிந்த பெருங் கருணையுடையான் என்பதுபற்றி.

கவையடி விலங்கின் வல்லூண் கண்ணப்பன் கனிவா யேறி
அவிகளி னமிழ்தின் மிக்கா அமலனுக் கானாற் போலக்
குவிதரு நெறியொன் றில்லேன் குறைமொழி நிறைசொன் மேலோர்
செவிபுகில் திரிகூ டத்துச் செல்வனுக் கினிய தாமால். 5

பொ - ரை : பிளவுபட்ட அடியையுடைய பன்றியின் இறைச்சி கண்ணப்ப நாயனாருடைய அன்புகனிந்த வாயிற்பட்டமையால் சிவபிரானுக்கு வேள்வி அவியினும் அமுதினும் சிறந்தது ஆயிற்று; அதுபோல, ஒரு நெறிப்பட்ட மனம் இல்லாத அடியேன் வாயினின்று வரும் குறையுள்ள சொற்களும் நிறைமொழி மாந்தர் செவியிற்புகின், திரிகூட முதல்வனுக்கு இனியவே ஆகிவிடும்.

வேலையில் வீழ்த்த கல்லும் மென்குடம் புகுந்த என்பும்
சாலையிற் கொளுவு நீயு நீரங்கநீர் வைகை யாறுஞ்
சோலையாண் பனையும் வேதக் கதவமுந் தொழும்பு கொண்ட
வாலையாந் தமிழ்ப்பூஞ் செல்வி வளர்தமிழ்ப் பாண்டி நாட்டுள். 6

பொ - ரை : கடலில் வீழ்த்திய கல்லையும், மெல்லிய குடத்துட் பெய்த எலும்பையும், திருஞானசம்பந்தர் திருக்கூட்டத்தினரது இருப்பிடத்திற்கொளுவிய தீயினையும், வைகை ஆற்று நீரையும், கூட்டமாகிய ஆண் பனைகளையும், மறைகளால் அடைக்கப்பெற்ற கதவத்தையும் ஏவல்கொண்ட சிறப்புப் பொருந்திய கன்னித் தமிழ் வளரும் நாடு பாண்டிநாடு. அதன்கண்,

வேரியஞ் சுரும்பூ டாடா வெயில்புகாக் காவிற் கோடி
சூரியர் திரண்டா லென்னச் சுடர்கள்விட் டெறிப்ப மன்றில்
ஆரிய னாடு சீர்த்தென் னாரிய நாடு சொல்வாம்
வாரிநீ ரருவித் தெய்வ வரநதி முதலா மன்னே. 7

பொ - ரை : தேனைவிரும்பும் வண்டும் ஞாயிற்றின் வெயிலும் உள்ளே நுழைய மாட்டாத செறிவுள்ள சோலையில் கோடி சூரியர் திரண்டு உருவெடுத்தாற் போலச் சிவபிரான் தோன்றி மன்றில் தாண்டவம் புரியும் சிறப்புள்ள மேலாகிய தென்பாண்டிநாட்டின் வளப்பத்தை மிகுந்த நீரையுடைய அருவியாகிய மேலான சித்திரா நதி இயல்பு முதலாக விரித்துரைப்போம்.

அவையடக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 39

# திருநதிச் சருக்கம்

தேர்கொண்ட வசந்த வீதிச் சிவபிரான் றிருவெண் ணீற்றின்
ஏர்கொண்ட வடியார் சங்க மெனப்பரந் தேகி வேலை
நீர்கொண்டு தம்பால் வெண்பால் நிறங்கொண்டு தரங்க மேகக்
கார்கொண்ட கடலின் மேனி கைக்கொண்டு மீண்ட மேகம். 1

பொ - ரை: மன்மதனுக்குத் தேராகிய தென்றல் உலவும் (ஆகாய) வீதியில், சிவபிரானது திருவருள் உருவாகிய திருவெண்ணீற்றுப் பூச்சின் அழகையுடைய அடியார் திருக்கூட்டத்தைப்போல மேகங்கள் வெண்ணிறம் உடையனவாய்ப் பரவிச்சென்று, கடலில் உள்ள நீரைக் கொண்டபோது, தம்மிடத்திருந்த வெள்ளிய நிறத்தைக் கடல் அலைகள் கவர்ந்துசெல்ல, கறுத்தகடலின் நிறத்தைத் தாம் கவர்ந்துகொண்டு மீண்டன.

பைந்தரக் குரிவை பூண்ட பரமர்சித் திரப்பூ மன்றின்
அந்தரப் பேரி போல வதிர்தர முழங்கி நீண்ட
சுந்தரச் சடைபோன் மின்னிச் சுகந்தர வரைமே லங்கை
மந்திரத் தபயங் காட்டி வரதம்போல் பொழிந்த மாரி. 2

பொ - ரை: (அம்மேகங்கள்) அழகிய புலியின் (பை தரக்கு) தோலை உடுத்த சிவபிரானுடைய சித்திரசபையில் ஒலிக்கும் ஆகாய துந்துபியைப்போல எங்கும் ஒலி அதிர்ச்சி நிறையும்படி இடிமுழக்கம் செய்து, அவனது நீண்டசடை அசைவதுபோல மின்னலைச் செய்து, நல்ல குகைகளையுடைய மலையின்மேல் அழகிய பக்கங்களையுடைய உறைவிடங்களால் அச்சம் தவிர்த்து, வரதம்குறிக்கும் திருக்கையைப்போல மழையைப் பொழிந்தன.

வி - கு: சுகந்தர வரைமேல் அங்கை மந்திரத்து அபயம் காட்டி - என்ற பகுதி சிலேடை: சிவபிரானுக்குக் கொள்ளும்போது, நல்ல கழுத்தை மேற்கொண்டு விளங்கும் மலைபோன்ற மார்போடு விளங்கும் திருக்கை பாவகமாகிய மறைப்பொருளால் அபயம் (அஞ்சாதே) எனக்காட்ட என உரைத்துக்கொள்க.

கிரிமிசை மழைநீர்த் தாரை கிரீசனெம் பெருமான் தன்னை
அரியவா னவர்கள் ஆட்டும் அமுததா ரைகளா மன்றிச்
சொரிமதத் தும்பி ஆட்டும் துதிக்கைநீர்த் தாரை போலும்
சரிதரு மின்னுத் தோற்றம் தளிர்அருச் சனைபோ லாமால். 3

பொ - ரை: மலையின்மேல் பொழியப்பெற்று வழிந்துவரும் மழைநீர் ஒழுக்குச் சிவபிரானைக் காண்டற்கரிய தேவர்கள் திருமுழுக்கு ஆட்டும் அமுத ஒழுக்குப்போலும்; அன்றியும், அது, மதம்பொழியும் யானை தனது துதிக்கை கொண்டு ஆட்டிய நீர் ஒழுக்கையும் ஒக்கும். சரிக்கும் மின்னல்களின் தோற்றம் தளிரால் அருச்சித்தலை ஒக்கும்.

வி - கு: ஆம் என்பன ஒக்கும் என்னும் பொருளில் வந்தன. கிரீசன் - வேத நாயகன்; கிரி - மலை, வேதத்தின் பரியாயம்; நூற்றெட்டுத் திருப்பெயர் களுள் ஒன்று.

துளிதரு துளியா வானந் தூவுநீர் திரிகூ டத்துத்
தெளிபுனற் றிரள்கா லாருய்த் திசைதொறும் பரந்த தம்மா
ஒளிர்விடைப் பெருமா னெம்மை யுடையவ னடியார்க் கீயுங்
குளிர்பொரு ளொன்று நூறு கோடியா யனந்த மாம்போல். 4

பொ - ரை: எம்மை அடிமையாக உடைய விடையேறும் பெருமானுக்கு அடியராய் உள்ளார்க்குக் கொடுக்கும் இனியபொருள் ஒன்று பன்மடங்காகப் பெருகிப் பின் பயன்தருமாறுபோல, மேகம் துளிக்கும் துளிகளாகத் தூவிய நீர் திரிகூடமலையில் தெளிந்த நீராய்த்திரண்டு பல கால்கள் வழியாகத் திசைகள் தோறும் பெருகி நிறைந்தது.

முத்திரச் சிகரம் வானை முயங்கிநுண் டுளிச்சூற் கொண்டு
பைத்திரள் கொடிகள் என்னும் பசுநரம் போடி நீடி
அத்திரள் அகடு விம்மி யாகமும் விளர்த்து வால
சித்திர கங்கை யென்னும் செல்வியைப் பயந்த தன்றே. 5

பொ - ரை மூன்று அசைவில்லாத முடிகளையுடைய திரிகூட மலையாகிய பெண், மேகத்தைத் தழுவி, அதுவிட்ட நுண்ணிய துளியால் கருக்கொண்டு, அழகிய திரண்ட பச்சைக்கொடிகள் என்னும் பசிய நரம்புகள் ஓடி நீளப்பெற்று, தனது நடு இடமாகிய வயிறு கனத்து, உடம்பு வெண்மை நிறம் உடையதாகி இளம்பருவம் உள்ள சித்திரகங்கை என்னும் செல்வியை ஈன்றுள்.

வேறு

கோடனைத்தும் பலகோடி நதிவருதல் பதினெருமுக் கோடி தேவுந்
தேடரிய திரிகூடப் பரன்பணிக்கு வானிழிந்து சேறல் காட்டும்
நீடருவி திசைதோறுங் குதிபாய்த லெண்டிசைக்கு நிருப ராவார்
ஆடல்பெறு சேனையொடு மண்ணலார் விழாக்காண வண்ண லாமால். 6

பொ - ரை: குவடுகள் தோறும் அளவிறந்த நதிகள் வருதல், முப்பத்து முக்கோடி தேவரும், தேடிக்காணவொண்ணுத திரிகூடப்பெருமான் திருப்பணி செய்து காணுதற்குத் தம் உலகினின்றும் இறங்கிச் செல்லுதலைக்காட்டும். எட்டுத் திசைகளிலும் நீண்ட அருவிகள் குதித்துப்பரவி நிற்றல் எண்திக்குப் பாலகர்கள் வெற்றியை உடைய தத்தம் சேனைகளோடும் சிவபிரான் திருவிழாக்காண அடுத் தல் போலும்.

மொய்யலைத்தெண் டிரைக்கடன்மேல் வானீட்டி முதுதரைமேற் படிவங் காட்
சையமுடி தொடுத்தனந்த மணிமுடிகள் கவித்ததலை யருவி மேனுள் [டிச்
வையகந்தாங் கியசேடன் வானகந்தாங் குறநிமிர்ந்த வகையா மன்றி
வெய்யமருத் துடனிகலி மேருவின்மேன் முடிகவித்த விசைய மாமால். 7

பொ - ரை: நெருங்கிய அலைகளையுடைய கடலின்கண் வாலை நீட்டி (தூய்மையைச்செய்து) உயர்ந்த தரையின்மீது நீண்டுசென்று தன் வடிவத்தைப் புலப்படுத்தி, பொதியமலை முதலாக அளவற்ற மணிமுடிகளைத் தாங்கியுள்ள முதன்மையான அருவி பழங்காலந்தொட்டு உலகைத் தாங்கிவந்த ஆதிசேடன் தேவஉலகைத் தாங்குதற்கு நிமிர்ந்ததுபோலும்; அன்றியும் வலிய வாயுதேவ னேடுமாறுபட்டு மேருவின் முடிகளைக் கவித்து நின்ற வெற்றியையும் ஒக்கும்.

போராளி வனத்தெறுழி புனலாமை வாமனஞ்சேற் பொலிவு காட்டி
யாராம மபிராம மிசைந்துசங்கி ராமம்விளைத் தாயர்பாடிப்
பேராவி னினந்தொடர்ந்து வாங்குதிரை யெனத்தாவும் பெருமை யாலே
சீரார்பத் தவதாரச் செங்கணெடு மால்போலுந் தெய்வ வாரி. 8

பொ - ரை: போர்செய்யும் சிங்கம், காட்டுப் பன்றி, நீர் ஆமை, குறள் உருவம், மீன் இவற்றின் அவதாரங்களைக் காட்டி, பரசுராம, தசரதராமப் பிறப்புக்களை மேற்கொண்டு சங்கு நிறம் உள்ள பலபத்திரன் உருக்கொண்டு, ஆயர் பாடியில் மிக்க ஆக்களின் நிரையை மேய்த்துப் பாயும் குதிரை எனத் தாவும் பெருமையால், சிங்கம், பன்றி, ஆமை, வாவும் அன்னம், சேல்மீன் என்பவற்றின் விளக்கத்தைக் காட்டி, சோலையின் அழகுபொருந்தி, (கரையோடு) போர் விளைத்து, முல்லை நிலத்து ஆயர்பாடியில் பெரிய பசுக்கூட்டங்களைத் தொடர்ந்து பெயர்த்து வளைந்த அலை எனத் தாவும் பெருமையினையுடைய தெய்வநதி சிறப்புள்ள பத்தவதாரங்கொண்ட செங்கண்ணையுடைய நெடிய மாயோனை ஒக்கும்.

வி - கு: எறுழி - பன்றி. வாமனம் - குறள் உரு, வாவும் அன்னம். ஆராமம் - சோலை, ஆக்ஷேபிக்கும் ராமன்தன்மை. அபிராமம் - அழகு. சங்கி ராமம் - போர், சங்கு ஒத்த மேனியுள்ள ராமனுதல். வாங்குதிரை - வளைந்து செல்லும் திரை, வாவும் குதிரை.

பொருந்துபெரும் புண்டரிகப் பொகுட்டினிட மருவியரும் புவன மீன்று
பருந்திகிரித் தண்டுகமண் டலமுகந்து மூலமறை பலவு மோதி
அரும்பெறலுந் தியந்தடத்து வந்துதிசை முகமாகி யன்ன மூர்ந்து
விரும்புபா ரதிமேவிப் பூவிலயன் போலாகும் விமல நீத்தம். 9

பொ - ரை: பொருந்துகின்ற புலிகள் உள்ள மலையிடத்து அணைந்து, அரும்பும் நீர் கொடுத்து, பருத்த மூங்கில்தண்டு ஆகாய மண்டலம் இவற்றை விரும்பி, வேர் (மூலம்), கற்பாறை (அறை) பலவற்றையும் மோதி, பெறுதற்கு அரிய சுழிகளையுடைய நீர்த்தடங்களில் வந்து, திசையை வாயிலாகக் கொண்டு அன்னப்பறவைகளைத் தன்மேற்கொண்டு விரும்பப்படும் மேலான நிலத்தைப் பொருந்திவரும் தூய நதியானது, பெரிய தாமரைக் கொட்டையை இடமாகக் கொண்டு, அரிய புவனங்களைப் படைத்து, பரிய மூங்கில் தண்டையும் கமண்டலத்தையும் ஏந்தி, மூலமாகிய மறைகள் பலவற்றையும் ஓதி, அரிய திருமாலின் உந்தித்தடத்து வந்து, நான்முகம் உடையனுகி, அன்னத்தை ஏறி, தன்னை விரும்பும் கலைமகளைப் பொருந்துதலால், தாமரையில்வாழும் நான்முகனைப்போல உள்ளது.

மாமலையின் மிசைப்பிறந்து திரிகூடச் சிவபெருமான் வலப்பான் மன்னித்
தேமருவு மஞ்சனக்கண் களிகூரத் திருமேனி திளைத்து மேவித்
தாமமிடு மணக்கோல முகந்தருளி யறம்வளர்க்குந் தகைமை யாலே
பூமலர்செண் பகவனத்து நமையாளு முமையாளைப் பொருவும் வாரி. 10

பொ - ரை : சிறந்த மலையிற்பிறந்து, திரிகூடச் சிவபெருமான் வலப்பால் நிலைபெற்று, இடம்பொருந்தும் அழகிய மக்கள் கண்கள் மகிழ்ச்சிமிக (வாசனை பொருந்திய மைதீட்டிய கண்கள் மகிழும்படி) தம் அழகிய உடம்புகள் தோய்ந்து (இறைவன் திருமேனியழகைக் கண்டு நுகர்ந்து), கொன்றைமலர் வாசனையின் அழகை விரும்பிப் பல அறங்களையும் வளர்த்தலால் (பூமாலை அணியும் திரு மணக்கோலங்கொண்டு முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்தலினால்) இந்தத் திருநதி நம்மை ஆட்கொள்ளும் செண்பகப்பூங்கோதை அம்மையையும் போன்று உள்ளது.

பொங்குமா கடலிடத்துத் தெள்ளமுதிற் பிறந்துசெழும் பூமே லாகிச்
சங்கமா நிதியினொடு மணியினொடுந் தருவினொடுந் தகவாய்த் தோன்றி
எங்குமே அடுத்தவர்க்கு வாழ்வருளி யாக்கமதா மியற்கை யாலே
செங்கண்மா லுரத்துறையுந் திருமானி னுருமானுந் தெய்வ வாரி. 11

பொ - ரை : பொங்குமாகடல் என்னும் தீர்த்தத்தில் இருந்து தெளிந்த அமுதைப்போலத் தோன்றி, நிலத்தின்மேல் வந்து சங்கம், சிறந்தபொன், மணி, மரங்கள் என்பவற்றுடன் பொருந்தக் காணப்பட்டு, எங்கும் பக்கத்தில் வாழ்வோருக்கு உழவு வாழ்க்கையினையும் செல்வத்தையும் தருதலால், பொங்கும் பாற்கடலில் அமுதுடனும், சங்கநிதி சிந்தாமணி கற்பகம் என்பவற்றுடனும் தோன்றி, தாமரையின்மேல் வீற்றிருந்து, தன்னை அடைந்தார்க்கு வறுமை நீங்கிய வாழ்வையும் செல்வத்தையும் கொடுக்கும், திருமால் மார்பில் உறையும் திருமகளை ஒத்து உள்ளது தெய்வநதி.

வெண்கமல மேவியுயர் வெண்படிக மணிந்துவெள்ளை மேனி வாய்ந்து
தண்குமுத வாய்ச்சிவப்புந் தடங்குவளைக் கண்கறுப்புந் தழைப்பத் தோன்றி
வண்கலைபோ தகம்பயின்று மாருத சொல்வளர்த்து மலரே டேந்திப்
பண்குலவத் தாலமிசை நடித்துநா மகள்பொருவும் பரம நீத்தம். 12

பொ - ரை : மேலான இத்திருநதி, தூயதண்ணீர் பொருந்தி, வெள்ளிய படிகங்களால் அணிபெற்று, வெண்ணிறமுடையதாய்த் தண்ணிய குமுதத்தின் இடத்துச் செம்மையினையும் பெரிய குவளைகளிடத்துக் கருநிறத்தையும் காட்டி வளப்பமான மான், யானைக்கன்று என்பவற்றோடு பழகி, விளையுள் மாருத நெற்பயிரை வளர்த்து, பூவிதழ்களைத் திரைகளின்மேல் தாங்கி, நீர்நிலைகள் விளங்கும்படி நிலத்தில் ஒழுங்குபடச் செல்லுதலால், வெள்ளைக்கமலத்தில் வீற்றிருந்து படிகமணிமாலை புனைந்து, வெள்ளை மேனியளாய் குமுதம் போன்ற வாயின் சிவப்பும் குவளைபோன்ற கண்ணின் கருமையும் விளங்கக் காட்சி கொடுத்து, வளவிய கல்வி நூல்களையும் ஞானவரம்பையும் பயின்று, நிலைத்த கலைச்சொற்களை வளர்த்து, விரிந்த ஓலை ஏடு ஏந்தி, நாவின்மிசை பண்களை வெளிப்படுத்தும் கலைமகளைப்போல நிலவும்.

வேறு

ஆணிப்பொன் வயிர முத்த மைவனந் தோரை யேனல்
மாணிக்க நறுந்தே ஞதி வரைத்திர வியங்க ளெல்லாம்
பாணிக்கே திரளா வேந்திப் பணிதலாற் குமர வேட்குக்
காணிக்கை குறிஞ்சி மாக்க ளெடுத்தது கடுக்கும் வாரி. 13

பொ - ரை: உயர்ந்த பொன், வைரம், முத்தம், மலைநெல், மூங்கில் அரிசி, தினை, மாணிக்கம், நல்லதேன் முதலிய மலையில் உண்டாகும் பொருள்களை நீரின்கண் (கையிடத்து) சேர ஏந்திப் பணிந்து செல்லுதலால் இத்திருநதி முருகக்கடவுளுக்குக் குறிஞ்சிநில மக்கள் காணிக்கை செலுத்துவதுபோலக் காணப்படுகின்றது.

குயிற்றிய குரவஞ் சாத்திக் குமரிதாள் பணிந்து வேடர்
பயிற்றிய கணைவாள் கொண்டு பறிபொருட் சூறை யாடி
எயிற்றியர் குறும்பு சாய வெழுந்தது செழுந்தண் கங்கை
தயித்தியர் குறும்பு சாய்க்குஞ் சதமகன் சேனை மான. 14

பொ - ரை: சித்திர கங்கையானது செய்யப்பெற்ற குரவம்பூமாலையைச் சாத்தித் துர்க்கையை அடிபணிந்து, வேடர்பழகிய அம்பும் வாளும் கொண்டு பாலைநிலத்தில் வந்தோரிடத்துப் பறித்துச்சென்ற பொருள்களைத் தான் கொள்ளை கொண்டு அந்நிலத்துப் பெண்களின் அக்கிரமம் கெடும்படி எழுவது, அசுரர்களது கொடுமையை அழிக்கச் செல்லும் இந்திரனது சேனையைப் போன்று இருக்கும்.

கொன்றையங் குழல்வாய் கொண்டு கோவினந் தொடர வேகிக்
கன்றிஞல் விளவெ றிந்து பாலைமுன் கவர்ந்த வாற்ருன்
முன்றில்வாய்க் குரவை யாடி முல்லைமா தரைம யக்கி
மன்றன்மா மருதத் தூடு மாலெனத் தவழ்ந்த தாறு. 15

பொ - ரை: கொன்றை, அழகியகூந்தல் என்பவற்றைத் தன் இடத்துக் கொண்டு, கண்களின் கூட்டம் தன்னைப் பின்தொடர நீளச்சென்று, நலிதலினுல் ஆல் விளா என்னும் மரங்களை வீழ்த்திப் பாலை நிலத்துப் பொருள்களை முன் கவர்ந்தமையால், முற்றங்களில் பெருமுழக்கமிட்டு முல்லையாகிய பெரிய தரையை வேறுபடுத்தி, மன்றல் நிகழும் சிறந்த மருதநிலத்தின்கண் தவழ்ந்த ஆறு, திருமாலை ஒக்கும்; திருமால் கொன்றைப்பண் நிகழ்த்தும் அழகிய வேய்ங்குழலைத் தன் வாயில்கொண்டு ஊதி ஆன்கூட்டம் தன்னைப் பின்தொடரச் சென்று, கன்றே குறுந்தடியாகக் கொண்டு விளாவடிவில் மறைந்திருந்த அசுரர்களைக் கொன்று, ஆயர் வைத்திருந்த பாலை முன் கவர்ந்தார்; ஆயர்தம் இருக்கை முற்றங்களில் குரவைக்கூத்தாடி, முல்லை நிலத்து அம்மாதரை மயக்கிஞர்; வாசனையுள்ள மருதமரத்தின் நடுவே உரலோடு தவழ்ந்தார்.

மையுலாங் குவளைக் காடா யிடையிடை வனசம் பூத்து
மெய்யெலாம் விழியா நோக்கி வெள்ளைவா ரணந டாத்திச்
செய்யவா யரம்பை மேவிச் செழுந்தரு நீழன் மன்னிச்
சையமார் சிறைக ளீர்ந்த சதமக னிகர்க்கும் வாரி. 16

பொ - ரை : திருநதி நீலோற்பலம் மிகுதியாக இடையிடையே தாமரைகளும் மலரப்பெற்று அவற்றால் எங்கும் பார்த்து, வெள்ளிய சங்குகளை எறிந்து, செம்மையான வாழை மரங்களைப் பொருந்தி செழுமையான மரநிழலில் தங்கி மலைகளின் சிறகை அறுத்த இந்திரனை ஒத்தது; இந்திரன் தன் உடம்பு முழுவதும் கறுத்த நீலோற்பலமலர்மிகுதியாக இடையிடை உள்ள கமலங்கள் கண்களாக எங்கும் பார்த்து, வெள்ளையானையைச் செலுத்திச் சிவந்த வாயையுடைய அரம்பையரை விரும்பிக் கற்பகத்தரு நீழலில் பொருந்துகின்றனன்.

பரத்திய ருணக்கு மீனு மளத்தியர் படுத்த வுப்புந்
திரைக்கடல் கொழித்த முத்தும் பவளமும் திரள்சேர் சங்கும்
நரைத்திரைக் கரத்தால் வாரி நானிலப் பொருளு மீந்து
நுரைக்கடற் பொருள்கொள் வார்போ னுழைந்தது நுளையர் சேரி. 17

பொ - ரை : சித்திரகங்கை இங்ஙனம் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம் என்னும் நான்கு நிலங்களைக் கடந்து சென்று, நெய்தல் நிலத்தில் நுழைந்தது; அங்கு அந்நிலத்துப் பெண்கள் உலர்த்தும் மீனும், அவர்கள் உப்பளத்தில் தொகுத்த உப்புக் குவியலும், கடற்றிரைகள் கரையிற் கொழித்த முத்தும், பவளமும், சங்குத் திரள்களும் ஆகியவற்றைத் தன் வெள்ளிய அலையாகிய கைகளால் வாரிக்கொண்டு, நான்கு நிலப்பொருள்களைக் கொடுத்து கடல்படு பொருள்களை மாற்றாக வாங்கிக்கொள்வாரை ஒத்து விளங்கிற்று.

கொல்லையங் குறிஞ்சித் தேனுங் குடத்தியர் மிடவுப் பாலு
முல்லையார் ததியு நெய்யு முதுபணைக் கரும்பின் சாறுந்
தொல்லுவர்க் கேணி நீருந் தொடுத்தெழு நீத்த மெம்மா
னெல்லைமா மதுரை யீட்டு மெழுகடல் பொருவு மாதோ. 18

பொ - ரை : தோட்டங்களையுடைய குறிஞ்சி நிலத்தில் உள்ள தேனும், இடைச்சியர் மிடாவில் வைத்திருந்த பாலும், முல்லை நிலத்துக்கிடைக்கும் தயிரும் நெய்யும், முதிர்ந்த பருத்த கரும்பின் சாறும், பழைய உவர்க்கேணியிலிருந்த நீரும் ஆகியவற்றைத் தன்னோடு சேர்த்து எழுந்து ஒழுகும் தூய வெள்ளம் முன் சோமசுந்தரக் கடவுள் காஞ்சனமாலை தன்கணவனுடன் முழுகுவதற்குச் சிறந்த மதுரைமா நகரின் எல்லைக்குள் வருவித்த எழுகடலை ஒக்கும்.

நால்வகை மலர்சே ரைம்பா னதியெனும் பருவக் கன்னி
கால்வழிக் கலிங்க மார்ப்பக் கனதனம் பணைப்பப் பாங்கின்
பால்வளைத் திரைக்கை வீசிப் பன்மலர்த் தொடைகள் சூடிச்
சேல்விழி களிப்ப வேலைச் செல்வனை மணந்த தன்றே. 19

பொ - ரை : கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்னும் நால்வகை மலரும் சேர்ந்த அழகிய வெண்ணிறமுள்ள (மலர்சூடிய கூந்தலையுடைய) திருநதியாகிய மணப்பருவம் உள்ள கன்னி வாய்க்கால் வழியில் மதகுகளிடத்து நீர் ஒலிப்ப (காலினிடத்து மேகலாபரணம் ஒலிப்ப) சிறந்த பொன்மிக (பருத்த முலைவிம்ம) பக்கங்களில் வெள்ளிய சங்குகளைத் திரையாகிய கைகளால் எறிந்து (பகுப்புகளையுடைய வளையல் அணிந்த வெற்றிலையுள்ள கையை உரிமையுடன் வீசி) பல மலர்மாலைகளை மேற்கொண்டு சேல் கண்களிப்ப (சேல் போன்ற கண் களிப்ப) கடலாகிய செல்வமகனைக் கலந்தது (மணந்து கொண்டது).

வி - கு: திரை - அலை, வெற்றிலை. கலிங்கம் - மதகு, உடை.

தம்பமீ னுப்புத் துப்புச் சங்குதண் டரளந் தன்பாற்
பைம்பொரு ளனைத்துங் கொண்டார் பான்மைவா னேறி நோக்கி
யிம்பர்மேற் றுவி யைம்பா விடத்தபல் பொருளுங் கொண்டு
கம்பமார் கடல்போந் தென்னப் போந்தது கடவு ணீத்தம். 20

பொ - ரை: தெய்வத்தன்மையுள்ள வெள்ளம் முன் மேகமாயிருந்து பின் ஆறுகச் சென்று கடலில் கலப்பது எதுபோலும் எனின், கடலைத் தாரகமாகக் கொண்ட மீன், உப்பு, பவளம், சங்கு, குளிர்ந்த முத்து ஆகிய தன்கண் இருந்த நல்ல பொருள் எல்லாவற்றையும் கொண்டவர் தன்மையை ஆகாயத்தில் உயர்ந்துசென்று பார்த்து, பின் இவ்விடத்து போந்து, குறிஞ்சிமுதலாக ஐவகைப் படும் இடங்களில் உள்ள பல்வகைப் பொருள்களையும் கவர்ந்துகொண்டு நடுக் கத்தையுடைய கடலுக்கு மீளவந்து சேர்ந்தது போலும்.

கோளிப மிடங்க ராகக் குரைதிரைத் துரகந் தூண்டி
வாளைவா ளாக வீசிக் கமடமாம் பரிசை வாங்கிக்
காளமா நாரை யார்ப்பக் கணவரை விடுத்த சேனை
நீளமார் கடன்மேற் சென்று பொருவது நிகர்க்கு நீத்தம். 21

பொ - ரை: ஆற்றின் வெள்ளம், திரண்டமலை விடுத்த சேனை நீண்ட கடலை எதிர்த்துச் சென்று போர் புரிவது போல உள்ளது; எப்படி எனின், முதலைகள் வலிய யானைகள் போலவும், ஒலிக்கும் திரைகள் குதிரையாகவும் செலுத்தப்படுகின்றன; வாளைமீன்கள் வாள்போல வீசப்படுகின்றன; ஆமைகள் கேடயமாகக் கொள்ளப்படுகின்றன; நாரைகள் எக்காளம்போல் ஆரவாரம் செய்கின்றன.

அரிசனந் தகர மாஞ்சி யகிற்றுணி கோட்டஞ் சாந்தந்
திரிபலை கரிக்கோ டார மயிற்பீலி தேவ தாரம்
மரகதம் பவள நீலம் வயிர நித் திலங்கண் மற்று
நிரைநிரை கூல மேற்றி வணிகரை நிகர்க்கும் வாரி. 22

பொ - ரை: மஞ்சள், வாசனைப் பொருள், ஏலம், அகிற்கட்டை, குரா, சந்தனம், கடு, தான்றி, நெல்லிக்காய்கள், யானைத்தந்தம், முத்து, மயிற்றோகை, தேவதாரு, மரகதம் முதலிய மணிகள் முதலியவற்றை வரிசை வரிசையாக கடற் கரையில் ஏற்றுதலால் இவ்வெள்ளம் வணிகரை ஒத்துள்ளது.

வி - கு: ஆஞ்சி - ஏலம்.

வேறு

திங்கள் சூடிய தேவ ளொருவனே
பொங்கு பல்சம யப்பொரு ளாதல்போல்
அங்கங் கேபகுத் தாயிர மாமுகக்
கங்கை போன்றது சித்திர கங்கையே. 23

பொ - ரை: சித்திர கங்கை பலகால்களாகப் பிரிக்கப்பெற்றுச் செல்லுதலால் சிவபிரான் ஒருவனே பல்வேறு சமயங்களிலும் வழிபடப்படுதல் போலவும், ஆயிரமுகத்தால் வரும் கங்கை போலவும் உள்ளது.

பள்ளத் தாழ்வொடு மேடுறப் பாய்புனல்
அள்ளற் பாரெங்கு மார்த்தது வார்கடல்
வெள்ளத் தூசினண் மேகலை யார்ப்பதாம்
புள்ளி னார்ப்பவள் போர்வையி னார்ப்பரோ. 24

பொ - ரை: மேடுபள்ளம் யாண்டும் பரவிப் பாய்கின்ற வெள்ளம் சேற்று நிலம் எங்கும் தோற்றிய ஓசை நீள்கடலை உடையாகக் கொண்ட நிலமகளது மேகலை ஒலிப்பது போன்றது; பறவைகளின் ஒலி அவள்தன் போர்வையின் ஒலி போன்றது.

நீடு கோபுர நீண்மதிற் கோயில்பூங்
காடு மூருங் கயல்வெடி தாவுவ
நாடு பல்வளம் பார்க்கு நதிமகள்
கோடி கோடி விழிபெறுங் கொள்கையாம். 25

பொ - ரை: உயர்ந்த கோபுரம், மதிலையுடைய கோயில், நந்தவனம், எங்கும் வெள்ளத்தில் உள்ள கயல்கள் தாவுதல், நிலத்தின் பலவளங்களையும் காணலுறும் ஆறுகிய மங்கை அளவற்ற விழிகளைக்கொண்ட தன்மையாக உள்ளது.

கோலு மைந்திணை கூடி யொழுகியுங்
கால வாரி கலக்க மருமையான்
மேலு மேலும் விளைபொருள் வாஞ்சைசேர்
சேலுண் கண்ணியர்க் குள்ளந் தெளியுமோ. 26

பொ - ரை: வளையும் ஐந்திணைகளிற் கூடி ஒழுகியும் பலகால்களையுடைய வெள்ளம் தெளியவில்லை; மேலும் மேலும் பொருள் ஆசையுள்ள சேல்போன்ற கண்ணையுடைய மகளிர்க்கு உள்ளந்தெளியாதுதானே!

எங்கு மேவினு மீசனெம் மானருள்
அங்க மாமடி யாரிடத் தாதல்போற்
சங்க நீர்நதி யைந்திணை தாவினும்
பொங்கு சீர்மரு தம்பொலிந் தோங்குமே. 27

பொ - ரை: சிவபிரான் எங்கும் நிறையினும் தன் வடிவாய அடியாரிடத்து விளங்கித் தோன்றுவன்; அதுபோல, சங்குகளையுடைய நதி ஐவகை நிலங்களிற் பரவினும் அதன்பொலிவு மருத நிலத்தின்கண்ணதே ஆயிற்று.

*திருநதிச் சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — 66

---

# திருநாட்டுச் சருக்கம்

ஆறுதுறை தோறுநிரை யாயணை வகுப்பார்
சீறுகட லூடணைசெய் சீதர னிகர்ப்பார்
ஏறுபுனல் வாவிகுளம் யாவையு நிறைப்பார்
வீறுகடல் வேறுசெய் வியன்சகர ரொப்பார். 1

பொ - ரை: தென்பாண்டிநாட்டில், ஆற்றின் துறைதோறும் வரிசையாக அணைகளை அமைக்கின்றவர்கள் பெருமுழக்கம் செய்யும் கடலில் அணைகட்டிய திருமாலை ஒப்பார்; மிகும் புனலால் தடாகம் குளம் முதலியவற்றை நிரப்புகின்றவர்கள் பெருமையை உடைய கடலை வேறு தோண்டிய சகரர்களை ஒப்பர்.

கொம்புகிணை கோடுகுமு றக்குழுமி மள்ளர்
அம்புநதி வாவிதட மாரகழி யாகத்
தம்படைசெ யுந்தொழில்கள் வென்றிநிலை சாரப்
பைம்பயி ரரண்புரி படைத்தலைவ ரொத்தார். 2

பொ - ரை: பயிர்த்தொழில் செய்வார் ஊதுகுழல், மருத நிலப்பறை, சங்கு என்பவற்றை முழக்கிக் கூடுகிறுர்கள்; தண்ணீர்நிறைந்த ஆறு, வாவி முதலியவை அகழ்க் கிடங்குகள் போல உள்ளன; அவர் தம் கலப்பை முதலிய வற்ருல் உழுதல் முதலிய வினைகளைச்செய்தல் போர்த்தொழிலைப்போல உள்ளது; இவ்வாறு இவர் பசிய பயிரைக் காக்கும் படைத்தலைவர்களைப்போல உள்ளனர்.

சைவவிசை யம்புரி சயம்புதிரி கூடத்
தெய்வநெறி யிந்திரன் முதற்பரவல் செய்து
கைவரு படைத்தொழி லுடன்களமர் சென்ருர்
உய்வரு புனற்கழனி யேர்வளமை யொன்ரே. 3

பொ - ரை: சிவநெறியின் வெற்றியைத்தரும் சிவபிரான் திரிகூடமலையில் தெய்வப்பொது நெறிப்படி இந்திரனை முதற்கண் பரவி, மள்ளர்கள் தாம்பயின்ற உழவுத் தொழில்களை மேற்கொண்டு நிகழ்த்தினர்; உய்வைத்தரும் வயலில் உழும் ஏரினுல் வரும் வளப்பம் பொருள்மட்டுமன்று, ஏனைய அறம் இன்பம் வீடு என்பவையும் அல்லவா!

தேமடை மலர்க்கழனி தேன்வடிய மள்ளர்
மாமடை செறித்தவயல் வாய்மடை திறந்து
தாமடை வளைக்குவை சரித்துமரை காவி
யாமடை மிதித்துழு படைக்கணி வகுப்பார். 4

பொ - ரை: வாசனையுள்ள மலர்கள் உள்ள கழனியில் தேன் மிக ஒழுக அதனைப் புறம்போக விடாமல் பெரிய மடைவழியாகச் சேர்த்துக்கொண்ட

மள்ளர்கள் வடிகாலில் உள்ள மடைகளைத் திறந்து தாமே வரும் சங்குத் தொகுதிகளை அகற்றி, தாமரை குவளைகளின் இலைகளை எருவாக மிதித்துக் கலப்பைகளை வரிசை பிரிப்பார்கள்

உழவர்திர ளார்ப்பொலியு மோங்குபுன லார்ப்பும்
முழவுகிணை யார்ப்பொலியு முத்தமிழ்செய் நாடர்
விழவுமண மார்ப்பொலியு மேம்படலி னன்றே
பழையகட லார்ப்பொலி பயப்படுவ தம்மா. 5

பொ - ரை: உழவர்கள் கூடுதலினல் எழும் ஓசையும், பெருகுந் தண்ணீரின் ஓசையும், மருதநில வாச்சியமாகிய கிணையின் ஒலியும், மூன்ருகிய தமிழ் வழங்கும் நாட்டுமக்கள் செய்யும் திருமண ஆரவார ஒலியும் மிக நிகழ்தலின் அன்றே பழைமையான கடலின் ஒலி அஞ்சுகின்றது (நீர் தோன்ற இடனுக உள்ளது)?

வி - கு: பயம் - அச்சம், நீர்.

வேறு

வேலையிற் செல்லும் போதும் வேலையுண் டெழீஇய போதும்
மாலையொப் புடைய சேவு மயிடமுந் திரளாய் வைகற்
காலையிற் பகலோ டெல்லி கலந்தெனத் தரைமாண் பூண்ட
நீலநித் திலத்தின் கோவை நிரைவடம் புரையப் பூட்டி. 6

பொ - ரை: (உழவர்கள்) வெண்ணிற எருதுகளையும் கருநிற எருமைக் கிடாய்களையும் ஏரிற்பூட்டினுர்கள். அவை, முறையே, மேகம் (திருமாலும் கொள்ளலாம்) கடலை நோக்கிச் சென்ற போதும், பின் அதன்கண் உள்ள நீரை முகந்து திரும்பியபோதும் வெண்ணிறமும் கருநிறமும் உடைத்தாதல்போல இருந்தன; ஒருநாளின் காலையில் பகலும் இரவும் கலந்திருந்தாற் போலவும் தோன்றின; இன்னும், நிலமகள் தன் மார்பில் அழகுபடப் பூண்ட நீலமணிக் கோவை முத்துக் கோவைகளைப்போலவும் வரிசைப்பட்டுத் தோன்றின.

கார்நிறக் களம ரீட்டங் கவின்பெறு படைவாள் சேர்த்தி
ஏர்பல நிரைத்து நாளிட் டிசைத்துழு சால்க டோறும்
கூர்வலம் புரிசூன் முற்றிக் கொழிக்கின்ற தரள ராசி
பார்தனை யுழுத பண்டைப் பன்றியை நகைத்தன் மானும். 7

பொ - ரை: கறுத்த நிறமுள்ள உழவர் கூட்டம் அழகிய கொழுப்படையை இணைத்து நல்லவேளை பார்த்து வரிசைப்பட ஏர்களை உழுதபொழுது படைச் சாலில், மிகுந்த வலம்புரிச் சங்கங்கள் கருமுற்றி முத்துக்களைச் சொரிந்தன. அது பண்டு திருமால் பன்றியாய் நிலத்தைப் பயனின்றி உழுதசெயலை எண்ணி நகைப்பதுபோலத் தோன்றியது.

பாலிகை பாத்தி யாக வுழுதெருப் பரப்பி யெங்குஞ்
சாலிவாழ் கெனவே மள்ளர் தண்முளை தெளிப்ப வாரி
போலெழு குரவை யீட்டம் புதுப்புனற் கொழுநன் வேட்ட
வேலிசூழ் பழனக் கன்னி விதிமணச் சடங்கு போலும். 8

பொ - ரை: இடம் பரந்த வயல் முளைப்பாலிகையாக அமைய, அதனை உழுது எரு இட்டு எங்கும் செந்நெல் விளைக என உழவர் வாழ்த்தித் தண்ணிய முளைகளை விதைத்துக் கடல்போல் பெருமுழக்கம் செய்தது புதுப்புனலாகிய மண மகன் காப்பு அமைந்த மருத நிலமாகிய கன்னியை வேதவிதிப்படி மணந்து கொண்ட திருமணச் சடங்கை ஒத்திருந்தது.

முத்தென முளைத்துப் பொன்னின் முகிழிதம் விளைத்துக் கால்கள்
வித்துரு மம்போ னீட்டி மரகதம் விரித்து நீலம்
மொய்த்தசீர் நாறு நாறு முறைகண்டு சேறு நாறச்
செய்த்தலை யுழுது சீர்ப்பத் தெளிசெய்து தெய்வம் போற்றி. 9

பொ - ரை: இங்ஙனம் விதைத்தவை, முத்துப்போல முளையைத் தோற்று வித்து, பொன்போல அரும்பி (முகிழிதம் விளைத்து) பவளம்போல் பயிர்கள் வளர்ந்து, பச்சைக் கற்களைப்போலத் தோகை விரியச்செய்து நீலநிறம் மிகுந்த சிறப்பு உடையவையாய்த் தோன்றும்; நாற்றின்பக்குவம் கண்டு, சேற்றுமணம் எங்கும் கமழ வயலிடங்களை உழுது பக்குவப்பட்ட சேறு ஆக்கி, இந்திரனை வணங்கி (மேல் வினை செய்கின்றார்கள் உழவர்கள்).

அரித்தலும் பெயர்த்து வெவ்வே றமைத்தலு மமைத்த நாறு
பரித்தலுங் கழனி தோறும் பதித்தலும் புரியு மள்ளர்
பிரித்தலும் பிரித்தார் தம்மைப் பேணலும் பேணிப் பின்னர்ப்
பொருத்தலுஞ் செயும மைச்சர் போல்வர்மன் பொருவும் பண்ணை. 10

பொ - ரை: நாற்றுக்களை வயலிலிருந்து வாங்குதலும், அவற்றை வேறு வேறு கற்றைகளாக அமைத்தலும், அவற்றை எடுத்துச் செல்லுதலும், நட வேண்டிய வயல்களில் மீள அவற்றை நடுதலும் ஆய வினைகளை உழவர்கள் செய்கிறார்கள். இதனால், மன்னர்களைப் பிரித்தலும், அங்ஙனம் பிரிக்கப் பெற்றாரைத் தம்வழியிற் பேணிக் காத்தலும், காத்தாரை மீளப் புதுநட்புக் கொள்ளச் செய்தலும் என்பவற்றில் வல்ல அமைச்சர்களை உழவர் ஒத்தனர்; பண்ணைகள் மன்னர்களை ஒத்தன.

குவவுநீ றணிந்த தென்னன் கூனென நிமிர்ந்து மாணி
தவமென வளர்ந்து மூவர் தமிழெனத் தழைத்து வஞ்சர்
பவமெனக் கருவாய் நல்லோர் பலமென வீன்றி யாவுஞ்
சிவமெனத் தெளிந்தோர் முத்தித் திருவென விளைந்த செந்நெல். 11

பொ - ரை : செந்நெற்பயிர்கள் திருஞானசம்பந்தர் பூசிய பெருமையுள்ள திருநீறு அணிந்த நின்றசீர்நெடுமாறன் கூன் நிமிர்ந்து ஓங்கியதைப்போல் நிமிர்ந்தன; பிரமசாரியான மார்க்கண்டி அல்லது சேய்ஞலூர்ப்பிள்ளையார் தவத்தைப்போல மேன்மேலும் வளர்ந்தன; திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பி ஆரூரர் என்னும் மூவர்பாடிய தமிழ்த் திருப்பதிகங்களைப்போலத் தழைத்தன; கரவுள்ள நெஞ்சத்தார் பாவம்போலக் கருக்கொண்டன; நல்லோர் செய்த செயல்கள் குறித்த பயனைத் தருதல்போலக் கதிர்களை ஈன்றன; எல்லாம் சிவமயம் எனத் தெளிந்த மெய்யுணர்வுடையோர் பெறும் சிவபோக இன்பம் போல முற்றி விளைந்தன.

நற்பொதி கருவாம் போது நாடகக் கணிகை மாரின்
முற்பட மறைந்து தோன்றி முகமெடுத் தாடிப் பின்னர்
விற்பொலி புருவங் கோட்டி விளைந்துநெட் டிலைமுக் காட்டின்
கற்புடை மடவார் நாணங் காட்டுவ கதிர்ச்செஞ் சாலி. 12

பொ - ரை : செஞ்சாலிப் பயிர்கள், புறந்தோன்றுமல் மறைந்து நல்ல கருக்கொள்ளும்போது கூத்தாடும் கணிகையர்போல முன்னே மறைந்திருந்து, பின் தன்முகம் தோன்றக்காட்டி அசைந்து, வில்லைப்போன்ற புருவம் வளைத்து (வில்லைப்போல் விளங்கி உருவம் வளைந்து) நீண்ட தோகைகளாகிய மூடுதலையுடையவாய், கற்புடைப் பெண்டிர்க்கு உள்ள நாணத்தைக் காட்டுவ கதிர்கள் முதிரும்போது.

வி - கு : வில் பொலிபு உருவம் கோட்டி எனவும் பிரித்துப் பொருள் கொள்க.

சீதர னயனு மானர் சிவகிரி கூடம் போற்றிக்
காதல்சேர் களமர் நன்னாட் கதிர்செய்து களித்துண் டாடல்
பூதர மெறிந்த செவ்வேள் புரந்தரன் மகளை வேட்கும்
மாதர்மா மணத்துத் தெய்வ மகளிருண் டாட்டு மானும். 13

பொ - ரை : மாயோனும் அயனுமாய்க் காட்சிகொடுத்த சிவபிரானது திரிகூட இருப்பை வழிபட்டு, அன்புள்ள உழவர் நல்ல நாளில் கதிர் அறுத்து உற்றார் உறவினருடன் மகிழ்ந்து உண்டு விழாக் கொள்ளுதல் கிரௌஞ்சத்தை எறிந்த முருகக்கடவுள் இந்திரன் மகளை வேட்ட அழகிய திருமணத்தில் தெய்வப் பெண்கள் மணவிருந்து உண்டு மகிழ்ந்தாற்போன்றது.

கூறுகள் பகுத்துச் சாலி கொய்யுநாட் செய்யிற் சேல்கள்
ஊறுநீர்க் கேணி தாவு முடனரிந் துணங்குங் காவி
பேறுகண் டுவப்பர் வாழ்வு பிரியுநாட் பிரிவர் கீழோர்
வீறுநாட் கூடி வாழ்ந்து மெலியுநாண் மெலிவர் மேலோர். 14

பொ - ரை : நெற்பயிர்களைப் பங்குகளாகப் பிரித்து அறுவடை செய்யும் போது அதுவரை வயல்களில் உடனிருந்து களித்த சேல்கள் நீர்ஊறும் கிடங்குகளிற் பாய்ந்துசென்றன; பயிர்களோடு உடன் அரியப்பட்டு உலர்ந்தன குவளைகள்.

ஒருவர் ஆக்கம் கண்டு உடன் இருந்து நுகர்ந்து, அவர்க்குச் செல்வம் சுருங்கும் காலத்துப் பிரிவர் கீழோர். மேலான நட்புக் கிழமை உடையோர் செல்வப்பெருக்கம் உள்ள காலத்துக் கூடி வாழ்தல்போலவே அது சுருங்கும் காலத்தும் உடனிருந்து துன்பங்களிற் பங்குகொள்வர்.

வேறு

வாள்வகுத்த படையிரும்பு வேர்சாயக் கிளைத்துழுது வளர்க்குஞ் சாலி
ஆள்வகுத்த கூனிரும்பு தாள்பணிதல் போலடியூ டரிந்த வாற்றுல்
கேள்படைத்த மனத்தூயோர் பகைமைபா ராட்டுகினுங் கேண்மை நீங்கார்
தாள்பிடித்து முடிவணங்கித் தனதுபா ராட்டுகினுந் தடிவார் தெவ்வர். 15

பொ - ரை: ஒளியுள்ள இரும்புக்கொழு வேர் சாயும்படி நிலத்தை உழுதும் பயிரை வளர்ப்பதாயிற்று; வேலையாட்கள் கொண்டுவந்த வளைந்த அரிவாள் அடிக்கண் வீழ்ந்து வணங்குவார்போல் கீழே உறினும் பயிர்களின் அடியை அரிந்தன. நட்புக்குணம் உடைய மனந்தூயோர் தம் பகைமையைப் பாராட்டினும் நட்பாகவே இருப்பர்; பகைவர் அடியைப் பிடித்து முடி வணங்கி நின்று தம் உரிமையைப் பாராட்டும்போதும் கேடே விளைப்பர்.

வீறுகொண்ட கதிர்த்தொகைகள் வரைத்தொகைபோற்
களத்தினிடை வேய்ந்து மேதி
ஏறுகொண்டு போர்சரித்துச் சிறைபோலும்
வைகளையிந் திரன்போ லீர்ந்துங்
கூறுகுன்ற மெனப்பொலிகள் கயமுகனைத்
தொழுதளந்து குவிக்குந் தோறும்
மாறுகுன்று சிறையரிந்த மன்னனெதிர்ப்
பாசறைபோல் வயங்கு மாதோ. 16

பொ - ரை: பெருமையுள்ள நெற்கதிர்க் கற்றைகளைக் களத்தில் மலைத் தொகுதிபோற் குவித்து, எருமைக் கடாக்களை மிதிக்கச்செய்து சரித்து, இந்திரன் மலையின் சிறகுகளைக் கொய்தாற்போல, வைக்கோல்களைக் களைந்து, அவரவர் பங்குகளை அளந்து குன்றுகள்போல, கணேசனைத் தொழுது குவித்தார்கள்; அவை குன்றுகளின் சிறையரிந்த இந்திரனுக்கு எதிராக, பகைக்கும் குறிஞ்சி நிலம் மருதநிலத்தில் பாசறை அமைத்துக் கொண்டதைப்போல இருந்தன.

முறைவகுத்த பொற்பொருப்போ பதுமரா கக்கிரியோ முத்தார் வெற்போ
துறைகொழித்த செழும்பவளக் குன்றமோ நீலவரைத் தொகையோ வென்ன
நிறைகளத்து நெற்பொலிகள் வகையுரைத்த லரிதுதொகை நிகழ்த்துங் காலை
உறையிடற்கு மாற்றுவாந் திகிரிவரை முதலாய வோங்கல் யாவும். 17

பொ - ரை: அங்குக் குவிக்கப்பெற்ற நெற்பொலிகளின் வகைகளை, பொற்குன்றம், பதுமராகக்குன்றம் முதலாக இன்ன இன்ன என அளவிட்டுச் சொல்லுதல் இயலாது; அவற்றின் மொத்தத் தொகையைச் சக்கரவாளம் முதலாகிய மலைகளைக் குறியாகக் காட்டிக் குறிப்பித்தலும் கூடாததொன்றே.

பேறுகண்டு களிகூரக் களமர்முத லோர்க்குதவிப் பெருமை வேந்தற்
காறிலொன்று கடமைகொடுத் தைந்திலொன்று தேவரா லயங்கட் கீந்து
கூறுகொண்டு நெல்லொருபாற் கொழித்தமணி முத்தொருபாற் குவைகள்
[செய்வார்
வீறுகொண்ட திருமகளு மருமகளு மரசிருக்கும் விபுலம் போல. 18

பொ - ரை: நெல்லின் அளவைக் கண்டபின், உழவர் முதலிய கூலியாட்கள் மகிழும்படி அவர்க்குரிய கடமைகளைக் கொடுத்துவிட்டு, காவற்பெருமையுடைய அரசனுக்கு ஆறிலொரு கடமையும், மீதியில் தேவாலயங்களுக்கு ஐந்தில் ஒருகூறும் கொடுத்து எஞ்சியவற்றை, நெல்லை ஒரு பக்கமாகவும் அவற்றினின்று பிரித்தெடுத்த மணிமுத்துத் தொகுதிகளை ஒருபக்கமாகவும் குவிப்பர்; இந் நிகழ்ச்சி திருமகளும் கலைமகளும் தம் செவ்விய, வெண்மையான உருவங்களைக் காட்டி ஒருங்கே அரசிருக்கும் பெருமையை ஒத்திருந்தது.

திருவிருந்த வீடுகடை திறந்ததெனக் கொட்டாரந் திறந்து திங்கள்
உருவிருந்த சடைப்பெருமா னடியவர்நா வலர்மறையோர்க் குதவி மேன்மேல்
வருவிருந்து வழிபார்த்துச் செல்விருந்து முறையோம்பி வரையா தியார்க்குந்
தருவிருந்த தெனவளித்துத் தங்கள்கிளை தழைப்பவள ந் தழைப்பர் யாரும். 19

பொ - ரை: அந்நாட்டில் உள்ளார் அனைவரும் திருமகள் மாளிகையின் வாயிலைத் திறந்தாற்போல, நெற்களஞ்சியங்களைத் திறந்து, சிவபிரான் அடியவர்க்கும் புலவர் மறையவர்க்கும் அவரவர் வேண்டியாங்கு உதவி, முன்வந்த விருந்தினரைப் பேணிப் பின்வரக்கடவ விருந்தினரை எதிர்நோக்கி, இங்ஙனம் கற்பகமரம்போல வரையாது கொடுத்து, தங்கள் சுற்றம் பெருகும்படி வளப்பம் பெருகும் திருவினராய் உள்ளனர்.

வேறு

சூல்குதிக்கும் வலம்புரிகள் முழங்குதொறுந் துறைதாவிக்
கால்குதிக்குங் கருமேதி மடைதிறக்குங் கடல்வாவிப்
பால்குதிக்குஞ் சிலைமதவேள் படங்குதிக்கும் படிகோடி
சேல்குதிக்கு மலர்ச்சோலை தேன்குதிக்கு நான்குதிக்கும். 20

பொ - ரை: வலம்புரிச் சங்குகள் கருவுயிர்க்கும்; அவை முழங்குதொறும் கறுத்த எருமைகள் நீர்த்துறைகள்தோறும் தாவிக் காலால் மடைகளைத்திறக்கும். கடல்போன்ற குளங்களில் எருமைகளின் மடியிற்சொரியும் பால் வந்துபாயும்; கரும்புச்சிலையையுடைய மன்மதனுடைய கொடி உயரும்படி சேல் மீன்கள் குதிக்கும் மலர்ச்சோலைகளில் நான்குதிசையிலும் வண்டுகள் (தேன்) பறக்கும்.

வரம்புவயற் செந்நெலுக்கு வாழ்வேலி வான்கரும்பு
கரும்பினுக்கு நறுங்கதலி கதலிகட்குக் கமுகவனம்
அருங்கமுகுக் குயர்தாழை யணிவேலி யதன்புறத்துக்
குரம்பையுடை நீர்க்கரும்புங் கொங்குவளை செங்குவளை. 21

பொ - ரை: வரப்புக்களையுடைய வயல்களில் விளையும் செந்நெற் பயிர்களுக்குச்சிறந்த வேலியாகஅமைவன உயர்ந்த கரும்பு; அவற்றிற்கு வேலி பாக்கு; அவற்றிற்குத் தென்னை வேலி; அவற்றைச்சூழ இருப்பவை கரையையுடைய நீரின்கண் தோன்றும் வாசனை சூழும் செவ்விய உற்பலங்கள்.

வி - கு: குரம்பு - செய்கரை, கொங்கு - வாசனை, நீர்க்கு - நீரின்கண்.

தாவிவனத் திடைப்பகற்பூந் தாதாடி வருவதனைக்
காவிமலர் கண்காட்டக் கடிக்குமுதம் வாய்விள்ளப்
பூவனசங் கதவடைப்பப் பேட்டளிக்குப் புன்மாலை
வாவியிடைத் துனிதீர்ப்பான் வண்டிசைக்கு மெண்டிசைக்கும். 22

பொ - ரை: மருத நிலத்து ஆண்வண்டு பகற்காலத்து முல்லைநிலம் சென்று அங்கு மலர்ந்த பூக்களில் தேன் உண்டு மகரந்தத்தால் நிறம்வேறாகி, சிறிய மாலைக்காலத்தில் தன் நிலஞ்சேர, நீலோற்பலம் போதாகவிருந்து கண்ணைக்காட்டுகிறது; மணமுள்ள குமுதம் வாய்விண்டு வரவேற்கின்றது; தாமரைப் பூ கதவடைக்கிறது; குளத்திடத்துத் தன்பெடை வண்டின் ஊடல் தணியும் பொருட்டு எண்திசையிலும் அவ்வண்டு பண்மிழற்றுகின்றது.

வி - கு: பேட்டு அளி - பெண் வண்டு.

வானாறு தலைமடுக்கு மாளிகையுஞ் சூளிகையுங்
கானாறு குன்றம்போற் கார்மறுகுந் தேர்மறுகு
பானாறு கரும்பிசைக்கும் பணைநாறு கரும்பிசைக்கும்
தேனாறு கரும்பிசைக்குந் தேங்காவிப் பூங்காவி. 23

பொ - ரை: காடு விளங்கித்தோன்றும் குன்றம் எனக்கருதி மேகம் வந்து படியும் தேர்களையுடைய வீதிகளில் மாளிகைகளும் நிலா முற்றங்களும் ஆகாய கங்கையைத் தலையில் தாங்கும்; சொல்லப்படும் வயல் தன்கண் தோன்றும் பால் மணக்கும் கரும்பைப் புனர்பூச நக்ஷத்திரத்தோடு பொருத்தும், நிறைந்த தடாகங்களிலுள்ள நீலோற்பலங்களின் தேன் ஆறு ஒழுகும்; அரும்புகளில் (வண்டுகள்) இசைபாடும்.

வி. கு: கான்நாறு குன்றம்போல் (கருதி) கார் மறுகும் (சுழலும்) தேர் மறுகு (வீதிகளில்) மாளிகையும் சூளிகையும் வான் ஆறு தலைமடுக்கும்; இசைக்கும் பணைநாறு பால்நாறு கரும்பு கரும்பு(ஓடு) இசைக்கும்; தேங்கு ஆவிப்பூங்காவி தேன் ஆறு உகு அரும்பு (வண்டுகள்) இசைக்கும் - எனக்கொண்டு கூட்டி முடிக்க.

காமாரி திரிகூட வரைச்சாரற் கடுங்குளிரான்
நாமாரிங் கிருக்கவென நடுங்கோடுங் கொடுங்கோடை
தேமாரிப் புயல்பொழியுந் திங்கடொறு மும்மாரி
பூமாரி தருமருவிப் பொன்மாரி தருமருவி. 24

பொ - ரை: மன்மதனை நீருக்கிய சிவபிரான் இருக்கும் திரிகூடமலைச் சாரலில் மிக்க குளிர் இருத்தலால், நாம் இங்கிருப்பது எப்படி என நடுங்கும்

கொடிய கோடை ஓடிவிடும்; இடந்தோறும் மாரியாகிய புயல் மாதம் மூன்று மழைபொழியும்; மரங்கள் பொருந்திப் பொன் மிகுதியைத் தரும்அருவி பூமாரியையுந் தரும்.

முருந்துநகை யார்கூந்தன் முகிற்புகையு மகிற்புகையும்
விருந்துபுரந் தருவார்கள் விரும்புகையில் வரும்புகையும்
கரும்புபா லடும்புகையுங் கடும்புரவி மகப்புகையும்
வரம்பிலாத் திசைதோறு மயிலாட மயிலாடும். 25

பொ - ரை : மயிலிறகின் அடிபோன்ற பற்களையுடைய மகளிர் கூந்தலாகிய மேகத்திற்கு ஊட்டும் புகையும், அகிற்கட்டையின் புகையும், விருந்தினரைக் காப்போர் விரும்புதலால் வரும் அடுக்களைப் புகையும், கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுதலால் எழும் புகையும் அசுவமேதம் போன்ற யாகப்புகையும் வரம்பில்லாத் திசைகள்தோறும் மேகத்தைப்போற் சூழ (மயில் - மையில். ஆட) அவற்றை மேகம் என்று கருதி மயில் நடமிடும்.

தேன்குளிக்குந் தேன்வாவி திரைகுளிக்குந் தூவியனம்
கான்குளிக்கும் பசுந்தென்றல் கரைகுளிக்கு மெறிதரங்கம்
மீன்குளிக்கும் புனல்யாறு மிசைகுளிக்குங் கருமேதி
வான்குளிக்கும் விரிபாளை மடல்குளிக்கும் வரிவாளை. 26

பொ - ரை : வண்டுகள் சிவமதுகங்கையில் நீராடும்; இறகுகளையுடைய அன்னம் அலைகளில் முழுகி இன்புறும்; இளந்தென்றல் மலர்களின் வாசனையில் படியும்; ஆற்றால் எறியப்படும் அலைகளில் கரைகள் மூழ்கும்; ஆற்று வெள்ளத்தில் மறைந்து விளையாடும் மீன்கள்; அவற்றின்மேல் குளிக்கும் கரிய எருமை; பாக்கு முதலியவற்றின் விரியும் பாளை ஆகாயத்தில் படியும்; வரிகளையுடைய வாளைகள் அப்பாளைகளின் மடலில் மூழ்கும்.

வண்டாடு மலர்க்கூந்தல் வாராடுங் களபமுலை
கண்டாடு மாதரிதழ்க் கனியாடு மதுரமொழி
விண்டாடுங் கிளிப்பிள்ளை வியந்தாடு மடப்பூவை
கொண்டாடுங் குயிற்பேடை கூத்தாடும் பசுந்தோகை. 27

பொ - ரை : மகளிருடைய மலர்சூட்டிய கூந்தலில் வண்டுகள் மொய்க்கும்; அவர்தம் கலவைச் சாந்தணிந்த குசங்கள் கச்சையால் மூடப்படும்; அவர்தம் வாயிதழ்கள் கற்கண்டின் இனியவாம்; அவர்பேசும் மொழி கனியைப்போல் இனிக்கும்; கிளிப்பிள்ளைகள் கற்றுக்கொடுத்த மொழிகளைப் பேசி விளையாடும்; மடப்பத்தையுடைய நாகணவாய்ப் பறவை அவற்றின் கல்வியை வியந்து விளையாடும்; பெண் குயில்கள் அவ்விரண்டனையும் பாராட்டும்; இவ்வொற்றுமையைக் கண்டு பசிய தோகையையுடைய மயில்கள் களிநடம் ஆடும்.

வள்ளைப்பா டலின்மடவார் வளரிசையை மலர்க்குழன்மேற்
கள்ளைப்பா னஞ்செயல்போற் கற்குமளி யளியிசையைப்
பிள்ளைக்கோ கிலம்பயிலுங் குயிலிசையைப் பெருஞ்சோலைக்
கிள்ளைப்பே டைகள்பயின்று பூவையுடன் கிளக்குமால். 28

பொ - ரை: மகளிர் பாடும் உலக்கைப் பாட்டின் இசையை அவர்தம் கூந்தலில் உள்ள மலர்த்தேனை நுகரும் வண்டுகள் செவியால் பருகும்; அவற்றின் இசையை இளங் குயில்கள் பயிலும்; குயிலின் இசையைப் பெருஞ் சோலைகளில் உள்ள பெண் கிளிகள் பயின்று நாகணவாய்ப் பறவைகளுடன் எடுத்திசைக்கும்.

பண்ணுணு மொழியாரைப் பகர்நாணஞ் செயவேண்டிக்
கண்ணுன கொழுநர்புணர் கலவிமொழி குளறியதில்
விண்ணுண மமையாதான் மிகநாணும் பசுங்கிள்ளை
பெண்ணுர்தஞ் சின்னநடைக் கன்னநடை பேதுறுமால். 29

பொ - ரை: இசையை வென்ற மொழியையுடைய மகளிரை நாணும்படி வைக்கவேண்டி அவர்தம் கண்போன்ற கணவர் புணர்ச்சிக் கலவிபற்றிய சொற்களைக் குளறிப் பேச அதற்கு அவர் நாணுமையால் அவரால் வளர்க்கப் பெறும் பச்சைக்கிளிகள் மிகவும் நாணும்; பெண்மக்களது சிறிய நடையைக்கற்க முயன்று அது கூடாமையால் அன்னங்களின் நடை வேறுபடும்.

பிறங்காவித் திருமலரும் பிரிந்தார்வாய்த் திருமலரும்
இறங்காது பாசடையிட் டிருந்தாலும் பாலனங்கள்
அறங்காவல் பூண்டிருப்பா ரகந்தோறு மகந்தோறும்
உறங்காது மும்முரச மொருகாம னெழுமுரசின். 30

பொ - ரை: விளக்கமாகிய வாவிகளில் உள்ள திருவளர் தாமரை (பாசு அடையிட்டிருந்து ஆலும் பால் அனங்கள் இறங்காது) தன் கண் இளைய முட்டையிட்டிருந்து ஒலிக்கும் வெண்மையான அன்னப் பறவைகள் கீழிறங்காத நிலையை உடையது; கணவரைப் பிரிந்தார் மலர்போன்ற வாயும் பசிய இலையில் பாலோடு கூடிய அன்னங்கள் இட்டிருந்தாலும் அவைகள் இறங்குவதில்லை. அறங்காவல் பூணும் அரசர்தம் அரண்மனையும் யாகசாலைகளும் மன்மதனது முரசு எனப்படும் எழுகடல் ஓசையைப்போல, படை, கொடை, மணம்பற்றிய மும்முரசு ஒலியும் இடையறவின்றி நிகழும்.

தேம்பழுக்கு முப்புடைக்காய் தேமாவின் மிசைத்தூங்கும்
மாம்பழத்தின் குலைகனத்து வருக்கைநறுஞ் சுளைபிதிர்க்கும்
காம்பழுத்து முட்கனியாற் கமுகமடற் கழுத்தொசியும்
பூம்பழுக்காய்க் குலைசாய்ப்பத் தலைசாய்க்கும் பொற்கதலி. 31

பொ - ரை: இனிமை முதிர்ந்த தேங்காய் தேமாவின்மீது வீழ்ந்துதங்கும்; மாம்பழக்குலை கனமாகிப் பலாப்பழத்தின் மீது அழுந்தி அதன் சுளைகளை உதிர்க்கும்; காம்பை வருத்தும் பலாக்கனியால் பாக்குமரத்தின் மடலோடுகூடிய கழுத்து முறியும்; அழகிய பாக்குக்குலை சாய்தலினுல் அழகிய கதலி தன் தலைசாயும்.

அருந்தளவ மூரலிட வம்புயம்பா சடைவிரிப்பக்
கரும்புதீம் பால்வார்ப்பக் கதலிநறு நெய்வார்ப்பச்
சுரும்பினங்கள் விருந்தூட்டுஞ் சொலவரிதா மந்நாட்டில்
விருந்துபுறந் தருவாரே வியப்பாரைந் தருவாரே. 32

பொ-ரை: அரிய முல்லை அரும்புகளாகிய சோற்றை இட, தாமரை பசிய இலையை விரிக்க, கரும்பு தன் சாருகிய பாலை வார்க்க, வாழை தன் பழரசமாகிய நெய்யைச் சொரிய, வண்டுக்கூட்டங்கள் இன்னிசையால் விருந்து அளிக்கும் சொலற்கரிய வளப்பம் உள்ள அந்நாட்டில் விருந்து அளிப்பவர்களே மகிழ்ச்சி நிறைந்த ஐந்தரு நீழலில் வாழ்வோர் ஆவர்.

மெய்வளர்க்குந் திரிகூட மிசைவளர்க்கு மதுகங்கை
சைவமது கங்கைபல தடம்வளர்க்குந் தடவாவி
செய்வளர்க்குஞ் செய்கழனி பொழில்வளர்க்குந் தேம்பொழில்கண்
மைவளர்க்கு மைமேக மாரிதனை வளர்க்குமால். 33

பொ-ரை: மெய்யுணர்வைப் பெருக்கும் திரிகூட மலையின் மேலிடம் மதுகங்கையைப் பெருக்கும்; சிவசம்பந்தமுள்ள மதுகங்கை பலதடாகங்களை நிறைவிக்கும்; அத்தகு தடவாவிகள் செய்களை வளப்படுத்தும்; செய்கள் மருத நிலத்தையும் பெருஞ்சோலைகளையும் வளர்க்கும்; இனிய பொழில்கள் மேகங்களைப் பெருக்கும்; அவை மாரியைப் பெருக்கும்.

கொல்லைவா யேனலுக்குப் பொன்கொழிப்பர் குறமகளிர்
நெல்லிலா ரங்கொழிப்பர் நீலவிழிக் கடைசியர்கண்
மெல்லியார் பாலளப்ப மீனளப்பர் நுளைமாதர்
முல்லையார் மோரளப்ப முத்தளப்ப ரளத்தியரே. 34

பொ-ரை: குறிஞ்சி நிலக்குறமகளிர் தம்கொல்லையில் விளைந்த தினையைக் கொடுத்துப் பொன்னைத் தேர்ந்து எடுத்துக்கொள்வர்; மருதநிலப்பெண்கள் நெல்லை அளந்து கொடுத்து முத்தைப் பெறுவர்; முல்லைநில மகளிர் பால் அளந்து விற்ப நெய்தல் நிலமாதர் அதற்கு மீனை அளந்து கொடுப்பர்; அவர் மோரை அளந்துதர உப்பு அளத்திலுள்ள மகளிர் முத்தை அளந்துகொடுப்பர்.

பந்தரிடும் பொதுவியர்பூ முல்லைபசும் புனக்கொல்லைச்
சந்தனமேற் படருமது தாவிமலர் கொயுந்தோறு
நொந்தவிடைக் கொடிச்சியர்தூ மணியொடுவா னுழைந்தேறி
அந்தரமே லைந்தருவுக் காறுதரு வெனவளரும். 35

பொ-ரை: இடைச்சியர் பந்தரிட்டு வளர்க்கும் முல்லைக்கொடி பசிய தினைக்கொல்லையில் வளரும் சந்தனமரத்தின்மேல் ஏறிப்பூக்கும்; அதனைத் தாவி மலர் கொய்யுந்தொறும் வருந்தும் இடையையுடைய குறப்பெண்கள் தம் மணி மாலைகளைப் பாரம் எனக் கழற்றி எறிதலினல், அம்மணிகளோடு ஆகாயத்தில் நுழைந்து வளரும் சந்தனமரம் வானுலகிலுள்ள ஐந்து மரங்களோடு ஆருவது தருவெனச் சேர்ந்து உயரும்.

வேறு

கோடைதொறு மாவிலொரு கோடிகுயில் கூவும்
மேடைதொறும் வானமுகின் மேவமயி லாலும்
ஓடைதொறும் வால்வளை யுலாவிமணி யீனும்
வாடைதொறு மாடுகொடி மாகநதி மானும். 36

பொ - ரை: கோடைக் காலத்தில் மாஞ்சோலைகளில் அளவிறந்த குயில்கள் தங்கிக்கூவும்; மாளிகைகளில் பெருமையுள்ள மேகம்வர மயில்கள் ஆடும்; நீரோடைகளில் வெண்மையான சங்குகள் உலவி முத்துக்களை ஈனும், வடகாற்று வீசுந்தோறும் ஆடுகின்ற வெண்மையான கொடி ஆகாய கங்கையை ஒத்து நிற்கும்.

கோபுர வுயர்ந்தநிலை கோபுர மிசைப்போய்
நூபுர மலம்பவிடை நோவவர மாதர்
மாபுர வலன்சபையில் வந்துநனி யாட
மீபுர மிசைந்தநட சாலையின் விளங்கும். 37

பொ - ரை: கோபுரங்களின் மேல்நிலை ஆகாயத்திலுள்ள சுவர்க்கத்தின் மேற்சென்று, தேவமாதர் இந்திரன் அவையில் சிலம்பு ஒலிக்க இடைவருந்த வந்து நன்கு ஆடும்படி மேனிலையில் அமைந்த நடனசாலை போல இலகும்.

ஆறுபுனல் பாய்வனகண் ணுறுபணை தோறு
நாறுமலர் தேனொழுக நாறுநிறை சாலி
ஊறுதட வாளைதெற ஆறுபடு பாளை
சாறுகெழும் வீதிபல சாறுகெழு மாதோ. 38

பொ - ரை: ஆற்றுநீரும் பிறபுனலும் பாய்வனவாகிய பெரிய வாய்க்கால்களையுடைய வயல்கள்தோறும் மணம் கமழும் மலர்களினின்றும் தேன் ஒழுகலால், நிறைந்த நெற்பயிர்கள் உண்டாகும்; நீர் ஊறும் தடங்களில் உள்ள வாளைகள் தாக்குதலால் வடுப்படும் தென்னம் பாளைகள் நிறைய உடையதாகும்; பல வீதிகளும் திருவிழாக்களை உடையன ஆகும்.

## அறவட்டம்

### வேறு

முடிபுனைந்தசீர் மன்னவர் நெறியினுன் முன்னவர் தவத்தாற்பைந்
தொடிமடந்தையர் கற்பினுன் மதிதொறுஞ் சொரிதரு மும்மாரி
வடிபெருந்துளி மாரியாற் பலபயிர் வளந்தரும் பயிர்தம்மாற்
குடிவளந்தருங் குடியினுன் மன்னர்செங் கோன்முறை தழைத்தோங்கும். 39

பொ - ரை: முடிமன்னர் செங்கோன்மையாலும், அந்தணர் தவத்தாலும், மகளிர் கற்பினலும் மாதந்தோறும் மூன்று மாரி பொழியும்; தெளிந்த பெருந்துளி மழையால் பல்வகைப் பயிர்கள் செழித்து வளர்ந்து பயன்தரும்; அதனல் குடிமக்கள் வளம் உடையர் ஆவர்; அவ்வளங் காரணமாக அரசர் செங்கோல் இனிது நடைபெறும்.

முன்னி வானெலா மசுரர்கோ னழிக்குநாண் முழுதினு மழியாத
கன்னி நாடுசெந் தமிழ்வள நாடெனக் கருதிவா னவர்கோமான்
சென்னி வான்றெடு முயர்திரி கூடத்துச் சேர்ந்தநாள் வளமேய
பொன்னி னுடுதென் னுரிய நாடெனப் போந்தநா டிந்நாடு. 40

பொ - ரை: தேவர்கள் தன் இனப்பகைவர்கள் எனக் கருதி, சூரபன்மன் தேவலோகம் முழுவதையும் அழித்தஞான்று, அழியாது நிலைபெறும் நாடு பாண்டி நாடு என இந்திரன் எண்ணித் தன் உச்சிகள் வானை அளாவும் திரிகூடமலையைப் புகலாக அடைந்தான். அந்நாள் முதல் தேவலோகம் எனவும் தென் ஆரிய (மேன்மையுள்ள) நாடு எனவும் பெரியோர்களால் வழங்கப்பெற்று வருவது இந்நாடு.

ஆட லாயிரம் விழியினு னருஞ்சிறை யரிந்திடப் புகுநாளில்
ஓட வேறிட மின்மையா லெம்பிரா னுறைதரு மிந்நாட்டின்
மாட மாளிகை மண்டப முபரிகை மன்றநா டகசாலை
கூட கோபுர மெனக்குடி புகுந்தன குலவரைக் குலமெல்லாம். 41

பொ - ரை: வெற்றியையுடைய இந்திரன் மலைகளின் சிறகுகளை அரியப் புகுந்த காலத்தில், தாம் ஓடி அடைக்கலம்புக வேறிடம் இன்மையால் உயர்ந்த மலைகள் எல்லாம் பாண்டிய நாட்டில் மாடமாளிகை முதலாகிய கட்டடங்களாகக் குடிபுகுந்தன.

செந்நெ லாரமே சிற்றிலாச் செழுஞ்சினைக் கமடங்க ளடுப்பாகக்
கன்னன் மாமணி யரிசிதூய் வலம்புரிக் கடங்கள்பெய் துலையேற்றிச்
சொன்ன மாமண லுமித்திரள் சொரிந்துசெந் துவர்கன லெனமூட்டி
யன்ன மார்வயற் பாவையர் பாவைகட் கருத்துவர் சிறுசோறு. 42

பொ - ரை: மருதநிலச் சிறுமியர் செந்நெல்லிலிருந்து பிரித்தெடுக்கப்படும் முத்துக்களே சிறு வீடுகளாக அமைக்கப்பெற, செழுமையான சூல்கொண்ட ஆமைகளே அடுப்பாக, கரும்பினின்றும் பெறும் பரிய முத்துக்களாகிய அரிசியை, வலம்புரிச் சங்குகளாகிய பாத்திரத்தில் இட்டு உலையாக ஏற்றி, சிவந்த பவளமே நெருப்பாக மூட்டிச் சிறுசோறு அட்டுத் தம் மரப்பாவைகளுக்கு ஊட்டுவர்.

வேறு

கொல்லையங் குறிஞ்சி யேனல் வரகின்மேல் குரல்க ணீட்டும்
முல்லையின் முதிரை சாலி வேலிமேற் குலைகண் மொய்க்கும்
எல்லையங் கழனி வாழை பந்தரிட் டிலைக ளேந்தத்
தொல்லைநீர் நெய்தற் கைதை சோறுகள் சொரியு மாதோ. 43

பொ - ரை: குறிஞ்சி நிலத்துத் தோட்டங்களில் விளையும் தினை முல்லை நிலத்து வரகங்கதிர்மேல் தம் கதிர்களை நீட்டும்; முல்லை நிலத்து விளையும் அவரை துவரை முதலிய முதிரைகள் மருதநிலத்தில் உள்ள நெல்வேலிகள்மீது தம் காய்க் கொத்துக்களை நெருங்க வைக்கும்; மருத நிலத்தில் வயல்களின் கரைகளில் உள்ள வாழைகள் நிழலைச்செய்து தம் கீழ்க்கன்றுகளின் இலைகளை ஏந்துதலால், கடற் கரையாகிய நெய்தல் நிலத்து விளையும் தாழை தன் மகரந்தமாகிய சோற்றைச் சொரியும்.

இதுவும் அடுத்த பாட்டும் திணைமயக்கம் கூறுகின்றன.

குறிஞ்சியந் தினையுந் தேனு மெயினர்பாற் கூட்டி வேடர்
எறிந்தவெஞ் சிலையைக் கோலா விடையர்கட் குதவி யாயர்
கறந்தபான் மள்ளர்க் கீந்து மள்ளர்கட் குடத்தினோடு
மறிந்தநெற் குவையை வாரி வலையர்கட் குதவும் வாரி. 44

பொ - ரை: ஆற்றுவெள்ளம் குறிஞ்சி நிலத்து விளையும் தினை தேன் என்பவற்றைப் பாலைநிலமக்களுக்குச் சேர்க்கும்; அந்நிலத்தில் உள்ள வேடர்கள் பயன்படா என வெறுத்து எறிந்த விற்களை முல்லை நிலத்தில் உள்ள இடையர்களுக்கு மாடு மேய்க்கும் கோலாக உதவும்; முல்லை நிலத்து மக்கள் கறந்த பசுப்பாலை மருதநிலத்து உள்ளார்க்குக் கொடுத்து, மருதநிலத்தாரிடம் உள்ள கட்குடத்தினையும் வைக்கோலிலிருந்து பிரிந்த நெற்குவியல்களையும் நெய்தல் நிலமக்களுக்குக் கொடுக்கும்.

ஆறெலாங் குதிக்கும் வாளை யலையெலாங் கொழிக்குஞ் செம்பொன்
சேறெலா முழக்கு மேதி செய்யெலா முகிழ்க்கு நீலம்
நாறெலாம் வளர்க்கும் பூந்தே னாடெலாம் வளர்க்குஞ் செங்கோல்
சாறெலாம் வளர்க்கும் வீதி தமிழெலாம் வளர்க்கு மன்றம். 45

பொ - ரை: ஆற்றில் வாளைகள் தாவிக்குதிக்கும்; அலைகள் பொன் கொழிக்கும்; எருமைகள் சேற்றைக் கலக்கும்; வயல்களில் நீலம் அரும்பும்; பூக்களில் உள்ள தேன் நாற்றுக்களை வளர்க்கும்; அரசனது செங்கோல் நாடு முழுவதையும் முன்னேறச் செய்யும்; வீதிகள் விழாக்களைப் பெருக்கும்; மன்றங்கள் முத்தமிழையும் வளர்க்கும்.

மைந்தர்தம் புயமும் தாரு மாதர்பூங் கொங்கை யார்க்கும்
கொந்துலாங் குழலு மின்னார் கோலமு மெழிலி னீட்டங்
கந்தமார் கழுநீர் வண்டுங் கமலமு மிரவி னாடும்
விந்தைசேர் முலையுங் கண்ணும் விரைதரு குழை கடாவும். 46

பொ - ரை: இளைஞர்களுடைய புயங்கள் மாதர்களுடைய பொலிவினையுடைய கொங்கைகளைக் கட்டுப்படுத்தும் (ஆர்க்கும்); மாலைகளும் அவர்தம் கொங்கைகளில் நிறையும் (ஆர்க்கும் - தன்வினைப்பொருள் தருகிறது); மின் போன்ற மகளிர்தம் பூங்கொத்து அமைந்த கூந்தல் எழுங்கால் இனிய நீளமுடைய (எழில் இன் நீட்டம்); அவர்தம் கோலம் (வடிவு) அழகின் தொகுதி (எழிலின் ஈட்டம்); மணம் நிறைந்த செங்கழுநீர் மலரில் வண்டுகள் இரவில் அசைந்து நடம்புரியும் (இரவின் ஆடும்); தாமரை இரவியை (சூரியனை) நாடும்; வியப்பைத்தரும் முலைகள் மணம் உள்ள சந்தனக்கலவை (விரைதரு குழை)யைத் (தம்மைத் தோயும் மார்பிற்) செலுத்தும்; கண்கள் அசையும் குழைகளைத் தாவி எட்டும் (விரைதரு குழைகள் தாவும்). எழிலியின் எ - ம் ஆம்.

அன்னவா ரிசமும் யாறு மம்பொனு டரங்கங் காட்டும்
பொன்னணி மறுகும் வாணர் புலமையுஞ் சங்க மேயும்
மன்னுசீர் விழாவு மாதர் வதனமும் திங்க ளார்க்கும்
மின்னனார் தனமுஞ் சோலை வேலியு நரந்த நாறும். 47

பொ - ரை: அன்னம் அமரும் தாமரை அழகிய திருமகள் நடம்புரியும் அரங்கத்தைக் காட்டும்; ஆறு நீரோடுகூடிய பொற்பொடியை ஆளும் அலைகளைக் காட்டும் (அம்பொன் ஆள் தரங்கம் காட்டும்); பொன்னால் அழகு செய்யப்பட்ட வீதிகளில் சங்கு ஊரும் (சங்கம் மேயும்); புலமை கற்றோர் சங்கங்களிற் பொருந்தும்; திருவிழா திங்கள்தோறும் முழங்கும்; மாதர் முகம் திங்களைப்போல ஒளி வீசும்; மகளிர் தனங்கள் கஸ்தூரி மணக்கும்; சோலை வேலிகளில் நாரத்தை மரங்கள் தோன்றும்.

காவிகள் கிளைக்கு மாலை கமழ்குழற் கிளைக்கு மாலை
ஏவுநீர்ப் பழனந் தோட்ட மிடந்தொறும் பழனந் தோட்டம்
ஆவிவாய்க் கமட மேயு மறங்கள்வாய்க் கமட மேயுந்
தூவிய மடப்பா லன்ன ந் துறைதொறு மடப்பா லன்னம். 48

பொ - ரை: நீலோற்பலங்கள் மாலைக்காலத்தில் தோன்றும்; வாசனை தோன்றும் பெண்கள் கூந்தலுக்கு இரவு இளைக்கும்; செலுத்தும் நீரில் பழைய நந்தின் (சங்கின்) ஓட்டம் உள்ளது; பார்க்கும் இடங்களில் எல்லாம் வயல்களும் பூந்தோட்டங்களும் உள்ளன; தடாகத்தில் ஆமைதிரியும்; மடங்களில் தருமங்கள் வாய்க்க, சுத்தமான ஏவலர் அடும் சிறந்த பாலோடு கூடிய அன்னம் பொருந்தும் (அறம்வாய்ப்பமடம் ஏயும் தூ வியம் அடு அப்பால் அன்னம்); நீர்த்துறை தோறும் தூவியையுடைய இளையவெண்மையான அன்னப்பறவை பொருந்தும்.

புயல்கள்கோ டரங்கு லாவும் பொழில்கள்கோ டரங்கு லாவுங்
கயல்கண்மா தரங்க மேவுங் கலங்கண்மா தரங்க மேவும்
இயலிசை கொழிக்குஞ் சங்க மினமணி கொழிக்குஞ் சங்கம்
வயலெலாம் பொருங்கா லாறு மலரெலாம் பொருங்கா லாறு. 49

பொ - ரை: மேகங்கள் வளைவான அரங்குகளில் விரும்பித்தங்கும்; சோலைகளில் குரங்குகள் விரும்பி உலாவும்; கயல் மீன்கள் பெரிய அலைகளில் பொருந்தும்; ஆபரணங்கள் மாதர்களின் அங்கங்களில் மேவும்; சங்கங்களில் இயலும் இசையும் விளங்கும்; சங்குகள் உயர்ந்த மணிகளைத்தரும்; வயல்களில் வாய்க்காலும் ஆறும் மோதும்; மலர்களில் வண்டுகள் (கால் ஆறு) வந்துபாயும்.

அலைபடுங் கொடியும் யாறு மவிபடு முணவுந் தெவ்வும்
உலைபடுங் கனியும் பொன்னு முடைபடுந் ததியுந்தூசும்
மலைபடு மலரு மஞ்சும் வளைபடுந் தனுவுஞ் செய்யுங்
கலைபடு மதியு மன்றுங் கரைபடுந் தடமுஞ் சாந்தும். 50

பொ - ரை: கொடிகள் அலையும்; ஆறுகளில் அலைகள் உண்டாகும்; உணவு நெய்யோடு கூடும், பகைவர் அழிவை எய்துவர்; கனி நெகிழ்ச்சியை அடையும், பொன் ஊது உலையில் வைக்கப்படும்; தயிர் பிளவுபடும், தூசு உடுக்கப்படும்; மலர்கள் சூடப்படும், மேகம் மலைக்கண் தோன்றும்; வில் வளைக்கப்படும், வயல்கள் சங்குகளை உடையவாகும்; சந்திரன் பதினாறு கலைகளை உடையன் ஆவன், மன்றங்களில் கற்ற கலைகள் விளங்கித்தோன்றும்; தடாகங்கள் வரம்பு உடையவாம், சாந்து கரைக்கப்படும்.

வேறு

செய்காட்டுந் தாமரையாத் தேன்காட்டுங் கழுநீரா
மொய்காட்டு நறுந்தளவா முருகாட்டு மாந்தளிராக்
கைகாட்டி முகங்காட்டிக் கண்காட்டி நகைகாட்டி
மெய்காட்டித் திருமடந்தை விளையாடுந் திருநாடு. 51

பொ - ரை : இத்திருநாட்டில் வயல்களில் உள்ள தாமரையே கையாகவும் முகமாகவும், தேன்கமழும் நீலோற்பலமே கண்களாக, நெருங்கியுள்ள முல்லை யரும்புகளே பற்களாக, வாசனையுள்ள மாந்தளிரே திருமேனியாகக் காட்டித் திருமகள் விளையாடுகிறாள்.

வி - கு : முருகு காட்டும் - முருகாட்டும்: கடைக்குறை.

பண்ணவருங் கடவுளரும் பரவுசரா சரமாகக்
கண்ணகன்சீர்த் திசைதோறுங் காதலா யுறைகுவரேல்
அண்ணலார் நன்னகர்த்தென் னாரியநாட் டணிபுகழ்தல்
விண்ணவர்க்கே யரிதாமேன் மேதினியோர்க் கெளிதாமே. 52

பொ - ரை : முனிவர்களும் தேவர்களும் தென் ஆரியநாட்டில் பரவப்படும் தாவரசங்கமப் பொருள்களாக இடமகன்ற திசைகள் தோறும் அன்பாய்த் தங்கு வர்; ஆதலால் இறைவனால் ஆளப்பெற்ற அந்நாட்டின் அழகை உள்ளவாறு எடுத்துக்கூறுதல் தேவர்க்கும் அரிது; அங்ஙனமாயின் நிலவுலகத்தாருக்கு அதுசெய்தல் எளிதாகாது.

வேறு

பூவினுக் கிறைவர் கஞ்சப் பூமகட் கிறைவர் தங்கள்
ஆவிகட் கிறைவர் வாழ்தென் னாரிய நாடு சொற்றும்
பாவினிற் பயனிற் சொல்லிற் பண்ணினிற் பயிலுந் தோறு
நாவினுக் கினிய தான நகரினைப் பகர்தல் செய்வாம். 53

பொ - ரை : உலகத் தலைவர்க்கும் கலைமகள் திருமகள் கணவர்க்கும் உயிர் நாயகனான சிவபிரான் உறையும் தென்னாரிய நாட்டின் வளம் இதுகாறும் சொன் னோம்; இனி, பாட்டாலும், பொருளாலும், சொல்லாலும், இசையாலும் பழகுந் தோறும் பேச இனிய திருநகரத்தின் சிறப்பைக் கூறுவோம்.

திருநாட்டுச் சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 119

# திருநகரச் சருக்கம்

அகில காரண னகிலலோ கமும்படைத் தளித்தரு ளிடமாகிச்
சகல காலமு மழிவிலாத் தலமெனுந் தகைமையாற் சதுர்வேதன்
பகலி ராத்தொறுந் தவிர்படு பலபருப் பதங்களுங் கடல்யாவும்
புகலி டம்பெற வந்திடம் பிடித்ததாம் புரிசையு மகப்பாவும். 1

பொ - ரை: உலக முதல்வன் என்றும் எழுந்தருளியிருந்து எல்லா உலகங்களையும் படைத்தும் காத்தும் அருளும் இடமாய் எக்காலத்திலும் அழிவின்றி நிலை பெறும் தன்மையால், பிரமதேவனுடைய பகல் இரவு எனப்படும் கற்பந்தோறும் அழிவனவாகிய மலைகளும் கடல்களும் அவ் அழிப்புக்காலத்தில் புகலிடமாக இந் நகர்க்கண் வந்து இடம் பிடித்துக் கொண்டாற்போல உள்ளன, நகரின் புற மதிலும் அகழியும்.

வி - கு: அகப்பா - அகழி.

பூமிக் கோரர சிருக்கைதென் புடார்ச்சுன புண்ணிய புரமாகும்
நேமிக் குன்றமே நகர்ப்புறஞ் சூழ்தரு நெடுநிலைப் பெருஞாயில்
வாமக் குன்றெலா மாடங்கள் வரைக்கொரு மருகனுர் திருக்கோயில்
ஏமக் குன்றுசூழ் நாற்கிரி கோபுர மெண்குலக் கிரிமாதோ. 2

பொ - ரை: தென் புடார்ச்சுனபுரம் என்னும் புனிதமான நகரம் நிலவுலகத்திற்கு ஒப்பற்றதோர் அரசிருக்கை (இராசதானி) ஆகும்; அதன் சுற்றுப் பக்கமாக வளைந்துள்ள உயர்ந்த நிலைகளையுடைய மதில் அண்டத்தைச் சூழ்ந்துள்ள சக்கரவாளம் என்னும் மலைபோன்றது; நகரில் உள்ள மாடங்கள் உலகில் உள்ள பல குன்றுகளை ஒப்பன; இமய மலையரையன் மருகனுராகிய சிவபிரான் திருக்கோயில் பொன்மலை ஆகும்; திருக்கோயிலின் கோபுரங்கள் மேருவைச் சூழ்ந்துள்ள நான்கு மலைகள் (மந்தரம், கந்தமாதனம், விபுலம், சுபார்சுவம்); ஏனைய விமானங்கள் மண்டபங்கள் முதலியவை அட்டகுல பருவதங்கள் ஆகும்.

இஞ்சி சூழ்வது நாற்றிசைப் புறமெலா மிடந்தொறுந் துளிதூங்க
மஞ்சு சூழ்வது மணிமதிற் புறமெலா மங்கைய ரடிசேர்செம்
பஞ்சு சூழ்வது மைந்தர்பொன் முடியெலாம் பயிலுமங் கலநாதம்
அஞ்சு சூழ்வது மனையெலா மணிகொழித் தாறுசூழ் வதுமூதூர். 3

பொ - ரை: நாற்றிசைப் பக்கங்கள் எல்லாம் கோட்டையாற் சூழப்பெற்றது; உயர்ந்த இடம் எல்லாம் நீர்த்துளி தங்கும்படி மேகஞ் சூழ்ந்துள்ளது; மகளிர் அடியில் ஊட்டப்பெற்றுள்ள செம்பஞ்சு அவர்களைக் காதலித்துத் துனிமிகும் இளைஞர்களுடைய பொன் முடிகளால் தாங்கப்பெறும்; வீடுகள் தோறும்

பஞ்ச வாத்திய மங்கல முழக்கம் உள்ளது; பழைய ஊரை மணிகளை ஒதுக்கி ஆறு சுற்றிச் செல்கின்றது.

நாட்டம் போல்வது தரைமகட் கந்நகர் நாடொறு மளகேசன்
தேட்டம் போல்வது திரள்பெறு மிருநிதி திரிபுரை செழுங்காமக்
கோட்டம் போல்வது குளிரறச் சாலைநற் குறுமுனி பெரும்பான்மை
நீட்டம் போல்வது நிகழ்தரு பதிதொறு நிறைதரு பெருஞ்செல்வம். 4

பொ - ரை: இந்நகர் நிலமகளுக்குக் கண்போன்றது; இதன் மக்களால் ஈட்டப்பெறும் பெருநிதியங்கள் குபேரனது செல்வம் போன்றது; தண்ணிய நிழலைச்செய்யும் அறச்சாலைகள் முப்பத்திரண்டு அறங்களையும் நிகழ்த்துதலின், உமையம்மையின் கச்சிக் காமக்கோட்டம் போன்றது; பதிகள் தோறும் நிறைந்து வளரும் பெருஞ்செல்வம் அகத்தியமுனிவர்தம் பெருந்தன்மையின் வளர்ச்சியை ஒத்தது.

நீல மாடமு நித்திலத் தெற்றியு நிரைத்தன தெருத்தோறுங்
கோல மோதிம மாகியொவ் வோருருக் கொண்டுபற் பலகாலம்
ஆல முண்டவ னடிமுடி தேடுவா ரணிவிழாத் தொறுங் காண்பான்
தூல மானபற் பலவுருக் கொடுநகர் சூழ்ந்துநிற் பதுமானும். 5

பொ - ரை: தெருக்கள்தோறும் உள்ள மாளிகைகளில் நீலக்கற்களால் மாடங்களும் முத்துக்களால் திண்ணைகளும் வரிசையாக அமைந்திருப்பது, பன்றி (கோலம்) அன்னம் (ஓதிமம்) என வேறு வேறு உருக்கொண்டு சிவபிரான் அடி முடிகளைப் பற்பல் காலம் தேடிய மாலும் அயனும், இந்நகர்க்கண் திருவிழா நிகழுந்தோறும் அவற்றை அங்ஙனந்தேடிக் காணுதற்பொருட்டுப் பற்பல பரிய உருவங்களைக்கொண்டு நகரத்தைச் சூழ்ந்து உள்ளதைக் காட்டும்.

### வேறு

முந்தை மாமறை யோர்முது வீதிவாய்
விந்தை நாரியர் மேடையின் மேற்கிளி
சிந்தை வேதச் சிறாரயர்ப் பாயினுஞ்
சந்தை சொல்லுந் தனித்தனி மாடங்கள். 6

பொ - ரை: பழைய மறைகளை ஓதும் அந்தணர்தம் பெரிய வீதிகளில் பெண்கள் உலாவும் விநோதமான மேடைகளில் உள்ள கிளிகள், வேதம் பயிலும் சிறுவர்கள் சிந்தையில் மறந்தாலும், தனித்தனி மாடங்களில் கூட்டமாய் அவ் வேதத்தொடர்களைச் சொல்லும்.

விரும்பு கைக்குல மேகத் துளியெலாம்
கரும்பு கைக்குங் கனிமொழி மாதரார்
சுரும்பு கைக்கு மலர்க்குழல் சூட்டகில்
வரும்பு கைக்குளிர் வாசனை வீசுமால். 7

பொ - ரை: விரும்புதலையுடைய மேகக் கூட்டத்தினின்று விழும் துளிகள் எல்லாம், கரும்பை வெறுத்தற்குக் காரணமான இனிய மொழி பேசும் மகளிர் தம்

வண்டை ஓட்டும் (உகைக்கும்) மலரணிந்த கூந்தலுக்கு இடுதற்பொருட்டுச் சுட்ட அகிற்கட்டையின் புகைமணம் இனிது கமழும்.

வேறு

விடமுந் தூயதெள் ளமுதமு மின்னனார் விழிகளி னிடைத்தோன்றும்
கடவு தண்டமுங் கருணையு மனுநெறிக் காவல ரிடைத்தோன்றும்
சுடரிற் காய்வதுங் குளிர்துளி பொழிவதுஞ் சூரிய னிடைத்தோன்றும்
அடைவு சேர்பெருந் தவத்தர்பாற் சாபமு மநுக்கிர கமுந்தோன்றும். 8

பொ - ரை: மாதர்கள் கண்களில் நஞ்சும் அமுதும் ஒத்து நோய் நோக்கும் அதற்கு மருந்தாகிய நோக்கும் ஒருங்கே உள்ளன ஆகும்; மனுமுறையில் ஆளும் அரசரிடத்துச் செலுத்தப்படும் ஒறுப்பும் அருளிப்பாடும் ஒருங்கே அமையும்; கிரணங்களால் தெறுதலும் குளிர்ச்சியான மழைத்துளிகளைச் சொரிவதும் ஞாயிற்றினிடத்துக் காணப்படும்; முறையாக வளர்த்த பெருந்தவம் உடையோர்களிடத்துச் சாபம் அநுக்கிரகம் இரண்டும் வெளிப்படும்.

கறைகொள் கந்தரக் கடவுளைச் சேர்ந்தபின் கறைதவிர் மதியோங்கிப்
பிறைக ளாயிர கோடியாய்க் கிளைத்துமேற் பிறழ்வதோ பெருவானத்
துறைகொள் கங்கையின் பெருக்கமோ புரந்தரன் சுடர்ப்படை தனிலீர்ந்த
சிறைகள் குன்றெலா முளைத்தவோ மாடமேற் செழுமணிக் கொடியீட்டம். 9

பொ - ரை: வெண்மையான, மாடங்களின்மேல் அசையும் அழகிய கொடிகளின் தொகுதி நீலமிடற்றுக் கடவுளை அடைந்தபின் சந்திரனுக்கு வளர்ந்த கலைகள் அளவற்றனவாய்த் தோன்றி ஒளிர்கின்றனவோ, அன்றித் துறைகளையுடைய கங்கையாற்றின் பெரு வெள்ளமோ, அன்றி இந்திரன் தன் வைரவேலால் அரிந்துவிட்ட சிறகுகள் குன்றுகளுக்கெல்லாம் மீண்டும் முளைத்துவிட்டனவோ என வியக்கத்தக்கதாய் இருக்கும்.

பின்னல் சேர்நதி வேணியார் முத்தலைப் பிறங்கலி லயனாகி
முன்னெ லாமிருந் துலகெலாம் படைத்தநாண் முகிலெலா மதியெல்லாம்
பொன்னெ லாநவ மணியெலா மணங்கமழ் பூவெலா முயர்வானின்
மின்னெ லாங்கொடு சமைத்ததா மிந்நகர் மின்னனார் வடிவெல்லாம். 10

பொ - ரை: இந்நகரில் உள்ள மகளிர்தம் வடிவங்கள் (கூந்தல் முதலிய வற்றைப் பெற்றிருத்தல்), சடைக்கண் கங்கையை வைத்த முதல்வன் திரிகூடமலையில் முன் அயன் என இருந்து உலகம் யாவையும் தோற்றியபோது, மேகம், மதி, பொன், நவமணி, பூ, உயர்ந்த மேகத்தின்கண் தோன்றும் மின்னல் எனும் இவற்றையெல்லாம் கொண்டு படைத்தாரோ என எண்ணும்படி உள்ளது.

வேறு

விளர்தரு மதியின் பாலோ வெள்ளிவள் ளத்தின் பாலோ
கிளர்வதென் றுணராப் பிள்ளைக் கிள்ளைகண் முகப்ப வேகித்
தளர்வது கனக மேடைத் தளந்தொறுந் தேய்ந்து திங்கள்
வளர்வது தவள மாடம் வடிம்புதோய் சுதையான் மன்னே. 11

பொ - ரை: வெண்மையான மாடங்களிலும் விளிம்பிலும் தோய்ந்துள்ள சுதையால் (சுடுசுண்ணச் சாந்து காரணமாக) இளம் கிளிகள் வெண்ணிலாவின் கதிரோ கிண்ணத்தில் வைத்துள்ள பாலோ என உணரமாட்டாது பால் என்று உண்ணச்சென்று பொன்னல் அணி பெற்றுள்ள மேடைகள்தோறும் தளர்வன ஆம்; அச்சுதையால் (அமுதத்தால்) நிலவும் வரம்பில் உரசித் தேய்ந்து பின் வளர்வதும் ஆகும்.

பயிலுமே னிலைக டோறும் பந்தடித் தாடு வாரை
மயிலெனக் குயில்பின் காட்ட மழலைவா யிசையா லஞ்சிக்
குயிலென மயில்பின் காட்டக் குழைகளா லளகக் கொத்தால்
வெயிலொடு புயலுங் காட்டி மீட்டுமீட் டழையா நிற்பார். 12

பொ - ரை: மகளிர் பழகும் மேல் நிலைகளில் பந்தடிக்கும் மகளிருடைய சாயலைக்கண்டு மயில் எனக்கருதிக் குயில் புறங்காட்டி ஓடும்; அவர்தம் இசையைக்கேட்டுக் குயில் தாம் இவர் என மயில் புறம் காட்டும். ஆயினும், அவர்கள் தம் காதணிகளால் வெயிலையும் கற்றையாகிய கூந்தலால் மேகத்தையும்காட்டுதலின் அவைமுறையே அவர்களை மீண்டும் மீண்டும் அணுகும்.

வி - கு: வெயிலை விரும்புவது குயில்; மயில் மழையை விரும்பும்.

பச்சையாற் பவளக் கொத்தாற் பதுமரா கத்தான் முத்தால்
வச்சிர வயிடு யத்தான் மற்றுள மணிக ளாலும்
அச்சினில் வார்த்தா லென்ன வணிகிளர் மாட வீதி
நச்சர வுச்சி யாட்கு நவமணி மாலை மானும். 13

பொ - ரை: பச்சை முதலிய மணிகளால் அச்சில் வார்த்து எடுத்தாற் போல ஒரே சீராக அழகு விளங்கும் மாடவீதி ஆதிசேடன் முடியில் நிலைபெறும் நிலமகளுக்கு அணிந்த நவமணி மாலைபோல அமையும்.

வேறு

தெளிக்குமணி வளையார்ப்பச் சிலம்பலம்ப வானுயர்ந்த
பளிக்குமணி மேடையின்மேற் பந்தாடல் பயில்வாரை
அளிக்குலஞ்சேர் பூந்தடத்தி லன்னமெனப் பொன்னாட்டுக்
களிக்கும்வர நதிக்கரையிற் கன்னியன்னஞ் சூழுமால். 14

பொ - ரை: பளிங்காற்செய்த மேல்நிலை மேடைகளில் தெளிவான மணி பதித்த வளையல்கள் ஒலிப்பவும் காற்சிலம்பு ஓசை செய்யவும் பந்தாடும் மகளிரை வண்டுகள் பயிலும் மலர்த் தடாகத்தில் உள்ள அன்னம் என நினைத்துச் சுவர்க்க நாட்டில் களிப்புடன் ஆகாய கங்கைநதிக் கரையில் உள்ள இளைய அன்னங்கள் வந்து சூழும்.

வண்டாடுஞ் சோலைகளு மயிலாடுஞ் சாலைகளும்
விண்டாடு மேடைகளுங் கண்டுகண்டு மேதினிமான்
பண்டாடுங் கரங்களன்றிப் பயில்கோடி கரமெடுத்துக்
கொண்டாடு வதுபோலு மணிமாடக் கொடியெல்லாம். 15

பொ - ரை: அழகிய மேல் நிலைகளில் உள்ள கொடிகள் எல்லாம், நில மகள், வண்டு பயிலும் சோலை, மயில் கூத்தாடும் சாலையில் உள்ள மரங்கள்; மேகம் (விண்டு) தங்கும் மேடைகள் ஆகிய இவற்றை மீண்டு மீண்டு நோக்கித் தன் இயற்கையின் அமைந்த கைகளையன்றி அளவிறந்த கைகளை மேலெடுத்து நீட்டி மகிழ்ச்சிக் கூத்து ஆடுவதுபோல அமையும்.

குவவுதம னியச்சிகரி கோலவட வரைகாட்ட
இவருமணி மேனிலைக ளெழுபுவன முறைகாட்ட
நவமணிக ளழுத்தியது நவக்கிரக நிலைகாட்ட
நுவல்கணித நூலோர்க்கு நூன்மயக்கங் காட்டுமால். 16

பொ - ரை: திரண்ட பொற்கோபுரங்கள் அழகிய மேருவாகவும், எழு கின்ற மேல் நிலைகள் ஏழு புவனங்களாகவும், ஒன்பதுவகை மணிகள் அழுத்தியது நவகோள்களாகவும் தோன்றுதலின் சோதிட நூலார்க்குத் தாம் கற்ற நூல் மயக்கத்தை உண்டுபண்ணும்.

ஒண்மணிமண் டபந்தோறு முயர்கொடிகள் வானளவித்
திண்மையுற நின்ருடல் செங்கதிரோன் றேர்த்துகளும்
வெண்மதியிற் படர்மாசும் விண்மீது படராமே
மண்மகள்செங் கரந்தூசு கொண்டுதுடைப் பதுமானும். 17

பொ - ரை: ஒளியுள்ள மணிகள் பதித்த மண்டபங்கள் தோறும் உயர்ந்த கொடிகள் ஆகாயத்திற் கலந்து திட்பமாக நின்று ஆடுதல், ஞாயிற்றின் தேர்க் காலில் உள்ள துகளும் வெண்ணிலாவின் களங்கமும் வானிலிருந்து வந்து படியாதவாறு நிலமகள் தன்கைகளில் புடவைகொண்டு துடைப்பதுபோல உள்ளது.

அரும்படிக நிலத்தூடு மணங்காரை யாடவர்கள்
விரும்படிக ளெனப்பரவ வியன்முடிமே லலத்தகங்கள்
வரும்படிகண் டலர்விளைப்பார் வருகாலை மருமாலைச்
சுரும்படிக ளடிச்சுவடு தோன்ருமல் மறைத்திடுமால். 18

பொ - ரை: அரிய படிகங்களால் இயற்றப்பெற்ற தளங்களில் ஊடலால் துனிசெய்யும் மகளிரை ஆடவர்கள் தம்மால் விரும்பப்படும் தெய்வம் என அடி வணங்க, அவர்தம் முடிமேல் தம்அடியில் உள்ள செம்பஞ்சுக் குழம்பு தோயும்படி மிதித்து நிந்தைவிளைப்பர்; அடுத்துவரும் காலையில், அவர்தம் மணமாலைகளில் உள்ளவண்டுகளின் அடிகள் அச்சுவடுகள்மேல் தோய்ந்து அவற்றைப் பிறர் காணமல் மறைக்கும்.

வி - கு: அலத்தகம் - செம்பஞ்சு; செம்பஞ்சுக் குழம்பின் வாசனையை விரும்பி வண்டுகள் மொய்க்கும் என்றபடி.

வேறு

பொதிர்படக் ககனந் தாவும் பொலன்மணி மாட கோடிக்
கதிர்கள்கண் வழுக்கித் திங்கள் கனககோ புரத்தின் மோதிப்
பிதிர்படு மதனு லன்றே பிறையதாய்க் குறையா யெங்கும்
விதிர்படு நாளாய்க் கோளாய் மீன்களாய்ப் பரம்பும் வானம். 19

பொ-ரை: ஓட்டை உண்டாகும்படி விண்ணுலகத்தில் செல்லும் அள வற்ற மணிமாடங்களின் ஒளி கண்களைக் கூசச்செய்தலால் சந்திரன் பொன்மய மான கோபுரத்தில் முட்டிப்பொடியாகும்; அதனுல்தான், அத்திங்கள் குறைப் பிறையாய் நடுங்கும்; எங்கும் நட்சத்திரங்கள், கோள்கள், இருபத்தேழில் அடங் காத நட்சத்திரங்கள் உண்டாகி ஆகாயத்தில் பரவும்.

விண்டருங் கொடிஞ்சித் திண்டேர் விழாவரு வசந்த வீதி
எண்டரும் புயத்தெம் மானை யென்றுமே நின்று போற்றும்
தொண்டர்தங் குழாங்கள் போலுஞ் சுதைநெடு மாட மெல்லாம்
அண்டர்தங் குழாங்கள் போலு மம்பொனு டரங்க மெல்லாம். 20

பொ-ரை: ஆகாயத்தை (விண்) அளாவும் தலைஅலங்காரம் உள்ள திண்ணியதேர் முதலிய விழா நீங்காத வசந்த வீதிக்கண் உள்ள சுண்ணச்சாந்து தீற்றப்பெற்ற உயர்ந்த மாடங்கள் எண்தோள் ஈசனை என்றும் நின்று போற்றும் திருநீற்றுமேனித் தொண்டர்களை நிகர்க்கும்; அழகிய பொன்வேலை அமைந்த அரங்குகளெல்லாம் தேவர் குழாங்களை ஒக்கும்.

வேறு

தாயின் மிக்கவன் றுடொழ முச்சகம்
கோயில் புக்கு வருபெருங் கொள்கையால்
சேயின் மிக்குல குண்டுமிழ் சீதரன்
வாயின் மிக்கது கோபுர வாயிலே. 21

பொ-ரை: தாயினும் இனிய சங்கரன்தாள் பணிய மூவுலகமும் திருக் கோயிலுக்குள்புக்குத் திரும்பி வரும் பெருங்காரணத்தால் கோபுரவாயில், உயரத் தின் மிக்கு நின்று உலகை உண்டு உமிழும் திருமாலின் வாயைப்போல மேம்பா டுடையதாகின்றது.

வேறு

வாடைவந் துலவிய படிக மாமணி
மேடையி லுடுக்குழாத் துலவும் வெண்பிறை
ஓடைநீர்ப் பெருந்தட மதனி லோதிமப்
பேடைதன் பார்ப்பொடும் பெயர்தல் போலுமால். 22

பொ-ரை: காற்று உலாவும் பளிங்கால் இயன்ற பெரிய மணிகள் பதித்துள்ள மேடையில் சந்திரன் நட்சத்திரக் கூட்டங்களுடன் தவழ்வது, நீரோ டையில் அன்னம் தன் குஞ்சுகளுடன் நடத்தல்போலும்.

ஏகமா மரகதத் தியற்று மாளிகை
மாகமார் சூளிகை தொடுத்து மாடெலாம்
பாகமேற் பதிந்தொளிர் பதும ராகங்கள்
மேகமேற் பரந்தொளிர் மின்கண் மானுமே. 23

பொ - ரை: ஓரேவகையாகப் பச்சையினுற் செய்யப்பெற்ற மாளிகையில் ஆகாயத்தை அளாவும் நிலாமுற்றம் உட்படப் பக்கமெல்லாம் பக்குவமாகப் பதிக்கப்பெற்று ஒளிவிடும் பதுமராக மணிகள், மேகபடலத்தின்மீது பரவி விளங்கும் மின்னல்களை ஒக்கும்.

சேடக முயர்நிலை தீட்டுஞ் சித்திர
நாடகப் பத்திசேர் நடத்தை நாடொறும்
பாடகக் கால்களாற் பயின்ற தாலன்றே
ஆடலி லுயர்ந்தன ரமரர் மாதரே. 24

பொ - ரை: அழகிய மாளிகைகளின் மேல் நிலைகளில் தீட்டப்பெற்றுள்ள நாட்டியக்கலைச் சித்திரங்களால் குறிக்கப்பெறும் நாடகக்கூறுகளை அன்றுடம் தேவமகளிர் தம் பாடகம் பூண்ட கால்களால் பழகி வந்ததால்தான் அவர்கள் நாட்டியக்கலையில் உயர்ந்தவர் ஆயினர்.

பளிக்குமா ளிகையின்மேற் பவளத் தூவிகள்
குளிக்குநீர்க் குளங்கண்மேற் குமுதம் பூத்ததாம்
துளிக்கரு முகிலினஞ் சூழ்ந்து லாவரல்
களிப்புறு சிறையளிக் கணங்க ளேய்க்குமால். 25

பொ - ரை: பளிங்கு மாளிகையின் மேல் பவளத்தால் செய்யப்பெற்ற சித்திர வேலைப்பாடுகள் நீர்த்தடாகங்களில் செங்கழுநீர் பூத்துள்ளதை ஒக்கும்; அம்மாளிகையைக் கரிய மேகஞ்சூழ்தல் அம்மலர்களை நாடிவரும் வண்டுக் கூட்டங்களை ஒக்கும்.

இந்திர நீலத்தி னியன்ற மாடமேல்
சந்திர காந்தத்திற் சமைத்த தூவிகள்
அந்தர மதிக்குநீ ரளித்தல் வேனிலும்
கந்தரம் பொழிதுளிக் காலங் காட்டுமே. 26

பொ - ரை: இந்திர நீலக் கற்களால் அமைந்த மாடத்தின்மேல் சந்திர காந்தக்கற்களால் அமைந்த இறப்புகள் ஆகாயத்தில்செல்லும் சந்திரனுல் (தேவர் மதிக்கும்படி) நீரைச் சொரிதலால், வேனிலும் மழைக்காலத்தைக் காட்டும்.

வி - கு: கந்தரம் - மேகம், கம் - நீர்.

### வேறு

சாந்தரைக்கு மடவார்கள் வீதிதொறுஞ் சவைதொறுஞ்செல்
மாந்தரைக்குங் குமச்சேறு மனுநூலும் வழுக்கெடுக்கும்
தேந்தரைக்கு ளுழவோர்க்குந் தெய்வநிலை போற்ருது
காந்தரைக்கும் பிடுவோர்க்கும் கைகூப்புங் கதிர்ச்சாலி. 27

பொ - ரை: சந்தனம் அரைக்கும் மகளிர்கள் உள்ள வீதிகள் தோறும் செல்லும் மக்களைக் குங்குமச்சேறு வழுக்குதலைச்செய்யும்; அவர்களை மனு நூல் வழுவைக் கெடுக்கும். இடம் அமைந்த தரையின்கண் உழவர்களுக்கு நெற்கதிர்ச் சாலி தலைவணங்கும்; வேறு தெய்வம் போற்ருது கணவரையேதொழும் கற்புடையார்க்கு ஒளியுள்ள அருந்ததி (சாலி) கைகூப்புவாள்.

வி - கு: சாந்து - சுண்ணமும் ஆம்.

### வேறு

காமர்பொன் மாளிகைக் கவினி ரண்டுபால்
மாமணி வயிரத்தான் முகப்பு வாய்ந்திடல்
ஏமமால் வரையிரு பாலும் பௌவநாள்
சோமனு மிரவியுஞ் சுடர்தன் மானுமே. 28

பொ - ரை: ஆசையை விளைக்கும் பொன் மாளிகைகளின் இருபக்கங்களிலும் தலைப்பு செம்மணியாலும் வைரத்தாலும் எதிரெதிராக அமைந்திருத்தல் மாமேருவாகிய பொன் மலையின் இருபாங்கரும் பூரணைநாளில் சந்திரனும் சூரியனும் ஒளிர்தலை நிகர்க்கும். காமர் - அழகுமாம்.

திங்களை முகமெனச் செய்து நான்முகன்
பங்கய முகிழினைப் பதித்த தாலன்றே
நங்கையர் குவிமுலை நாளும் வெய்யவன்
அங்கதிர் பரப்பினு மலர்ந்தி டாததே. 29

பொ - ரை: பிரமன் மகளிர்தம் முகத்தைச் சந்திரனல் அமைத்து குசங்களைத் தாமரை அரும்புகளால் அமைத்தான்; அதனுல்தான், அன்றுடம் ஞாயிறு தன்கிரணங்களைப் பரப்பிவரினும் அக்குசங்கள் குவிந்தே உள்ளன.

துன்னிய கொழுநர்பாற் சுரத நாரியர்
முன்னிய புலவியின் மொழியை மேடைமேல்
பன்னிய பசுங்கிளி பயிலும் பான்மைவான்
கன்னியைப் பயிற்றுவ காம நூலரோ. 30

பொ - ரை: நெருங்கி வரும் கணவரிடத்துப் புணர்ச்சியை விரும்பும் மகளிர் நினைத்துப் பேசும் ஊடல் மொழிகளை அங்கு மேடையில் உள்ள கிளிகள் பழகிப் பேசுகின்றன; அஃது அவை ஆகாய வீதியில் உள்ள கன்னி(ராசி)க்குக் காம நூல் பயிற்றுவதுபோல் உள்ளது.

வேறு

சிறுகாலை யட்டில்புக லருத்தியுறச் சமைத்தல்சுவை திருத்தி யூட்டல்
மறுகாலை யென்னுது விருந்தமைத்தன் மகப்பெறுதன் மடநா ணச்சம்
பெறுகாலை யின்புறுதன் முன்னுறங்கப் பின்னுறங்கல் பின்னெழாதல்
உறுகாலை தொழுதெழுதல் பன்னிரண்டு மந்நகர்க்கற் புடையோர் செய்கை.

பொ - ரை: அந்நகரில் கற்புடை மகளிரிடத்துக் காணப்படும் செயல்கள் அதிகாலை சமையல் அறையில் (குளித்துப்) புகுதல், அன்போடு சமைத்தல், சுவை பொருந்த அமைத்து உண்பித்தல், பிறகு ஆகட்டும் என்று சொல்லாமல் வந்த விருந்தினரை உபசரித்தல், நன்மக்களைப் பெறுதல், மடம், நாண், அச்சம் என்னும் குணங்கள், உரிய காலத்தில் கணவனோடு கூடி இன்புறுதல். கணவன் முன் உறங்கத் தான் பின் உறங்கல், கணவன் எழுவதற்குப் பின் எழாமை, காலையில் கணவனைத் தொழாநின்று எழுதல் என்னும் இப்பன்னிரண்டும் ஆகும்.

ஓதுமறை யாற்பிரம முத்தழலாற் றெய்வமுயர் பலியாற் பூதம்
பேதமா னுடமதிதி பூசையாற் றருப்பணத்தாற் பிதுர்க்கள் யாகம்
மேதகுமை வகைவேள்வி யிவ்வகைசெய் தறுதொழிலும் விதியா லாற்றிப்
போதநெறிக் கொருதுணையாய் மழைக்கொருவித் தாயுறைவர் புரிநூற்
[செல்வர். 32

பொ - ரை: அந்தணர், மறைகளை ஓதுதலால் பிரமவேள்வியையும், முத்தீ ஓம்பலால் தெய்வ வேள்வியையும், உயர்ந்த பலிகளால் பூத வேள்வியையும், விருந்தோம்பலால் மக்கள் வேள்வியையும் தருப்பணத்தால் பிதிர் வேள்வியையும் செய்வர்; இப்படி ஐவகை வேள்விசெய்து ஆறுதொழிலும் விதியாற்செய்து ஞான நெறிக்கண் மக்கட்குத் துணையாய் மழை பெய்விக்கும் காரணராய் விளங்குவர்.

வி - கு: யாகம் முன்னரும் சென்று இயையும்.

மூலமறை மனுவோதி முறைபெருசை வாகமத்தான் முதல்வர் பூசை
காலமுற நித்தியநை மித்தியகா மியங்களினுற் கருத்தி ஞற்றி
ஆலமமு துண்டபிரா னடியர்குழாத் திருந்தமுத மருந்தி நாதன்
சீலமல துணராதே யுணர்ந்திருப்பர் முப்பொழுதுஞ் சிவநூற் செல்வர். 33

பொ - ரை: ஆதி சைவர் வேதமூல மனுக்களாகிய பிரணவ பஞ்சாக்கரங்களை ஓதி, முறையாகச் சிவாகம விதிப்படி சிவபிரான் வழிபாட்டை நித்தியம், நைமித்திகம், காமியம் என்னும் வகைகள்தோன்ற கருத்து ஒன்றிச்செய்து, சிவபிரான் அடியரோடு ஒருங்கிருந்து திருவமுது கொள்ளுதலும், பிறநெறிகளைக் கருதாது முப்போதும் சைவசீலம் ஒன்றே எண்ணுதலும் உடையராவர்.

காலைதொறு முழையரொடு நூலாய்ந்து குடிமுதலாங் காப்புப் போற்றி
மேலைநூற் பாவலர்க்கும் வேதியர்க்கு மீந்துபல வேள்வி வேட்டுச்
சாலைதனிற் சிவபெருமான் றமர்களொடுந் தமர்களொடுந் தகவா யுண்டு
மாலைதொறு மொற்ருய்ந்து துயிலிடத்தும் பார்காப்பர் மனுநூற் செல்வர்.

பொ - ரை: மனு நூல் உணர்ந்து செங்கோல் செலுத்தும் மன்னர் காலை நேரங்களில் உடன் இருக்கும் அமைச்சர்களோடு கலந்து, நீதிநூல் ஆய்ந்து, குடிகளை முதலாக வைத்து மற்ற உயிர்களையும் பாதுகாத்து, மேலான நூற் பயிற்சியுள்ள பாவலர்க்கும் வேதியர்க்கும் உபகாரங்கள் செய்து, வேள்விகளை வேட்பித்து, அன்னசாலைகளில் சிவனடியாரும் தமர்களும் உடன் நுகர அமுது செய்து, மாலை நேரங்களில் ஒற்றர்கள்தரும் செய்திகளை ஆய்ந்து நாடு உறங்கும் போதும் அதனைக்காப்பர்.

புங்கமா மறையோதி வாணிகந்தொட் டறுதொழிலாற் பொருள்க ளாக்கிப்
பிங்கலற்குங் கருவூலம் போலிருப்ப ரொருகூலம் பிரியாச் செல்வர்
கங்கைமர பினிலுதித்துக் கலைபயின்று பொருள் வளர்த்துக் கலிகளாய
வெங்களைகட் டுயர்தரும வேளாண்மை புரிந்திருப்பர் மேழிச் செல்வர். 35

பொ - ரை: ஒப்பற்ற கடைவீதியைப் பிரியாத வணிகர்கள் உயர்ந்த மறைகளை ஓதி, வாணிபம் முதலிய அறுவகைத் தொழில்களால் பொருள் ஈட்டிக் குபேரனுக்கும் வேண்டும்போது உதவவல்ல பொன்னறை போல்வர்; உழவுத் தொழில் உள்ள வேளாளர் கங்கை மரபில் தோன்றிப் பல கலைகளையும் பயின்று அவற்றால் பொருள் சேர்த்து வறுமையாகிய களைகளைப்போக்கி உயர்ந்த அற மாகிய பிறர்க்கு உபகாரஞ்செய்தலை எப்போதும் மேற்கொண்டிருப்பர்.

வி - கு: பொன்னறை - பொக்கிஷம்.

## வேறு

மருவுறுநன் னெறிநிலத்து வாய்மையெனும் விதைதெளித்துப்
பெருகுகுண நீர்பாய்த்துப் பிறங்குசினக் களைகடிந்து
தருமமெனும் பயிர்வளர்த்துச் சகலபோகமும் விளைக்கும்
பொருவருஞ்சீர்த் திருநகரம் புடார்ச்சுனபுண் ணியபுரமே. 36

பொ - ரை: அவ்வேளாளர், நன்னெறியாகிய நிலத்தில், உண்மையாகிய விதையை விதைத்து, மேன்மேலும் வளரும் நற்குணமாகிய நீரைப்பாய்ச்சி, கோபமாகிய களையை நீக்கி, அறப்பயிரை வளர்த்துப் பலவகையான நல்ல நுகர்ச்சிகளை விளைப்பார்கள். இங்ஙனம் ஒப்பில்லாத சிறப்பினை உடையது புடார்ச்சுனம் எனப்படும் புனித நகரம்.

மாமணி மண்டபமாட மாளிகைக ளுறுப்பாகக்
கோமதிய முகமாகக் கொங்கைகோ புரமாகக்
காமருதே ரல்குலாக் கடிமதின்மே கலையாகப்
பூமகளா ரரசிருக்கும் பொன்னகர மிந்நகரம். 37

பொ - ரை: இந்நகரம் கலைமகளும் திருமகளும் வானிற்செல்லும் சந்திரனே முகமாக, மாணிக்கத்தால் அழகு செய்யப்பெற்ற மண்டபம் வீடு அரண்மனைகள் உறுப்புக்களாக, கோபுரங்கள் கொங்கைகளாக, தேர்கள் அல்குலாக, காவலை யுடைய மதில் மேகலையாகக்கொண்டு அரசிருப்பது.

இல்லறமுந் துறவறமு மிடைவிடார் வெறுக்கைவிடார்
பல்பயிர்க்கும் யோகியர்க்கும் பதந்தொறுங்கொண் மூப்பொழியும்
நல்லவரும் விளையாட்டு நயந்தவருஞ் சூதெறிவார்
அல்லவரு மெல்லவரு மாதரிப்பா ரிரவலரை. 38

பொ - ரை: இல்லறத்தை இடையில் விடாதவர் செல்வத்தை (வெறுக்கையை) விடார்; துறவறத்தை இடையில் விடாதவர் வெறுத்தலை விடார்; பல் வகைப் பயிர்களுக்கும் இடம்தோறும் மழை (கொண்மூ) பொழியும்; யோகியர்க்குப் பதவிதோறும் மூப்பு (விருத்தத்தன்மை) ஒழியும்; நல்லவர் சூதைக்கடிவார்; விளையாட்டு விருப்புடையோர் சூதாடு கருவியை எறிவார்; அல்லாதவர் இரவில் அலரை (பழிமொழியை) விரும்பி ஏற்பர்; யாவரும் இரப்போரை ஆதரிப்பார்.

வேறு

பன்னகர் பதியா மென்கோ பாதலத் தரசின் வாழ்வால்
பொன்னக ரென்கோ புத்தேட் பொலிவினுன் முனிவர் சித்தர்
கின்னரர் பதியா மென்கோ வாங்கவர் கிளைக்கு மாத்தால்
இந்நகர்க் கிணையா வோரூ ரிசைக்கலா ந் தகைமைத் தாமோ. 39

பொ - ரை: ஆதிசேடன் இங்குத் தங்குதலால் இது நாகர் உலகாம்; தேவர் வந்து விளங்குதலால் துறக்கமாம்; முனிவர், சித்தர், கின்னரர் முதலியோர் வந்து கூடுதலால் அவரவர் உலகாம்; இதற்கு இணையாக வேறொரு ஊரைக்கூறுதல் இயலாது. என்கோ - என்று சொல்வேனோ?

பன்னக சயன னாட்டிற் பங்கய னுலகிற் றேவர்
மன்னகர் சுவர்க்கந் தன்னில் வளமிகு நகரை யாரும்
நன்னக ரெனவே யிந்த நகர்ப்பெய ரிடுவா ராலல்
இந்நகர்ப் பெருஞ்சீர் கூற வெம்மனோர்க் கெளிய தாமே. 40

பொ - ரை: அரவணை அமரும் திருமால் நாட்டில், பிரமன் உலகத்தில், இந்திரன் உலகத்தில் வளம் மிக்க நகர்களை நன்னகர் என இந்த நகர்ப்பெயரால் அழைப்பர். ஆதலால் இதன் பெருஞ் சிறப்பைக் கூறுதல் எம்மனோர்க்கு எளிதன்று.

இந்தமா நகரை யாளு மிறையவ னிமய மீன்ற
செந்துவர்க் கனிவாய்ச் செல்வி செண்பக வல்லி பாகன்
அந்தமோ டாதி யில்லா னாயினு மெவர்க்குந் தாயாய்த்
தந்தையாய்த் தலைவ னவான் சரிதையைப் பரவல் செய்வாம். 41

பொ - ரை: இந்த நகர்க்கு அரசன் ஆதியும் அந்தமும் இல்லாத அம்மை பாகன்; ஆயினும் அவன் யார்க்கும் அம்மையப்பனாய்த் தலைவனும் ஆதல்பற்றி அவன் பெருமையைக் கூறலுறுகின்றேன்.

*திருநகரச் சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — 160

---

# புராணவரலாற்றுச் சருக்கம்

விரைசெய் தாமரை வியன்கலை மானுடன் மேவி
முருகு யிர்த்துநால் வாயுற வாரண முழங்கி
அரச மைந்தபூந் தண்டுக மண்டல மசைத்துப்
புரையி லாவளந் திசைமுகக் கடவுளைப் பொருவும். 1

பொ - ரை: குற்றம் இல்லாத நைமிசவனம் விரைந்து தாவும் ஆண் மானும் பெருமையுள்ள கலைமானும் பொருந்தி மணம் தந்து, தொங்கிய வாயைத் திறந்து மிகவும் யானைகள் (வாரணம்) முழங்கி, அரசமரத்தில் அமைந்த பூக்கிளை களால் (பூந்தண்டு) மேகமண்டலத்தை (கம் மண்டலம்) அசைப்பது; ஆதலால், அது மணம்பொருந்திய தாமரையில் கலைமகளுடன் இருந்து தெய்வத்தன்மையை வெளிப்படுத்தி நான்கு முகங்களாலும் வேதம் ஓதி, தலைமையமைந்த, தண்டு கமண்டலங்களை ஏந்தும் நான்முகக்கடவுளை ஒக்கும்.

துளவ ணிந்துவே யிசைதந்து சுரப்புடைப் பாலும்
களவு செய்துகாற் றளையுண்டு காவிளங் கன்றால்
விளவெ றிந்துநீள் குருந்தமே லிவர்ந்துவிண் ணெடுபார்
அளவு செய்தலா லாழிமால் பொருவுமவ் வனமே. 2

பொ - ரை: அவ்வனம் துளவினால் அழகுபெற்று மூங்கில்கள் இசைந்து சுரத்தின் பக்கத்திலும் கூடி தென்றற்காற்று கலக்கப்பெற்று, காவலையுடைய இளங்கன்றாகிய ஆல் விள்ளும்படி எறிந்து, குருந்த மரங்கள் மேலே உயர்ந்து ஆகாயத்தோடு நிலவுலகத்தை அளவுசெய்யும்; ஆதலால், அது, துளவு அணிதல், மூங்கிற் குழல் ஊதல், சுரக்கும் பாலைக்களவு செய்தல், காலில் விலங்கு பூணல், சுமத்தலையுடைய இளம் பசுக்கன்றால் விளங்கனி எறிந்து, குருந்தம் ஏறி, திரிவிக்கிரமனாய் எழுதல் சக்கரத்தையுடையனாதல் ஆகிய இவ்வியல்புள்ள திருமாலை ஒக்கும்.

வேள்வி பற்பல புரிந்துவான் றருநிழன் மேவித்
தாழ்வி லாமுகி லூர்ந்துநீள் வச்சிரந் தரித்து
வாழ்வு சேரர மகளிரா டலினக மலர்ந்து
சூழ்குலா வனம் பொன்னகர்க் கிறையெனத் தோன்றும். 3

பொ - ரை: உள்ளே மலர்ந்து சூழ்ந்து விளங்கும் நைமிசவனம் பற்பல வேள்வி புரிதற்கு இடனாய், உயர்ந்த மரநிழலை உடையது; குறைவில்லாத மேகசஞ்சாரத்தையுடையது; தருப்பையை மேற்கொள்வது; நல்வாழ்வுடைய மகளிரைப்போலும் அசைவினை உடையது. ஆதலால், அது வேள்வி நூறு இயற்றி, ஐந்தருநீழலில் அமர்ந்து மேகத்தை ஊர்ந்து, வைரவேல் ஏந்தி அரமகளிர் ஆடலைக்கண்டு உள்ளம் மகிழும் துறக்கத்தலைவனாகிய இந்திரனை ஒக்கும்.

துன்னு தாதணிந் தெழிலிநீர் மஞ்சனஞ் சொரிந்து
வன்னி பாதிரி மாதவி கூவிளம் வகுளம்
பன்னு சூதமேற் றளிர்மல ரருச்சனை பயின்று
கன்னி நீள்வளஞ் சிவபிரா னடியவர் கடுக்கும். 4

பொ - ரை: அழிவில்லாத வனம் மகரந்தம் அணிந்து, மேகநீர் பொழிந்து வன்னி முதலியவை கொண்டு அருச்சனை பயில்வதற்கு இடனாதல்பற்றி, திருநீறு அணிந்து திருமஞ்சனம் செய்து முதல்வனை அருச்சிக்கும் அடியவரை ஒக்கும்.

முறைப ழுத்தமெய்ம் மனத்துடை முனிவரர் வேண்ட
மறைப ழுத்தவாய்த் திசைமுகன் குசையினல் வகுத்த
நிறைப ழுத்ததோர் நேமியி னகத்ததாய் நிரம்பி
நறைப ழுத்தது கங்கைசேர் நைமிசா ரணியம். 5

பொ - ரை: நியமங்களையுடைய முனிவர்கள் தாம் கலியின் தொடர்பு நீங்கித் தவஞ்செய்ய ஓர் இடத்தைக் குறிப்பிடும்படி வேண்டிக்கொண்டதனால் பிரமதேவன் தருப்பைப் புல்லால் சமைத்து உருட்டிய சக்கரம் தங்கிய இடம் உடையதாய்த் தேன்மிக நிறைந்து உள்ளது கங்கையாற்று வளப்பம் உடைய நைமிச வனம்.

வி - கு: நேமி - சக்கரம், சம் தங்குதல்; நேமிதங்கிய வனம் நைமிசவனம். நிறைபழுத்த நேமி - நான்முகனது ஆணையைப் பெற்றுள்ள நேமி.

வாவி தாமரை வாண்முக மலர்ந்துநன் மருங்கில்
காவி சாத்தியுற் பலமெனுங் கண்மலர் முகிழ்த்து
மேவி மாதவர் நிகர்ப்பது மின்னனார் குழல்போல்
நாவி மாமணங் கமழ்வது நைமிசா ரணியம். 6

பொ - ரை: அவ்வனத்தில் உள்ள குளங்கள் தாமரையாகிய ஒளியுடைய முகம் மலர்ந்து, பக்கத்தில் செங்குவளைகளை உடையனவாய் (இடையில் காவிக்கல் தோய்த்த உடை உடுத்து) கருங்குவளை மொட்டுகளாகிய மூடிய கண்களை உடைமையின் முனிவர்களை ஒப்பவை; முனிபத்தினிகளின் கூந்தலைப்போலக் கஸ்தூரியின் சிறந்த மணம் கமழவும் உள்ளது அவ்வனம்.

தேனுந் தும்பியு மெடுத்தபண் ணிசைசெவி மடுத்து
மானும் வேங்கையு மொருதலைத் துயில்வது மயில்கள்
கான நாடகம் பயிறரக் கானமா மறைகள்
ஞான யோகிகள் பயில்வது நைமிசா ரணியம். 7

பொ - ரை: நைமிசவனம் பெண்வண்டும் ஆண்வண்டும் கேட்பிக்கும் பண்ணிசையைக் கேட்டு மானும் வேங்கையும் தம்முள் பிறப்புப்பற்றிய பகையை மறந்து ஒரே இடத்தில் உறங்கும் மாண்பை உடையது; மயில்கள் மரம் அடர்ந்த காட்டில் நடனம் புரியாநிற்ப ஞானயோகிகள் இசையோடு சிறந்த வேதங்களைப் பயில்வார்கள்.

ஆல முண்டவர்க் கன்பரா யறிஞரா யழியாக்
கால மூன்றையு முணர்ந்தவ ரிருப்பது கருதும்
சீல மூன்றின்மேற் றெளிந்துமெய்த் தவங்கள்செய் வார்க்கு
ஞால மூன்றின்மேற் கதிதரு நைமிசா ரணியம். 8

பொ - ரை : அவ்வனம் சிவபிரானுக்கு அன்பராய் மெய்யுணர்ந்து அழியா நிலைபெற்று முக்காலத்தின் இயல்பையும் ஒருங்கே அறிந்து உரைக்கவல்லோர் வாழ்வது; நூலோரால் ஆராயப்படும் முக்குணங்கடந்த சிவபிரானை முழுமுதல் எனத்தெளிந்து மெய்த்தவமாகிய ஞானநெறி நிற்பாருக்குச் சாலோக, சாமீப, சாரூப்பிய பதங்களின் மேலான சிவசாயுச்சிய நிலையைத் தருவது அவ்வனம்.

### வேறு

அவ்வனஞ் செய்ய தாக வருந்தவ வுழவர் யாரும்
மெய்வரும் விதியேர் பூட்டிச் சமிதைவித் தெறிந்து வேழக்
கைவரு பருமை நெய்யாம் புனல்சொரிந் தநேக காலம்
சைவவை திகவே ளாண்மைச் சத்திர மகங்கள் செய்தார். 9

பொ - ரை : நைமிசவனம் ஒரு பெரிய வயல்போன்றது; ஆண்டு உள்ள முனிவர்கள் உழவர்கள் போன்றனர். மெய்ந்நூல்களில் விதிக்கப்பட்ட விதிகளாகிய ஏரைப்பூட்டி உழுது, ஓமச் சமிதைகளை விதையாக விதைத்து, யானையின் துதிக்கையின் பருமையுள்ளதாகிய நெய் அவியாகிய நீரைப்பாய்த்திப் பன்னாளும் சிவாகம வழக்கும் வேத வழக்கும் யாங்கணும் நிகழும்படி எல்லோருக்கும் நலன் தரும் யாகங்களாகிய வேளாண்மையை அம்முனிவர்கள் செய்தனர்.

வி - கு : சத்திரமகம் - யாவரும் கலந்து பொதுவாகச் செய்யும் யாகம்.

## சூதமுனிவர் வருகை

பண்ணிய தவங்கடானம் பரிவினுற் புரிவார்க் கன்றிக்
கண்ணிறை கண்டு ளார்க்குங் கதியெனும் விதியை யோர்ந்து
நண்ணிய கலைகள் யாவு நவின்றருள் சூத னன்னேர்
புண்ணிய வேள்விச் சாலை புகுந்தனன் முனிவர்சூழ. 10

பொ - ரை : தவம், தானம் என்பவற்றை அன்பாய்ச் செய்வார்க்குமட்டும் அன்றி, அச்செயல்களைக் கண்ணுற் சிறிது காண்பார்க்கும் நற்கதி உண்டாகும் என்பது வேதவிதி; இதனை உள்ளத்தில் எண்ணிப் பலகலைகளையும் பயின்றுள்ள சூதமுனிவர் மற்றும் பலமுனிவர்கள் தம்மைச்சூழ்ந்துவர, நைமிசவன முனிர்களுடைய புனிதமான வேள்விச்சாலையைக் கண்டு உளங்குளிர ஆங்குப்புகுந்தனர்.

பொருந்தவச் சூதர் சூழாப் புலன்மகத் தேர்ந டாவி
இருந்தவச் சூதர் போலு மிருடியர் வருடி யேத்தி
வருந்தவச் சூதன் றன்னை மாதவ வியாத னென்னும்
பெருந்தவச் சூதஞ் சேர்ந்த பேரிசைக் குயிலைச் சேர்ந்தார். 11

பொ - ரை : தீமை பொருந்திய வஞ்சகர்கள் (பொருந்து அவம் சூதர்) செய்யக்கருதாத வைதிக விடயமாகிய வேள்வி என்னும் தேரைச் செலுத்திக்

கொண்டிருந்த, அச்சூதமுனிரை ஒத்த முனிவர்கள், வந்த தவமிக்க சூதபுராணிகரை அவர்தம் பாதங்களைப் பற்றிக்கொண்டு, புகழுரை சொல்லிச் சூழ்ந்தனர்; திருமாலின் அவதாரமாகிய வியாசமுனிவர் என்னும் பெரிய தவ உருவாய் விளங்கிய மாமரத்தைச் சேர்ந்த பெரிய இசையைப் பெற்ற குயில்போன்றவர் அச்சூதமுனிவர்.

ஆசனத் திருத்தி வாழ்த்தி யருக்கிய முதல நல்கிப்
பூசனை புரிந்தி யாங்கள் புரிமகந் தொடுத்த காலை
வாசனை முகுர்த்த மன்றே வந்தனை பெரியோ யென்று
நேசனை வினவிக் கேட்பார் நிறைதரு புராண மெல்லாம். 12

பொ-ரை: அம்முனிவர்கள் சூதமுனிவரை இருக்கையில் எழுந்தருள்வித்துப் புகழ்ந்து முடிநீர் முதலிய உபசாரங்களைச்செய்து, யாம் இந்தயாகத்தைத் தொடங்கியபோது அமைந்த நல்ல முகூர்த்தத்தின் பயனாக அல்லவா தாங்கள் இங்கு எழுந்தருளப் பெற்றது என்று அன்புள்ள அம்முனிவர்க்கு நன்மொழிகூறி, அவர்தம் உள்ளத்து நிறைந்திருந்த பழையவரலாறுகளைக் கேட்கத்தொடங்கினர்.

பண்ணியல் பலபு ராணம் பகர்ந்தபின் பதிநூ லென்ன
எண்ணியல் சிவ புராண மீரைந்தி லிலக்க மாக
நண்ணிய காந்தந் தன்னி னன்னகர்த் திருக்குற் றாலப்
புண்ணிய புராண மெங்கள் புந்தியி லுவட்டா தென்றும். 13

பொ-ரை: தகுதியுள்ள பல புராணங்களைச் சூதமுனிவர் கூறியபின், முனிவர்கள் உரைக்கின்றனர்: மேலான பதிநூல் என எண்ணப்படும் சிவபுராணம் பத்தினுள் இலக்கங்கிரந்தங்கள் பொருந்திய காந்தம் என்னும் புராணத்தில் உறுதிபயக்கும் திருக்குற்றாலத்தலம்பற்றிய புராணம் எங்கள் அறிவில் என்றும் வெறுப்பைத் தோற்றுவியாது சுவைக்கின்றது.

அன்னதைச் சுருக்கமாக வறைந்தனை யடுநோய் தீர்ப்பார்
முன்னுமந் திரத்தை யோதி மூலம்வித் தறியார் போலப்
பன்னரும் பலநூல் கேட்டுந் தவிர்ந்தில பதிமேற் றாகும்
நன்னகர்ப் புராண மின்னு நன்கெமக் கருள்வா யென்றார். 14

பொ-ரை: அதனைச் சுருக்கமாகக் கூறினீர்கள்: துன்புறுத்தும் பிறவிநோய் தீர்த்தற் பொருட்டுக் கணிக்கும் மந்திரத்தைக் கேட்டும் அதற்கு மூலம் எனப்படும் பீஜாக்கரம் தெரியாதார்போல ஓதற்கு அரிய பலநூல்கள் கேட்டும் எம் ஐயம்நீங்கவில்லை, கடவுட்டன்மையை விளக்கும் திருக்குற்றால நன்னகரப் புராணத்தை இன்னும் விரித்து எங்களுக்கு அருள்புரிய வேண்டும் என வேண்டினர்.

மோனரீ துரைப்பச் சூதன் மொழிகுவான் முக்க ணூர்க்குத்
தானமே யனந்த மாகு மவைகளிற் றவப்பூ வின்பத்
தேனமர் திருக்குற் றாலஞ் சிவரக சியமா மீது
ஞானபக் குவத்தார்க் கன்றி யாவர்க்கு நவிலொ ணாதால். 15

பொ - ரை: மோன நிலையை விரும்பும் முனிவர்கள் இங்ஙனம் உரைத்த போது சூதமுனிவர் கூறுவார் ஆயினர்: முக்கட் செல்வர்க்கு உரிய தலங்கள் அளவற்றவை; அவற்றுள், தவமாகிய மலரில் உண்டாகும். சிவானந்தத்தேன் பொழியும் திருக்குற்றாலம் சிவத்தைப் பெறுவதற்கு உரியது எனப் பெரியோர் களால் இரகசியமாகப் போற்றப் பெறுவது; இதன் பெருமை ஞானமுதிர்ச்சி யுடையார்க்கு அன்றிப் பிறர் யாருக்கும் ஓதப்படுவதன்று.

தன்மகன் முதலோ ராறு தகையர்நூற் குரிய ரேனும்
முன்னவர் களிய ராதி மூவைந்து திறத்தார்க் கோதார்
சொன்னநா லிருவ ருள்ளுந் தூயவர் நால்வர் தம்மில்
அன்னமே யனைய ரானீர் பால்பிரித் தறிந்த வாற்றால். 16

பொ - ரை: நூல்கேட்டற்கு உரியார் தன்மகன், ஆசான் மகன் முதலாக அறுவர் எனப்படினும் பெரியோர் அவர்களுள் களிமடி முதலிய 15 பேர்க்கு நூலைக் கற்பியார். அன்னம், ஆ முதலியவற்றின் தன்மையுடையோர் எனச் சொன்ன கேட்பிக்கப்படுவோர் எண்மருள்ளும் நால்வர் சிறந்தவர். அவருள் ளும், நீரினின்று பாலைப்பிரித்துக் கொள்வதுபோல, சிறந்த புராணத்தைக் கேட்க விரும்பும் நீங்கள், அன்னம்போன்ற தலையாய தன்மையுடையீர்.

அதிகரா ந்தேவ ராலு மறிவதற் கரிதா முண்மை
மதிவலி நலத்தி னாலே வினவுதல் வல்ல ரானீர்
பதிமுத லுரைத்த மூன்றிற் பரமெனும் பொருளைச் சேரும்
விதிவலி யுடையீர் நீரே யென்றுமேல் வியந்து சொல்வான். 17

பொ - ரை: மேம்பட்டவராகிய தேவராலும் அறிதல்கூடாத உண்மையை நன்மை பொருந்திய அறிவுத்திறனால் கேட்கும் திறனுடையீர் ஆயினீர். ஆதலால், பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களுள் பதியெனப்படும் பரம்பொருளை அணுகும் தவவலியுடையீர் நீங்களே என்று பாராட்டி, மேலே வியப்பு உடைய ராய்க் கூறலுற்றார்.

வேறு

சீர்பெருகு காந்தமெனுஞ் சிவபுராணச் செழுஞ்சங் கிதைகளாறில்
கார்பெருகு குழலுமையாட் கெம்பிரா னுரைத்தருள்சங் கரசங்கிதை
ஏர்பெருகுந் திருமடிமே லிருந்தருளிக் குமரதே சிகனெங் கோமான்
நேர்பெருக வுணர்ந்துகும்ப சம்பவனுக் குபதேச நிகழ்த்தி னானால். 18

பொ - ரை: சிறப்புமிக்க காந்த மாபுராணம் என்னும் சிவபுராணம் ஆறு சங்கிதைகளை (உட்பிரிவுகளை) உடையது; அவற்றுள் சங்கரசங்கிதை என்பது சிவபிரான் உமையம்மைக்கு உரைத்தருளியது; உமையின் திருமடியில்வீற்றிருந்த குமாரதேவர் நன்றாகக் கேட்டருளிக் குடமுனிவர் எனப்படும் அகத்தியனார்க்கு அதனை உபதேசித்தார்.

மாதவரி லுயர்மலய மாமுனிவ னதையுணர்ந்து வகைமை சாலப்
பூதலத்தி லுணர்த்தியதா லகத்தியசங் கிதையெனவும் புகல்வர் மேலோர்
ஈதலது சனற்குமர சங்கிதையுந் தருபொருளா மெழிற்செவ் வானம்
மீதிலெழு மதிபோலுங் குற்றால மகிமையென வியந்து போற்றி. 19

பொ - ரை: தவமுனிவர்களுள் உயர்ந்த அகத்தியர் அதனைக் கேட்டு உணர்ந்து தொகை வகையாக நிலவுலகத்து உள்ளார்க்கு உணர்த்தினமையால், அதனை அகத்திய சங்கிதை எனவும் வழங்குவர் பெரியோர். செவ்வானத்தில் எழுகின்ற களங்கமில்லாத பிறைபோன்ற திருக்குற்றால மேன்மையை இவ் அகத்திய சங்கிதை மட்டும் அன்றிச் சனற்குமார சங்கிதையும் தருகின்றது.

விரிகூடக் கம்பகும்பக் களிறுபிளி றிடவுரித்து விரித்து வேங்கை
உரிகூட வுடுத்தருளி நடித்தருளுஞ் சிவபெருமா னுலக மீன்றாள்
புரிகூடுந் திருமணத்தின் பொருட்டாகக் குறுமுனிக்குப் புகன்ற காதை
திரிகூடத் தலமகிமை திரிகூட வரைமுதலாச் செப்பு கின்றான். 20

பொ - ரை: விரிந்த கூடத்தில் தறியில் கட்டப்படும் மத்தகத்தையுடைய யானை அஞ்சிப் பிளிறும்படி அதன் தோலை உரித்துப் புலியின் அதளோடு பொருந்தும்படி போர்த்திக்கொண்டு வீரநடம் புரிந்த சிவபெருமான் உமையம்மை விரும்பும் திருமணத்தின் பொருட்டுக் குறுமுனிவருக்குக் கூறிய திரிகூடத் தலப்பெருமையைத் திரிகூடவரைச் சருக்கம் முதலாகச் சூதமுனிவர் வகுத்துக் கூறுவார் ஆயினர்.

*புராணவரலாற்றுச் சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — *180*

---

# திரிகூடமலைச் சருக்கம்

கீத யாழிசைக் கின்னரர் கானமும்
காதல் விஞ்சையர் பண்ணிசைக் கானமும்
சீத மால்வரைத் தீங்குரற் கானமும்
வேத கானமு மிக்கது திக்கெலாம். 1

பொ - ரை : திரிகூடமலையின் எம்மருங்கும் யாழில்வல்ல கின்னரர், காதல் வாழ்க்கையை விரும்பும் வித்தியாதரர், குளிர்ந்த மலையின்மீது உள்ளார் என்போர் இசைக்கும் கருவி இசையும் மிடற்றிசையும் வேதத்தின் இன்ஒலியும் மிகுந்துள்ளன.

முழைக டோறு முனிவர் குழாங்களே
உழைக டோறு முயர்மகச் சாலையே
கழைக டுவுங் கதிர்மணி முத்தமே
மழைக டுவு மனுலியை மானுமே. 2

பொ - ரை : குகைகளில் முனிவர் கூட்டம் உள்ளன; இடந்தோறும் வேள்விச்சாலைகள் காணப்படுகின்றன; மூங்கில்களினின்றும் சிதறும் ஒளியுடை முத்தங்கள் மேகம் பொழியும் மிக்க கல்மழையை ஒக்கும்.

பந்தி பாய்முகில் பாய்மத மாவெனத்
தந்தி பாயுமத் தந்தியை வெற்பென
மந்தி பாயுமம் மந்திகள் பாய்தல்போல்
உந்தி பாயு முயர்வரைச் சார்பெலாம். 3

பொ - ரை : வரிசையாகப் பரவும் மேகத்தை மதம் பொழியும் களிறு எனக் கருதி யானை பாயும்; அவ்யானையை மலையெனக் கருதிக் குரங்குகள் அதன்மேல் தாவும்; அம்மந்தியைப்போலக் காட்டாறு தாவி விழும்; இக்காட்சி உயர்ந்த மலைச்சாரலில் நிகழ்கின்றது.

வி - கு : உந்தி - காட்டாது, பந்தி - வரிசை.

கான யாறுங் கடிமலர்ச் சோலைவாய்த்
தேன யாறுந் திசைபொரு கைமலைத்
தான யாறுந் ததைவன சோணையும்
வான யாறும் யமுனையு மானுமே, 4

பொ - ரை : காட்டாறும், மணம் பொருந்திய பூஞ்சோலைகளில் உள்ள தேன் ஆறும் (அகரம் சாரியை), எண்திசை யானைகளைப்போன்ற யானைகள் பொழியும் மதசல ஆறும் கலந்து வருவன கங்கையும் (வெண்ணிறம்), சோணை ஆறும் (சிவப்பு), யமுனையும் (கறுப்பு) கலத்தல்போலக் காணப்படும்.

செருவி லார்த்தெழு தேன்பொரத் தேனிறுல்
அருவி யார்த்திட வார்த்திடு மைவனம்
இருவி யார்க்கும் புனத்தினு மெண்ணிலாக்
குருவி யார்ப்பக் குரல்பரந் தார்க்குமே. 5

பொ - ரை: ஒன்றையொன்று பகைத்து முழங்கி எழும் வண்டுகள் பாய்தலால் தேன் அடையினின்றும் தேன் அருவிபோல முழங்கிப் பாய்தலால் மலைநெல் விதைத்த இடங்கள் நிறையும். தினைத்தாள் பொருந்திய புனத்தினும் எண்ணில்லாத பறவைகள் ஒலிக்க அவற்றைக் கடியும் வேடமகளிர் மிடற்றொலி பரவி நிரம்பும்.

குமுத மொத்த விதழ்க்குறக் கோதைமார்
கமுக நெற்றிக் கறிபடர் முன்றில்வாய்
விமுதி னைக்கு விலையென நேர்க்குநேர்
அமுதி னைச்சுர மாத ரளப்பரால். 6

பொ - ரை: ஆம்பல்போன்ற மெல்லிய இதழ்களையுடைய குறமகளிர்தம் வீடுகளின்முன் பாக்கு மரத்தின்மேல் மிளகுக்கொடி படரும்; அம்முன்றில்களில், மிருந்த (விம்மு) தினை அரிசிக்குச் சரியான விலையாகத் தேவமகளிர் அமுதத்தை அளந்து கொடுப்பர்.

வேறு

சீர்மலி படிகப் பாறை பத்தியாய்ச் செல்வான் மீனை
நீர்தரு கயல்போற் கொத்து நிறைதரு மடப்புள் ளீட்டம்
ஊர்மணிச் சுடிகைப் பாந்த ளுற்கையென் றூதி யூதிக்
கார்மலி குளிர்க்குத் தீப்போற் காய்வன கிழக்கூன் மந்தி. 7

பொ - ரை: சிறந்த பளிங்குக் கற்பாறைத்தரையில் வரிசையாக ஆகாயத்தில் செல்லும் மீன்களின் நிழலைப் பார்த்துத் தண்ணீரில் உலவும் கயல் மீன் என்று அறியாமையையுடைய பறவைகள் கொத்தும்; ஊர்ந்து செல்லும், தலையில் செம்மணியையுடைய பாம்புகளைத் தீக்கொள்ளி எனக்கருதி உடல் வளைந்த கிழ மந்தி ஊதிக் கார்காலத்தில் தோன்றும் குளிரை நீக்கிக்கொள்ளத் தீக்காயும்.

நகிலெழும் புகைபார்க் கென்ன நனிகெழு பொருப்பின் மாதர்
அகிலெழும் புகையும் வேட ரடுபுனத் தகருச் சாந்தம்
மிகிலெழும் புகையும் வேத வேள்வியின் புகையும் விண்மேல்
முகிலெழும் புகைபோன் மொய்ப்ப முகிழ்ப்பர்வா னவரு நாட்டம். 8

பொ - ரை: நிலமகளுக்கு முலைதோன்றி வளர்தல்போன்ற (எழும்புகை என்ன) நன்கு விளங்கும் திரிகூடமலையில், பெண்கள் கூந்தலுக்கு ஊட்டும் அகிற் புகையும், புனத்தில் அகில், அகரு, சந்தனம் ஆகிய மரங்கள் மிகும்போது அவற்றை வேடர்கள் கடிதற்பொருட்டுத் தீயிட்டுச் சுடுதலால் எழும் புகையும், வேதநெறிப்படி செய்யப்படும் வேள்விப் புகையும் வானத்தில் மேகம் எழுதல் போல நெருங்குதலால் தேவரும் தம் கண்களை இமையால் மூடுவர்.

ஆழ்புன லருவி யார்ப்பு மந்தண ரைந்து நூறு
வேள்வியி ஞர்ப்பு மேலே விண்ணவ ரார்ப்பு மாதர்
வாழ்புனக் கவண்கல் லார்ப்பு மணிவரை யார்ப்பு மாங்கே
ஊழ்வலி கடக்கின் ருர்போ லுருமொலி கடக்கு மாதோ. 9

பொ - ரை: ஆழமான அருவிப்புனலின் ஓசையும், அந்தணர் இயற்றும் பலவாகிய வேள்வியின் எழும் ஓசையும், தேவர்களது ஆரவாரமும், மகளிர் வாழ் புனத்தில் கவண்கல் எறிதலால் எழும் ஓசையும், அழகிய மலையினின்று எழும் எதிர் ஒலியும், அங்கே ஊழ்வலியைக் கடக்கும் அருந்தவர் செயல்போல, இடி முழக்கத்தைக் கீழ்ப்படுத்து மேல் ஓங்கும்,

மழைதரு முத்தும் வான மதிதரு முத்து நீண்ட
புழைதரு பணைக்கை நீலப் பொருப்பின்மா மருப்பின் முத்தும்
கழைதரு முத்து மேனக் களிறுகோ டுகுத்த முத்தும்
விழைதர வொளிருஞ் சாரன் மீனெளிர் வான மேய்க்கும். 10

பொ - ரை: மேகத்திலிருந்து கிடைக்கும் முத்தும், ஆகாயத்தில் செல்லும் சந்திரன் தரும் முத்துப்போன்ற அமுதத்துளியும், நீண்ட புழைக்கையையுடைய யானைத் தந்தத்திலிருந்து உதிரும் முத்தும், மூங்கில் தரும் முத்தும், ஆண் பன்றி யின் தந்தத்தினின்றும் உதிரும் முத்தும் மலைச்சாரலில் விருப்பம் மிகும்படி ஒளி ரும்; இதனல், அச்சாரல் நாள்மீன் பிரகாசிக்கும் ஆகாயத்தைப்போல விளங்கும்

வேறு

சோலை காட்டுந் துதையிரு ளாலிரு
வேலை காட்ட லிலாமையின் மெய்த்தவர்
காலை காட்டுவ வாவிக் கமலங்கள்
மாலை காட்டு மலர்தரு காவியே. 11

பொ - ரை: உயர்ந்து நெருங்கிய சோலைகளால் நெருங்கிய இருள் மூடுத லால் அம்மலையில் பகல் இரவு என்னும் இருபொழுதும் அறியப்படமாட்டா. ஆயினும், மெய்த்தவத்தினர்க்குக் குளத்திலுள்ள தாமரை மலர்ந்து காலைவேளையி னையும், உற்பலங்கள் மலர்ந்து மாலை வேளையினையும் குறிப்பிக்கும்.

மாக மேனகை மங்கை யுருப்பசி
மோக நாடகம் பார்ப்பதின் மொய்த்தெழார்
தோகை மாமயி லாடலைச் சோலைவாய்
மேக மேனின்று பார்ப்பர்விண் ணேரெலாம். 12

பொ - ரை: தேவர்கள் எல்லாரும் விண்ணுலக மங்கையராகிய மேனகை ஊர்வசி என்பாரது ஆசையை விளைக்கும் நடனத்தைக் காணக்கூடி எழாது, திரிகூடமலையில் சோலைகளிடத்துத் தோகையையுடைய மயில்கள் செய்யும் ஆடலை மேகத்தின்மேல் நின்றவாறே கண்டு களிப்பர்.

மலைக டாவு மருவிகள் வானதித்
தலைக டாவுந் தலைமதி மானின்மேற்
கலைக டாவுங் ககனத்து மேடைமேல்
நிலைக டாவு நிரைவரை யாடரோ. 13

பொ - ரை: மலையால் செலுத்தப்படும் (கடாவும்) அருவிகள் ஆகாய கங்கை செல்லும் இடங்களில் தாவிச்செல்லும்; முழுமதியில் உள்ள மானின்மீது மான்கள் தாவும்; வரிசையான மலையாடுகள் ஆகாயத்தில் உயரும்படி அமைந்த மாளிகைகளின் மேல்நிலைகளில் தாவும்.

கோல மாங்குயில் காவினிற் கூவுதல்
ஆல முண்டவ னிங்குள ளுதலால்
தாலம் வானந் தடவப்பெ றீரென
மால யன்றனைக் கூவுதன் மானுமே. 14

பொ - ரை: அழகிய குயில் மாஞ்சோலையிலிருந்து கூவுதல், திருமாலையும் அயனையும் நோக்கி, ஆலமுண்ட இறைவன் இம்மலையில் எளிதிற்காண உளன் ஆதலால், பூமியையும் ஆகாயத்தையும் துருவிப்பார்க்க வேண்டா எனக்கூவி அழைப்பதுபோல உள்ளது.

அருவி யாடிக் கரைபுகுவார்க் கண்டர்
தருவி மானமொப் பாமலர்ச் சண்பகம்
மருவி மாருதத் தாலுகு மாமலர்
பொருவில் வானவர் பூமழை போலுமால். 15

பொ - ரை: திருக்குற்றால அருவியில் நீராடிக் கரைபுகுவார்க்குத் தேவர்கள் கொண்டுவரும் விமானம்போலச் சண்பகம் உள்ளது. அங்கிருந்து காற்றால் அசைந்து உதிரும் மாமலர்கள், வானவர் பொழியும் மலர்மாரிபோலும்.

சால மாநற வம்பனை சாதியே
சால மாநற வம்பனை சாதியே
ஏல மார மிலவங்க நாறுமே
ஏல மார மிலவங்க நாறுமே. 16

பொ - ரை: கடம்பு (சாலம்), ஆச்சா (ஆ), குங்குமம் (நறவம்), பருத்த சிறு சண்பகம் என்பவை, மிகவும் வண்டு, தேன், வாசனை (சால மா நற வம்பு) பொருந்திய சாதி மரங்களாகும். ஏலச்செடி, சந்தனம் (ஆரம்) இலவங்கம் மணக்கும்; பொருந்திய அழகுள்ள ஆத்தி (ஆரம்), இலவு என்பவையும் அங்கண் தோன்றும். அங்க - ஆங்க, அங்கண்.

கானத் தும்பி கடாங்கவிப் பாலெழு
கானத் தும்பி கடாங்கவிப் பாலெழும்
தானத் தும்பர் களிற்ருெடுந் தாக்குகைத்
தானத் தும்பர் களிற்ருெடுந் தாக்குமே. 17

'' கானத்தும்பி, கடாம்கவிப்பால், கவிப்பால் எழும் எழுகானத் தும்பியைக் கடாம்; மேலும், தானத்து உம்பர்கள் இல்தொடும் தாகுகைத்தானத்து, உம்பர் களிற்ருெடும் தாக்கும்'' என உரைநடை செய்துகொள்க.

பொ-ரை: காட்டுயானை, தன் மதசலத்தின் விளைவால் (மூடுதலால்) கவிக ளிடத்தில் தோன்றும் எழுகானத்தை இசைக்கும் வண்டுகளைச் செலுத்தும்: மேல் உலகத்துத் தேவர்கள் இல்லங்களைத் தொடும் வலிய குகைகளாகிய இடத்தி லிருந்து ஐராவதத்தையும் தாக்கும்.

கனமு ழக்குவ கானம டங்கலுங்
கனமு ழக்குவ கானம டங்கலும்
வனம டுத்துறை மாகய மொன்றுமே
வனம டுத்துறை மாகய மொன்றுமே. 18

பொ-ரை: மேகத்தை யானை எனக்கருதிக் காட்டில் வாழ் மடங்கல் (சிங்கம்) உழக்கும் (தாக்கும்); இசையெனப்பட்ட எல்லாம் மிகுதியாக முழக் கஞ்செய்வன; காட்டை அடுத்து உறையும் சிறந்த யானை ஒன்றே தண்ணீர் உள்ள மடுத்துறைகளிலும் பெரிய கயங்களிலும் பொருந்தும்.

வண்டி னங்கண் மலர்வன சம்மதில்
வண்டி னங்கண் மலர்வன மாதரார்
கண்டு ளக்குமு கத்தலங் காட்டுமே
கண்டு ளக்குமு கத்தலங் காட்டுமே. 19

பொ-ரை: வளப்பமான, தினம் தேனையுடையதாய் மலரும் வனசமும் (தாமரையும்), அதில் உள்ள வண்டின் கூட்டங்களும் விரிந்த நீரர மகளிரு டைய கண்ணைத் துளக்கும்; முகமாகிய இடத்தைக் காட்டும் - எதிர் நிரல் நிறை, இவற்றைக் காணுதலால் உளத்திற்கும் உகத்தலை அங்கு நிறைவிக்கும் (ஆட்டும்)

மாவி ருப்பை மகிழ்தரு வன்னியே
மாவி ருப்பை மகிழ்தரு வன்னியே
நாவி னித்த நவிற்றுவ வாசகம்
நாவி னித்த நவிற்றுவ வாசமே. 20

பொ-ரை: மா, இருப்பை, மகிழ், தேவதாரு, வன்னி என்னும் மரங்களில் பெருமையுடன் இருத்தலையே விரும்பும் வன்னி (கிளி) நாவால் இனித்த வாசகத் தைப் பயிலும்; நாவி (கஸ்தூரி) நித்தம் வாசத்தைக் கொடுக்கும்.

வி-கு: நான்காம் அடியில் வாசகம் என்னும் பாடத்திற்கு 'முனிவர்கள் நாவில் நித்தம் உறுதி மொழிகளை நவில்வர்' எனப் பொருள்கொள்க.

கோட ரங்குயி னுடுங் குலமரக்
கோட ரங்குயி னுடுங் குலமயில்
ஆட ரங்க மறையு மருவியே
ஆட ரங்க மறையு மருவியே. 21

பொ - ரை: குரங்கும் (கோடரம்) குயிலும் நாடும் நல்ல மரங்களையுடைய சோலை (கோடரம்) மேகத்தை (குயின்) விரும்பும் நல்ல மயில் ஆடும் அரங்கமாம்; ஆடலுக்கு இயைய ஒலியை எழுப்பும் அருவி ஆளும் தரங்கம் (அலை) தோன்றி மறையும் (மறையும் மருவி).

வான ரம்பையின் மாவிற் பலவின்மேல்
வான ரம்பையின் மாவிற் பலவின்மேல்
வான ரம்பையின் மாமயில் யாழ்செய
வான ரம்பையின் மாமயி லாலுமே. 22

கண்ணழிவு: வானர் அம்பு அயில் மா இல் பலவின்மேல் வானரம் பயில் மாவின் பலவின்மேல் மா வால் நரம்பு ஐ இன் மை இல் யாழ் செய வான் அரம்பையின் மாமயில் ஆலும்.

பொ - ரை: தேவர்களுடைய அம்பும் வேலும் வைத்துள்ள பெரிய ஆயுத சாலை பலவற்றின்மேல் உயர்ந்த, குரங்குகள் பயிலும் மா, பலா மரங்களின்மேல், வண்டுகள் தூய நரம்புகள் அமைந்த அழகிய இனிய குற்றமற்ற யாழ் இசையை எழுப்பத் தேவர் உலகத்து அரம்பையைப் போலச் சிறந்த மயில் அசைந்து கூத்து இயற்றும்.

பூண்ட வாது புணர்முலை யார்நகை
பூண்ட வாது புணர்முலை யார்படார்
ஆண்ட சோக மமரரு நீழல்வாய்
ஆண்ட சோக மமரரு மெய்துவார். 23

கண்ணழிவு: பூண் தவாது புணர் முலை ஆர் நகை பூண்ட புணர் முல்லையார் வாதுபடார்; ஆண்டு அசோகம் அமர் அரு நீழல்வாய் ஆண்டு அசோகம் அமரரும் எய்துவார்.

பொ - ரை: அணிகள் நீங்காத நெருங்கிய குசங்களையும் பொருந்திய மகிழ்ச்சியையும் உடைய கற்பைப் புணர்ந்த மடவார் வீண் பேச்சுக்களில் இறங்கார்; அங்கு அசோகமரத்தில் பொருந்திய அரிய நீழலின்கண் குளிர்ச்சியை நுகர்ந்து தேவர்களும் சோகமின்மையை எய்துவர்.

ஆண்ட சோகம் எனக்கொண்டு, அறிவர் மேற்கொண்ட சோகம்பாவனை எனினும் அமையும்.

### வேறு

மன்றலயர் பெருவளங்க ளிவ்வகையால் வளர்த்தோங்கி
மின்றலைய சடையார்க்கு முமைக்கும்விய ருடரங்காய்த்
தன்றலையில் வந்தடுத்தோர் தவம்வளர்த்துச் சிவம் வளர்க்கும்
தென்றலையும் வளர்க்குமது செண்பகப்பூந் தடங்காவே. 24

பொ - ரை: அழகிய இடம் அகன்ற செண்பகவனம் வாசனையைத்தரும் மிக்க வளங்கள் மேற்கூறியபடி வளர்ந்து சிறப்பதாய் உள்ளது; முடியின்கண் மின்னலையொத்த சடையையுடைய சிவபிரானுக்கும், அப்பெருமானைப் பிரியாத உமையம்மைக்கும் பெருமையையுடைய ஆடு அரங்கமாக உள்ளது; தன்கண் வந்து, சார்ந்தோர்களுக்குத் தவம்பெருக்கிச் சிவத்துவ விளக்கம் செய்வது; தென்றலையும் வளர்ப்பது.

மற்ருரும் புகழ்கயிலை வடமலைவிட் டெம்பெருமான்
முற்ருத களபமுலை முதல்வியுட னுறையுமிடம்
குற்ருலத் திருநகருங் குளிர்மலர்ச்செண் பகக்காவும்
தெற்ருக வுடையமலை திரிகூடத் திருமலையே. 25

பொ - ரை: எல்லாராலும் புகழப்படும் வடகயிலையை விட்டுச் சிவபிரான் உமையம்மையுடன் தங்கும் இடம் திரிகூடத் திருமலையே ஆகும்; அது குற்ருலத் திருநகரத்தையும் குளிர்ச்சியைத்தரும் மலர்கள் நிறைந்த செண்பகவனத்தையும் தெளிவாக உடைய மலை ஆகும்.

பூவருக்க முதலாய புவனமெலாம் படைத்தளிக்கும்
மூவருக்கு முளைக்குமிட மாதலான் முதுமறைகள்
மாவருக்கை யாய்முளைத்து மாதவஞ்செய் மகிமையினல்
தேவருக்குந் தெரிவரிதாந் திரிகூட வரைமூலம். 26

பொ - ரை: நிலத்தின் வகை முதலிய உலகமெல்லாம் படைத்துக்காத்து அழிக்கும் மூவருக்கும் தோன்றும் இடமாகத் திரிகூடம் இருத்தலால், பழைய வேதங்கள் சிறந்த பலாமரமாகத் தோன்றிச் சிறந்த தவம் புரியும் நன்மையினல் இதன் காரணம் தேவர்க்கும் அறிய ஒண்ணுதது ஆகும்.

## திரிகூடச் சிறப்பு

### வேறு

தெய்வ முத்திரைக் காவென வளிபடாச் செண்பகப் பொழிலென்னும்
கைவ சப்படத் தகைந்துபைந் தாதிணுற் கமழ்திரு நீருட்டி
மைவ னத்துறை நாளின்மேற் கோளின்மேல் வானின்மேல் வானேர்மேல்
சைவ முத்திரை சாத்துமுத் தலைக்கிரி தண்டமிழ்த் திரிகூடம், 27

பொ - ரை: திரிகூடமலை தன்கரம் போலச் சண்பகக்காவை உடையது; அப்பொழில் செந்நிறமுடையது; அதனை மேலான தெய்வமாகிய சிவபிரானுடைய ஒளியடையாளம் என எண்ணி அளி (வண்டு)கள் அப்பொழிலில்

நுழைவதில்லை. கருநிறமுள்ள வானத்து உள்ள நட்சத்திரம், கிரகம், மேகம் இவற்றை, வானவரைத் தன்கையாகிய சண்பகச் சோலையின் வசப்படும்படி தடுத்து மகரந்தமாகிய மணமுள்ள திருநீற்றைப்பூசி, தன் முச்சிகரங்களால் சூலக்குறி பொறிப்பது திரிகூடமலை.

வி - கு: வானம் : வனம் எனக்குறுகியது.

ஈன்று காப்பது மழிப்பது மறைப்பது மிதற்குமேல் விளையாட்டும்
ஆன்ற பல்வகைக் காரண காரிய மவையெலா முறைதோன்றத்
தோன்று காலமுங் கணிதமுங் கடந்ததோர் சுடர்முளைத் திடுநாளின்
மூன்று காலமுந் தன்னிடை முளைத்திட முளைத்தது திரிகூடம். 28

பொ - ரை: படைத்தல் முதலிய ஐந்தொழிலும் அமைந்த, அது அதற்குரிய காரணத்தில் தோன்றும் காரியப்பொருள்களெல்லாம் முறையாகத் தோன்றுவதற்கு நிமித்தமாக உள்ள காலதத்துவத்தையும், அளவை அறிவையும் கடந்தவன் முதல்வன். தன்னொளியுள்ள அப்பரம்பொருள் உலக சிருட்டியின் பொருட்டுத் தன் சத்தியின்கண் ஓர் உருவாய்த் தோன்றிய நாளில், இத்திரிகூட மலை இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் முக்காலமும் முச்சிகரமாகத் தன்கண் தோன்றி விளங்கும்படி இறைவனோடு உடன் தோன்றியது ஆகும்.

தம்மை யேதமக் கறியொணு திருளெனச் சமைந்தமும் மலமோடச்
செம்மை யேமுதன் முச்சுட ரெறிப்பது செனனசஞ் சிதமேய
உம்மை யேதொடுத் திம்மையே மறுமையே யுயங்குமுப் பவநோய்க்கு
மும்மை யேய்மணி மந்திர மருந்தென முளைத்தது திரிகூடம். 29

பொ - ரை: ஆன்மாக்கள் தம் இருப்பையும் அறிய முடியாதபடி மறைக்கும் இருள்போன்ற ஆணவம் கன்மம் மாயை என்னும் முப்பாசங்களையும் நீக்கும் செம்மை வெண்மை பொன்மை (பசுமை) என்னும் முந்நிறச் சுடர்களைத் தருவது திரிகூடமலை; முற்பிறப்பு இப்பிறப்பு இனிவரும் பிறப்பு என்னும் சஞ்சிதத்தால் உளவாகும் முப்பிறவி நோய் தீர்க்கும் மணி மந்திரம் மருந்து என்னும் மூன்று பொருளாகவும் தோன்றியது திரிகூடம்.

பின்னு செஞ்சடை யெம்பிரா னெத்தலம் பிரியினும் பிரியாதே
துன்னு கின்றமால் வரையெனத் தமைப்பிரி தொறும்பிரி வாற்ருமே
மன்னு மாடக வரையிர சதகிரி மந்தர மெனமூன்றும்
பொன்னின் மூவகைக் கொடுமுடி யாமெனப் பொலிந்தது திரிகூடம். 30

பொ - ரை: நிலைபெற்ற பொன்மலை, வெள்ளிமலை, மந்தரம் என்னும் மூன்றும் சிவபிரான் எழுந்தருளும் மலைகள். சடைமுடியையுடைய அப்பெருமான் தம்மைப் பிரிந்தபோதெல்லாம் அப்பிரிவைப்பொறுத்துக்கொள்ள முடியாதவையாய், அவை திரிகூடமலையின் முச்சிகரங்களாக வந்து தோன்றின. காரணம், சிவபிரான் எத்தலத்தைப் பிரியினும் பிரியாது தங்கியுள்ள பெரிய மலை திரிகூடம் ஆம் என்னும் கருத்து.

கவன நான்முக நாரணப் பிரளய கற்பகா லந்தோறும்
எவன மாகவித் தலத்திடைச் சிவபிரா னிருத்தலா லழியாமற்
புவனம் யாவையு மொருதலை யந்தர மொருதலை புரையில்லாப்
பவன மோர்தலை யாகநின் றெடுத்தருள் பழமலை திரிகூடம். 31

பொ - ரை: விரைந்துவரும், நான்முகன் திருமால் பகல் முடிவு ஆயுள் முடிவுகளில் உலகம் ஒடுங்க வரும் காலங்களில், சிவபிரான் அழிவின்றி இளமை வடிவில் திரிகூடமலையில் எழுந்தருளுதலால், மூவுலகும் அழியாமல் இருக்கவேண்டி, பூவுலகம் ஒரு சிகரமாகவும், புவலோகம் எனப்படும் நடுவிடம் ஒரு சிகரமாகவும், சுவர்க்க உலகம் ஒருசிகரமாகவும் கொண்டு நிற்கும் பழமலையாக அது உள்ளது.

ஊற்றி ருந்ததேன் கமலமே லுவரிமே லோங்கன்மே லனம்புள்ளே
றேற்றி ருந்துமுச் செயல்செய்வான் மூவடி வெடுப்பவர்க் கிடமாக
மாற்றி ருந்தபொன் மேகலை மூன்றொடும் வயங்குதெக் கணமேவி
வீற்றிருந்ததோர் வடநெடுஞ் சயிலமே விரிதமிழ்த் திரிகூடம். 32

பொ - ரை: முதல்வன் முச்செயல் செய்தற்குத் தாமரைமேலும், கடலின் மேலும், மலையின்மேலும் இடங்கொண்டு, முறையே அன்னம், புள்ஏறு, ஆனேறு என்பவற்றை வாகனமாகக் கொண்டிருந்து மூவடிவு எடுப்பான். அம் மூவர்க்கும் இடமாக அமைய எண்ணி வடமேரு தென்திசையில் பொன்மயமான மூன்று சிகரங்களோடு தோன்றியதே உலகெங்கணும் விரிந்து பரவும் தமிழ்க்கு இடமாகிய திரிகூடம்.

பொன்மலைக்குமோர் முதுமலை புதுமையாற் புதுமலை கயிலாய
நன்மலைக்கொரு துணைமலை யுவரிசூழ் ஞாலமேல் வளர்ந்தோங்கும்
பன்மலைக்குமோர் தலைமலை திசைதொறும் பசுந்தமிழ் மணநாறும்
தென்மலைக்கொரு வடமலை சிவபிரான் திருமலைத் திரிகூடம். 33

பொ - ரை: சிவபிரான் விரும்பும் சிறந்த மலையாகிய திரிகூடம் வடமேருவுக்கும் பழைமையான மலை; அதனினும் அற்புதம் விளைத்தலால் அற்புதமலை; திருக்கயிலாய மலைக்கு ஒப்பாகத் தெற்கேயுள்ள மலை; கடல் சூழ்ந்த உலகில் உள்ள பிறமலைகள் எல்லாவற்றிற்கும் தலைமையானமலை; திசைதோறும் பசுந் தமிழ் பரப்பும் தென்மலையாகிய பொதியிலுக்கு இணையாக அதன் வடக்கே உள்ள வடமலை.

### வேறு

ஆமையெழுத் தாலுலகை யருள்செய்வார்க் கிடமாகி
மாமையெழுத் தூடாடா மறைநான்கின் முதற்கிடந்த
ஊமையெழுத் துருவாகு முயர்சயில மவ்வெழுத்தின்
சேமவெழுத் தொருமூன்றின் வடிவமே திரிகூடம். 34

பொ - ரை: தம் திருவருளால் ஆதிக்கண் தோன்றிய திருவைந்தெழுத்தால் திருவுருக்கொண்டு உயர்ந்தோர்க்கு அருள்புரியும் சிவபிரானுக்கு இருப்பிடமாய் அமைவது சமட்டிப் பிரணவம் (ஓங்காரம்); எழுதிக்கரியமை (மாமை)

இடப்படாத மறைநான்கின் முதற்கண் உள்ளதும் அது; அஃது எடுத்தோதப் படாமையானும் தன்னை நினைப்பார்க்கு மௌன நிலையை விளைத்தலானும் ஊமை எழுத்து எனவும் படும்; அச்சமட்டிப் பிரணவமே உயர்ந்த திரிகூடமலை; அதன் கண் அடங்கிப் பிரிவுபடும் அகர உகர மகரங்களே அதன் முச்சிகரம்.

ஆடலொரு மூன்றாகி மூவுருவு மமைந்தார்க்குக்
கூடமொரு மூன்றுயுங் கூடமே லிருக்குமறைப்
பீடமொரு மூன்றுயும் பேரெழின்முத் தேவியர்க்கு
மாடமொரு மூன்றுயும் வயங்கியது திரிகூடம். 35

பொ - ரை : தாம் மேற்கொள்ளும் அருட்செயல், படைத்தல் காத்தல் அழித்தல் என மூன்று ஆதலால், அரன் அரி அயன் என மூவுருக் கொண்ட முதல்வனுக்குக் கோயில் மூன்றுயும், மறைவாக உள்ள (கூடமேல் இருக்கும்) வேதத்தின் பீடம் மூன்றுயும், மலைமகள், அலைமகள், கலைமகள் என்னும் அழகுள்ள முத்தேவியர்க்கு அமைந்த மாளிகைகள் மூன்றுயும் விளங்கியது திரிகூடம்.

எக்குணமோ வெப்பொருளோ வெச்செயலோ வெனமறையும்
மிக்குணரா வகையுணர்த்த யான்மாட்டேன் மெய்யடியார்
அக்குணமே யச்செயலே யப்பொருளே யானபிரான்
முக்குணமோ முச்செயலோ முப்பொருளோ திரிகூடம். 36

பொ - ரை : வேதங்களும் எக்குணம் எப்பொருள் எச்செயல் எனத் தெளிய உணரும்படி அறுதியிடாமையால், யானும் துணிந்து சொல்ல ஒருப்படேன். மெய்யடியார் உளங்கொண்ட குணம்செயல் அடையாளம் என்பவற்றையே தான் கொண்டு விளங்கி அருள்புரியும் சிவபிரான் மேற்கொள்ளும் முக்குணம், முப்பொருள், முச்செயல் என்பவற்றைத் திரிகூடம் குறிக்கற்பாலது.

வேறு

பொன்னின்மா மணியருவிப் பூமாலை கரத்தேந்தி
வன்னிசேர் கரத்தார்க்கு மணம்பூட்ட வருமிமையக்
கன்னிபோல் வதுகருணைக் காசினியா மடமகட்குச்
சென்னிபோல் வதுகனகத் திருமவுலி போல்வதால். 37

பொ - ரை : திரிகூடமலை அங்கியை ஏந்தும் கையை உடைய சிவபிரானுக்குப் பொற்றுகளும் இனிய சிறந்த மணிகளும் தழுவிவரும் அருவியாகிய திருமண மாலையைக் கையில் ஏந்தித் திருமணத்திற் சூட்டவந்த பார்வதியைப் போல்வது; உயிர்களைக் காக்கும் நிலமகளுக்கு முடிபோல்வது; முடியிற் கவிக்கும் பொன்னுற் செய்த கிரீடமும் போல்வது.

முந்தையார் நதிசூடி முத்தலைவே லையுமேந்தி
விந்தையார் கோடீர மதிவனைந்து விடையேறும்
எந்தைபோல் வதுகுலத்தி னுலகீன்ற பெருமாட்டி
தந்தைபோல் வதுகருணைத் தாய்போல்வ துலகினுக்கும். 38

பொ - ரை: திரிகூடமலை பண்டேயுள்ள ஆகாய கங்கையைச் சூடி, முத்தலையையும் வேலையும் (வேலமரம்) ஏந்தி, விம்மிதம் பயக்கும் முடியில் (கோடீரம்) மதியைச் சூடுதலால் விடையூரும் சிவபிரான் போல்வது; சிவபிரான் முற்பட்ட கங்கையை முடிக்கண்சூடி, மூத்தலை வேலாகிய சூலத்தை ஏந்தி, அற்புதக்கோலம் வாய்ந்த சடைக்கண்மதி வேய்ந்து உளன்; மலைக்குலமாதல்பற்றிப் பார்வதியின் தந்தையாகிய இமையம் போல்வது; உலகினுக்கும் கருணைத்தாய் போல்வது.

வி - கு: வேலை - வேலேந்தியகுமரன், கோடிய ஈரமதி எனலும் ஆம்.

### வேறு

பூமடந்தை தனமிசைந்து பாரிடந்து வானளந்து பொன்னை மேவி
மாமணியி னிறம்படைத்து வானரம்புள் ளேறியலை வாரி மேவித்
தாமரைமா மலரிலஞ்சி தனிற்பூத்துச் செழுந்திகிரி சங்க மேந்தி
நாமமா யிரம்படைத்த மால்போலுந் திரிகூட ஞானக் குன்றம். 39

பொ - ரை: தன்னைச் சார்ந்தோர்க்கு ஞானத்தை வழங்கும் திரிகூடமலை ஆயிரம் பெயர் உள்ள திருமாலை ஒக்கும்; திருமால் நிலமகள் தனத்தை நுகர்ந்து நிலத்தைக்கிளைத்து ஆகாயத்தை ஓரடியால்தாவியளந்து, திருமகளைப்பொருந்தி, கரியநீலமணிமேனி உடையவராய் அநுமன் கருடன் என்போரை ஊர்தியாகக் கொண்டு, பாற்கடலை இடங்கொண்டு, தம் கொப்பூழில் தாமரை பூக்கச்செய்து நல்ல சக்கரம் சங்குகளை ஏந்துகிறார்.

வி - கு: கௌத்துவத்தை மார்பில் ஏந்தினதும் ஆம்.

திரிகூடமலை: நிலமகளுக்குத் தனமாக இசைந்துள்ளது; நிலத்தில் ஆழ்ந்து ஆகாயத்தை அளாவிப் பொன்னையும் தன்கண்கொண்டுள்ளது; நீல மணியின் நிறம் உடையது; வானரம் புள் ஏற இடங்கொடுத்து அலைகளையுடைய வெள்ளத்தை உடையது; தாமரை, மாமலர், மகிழ் (இலஞ்சி) தன்கண் தோற்று வித்து, செழுமையான மூங்கிலையும் நல்ல மேகத்தை (சம்கம்)யும் ஏந்துகின்றது என உரைக்க.

உந்திமிசை வந்துதடப் பாணியாற் குவலயங்க ளுவப்பி னீன்று
விந்தைசே ரம்புவனம் பலபடைத்துத் திசைமுகங்கண் மேவி வானில்
இந்திரர்க்கு மிடர்நீக்கி யெண்கிரியின் வாகுமிகுந் திருத்த லாலே
முந்துபது மத்தயனை நிகர்காட்டுந் திரிகூட முருகார் குன்றம். 40

பொ - ரை: மணம்பொருந்திய (முருகனுக்கு இடமாகிய) திரிகூடமலை தாமரையில் தோன்றிய பழைய பிரமனைப் போலும்; அஃது எழுந்து மேல் ஓங்கித் தடாகங்களில் உள்ள தண்ணீரால் குவளைமலர்களை மக்களுக்கு மகிழ்ச்சி உண்டாகும்படி தோற்றுவித்து, அற்புதம் பொருந்திய மூங்கிற்காடு பல உடையதாய், திசையாகிய இடங்களில் பரவி, தேவஉலகில் இந்திரனுக்கும் வரும் இடர்நீக்கி, அட்டகுல மலைகளைப்போல அழகு பொருந்தியுள்ளது; நான்முகன் திருமாலின் கொப்பூழ்மேல் தோன்றி அகன்ற கைகளால் நிலவட்டங்களையும் அற்புதமான புவனங்களையும் படைத்து, நான்கு முகங்கள் பொருந்தி இந்திரன் இடர்நீக்கி எண்புயங்கள் பொருந்தி இருப்பன்.

எத்தலமு மேகலிங்க முளதாகும் பஞ்சலிங்க மிசைப்பர் மேலும்
உத்தரகா சியிற்பதிட்டை கோடிலிங்கம் வடவருவி யுவரி மேய்ந்து
மைத்துளிபெய் திரிகூடச் சிலையெல்லாஞ் சிவலிங்க வடிவ மாகி [மா.
அத்துணையுஞ் சிவமாகி லெத்துணையென் றெடுத்துரைப்போ மதன்சீ ரம்

பொ - ரை: பொதுவாக எல்லாத்தலமும் ஓர் இலிங்கம் உடையதாகும். மேலும் சிலவற்றில் ஐந்து இலிங்கங்கள் உள்ளன எனக்கூறுவர்; வடகாசியில் கோடி இலிங்கம் பிரதிட்டிக்கப் பட்டிருப்பதாகவும் கூறுவர்; வடஅருவியாகிய கடலின் நீர்உண்டு மேகம் நீர்த்துளியைத் தரும் திரிகூடமலையில் உள்ள கல் எல்லாம் சிவலிங்கமாகிச் சிவவடிவாய் உள்ளன எனின், அதன் சிறப்பை எங்ஙனம் எடுத்துக்கூறுவது?

திரிகூடத் திருமலையை வலஞ்செய்தார் தீராத வினைக டீர்ந்தார்
திரிகூடத் திருமலையைத் திசைநோக்கிப் பணிந்தவருஞ் சிவத்தைச் சேர்ந்தார்
திரிகூடத் திருமலையின் கீர்த்தனங்கள் கேட்டவருந் தேவ ரானார்
திரிகூடத் திருமலைசார்ந் திருப்பவர்கள் மகிமைதுதி செய்யற் பாற்றே. 42

பொ - ரை: திரிகூடமலையை வலம் வருவோர் தீராத வினைதீர்ந்து உய்வது நிச்சயம்; அதனைத் திசைநோக்கி இறைஞ்சுவோர் சிவத்தைப் பெறுவர்; அதன்புகழ் கேட்டோர் தேவர் ஆவர்; அதன்கண் வாழ்வோர் பெருமையை அளவிட்டு உரைப்பது அரிது.

## வலஞ்செய்வார் பேறு

### வேறு

என்றிவை பகருங் காலை யிவ்வகை நான்கி னாலும்
நன்றிசேர் கதிகள் பெற்றார் நற்கதை நவில்வா யென்ன
ஒன்றிய முனிவர் கேட்ப வுளமகிழ் சிறந்து சூதன்
குன்றினை வலஞ்செய் தான்சீர் முதற்கொண்டு கூற லுற்றான். 43

பொ - ரை: இவ்வாறு சூதமுனிவர் கூறியபோது, மனம் ஒன்றிக்கேட்ட முனிவர்கள் மொழிவார்கள்: மேலே நான்கு வகையால் திரிகூடத்தை வணங்கி உறுதி பெறலாம் என்றீர்; அங்ஙனம் நன்மையடைந்தார் வரலாறுகளை எமக்கு அருள்புரிக என்றனர்; சூதரும் திரிகூடமலையை வலஞ்செய்தான் கதை முதலாகக் கூறத்தொடங்கினர்.

பொதியமே லிமைய நீங்கிக் குறுமுனி போதுங் காலை
எதிர் தொழான் றவமால் பூண்ட விந்திரத் துய்ம்ம னென்னும்
மதிகுல நிருபன் றன்னை முனிந்துநின் மதத்தி னாலே
அதிர்குரன் மதமா வேழ மாகெனச் சாபஞ் செய்தான். 44

பொ - ரை: அகத்திய முனிவர் பொதியமலையை அடைவதற்கு இமய மலையை நீங்கிவந்த காலத்து, மிருகருவங்கொண்ட இந்திரத்துய்மன் என்னும் சந்திரகுலத்து மன்னன் எதிர் எழுந்து தொழாதிருந்தான்; அகத்தியர் அவனை மதங்கொண்ட காட்டுயானை ஆகுக எனச் சபித்தார்.

நின்வர வுணரா வென்னை நெறிகொலோ சபிப்ப தென்ன
மன்னவன் வணங்கிக் கூற மலயமா முனிவன் முக்கண்
முன்னவ னடியார்க் காணின் முந்துற வெழுந்து தாழ்ந்து
பொன்னடி வணங்கார் யார்க்கும் புகல்வதிச் சாப மென்றான். 45

பொ-ரை: மன்னன், நுமது வரவை உணராத என்னைச் சபித்தது அறமோ என வினவினன்; அகத்தியர், சிவனடியார் யாவர் வரினும் எழுந்து தொழாதவர்க்கு இடுவது இச்சாபம் என்றனர்.

முனிவர சரணஞ் சாப மோசனம் புரிவா யென்னத்
தனிதொழு மரசைக் கும்ப சம்பவ னோக்கி யெங்கோன்
நனிவரைத் திரிகூ டத்தை நண்ணிநீ வலஞ்செய் காலம்
புனிதமுற் றிடுவை தென்கீழ்ப் புறத்தொரு தடத்தி லென்றான். 46

பொ-ரை: முனிவர் தலைவ! நீயே எனக்கு அடைக்கலம்; இச்சாபத் திற்குத் தீர்வு அருளிச்செய்ய வேண்டும் என மன்னன்வேண்டினன். சிறப்பாகத் தொழுத அரசனை நோக்கி, சிவபெருமான் எழுந்தருளியுள்ள திரிகூடமலையை அடைந்து அதனை வலஞ்செய்யும் காலம் வரும்; அப்போது, அதன் தென்கீழ்த் திசையில் உள்ள தடாகத்தில் பாவத்தின் நீங்கிப் புனிதன் ஆவாய் என்றனர் அகத்தியர்.

பாயிர மறைதேர் கும்பப் பண்ணவ னருளாற் பின்னர்
ஆயிரங் கரிக்கு வேந்தா யடற்கயே ந் திரப்பேர் பெற்றுப்
போயது குணிப்பில் காலம் புனம்பல சுழன்று வேழம்
மேயது தவத்தா லோர்நாள் வியன்றிரி கூடச் சாரல். 47

பொ-ரை: பல்வகைப் பொருளையும் கொண்ட வேதம் வல்ல அகத்தியர் திருவருளால் அம்மன்னன் ஆயிரம் யானைகளுக்குத் தலைமைதாங்கிய கயேந்திரன் என்ற பெயர்பெற்ற வலியுள்ள யானை ஆயிற்று. அளவில்லாதகாலம் காடுகளில் உழன்று, பின் ஓர் நாள் முன்னைத்தவத்தால் திரிகூடமலைச்சாரலை எய்தியது.

உலவுதென் திசையிற் கொண்ட லுவாப்பிடி யெனப்போய் மேல்பால்
குலவுவெள் ளருவிக் குன்றைக் கோட்டுமா வெனப்போ ராடிச்
சுலவியுத் தரபாற் சோலை முக்கனி சுவைத்துக் கீழ்பால்
நிலவைவெண் கவள மென்று சென்றது பனைக்கை நீட்டி. 48

பொ-ரை: தென்திசையில் உலவும் மேகத்தைப் பெண்யானை எனக் கருதிச் சென்று, அங்கிருந்து மேற்றிசையில் வெள்ளருவி பாயும் விளக்கமான குன்றைத் தந்தத்தையுடைய ஆண்யானை எனக்கருதிச் சென்று போராடி, வடக்கேயுள்ள மரச்சோலையிற் சென்று சுழன்று முக்கனிகளைச் சுவைத்து உண்டு, அங்கிருந்து கிழக்கே எழுந்த முழுமதியைச்சோற்று உண்டை என்றுகருதித் தன்துதிக்கையை நீட்டிச்சென்றது அவ்யானை.

சோதி மால்வரை சூழ்ந்துதென் குணதிசைச் சுனையின்
மோது தண்புனல் பருகைபி லொருகையை முதலை
காதி வெங்கய மிழுத்திடக் கயங்கரை யிழுப்ப
வாதி னூசலொத் தாயிரம் யாண்டுபோர் மலைந்த. 49

பொ - ரை : இங்ஙனம் ஒளியுள்ள பெரிய திரிகூடமலையை வலம்வந்து தென்கிழக்குத் திசையில் இருந்த சுனையில் குளிர்ந்த நீரை உண்ணும்போது, அவ்யானையின் முன்கால் ஒன்றை முதலை மோதித் தடாகத்தில் இழுக்க, யானை கரையைநோக்கி முதலையை இழுக்க, இப்போராட்டத்தில் ஊசலைப்போல ஆயிரம் யாண்டு எதிர்த்து ஊன்றி நின்றன.

தால மீதில்விண் ணுயர்புடார்ச் சுனந்தனைச் சார்ந்து
கூல மேவிநின் றமர்செய்குஞ் சரங்குரை திரையின்
ஆல மேயென பொருவலி முதலையா லயர்ந்து
மூல மேயென வோலமிட் டதுதனி முதலை. 50

பொ - ரை : நிலவுலகில் ஆகாயத்தில் உயர்ந்த கவிந்த மருதமரத்தைச் சார்பாகப் பற்றி நீர்க்கரையைப் பொருந்தி எதிர்த்து நிற்கும் யானை, ஒலிக்கும் அலையையுடைய கடலில் எழுந்த ஆலகால நஞ்சைப் போன்ற மிக்க வலியுள்ள முதலையால் சோர்வு அடைந்து பரம்பொருளை எண்ணி மூலமே அடைக்கலம் என முறையிட்டது.

ஓல மென்றது முயர்பெரும் புடார்ச்சுன புரத்தின்
மூல மொன்றதாய் மூவடி வெடுத்தருண் முதல்வன்
நீல விண்டுவா யுறையுநா ணேமியம் படையால்
கால வெங்கரா மடர்த்துநீள் கடகரி காத்தான். 51

பொ - ரை : அப்பொழுது, உயர்ந்த திருப்புடார்ச்சுனபுரத்தில் முதற்கண் ஒருபொருளாய், உலகைப் படைத்தல் முதலிய முத்தொழில் புரிவதற்கு அயன் அரி அரன் என மூவுருக்கொண்ட முதல்வன், நீலமேனி அரியாய் எழுந்தருளியிருந்தமையின், தன் சக்கரப்படையால் காலனை ஒத்த முதலையைக்கொன்று யானையைக் காத்தருளினன்.

முத்த லைக்கிரி வலம்வரப் பெறுமுது தவத்தான்
மைத்த லைக்கரி வடிவுபோய் வானவ வடிவாய்
மெய்த்த லைப்பெருஞ் சுவர்க்கநா டெய்தினன் வேந்தன்
அத்த லைக்கிரி மகிமைகேட் டவன்கதி யறைவாம். 52

பொ - ரை : மூன்று கொடுமுடிகளையுடைய மலையை வலம் வந்த தவப் பயனால், கரிய தலையையுடைய யானை உருநீத்துத் தேவ உருக்கொண்டு சுவர்க்கம் புகுந்தான் இந்திரத்துய்மன் என்னும் அரசன். இனி அம்முதன்மையான மலையின் பெருமை கேட்டவன் எய்திய பயனைக் கூறுவாம்.

## திரிகூடமகிமை கேட்டற்பயன்

### வேறு

பார்குட ரண்டம் வேர்வாய்ப் பகர்தரு தோற்ற நான்கின்
ஏரெழு பிறப்பிற் றெய்வ மீரேழு மக்க ளொன்பான்
நீரின விலங்கு புள்ளு பப்பத்து நிலைநா லைந்தாங்
கூர்வன பதினொன் றுக யோனியெண் பத்து நான்கே. 53

பொ - ரை : நிலம், கருப்பை, முட்டை, வெயர்வை என்னும் இடங்களில் கூறப்படும் தோற்றம் நான்கில் எழும் ஏழ்பிறப்பில், தேவர் பதினன்கு, மக்கள் ஒன்பது, நீர்வாழ்வன விலங்கு பறவை ஒவ்வொன்று பத்து, தாவரம் (நிலை) இருபது, ஊர்வன பதினென்று எனப்பிறப்பிடவகை எண்பத்து நான்கு இலக்கம் ஆகும்.

இன்னவா மிலக்க மியோனி யெய்திய வுயிர்கட் கெல்லாம்
பன்னுபுண் ணியமே பாவம் பாவபுண் ணியமுச் செய்கை
பொன்னகர் நிரயம் பூமி புவனமாம் பொசிக்கும் போகம்
முன்னது குறைவு மேற்ற முயன்றது பின்னு மாக. 54

பொ - ரை : இங்ஙனம் எண்பத்து நான்கு இலக்கம் பிறப்பிட வேறு பாட்டையுடைய உயிர்கட்கு எல்லாம் நல்வினை, தீவினை, இவற்றின் கலப்பு என்னும் மூவகை வினைப்பயன்கள் முறையே சுவர்க்கம், நரகம், நிலவுலகம் என்பவை இடமாகக்கொண்டு நுகரப்படும். அங்ஙனம் நுகரும்போது குறை வாகச் செய்தது முன்னும் ஏற்றமாகச் செய்தது பின்னுமாகப் புசிக்கப்படும்.

தாங்கரும் பாவ மிக்கான் றருமமுஞ் சிறிது செய்தான்
பாங்குசெய் தரும பாவப் பயனுண்டு பாரை நீங்கி
ஓங்குசீர்த் தரும போக முண்டனன் சுவர்க்க மேவி
ஆங்கது தொலைவின் வானோ ரகற்றவந் தரத்து வீழ்வான். 55

பொ - ரை : சுமத்தற்கு அரிய பாவம் மிகச்செய்தவன் தருமமும் சிறிது செய்தான்; முன்செய்த அறம் பாவங்களின் பயனை நுகர்ந்தபின் இவ்வுலகின் நீங்கி, சுவர்க்கம் புகுந்து உயர்ந்த சிறப்புள்ள அறத்தின் பயனாகிய இன்பம் நுகர்ந்து, அத்தருமம் ஒழிந்தபின் தேவர்கள்தள்ள, வான்வழி வீழ்வான் ஆயினன்.

விஞ்சையர் திரிகூ டச்சீர் விண்ணிடைப் புரியுங் கானம்
அஞ்செவி குளிர்ப்பக் கேட்டா னகன்றது தொடர்ந்த பாவம்
மஞ்சன மறலி தூதர் வருமுனம் வந்து வானோர்
தஞ்செனெ விமான மேற்றித் தமனிய வுலகஞ் சேர்த்தார். 56

பொ - ரை : அங்ஙனம் வீழ்கையில், ஆகாயத்தில் வித்தியாதரர்கள் திரி கூடமலையின் சிறப்பை இன்னிசையோடுபாட, அதைச்செவிகள் குளிரக்கேட்டு மகிழ்ந்தான். அதனால், அவனைப்பற்றி நின்ற பாவம் விலகியது. மேகம் போன்ற எமதூதர் வருதற்கு முன்னர், தேவர்கள் வந்து பற்றுக்கோடாக (தஞ்சு என) தேவயானத்தில் ஏற்றிப் பொன் உலகத்திற்குக்கொண்டு சேர்த்தார்.

வரைத்திரு நாமங் கேட்ட மகிமையாற் சுவர்க்க மேவித்
திரைக்கட லமுத மாந்தித் தேவரோடிருந்தா னின்னம்
பருப்பதச் சாரல் சார்ந்தான் றிசைநோக்கிப் பணிந்தான் செய்கை
சருக்கமே லரிக்கு நாதன் சாற்றிய கதையிற் கேண்மின். 57

பொ - ரை : திரிகூடமலையின் புகழ் கேட்டதன்பயனாகத் தேவர் உலகம் புகுந்து அமுத உண்டி பெற்றான். இனி, அதன் சாரலை அடைந்தவன், அதனைத்

திசை நோக்கித் தொழுதவன் வரலாறுகளைத் திருமாலுக்கு இறைவன் அருளிச் செய்யும் கதையில் பாகுபடவைத்துக் கேண்மின்.

ஒன்றெனப் பொருந்தா வேறு பிரிந்திடா வுற்ப வத்தின்
என்றுமுட் புகுதா நீங்கா விறையரு ளான்மா மூன்றுந்
தொன்றுதொட் டமைந்த சுத்த சொரூபமே வடிவென் றோர்ந்து
மன்றலந் திரிகூ டத்தி லுறையுமா மறைகண் மூன்றும். 58

பொ - ரை : பிறப்பில்லாத இறையும், அதனோடு பிரிதல் இன்றி உள்ள திருவருளும், எண்ணிலவாய் உள்ள ஆன்மாவும் ஆகிய மூப்பொருள்களும் தனித்து நிற்றலின்றி வியாபகவியாப்பியமாய், தம் இயற்கையான சுத்தசொரூப மாக உள்ள நிலையைக்குறிக்கும் சுத்த பஞ்சாக்கரமாகிய சிவாய என்னும் அக்கர வடிவே திரிகூடம் எனச் சிந்திக்கவைத்து நறுமணங்கமழும் அம்மலையில் மூன்று மறைகளும் தங்கும்

வி - கு : ஒன்றெனப் பொருந்தா முதலிய மூன்று அடைகளும் எதிர் நிரல் நிறை; நீங்கா முப்பொருளுக்கும் பொது.

வெதிர்தரு தரள ராசி வெண்மையாற் கயிலை மானும்
கதிர்மதி வலத்தான் பொன்னான் மேருவே கடுக்குங் கண்டோர்
மதிவலி யிரும்பைத் தன்பால் வலித்தலாற் காந்த வெற்பாம்
புதியசீர்த் திரிகூ டத்தை நிகர்வதோர் பொருப்பு முண்டோ. 59

பொ - ரை : திரிகூடவெற்பு மூங்கில்கள் உதிர்க்கும் முத்துக்கூட்டங்களின் வெண்மை நிறத்தால் கயிலையைப் போன்று உள்ளது; ஞாயிறும் மதியும் வல மாகச் சூழ்தலாலும் பொன்னிறத்தாலும் மேருவை ஒக்கும்; தரிசித்தோருடைய அறிவாகிய திண்ணிய இரும்பைத் தன்பால் இழுத்துக் கொள்ளுதலால் காந்த வெற்பு எனலும் ஆம். இத்தகைய புதிய சிறப்புள்ள மலைக்கு நிகராக ஒருமலை இல்லை.

வம்பருப் பதும ராகம் வளர்வெயில் விரித்த லாலும்
வெம்பரா மணியின் சோதி விரிதரு செக்க ராலும்
உம்பரா லுகுத்த வேயி னொளிமணி நிலவி னாலும்
எம்பிரான் றிரிகூ டத்துக் கிராப்பக லில்லை மாதோ. 60

பொ - ரை : சிவபிரானது திரிகூட வெற்பில் பதுமராகக் கற்களின் ஒளி வளர்கின்றது; நாகரத்தினங்களின் செவ்வொளி விரிகின்றது; மேல் ஓங்கிய மூங்கில்கள் உதிர்க்கும் முத்துக்கள் நிலவொளியைத் தருகின்றன. இவற்றால் அங்கு இரவு பகல் வேறுபாடு அறியப்படுவதில்லை.

வி - கு : வம்பு அரு, வெம்பு என்பவை முறையே பதுமத்திற்கும் அரவிற் கும் இனஅடை.

சித்தராய் விஞ்சை யோராய்த் தேவராய்த் திகழ்வோ ரெல்லாம்
பத்தராய்த் தருவாய் மாவாய்ப் பறவையா யுறைவர் மேன்மேல்
முத்தராய்க் கதிகட் கெல்லா முதல்வராய் விடுவ ரானால்
அத்தனார் திரி கூடத்தி னதிசயம் விரிக்கற் பாற்றோ. 61

பொ - ரை: திரிகூடமலையில் சித்தர் வித்தியாதரர், தேவர் என்போர் எல்லாரும் அன்பராய், மரமாயும், விலங்காயும், பறவையாயும் தங்கி, மேன் மேலும் சீவன் முத்தராயும், புவனபதிகளாயும் உயர்ந்துசெல்வர். இதனுல், அதன் விம்மிதம் அளவிட்டு உரைக்க முடியாதது.

வி - கு: அமர்வரானல் எ - ம். பாடம்.

வேறு

குவிப்பாக வுரைத்ததெனச் சூதனெடுத் துரைப்பமுனிக் குழாத்தோ ரெல்லாம்
புவிப்பாக மறைவேள்வி தருமுன்னே எங்களுக்குன் புராண வேள்வி
அவிப்பாக மெனவளித்தாய் திரிகூட வரைமகிமை யமுத வாரி [ரூர்.
செவிப்பாகம் பெறநுகர்ந்து தவிப்பாகுஞ் செனனவிடாய் தீர்ந்தோ மென்

பொ - ரை: இங்ஙனம் உரைத்துச் சூதமுனிவர் இது திரிகூடமலையின் கீர்த்தியைத் தொகுத்துக் கூறியதே ஆம் என்ருர். கேட்ட முனிவர்கள், நிலவுல கில் பாகுபட்டுச் சாகைகளாக வழங்கும் மறைவேள்வி நிறைந்து தன் பயனைத் தருவதன் முன்னர், நீர், வேள்வியில் தரப்பெறும் அவிப்பாகம் போல, நுமது புராண வேள்வியை எமக்கு அருள்புரிந்தீர். திரிகூடவெற்பின் மகிமையாகிய அமுதவெள்ளத்தை எங்கள் செவிகள் பக்குவம் பெற உண்டு, துன்பங்களைத் தரும் பிறவி வெப்பம் தணிந்தோம் என்றனர்.

ஆன்ருண்மை யுயிராகி யுயிர்க்கெல்லா முணர்வாகி யறிவுக் கெல்லாம்
சான்ருகி முப்பொருளுந் தாஞகி வாஞகிச் சகங்கள் யாவும்
ஈன்ருனுக் கிடமாகுங் கயிலாயஞ் சிவலோக மிரண்டென் பார்க்கு
மூன்ருகுங் குற்ருலத் தலமகிமை மொழிகவென மொழிவான் சூதன். 63

பொ - ரை: உயர்ந்த ஆளுந்தன்மை உள்ள உயிர்களிற் கலந்துநின்று, அவற்றின் உணர்வை விளக்கும் பொருளாகி, அறிவுவடிவ அவ்வான்மாக்கள் செய்யும் செயல்களை உடனின்று கண்டுவரும் சாக்ஷியாகி, பசு பாசங்களைத் தன்கண் அடங்கக்கொள்ளுதலால் முப்பொருளுந் தானே என நிற்கும் பரம் பொருளாகி, சிதாகாயமாய் நின்று உலகனைத்தும் படைத்தருளிய சிவபிரானுக்கு இடம் திருக்கயிலையும் சிவலோகமும் என இரண்டாக உயர்ந்தோர் பொதுப்படக் கூறுவர். சத்திநிபாதர்களால் அவற்ரேடு சேர்த்து மூன்ருவதாக எண்ணப் பெறுவது திருக்குற்ருலம். அத்தலத்தின் மாண்பை உரைத்தருள்க என முனிவர்கள் வேண்டிக்கொள்ள, சூதமுனிவர் உரைக்கின்ருர்.

*திரிகூடமலைச் சருக்கம் முற்றிற்று.*

ஆகத் திருவிருத்தம் — 243

---

# திருக்குற்றாலத் தலமகிமைச் சருக்கம்

கூரேறு மழுப்படையார் தலங்கண்மகி தலத்தனந்த கோடி யேனும்
சீரேறு மூர்த்திதலந் தீர்த்தமெனு மூவகையாற் சிறந்த தானம்
ஈரேழு தலமாகு மெந்தையார்க் கதிகதல மிவற்றி னுள்ளும்
ஓரேழு தலமதிக மிவையிலொரு தலமதிக முணர்த்தக் கேண்மின். 1

பொ - ரை: உலகத்தில் சிவபெருமான் எழுந்தருளி அருள்தரும் தலங்கள் அளவில் கோடி; எனினும், அவற்றுள் மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூவகை யானும் சிறப்புள்ளவை பதினான்கு; அவற்றுள்ளும் ஏழுதலங்கள் அதிக சிறப்பு உள்ளவை; இவற்றுள்ளும் ஒருதலம் மிகச் சிறப்பு வாய்ந்தது; கூறுவோம் கேண்மின்.

வரமேவு திருவாரூர் காளத்தி யருணை தில்லை மதுரை காஞ்சி
புரமாதி பலதலத்தும் போந்துறைத லொவ்வொருவர் பொருட்டே யாகும்
பரமான தனிமுதல்வ னூழிதொறு முலகமெலாம் படைத்துங் காத்தும்
திரமாக வரசிருக்கும் பரமரக சியத்தானந் திருக்குற் றாலம். 2

பொ - ரை: பரம்பொருளான ஒப்பற்ற சிவபிரான் மேன்மை பொருந்திய திருவாரூர் முதலிய பல தலங்களிலும் இருத்தல் ஒவ்வொருவர்க்கு அருள்செய்தற் பொருட்டே ஆகும். அவன் ஊழிதோறும் உலகமெல்லாம் மீளப்படைத்துக் காத்தற் பொருட்டு நிலையாக அரசுவீற்றிருக்கும் மேலான மறையாகப் பெரி யோர்கள் உளங்கொண்டுள்ள அருணிலைத்தானம் திருக்குற்றாலம் ஆகும்.

வேறு

பூதல விலாசந் தன்னிற் புதுமைசேர் தலங்கள் யாவும்
பேதமாங் கற்பந் தோறும் பிரளயத் தொடுங்கித் தோன்றும்
ஆதலு மழிவு மில்லா வநாதியே திருக்குற் றாலம்
காதலி னறிவு மிக்கீர் காரண முணர்த்தக் கேண்மின். 3

பொ - ரை: முதல்வன் திருவிளையாட்டாக வெளிப்படும் நிலவுலகத்தில் அற்புதம் விளங்கும் தலங்கள் எல்லாம் கற்பம்தோறும் வேறுபடும்; ஒடுங்குங் காலத்து ஒடுங்கி மீளத்தோன்றும். திருக்குற்றாலம் தோற்றமும் ஈறும் இல்லாத மூலத்தலமாகும். காரணம் உணர்த்துவோம்; அறிவான்மிக்கீர், அன்போடு கேளுங்கள்.

வி - கு: கற்பம் - பிரம விட்டுணுக்கள் நாள் எல்லை.

## *பிரளய சித்*

பொருந்திரைக் கடல்க ளேழும் புடைபடு தீவந் தாவிப்
பெரும்புறக் கடலு ணேமிப் பிறங்கல்கால் சாயப் பாய்ந்து
வருந்திரண் மேரு வாதி வரைகளு நந் திசையும் பாரும்
ஒருங்குற வொருக்கி மேல்கீ ழுலகெலாம் புகுந்து தாக்கி. 4

பொ-ரை: சுருண்டுமோதும் அலைகளையுடைய ஏழுகடல்களும், அவற்றிடைப்படும் இடங்களை அகப்படக்கொண்டு, பெரும்புறக் கடலுள் சக்கரவாளமும் தலைகீழாகக் கவிழும்படி பாய்ந்து, திரண்ட மேருவும் அதனைச் சூழ்ந்துள்ள மலைகளும் உலகும் நாற்றிசை இடங்களும் ஒன்ருகும்படி ஒடுக்கி மேலும் கீழும் உள்ள உலகங்களிற் புகுந்து அலைத்து.

பரந்தெழு புவன மெல்லாம் படர்ந்தபே ருகாந்த வாரி
துரந்தெழு மண்ட மூலத் தங்கியின் சுடரான் மண்ட
உரங்கெழு சண்ட வாயுக் கனலெலா மொடுங்கி வானம்
நிரந்தரித் துலோகா லோக நெடுவெளி யாய காலம். 5

பொ-ரை: பரவித் தோன்றும் புவனங்கள் எல்லாம் மூடி எழுவது யுக முடிவின் வரும் பெருவெள்ளம்; அதனைச் சுருக்கி எல்லாவற்றையும் நெருங்கி நீருக்குவது மூல அங்கி எனப்படும் வடவாமுக அங்கி; அவ்வங்கியைத் தன்கண் ஒடுக்கி எழுவது வலிய பிரசண்டவாயு; ஆகாயம் அவ்வாயுவைத் தன்கண் அடங்கக்கொண்டு உலகம் எல்லாம் ஒளிக்கும் முதலாகவுள்ள நெடுவெளியாகிய முற்றழிவுக் காலத்தில்.

வி-கு: ஆலோகம் - பிரகாசம். ஆகாசம். காசம் - ஒளி.

ஆருநீர் கனல்கா லண்ட மழிக்குநா ளழியா தாகிக்
கூருமால் வரையும் யாறுங் குறிக்கொண்டு திசைக டோறும்
நேருறு குரோச மைந்தாய் நின்றது திருக்குற் ருலம்
மேருவி லேந்திக் கங்கை மிலைந்தநம் பரனே போல. 6

பொ-ரை: மேற்கூறியபடி நிறையும் வெள்ளமும், மூலக்கனலும், பிரசண்ட வாயுவும் அண்டங்களை அழிக்கும்போது, தான் அழியாதாகித் தன் பெருமை சிறந்து தோன்றும் திரிகூடமலையும், சித்திராநதியும் அடையாளமாக இருப்பக்கொண்டு, நாற்றிசையிலும் ஐந்துகுரோச (கூப்பிடு) தூரம் எல்லை உடையதாய் அழியாது நின்றது திருக்குற்ருலம்; மேருவை வில்லாக ஏந்திக் கங்கையைச் சடைக்கண் சுருங்கக் கொண்டு நின்ற சிவபிரான்போல.

அப்பெரும் புவன மெல்லா மழியுநா ளழியா தாகி
இப்புரங் கிரியும் யாறு மிருந்தவா றெவ்வா றென்னில்
முப்புர மொடுக்குங் காலை மூவர்வீ டென்ன மூன்றும்
ஒப்புற நின்ற தென்று மொருவன தருளான் மன்னே. 7

பொ - ரை : பெரும் புவனம் எல்லாம் அழியவும் திருக்குற்றாலமும், திரிகூடமலையும், சித்திராநதியும் அழியாமல் இருந்தமை எதுபோலும் எனின், ஒருவன் என்று வேதங்களால் துதிக்கப்படும் சிவபிரான் திருவருளால் முப்புரம் ஒடுங்கி நீறு ஆனகாலத்தில், சிவபூசையின் வழுவாது அந்நகர்க்கண் வாழ்ந்த சுதன்மன், சுபுத்தி, சுசீலன் என்னும் மூவர் இருப்பிடங்கள் அழியாதிருந்தபடி, இம்மூன்றும் நிலைத்து நின்றன என்க.

அரவணி சடையா னெங்கு மமர்கினு மருந்தேன் கங்கை
கரைபொரு திரிகூ டத்துக் கலையெலா நிரம்பா நிற்பன்
விரவுபே ருலக மெல்லாம் வெயில்விரித் தெழுந்த தேனும்
இரவிதன் கிரணங் காந்தத் திசைதரு பொலிவு போல. 8

பொ - ரை : ஞாயிறு தன் ஒளியை எங்கும் பரப்புமேனும் சூரியகாந்தக்கல் லின்கண் தன் கிரணத்தின் தன்மையைக் குறைவின்றி வெளிப்படுத்தும்; அது போல, சிவபிரான் எங்கும் நிறைந்திருப்பினும் தேனருவி பாயும் திரிகூடமலையில் தன் ஆயிரங் கலைகளும் விளங்க நிறைந்து விளங்குவான்.

தருமமே கருதித் தானந் தவம்பல புரிந்தா ரேனும்
திருவளர் திருக்குற் றாலச் சிவபிரான் சந்நி தானம்
துருவினர் பணிவார்க் கன்றித் தொலைத்திட லரிது பாவம்
பரிதிசன் னிதியி லன்றிப் பஞ்சினைச் சுடுமோ காந்தம். 9

பொ - ரை : சூரியகாந்தக்கல் ஞாயிற்றின்முன் அன்றிப் பஞ்சைச்சுடாது. அதுபோல, அறம் வேண்டும் எனக்கருதித் தானமும் தவமும் ஒருவர் புரியினும், சிவமகிமை விளங்கும் திருக்குற்றாலத்துச் சிவபிரான் திருமுன்பைத் தேடிவந்து பணிவார்க்கு அன்றிப் பாவங்கள் நீங்கா.

ஆல வாய்திருக் காளத்தி காசியண் ணாமலை திருவாரூர்
மேல மன்றகந் திருவிரா மீச்சுரம் விடுபணைக் கவராகச்
சூல பாணியார் மற்றுள தலமெலாந் துணர்த்தபைஞ் சினையாக
மூல மாகவே யுலகெலாந் தழைத்திட முளைத்தது குற்றாலம். 10

பொ - ரை : உலகத்தில் உள்ள தலங்களை ஒருமரமாக உருவகித்தால் மதுரை, திருக்காளத்தி, காசி, திருவண்ணாமலை, திருவாரூர், மேன்மையுள்ள சிதம்பரம், இராமேச்சுரம் என்பவை அடிமரத்தினின்று பிரியும் கவடுகள் எனலாம்; பிற சிவத்தலங்கள் எல்லாம் பூங்கொத்துக்களையுடைய பசிய கிளைகளாகும்: இவற்றின் மூலமாக உலகெலாம் நலமுற விளங்குவது திருக்குற்றாலமாகும்.

உடைய நாயகி திருமணக் குழுவின்மூ வுலகமு மொருங்கேறி
வடத னிப்புலந் தாழ்ந்துதெற் குயர்ந்தநாள் வானவர் தொகைக்கெல்லாம்
கடமு னிப்பிரா னொருவனே நிலைபெறக் காசினிப் பெரும்பாரம்
எடைத னக்கொரு தட்டெதிர் நின்றதா லிறைதிருக் குற்றாலம். 11

பொ - ரை : இமயத்தில் பார்வதி திருமணம் நிகழ்ந்த நாளில் மூவுலகமும் ஆங்கு ஒருங்குகூடியிருந்தமையால் வடபுலம் தாழ்ந்து தென்புலம் உயர்ந்தது.

தேவர் தொகைக்குச் சமமாக அகத்தியமுனிவர் ஒருவரே நிலேபெற, உலகமாகிய பெரும் பாரத்தைத் தாங்கும் தராசுகோலில் இமயம் ஒரு தட்டாக அதற்கு நேர் எதிர்த்தட்டாக நின்றது திருக்குற்ருலமே ஆகும்.

சங்க வீதிபொற் கந்தரந் திருமுகந் தமனியப் பெருங்கோயில்
துங்க வார்குழல் சண்பகா டவிபெருஞ் சொர்க்கமே திரிகூடம்
பொங்கு மாகட லுந்திபொன் மேகலே பொருந்துசித் திரகங்கை
நங்கள் நாயகன் மருவுகுற் ருலமா ஞாலநா யகியார்க்கே. 12

பொ - ரை: எம்தலேவன் சிவபிரான் அணேயும் திருக்குற்ருலம் என்னும் உலகநாயகிக்குச் சங்கவீதியே அழகிய கழுத்தாம்; பொன்வண்ணம் இயன்றுள்ள பெருங்கோயிலே திருமுகம்; சண்பகவனமே உயர்ந்த நீண்ட கூந்தல்; திரிகூடமே தனங்களாம்; பொங்குமாகடல் கொப்பூழ்; சித்திராநதியே அழகிய மேகலே.

மேவ ராவகி லாண்டமு மொடுக்கிமேல் விதித்தரு ளொருதேவன்
மூவ ராகவித் தலத்திடை முளேத்திட மூலமா நகராகி
யாவ ராகிலு முணர்தர வரியதா லிந்நகர்ப் பெரும்பான்மை
தேவ ராசிய மென்பனே பரமரா சியமென வுரைக்கேனே. 13

பொ - ரை: பொருந்திய ஆதிசேடனுல் தாங்கப்பெறும் உலகம் முழுதும் ஒடுக்கி மீளத் தோற்றுவிக்கும் ஒரு முதல்வன் மூவராகத் தோன்றுவதற்கு மூலமான நகராகி, யாவராலும் உணர்வதற்கு அரியதாக உள்ளது திருக்குற்ருல நகரின் பெருந்தன்மை; அதனேத் தேவரகசியம் என்பதா, பரமரகசியம் என்பதா, யான் துணியமாட்டாதவனுக உள்ளேன்.

வி - கு: ராசியம் - மறைவு: வடமொழிச் சந்தியாதல்பற்றி முதற்கண் இகரம் இல்லே.

வேத மாகிய குறும்பலா நீழலின் விரிஞ்சன்மால் வடிவாகிப்
பூத நாயக னெனவர சிருப்பவன் புவனநா யகிகாண
நாத மாகிய விண்முர சதிர்தர ஞானசித் திரமன்றில்
காத லாய்த்திரு நடம்புரி வதுதல மகிமையாற் களித்தன்றே. 14

பொ - ரை: இந்நகரில் சிவபிரான் வேதமாகிய குறும்பலா நீழலில் முற்காலத்துப் பிரமன் ஆகிப் பின் திருமாலாகி இஞ்ஞான்று பசுபதி எனப்படும் தன் சுதந்திரத் திருமேனிகொண்டு அரசு வீற்றிருக்கின்றுன்; இம்முதல்வன், உலக நாயகி காணும்படி ஞானமயமான சித்திரசபையில் நாதம் எனப்பெறும் தேவ துந்துபி முழங்க விருப்பத்தோடு நடனம் புரிவதையும் காண்கின்றேம்; அரசு வீற்றிருப்போன் நடம்புரிய மேற்கொண்டது இத்தலத்தின் பெருமையை எண்ணி அதனுல் வந்த மகிழ்ச்சியினுல்தான் இருத்தல்வேண்டும்.

இந்து வானிடை யிழிந்துகீழ் வழிந்தென வெழில்வரைத் திரிகூடம்
வந்து பாய்தரு திரையரு வித்துறை வரதன்மஞ் சனசாலே
நந்து வீதிசூழ் சினகரந் திருவுரு நண்ணுபா தலமாதி
ஐந்து வாய்தலு மைம்பொறி வடிவமா மாடலம் பரனுர்க்கே. 15

பொ - ரை: உலகெலாம் ஒழுங்குமுறையில் இயங்குவதற்குக் காரணமான திருநடனம் புரியும் சிவபிரானுக்குத் திருமஞ்சன சாலையாவது சந்திரன் ஆகாயத்தினின்றும் இறங்கிவந்து கீழே பொங்கி வழிவதுபோல, திரிகூடத்தில் வந்துபாயும் அலைகளையுடைய அருவித் துறையாகிய பொங்குமா கடலே ஆகும்; சங்கவீதியால் சூழப்பெறும் திருக்கோயிலே அவன்றன் திருமேனி; அருச்சுனன் வழிபட்ட இலிங்கமூர்த்தியின் பக்கத்துள்ளது ஆகிய பாதாளவாயில் முதலியவை அவனுக்கு ஐம்பொறிகள் ஆகும்.

ஆர்த்த மூலமு மீறுமில் லாதவ னண்டமூ லமுந்தேருக்
கீர்த்தி மூலமே கிளர்ந்தென நன்னகர்க் கிரித்தலை யலைமோதும்
தீர்த்த மூலமுந் தலத்தின்மூ லமுமுயர் சிவலிங்க வடிவான
மூர்த்தி மூலமு முணர்வரோ வுலகொரு மூன்றையு முணர்ந்தாரும். 16

பொ - ரை: சுட்டப்படும் பொருள்களுக்கு உள்ள காரணமும் இறுதியும் இல்லாத பரமசிவனுடைய, அண்டங்களைப் படைத்த பிரமனும் தெளியமாட்டாத, கீர்த்தியாகிய மூலப்பொருளே மேலெழுந்தாற்போல விளங்கும் குற்றாலத்தில் உள்ள திரிகூடத்தின் முடியில் அலைகளால் மோதும் சித்திராநதியின் மூலமும், தலத்தின் மூலமும் மூர்த்தியின் மூலமும் மூவுலகும் அறிந்தாரும் அறியமாட்டார்.

மனித ரோபெருந் தேவரோ வளர்மது கங்கையோ வானாறே
புனிதர் சண்பகச் சோலையோ கற்பகப் பொதும்பரோ புவிபோற்றும்
இனிய குன்றமோ சிவலிங்க வடிவமோ வென்றுபே தாபேதந்
தனையுணர்த்துவ தெம்மனோர்க் கெளியதோ சதுர்மறைக் கரிதாமேல். 17

பொ - ரை: திருக்குற்றாலத்தில் வாழும் மக்களோ, அன்றித் திருமால் முதலிய பெருந் தேவர்களோ, ஆங்கு உள்ள பொங்கு மதுகங்கையோ, ஆகாய கங்கையோ, ஆங்குள்ள சண்பகவனமோ தேவருலகக் கற்பகவனமோ, உலகம் போற்றும் இனிய திரிகூடமலையோ, சிவலிங்க வடிவமோ என்று பேதப்படுத்தி ஒன்றற்கொன்று உயர்வு கூறுவதோ. அன்றி ஒன்றே என அபேதமாகக் கூறுவதோ நான்மறைக்கும் அரியது; எம்மனோர்க்கு அஃது எப்படி எளிதாகும்?

புந்தியுற நினைந்தார்க்கே யருணகிரி தரிசனைக்கே புலியூர் பேறு
நந்துதவழ் திருவாரூர் பிறந்தார்க்கே யிறந்தார்க்கு நல்குங் காசி
எந்தையார் திருவருளாற் பிறந்தார்க்கு மிறந்தார்க்கு மெதிர்கண்டார்க்கும்
சிந்தையுற நினைந்தார்க்கு மழியாத கதிகொடுக்குந் திருக்குற்றாலம். 18

பொ - ரை: உணர்வொருங்கி நினைந்தார்க்கே அருள் வழங்குவது திருவருணை; சிதம்பரம் பேறுதருவது தன்கண் வந்து தரிசித்தார்க்கே; சங்கு ஊரும் திருவாரூர் தன்கண் பிறந்தார்க்கே அருள் நல்கும்; காசி தன்கண் இறுதிக் காலத்துத்தங்கி இறந்தார்க்கு முத்திதருவது; திருக்குற்றாலம், இறைவன் திருவருளால் தன்கண் பிறந்தார்க்கும் இறந்தார்க்கும் தரிசித்தார்க்கும் நினைத்தார்க்கும் அழியாத முத்தியைக் கொடுக்கும்.

பிறந்தவர்க்கு முத்திதருஞ் சிவமுரசஞ் செவிகேட்கப் பெறலாற் காட்சி
சிறந்தவர்க்கு முத்திதரு மெவ்வடிவுந் தெய்வவடி வாத லாலே
இறந்தவர்க்கு முத்திதரு மிறைதிருமந் திரஞ்செவியி லிசைக்கு மாற்றால்
அறந்தழைக்குங் குற்றால மறிந்துநினைப் பவர்க்குமுத்தி யரிதோ வம்மா. 19

பொ - ரை : திருக்குற்றாலத்திற் பிறந்தவர்கள் நாதமாகிய முரசு செவியிற் கேட்கப் பெறுதலால் முத்திபெறுவர்; அங்கு எவ்வடிவும் சிவவடிவு ஆதலால் கண்டவர்களும் முத்திபெறுவர்; திருக்குற்றாலத் தெல்லையாகிய ஐந்துகுரோசத் திற்குள் இறந்தவர் திருவைந்தெழுத்துக் கேட்கப்பெறுதலால் முத்திபெறுவர்; ஞானம் வளரும் திருக்குற்றாலத்தை அறிந்து நினைப்பவர்க்கும் முத்தி எளிதே ஆகும்.

எத்தலத்தி லெவர்புரிந்த பாதகமு மித்தலத்தி லெய்தத் தீரும்
கைத்தலத்தின் மழுவுடையார் குற்றாலந் தனிற்புரிந்த கடிய பாவம்
அத்தலநால் வகையிலறு மித்தலம்விட் டகன்றோரே லவனி யாதி
முத்தலத்திற் சென்றாலு முடியாது முடியாது முடியா தன்றே. 20

பொ - ரை : யாவர் எவ்விடத்துச் செய்த பாவமும் திருக்குற்றாலத்தில் வந்து சேர்ந்தால் கழியும்; சிவபிரான் சிறப்பாக விளங்கும் திருக்குற்றாலத்தில் செய்தபாவம் அங்கு நாத முரசுக் கேள்வி, வடிவுகளைக் காண்டல், திருவைந் தெழுத்து உபதேசிக்கப்பெறுதல், உணர்வு பொருந்த நினைத்தல் என்னும் நான்குவகையானும் நீங்கும்; இத்தலத்தைவிட்டு நீங்கின் நிலவுலகம் சுவர்க்கம் பாதலம் என்னும் மூவிடஞ் சென்றாலும் பாவம் அறுவதில்லை.

வன்னிதா னம்புகுமுன் மானததா னந்தோய மாட்டா ரேனும்
சென்னிதா னந்தொடுத்துத் திகழுமிரு வகைத்தானந் தேவ தேவன்
சன்னிதா னமுனிரண்டு சதுட்டையத்தா லகன்றோடுஞ் சகல பாவம்
எந்நிதா னமுநிதியும் பெற்றாலுங் குற்றால மிகவார் மேலோர். 21

பொ - ரை : மக்கள், இறுதியாக நெருப்பில் இடும் நன்காட்டை அடை வதற்குமுன் மானத ஸ்நானம் செய்யமாட்டாரேனும், தலையாகிய இடம் முதலாக நூல்களில் விளங்கும் இருவகையான ஜலஸ்நானம், பஸ்மஸ்நானம் என்பவற்றை யும் செய்யாரேனும், பிறவாயாக்கைப் பெரியோனுடைய திருமுன்பு எட்டு உறுப் பால் வணங்கின் எல்லாப்பாவங்களும் நீங்கிவிடும்; ஆதலால், உயர்ந்தோர் எந்தப் பொற்காசும், பொற்குவையும் பெற்றாலும் திருக்குற்றாலத்தை நீங்கிச் செல்லார்.

வி - கு : தானம் - இடம், ஸ்நானம், சதட்டையம் நான்கு. மானததானம்- பிராணாயாமம் செய்து மனத்தால் மூலமந்திரத்தைக் கணித்து அதனாற் கலக்கப் பட்ட குண்டலி சத்தியினின்றும் பெருகும் அமுததாரையில் மூழ்குவதாகப் பாவித் தல். இது இருவகை ஸ்நானங்களுக்குப் பின் செய்யத்தக்கது.

ஜலஸ்நானம் - வெளிப்படை. பஸ்ம ஸ்நானமாவது மந்திரிக்கப்பட்ட திருநீற்றால் தலைமுதற்கொண்டு பாதமளவாக ஹூம்பட்டை இறுதியில் உடைய அஸ்திர மந்திரத்தால் உத்தூளனஞ் செய்து, முறைப்படி முக்குறித் திருநீறு அணிதல்.

உம்மையுறு பாதகங்கள் பஞ்சுபோற் பறக்குமந்த வூதை யாலே
அம்மைதரு மலச்சேறு கழுநீராக் கழுவும்வட வருவித் தீர்த்தம்
இம்மைவினை யிருளோட்டுந் திரிகூடப் பரஞ்சுடரை யிறைஞ்சு வார்க்கு
மும்மையுந்தீர்ந் தந்தியத்தி லருடருஞ்சன் னிதியழியா முத்தி நல்கும். 22

பொ - ரை: திருக்குற்றாலத்தில் வீசும் தென்றல் முள்செய்த வினைகளைப் பஞ்சுத்துய்போலப் பறக்கச் செய்யும்; மறுபிறப்பைத் தரும் மாயையாகிய சேற்றை வடஅருவி ஸ்நானம் கழுவும்; சிவபிரான் பரஞ் சுடராதலால் திரிகூடத்தை அடுத்தார்க்கு இம்மையில் வினை ஏறுவதற்குக் காரணமான மலவிருளை ஓட்டும் அப்பெருமான் சந்நிதி; இங்ஙனம், திருக்குற்றாலத்துறை இறைவன் திருமுன்பு மும்மலமும் அகலுதலால், உடலின் முடிவில் அவன் திருவருள் அழியாத முத்தியின்பத்தை நல்கும்.

மந்தமா ருதமீர வாளோச்சி வீசுநெடு வரைத்தண் சாரல்
சிந்துநீர் வடவருவி சிலைபூட்டி யம்பிறைக்குஞ் செழுந்தேன் பில்கும்
பைந்தளிர்ச்சண் பகச்சோலை பாரதண்டங் கொடுபுடைக்கும் படர்திக்கெல்
இந்தநக ருறைவார்மேல் வந்தவினை தரித்துநிற்ப தெந்தவாறே. [லாம்

பொ - ரை: மெத்தென ஊறும் காற்று குளிர்ந்த ஒளியைத் தோற்றுவித்து வீசும் (துண்டுபடுத்தும் வாளைச்செலுத்தி வீசும்); நீண்ட தண்ணிய மலைச்சாரல் திவலைகளைச் சிதறும் வட அருவி வானவில்லைக் காட்டித் தண்ணீரை இறைக்கும் (அழிக்கும் இயல்புள்ள வட அருவி வில்லில் அம்புகளைப் பூட்டி இறைக்கும்); நல்ல தேன்மிகும் சண்பகச் சோலை பெரிய யானை செல் வழிகளைக்கொண்டு எல்லாத்திசைகளிலும் வளர்ந்து மேற்செல்லும் (வலிய தண்டாயுதங்கொண்டு திசையனைத்திலும் அடிக்கும்); இந்த நகரில் வாழ்வார்மேல் தாக்கவந்த வினை எப்படி மேற்சொல்லியவற்றை எதிர்த்து நிற்கும்? நில்லாது ஓடும்.

வேதாளம் பாடவொரு வெளியிலா டியபெருமான் வேதம் பாடப்
பாதாள வாய்தலுறை பணியரசுங் குறுமுனியும் பணிசெய் தேத்த
மாதாள முமைபயிற்ற வரிபிரமர் முடிதாழ்ப்ப வானோர் பேரி
ஆதாளி யுறநடிக்குஞ் சிற்பொதுவுஞ் சிற்பரையு மதன்பா லன்றே. 24

பொ - ரை: பூதகணம் பாடப் பெருவெளியில் கூத்தியற்றும் சிவபிரான் வேதம் ஒலிக்க, பிலத்துவாரத்தில் உள்ள ஆதிசேடனும் அகத்திய முனிவரும் பணிந்துபாட, உமையம்மை உயர்ந்த தாளம் ஏந்த, திருமாலும் நான்முகனும் வணங்கி நிற்க, தேவர் பேரி முழக்கம் பொருந்த நடிக்கும் ஞான மன்றமும் ஞான மயமான பராசத்தியும் திருக்குற்றாலத்தில் அல்லவா உள்ளன!

இந்திரனூர்க் காதாரங் கருவூர்க்கு நமனூர்க்கு மெட்டாத் தூரம்
சந்திரர்சூ ரியர்முதலோர் பதங்களுக்குத் துருவபதந் தனிவேற் கந்தர்
கந்தமா தனமாதிக் கணபதிக்குக் கயிலாயங் கயிலை யார்க்குச்
சிந்தைசேர் சிவலோகந் தெளிந்தார்க்குப் பரமபதந் திருக்குற் றாலம். 25

பொ - ரை: திருக்குற்றாலம் சுவர்க்கத்திற்கு மூலம், பிறப்பைத்தரும் இடத்திற்கும் இறந்தோர் செல்லும் ஊர்க்கும் எட்டாத தூரத்தில் உள்ளது,

சந்திரர் சூரியர் முதலோர் பதங்களுக்குத் துருவ சக்கரம், ஒப்பற்ற வேல்முருக னுக்குக் கந்தமாதனம் முதலிய மலை, மூல விநாயருக்குத் திருக்கயிலை, சிவபிரா னுக்குச் சிவலோகம், மெய்யுணர்ந்தார்க்குப் பரமபதம்.

புவலோகத் திருப்பவர்கள் சுவலோகம் விரும்புவர்மேற் போகம் வேட்டுச்
சுவலோகத் திருப்பவர்சத் தியலோகம் விழைந்திருப்பர் தொலையா வேதன்
தவலோகத் திருப்பவர்கண் மாலுலகம் விரும்புவரித் தனைக்கு மேலாம்
சிவலோகத் திருப்பவருந் திரிகூடத் திருக்கும் வரஞ் சிந்திப் பாரே. 26

பொ-ரை: புவலோகம், சுவலோகம், சத்தியலோகம் (பிரமன் உலகம்), திருமால் உலகம் என்பவை ஒன்றற்கொன்று மேலானவை; கீழ்க்கீழ் உலகத்தில் உள்ளவர் மேல் மேல் உலகத்தை அடைய விரும்புவர்; எல்லாவற்றுக்கும் மேலானது சிவலோகம்; சிவலோகத்தில் உள்ளாரும் திருக்குற்ருலத்தில் இருக் கும் மேன்மையை எண்ணுவர்.

கயிலாயத் தினிலுறையுஞ் சீகண்ட பரமனுயர் கயிலை நீங்கி
மயிலாய சாயன்மட மங்கைகுழல் வாய்மொழியை மணந்து மேருச்
சயிலாதி பொதியில்வரைத் தலங்களழி யினுமழியாச் சங்கக் கோயில்
எயிலாக விருப்பதனுற் பூலோக கயிலாய மிதுவே யன்ரே. 27

பொ-ரை: திருக்கயிலையில் தங்கும் திருநீலகண்டப் பெருமான் அதனை விட்டு, மயில்போன்ற சாயலுடைய குழல்வாய் மொழியம்மையை இங்கு மணந்து மேருமலை முதலாகப் பொதியில்வரையுள்ள தலங்கள் அழியினும் தான் அழியாது நிலைபெறும் சங்க வடிவத்தில் இயன்ற திருக்கோயிலே அரணுக வீற்றிருத்தலால் நிலவுலகக் கயிலாயம் திருக்குற்ருலமே என்பது தெளியப்படும்.

சிவமதுகங் கையுங்கடவுட் செண்பகத்த டாசமுமேற் சித்தர் வானேர்
தவமுனிவ ருவந்தாடும் வடவருவித் திரிகூடச் சயிலச் சார்பும்
நவநிதியுந் திரைகொழித்துக் கதிகொடுக்குஞ் சித்திரமா நதியுங் காண்பான்
புவனமிசை பிறக்கவின்னந் தவம்புரிவர் பொன்னுலகிற் புகுந்து ளோரும்.

பொ-ரை: இங்குள்ள சிவமதுகங்கை, தெய்வத்தன்மையுள்ள செண் பகத்தடாகம், மேலே சித்தரும் தேவரும் தவமுனிவரும் நித்தம் மகிழ்ந்து முழுகும் வட அருவி, திரிகூடமலைச் சாரல், அலைகள் ஒன்பது மணிகளையும் கொழிக்கும் சித்திராநதி என்பவற்றைக் காணுதற் பொருட்டு, சுவர்க்கம் புகுந்தோரும் மீள இவ்வுலகிற் பிறத்தற்காகத் தவம்புரிவர்.

பொங்குமா கடலருவிப் புண்ணியதீர்த் தமுங்கடவுட் பூட்டா வில்லும்
சங்கவீ தியுந்தாணு மாலயத்தொட் டிலுமாதி சத்தி யான
நங்கைபீ டமும்வேதக் குறும்பலவு நன்னகரு நயப்பா லன்ரே
எங்கணு யகர்பிரமா வாகிநெடு மாலாகி யிருந்தா ரென்றும். 29

பொ-ரை: மலை அடிவாரத்தில் அருவிவீழ் இடத்திலுள்ள பொங்குமா கடல் தீர்த்தமும், தெய்வத்தன்மையுள்ள, அருவியில் புலப்படும் எழுநிற வில்லும், சங்கவீதியும், மும்மூர்த்திகளும் குழந்தைகளாகக் கிடத்தற்குரிய தாணுமாலயன்

தொட்டிலும், ஆதிசத்தியான அம்மை பீடமும், வேதமாகிய குறும்பலாவும், நல்லதிருக்கோயிலும் இங்கிருத்தலின், அவற்றின்மேல் உள்ள விருப்பத்தால் சிவபிரான் தான் யோகியாதலின், அவ்வடிவின் நீங்கிப் பிரமனுகவும் திருமாலாக வும் நெடுநாள் இருந்தார்.

பிதுர்கண்டந் தீர்த்தபுரஞ் சிவத்துரோ கந்தீர்த்த பெருமை மூதூர்
மதுவுண்டா னுயிர்மீட்ட புரம்பவர்க்க மீட்டபுரம் வசந்தப் பேரூர்
முதுகங்கை வந்தபுரஞ் செண்பகா ரணியபுர முத்தி வேலி
நதிமூன்றின் மாநகரந் திருநகர நன்னகர ஞானப்பாக்கம். 30

வேடன்வலஞ் செய்தபுரம் வேழம்பூ சித்தபுரம் வேத சத்தி
பீடபுரஞ் சிவமுகுந்த பிரமபுர முனிக்குருகும் பேரூர் தேவ
கூடபுரந் திரிகூட புரம்புடார்ச் சுனபுரம்பொற் குறும்ப லாவி
சேடபுரம் எனஇருபத் தொருநாமம் பெற்றபதி திருக்குற் ருலம். 31

பொ - ரை: பிதுர்கண்டந்தீர்ந்தபுரம், சிவத்துரோகந்தீர்த்தமூதூர், மதுவுண்டான் உயிர்மீட்டபுரம், பவர்க்கம் (நரகம்) மீட்டபுரம், தென்றற்பேரூர், முதுகங்கைவந்தபுரம், செண்பகாரணியபுரம், முத்திவேலி, முந்நதிபுரம், திருநகரம், நன்னகரம், ஞானபுரி,

வேடன் வலம் வந்தபுரம், யானைபூசித்த புரம், சத்திபீடபுரம், மும்மூர்த்திபுரம், முனிக்குருகும் பேரூர், தேவகூடபுரம், திரிகூடபுரம், புடார்ச்சுனபுரம், குறும்பலாத் திருநகர் என இருபத்தொரு பெயர்களை உடையது திருக்குற்ருலம்.

வற்ருத வடஅருவி படிந்துசங்க வீதிதனில் வலங்கொண்டேகிப்
பற்ருத பிறைமவுலிப் பரமனையுந் தேவியையும் பணிந்து போற்றிக்
கற்ருர்க ளுடன்கூடிக் கண்ணுதல்சீர் பாடிஒரு கடிகைப் போது
குற்ருலத் திருந்தவர்கள் கயிலாயத் திருப்பர் கற்ப கோடிகாலம். 32

பொ - ரை: வட அருவியில் முழுகி, சங்கவீதியில் வலம்வந்து, இளம் பிறை அணிந்த முதல்வனையும் தேவியையும் கண்டு தொழுது துதித்து, அவன் பொருள்சேர் புகழைக்கற்றறிந்த பெரியோர்களுடன் கூடி அவன் சீர்பாடி ஒரு நாழிகை காலம் திருக்குற்ருலத்தில் தங்கியோர் திருக்கயிலையில் கோடிகற்பகாலம் இருப்பர்.

பாவரா கிலுங்கொலைசெய் பழையரா கிலும்வேதப் பலவின் நீழல்
மூவராய் முளைத்தபிரான் குற்ருலம் என்றொருக்கால் மொழிவ ராகில்
ஏவரா கிலும்புவன வேந்தராய் உலகாள்வர் இருகாற் சொல்வார்
தேவராய் வீற்றிருப்பர் முக்காலும் எடுத்துரைக்கிற் சிவமே யாவர். 33

பொ - ரை: பாவங்களைச் செய்தோர்,கொலை செய்யும் கட்குடியர் போன்ற யாவராயினும், வேதவடிவக் குறும்பலா நீழலில் மூவராய் முளைத்தபிரான் என்று ஒருமுறை சொன்னுல், அந்தப் பாவங்கள் நீங்கி இவ்வுலகில் அரசுரிமையைப் பெறுவர்; இருமுறை சொல்லின் தேவராய் மேலுலகில் விற்றிருப்பர்; மும்முறை சொல்வோர் சிவத்துவவிளக்கம் பெறுவர்.

குற்ருலம் என்ருெருக்கால் நினைப்பவர்க்குப் பாவமொரு கோடி தீரும்
குற்ருலம் என்ருெருக்கால் உரைப்பவர்க்குப் புண்ணியங்கள் கோடி சேரும்
குற்ருலந் தனிலிருந்து செய்யுமொரு தவமனந்த கோடி யாகும்
குற்ருலம் கண்டுதொழக் கூடினர்க்கே பரமபதம் கூடு மாதோ. 34

பொ - ரை: திருக்குற்ருலம் என நினைப்போர்க்கு அளவில்லாத பாவங்களும் தீரும்; திருக்குற்ருலம் என்று ஒருமுறை சொன்னல் அளவற்ற புண்ணியங்கள் சேரும்; அத்தலத்தில் இருந்து செய்யும் ஒரு தவம் பல கோடியாக வளரும்; அங்குச் சென்று இறைவனைக் கண்டு தொழப்பெறுவார்க்குப் பரமபதம் கிடைக்கும்.

வேறு

முத்தராய் விடுத லாலே முக்கணர் திருக்குற் ருலம்
பத்தராய் மேவு வார்க்குப் பரிசன வேதி யாகும்
இத்தரா தலத்திற் காண்போ ரியாவரு முயர்சங் கற்ப
சித்தராய் விடுத லாலே தெரிசன வேதி யாமால். 35

பொ - ரை: அன்பாய்த் திருக்குற்ருலம் மேவினரைச் சீவன்முத்தர் ஆக்குகின்றது அத்தலம்; ஆதலால் அது பரிசவேதி (தொடுவோரை உயர்த்திமாற்றுவது) ஆக உள்ளது. இவ்வுலகில் உள்ள யாரும் அதனைக்கண்டால் தாம் நினைந்தவாறு பேறுபெறும் சங்கற்ப சித்தராவர்; அதனல், அத்தலத்தைத் தரிசனவேதி எனலும் தகும்.

வி - கு: தான் தொட்டபொருளை உயர்ந்த பொன்ஞக மாற்றவல்லது பரிசவேதி; தன்னைக் கண்டோரை மேம்படமாற்றுவது தரிசனவேதி; இவை இரண்டும் மணிகள்.

ஓரிடைப் பன்னி ராண்டு ணுறக்கமற் றிருந்தான் பேறு
சீருடைத் திரிகூ டத்திற் சிவநிசி யொன்றே நல்கும்
வாரிசூழ் நிலத்திற் கோடி வளர்சிவ நிசியா லெய்தும்
பேரியற் பேறு மீங்கோர் பின்னுவாத் திங்க ணல்கும். 36

பொ - ரை: திரிகூடத்தில் ஒரு சிவனிரவு ஊண் உறக்க மின்றித் தவம் புரிதல் பிறிதோர் இடத்தில் பன்னிரண்டாண்டு ஊண் உறக்கம் இன்றித் தவஞ் செய்பயனைக் கொடுக்கும்; இங்கு அமாவாசியோடு கூடிய ஒரு திங்கட்கிழமை செய்யும் வழிபாடு பூவுலகில் வேறு எங்காயினும் கோடி சிவராத்திரி விரதம் மேற்கொண்ட பயனை ஒருங்கே தரும்.

ஆதுலர் சாலை சோலை யாவின்வா யுறைகண் ணடி
ஓதுவார்க் குணவு தண்ணீ ருறுபந்தர் மடந்த டாகம்
கோதிலா வுரிஞ்சி சுண்ணங் கொலையுயிர் விடுத்த லேறு
மாதலைக் கெண்ணெய் கண்ணேய் மருந்துநன் மகப்பால் சோறு. 37

அறுசமை யத்தோர்க் குண்டி யழிந்தோரை நிறுத்த லட்டுண்
பிறரறங் காத்த லையம் பெண்போக மகப்பே றுய்த்தல்
நறியதீன் விலங்கூண் வண்ணா னாவிதன் சிறைச்சோ றுதி
மறுதலத் தறமெண் ணான்கு மனையறத் திவ்வூர் நல்கும். 38

பொ - ரை: வறியவர் விடுதி, சோலை, பசுவிற்குப்புல், கண்ணாடி, சமய நூல் ஓதுவார்க்கு உணவு, தண்ணீர்ப் பந்தர், மடம். தடாகம், மந்தைக்கல், சுண்ணாம்பு, கொலைசெய்யப்படும் உயிரை மீட்டல், ஏறுவாங்கி விடுதல், தலைக்கு எண்ணெய், கண்ணேய்க்கு மருந்து, பால் பெருத குழந்தைகளுக்குப் பால், சோறு, அறுசமையத்தோர்க்கு உணவு, கடன் முதலியவற்றால் நிலைகெட்டாரைக் காத்தல், சத்திரம், பிச்சை கொடுத்தல். திருமணஞ் செய்வித்தல், மகப்பேற்றிற்கு உதவி, நல்ல தின்பண்டம், விலங்கிற்கு உணவு, வண்ணான், நாவிதன், சிறையில் உள்ளார்க்குச் சோறு முதலியவை எனப் பிற இடங்களில் இயற்றப்படும் முப்பத்திரண்டு அறப்பயனையும், திருக்குற்றாலம் தன்கண் உள்ள இல்வாழ்வார்க்குக்கிடைக்கச் செய்யும்,

சிலபல தலத்தின் மாதப் பட்டினி விரதஞ் செய்வோர்
பலனெலாந் திரிகூ டத்திற் பகலுண வொழித்தார்க் கெய்தும்
சலமறப் பிறவூர் மேவிச் சாந்திரா யணஞ்செய் தோர்கள்
நலமொரு நிசியூண் விட்டு நன்னக ருறைந்தார்க் கெய்தும். 39

பொ - ரை: பிற தலங்களில் ஒருமாதகாலம் உபவாசம் இருத்தற்பயனை இத்தலம் ஒருபகல் உபவாசம் செய்தார்க்கே கொடுத்துவிடும்; ஓர் இரவு உணவின்றி இங்கு நோற்பார் சாந்திராயண விரதப் பயனைப்பெறுவர்.

வி - கு: சாந்திராயண விரதமாவது பிறை வளருந்தோறும் ஒவ்வொரு பிடிகூட்டி உண்டு, தேயுந்தோறும் ஒவ்வொருபிடி குறைத்து உண்டு, அமாவாசியில் உபவாசம் இருத்தல்.

ஒருபொழு தருந்தி யோராண் டொருங்குநோற் றிருந்தார் பேறும்
இருபொழு தருந்தி யோர்நா ளித்தலத் திருந்தார்க் கெய்தும்
பருவமொன் றயலூர் நோற்கும் பலபல விரதப் பேறு
தருமொரு சோம வாரந் தன்னிலித் தலத்தின் மாதோ. 40

பொ - ரை: ஒருநாள் இத்தலத்திலிருந்து இருபொழுது உண்டு இறைவனை வழிபட்டார்க்கு ஓராண்டுகாலம் ஒருபொழுது உண்டு நோற்ற பயன் கிடைக்கும்; ஒரு சோமவாரம் இத்தலத்து உறைதல் பிற ஊர்களில் இரண்டு மாதம் நோற்ற பல விரதப் பேற்றினை எய்துவிக்கும்.

வி - கு: பருவம் - ஓராண்டும் ஆம்.

காமர்பூங் கொடியார் மோகங் கடிந்துடை காவி சாத்தி
மாமனத் துறவு பூண்டு மறுதலத் திருந்தார் பேறு
தேமலர் சயன மேவித் தெரிவைய ருடனே யிவ்வூர்ப்
பூமனை வாழ்க்கை யெய்தும் புண்ணியர்க் கெய்து மாதோ. 41

பொ-ரை: திருக்குற்றாலத்தில் இல்லறம் மேற்கொண்டார்க்குத் துறவறம் மேற்கொண்டார் பெறும் பேறு கிட்டும்.

ஐவகைக் கனலி நாப்ப ணைம்புல னடக்கி யோராண்
டுய்வகைத் தவங்க ளாற்றி யொருதலத் திருந்தார் பேறு
கைவரை மழுவ லாளன் கருணையஞ் செழுத்தை யுன்னித்
தெய்வமாப் பலவி னீழற் சிறுபொழு திருந்தார்க் கெய்தும். 42

பொ-ரை: குறும்பலா நீழலில் சிறிதுநேரம் சிவத்தியானத்துடன் திருவைந்தெழுத்தைக் கணித்து இருந்தவர் ஓராண்டு அளவு ஐவகை அங்கி நடுவில் இருந்து தவம்செய்தார் பேற்றினை எய்துவர்.

அடைதர வரிய கானு மருவரைப் புறமு நாடும்
புடைபடப் பல்யாண் டோடிப் பூவலம் வருவார் பேறு
சடைமிசை மதியஞ் சூடுஞ் சண்பக வனத்தி லெம்மை
உடையவன் சங்க வீதி யொருவலம் வருவார்க் கெய்தும். 43

பொ-ரை: சண்பகவனத்தை உடைய பிறைமுடிப் பெருமானது சங்க வீதியை ஒருமுறை வலம் வருவார் காடும் மலையும் நாடும் பிற்படும்படி பல் யாண்டுகள் வருந்திப் பூவுலகை வலம் வருவார் பேற்றினை எளிதின் எய்துவர்.

பூதானம் பரிதேர் யானை பொன்வெள்ளி விளைவு கன்னி
காதானந் தயில மெள்ளுக் கலைபணி யடிமை யில்லங்
கோதான மன்ன தானங் கூறுமெண் ணிருதா னத்தின்
ஏதான பலனு மன்ன மிட்டுண்பார்க் கருளு மிவ்வூர். 44

பொ-ரை: இந்நகரம் முறைப்படி விருந்தினரை உண்பித்துப் பின் உண்பார்க்கு, அவ்வறம் ஒன்றே பூதானம் முதலாகக்கூறப்படும் பதினாறு தானங் களில் எந்தத் தானத்தின் பயனையும் கொடுக்கும்.

வி-கு: விளைவு - விளைநிலம். ஏது ஆனபலனும் - எதனாலாகியபயனையும்.

சொரிதழ லங்கிட் டோமஞ் சோதிசேர் சோதிட் டோமம்
புரிதரு மிராச சூயம் பொங்கழற் சோம யாகம்
பரிமக முதல வேள்வி பலதலத் தியற்றும் பேறு
பெருகுமித் தலத்து மாதுர் பிதுர்யாகஞ் செய்வோர்க் கெய்தும். 45

பொ-ரை: இத்தலத்தின்கண் தாய்தந்தையர்களின் நன்மையின் பொருட்டுச் செய்யப்படும் வழிபாடு, வேதவிதிப்படி அக்கினிட்டோமம், சோதிட் டோமம், இராசசூயம், சோமயாகம், அசுவமேதம் என்னும் வேள்விகளை இயற்றிய பயனைக் கொடுக்கும்.

எண்பல வனங்க டோறு மிலைதின்றுங் கனிகாய் தின்றும்
உண்பன வொழிந்துத் தீமே லூசிமே லொருகான் மேலா
வண்பல கால மெல்லாம் வருந்தினர் தவஞ்செய் பேறு
செண்பக வனத்தி லோர்நாட் செயுந்தல வாச நல்கும். 46

பொ - ரை: இத்தலத்திற்கு யாத்திரையாக வந்து ஒருநாள் தங்கிச்செல்வோர்க்கு, வனத்தில் இலை முதலியவற்றை உண்டு வாழ்ந்து நெருப்பின் இடையிலும், ஊசிமேலும் ஒற்றைக்காலில் நின்று உடம்பை வருத்திச் செய்யும் தவப் பேற்றினை எளிதில் அச்செயலே கொடுக்கும்.

பத்தராய்ப் பணிவார்க் கேனும் பலதவம் புரிவார்க் கேனும்
உத்தர வயன மெல்லா மொருதலந் தருபே றிவ்வூர்ச்
சித்திரை விழுவே நல்குந் தெக்கிணு யனப்பே றெல்லாம்
அத்தர்தந் திருக்குற் றாலத் தைப்பசி விழுவே நல்கும். 47

பொ - ரை: சித்திரை விஷுவில் இங்குப்பத்தராய்ப் பணியினும், தவம் புரியினும் உத்தராயணம் முழுவதும் அதுசெய்த பயன் கிட்டும்; அங்ஙனமே, ஐப்பசி விஷுவில் பணிதலும் தவம்புரிதலும் தக்ஷிணாயனம் முழுதும் அவற்றைச் செய்த பயனைப்பெறுவிக்கும்.

அத்தனங் கிருந்து நீங்கா தகிலமு மியற்ற லாலே
எத்தலம் வதிந்தார் பேறு மெத்தவம் புரிந்தார் பேறும்
உத்தர கங்கை யாதி யுயர்நதி படிந்தார் பேறும்
சித்திர நதிசூழ் சைவத் தெய்வமாத் தலமே நல்கும். 48

பொ - ரை: சித்திராநதி சூழும் திருக்குற்றாலத்தில் சிவபிரான் நீக்கமின்றி எழுந்தருளியிருந்து உலகு அனைத்தையும் படைத்தருளினன்; அதனால், அத்தலம், உலகிலுள்ள மூர்த்தி தலம் தீர்த்தம் எதிலும் எவற்றாலும் கிடைக்கும் பயனை ஒருங்கே தரும்.

திருவளர் திருக்குற் றாலந் திரிகூட மென்னு நாமம்
அருவியங் கிரிக்குண் டாகி யருட்பெருந் தலத்துக் காகி
மருவுபே ருலக மீன்ற வல்லிபா லெம்மை யாளும்
ஒருவனுக் குரிய தென்று லுணர்த்துதற் கெளிய தாமே. 49

பொ - ரை: தன்வயப்படுத்தி இன்புறுத்தும் திருக்குற்றாலம் என்னும் பெயர் தலத்திற்கும்; திரிகூடம் என்னும் பெயர் அருவிபாயும் மலைக்கும், பெயர்களாகி, இரண்டும் பிறப்பின்றி அமைந்து உமையொரு கூறுடைய சிவபிரானுக்கு உரியவாயின், அத்தலமகிமையை முற்றக்கூறுதல் எளியது ஆகாது.

## பெயர் விளக்கம்

### வேறு

என்னலு மின்னகர்க் கிசையு நாமங்கள்
முன்னர்மூ வேழென முறையிற் கூறினை
அன்னவை விரித்துரைத் தருளு வாயெனச்
சொன்னமா முனிவர்க்குச் சூதன் சொல்லுவான். 50

பொ - ரை: இங்ஙனம் சூதமுனிவர் கூற, கேட்ட முனிவர்கள் இத்தலத்திற்கு உரியனவாக முன்னர்க்கூறிய இருபத்தொரு திருநாமங்களை விரித்துக் கூறும்படி வேண்டிக்கொண்டனர்.

தொன்மையாந் தீவினைத் தொடர்ச்சி குவ்வதாம்
தன்மையாப் போழ்ந்தெரி தழனுத் தாலமாம்
நன்மையா ரியந்தமிழ் நாமம் பெற்றது
சென்மநோ யறுப்பது திருக்குற் றாலமே. 51

பொ-ரை: குற்றாலம்: கு — வினைத்தொடர்ச்சி; தாலம் — அவ்வினையை நீறுக்கும் அக்கினியின் நாக்கு. கு + தாலம் = குத்தாலம், குற்றாலம் என நின்றது. வினைத்தொடர்ச்சியை நீக்கிப் பிறப்பறுப்பது என்பது திருக்குற்றாலம் என்னும் பெயர்ப்பொருள். கு — வடமொழி. தாலம் — தமிழ்மொழி.

கடாக்கயம் பூசைசெய் கடவுள் வாழ்பதி
நடாத்துசீர் நற்கதி யெவர்க்கு நல்கலால்
விடாப்பெரு நன்னகர் நாம மேவுமால்
புடார்ச்சுன புரத்தியல் புகலக் கேண்மினே. 52

பொ-ரை: மதநீரை உடைய யானை வழிபட்ட பெருமான் உறையும் பதியாகிய திருக்குற்றாலம் தன்னைச் சார்ந்தார் அனைவர்க்கும் சிறப்புள்ள நற்கதியைக் கொடுக்கும் காரணம் பற்றி "விடாப்பெரு நன்னகர்" (எல்லோரையும் ஏற்றுக் கொள்ளும் பெருந்தலம்) என்னும் பெயரை உடையது. இனி, இதற்குப் புடார்ச்சுனபுரம் என்னும் பெயர் உள்ளது; அதனியல்பையும் கூறுவோம்; கேண்மின்.

## புடார்ச்சுனப் பெயர் விளக்கம்

### வேறு

பராசர னருளாற் கந்தி பரிமள கந்தி யாகித்
தராதலம் புரக்கு நீதிச் சந்தனு ராசன் வேட்ப
நராதிப னரசுக் கேற்ப நன்மக வீன்று ளன்னோன்
அராகமுற் றெருங்கு வேட்டா னம்பியம் பாலி தம்மை. 53

பொ-ரை: கங்கைக்கரையில் மீனவர் குலத்தில் தோன்றிய மச்சகந்தி என்பவள் பராசர முனிவர் திருவருளால் பரிமளகந்தியானபின் நில உலகை ஆண்டுவந்த மதிக்குல மன்னன் சந்தனு வேந்தனை மணந்து அரசகுலத்துக்கு ஏற்ப விசித்திர வீரியன் என்னும் குமாரனைப்பெற்றாள். அவன் ஆசைமிகுதியால் அம்பிகை அம்பாலிகை என்னும் இருமனைவியரை ஒரேகாலத்தில் மணந்து வாழ்ந்தான்.

பேட்டன நடையார் மக்கட் பெறுதன்முன் றலைவன் வீந்தான்
வீட்டும னரசு வேண்டான் வியாதனை வரித்தாள் கந்தி
கோட்டமின் முனிபா லன்னோர் குணமுறுப் புணர்ச்சி யாலே
நாட்டமி லரசைப் பாண்டு வேந்தனை நல்கினரே. 54

பொ-ரை: அன்னம் போன்ற நடையையுடைய தேவியர் வயிறுவாய்த்தற்குமுன் அரசன் இறந்தான். சந்தனுவின் மூத்தகுமாரனை வீடுமன்தான் மேற்கொண்ட விரதங்காரணமாக முடிசூட்டிக்கொள்ள விரும்பவில்லை. அதனால், பரிமளகந்தி தன்மகனை வியாதனைத் தருமசந்தானம் தருவதற்கு வருவித்தாள்.

தாய்ச்சொல் கடவாத வியாசர்பால் அம்பிகை அம்பாலிகை என்பார் மனம் ஒத்த புணர்ச்சி செய்யாமையால் அவர்கள் முறையே கண்ணில்லாத திருதராட்டினனை யும் நோயுள்ள பாண்டுவையும் அரசகுமாரர்களாகப் பெற்றனர்.

நோக்கிலான் மனைவி தாருத் தழுவிநூற் றுவரைத் தந்தாள்
ஆக்கமாம் பாண்டு பாரி யைவருக் கைவ ரீன்ருள்
மாக்குலத் துணைவ ராயு மகிதலம் புரக்கு மாசை
தாக்கிநூற் றுவரோ டைவர் தங்களிற் பகைவ ரானர். 55

பொ - ரை: அவ்விருவருள் திருதராட்டிரன் மனைவி காந்தாரி கருவுற்ற தன் வயிற்றை உலக்கையால் தாக்கிக்கொண்டமையால் நூறுபிள்ளைகளைப் பெற்ருள், துரியன் முதலாக. ஆக்கம் உள்ள பாண்டுவின் தேவி குந்தி இயமன் முதலிய ஐந்து தேவர்களுக்குத் தருமன் முதலிய ஐவரை மக்களாகப்பெற்ருள். சிறந்த அரசகுலத்து உடன்பிறந்தோராயினும், நிலவுலகை ஒருங்கே ஆள வேண்டும் என்னும் ஆசையால் இருதிறத்தரும் உந்தப்பட்டுத் தமக்குள் பகை உணர்ச்சி உடையரானர்.

வசுமக னகி நந்தன் மனைபுகூஉப் புள்ளுஞ் சோகும்
விசைபெறு சகடு மாய்த்து வெறிமரு திடந்து வேழம்
அசைவுற மல்லர் வீழக் கஞ்சனை யடர்த்த கண்ணன்
இசைவினுற் பாண்டு மைந்த ரிகலினு மிளையா ரென்று. 56

பொ - ரை: திருமால் வாசுதேவன் மகனகப் பிறந்து அம்மானகிய சிசுபாலன் கொடுமையினின்று நீங்குவதற்கு நந்தகோபன் மனையில் புகுந்து. அங்குப் பறவை, பேய், சகடம், மருதமரம் என்னும் வடிவில் ஊறுவிளைக்கவந்த அசுரர் களைக் கொன்று, குவலயாபீடம் என்னும் யானையினையும் மல்லர்களையும் வென்று கஞ்சனையும் கொன்று கண்ணன் என்னும் பெயரோடு இருக்க; அக்கண்ணன் உதவி பாண்டவர் ஐவருக்கு இருந்தமையால் அவர்களைப் போரில் வெல்வது அரிது என்று நூற்றுவர்கருதினர்.

நூற்றுவர் சூதால் வென்று நுவலருங் கானி லேவச்
சாற்றுபன் னீராண் டைவர் தணந்துபின் வளநா டெய்தப்
போற்றலன் புயங்க கேது பொருந்தில னுத லாலே
ஆற்றுதல் சமரென் றெண்ணி யண்ணல்பா சுபத முன்னி. 57

பொ - ரை: அதனல் சூதாட்டத்தில் அவர்களை நூற்றுவர் தோல்வியுறச் செய்து, காட்டில் பன்னிராண்டு வாழும்படி செய்தார்கள். பின்வந்தகாலை பகைவனன துரியோதனன். அவர்களுக்கு உரிய பாகத்தைக் கொடுக்க ஒருப்படவில்லை; அதனல், போரில் வெற்றி பெறுவதற்குப் பாசுபதம் பெற அருச்சுனன் எண்ணினன்,

வி - கு: புயங்க கேது - அரவக்கொடியான், துரியன்.

செவ்வளர் திசைநா லங்கி சேணெழு சுடரொன் ருக
ஐவகைக் கனலி னுப்ப ணடியொன்றின் விரலொன் ருலே
குவ்விடை யூன்றி யோர்தாள் குறங்கிடைச் சேர்த்திப் பார்த்தன்
அவ்விழி துண்டத் தாக்கி யதிலெழு தீப நோக்கி. 58

பொ - ரை: நேரே வளரும் அக்கினி நாற்றிசையில்சூழ, வேனில் ஞாயிறு ஆகாயத்திற்காய இங்ஙனம் ஐவகை அக்கினி நடுவில், ஒரு காலை ஒருவிரல் மேல் நிலத்தில் ஊன்றி, மற்றையகாலை ஊன்றியகாலின் தொடையிற் பொருந்த வைத்து, இருவிழிகளையும் மூக்கு நுனியில் பொருத்தி, அங்கு எழும் சுடரை நோக்கி, அருச்சுனன் தவம் புரிந்தான்,

பூதமைம் பொறியி லாகப் பொறிபுலன் கரணத் தாகச்
சேதனத் தவையாய் மாரன் றேவர்கோ னிடரு மாற்றி
ஆதவம் பனிகார் நீந்திச் சிதலரித் தாகம் புற்ருய்ப்
பாதவ முளைப்ப முக்கட் பரமனைப் பரவி நின்ருன். 59

பொ - ரை: ஐம்பூதங்களிற் செல்லும் உணர்வு மடங்கி ஐம்பொறியளவில் நிற்ப, அப்பொறிவாயிலாக உணரப்படும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் புலன் உணர்வு அந்தக்கரணத்து அளவில் ஒடுங்க, அக்கரண உணர்வுகள் ஆன்ம உணர்வில் ஒன்றி இல்லையாய்க் கழிதலின், மன்மதன் இந்திரன் என்போர் இழைத்த இடையூறுகளைக் கடந்து, வெயிலின் வெப்பம், பனியின் கொடுமை, மழையினுல் வரும் இடர்ப்பாடு என்பவற்றைக்கடந்து, பருவுடல் செல்லால் அரிப்புண்டு புற்ருய் மரம் முளைத்தற்கு உரித்தாகவும் அவ்வுணர்வு சிறிதும் இன்றி ஞானனந்தமயமான முக்கட் செல்வரையே உணர்ந்து ஒன்றி நின்றனன் பார்த்தன்.

மிக்கவன் றவஞ்சோ திப்பான் வேட்டுவக் கோல மாகித்
திக்கெலா மன்னங் கோலந் தொடருமோர் தேவ தேவர்
மைக்குழ லன்னம் பின்னே தொடரமற் றெருகோ லத்தைப்
புக்குறத் தொடர்வார் போலப் புகுந்தனர் பொருவில் லேந்தி. 60

பொ - ரை: மன ஒருமையுள்ள அருச்சுனன் தவத்தைப் பிறர்க்குப் புலப் படுத்தவேண்டி, பிரமனும் திருமாலும் அன்னமாயும் கோலமாயும் (பன்றி) தேட மறைந்திருந்த சிவபெருமான் வேடர் உருவங்கொண்டு, உமையம்மை பின்னேவர ஒரு பன்றியை வேட்டையாடத் தொடர்வான்போல வில் ஏந்தி வெளிப்பட்டான்.

அரிசிலைப் பரம வேடன் வலியஞ்சிப் புகல்போற் பன்றி
குரிசிலை யடுங்கா லெம்மான் கொலைசெய்த துணரான் பார்த்தன்
ஒருசிலை யுயிர்பெற் றென்ன வுருத்தன னிருவர் தாமும்
பொருசிலை குனித்துக் கார்போற் பொழிந்தன ரம்பு மாரி. 61

பொ - ரை: வேட வடிவில் வந்த இறைவனுக்கு அஞ்சி அடுப்பதுபோல் முன்சென்ற பன்றி அருச்சுனனைக் கொல்லப் புகுங்கால் இறைவன் அடித் தொண்டனைக் காத்துப் பன்றியைக் கொன்ருன். அருச்சுனன், அந்த உபகாரத்தை உணரமாட்டாதவனுய், ஒருகல் உயிர்பெற்ருற்போல உணர்ந்து இறைவனை அச்சுறுத்தினன், இருவரும் விற்களைவளைத்து அம்புகளை மாரிபோற் பெய்தனர்.

அல்லினுர் களத்து வேட னருந்தவ வேடன் வின்ணுண்
கல்லினன் மல்லி னுற்கை கலந்தனர் வீழ்ந்தார் மேல்கீழ்
புல்லினு ரணங்கு பார்த்தன் புறங்கண்டு நகைத்தா ளன்னேன்
வில்லினுற் புடைப்ப நாதன் விண்ணிடை மறைந்தா னன்றே. 62

பொ - ரை: சிவபிரான் அருச்சுனனது வில்லின் நாணை அறுத்தனன்; பின் மற்போர் புரிவாராய் ஒருவர் ஒருவரைப்பற்றி மேலும் கீழுமாக விழுந்தனர்; அம்மை, அருச்சுனன் புறங்கொடுத்தல் கண்டு நகைத்தாள்; இதனால் நாணம் உடையவனாய் அருச்சுனன் சிவபிரானை வில்லால் புடைத்தான். சிவபிரான் ஆகாயத்தில் மறைந்தார்.

தேவியுந் தானு மாகச் சேணிடை மறைந்த தேவைப்
பாவியே னுணர்ந்தே னல்லேன் பழுதுகொல் விளைத்தே னென்னக்
கூவியே தொழுதான் முக்கட் குழகனே மழுவ லானே
ஆவியே யுமையோர் பாகா வபயமென் றழைத்துங் காணான். 63

பொ - ரை: அருச்சுனன் தன் அறியாமையை உணர்ந்து; தேவியுந் தானுமாக வந்ததையுணராது தவறுசெய்துவிட்டேனே என இரங்கி, இறைவனை மனம் உருகி அழைத்தும் காணான் ஆயினன்.

தீர்த்தனை யருச்சித் தேத்தித் திருவடி காண்பே னென்ன
ஆர்த்தமா ந் தேவு மேவு மவ்வுளிச் சென்றான் கொன்றை
சார்த்திய மவுலி யானைச் சம்புடத் துடனுங் காணான்
வேர்த்துடல் சோர்ந்தா னாவி விடுப்பனென் றெடுக்கு மேல்வை. 64

பொ - ரை: இறைவனைப் பூசைசெய்து காணல்வேண்டும் எனக்கருதி, தான் தேடிப்பெற்ற ஆன்மார்த்த மூர்த்தியுள்ள இடத்திற்சென்றான்; அங்கு அம் மூர்த்தி சம்புடத்தோடு (வைக்கப்பெறும் திருக்கோயிலோடு) மறைந்தமையைக் கண்டு மயங்கி உயிரைவிட முயன்றான்.

சேணுயர் விடைமேல் வந்து சம்புட ந் திரிகூ டத்திற்
காணுக கடவுட் பஞ்ச தெரிசனத் தென்று காட்டித்
தாணுநா யகர்தாம் பாசு பதங்கொடுத் தருளிப் போ ந்தார்
கோணிலா மனத்தன் போற்றிக் குறும்பலாச் சாரல் சார்ந்தான். 65

பொ - ரை: அப்பொழுது இறைவன் விடைமீது அமர்ந்து காட்சி கொடுத்து, சம்புடத்தைத் திரிகூட மலையில் ஐந்துபொருள்களை ஒருங்கே காணும் பஞ்சதரிசனம் என்னும் இடத்திற் காண்க எனத் தெரிவித்துப் பாசுபதமும் கொடுத்தருளினன்; அருச்சுனன் கோட்டமில் மனத்தனாய்த் திருக்குற்றால மலைச் சாரலை அடைந்தான்.

கோதிலாத் திருக்குற் றாலங் குறுகினன் பணிந்தான் சங்க
வீதிவாய்ச் சென்றான் முன்செய் வியன்குருத் துரோகந் தீரச்
சோதிவெண் கதிர்பூ சித்த சோமசே கரனைக் கண்டான்
ஓதுபங் குனியாந் திங்க ளுத்திரத் தருச்சித் தானே. 66

பொ - ரை: திருக்குற்றாலத்தை அணுகிப் பணிந்து, சங்கவீதியிற் சென்று சந்திரன் தன் குருத்துரோகம் தீரவழிபட்ட சோமமுடிக்கடவுளைக்கண்டு பங்குனி உத்திரத்தன்று பூசித்தான்.

மேற்றிசை முகமா மீசன் விநாயகன் சிகரங் குன்றந்
தேற்றுதே ஞரூே டைந்து தெரிசனம் பரிவாற் பெற்றுத்
தோற்றிய வைந்தோ டாருச் சோதிசம் புடமுங் கண்டான்
ஆற்றுற வெடுத்தா ஞகை மாவிகண் டெடுத்தா லென்ன. 67

பொ - ரை: மேற்கு நோக்கியுள்ள சிவலிங்கமூர்த்தி, விநாயகர், சிகரம், மலே, தேனறு என்னும் ஐந்தன் காட்சியை ஒருங்கே உடையனுய், ஆருவது பொருளாகச் சோதிர்மய சிவலிங்கம் வைக்கப்பெற்ற சம்புடத்தையும் கண்டான்; உயிரின் நீங்கிய உடம்பு மீள உயிர் பெற்ருற்போல, தன் துன்பங்கள் தணியும் படி சம்புடத்தை எடுத்துக்கொண்டான்.

ஆதிநாட் சம்பு டங்கண் டருச்சுன னெடுத்த வாற்ருன்
பூதிசா தனத்தோர் போற்றும் புடார்ச்சுன புரமா மிவ்வூர்
மீதுள நாமச் செய்கை விளம்புறு சருக்கந் தோறும்
காதைகள் விரிக்குந் தெய்வக் காரண வகையிற் காண்மின். 68

பொ - ரை: முற்காலத்தில் அருச்சுனன் மேற்கூறியபடி தன் சம்புடங் கண்டு எடுத்ததனல் இவ்வூர் புடார்ச்சுனபுரம் எனவும் வழங்கப்பெறும்; மேலுள்ள திருப்பெயர்களின் தெய்வத்தன்மை உள்ள காரணங்களேச் சருக்கந்தோறும் விரித்துரைக்கும் கதைகளேக் கொண்டு அறிமின்.

பொருவருந் திரிகூ டத்துப் புடார்ச்சுன புரம்போ லெங்கும்
ஒருதலம் புவனத் தில்லே யும்பர்வா னகத்து மாங்கே
பெருகுமித் தலத்தை நீங்கிப் பிறதலம் புகுவா ரில்லின்
திருவிளக் கிருக்க வூரிற் சென்றுதீக் குழல்வார் மன்னே. 69

பொ - ரை: உவமையில்லாத திரிகூடத்தையுடைய புடார்ச்சுன புரம்போல ஒருதலம் இவ்வுலகிலும் தேவ உலகிலும் இல்லே; அங்ஙனமே இத்தலத்தை அணுகப்பெற்றும் பிறதலத்துக்கண் சென்று நற்கதி பெறவிரும்புவார் தமது வீட்டில் திருவிளக்கு இருக்கவும், நெருப்புவேண்டி ஊருக்குட்சென்று இரந்து உழல்வாரை ஒப்பர்.

பாயிர மறைக ளாலும் பகரரி தான சங்கக்
கோயிலும் தலமும் தெய்வக் குழாங்களின் பெருக்கு நானேர்
வாயினு லுரைக்கற் பாற்ரே மகிதலந் தாங்குஞ் சேடன்
ஆயிர நாவி ஞலு மசைக்கினு மசையா தென்ருன். 70

பொ - ரை: பல பொருளேயும் தொகுத்துக் கூறும் வேதங்களாலும் விளக்கமுடியாத சங்கக்கோயிலும், அதற்கு இடமாகிய திருக்குற்ருலத்தலமும், அங்குள்ள தெய்வங்களின் விளக்கமும் எனது ஒருநாவால் உரைத்தல் ஆகாது; உலகத்தைத்தாங்கும் ஆதிசேடனும் தன் ஆயிரம் நாவாலும் சிறிது உரைக்கப் புகினும் உரைக்க இயலாது.

வேறு

தில்லையிலுஞ் சேதுவிலுங் காசியிலும் வாசிபெறுந் திருக்குற் றாலம்
சொல்லையிலு நாவூறுங் கேட்கையிலுஞ் செவிதிறக்குந் துறக்கம் போலும்
எல்லையினில் வளர்தீர்த்த மகிமைகூ றெனமுனிவ ரிளம்பூங் கன்னற்
கொல்லையினின் மேய்ந்தசெழுங் கன்றுகள்போற் சிந்தையவர் கொண்டார்
[மன்னோ. 71

பொ-ரை: தில்லை, சேது, காசி என்னும் தலங்களிலும் உயர்ந்த திருக்குற்றாலத்தை உச்சரிக்கும் போது நாவில் இனிமை தோன்றும்; கேட்கப்புகின் செவி அவாவிநிற்கும்; சுவர்க்கம் போன்ற அத்தல எல்லைக்குள் உள்ள தீர்த்தப் பெருமையைக் கூறுக என முனிவர்கள் சூதமுனிவரை வேண்டிக்கொண்டனர்; மேன்மையான கரும்பு விளையும் தோட்டத்தில் புகுந்த இளைய யானைக்கன்றுகளின் உள்ளம்போன்ற சிந்தை உடையராயினர் முனிவர்கள்.

கனிமூல சாகமெனு மமுதநுகர் மாதவத்தோர் கருதிக் கேட்ப
முனிமூல நதிமூல முரைப்பதரி துரைத்தாலு முக்கண் ஞானத்
தனிமூலப் பொருளிருக்குஞ் சாரல்சூழ் திரிகூடச் சயிலக் கங்கை
நனிமூல முரைப்பதரி தவனருளா லுரைப்பனென நவில்வான் சூதன். 72

பொ-ரை: கனி கிழங்கு இலை என்னும் நல்ல உணவை உண்ணும் தவ முனிவர்கள் தீர்த்தப்பெருமையைக் கூறுக என எண்ணிக்கேட்டனர்; சூத முனிவர் முனிவர் பரம்பரையின் தொடக்கத்தையும் நதிமூலத்தையும் கண்டு கூறுதல் அரியசெயல்; அவற்றை உரைத்தல் கூடும் எனினும், முதற்பொருளாகிய முக்கட் பரமன் எழுந்தருளியுள்ள மலைச்சாரலை உடைய திரிகூடமலையில் உள்ள பொங்கு கங்கையின் மூலத்தை உரைத்தல் அரிது; முதல்வன் அருளால்உரைக்கப் புகுகின்றேன் என்றார்.

*தலமகிமைச் சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — 315

---

# வடவருவிச் சருக்கம்

பரையிடத்தி லிருந்துபுடார்ச் சுனபுரத்தி னுலகமெலாம் படைக்குங் காலம்
உரையிடத்து முணர்விடத்துங் கடந்தானை யுருத்திரமா கணத்தோ ரெல்லாம்
தரையிடத்தி லுவந்தாட்டப் புனல்வேண்டிப் பரவுதலுந் தனிமுக் கோட்டு
வரையிடத்தி லவனருளால் வருமூல தீர்த்தம்வட வருவித் தீர்த்தம். 1

பொ-ரை: மனமொழிகளைக் கடந்துள்ள சிவபிரான் புடார்ச்சுன புரத்தைப் பிரளயகாலத்தில் நிலைக்களமாகக் கொண்டிருந்து, மீளவும் உலகனைத்தையும் முன் போலப் பராசத்தியின் அடங்கியுள்ள இருவகை மாயைகளிலிருந்து படைக்கத் தொடங்குங் காலத்தில், முன்னர்த் தோற்றுவிக்கப்பட்ட உருத்திர கணத்தோர், சிவபிரானை ஆட்டுவதற்குத் தீர்த்தம் வேண்டிச் சிவபிரானையே வேண்டிக்கொள்ள, அவன் அருளால் மலையின்கண் வந்த மூலதீர்த்தமே வட அருவித்தீர்த்தம் ஆகும்.

கடலேழு நதியேழுந் தோன்றுமுன் வரையிலெழு கடலாய்த் தோன்றத்
தடமேவு நதிமகிமை பாடியுருத் திரகணத்துத் தலைவ ராடி
உடன்மேவு நந்திகணத் தவராடிச் சிவகணத்தா ருவப்பி னுடி
அடலேறுந் திரிகூடப் பெருமானை யுவந்தாட்டி யருள்பெற் றூரால். 2

பொ-ரை: ஏழு கடலும் ஏழு ஆறுகளும் தோன்றுவதற்கு முன் திரிகூட மலையில் கடல்போல் எழுந்தது வடவருவி; உருத்திரகணத் தலைவர்கள் விரிவான அதன் பெருமையைப்பாடி அதன்கண் முழுகினர்; உடனிருந்த நந்தி கணத்தவரும் சிவகணத்தவரும் மகிழ்ந்து முழுகினுர்கள்; எல்லோரும் அத்தீர்த்தம் கொண்டு திரிகூடமுதல்வனைத் திருமுழுக்கு ஆட்டி அவன் திருவருளைப் பெற்றூர்கள்.

குடிலைதா மேவிவரு மாயைகா ரணமாகக் குளிர்வா னுதி
நெடியபே ருலகனைத்தும் படைப்பதற்குக் கமண்டலநீர் நிகராய் முக்கண்
அடிகளா டலுக்குரிமை யாதலாற் றிரிகூட சைலக் கங்கை
சடிலமேற் கங்கையினு நூறுமடங் கதிகமெனத் தக்க தாமால். 3

பொ-ரை: பிரணவகலைகளைச்சார்ந்துகாரியப்படும் மாயையினின்று ஆகாயம் முதலாக உலகனைத்தும் படைத்தற்கு வேண்டப்படும் கமண்டல நீராகவும், சிவபிரான் திருமஞ்சனம் ஆடுவதற்கு உரியதாயும் சிறத்தலால் திரிகூடமலையில் தோன்றிய கங்கை, சிவபிரான் திருமுடியில் உள்ள கங்கையினும் நூறுமடங்கு பெருமையுடையது எனக் கூறுதல் தக்கதாம்.

பவமதுகங் கையகலாச் சகரருய்யப் பகிரதனுற் பண்டு தோன்றும்
தவமதுகங் கையுஞ்சுருதி விரிகூடத் திரிகூடச் சயில மேவி
நவமதுகங் கையிற்சொரிந்து நாதனைப்பூ சனைபுரிந்து நவைக டீர்ந்த
சிவமதுகங் கையுந்தனக்கோர் துறையாக வுடையதுசித் திரப்பூங் கங்கை. 4

பொ - ரை: சித்திரப்பூங்கங்கை எனப்படும் வடவருவி சிவமதுகங்கை என்னும் ஒருதுறையை உடையது; பாவத்தின் வலி தம் இடத்தினின்றும் நீங்காத (பவம் மதுகம் கையகலா) சகரர் என்னும் சூரிய குலத்தரசர் அப்பாவம் நீங்கி உய்தற்பொருட்டுப் பகிரதன் தவம் செய்து கொண்டு வந்த, தவத்தின் இனிமை பொருந்திய கங்கையும் வேதங்களின் பரப்புப் பொருந்திய அத்திரிகூட மலையை அணுகி, புதிய தேனாகிய நீரை (நவமதுகம்)க்கையாற் சொரிந்து சிவபிரானைப் பூசித்துத் தன்கண் உள்ள பாவ அழுக்கைப் போக்கிக்கொண்ட இடமே அத்துறை.

மவுனநெறித் தாபதர்கண் மாறுது தவம்வேள்வி வளர்ப்ப தாலே
கவனவெறித் தானவராற் பிரளயத்தா லழியாமற் கற்பந் தோறும்
சிவனயன்மா லானபிரான் றிருவருளால் வரைகாத்துத் தேவி வாலை
புவனைதிரி புரையாவா ளினிதுறைசண் பகத்தடமோர் புறத்த தாமால். 5

பொ - ரை: தவயோகிகள் ஒழிவின்றித் தவத்தையும் வேள்வியினையும் வளர்ப்பதனால், செயல்வேகமும் மனக்கலக்கமும் உள்ள தானவராலும் பிரளய காலத்தாலும் அழியாதபடி திருக்குற்றாலத்தைப்பராசத்தி மூவர் உருக்கொள்ளும் முதல்வன் திருவருளால் காத்து வருகின்றாள்; அவ்வம்மை இனிது தங்கும் சண் பகத்தடமும் ஓர் மருங்கு உள்ளது பாலை, புவனேசுவரி, திரிபுரை என்பவை அம்மையின் அவதரப் பெயர்கள்.

கங்கைநரு மதையமுனை சிந்துகோ தாவரிகா வேரி யாதி
மங்கலமா நதிகளெலாம் வற்றியகா லங்களினும் வற்று தாகிச்
சங்கமறு குடையபிரான் றிருவருளாற் புதுவாரி சயில மீதில்
பொங்கியெழு மாதலினுற் பொங்குமா கடற்றுறையும் பொருந்து மோர்பால்.

பொ - ரை: கங்கை முதலிய பிறநதிகள் வற்றும்போதும் தான் வற்றாது, முதல்வன் திருவருளால் புதுநீர் பொங்கி எழும் காரணத்தால் பொங்குமாகடல் எனப் பெயர் பெற்ற துறையும் ஒருபக்கத்து உள்ளது.

தடமாகு நதியாகுங் கடலாகும் வரையருவி தானே யாகும்
இடமாகுஞ் சேய்த்தாகு மெத்தலத்தும் வளர்தீர்த்த மிமைய மீன்ற
மடமாதி னிடத்தார்க்கு வலமாகி யணித்தாகி வானோ ராட்டும்
கடமார்மஞ் சனம்போலுந் திரிகூட வடவருவிக் கடவுட் டீர்த்தம். 7

பொ - ரை: திரிகூடமலையிலிருக்கும் தெய்வத்தன்மை உள்ள வட அருவித் தீர்த்தம் வாவி, நதி, கடல், அருவி என்னும் வடிவில் அண்மையிலும் தூரத்தி லும் உள்ளதாய் உமையம்மைக்கு இடப்பாகத்து அமர்ந்துள்ள சிவபிரானுக்கு வலப்பக்கத்தே தேவர் ஆட்டுவதற்கு நிரப்பிவைக்கப்பெற்ற திருமஞ்சனக் குடத்தில் உள்ள தீர்த்தம் போல உள்ளது.

கூவறட மொருகோடி கொடுத்தபலன் கொடுக்குமொரு குவளை வாவி
வாவிசுனை யொருகோடி வழங்குபல னொருநதியே வழங்கா நிற்கும்
தாவுநதி யொருகோடி தருபலனேர் வரையருவி தானே நல்கும்
மேவருவி யொருகோடி யுதவுபலன் வடவருவி விளக்கு மாதோ. 8

பொ - ரை : கிணறும், தடாகமும், குவளைப் பொய்கையும், நதியும், மலை அருவியும், வட அருவியும் ஒன்றற்கு ஒன்று கோடிமடங்கு நற்பயனை விளைப்பன.

கிரிகூடந் தொறும்பாயு நதிக்குயர்ந்த துத்தரவா கினியே யென்று
விரிகூட விரித்துமறைச் சுருதிமிரு திகள்யாவும் விளம்பு மானல்
அரிகூட மயன்கூடஞ் சிவகூட மெனமுனிவ ரமர ரார்க்குந்
திரிகூட வரைபாயும் வடவருவி மகிமைதுதி செய்யற் பாற்றே. 9

பொ - ரை : மலையின் உச்சிகளிலிருந்து பாயும் நதிகளுள் உத்தரவாகினி (வடக்கு நோக்கிச் செல்வது) யாக உள்ளதே சிறந்தது என விரிவு அமைய வேதமும் மிருதிகளும் கூறும்: அதனால், அயன்மால் அரன் என்பார்க்கு இரகசியத் தானம் எனப்பெறும் திரிகூடமலையிற் பாயும் வட அருவியின் பெருமை சொல்லில் அடங்காது.

வி - கு : கூடம் - இரகசியம், உச்சி.

பாவமொடு புண்ணியத்தின் வகைபிரிக்க மாட்டாவாம் பலவாந் தீர்த்தம்
பூவையுங்கிள் ளையும்பாலின் புனல்பிரிக்க மாட்டாமை போல மேலாம்
தூவியனம் பிரிப்பதுபோற் சுகிர்தமெனும் பால்பிரித்துத் துலங்கக் காட்டித்
தீவினையைக் கழுநீராப் பிரித்தெறியுந் திரிகூடத் தெய்வக் கங்கை. 10

பொ - ரை : நாகணவாய்ப் புள்ளும் கிளியும் பாலையும் நீரையும் பிரித்து அறியா; அவைபோல, பலவகைப்பட்ட தீர்த்தங்கள் பாவபுண்ணியங்களைப் பிரித்தறியமாட்டாது ஒப்பக் கழுவும்; நீரை நீக்கிப் பாலைக்கொள்ளும் அன்னத்தைப் போல, திரிகூடகங்கை தன்கண் மூழ்குவோர்க்கு அறமாகிய பாலை விளங்கப் பிரித்துக்காட்டித் தீவினையைக் கழுநீர்போலப் பிரித்து ஒழியச்செய்யும்.

மேலேறிச் சுவர்க்கபதம் புகுவார்க்கும் பிரமபத மேவு வார்க்கும்
மாலேறு வைகுந்தம் பரமபதஞ் சேர்வார்க்கும் வரம்பில் காலம்
காலேறிச் செலவரிய பதந்தோறுஞ் செலுத்துதலாற் கதிகட் கெல்லாம்
நூலேணி நிறுத்தியதாந் திரிகூட வடவருவி நுவலுங் காலை. 11

பொ - ரை : சுவர்க்கம், சத்தியலோகம், வைகுந்தம், பரமபதம் எனக் காலால் நடந்து அடையலாகாத பதவிகளை அடையச் செலுத்தும் நூலேணி போல உள்ளது வடஅருவி.

சத்தநர கினுந்தொலையார் புவிமீதிற் பிறந்துபா தகங்க டீர்ப்பர்
இத்தரணி தனிற்பிறந்தார் பாவமெல்லாங் கங்கைதனி லெய்தித் தீர்ப்பர்
உத்தரகங் காநதியின் பாதகமு மிதுதீர்க்க வுரிய தானல்
சித்திரகங் காநதியை யொத்ததொரு நதியுளதோ செகங்கண் மூன்றில். 12

பொ - ரை : அள்ளல், இரௌரவம், கும்பிபாகம், கூடசாலம், செந்துத் தானம், பூதி, மாபூதி என்னும் ஏழுநரகங்களிலும் தொலையாத பாவங்களை இப்பூமியிற்பிறந்தார் தீர்த்துக்கொள்வர்; அவர் தம்பாவங்களைத் தீர்த்துக்

கொள்வது கங்கையில் மூழ்குவதால், வடதிசைக் கங்கையின் தீவினையினையும் தீர்த்தற்குரியது சித்திரகங்கை; இதனால், மூவுலகிலும் இதனை ஒத்த புண்ணிய தீர்த்தம் இல்லை என்க.

## கதை

### வேறு

மொழிபடர் கலைநூல் வல்லீர் முழுத்தபா தகங்க ளெல்லாம்
சுழிபடர் கழுநீ ராகத் தொலைத்திடுந் திரிகூ டத்திற்
செழிபடர் நதிக்கு நாமந் தெய்வமாக் கதைகள் கூறில்
ஒழிபடா வனந்த மாகு மவையிலொன் றுணர்த்தக் கேண்மின். 13

பொ - ரை : சொற்கள் விரிந்த பலகலைகளையும் வேதத்தையும் கற்றுணர்ந்த முனிவர்களே! முழுமையான பாவம் அனைத்தையும் கழுநீர்போலத் தொலைக்கும் செழுமையுள்ள திரிகூட நதிக்குக் கூறப்படும் பெயர்களும் தெய்வக்கதைகளும் முடிவின்றி உள்ளன; அக்கதைகளுள் ஒன்றைக் கூறுகின்றேன்; கேண்மின்.

கணத்தினு மோரூர் வைகான் கடிநகர் பதியொன் றில்லான்
பணத்தர வல்கு லாரைப் பாவைபோற் பார்ப்ப தல்லால்
மணப்பதில் விரகில் லாதான் வறுமையாற் சிறுமை பூண்ட
குணத்தினன் சிகைநூன் முஞ்சிக் குறியினன் மறையோ னேகன். 14

பொ - ரை : ஒருமறையவன் சிகையும் பூணநூலிற்கட்டிய முஞ்சிப்புல்லு மாகிய பிரமசரிய கோலம் உடையவன் இருந்தான்; ஒரு கணப்பொழுதும் ஓர் ஊரில் தங்கமாட்டான்; அவன் தனக்கென ஒரு நகரமோ பதியோ உடையன் அல்லன்; பெண்களைக்காணுதல் அன்றி மணப்பதற்கு உரிய நுண்ணறிவு இல்லாதான்; வறுமைகாரணமாக வரும் சிறுமைக் குணத்தினன்.

பந்தியாம் பதிதோ றேற்றும் பசிக்குண விலாது தேம்பிக்
கந்தையே துகிலாச் சுற்றிப் புற்கயிற் றரைஞாண் பூண்டு
சிந்தைவேட் டதற்கே மாந்து திரிந்தனன் மெலிவா னந்தோ
முந்தையே தவஞ்செய் யாதா ரிம்மையின் முயன்று லுண்டோ. 15

பொ - ரை : அவன் ஊர்தோறும் சென்று இரந்தும் தன் பசிதீராது, உடுக்க நல்ல உடையின்றி, அரைஞாணும் தருப்பையால் அன்றிக் கிடையாதாக மனம் உடைந்து திரிந்து மெலிந்தான்; முன்னைத் தவம் உடையார்க்கே இம்மை யிற்செய்யும் முயற்சிகளால் நற்பயன்கள் விளையும்.

கடுங்கதிர் வேனிற்காலங் கையினன் மெய்யைப் போர்த்தான்
குடங்கையுங் குளிர்கா லத்துக் குறங்கினிற் புதைத்தான் வாடை
அடும்பனிச் சிசிர கால மருங்குளிர்க் காற்று ளுகி
நடுங்கின னெடுங்கி யாங்கோர் நம்பரா லயத்துட் சென்றான். 16

பொ - ரை: வெயிற் காலத்திலும் குளிர்காலத்திலும் தன் உடம்பைக் காத்துக்கொள்ள உடையைப் பெறவில்லை; தன்கையால் வெயிலை மறைத்து, தன் உடம்பை முடக்கிக்கொள்வதனல் பனியால் வரும் குளிரைத் தாங்கினன்: பின்பனிக் காலத்தில் குளிரைத்தாங்க முடியாது சிவாலயம் ஒன்றில் புகுந்தான்.

தாலமே லடிச்சூ டஞ்சித் தழலிடைக் குதித்தான் போல
ஆலும்வெங் குளிரா லஞ்சி யாலயத் திலிங்கஞ் சாத்தும்
சேலையைக் கவர்ந்து போர்த்தான் பாதகச் செந்தீ யந்தக்
காலையில் வளைப்ப மேனி கருகிக்கன் மாட னானன். 17

பொ - ரை: சுடவைத்துள்ள பாகபாத்திரம் அடிசுடுகிறதென்று அஞ்சி நெருப்பிலே குதித்தாற்போல, தன்னைப் பற்றும் குளிருக்கு அஞ்சி வந்த ஏழை சிவலிங்கத்தின்மேல் சாத்துதற்குரிய பரிவட்டத்தையே கவர்ந்து போர்த்திக் கொண்டான்; அதனல் மேலும் பாவம் அவனைச் சூழ்ந்தமையால் உடல் கருகிக் கல்மஷம் (பாவம்) உடையவனானன்.

அற்றைநாள் வரலா றீச னலயக் களவா லென்று
பிற்றைநா ளுணர்ந்தான் சோரம் பிறரிடைப் புரிந்தார்க் கெல்லாம்
பற்றுவ தொன்றே பாவம் பரனிடைப் புரிந்த வாற்றால்
உற்றதே சிவத்து ரோக மொன்றினுக் கிரண்டா யந்தோ. 18

பொ - ரை: அன்று தனக்கு வந்த நிகழ்ச்சியைத் திருக்கோயிலில் களவு காரணமாய் வந்ததென்று மறுநாள் உணர்ந்தான்; அவன்செய்தது சிவத் துரோகம் ஆதலால், மக்கள்மாட்டுச் செய்யும் பாவத்தின் இருமடங்காக அப் பாவம் அவனைச் சூழ்ந்தது.

திருந்திழை வாம பாகத் தேவின லன்றி யிந்தப்
பொருந்துபா தகங்க ளியாண்டும் போக்கரி தென்று தேறி
இருந்தொரு தலத்தே முக்க ணிறைவனைத் தியானித் தேத்தி
வருந்தின னிரங்கு காலை வள்ளலா ரிரங்கி யாங்கு. 19

பொ - ரை: உமையொருபாகன் அருளாலன்றி அப்பாவம் தீராது என்று உணர்ந்து ஓரிடத்து இருந்து சிவபிரானைத்தியானித்துத் தன்பாவத்திற்கு இரங்கி வருந்தினன்; சிவபிரான் அவனுக்கு இரங்கி அருள்புரிவாராயினர்.

வானமே லெழுந்த வாக்கு வடபுலந் தொடுத்துத் தென்பால்
ஆனதீர்த் தங்க ளாடி னகலுநின் பாவ மாங்கோர்
ஞானமார் நதியி லென்று நவிற்றலுங் கவற்சி தீர்ந்து
கானமார் பொழில்சூழ் சிந்து கங்கைகா ளிந்தி யாடி. 20

பொ - ரை: ஆகாயத்தில் ஒரு வாக்கு எழுந்தது: வடக்கு முதல் தென் கோடிவரையில் தீர்த்தங்களில் நீ ஆடிவந்தால், ஒரு ஞான நதியில் தோயும்போது இப்பாவம் நீங்கும் என்றது; தன்கவலை நீங்கி, அப்பார்ப்பனன் சிந்து, கங்கை யமுனை என்பவற்றில் முழுகிச் செய்கடன்களைச் செய்தான்.

நன்னரு மதையே கோதா வரிநறுங் கண்ண வேணி
பொன்னியே வையை சேது பொருநைமற் றுளவாந் தீர்த்தம்
கன்னியந் துறையு மூழ்கிக் கனவரை வலங்கொண் டேகிச்
சென்னியின் மதியம் பூண்டார் சிவதிரி கூடஞ் சேர்ந்தான். 21

பொ - ரை: அவன் மேலும் நருமதை, கோதாவரி, கிருட்டிணை, காவிரி, வைகை, சேது, தாமிரவருணி, கன்னியாகுமரி முதலிய தீர்த்தங்களில் படிந்து, திரிகூடமலையை வலமாக வந்து சார்ந்தான்.

கண்ணியங் கொன்றை வேய்ந்தார் கமழ்திரி கூடச் சாரல்
புண்ணிய நதியி லாடும் போதினின் மறையோன் செய்த
திண்ணிய பாவமெல்லாந் தீர்ந்துடன் மாசு நீங்கி
விண்ணிருள் கிழியத் தோன்றும் விரிசுட ரொளிபோ லானன். 22

பொ - ரை: சிவபிரான் விளங்கி நிற்கும் திரிகூடமலைச் சாரலில் உள்ள வட அருவி என்னும் புனிததீர்த்தத்தில் மூழ்கியபோது, மறையோன் முன்செய்த பாவம்முழுதும் தீர்ந்தது, உடம்பும் மாசுநீங்கி, இருளை நீக்கும் ஞாயிற்றின் ஒளி உடையதாயிற்று.

அருவியந் திரிகூ டத்தி லந்நதி படிந்து பாவம்
ஒருவினன் வறுமை நோயு மொழிந்தனன் மறையோன் வாழ்வும்
பெருகொளி வடிவும் பெற்றான் பெற்றவாச் சரியத் தாலே
திருநதி தனக்கு நாமஞ் சித்திர நதியா யிற்றால். 23

பொ - ரை: வடவருவியில் முழுகிய மறையவன் பாவமும் வறுமையும் ஒருங்கே நீங்கப்பெற்றான்; இன்பவாழ்வும் வளரும் ஒளியும் உடன் பெற்றுமகிழ்ந் தான்; இவ்விம்மித நிகழ்ச்சி காரணமாகத் திருநதிக்குச் சித்திரநதி என்னும் பெயர் உளதாயிற்று.

வேறு

கங்கைபிர யாகைவட சிந்துகோ தாவரிகா வேரி வாணி
துங்கநரு மதையமுனை கண்ணைகவு தமைசரயு சோணை யாதி
எங்குமுள நதிகளும்புண் ணியநதிச்சித் திரநதியென் றிதன்பால் வந்து
தங்கியுவந் தாடுமொரு பாகமதி மாகமதி தன்னின் மாதோ. 24

பொ - ரை: மாசிமாத அட்டமி திதியில் கங்கை பிரயாகை சிந்து முதலிய ஏனைய எல்லா நதிகளும் சித்திர நதி தமக்குப் புனிதம் அளிக்கவல்லது என எண்ணி, இங்குவந்து தங்கி நீராடும்.

வி - கு: மாகமதி - மாசிமாதம், பாகமதி - திங்கள் பாதி அளவு தோன்றும் அட்டமி.

முற்காட்டும் பலதலத்து மூன்றரைக்கோ டியதீர்த்த மூழ்கும் பேறும்
கற்காட்டி யெறிதிரையின் கவண்காட்டிப் பாவமெலாங் காகம் போலப்
பிற்காட்டி யிரிந்தோடப் பிறவியெனும் பகையோடப் பெரிதாந் தெய்வ
விற்காட்டுந் திரிகூட வடவருவி நல்குமென விளம்பும் வேதம். 25

பொ - ரை: மேம்பட்டுநிற்கும் பல இடங்களிலும் உள்ள மூன்றரைக் கோடி என்னும் எண்ணை உடைய தீர்த்தங்களில் மூழ்கிப்பெறும் பேறு எல்லாம் திரிகூட வட அருவி ஒன்றே கொடுக்கும் என வேதம் எடுத்தோதும்.

வி - கு: வடவருவி இரத்தினக் கற்களை எறியும் அலைகள் கவண்போலச் சுழன்று பாவம் எல்லாம் காகம்போலப் பறந்தோடச் செய்வது; பிறவியாகிய பகைவன் ஓடும்படி தன் திவலைகளில் இந்திர தனுசு எனப்படும் வில்லை வளைத்துக் காட்டுவது.

பூநாறுங் கற்பகத்தின் போதாடிச் சண்பகத்தின் பூந்தா தாடி
வானாறு தலைமடுத்து மதிசூடுந் திரிகூட வரையெம் மானைக்
கானாறு மலர்சொரிந்து கங்கைபூ சித்தமது கங்கை யாரும்
தேனாறு தனிற்படிந்தார் சென்றொருகா லமும்படியார் செனன வாரி. 26

பொ - ரை: மதுகங்கை எனப்படும் தேனாறு கற்பகப் பூவைக்கலந்து சண்பகமலர் மகரந்தம் விரவப்பெற்று வருவது; ஆகாயகங்கையைப் பிறையுடன் முடியிற்கொண்ட சிவபிரானை மணம் பொருந்திய மலர்களால் வழிபடுதற்கு வட கங்கை வந்து மூழ்கப்பெற்றது; அதில் முழுகினோர் பிறவி வெள்ளத்தில் ஒரு காலமும் மூழ்கார்.

வி - கு: கான் நாறு மலர் - மணம் கமழும் மலர்.

வேறு

வாவிகட் கதிகங் கூடல் குடந்தைவண் புலியூர் வாவி
ஓவிலா நதியிற் கங்கை யுறுதிரி வேணி சங்கம்
தாவுமுந் நீரிற் சேது தடவரை யருவிக் கெல்லாம்
தீவமாந் திருக்குற் றாலந் திகழ்வட வருவித் தீர்த்தம். 27

பொ - ரை: குளங்களுட் சிறந்தவை மதுரையில் உள்ள பொற்றாமரையும் குடந்தை மகாமகக் குளமும், தில்லைநகர்ச் சிவகங்கையும் ஆகும்; ஆறுகளில் சிறந்தவை கங்கையும், கங்கை யமுனை சரசுவதி மூன்றும் கூடும் திருவேணி சங்கமமும் ஆம்; கடல் துறைகளில் சிறந்தது சேது; மலை அருவிகளுட் சிறந்து சோதியாக விளங்கும் வட அருவி. (தீவம் - சோதி).

ஓர்நதி யிடத்தி லைந்து மொடுக்கிமூச் சடக்கி யென்றும்
வார்புன லிடையே நின்று மாதவம் புரிவார் பேறு
கூர்பனிச் சிசிர நாளிற் குலவுசித் திரப்பூங் கங்கை
நீர்படிந் தொருநாட் செய்யு நித்திய கரும நல்கும். 28

பொ - ரை: வேறு ஒரு புண்ணிய நதியில், ஐம்பொறி அடக்கி, பிராணயாமத்துடன், நீர்நிலைக்கண் நின்று சிறந்த தவம் புரிவார் எய்தும் பேற்றைப் பனிமிகும் பின்பனிக் காலத்தில் சித்திர கங்கையில் முழுகி ஒருநாள் இயற்றும் நித்திய கன்மத்தினாலேயே ஒருவன் அடைவன்.

### வேறு

மாகமா மதிதோறும் பிரயாகை மாதீர்த்தம்
பாகமா மதியினராய்ப் பல்யாண்டு படிந்தபலன்
நாகமா மதிச்சடையார் வடவருவி நயந்தொருநாள்
சோகமா மதிநீங்கத் தோய்ந்தாரைத் தோய்ந்திடுமால். 29

பொ - ரை: பலவருடங்களாக மாசித்திங்கள்தோறும் பிரயாகையில் மூழ்கிப் பக்குவ அறிவினராய் ஒழுகுதலால் வரும்பயனை அரவுந் திங்களும் அணிந்த சடையாருக்கு உரிய வடவருவியில் துன்பம் நீங்கிய அறிவினராய் விரும்பி ஒருநாள் முழுகினவர் அடைவர்.

தாமாக மூழ்கினர்க்குந் தாமொருவர் பொருட்டாலே
ஆமாறு மூழ்கினர்க்கு மாசூச முடம்பழுக்குப்
போமாறு மூழ்கினர்க்கும் புனல்வழுக்கி வீழ்ந்தவர்க்கும்
காமாரி சித்திரப்பூங் கங்கைபர கதிதருமால். 30

பொ - ரை: காமனை எரித்த சிவபிரானுடைய சித்திரப்பூங்கங்கை தாமே முழுகினர்க்கும், பிறர்க்கு ஆகவேண்டி அவர்பொருட்டு முழுகினர்க்கும், ஆசௌசம் நீங்கவும், உடம்பு அழுக்கு நீங்கவும் கருதி முழுகினர்க்கும், வழுக்கி நீரில் விழுந்து முழுகினர்க்கும் ஒரேவகையாகப் பரமுத்திப் பயனை நல்கும்.

அனைத்தாகும் பிறநதிக ளாடினர்க் களவளவில்
எனைத்தானும் பலனுதவு மெதிர்ந்தார்க்கும் பணிந்தார்க்கும்
நினைத்தார்க்கும் புகழ்ந்தார்க்கு நீரிலொரு துளியாகம்
நனைத்தார்க்குங் கதிகொடுக்கு நன்னகர்ச்சித் திரநதியே. 31

பொ - ரை: பிற எல்லா நதிகளும் மூழ்கினர்க்கு முழுகிய எண்ணுக்கு ஏற்றபடி யாதேனும் ஒரு பயனைத்தரும்; சித்திரநதி தன்னை எதிர்கண்டோர், வணங்கினோர், நினைத்தோர், புகழ்ந்தோர், ஒருதுளி நீரை முடியில் தெளித்துக் கொண்டோர் யாவர்க்கும் சிவகதியைக் கொடுக்கவல்லது.

ஆலைநறுங் கழைதூர்தொட் டயில்வதெனக் காலைமுதல்
வேலைமர பினிற்கதிகள் வியந்துதவும் பலநதிகள்
காலையினு மாலையினுங் கடும்பகலும் வடவருவி
பாலையடு கட்டிதருஞ் சுவைபோலப் பலன்தருமே. 32

பொ-ரை: பிற பல நதிகள் காலைமுதல் வந்து முழுகுவோர்க்கு ஆலையாகிய கரும்பை அடிதொடங்கி உண்பார்க்குத் தரும் இன்பம்போல, நேரம் ஆக ஆகக் குறைந்த பயனையே தரும்; சித்திராநதி காலை நண்பகல் மாலை என்னும் எக்காலத்திலும் ஒரே வகையாகக் கருப்பஞ்சாற்றைக் காய்ச்சி எடுத்த கட்டிபோலப் பயன் தரும்.

வான்றெடருந் திரிகூட வரைச்சாரல் வடவருவி
தோன்றியொரு நாண்மூழ்கத் தொல்வினைகள் கழிந்தோடும்
ஏன்றநா ளிரண்டாடி லிவ்வினையவ் வினைதேயும்
மூன்றுநாண் மூழ்கினவர் கருக்குழியின் மூழ்காரே. 33

பொ - ரை ; திரிகூடமலையில் உள்ள வடவருவியைச் சார்ந்து ஒருநாள் மூழ்கப் பழவினைகள் நீங்கும்; பொருந்திய இருநாள் மூழ்கின் இம்மை உம்மை இருவினையும் நசிக்கும்; மூன்றுநாள் மூழ்கினவர் பிறவியிற்புகுதார்.

அரிதான வடவருவி யாடுவார் வினைகழுவி
இருதான தம்மையறிந் தேற்றதலை வனையறிவார்
ஒருதான மந்நதியி லுயர்மறையோர்க் குதவுமது
தருதானப் பெருக்கமதாய்ச் சந்தானம் பெருக்கிடுமால். 34

பொ - ரை : எய்தஅரிய வடவருவியில் முழுகுவோர் புறம் அகம் என்னும் இரண்டையும் இடமாகக்கொண்டுள்ள தம்மையும் (ஆன்மா) தலைவனையும் அறிந்து இன்புறுவர்; நல்லோர்களுக்கு அங்குச் செய்யப்படும் ஒருதானம் மிகப் பயன் விளைத்துச் சந்தானத்தை வளர்க்கும்.

மித்திரரும் வளநாடு மெய்யுணர்வு மனைவாழ்வும்
புத்திரரும் பேரரசும் பொருள்பலவும் புரிந்தருளும்
சத்துருவின் வலிதொலைக்குஞ் சகலபா வமுந்தீர்க்கும்
சித்திரமா நதிப்புனலிற் சிறுகாலை படிந்தார்க்கே. 35

பொ - ரை : சித்திரநதி தன்கண்விடியலில் மூழுகுவோர்க்கு நண்பர், வளமுள்ளநாடு, மெய்யுணர்வு, மனைவாழ்க்கை, மகப்பேறு, பௌத்திரர் உள்ளிட்ட பொருள்கள் எல்லாந்தரும்; பகைவர் வலியை அழிக்கும்; எல்லாப் பாவங்களையும் தீர்க்கும்.

ஏலவே விரும்பினவர்க் கறம்பொருளின் பமும்வீடும்
சாலவே கொடுத்தருளி யெழுபிறப்புந் தவிர்ப்பதனல்
ஞாலமே லுவந்தாடுந் தவத்தோர்க்கு நான்குவகைப்
பாலுமாம் வடவருவி மருந்துமாம் பவப்பிணிக்கே. 36

பொ - ரை : வடஅருவி தன்பால் மகிழ்ந்துவந்து மூழ்குவோர்க்கு ஞானத்தின் நான்கு கூறுகிய சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் சாதனங்களைப் போல அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிகளை மிகவும் கொடுக்கின்றது. பிறவிப்பிணிக்கு மருந்துபோல உபகாரப்பட்டு எழுபிறப்பையும் தவிர்க்கின்றது.

வேறு

அயனநாள் விழுவி ழாநா ளட்டமி பதினன் கண்ணல்
வியனமர் திருவா ராட்டு மேதகு மாத நாட்கள்
பயனமர் முப்பான் மாகம் பகர்வட வருவி யாடி
நயனமூன் றுடையார் சேவை நண்ணினர் பிறவி நண்ணர். 37

பொ - ரை : உத்தராயண தக்கிணயன நாட்கள், அட்டமி, சதுர்த்தசி திதிகள், சிவபிரானுக்கு உரிய உற்சவசாந்திநாள், மாதந்தோறும் வரும் முக்கிய நட்சத்திரங்கள், மாசித்திங்கள் முப்பது நாட்கள் என்பவை வட அருவியில் மூழ்குதற்கு உரிய சிறப்புநாட்கள். இந்நாட்களில் வடவருவியில் முழுகி முக்கட் செல்வரை வழிபட்டோர் பிறவித்தளையை அறுத்துக் கொள்வர்.

முன்னுவாப் பின்னு வாநாண் மொழிந்தசங் கிராந்தி திங்கள்
மன்னுறு பின்னு வாநாண் மதிகதிர் பாந்தள் சேர்நாள்
இன்னவை யொன்றி லொன்று சதமடங் கேற்ற மாகும்
அந்நதி படிந்தார்க் கேற்ற மாயிர மடங்கு மேன்மேல். 38

பொ - ரை: பூரணை, அமாவாசை, மாதப்பிறப்பு, திங்கட்கிழமையோடு பொருந்தும் அமாவாசை, சந்திரமறைவு, சூரியமறைவு இந்நாட்களில் செய்யும் புண்ணியங்கள் முறையே ஒன்றற்கொன்று நூறு மடங்கு மேன்மேல்மிகும்; சித்திராநதியில் முழுகுவதனல் ஆகும் புண்ணியம் அந்நாட்களுக்கு ஏற்றபடி ஒன்றற்கொன்று ஆயிரமடங்கு ஏற்றம் ஆகும்.

பிறந்தநாண் மூழ்கி னூர்க்குப் பிறப்பரி தாகும் யாண்டு
சிறந்தநாண் மூழ்கி னூர்க்குச் சிறப்பெதி ரெடுப்பர் தேவர்
இறந்தநா ளறிந்து மூழ்கி லிறந்தவர் மூழ்கார் கும்பி
மறந்தநா ளவரைக் காலன் மறக்குநாண் மறக்கு நாளே. 39

பொ - ரை: ஒருவர் தாம் பிறந்த நாளில் வடவருவியில் மூழ்கின் அவருக்கு மீளப்பிறப்பு இல்லை; ஓராண்டில் வரும் சிறந்த நாளில் முழுகுவோர் அடுத்த ஆண்டு அச்சிறந்த நாளைக்காணும்படி உயிர்வாழ்வர்; தம்முன்னேர் இறந்தநாளை அறிந்து வந்து வடவருவியில் மூழ்கின் பிதிரர் கும்பி எனப்படும் நரகம் புகார்; அங்ஙனம் நினையாது மறந்த நாள் காலன் மறத்தலைமறந்து (நினைந்து) அப்பிதிருக்களை ஒறுக்கும் நாள் ஆகிவிடும்.

திருவளர் திருக்குற் றூலச் சிவபுரம் சேரும் போதும்
அருவிநீர் படியும் போது மமலனைப் பரவும் போதும்
ஒருவரை யொருவ ருன்னி லிருவருங் கதிபெற் றுய்வார்
கருவரைப் பிறவி காணு ரவர்தமைக் கண்டு ளோரும். 40

பொ - ரை: நன்மையை வளர்க்கும் சிவபுரமாகிய திருக்குற்றூலத்தை அடையும்போதும், வடவருவியில் மூழ்கும்போதும், அங்கு அம்மையப்பரை வழிபடும்போதும் ஒருவர் தமக்கு வேண்டினர் ஒருவரை நினைப்பின் இருவரும் நற்கதி பெறுவர்; அங்ஙனம் செய்வாரைக் கண்டோர்க்கும் பிறவி இல்லையாம்.

## வேறு

அந்தவுவாச் சங்கிரமம் விதிபாதம் வைதிருதி யைம்பா னென்று
பந்தமனுப் பதினன்கு யுகநான்கு மாளையநாள் பத்தோ டைந்து
தொந்தமா மட்டகைகள் பன்னிரண்டாப் பருவநாட் டொண்ணூற் றாறு
முந்துபுனற் றுறைபடிந்து தருப்பிப்பார் பிதுர்க்கடன்கண் முழுதுந்
[தீர்ப்பார். 41

பொ - ரை: ஓர் ஆண்டில் வரும் பின் உவா எனப்படும் அமாவாசை தினம் 12, வியதிபாதம், வைதிருதி என்னும் யோகங்கள் முறையே 12-ம் 15-ம், மாதப்பிறப்பு 12, ஆக ஐம்பத்தொரு நாளும், மனுவாதிப் புண்ணிய நாட்கள் 14, யுகாதி புண்ணிய நாட்கள் 4, மகாலய பக்கத் திதிகள் 15, தொடர்புள்ள

மார்கழி தை மாசி பங்குனித் திங்களில் வரும் பிற்பக்க சத்தமி அட்டமி நவமிகள் ஆகிய 12 நாட்கள் ஆகிய 45 நாளும் உளப்படப் பிதிர்க்கடன் இறுத்தற்கு உரிய 96 நாட்களிலும் வடவருவியில் முழுகித் தருப்பணம் செய்வோர் பிதுர்க் கடன்களைக் குறைவின்றிச் செய்தோர் ஆவர்.

வி - கு: மனுவாதி 14, யுகாதி 4 ஐ வருடாதி நூல் முதலியவற்றுட் கண்டுகொள்க.

தாம்பெற்ருர் தத்துமகார் தந்துணைவர் பெறும்பாலர் தனையை பாலர்
ஆம்பற்ருல் வளர்த்தமகா ரவனருளா லரிவைபிறர்க் கருளும் பாலர்
ஓம்புற்ற பரிசதனு லுயர்ந்தவரென் றிருநால்வ ரோதுங் காலை
ஏம்புற்ற துயர்தீர விறந்தார்க்குத் திலநீரா லிறைக்கு நீரார். 42

பொ - ரை: தாம் பெற்ற மக்கள், பிறரால் மகவாகக் கொடுக்கப் பெற்ற மக்கள், தம் உடன்பிறந்தார், அவர் பெற்ற மக்கள், தம் மகள் வயிற்றுப் பிறந்த மக்கள், அன்பினல் தம்மால் வளர்க்கப்பெற்ற மக்கள், தன் நாயகன் கட்டளையால் பிறர்க்குப் பெற்ற மக்கள், தாம் காப்பாற்றியதால் உயர்ந்தவராய் மக்கள் எனக் கருதப்பெறுவோர் என்ற எண்வகையினரும் கவலும் துயர்தீர இறந்தார்க்கு எள்ளோடு நீர் இறைத்துக் கடன் முடிக்கும் தன்மையர் ஆவர்.

வேறு

சேணில்வைத்த மதிச்சடையார் சித்திரகங் கையின்மூழ்கிப்
பேணிவைத்த தினத்தொருநாட் பிதுர்ப்பலிவைத் திடுவாரேல்
ஏணிவைத்தார் சுவர்க்கபதத் தெள்ளுடனீ ரிறைப்பார்கள்
காணிவைத்தா ரவர்களுக்கே கயிலாயஞ் சிவலோகம். 43

பொ - ரை: ஆகாயத்தில் உள்ள மதியின் கலையைக் கொண்டு விளங்கும் சடைமுடிக் கடவுளது சித்திரகங்கையில் நூல்களுள் கூறப்படும் புனிதநாள் ஒன்றில் முழுகிப் பிதுர்ப்பூசை இயற்றினேர் சுவர்க்கபதவிக்கு ஏணி வைத்தார் ஆவர்; எள்ளும் நீரும் இறைப்பவர்கள் சிவலோகமாகிய கயிலாயத்தை உரிமை யாக வைப்பவர் ஆவர்.

அந்நிலையே பிதுர்ப்பலிக ளமைத்திடுதற் கமையாதேல்
கன்னி நீர் வடவருவி கலந்தாடித் தருப்பணஞ்செய்
தின்னியன்மா மறைவாணர்க் கியன்றபொருள் வழங்கினர்
பன்னருந்தென் புலத்தார்க்குப் பரகதியை வழங்கினர். 44

பொ - ரை: அவ்வாறு பிதுர்ப்பலி செய்யக்கூடவில்லை யெனின் அழியாத வடவருவி நீரிற் குளித்துத் தருப்பணஞ் செய்து இனிய தன்மையுடைய மறைய வர்க்கு இயன்றதொரு பொருளைக் கொடுத்தவர் சொல்லற்கரிய பிதுரர்க்குப் பரகதியைக் கொடுத்தவர் ஆவர்.

பிள்ளையுஞ்சுற் றமுநீங்கிப் பிறநாட்டி லிறந்தார்க்கும்
விள்ளுமிரு நால்வர்களி லொருவர்விரைந் தேகியந்தத்
தெள்ளருவித் தடத்தொருநாட் சென்றுதருப் பிக்கிலவர்
எள்ளினுக்கா யிரம்வருட மிருப்பர்சுவர்க் காதிகளில். 45

பொ - ரை : மக்களையும் சுற்றத்தையும் நீங்கி வேற்று நாட்டில் இறந்தவர்க்கு மேலே கூறிய எண்வகையில் ஒருவகையினர் விரைந்துவந்து அந்தத் தெளிந்த அருவியில் ஒருநாள் முழுகித் தருப்பணஞ் செய்தால், இரைத்த ஒவ்வோர் எள்ளுக்கு ஆயிரம் ஆண்டு வீதம் சுவர்க்கம் முதலிய மேலுலகத்தில் அவ்விறந்தோர் சென்று வாழ்வர்.

புத்திரரில் லாதிறந்தோர் துன்மரணம் புக்கிறந்தோர்
சத்தநர கிடையழுந்தித் தவிக்குநா ளெவரேனும்
சித்திரமா நதிக்கருணைத் திரைக்கரத்தி லவருடம்பின்
அத்தியளித் தாரவர்க்கே யரசளித்தார் வானுலகம். 46

பொ - ரை : பிள்ளையின்றி இறந்து அல்லது துர்மரணந்தால் உயிர் நீத்து ஏழ்நரகில் அழுந்தினர்க்கு யாரேனும் அவருடம்பின் எலும்பைச் சித்திர நதியில் சேர்த்தினல் அவ்வுடம்புடையார்க்கு வானுலக அரசாட்சி கிட்டும்.

வேறு

முத்தனையார் வரம்பழித்தோர் முதுகுரவர்க் கிடர்புரிந்தோர் முக்கண் ணனை
நத்தனை நான் முகத்தோனை யிகழ்ந்தோர்பல் லுயிர்செகுத்தோர் நன்றி [கொன்றோர்
கத்தனைவிட் டமர்க்களத்தி லோடினோர் நம்பினர்க்குக் கபடஞ் செய்தோர்
எத்துணைப்பா தகரேனும் வடவருவி படிந்தவர்வீ டெய்து வாரே. 47

பொ - ரை : வடவருவியில் முழுகுதல் செய்தபாவங்களுக்குக் கழுவாயாகவும் உள்ளது: முத்துப்போன்ற மகளிர்க்கு உரிய எல்லையைக் கடந்தவர், பெற்றோர்க்குத் துன்பம் செய்தோர், அரன் அரி அயனை இகழ்ந்தவர்கள், உயிர்க்கொலை செய்தோர், செய்ந்நன்றிமறந்தோர், போர்க்களத்தில் தன் தலைவனைத் தனியே விட்டுப் பிழைத்து ஓடினவர், தன்னை நம்பினவர்க்கு வஞ்சனையால் தீங்கு இழைத்தோர் முதலிய எவ்வளவு பாவம் செய்தவராயினும் அவற்றுக்கு அஞ்சி வடவருவியில் வந்து முழுகினோர் அப்பாவங்கள் மன்னிக்கப்பெற்று வீடு பெறுவர்.

அந்தணர்கண் முனிவர்கடன் கழிப்பர்பிர மச்சரிய மரிதி னுற்றிச்
செந்தழலி னவிசொரிந்து மகமியற்றித் தேவர்கடன் கழிப்பர் மேன்மைச்
சந்ததியை யினிதீன்று தங்கள்பிதுர்க் கடன்கழிப்பர் தரைமே லிந்தத்
தொந்தமாங் கடன்மூன்றும் வடவருவி யாடினவர் தொலைப்பர் மாதோ. 48

பொ - ரை : அந்தணர்கள் செய்யவேண்டிய முனிவர்கடன் பிரமசரிய விரதத்தானும், தேவர்கடன் வேள்வியானும், பிதுர்க்கடன் மக்கட்பேற்றானும் முடிக்கப்படும்; தொடர்ந்து வரும் இக்கடன் மூன்றையும் வடவருவியில் மூழ்கினவர் ஒருங்கே முடித்தவர் ஆவர்.

அறியாம லிளமையிற்செய் பாவமெலா நண்பகலி லாடத் தீரும்
சிறுகாலை படிந்திடிற்போங் காளையராய் மனமறியச் செய்த பாவம்
வறிதான புன்மாலை படிந்தார்க்கு முதுமையிற்செய் மாபா வம்போம்
பிறியார்முப் பொழுதாடில் வடவருவி யெழுபிறப்பும் பெயர்க்கு மாதோ. 49

பொ-ரை: நடுப்பகலில் வடவருவியில் நீராடின் இளமையில் அறியாமற் செய்த பாவம் கழியும்; வைகறையில் ஆடில் வாலிபத்தினல் மனம் அறியச்செய்த பாவம் கழியும்; குறைந்த அளவையுடைய மாலையில் ஆடுதல் முதுமையில் செய்யும் பெரும்பாவங்களைப் போக்கும்; எப்போதும் முக்காலமும் நீராடுவார்க்கு எழு பிறப்பினும் செய்த பாவங்களைக் கழிக்கும்,

## நியமவிதி (ஒழிபு)

கள்ளாடு மைம்பொறிக ளடக்கலொரு நெறிநடத்தல் கரணங் காத்தல்
எள்ளாம லீகைதிடந் தன்னுயிர்போன் மன்னுயிர்கட் கிரங்கன் ஞானம்
உள்ளார்வம் பொறைசமித மின்சொலுடன் வாய்மையென வுயரீ ராறும்
தள்ளாத மனத்தீர்த்த மதுபடியார் புனல்படியிற் றவளை நேர்வார். 50

பொ-ரை: தீமையில் உய்க்கும் இயல்புள்ள ஐம்பொறிகளை அடக்கல், அறநெறியைக் கடைப்பிடித்தல், அந்தக்கரணத் தூய்மை, பிறரை இகழாமல் உபகரித்தல், மனஉறுதி, பிற உயிரைத் தன் உயிர்போற் கருதி நேசித்தல், தெளிவுடைமை, உயர்ந்த பொருள்களை உணர்தற்கண் விருப்பம், பொறுமை, அமைதி, இனியவை கூறல், வாய்மை என்னும் உயர்ந்த கொள்கைகள் பன்னிரண்டும் அகத்தைத் தூய்மைசெய்யும் மனத்தீர்த்தம் ஆகும்; இவற்றில் மனத்தைப் படியவிடாது, வடவருவியில் மட்டும் முழுகுவோர் நீரில் எப்பொழுதும் வாழும் தவளைபோல, குறித்த பயனை எய்தப்பெருர். அகந்தூய்மை மேற்கொண்டு தீர்த்தத்தில் ஆடுக என்றபடி.

வளங்கொண்மா னதநான மொழிந்துபிற நதியாடு மாந்தர்க் கெல்லாம்
துளங்குமவர் புறத்தழுக்குத் தொலைவதன்றிப் பெரும்பாவந் தொலையா
களங்கமுறு மலமகற்றிப் பாவமெலாங் கழுநீராக் கழுவு மாற்றல் [தாகும்
உளம்பெறுநா னப்பலனும் வடவருவிப் புனல்படிந்தார்க் குளதா மன்னே. 51

பொ-ரை: மானத தீர்த்தத்தில் முழுகாது, பிறநதிகளில் ஆடுவதனல் புறத்தழுக்கு நீங்குவதன்றி உணர்வைப் பற்றும் பெரும்பாவம் நீங்காதாகும். வடவருவியில் மூழ்குவோர்க்கு முதல்வன் திருவருள் மனமாசு நீக்கிப் பாவங்களையும்கழுநீர் போலக் கழுவுவதனல், அவ்வருவியில் முழுகுவோர்க்கு மானத ஸ்நானப்பயனும் உடன் கிடைக்கின்றது.

இத்தலத்து நதிமகிமை யெங்குமே கண்ணுகி யெங்கு மான
நித்தனறிந் தியமனுக்குங் குறுமுனிக்கும் வாசுகிக்கு நெடிய மாலாஞ்
சுத்தனுக்கு நவின்றபடி வியாதனெனக் கொருதொகையாச் சொல்ல யானும்
முத்தகமா வுமக்குரைத்தேன் விரித்துரைக்க வயனுலு முடியா தென்ருன். 52

பொ-ரை: திருக்குற்றாலத்து வடவருவியின் பெருமையை எங்கும் நிறைந்து எல்லாம் அறியும் பரமசிவன் பக்குவம் கண்டு இயமன், அகத்தியர், வாசுகி, திருமால் என்போர்க்கு உரைத்தருள, அவ்வாறு வியாசமுனிவர் அறிந்து எனக்குத் தொகுத்துச் சொல்ல, யானும் (சூதமுனிவர்) தொகுத்தே உரைத்தேன்; விரித்து அளவுகூட உரைத்தல் பிரமனுக்கும் அரிதாம்.

தேனுறு சித்திரமா நதிமகிமைத் தேனுறு செவிகா லாகப்
பானுறு மனத்தடத்துப் பாய்ந்துதவப் பயிர்தழைத்த படிவர் பின்னும்
வானுறு திரிகூட வரையாறு தனிற்போந்து மழுவ லானைப்
பூநாறு மதுச்சொரிந்து போற்றுமா றுணர்த்துகெனப் புகல்வான் சூதன். 53

பொ - ரை : தேன் மணக்கும் சித்திரநதியின் பெருமையாகிய தேன் ஆறு தம் செவிகளே வாய்க்காலாக நல் ஊழ் விளையநின்ற தம் உள்ளமாகிய விரிந்த வயலில் பாய்ந்து தவமாகிய பயிர் தழைத்த முனிவர்கள், மேலும் சூதமுனிவரை வேண்டினர்; ஆகாயகங்கை திரிகூடமலையில் உள்ள வடவருவியின்கண் வந்து மழுப்படை ஏந்திய சிவபிரானை மலர்களினின்றும் உண்டாகும் தேன் சொரிந்து போற்றியவரலாற்றை எமக்கு உணர்த்துக என, சூதமுனிவர் கூறலுற்றார்.

வடவருவிச் சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 368

---

# சிவமதுகங்கைச் சருக்கம்

இரவி தன்குலச் சகரனேர் பரிமக மியற்றப்
புரவி யைத்திசை விடுத்தலு மதனைவான் புரப்போன்
கரவி லுய்த்தனன் கபிலன்வாழ் பிலத்தது காணுன்
தரையிற் றேடுபு மகன்மக னஞ்சுமான் சலித்தான். 1

பொ - ரை: சூரியகுலத்துத் தோன்றிய சகரன் என்னும் அரசன் அசுவமேதம் இயற்றக்கருதி ஒரு குதிரையைப் பலதிசைகளிலும் சென்று வெற்றியோடு திரும்புவதற்கு விடுத்தான்; தேவர் உலகம் ஆளும் இந்திரன் அதனை யாரும் காணுதபடி கபிலமுனிவன் தவம்புரியும் ஒரு பிலத்தில் செலுத்தி மறைத்தான்; சகரன் மகன் போசணன்; அவன்மகன் அஞ்சுமான். சகரன் பெயரனுகிய அஞ்சுமான் நிலவுலகில் அதனைத் தேடிக் காணுது வருந்தினன்.

அதனைச் சாகர ரறுபதி னுயிரர் துருவி
விதனத் தாற்புவி சூழ்வரத் தொட்டனர் மிசைந்தார்
பதனத் தோர்புடைக் கண்டனர் முனிவன்மேற் பாய்ந்தார்
இதனைக் கண்டிலான் விழித்தலுஞ் சாம்பரா யிறந்தார். 2

பொ - ரை: சகரனுடைய இளையமனைவியின் புத்திரராகிய சாகரர் அறுபதினுயிரர் அதனைத் தேடிக் காணுத வருத்தத்தால் நிலவுலகைச்சுற்றித் தோண்டி மேற்சென்றனர்; அமைதியான ஓரிடத்துக் கண்டு, ஆங்கிருந்த கபிலமுனிவன் மேல் பாய்ந்தார்; இஃது ஒன்றையும் அறியாமல் முனிவர் கண்விழிப்பச் சாகரர் சாம்பராய் மரித்தனர்.

சகரன் சாகரந் தொட்டவ ரிறத்தலுந் தகவால்
மகமு டித்தன னஞ்சுமான் மகன்றரு மகவாம்
பகிர தன்றவ மியற்றினன் விரிஞ்சனைப் பணிந்து
நிகரில் சாபத்தின் மாய்ந்தவர் நரகினை நீப்ப. 3

பொ - ரை: அவர் இறப்பவும் சகரன் என்னும் மன்னவன் தக்கபடி பரிவேள்வியை முற்றுவித்தான்; அவன் பெயரன் அஞ்சுமானுக்குப் பெயரனுகிய பகிரதன் சாகரர் முனிவர்சாபத்தால் எய்திய நரகினின்று உய்தி பெறுதற் பொருட்டு, பிரமனை நோக்கிக் கடுந்தவம் இயற்றினன்.

பங்கை யாசனன் மொழிப்படி கங்கையைப் பரவிச்
சங்கை யாத்தவம் புரிந்தனன் கங்கையைத் தரிப்பான்
மங்கை பாகனை வணங்கிநோற் றன்னவன் வரத்தால்
கங்கை பாற்றவம் புரிந்தன னளப்பருங் காலம். 4

பொ - ரை: பிரமன் சொற்படி கங்கையை நோக்கியும், அக்கங்கையைத் தாங்குவதற்குச் சிவபிரானை நோக்கியும் தவஞ்செய்து, சிவபிரான்பால் வரம் பெற்றனன்; மேலும் அளவில் காலம் கங்கையை நோக்கித் தவம் புரிந்தான்.

புரியுங் காலையில் வரநதி யதிர்த்துவான் பொதிர்த்து
விரியு மெண்டிசை நடுக்குற வண்டமும் வெடிப்பக்
கிரிவி லாளையு மதித்திலள் குதித்தனள் கிளர்பார்
தரிப டாதென வமரரு முனிவருஞ் சலிப்ப. 5

பொ - ரை: அங்ஙனம் தவம்செய்யும்போது மேலான கங்கையானவள் ஆரவாரஞ் செய்து, மேலுலகை ஓட்டைசெய்து, எண்திசைகளும் நடுங்கவும் அண்டமுகடு உடையவும், மேருவில்லாளனையும் மதியாதவளாகிக் கீழ் இறங்கி வந்தனள்; அமரரும் முனிவரும் நிலம் தாங்காதெனச் சலித்தனர்.

மாக மண்டலத் துடுக்குலங் கயலென மறுக
மேக மண்டலம் பாசியா மிதப்பவிண் கதிர்கள்
யோக மண்டலத் திருவகைக் கமலங்க ளூறழ
நாக மண்டலச் சடையில்விண் ணடுக்குறப் பாய்ந்தாள். 6

பொ - ரை: ஆகாய வட்டத்தில் இருந்த நட்சத்திரங்கள் மீன்கள் எனச் சுழன்றன; மேகக்கூட்டங்கள் பாசிபோல் மிதந்தன; சூரிய சந்திரர் யோகியர்களுடைய ஆதாரங்களில்உள்ள உந்திக்கமலத்தையும் இதயகமலத்தையும் ஒத்தன; இந்நிலையில் வந்த கங்கை பாம்பு மண்டும் அமைதியான சடையில் (நாகம் மண்டு அலம் சடை) தேவரும் நடுங்கும்படி பாய்ந்தாள்.

அடைய வாயிரம் பருவமா யிரமுகத் தடினி
உடைய நாயகன் சடைமிசைப் பாய்தலு முலறிப்
புடைபி துங்குரு திரவிமுன் புற்பனி போன்றாள்
விடைபி னார்புகழ் பாடினு ராடினர் விண்ணோர். 7

பொ - ரை: ஆயிரம் யாண்டுகள் முற்றும் ஆயிரமுகத்தான் வந்து பாய்ந்த ஆறு (தடினி) இறைவன் சடைக்கண் வந்தவுடன் சுருங்கிப் பக்கத்தில் சிறிதும் வெளியேறாது'கதிரவன்முன் புல்நுனிப் பனித்திவலைபோலக் கரந்தாள்; இதைக் கண்ட தேவர் இறைவன் புகழ்பாடி மகிழ்ந்தார்கள்.

வானெ லாமுடைத் தெழுசுர நதிப்புனல் வரதன்
கான மார்சடைக் காட்டிடைச் சுவறலாற் கலங்கி
மீன லோசனை பாகனை யிறைஞ்சினன் வேந்தன்
ஞான நாதர்தாள் வீழ்ந்தனள் கங்கையு நடுங்கி. 8

பொ - ரை: ஆகாயத்தின் எல்லைகளை அழித்துவந்த கங்கை சிவபிரானுடைய வண்டுகளின் இசை நிறைந்த சடைக் காட்டின்கண்வந்து வற்றுதலால், பகிரதன் கலங்கி அங்கயற்கண்ணிபாகனைத் தாழ்ந்து இறைஞ்சினன்; கங்கையும் நடுங்கி இறைவன் அடிக்கண் விழுந்து வணங்கினள்.

இளிகொள் கங்கையை யமைத்தர னரசனுக் கிரங்கி
ஒளிர்ப னிக்கிரி விடுத்ததோர் துளியெழு வகையாய்
விளிகொள் சீதையுஞ் சுசுட்டுவுஞ் சிந்துவு மேல்பால்
நளினி பாவனி கலாதினி கீட்டிசை நடப்ப. 9

பொ - ரை: சடையை விட்டிறங்கிய கங்கையைச் சிவபிரான் அமைதியுறச் செய்து பகிரதனுக்கு இரங்கி இமயமலைக்கண் விடுத்த ஒரு துளி ஏழுவகையாய்ப் பிரிந்து பாய்ந்தது; சீதை, சுசுட்டு, சிந்து என்னும் ஆறுகள் மேற்றிசையிலும் நளினி, பாவனி, கலாதினி என்பவை கீழ்த்திசையிலும் வழிக் கொண்டன.

பெருகு கங்கைதென் பாலதாய்ப் பகிரதன் பின்போய்த்
திருகு சன்னுவின் வாய்ப்பெய்து செவிவழி விடுப்ப
மருவு சாநவி சுடலைபாய் தலுமவன் மரபோர்
நரகொ ழிந்துபொன் மானமேற் சுவர்க்கநா டடைந்தார். 10

பொ - ரை: பெருகிவரும் கங்கை தென்றிசையில் பகிரதன் பின்சென்று, மாறுபாடு வல்ல சன்னுமுனிவர் வாயிற்கொண்டு செவிவழி விடுக்க வெளிவந்த சாநவி (கங்கை) சகரர்கள் நீருய்ப்போன சுடலைக்கண்பாய, பகிரதன் முன்னோராகிய அவர்கள் நரகின் நீங்கிப் பொன் விமானத்தில் சுவர்க்கம் புக்கார்.

வேறு

கதியின்மேற் சகரர்தமை விடுத்தநதி கண்ணுதலார் கயிலை மேவி
மதிகுலாஞ் சடையாயென் மாய்ந்தவுருக் காட்டுகென வணங்க நாதர்
சதிசெய்பா தகந்தேய்க்குந் தருமமுரு வளர்க்குமந்தத் தரும பாவத்
ததிகமாஞ் சிவதருமஞ் சிவத்துரோ கங்களென வருளிப் பின்னும். 11

பொ - ரை: மேற்கூறியவாறு சகரரைச் சுவர்க்கம் சேர்ப்பித்த கங்கை திருக்கயிலையை அடைந்து சிவபிரானை 'என்மறைந்த உருவைமீள அருள்க' என வேண்டி வணங்க, அவர் அறிவுறுக்கின்றார்; மக்களை வஞ்சிக்கும் பாவம் உருவைத் தேய்க்கும், அறம் அதனைவளர்க்கும். அவற்றுள் மிக்க வலியுடையவை சிவதன்மமும் சிவத்துரோகமும் ஆகும்.

ஒத்திடுமெண் பத்தியினா லெய்துவது சிவதரும முரைக்குங் காலைத்
துத்தியம்பத் திமைபூசை புரியாமை புரிந்தவரைத் துதித்தி டாமை
பத்திபுரிந் தமைமறத்தல் சிவநிந்தை யெனப்புகலப் படுவதாறும்
வித்தெனவும் வேரெனவும் விளைதல்சிவத் துரோகத்தின் விளைவுமாதோ. 12

பொ - ரை: உயிர்களின் நன்மைக்குப் பொருந்திய எண்வகைப்பத்தியினால் விளைவது சிவதன்மம்; (அவையாவன: சிவனடியார்களை வழிபடல், சிவபூசை கண்டு மகிழ்தல், சிவபூசைசெய்தல், தான் செய்யும் நற்செயல்களைச் சிவபிரானுக்கே ஒப்படைத்தல், சிவன்புகழ் கேட்டுக் கண்ணீர்மல்குதல், மயிர்சிலிர்த்தல், சிவத்தியானம், சிவதன்மத்திற்கு உரியவற்றைத்தான் அபகரியாமை என்பன) சிவன்பால் அன்பின்மை, அவன் மெய்ம்மையான புகழைக் கூறாமை, அவனைப் பூசியாமை, இங்ஙனம் சிவவழிபாடுடையோரைப் போற்றாமை, பத்திபுரிந்தார் பெருமையை மறத்தல், சிவநிந்தை என்னும் ஆறும் சிவத்துரோகத்திற்குவித்தாகவும் வேராகவும் இருந்து, அதனைத்தோற்றுவித்துப் பெருக்கும்.

அவையாறிற் சிவநிந்தை யதிகமதை யெளிதெனநீ யடைந்தா யீது
தவமாகப் பலகோடி யுகங்கள்புரி யினுமுனக்குத் தவிரா தென்றார்
இவைதீர வருள்புரிய வேண்டுமென விறைஞ்சுதலு மிறைவர் நோக்கிச்
சிவபூசை யாயிரம்யாண் டியற்றியிருந் தனையாகிற் றீரு மென்றார். 13

பொ - ரை: அந்த ஆறனுள்ளும் மிகக் கொடியது சிவநிந்தை; அதன் கொடுமையை எண்ணாது நீ (கங்கை) அடைந்தாய்; இப்பாவம் பலகோடி யுகம் தவஞ்செயினும் நீங்காது என்றார் இறைவனார்; கங்கை அப்பாவம் தீர அருள் புரியவேண்டும் எனத் தாழ்ந்து எழ, சிவபூசையை ஆயிரம் யாண்டு தொடர்ந்து இயற்றின் இப்பாவம் தீரும் என்றார்.

உன்னுடைய சன்னிதியைப் பிரியிலெனக் கினியொருநா ளுகமா மென்று
பின்னுமவள் வணங்குதலும் பெரியபிரான் சிறிதிரங்கிப் பேதாய் பல்யாண்
டின்னிலத்திற் றீர்ப்பரிய பாவமொரு தினம்வசித்தார்க் கெளிதாத் தீர்க்கும்
மன்னுமொரு தலமுளது நமதுரக சியம்பிறர்க்கு வழங்கே மென்றார். 14

பொ - ரை: கங்கை பின்னும் இறைவனை வணங்கி, "உன் திருமுன்பு விட்டு நீங்கின் அஃது ஒருநாள் ஒரு யுகமாக என்னை வருத்தும்" என்றனள்; எல்லாரினும் உயர்ந்த பெருமான் "பேதையே! பல ஆண்டுகளாகத் தீர்க்க முடியாத பாவத்தை ஒருநாள் தங்கி வாழ்ந்தாலே தீர்க்கும் தலம் நிலைத்ததாய் உள்ளது; அதனை யாம் மறையாகக் கொண்டுள்ளோம்; பிறர்க்குச் சொல்லுவ தன்று" என்றார்.

அண்ணலே யருளுகென வணங்கும்வர நதிக்கிரங்கி யமலர் நோக்கித்
தண்ணருவித் திரிகூடம் யாமிருக்குஞ் சயிலமந்தச் சயில மீது
நண்ணுமோ ரிலிங்கமதை யருச்சித்தாற் பாவமொரு நாளிற் றீரும்
பெண்ணணங்கே மதுவினாற் பூசைசெயி லெமையணுகப் பெறுவா யென்றார்.

பொ - ரை: "பெருமையிற் சிறந்தோனே! எனக்கு இரங்கி அருள்புரிக" எனக் கங்கை வணங்க, சிவபிரான் உரைப்பாராயினர்: 'யாம் விளக்கமாகத் தங்கியிருக்கும் மலை தண்ணிய அருவிகளையுடைய திரிகூடமலை; அதன்கண் உள்ள சிவலிங்கத்தை அருச்சித்தால் உன்பாவம் முழுவதும் ஒரே நாளில் தீரும்; தெய்வ மகளே! தேன் கொண்டு வழிபடின் எம்மை அணுகப் பெறுவாய்' என்றனர்.

என்றுதிரு வாய்மலர்ந்து விடைகொடுப்பக் கயிலைகடந் திமைய நீங்கிக்
குன்றுதனைச் சிலைவளைத்தார் திரிகூடத் தருவிசொரி குவட்டி னேகித்
துன்றுசிவ லிங்கமதை மதுச்சொரிந்து பூசைசெய்து துதிக்குங் காலை
ஒன்றுநதித் திருமடந்தை விழிகளிப்ப மழவிடைமே லுதித்தா ரண்ணல். 16

பொ - ரை: இங்ஙனம் கூறி விடைகொடுப்பக் கங்கை கயிலையைக் கடந்து, மேருவை வில்லாக வளைத்த சிவபெருமானுக்கு இனிய திரிகூடத்தில் அருவி சொரியும் சிகரத்தில் சென்று ஆண்டு உள்ள சிவலிங்க மூர்த்தியைத் தேன் சொரிந்து வழிபட்டுத் துதிக்கும்போது, அவள் கண்கள் மகிழும்படி சிவபிரான் விடைமேல் தோன்றினர்.

பாதகமா மிருள்விடிய வுதயகிரி மேலுதிக்கும் பானு வேபோல்
வேதநா யகன்விடைமேற் றோன்றுதலு மனங்களிப்ப விழிநீர் போர்ப்ப
ஆதிநா யகசரண மமலநா யகசரண மருளா னந்தச்
சோதிநா யகசரணஞ் சரணமெனக் கங்கைமங்கை தொழுது வீழ்ந்தாள். 17

பொ - ரை: சிவத்துரோகமாகிய பேரிருள் கெடும்படி உதயமலையில் எழும் கதிரவனைப்போல் வேதநாயகன் விடைமேல் தோன்றினபோது, கங்கை கண்டு பேரின்பத்தில் மூழ்கி அன்பு வயப்பட்டுச் சரணம் சரணம் எனக் கூறித் தொழுதிறைஞ்சினள்.

சரணமென விறைஞ்சுநுதலு மன்பர்தமக் கன்புடைய தம்பி ரானுர்
விரணமற வினை நீக்கி வரநதிக்கு விதிகாணு வேணி யீந்தார்
பரமர்தமைக் கங்கைமங்கை மதுவினுற் பூசைபுரி பரிவி னுலே
அரணமா மத்துறையு மாதிசிவ மதுகங்கை யாய தென்ருன். 18

பொ - ரை: சிவபெருமான் அவளுக்குத் துன்பம் நீங்கும்படி பிரமனும் அறியமாட்டாத சடையை இடமாகக் கொடுத்தார்; இங்ஙனம் கங்கை சிவபிரானைத் தேனுல் பூசை புரிந்த அன்பு காரணமாக, காவலாக உள்ள அத்துறை " ஆதி சிவமது கங்கை " எனப் பெயர் பெற்றது எனச் சூதமுனிவர் விளக்கினுர்.

நான்முகத்து முனிவர்சூ தனைவாழ்த்தி யெமதுவினைக் கடுங்கோ டைக்கு
வான்முகத்து முகில்போல வந்தருளி மதுகங்கை மகிமை யென்னும்
பான்முகத்து மாரிபெய்தாய் நன்னகராஞ் சருக்கரைப்பூம் பந்தர் மீது
தேன்முகத்து மழைபோலுஞ் சிவபிரான் மகிமையினைச் செப்பா யென்ருர். 19

பொ - ரை: சூதமுனிவர் திருவடிக்கண் இருந்த முனிவர்கள் அவரை வாழ்த்திக் கூறுவர்: 'எமது முன்னைவினையாகிய கடுங்கோடைக்கால வெப்பந் தணித்தற்கு ஆகாயத்துத்திரண்டு எழும் கருமேகம்போல எழுந்தருளி மதுகங்கையின் பிரபாவமாகிய அமுதமழையைச் சொரிந்தாய்; திருக்குற்றால நகராகிய சருக்கரைப் பந்தரின்மேல் தேன்மழைபோல எழுந்தருளியுள்ள சிவபிரான் மகிமையை இனி எமக்கு உரைத்தருள்க' என்ருர்.

ஆர்த்தமால் வரைதவத்தி னுர்த்தமால் வரைநதிகட் கதிக மான
தீர்த்தமான் மியம்பிறவி தீர்த்தமான் மியங்கருணைத் திருக்குற் ருலம்
கூர்த்தமா கதித்தான மிவைமூன்று முடையானைக் கூறென் பார்க்கு
மூர்த்திமான் மியம்பெருக மொழிகின்ருன் புராணமெலா மொழிந்த நாவான்.

பொ - ரை: மேகம் (மால்) முழங்கும் திரிகூடமலை தவத்தில் கட்டுப்படுத்தும் மலை; மலை அருவிகளுள் சிறந்த தீர்த்தத்தின் பெருமை பிறவியைத்தீர்த்த பெருமை; கருணையைப் பெருக்கும் திருக்குற்றாலநகர் மிகப்பெரிய சிவகதியைத் தரும்தானம். இம்மூன்றும் உடைய முதல்வன் பெருமையைக் கூறுக என வேண்டிய முனிவர்களுக்குப் புராணம் முழுவதும் வல்ல சூதர் மூர்த்திமான்மியத்தை விரித்து மொழிகின்ருர்.

*சிவமதுகங்கைச் சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — 388

# மூர்த்திவிசேடச் சருக்கம்

ஒளியாக வெளியாக வுருவாக வருவாக வொன்றி னாலும்
தெளியாத பெருமானைத் தெளிவார்க டெளிவானைத் திரிகூ டத்தில்
அளியானை யனைத்துலகுக் கரியானென் றுரைத்தமறை யடியார்க் கென்றும்
எளியானென் றெடுத்தியம்பு மாதலால் யானுமெடுத் தியம்பு வேனால். 1

பொ - ரை: சுத்த மாயையின் காரியமாகிய வைந்தவங்களாலும், வியாபகம் எனப்படும் ஆன்மபோதத்தாலும், தூலமாகிய பிரகிருதி மாயையின் காரியங்களாலும், சூக்குமப் பிரகிருதி எனப்படும் அசுத்த மாயையின் காரியங்களாலும் தெளியப்படாத பெருமானை, அவன் அருளே கண்ணாகக் காண்பார்க்குத் தலைப்பட்டு உணரவரும் பொருளை, திரிகூடத்தில் எழுந்தருளுதலில் விருப்புடையானை, எல்லா உயிர்க்கும் உணரவும் ஓதவும் அரியன் என்று கூறிய மறையே தன் அடித்தொண்டு புரிவார்க்கு எப்போதும் எளியவன் என்று எடுத்தோதுதல்பற்றி யானும் அவன் பெருமையைக் கூறலுறுகின்றேன்.

வி - கு: வைந்தவம் - விந்துவின் காரியம், விந்து - சுத்தமாயை.

கைத்தலத்து மழுவேந்திக் கயிலைமுதற் றலத்துறையுங் கடவு ளோரின்
முத்தலைவெற் பினிலுறையு மூர்த்தியே யுயர்கருணை மூல மூர்த்தி
எத்தலத்தும் பரமனுள னிவனதிக னெனவுரைப்ப தெவனென் பீரேல்
அத்தலத்தி னிறைந்திருப்ப னெத்தலத்து மோரோர்கூ றமையா நிற்பன். 2

பொ - ரை: உயிர்கள் தன்னை அறிந்து வழிபடுதற்பொருட்டு மழு முதலியவற்றை ஏந்திய அருள் உருவினனாய்ச் சிவபிரான் கயிலை முதலாகிய அருள்நிலைத் தானங்களில் எழுந்தருளும் மூர்த்திகளில் திரிகூடமலையில் உள்ள மூர்த்தியே உயர்ந்த கருணை பொழியும் மூலமூர்த்தி ஆகும்; அதற்குக் காரணம் பிற தலங்களில் தனது ஒவ்வொரு கூறே விளங்க நிற்கும் பெருமான் திரிகூடத்தில் தனது முழுமுதன்மை விளங்கக் குறைவிலா நிறைவாய் விளங்குவதே ஆகும்.

ஊழி

கடலேழும் புறக்கடலுந் திரைபெருகி யுவட்டெடுக்குங் கற்பாந் தத்தில்
அடலாழி வரைசாய்ந்து மேருவரை நிலைகலங்கி யசல மெல்லாம்
தடுமாறி யடுக்கழிந்து புவனசரா சரமொடுங்கித் தரங்க வாரி
தொடராக மண்டியபின் படரூழிக் கனலெழுந்து சுவற்றிற் றன்றே. 3

பொ - ரை: எழுகடலும் புறக்கடலும் அலைகளோடு பெருகி உலகை மூழ்கும்படி செய்யும் கற்பமுடிவில், சக்கரவாளம் சரிந்து மேருமலை தன் நிலையின் வழுக்கிப் பிற மலைகளும் தம் அடுக்கு அழிந்து தாவர சங்கமப் பொருள்கள் எல்லாம் அழியும்படி பெருவெள்ளம் தொடர்ந்து பெருக்கெடுத்தபின் உடன் தோன்றும் ஊழிநெருப்பு எழுந்து அவ்வெள்ளத்தை வற்றச் செய்தது.

அண்டமூ லத்தெழுந்து புவனமெலாஞ் சுட்டகன லடங்க மேலே
சண்டவா யுப்பரந்து தாவியற வொடுக்கியபின் றரிப்பாய் நின்ற
விண்டலமும் விண்டலமேற் கடவுளரு மேலுளதத் துவமு மாங்கே
பண்டையுகந் தனிற்றோன்று முறையாக ஒடுங்கவொரு பரனே நின்றான். 4

பொ - ரை: அண்டத்தின் மூல காரணத்தினின்றும் எழுந்த நெருப்பு எவற்றையும் சுட்டு நீறாக்க, வேகமுடைய காற்று மேல் ஓங்கி எல்லாவற்றையும் அருவமாய்க் கிடக்கும்படி ஒடுக்க, அந்நிலையில் ஆதாரமாகிய ஆகாயமும், ஆண்டு உள்ள தேவர்களும், மேலுள்ள நாதம் ஈறாகிய தத்துவங்களும் முன் தோன்றிய முறைப்படி ஒடுங்கின; சிவபெருமான் ஒருவனே எல்லாவற்றையும் தன் திருவருளின் அடங்கக்கொண்டு மாறின்றி நின்றான்.

பின்றாகி யளவிறந்த காலமெலாம் பிரிந்திடவும் பிரியா வண்ணம்
ஒன்றாகி யெவ்வுயிர்க்கு முணர்வாகிக் குணங்குறிக ளொடுக்கந் தோற்றம்
இன்றாகி நின்றவனே யிறையாக வெழுந்தருளி யிருந்தா னென்றும்
பொன்றாது சிவபுரம்போ னின்றபுடார்ச் சுனபுரத்துப் பொருந்தி மாதோ.

பொ - ரை: எப்பொருட்கும் இறுதியாகி அளக்கப்படாத காலம் மற்றப் பொருள்கள் ஒடுங்கி நிற்கவும், தான் அவற்றைப் பிரிதலின்றி ஒற்றித்து அவற்றுக்குச் சார்பாகி, எவ்வுயிர்க்கும் உணர்வளிப்போனாகி, குணமும், பெயரும், ஒடுக்கத் தோற்றமும் இலனாகி உள்ள சிவபிரான், என்றும் அழிதலின்றி சிவலோகத்தைப்போல் நிலைபெறும் புடார்ச்சுனபுரத்து மூலலிங்கவடிவில் எழுந்தருளி விளங்கினான்.

ஒருவடிவுந் தனக்கெனவொன் றிலனாகிக் கருணைதிரு வுருவாக் கொண்டு
திருமுகங்க ளாயிரமுங் கண்களா யிரமுமெனத் திகழுஞ் சோதி
இருமைபெறு முலகனைத்து மொடுக்குமுறை தோற்றுவிக்கு மியற்கை பேணி
அருணா நூற் றிதழ்க்கமல மலர்மேலந் தணனுருவ மாகி னானே. 6

பொ - ரை: தனக்கென வடிவு ஒன்றும் இன்றி உயிர்களின் பொருட்டுக் கருணையே திருவுருவாய் எங்கணும் முகமும் எங்கணும் கண்களும் கொண்டுள்ள பரஞ்சோதி, பெருமை உள்ள உலகனைத்தையும் முன் ஒடுக்கியவாறு தோற்றுவிக்கத் திருவுளங்கொண்டு, நூறு இதழ்களையுடைய செந்தாமரை மலர்மேல் அந்தணன் உருக்கொண்டான்.

திசைமுகமு மொருநான்கு மவுலிகளு மிருநான்கு செம்பொற் றோளும்
விசையநெடுந் தண்டமும்பொற் கமண்டலமு முப்புரிநூல் விளங்கு மார்பும்
இசையமலர்ப் பதுமபீ டத்திருந்து நாமகளா ரிடத்தின் மேவி
அசைவிலாப் புவனமெலாம் வான்வளிதீ நீர்பாரா லருளிச் செய்தான். 7

பொ - ரை: நான்கு திருமுகங்களும் நான்கு திருமுடிகளும் எண்தோள்களும் செம்பொன் நிறமும் உடையவராய், தண்ட கமண்டலங்களைக் கையிற் கொண்டு மார்பில் முப்புரிநூல் விளங்கத் தாமரை இருக்கையில் இருந்து, கலைமகளைத் தன் இடப்பால் மேவுவித்து ஆகாய முதலிய ஐம்பூதங்களால் தம்தம் நிலைகளிற் பிறழாதபடி புவனங்களைத் தோற்றுவித்தான் முதல்வன்.

வானமுகி லோரேழுஞ் சூரியருஞ் சந்திரரும் வளர்கோ ளேழும்
மீனினமும் விண்ணவரும் விண்ணவர்வேந் தனுந்திசைக்கு வேந்தர் யாரும்
ஏனையராங் கடவுளரு மிருபொழுது முக்காலு மிருது வாறும்
நான்மறையா றங்கமுதற் பலகலையும் படைத்தருளி நயப்பான் மன்னோ. 8

பொ - ரை: ஆகாயத்தில் உலவும் மேகம் ஏழையும், ஞாயிறு மதி என்னும் இருசுடர்களையும், ஏழுகிரகங்களையும், நட்சத்திரங்களையும், வானவரையும், அவர் தம் தலைவனையும், எண்திசைக் கடவுளரையும், ஏனைய தேவ கணங்களையும், பகல் இரவு, ஆறுபருவம், முக்காலம் என்னும் காலப்பாகுபாடுகளையும் நால்வேதம் ஆறு அங்கம் முதலிய கலைகளையும் விருப்பத்தால் படைத்தருளி(னன்).

ஓமவேள் வியும்வேள்வித் திரவியமு முயர்காயத் திரியு நல்கித்
தாமரைவாண் முகம்புயமார் பூருவினிற் சாதியொரு நான்கு மீன்று
நாமவா ரிதிபலவுந் தடம்பலவும் வரைபலவு நதிகள் யாவும்
தேமலர்ப்பூஞ் சோலைகளுந் திகிரிநெடுங் கானகமுஞ் சிருட்டித் தானே. 9

பொ - ரை: ஓமம் செய்தற்குரிய வேள்விகள், வேள்விக்குரிய உபகரணப் பொருள்கள் உயர்காயத்திரி முதலிய சந்தசு(யாப்பு) என்பவற்றைப் படைத்தான்; முகம், புயம், மார்பு, தொடை என்னும் நான்கு உறுப்புக்களினின்றும் நால்வகை வருணங்களைப் படைத்தான்; அச்சந்தரும் கடல்கள் பலவும், நீர் நிலைகள் பலவும், மலைகள் நதிகள் பூஞ்சோலைகளும், மூங்கில் வளரும் காடுகளும் படைத்தான்.

பிணிமருவு பரசமயச் சூறையிற்பட் டுலகமெலாம் பிறழா வண்ணம்
அணிபெருகுஞ் சிவசமய நெறிதருசெண் பகக்காவு மருளிச் செய்து
பணிவிடைவா னவர்புரிய மறைபரவ நான்முகத்தெம் பகவ னாகிக்
குணில்பொருமும் முரசதிருந் திரிகூடக் கோயில்குடி கொண்டா னன்றே. 10

பொ - ரை: கட்டுப்பாடுள்ள வேற்றுச்சமயச் சூறாவளியால் உலகம் முழுதும் பிறழ்ந்து செல்லாதபடி அழகுபொருந்திய சிவநெறியை விளக்கும் செண்பக வனத்தையும் படைத்து, தேவர் பணிசெய்யவும் மறைகள் புகழ்கூறவும் நான்முகக் கடவுளாகிக் குறுந்தடியால் தாக்கப்பெற்று மங்கலமுரசு அதிரும் திரிகூடமலைக் கோயிலில் விளங்கியிருந்தான் முதல்வன்.

பார்பூத்த வயன்வடிவாற் படைத்தருளு முலகமெலாம் பரிப்பான் மேனி
கார்பூத்து வாய்பவளக் கனிபூத்துக் கண்கரங்கால் கமலம் பூத்து
வார்பூத்த கொங்கைமட மயிலிரண்டு மார்புபுய வரைமேற் பூத்துக்
கூர்பூத்த வளையாழிப் படைபூத்த நெடியகுணக் குன்ற மானன். 11

பொ - ரை: இங்ஙனம் படைத்த உலகத்தைக் காத்தற்பொருட்டுக் கரிய திருமேனியும் பவளவாயும் தாமரைபோன்ற கண் கரம் கால்களும் கொண்டு, வாராற் கட்டப்பெற்ற தனங்களையுடைய திருமகள் பூமகள் என்னும் இருவரை முறையே மார்பிலும் புயத்திலும் ஏற்று, சங்கு சக்கரமேந்திய நெடியோனாகத் திருவுருக்கொண்டான் முதல்வன்.

கமலலோ சனனாகிக் காத்தனன்முன் படைத்தவெலாங் காத்து முக்கண்
அமலநா யகனாகக் குறுமுனிக்கா யமர்ந்ததுமே லறைவா மாதி
விமலையாம் பரைமருவி யிச்சைஞா னக்கிரியை மேவி யாடும்
நிமலனே யத்தலத்து மூவராய் முத்தொழிலு நியமித் தானே. 12

பொ - ரை : இங்ஙனம் தாமரைக் கண்ணனாகி உலகமெல்லாம் காத்தனன். அகத்தியர் பொருட்டு முக்கட்செல்வராய் அமர்ந்தமை பிற்கூறப்படும். தூய பரா சத்தியும், அதனினின்று தோன்றும் ஆதி, இச்சை ஞானக் கிரியா சத்திகளும் உடன் பொருந்த பரநடனத்தையும், பஞ்சகிருத்திய நடனத்தையும் இயற்றியருளும் நின்மலனே திரிகூடத்தலத்து மூவராய் நின்று முத்தொழிலும் நடைபெற வைத்தான்.

முப்பாலாய் முப்பொருளாய்ச் சிற்பொருளாய்த் திரிகூட முதல்வ னான
ஒப்பாரு மில்லானுக் கொப்பாமற் றொருபொருளை யுரைக்கற் பாற்றோ
அப்பால னவ்வடிவ னக்குணத்த னென்றவனை யறிதற் கின்னம்
எப்பாலு மிருவருக்கும் பேறிலைநான் மறைக்குமெழுத் தில்லை மாதோ. 13

பொ - ரை : இலய போக அதிகாரம் என்னும் முப்பகுப்பாய், மும்மூர்த்தியாய், ஞானமயனாய் நின்ற திரிகூட முதல்வன் தனக்கு ஒப்பு இல்லாதவன்; அவனுக்கு ஒப்பாக ஒரு பொருளையும் கூறுதல் தகாது; அப்பகுப்பும் அவ்வடிவும் அக்குணமும் உடையன் என அறிந்துகொள்ளும் பேறு அரி அயனுக்கு இன்னும் கிடைத்திலது; மறைகளுக்கும் அவற்றை அறிந்துகூற எழுத்துமில்லை. (தலை எழுத்தும் இல்லை.)

ஆரிடமா னிடந்தேவ மசுரமிராக் கதம்பதிட்டை யைந்து கூற்றால்
ஏரிணங்கு தலமநந்த மியம்புசயம் புவுமநந்த மிவற்றின் மேலும்
பாரருணை போகலிங்கஞ் சைவலிங்க மதுரைபரா பரமற் றெல்லாஞ்
சீரிணங்கு குற்றாலச் சிவலிங்கம் பரமரக சியமே யாமால். 14

பொ - ரை : முனிவரால் தாபிக்கப்பெற்ற லிங்கம் ஆரிடம், தேவரால் தாபிக்கப்பெற்றது தைவிகலிங்கம், அசுரராலும், மானுடராலும், இராக்கதராலும் தாபிக்கப்பெற்றவை முறையே ஆசுரம், மானுடம், இராக்கதம் எனப்படும்; இங்ஙனம் பிரதிட்டை இயல்பு பற்றி ஐந்து வகையாக உள்ள இலிங்கமூர்த்திகளைக் கொண்டுள்ள தலங்கள் அளவில்லாதவை; இவையெல்லாவற்றினும் சிறந்த சுயம்பு (தானேதோன்றியது) லிங்கம் உள்ள தலங்களும் அளவற்றவை உள்ளன; இவற்றினும் மேலாக காரணக்கடவுளரால் (பிரம விட்டுணுக்களால்) வழிபடப்பெற்றதாகிய திருவருணையில் உள்ள மூர்த்தி போகமூர்த்தி எனப்படும்; மதுரையில் உள்ளது அதனினும் மேலாகச் சைவலிங்கம் எனப்படும்; மற்றுந் திருவேகம்பம் முதலாக அம்மையாலும் சிவகுமாரர்களாலும் பூசிக்கப்பெற்ற சுயம்புமூர்த்திகள் பராத்பரம் எனப்படும்; ஆயின், சிறப்புப்பொருந்திய திருக்குற்றாலத்தில் உள்ள சிவலிங்கம் பரமரகசியம் எனப்படும்.

இமைப்போது கொன்றையிலோர் நொடிப்போது கூவிளத்தி லிலிங்க நாடி
அமைப்போது நூலுணர்ந்து தேவரெலா மித்தலத்தை யகலா வண்ணம்
தமைப்பேணி யிருந்தருள வேண்டுமென வரம்வேண்டத் தந்தோ மென்று
நமைப்பேணி நாதனருள் புரிந்ததற்கு வேதமொரு நான்குஞ் சாட்சி. 15

பொ - ரை: கொன்றையில் இறைவன் தங்குவது இமைக்கும்நேரம்; வில்வத்தில் தங்குவது ஒரு நொடியளவு; சிவலிங்கத்தில் ஒருநாழிகை தங்குவது; (அமைப்பு) எனத் தங்கும் நேர அளவை ஓதும் நூற்கருத்தை உணர்ந்த தேவர் எல்லாம், திருக்குற்றாலத்தில் எப்போதும் நீங்காது நம்மைக்காத்து இருத்தல் வேண்டும் என வரம்வேண்ட, உயிர்கள்மாட்டு வைத்த கருணையினால் இறைவன் அவ்வரத்தைத் தந்தோம் என்றனன்; இதற்கு நான்கு வேதங்களும் சான்றாக உள்ளன.

பற்றாகப் பதஞ்சலிவெம் புலிபரவத் திருச்சிற்றம் பலமாந் தில்லைப்
பொற்றான நடம்புரிவார் திருவேடு பிடித்தெழுதப் புராண மோர்ந்து
கற்றாருங் கல்லாரு முருகுகவி வாதவூர்க் கருணை வள்ளல்
குற்றாலத் திற்குறியா யிருந்துமென வுரைத்ததிந்தக் குறிப்பா லன்றோ. 16

பொ - ரை: பதஞ்சலி முனிவரும் வியாக்கிரபாதமுனிவரும் முதல்வன் திருவடியையேபற்றாகக்கொண்டு பரவ அவர்காணும்படி திருச்சிற்றம்பலம் எனப்படும் பொற்சபையில் திருநடனம் புரிவான் சிவன்; இப்பெருமான் திருவேடு பிடித்து எழுத, மாணிக்கவாசகப்பெருமான் கற்றார் கல்லார் என்னும் யாவர் மனமும் கரைந்து உருகவைக்கும் திருவாசகத்தை மீளச்சொல்லிப்போந்தார்; இத்தகைய திருவாசத்தில் கீர்த்தித்திருவகவலில் 'குற்றாலத்திற்குறியாயிருந்தும்' என்றருளிச் செய்துள்ளார்; இங்குக் குறி என்றது சிவலிங்கத்தை; தேவர்கள் வேண்டுகோளுக்கு இரங்கி முதல்வன் முற்காலத்தில் திருக்குற்றாலத்தை அகலேம் என அருள்புரிந்த பழைய வரலாற்றைத் திருவுளங்கொண்டே அவ்வடியைத் திருவாதவூரர் அருளிச்செய்தனர் எனக் கொள்ளுக.

அன்னவகை யாலகில தலங்களுக்குங் குற்றால மாதி யாகும்
முன்னமுறை திரிகூட மூர்த்தியே மூர்த்திகளின் மூல மூர்த்தி
இன்னவனைப் பூசிக்கும் பூசையே யனைவருக்கு மேற்கும் பூசை
மன்னுபுனன் மூட்டில்விடக் கொப்பெலாந் தழைத்தோங்கு மகிமை போல.

பொ - ரை: இவை போன்ற காரணங்களால் திருக்குற்றாலம் ஆதித்தலம் என்பதும், முற்பட்ட திருமுறையுட் குறிக்கப்பெற்ற திரிகூடமூர்த்தியே மூர்த்திகளுள் மூலமூர்த்தி என்பதும் உணரப்படும்; ஒருசெடியின் பொருத்தாகிய தூரில் விட்ட நீர் அதன் எல்லாப்பாகங்களுக்கும் ஆதல்போல, திரிகூடமூர்த்தியைப் பூசிக்கும் பூசையே எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படும் பூசை ஆகும்.

சாலைதொறு மெரிவளர்க்கப் புகவேண்டா தவம்புரிந்து தவிக்க வேண்டா
சோலைநறுஞ் செண்பகஞ்சூழ் சுருதிநிறை குறும்பலவிற் சோதி நாதன்
ஆலயத்தை நோக்கிவரி னடிக்கடியோர் பரிமகப்பே றமையு மாங்கண்
மாலயனுக் கரியானை வந்துபரா வினர்பேறு மதிக்கொ ணாதால். 18

பொ - ரை: வேள்விச்சாலை அமைத்து வேள்வி செய்யவேண்டா; உடம்பை வருத்தித் தவம் புரியவும் வேண்டா; சண்பகச் சோலைசூழ்ந்த குறும்பலா அடியில் வீற்றிருக்கும் சோதிலிங்க மூர்த்தியை நோக்கி வருவோர், அடிவைக்குந்தோறும் ஒவ்வோர் அடிக்கு ஒவ்வோர் அசுவமேதப்பயன் தானே அமையும்; எனின், அங்குவந்து திருமாலும் அயனும் காணாத முக்கட்செல்வரைக் கண்டு துதித்தோர் பெறும் பயனை அளவிட முடியாதன்றே!

மணிசெய்பூண் செழுஞ்சாந்து மலர்மாலே தூசுகளால் வரதன் மேனிக்
கணிசெய்வார் தம்மேனிக் கணிசெய்வார் வானுலகி லமரர் மாதர்
கணிசெய்வான் பொழில்சூழு திரிகூடப் பரனுர்க்குக் கல்லாற் பொன்னுல்
பணிசெய்வார் தமக்கேவற் பணிசெய்வார் சயமாதும் பதுமமாதும். 19

பொ - ரை: மணிகள் பதித்த ஆபரணங்கள், சந்தனக்கலவை, மலர்மாலே, ஆடை என்பவற்ருல் திரிகூடவரதன் திருமேனிக்கு அழகுசெய்து காண்போர்க்குத் தேவமாதர் அலங்காரம் செய்வார்கள். மலர்மாலே (கண்ணி)யைத் தரும் பொழில்கள் சூழ்ந்த திரிகூடத்தில் அப்பரம்பொருளுக்குக் கல்லாலும் உலோகங்களாலும் திருப்பணி செய்வார்க்கு வெற்றிமகளும் திருமகளும் குற்றேவல் செய்வார்கள்.

காமாரி தனக்கொருபூ வனஞ்செய்வார் கற்பகப்பூ வனத்தில் வாழ்வார்
பூமாரி சொரிவார்மேற் சொரிவார்கள் வானேர்கள் பொற்பூ மாரி
கோமாரி பான்மாரி ததிமாரி நெய்மாரி கோது தீர்ந்த
தேமாரி சொரிவார்கள் கடல்கள்சூ ழுலகாண்டு சிவமே சேர்வார். 20

பொ - ரை: மன்மதனுக்குப் பகையாகிய சிவபிரானுக்கு நந்தவனம் வைத்துக் காப்போர் சுவர்க்கத்தில் கற்பகவனத்தில் வாழ்வர்; அவன்மேல் பூமாரி சொரிகின்றவர்மேல் தேவர்கள் கற்பகப் பூமாரி சொரிந்து போற்றுவர்; தூய தண்ணீர் (கோ), பால், தயிர், நெய், குற்றமற்ற தேன் என்பவற்ருல் நிரம்ப ஆட்டுவார்கள் நிலவுலகம் முழுதும் ஆண்டு பின் சிவசாயுச்சியம் பெறுவர்.

குவிமாலே மதிவேணித் திரிகூடப் பரனுர்க்குக் குளக மாதி
கவிமாலே புனைந்தார்கள் கற்பகமா லேயைப்புனைந்து கற்பம் வாழ்வார்
தவிராமுக் கனியாலுந் தக்கவிள நீராலுஞ் சாந்தத் தாலும்
அவிடேக மாட்டுமவர்க் கவிடேகஞ் சூட்டுவர்மே லயனு மாலும். 21

பொ - ரை: கொன்றை மாலேயும் மதியும் சூடும் சடைமுடிப் பரனுக்கு ஒருவினேகொண்டு முடியும் பல பாட்டு முதலாகக் கவிமாலே புனேயும் பொய்யில் புலவர்கள் கற்பகப் பூமாலே புனேந்து கற்பகாலம் சுவர்க்கத்தில் வாழ்வர்; முக்கனி, இளநீர், சந்தனம் என்பவற்ருல் திரிகூடநாதரை அபிடேகம் செய்விப்பார்க்கு அயனும் மாலும் மணிமுடி சூட்டுவர்.

மோனேவா கனமியற்றித் திருவிழாப் பொலிவுமுதன் முயன்ருேர் வெள்ளே
யானேவா கனத்தார்க்கு மன்னவா கனத்தார்க்கு மதிக ராவர்
தானேகே தனங்குடைமேற் கட்டிபரி வட்டமணித் தசும்பு மோலி
ஏனேயா பரணமுத லியற்றுவார் திசைக்கிறையா யிறைபாற் சேர்வார். 22

பொ - ரை: முதற்கண் வாகனம்செய்து திருவிழாச் சிறப்புச் செய்வோர் இந்திரனுக்கும் பிரமனுக்கும் உயர்ந்தோர் ஆவர்; சீலே, கொடி, குடை, மேற்கட்டி, பரிவட்டம், மணிபதித்த பொற்குடம், திருமுடி, பிற திருவாபரணங்கள் முதலியவற்றை இறைவனுக்குச்செய்து அமைப்பவர்கள் எண்திசைக்குத் தலேவர்களாய் முடிவில் சிவன் சேவடி சேர்வர்.

கொடியாடு மணிமாட முயர்கூடத் திரிகூடக் கோயி லார்க்குக்
கடிமாலை மலர்தொடுப்பார் கமழ்திருமஞ் சனமெடுப்பார் களபஞ் சேர்ப்பார்
படிதூபம் விளக்கிடுவார் பரிகலங்கள் விளக்கிடுவார் பணிவார் தெய்வ
வடிவாகிச் சிவபுரத்துத்தொண்டர்குழாத் தண்டர்குழாம் வணங்க வாழ்வார்.

பொ - ரை: கொடிகள் அசையும் உயர்மாடங்கள் அமைந்த திருக்குற்றால நகர்த் தேவர்க்கு மலர்மாலை தொடுப்போர், திருமஞ்சனம் சேகரிப்போர், கலவைச் சாந்து அரைத்துக் கூட்டுவோர், படிகளையும் தூபக்கால், பரிகலம் என்பவற்றை யும் விளக்குவோர், திருவிளக்கு இடுவோர், முறைப்படி தொழுவோர் எல்லாரும் தெய்வ வடிவம்பெற்றுச் சிவலோகத்துத் தொண்டர் கூட்டத்தில் இருப்பர்; அவர்களைத் தேவர்கணங்களும் வணங்குவர்.

வேறு

பானு வாரத்திற் பானுவு தித்திடத்
தேனு லாம்புனற் சித்திர கங்கைதோய்ந்
தானு லாவுமம் மானைவ லஞ்செய்வார்
வானு ளார்தொழ மால்பதஞ் சேருவார். 24

பொ - ரை: ஞாயிறு காலையில் தேன்பாயும் சித்திர கங்கையில் முழுகி விடை மேல் வரும் பெருமானைச் சூழ்ந்து வலம்வருவார் தேவர்தொழத் திருமால் பதம்பெறுவர்.

திங்கள் வாரங் கதிர்படு செவ்விவாய்ச்
சங்க வீதிச் சயம்புவுக் கோர்மலர்
அங்கை யாலணி வாரணி விப்பவர்
எங்க ணுதர் சிவபுர மெய்துவார். 25

பொ - ரை: திங்கட்கிழமையன்று சூரியன் உதிக்கும்போது சங்கவீதியை யுடைய சுயம்புமூர்த்தியின்மேல் மலர் அணிவாரும் அணிவிப்பாரும் சிவபுரம் எய்துவர்.

சேயின் வாரத்தி லைங்கரன் செங்கைவேற்
சேயர் தாதைக்குச் செண்பகப் பொங்கர்வாய்ச்
சேய பாதத்திற் சேய்மலர் சாத்துவார்
சேய ராயிருப் பார்சிவ லோகத்தில். 26

பொ - ரை: செவ்வாய்க்கிழமையில் கணபதிக்கும் முருகனுக்கும் தாதை யாகிய முதல்வன் பாதத்தில் சிவந்தமலரைச் சாத்துவோர் சிவலோகத்தில் சிவ குமாரர்களாக வாழ்வர்.

அத்த மார்புத வாரத்தி லம்பிகை
அத்த மார்செண்ப காடவி யண்ணலை
அத்த மார்தும்பைப் போதுகொண் டர்ச்சிக்கும்
அத்தர் தாரகை வானுல காளுவார். 27

பொ-ரை: அஸ்த நாளை உடைய கன்னிராசிக்கு உரிய புதனதுகிழமையில் அம்பிகை மெய்யில் பாதிகொண்ட சிவபிரானைக் கையிற் பொருந்திய தும்பை மலர்கொண்டு அருச்சிக்கும் செல்வர்கள் நட்சத்திரங்களுக்கு இடம் கொடுக்கும் மேல் உலகை ஆள்வர்.

வி - கு: அத்தம் - அஸ்தமீன், பாதி, கை, பொருள்.

அம்பொன் வாரத் தருவி படிந்தெழீஇப்
பைம்பொன் வாசத் தலரிப்பைம் போதுதூஉய்
நம்பன் வார்கழல் போற்றினர் நண்ணுவார்
செம்பொன் மார்பகத் தார்திரு வைகுந்தம். 28

பொ - ரை: அழகிய வியாழனதுகிழமையில் சித்திரநதியில் முழுகி எழுந்து மிகுந்த அழகும் வாசமும் உள்ள அலரிமலர்களால் அருச்சித்து முதல்வன் திருவடிகளை வாழ்த்தினவர் திருமகள் தங்கும் மார்பையுடைய திருமால் உலகம் எய்துவர்.

திருந்து நன்னகர்த் தேவுக்கு வெள்ளிநாள்
கரும்பின் கட்டி பருப்புக் கலந்திடும்
விரும்பு தோய்வை யமுதுசெய் விப்பவர்
அரும்பு பூவி னயன்பத மேவுவார். 29

பொ - ரை: திருக்குற்றாலநாதர்க்கு வெள்ளிக்கிழமையில் சருக்கரைப் பொங்கலும் பருப்புப் பொங்கலும் நிவேதிப்பவர் பிரமன்பதம்பெறுவர்.

காரி வாரத்திற் சித்திர கங்கையாம்
வாரி தோய்ந்து பிரான்வளை வீதியைச்
சீரி னேர்வல மாகினுஞ் செய்குவார்
நாரி பாகர் கயிலையை நண்ணுவார். 30

பொ - ரை: சனிக்கிழமையில் சித்திரகங்கையில் முழுகிச் சிவபிரான் சங்க வீதியை ஒரு முறையாகிலும் சீரிதாக வலம் வருவோர் திருக்கயிலையை அடைவர்.

ஆறு செங்க லணிவிரல் போன்றகல்
நீறு காசள வாகினு நீள்விடை
ஏறு நன்னகர்க் கோன்பணிக் கீகுவார்
வீறு வெள்ளிக் கயிலையின் மேவுவார். 31

பொ - ரை: சிவபிரான் திருப்பணிக்கு ஆறு செங்கல், அணிவிரல் அளவு கல், காசு அளவு சுண்ணும்பு கொடுப்பவரும் மேம்பட்ட திருக்கயிலையை உறையுளாகப் பெறுவர்.

நீவு சாந்தமோர் நெல்லள வாகினும்
ஆவின் பாலொரு கையள வாகினும்
பூவொன் ருகினு நன்னகர்ப் பொன்னகர்த்
தேவின் பாலணி வார்சிவ லோகரே. 32

பொ - ரை: பூசும் சந்தனம் நெல்லளவு, பசுப்பால் ஒரு கையளவு, பூ ஒன்று இவற்றைத் திருக்குற்றால நாதர்க்கு அணிவிப்பாரும் சிவலோகம் பெறுவார்.

வேறு

சிறுகாலை பணிவார்கள் சாலோகத் துறைவர்திரி கூடத் தேவை
உறுகாலை பணிவார்கள் சாமீபத் திருப்பர்கதி ருச்ச மாகப்
பெறுகாலை பணிவார்கள் சாரூபம் பெறுவர்கதிர் பிறங்கல் சாயும்
நறுமாலை பணிவார்கள் பரமசா யுச்சியமே நண்ணு வாரே. 33

பொ - ரை: திரு அனந்தல், காலசந்தி, உச்சிக்காலம், ஞாயிறு அத்தகிரி எய்தும் மாலை என்னும் பொழுதுகளில் முதல்வனைப் பணிபவர்கள் முறையே சாலோகம், சாமீபம், சாரூபம் என்னும் பதமுத்திகளையும் சிவசாயுச்சியம் என்னும் பரமுத்தியினையும் அடைவர்.

திருநாளுஞ் சிவவிரதந் தருநாளும் வருடவழிச் சிலவி சேடம்
வருநாளுந் திரிகூடப் பெருமானை யடிபரவ வருவோர் யார்க்கும்
ஒருநாளைக் கன்னமிட்டார் தருமமெலாங் கன்னமிட்டா ரொருநாட் கூட
இருநாளைக் கன்னமிட்டா ரிருவரையுங் கன்னமிட்டா ரிடத்திற் சேர்வார். 34

பொ - ரை: திருவிழாநாளும், சிவவிரதநாளும், ஆண்டுதோறும் வரும் விஷு முதலிய புண்ணியநாளும் கருதித் திரிகூட முதல்வரைப் பணிய வரும் யாத்திரிகர்களுக்கு ஒருநாளைக்கு அன்னம் இட்டு உபசரித்தவர் தருமம் எல்லாம் கொள்ளைகொள்வர்; ஒரு நாளைக்குமேல் இரண்டு நாட்களுக்கு அன்னம் இட்டவர் அசுவதரன் கம்பளன் என்னும் இசைவல்லார் இருவரையும் காதின்கண் (கன்னம்) தரித்தவராகிய சிவபிரானிடத்திற் சேர்வர்.

வி - கு: இருவரை தும்புருநாரதர் என்பாரும் உளர்.

தருமமே நிறைவேறுந் திரிகூடம் பணிவார்க்குத் தாங்கள் வேண்டும்
பொருளெலா நிறைவேறுங் குற்றாலத் தலமகிமை புகழ்கின் றோர்க்கு
மருவுவலம் புரிவீதி வலம்புரிவார்க் கின்பமென்றும் வளரும் மேன்மேல்
அருள்குலாங் குறும்பலவ ரடியிணைகள் பணிவார்க்கே யழியா வீடு. 35

பொ - ரை: திரிகூடமலையைப் பணிவார் தருமத்தையும், திருக்குற்றாலத் தலப்பெருமை கூறுவார் செல்வத்தையும், சங்கவீதி வலம்வருவார் இன்பத்தையும், குறும்பலா ஈசனைக் குறுகிப் பணிவார் வீட்டையும் பெறுவர்.

வில்வந்தான் றுதகிதான் கொன்றைதான் றிரிகூட விமலர்க் கீவார்
செல்வந்தான் பரகதிதான் செப்பவெளி தோவதற்குத் திறமி லாதார்
புல்லென்று லும்வனத்தோ ரிலையென்று லுங்கிடைத்த பூவென் றாலும்
அல்லென்று லும்பகலென் றாலுமெந்தை யார்க்களிக்கி லமர ராவார். 36

பொ - ரை: திரிகூட முதல்வர்க்கு வில்வமோ, ஆத்திமலரோ, கொன்றை மலரோ கொண்டுவந்து கொடுப்பவர்க்குச் சொல்ல அரிய செல்வமும் பரகதியும்

ஒருங்கே கிடைக்கும்; அவை செய்யும் திறம் இல்லாதவர் புல் ஆயினும், காட்டில் உள்ள ஒரு பச்சிலை ஆயினும், பூவாயினும் இரவிலோ பகலிலோ இறைவனுக்குக் கொண்டுவந்து கொடுப்பின், அவர் தேவர் ஆவர்.

நஞ்சமுத நுகர்ந்தார்க்குப் பாலமுத நுகரவொரு நாட்செய் வாரேல்
உஞ்சமுதர் தங்கள்குழாத் துடனமுத நுகர் ந்திருப்ப ரூழி காலம்
அஞ்சமுத கதிர்முடித்தா ரடியவர்க ளடியவர்கட் கடிசி லீவார்
கஞ்சமுத லயனுகி யரியாகிப் பெரியசிவ கணத்த ராவர். 37

பொ - ரை: சிவபிரானுர் பிறர் அமுதுண்ணத் தாம் நஞ்சு உண்டவர்; அவர்க்குப் பாலமுதம் (பாயசம்) ஒருநாள் நிவேதிப்பித்தவர் பாவங்களின் உய்ந்து தேவர் குழாத்துடனிருந்து ஊழிவரை அமுத உண்டிபெறுவர்; பாம்பிற்கு அஞ்சும் அமுதகதிர் எனப்படும் பிறைமதியை முடிக்கணிந்தபிரான் அடியார்க்கும் அவர் தம் அடியார்க்கும் திருவமுது செய்வித்தவர் தாமரை முதல்வனுகும் பிரமனுகிப் பின் அரியாகி முடிவில் சிவகணத்தவராவர்.

நேசிப்பார்க் கினியபிரான் குற்ருலச் சிவசரிதை நிகழ்பு ராணம்
வாசிப்பார் புகழெடுத்து வாசிப்பார் சிவபுரத்து வாழ்வோ ரெல்லாம்
பேசிப்பார் வானுலகம் புகழ்மகிமைத் திரிகூடப் பெருமான் றன்னைப்
பூசிப்பார்த் தேவரெனப் பூசிப்பார் தமைத்தேவர் பூசிப் பாரால். 38

பொ - ரை: நச்சினுர்க்கு இனியனுகிய குற்ருல முதல்வனது மங்கல வரலாருகிய இப்புராணத்தை வாசிப்பவர் புகழைச் சிவபுரத்து வாழ்வோர் எல்லாம் எடுத்து வாசிப்பர்; பேசப்படும் இப்பாரும் வானுலகும் புகழும் அப்பெருமானைப் பூசிப்பவரைச் சிவன் எனக் கருதிப் பூசித்தவரைத் தேவர்கள் பூசிப்பர்.

கண்டத்தே கறைபூண்டா ரடியவரைக் காப்பதொரு கடன்பூண் டார்க்கு
மிண்டர்க்கே யானுலும் விசையம்வரு மவர்க்குறுகண் விளைப்பா ராகில்
அண்டர்க்கே யானுலு மவசெயமா மதுவினவி னமல மூர்த்தி
தொண்டர்க்காந் துணைவருக்குத் துணையாவார் துன்னுர்க்குத் துன்னு
[ராவார். 39

பொ - ரை: திருக்குற்ருலநாதர் அடியவரைக் காக்கும் கடமைபூண்டார் மிண்டரிடத்தும் வெற்றியேபெறுவர்; அவனடியார்க்கு இடையூறு விளைக்குமவர் தேவராஞலும் அவர்க்கு வருவது தோல்வியே; இவற்றை உய்த்து உணரின், நிமலனுகிய முதல்வன் தன் தொண்டர் துணைவர்க்குத் துணைவன் என்பதும், தன் தொண்டர் பகைக்குப் பகை என்பதும் இனிது விளங்கும்.

உலையெடுத்துத் தொண்டர்தமக் கமுதெடுப்பார்
பெருமையெவ்வா றுரைப்போ முண்ட
இலையெடுத்தார் சென்றுசென்று தலையெடுத்தார்
விஞ்சையரா யிமையோ ராகிச்
சிலையெடுத்தார் வடவருவி யம்பெடுத்துத்
தெளித்தாலுஞ் சென்ம நோய்போம்
கலையெடுத்த தமிழ்முனிக்கா மானெடுத்தார்
தமைப்பணிவார் கதியென் சொல்கேன். 40

பொ-ரை: தொண்டர் உச்சிட்ட பரிகலத்தை எடுத்தவர் பிற்பிறப்பில் வித்தியாதரராய்த் தேவராய்ப் பிறந்தார்கள்; எனின், தொண்டர் பொருட்டு உலை வைத்துத் திருவமுது அமைத்தவர் பெருமையை எப்படிக்கூறுவது? மேருவை வில்லாக எடுத்த சிவபிரானுடைய வடவருவியின் நீரை (அம்பு) எடுத்துத் தெளித்துக்கொண்டாலும் பிறவிநோய் நீங்கும்; எல்லாக் கலைகளிலும் வல்ல குறுமுனிவர் விருப்பத்திற்கு இசைந்து சங்கு ஏந்திய கையில் மானை ஏந்திய திருக்குற்றால நாதரைப் பணிவார் பெறும் நற்கதியை எப்படி அளவிடுவேன்?

நெடிதான வுலகனைத்து மீன்ருரு மளந்தாரு நேடிக் காணுக்
கொடியாடு மொருபாகன் குற்ருலப் பரன்மகிமை கூறற் பாற்ருே
பொடியாடுந் திருமேனித் தொண்டர்குழா நதனைப்புகழப் புகுவோ மாஞல்
அடியாருக் கடியவரு மருவருப்ப ரரியயன்மா லரசும் வாழ்வும். 41

பொ-ரை: அயன்மாலறியாத உமையொருபாகன் பெருமை கூற வொண்ணுதது; திருநீறுபூசும் மேனியை உடைய அவனடியர் பெருமையைக் கூறப்புகின், அவன் அடியவர்க்கு அடியவரும் அயன்மால் அதிகாரத்தையும் வாழ்வையும் விரும்பார்.

என்றுகலை பயில்சூத னியம்புதலுந் திசைநோக்கி யிறைஞ்சி யேத்தி
நன்றுநன்று திரிகூடக் கடவுள்போ லருட்கடவுள் ஞாலந் தோன்றும்
அன்றுமிலை யின்றுமிலை யென்றுமிலை யதிசயமென் ருடிப் பாடிப்
பின்றுசடை மாமுனிவ ருடலெடுத்த வுறுதியின்று பெற்ருே மென்ருர். 42

பொ-ரை: இங்ஙனம் சூதமுனிவர் உரைக்கக் கேட்டுத் திருக்குற்றாலத்து முதல்வனைப்போல அருள்புரியும்மூர்த்தி உலகத்து அன்றும் இன்றும் என்றும் இல்லை எனக் கூறிமகிழ்ந்து, பாடி ஆடி, உடம்பின் ஆய உறுதியை இன்றே பெற்றேம் என்றனர் முனிவர்கள்.

வேறு

முனிவரர் பரவிப் பின்னு மூர்த்திபா லார்த்த மான
புனிதமார் பரைபீ டத்தின் மகிமையைப் புகலென் றேத்தப்
பனிவரை யிருந்து தென்பாற் படருநாட் கும்ப யோனிக்
கினிதருள் பரம கீதை முறையினி லியம்புஞ் சூதன். 43

பொ-ரை: முனிவர் பின்னும் மூர்த்தியின் பக்கத்தில் பொருத்தமுள்ள பரைபீடத்தின் பெருமையை விளக்கும்படி கேட்க, சூதமுனிவர் முன் குறுமுனி இமயமலையினின்றும் தென்னடு வந்தஞான்று அவருக்குச்சிவபிரான் அறிவுறுத்ததாகிய சிவகீதையில் உள்ள முறைப்படி கூறலுறுகின்றனர்.

*மூர்த்திவிசேடச் சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — 431

---

# பராசத்திபீடச் சருக்கம்

ஆதியு நடுவு மீறு மளவையு மில்லா வொன்றின்
சோதிபாற் குடிலை யெய்தக் குடிலையி னுதந் தோன்றி
நாதமேல் விந்து தோன்ற விந்துவி லுதித்து நாதன்
கோதிலாத் திரிகூ டத்திற் குணங்குறி கடந்து நின்ருன். 1

பொ - ரை: முதல் நடு முடிவும் அளக்கப்படுதலும் கடந்த சோதி வடிவாகிய முதற்பொருளின்பால் சுத்த மாயை விருத்திரூபமாய்க் காரியப்பட்டபோது முதற்கண் நாதமும், நாதத்தில் விந்துவும் தோன்ற, அவ்விந்துவில் சாதாக்கியமாக முதல்வன் தோன்றிக் குணங்களையும் பெயர்களையும் கடந்து குற்றமில்லாத திரிகூடத்தில் விளங்கினுன்.

வி - கு: குடிலை - சுத்தமாயை. ஒன்றின் சோதிபாற் குடிலை எய்த - பரம் பொருளின் திருவருள் ஒளியில் குடிலை அடங்கிக்கிடத்தலால் (அத்திருவருள் சங்கற்பித்த வழி).

அன்னதா நாதந் தன்னி லாகிய விந்து சத்தி
தன்னிடை யுதித்துப் போகந் தழைத்தெழு தான மாகி
நின்மலப் பரையாஞ் சத்தி நிகிலகா ரணத்தி னுலே
நன்னகர்ப் பரன்பான் மேவு மகிமையை நவிலற் பாற்ரே. 2

பொ - ரை: மேற்கூறியபடி விரிந்த விந்து சத்தியில் போகத்தானமாய்த் தோன்றி, முன் சதாசிவனுய் உள்ளான் எனப்பட்ட முதல்வன்பக்கலிலும் மேவுவள் தூய பராசத்தி, தான் எல்லாவற்றிற்கும் காரணமாதலினுல்; ஆதலால், அவள் பெருமையை வரையறுத்துக் கூறுதல் முடிவதன்று.

வி - கு: போகம் - பாலனம், காப்பு. போகத்தானமாயும் பரனுக்குத் துணையாயும் பராசத்தி உளள்; போகத்தானத்தில் நிகழ்பொருளாகவும் துணைவனுகவும் இறைவன் உளன்; நாத விந்துக்கள் முறையே சூக்குமலயம், தூலலயம் எனக் கூறப்படும். இலயம் - ஒடுக்கம். விளக்கம் திராவிட மாபாடியத்துக்காண்க.

சிவபெருங் கோண நான்கு சிற்பரை கோண மைந்தா
நவபெருங் கோணத் துள்ளே நண் ணுமீ ரிருபான் முக்கோண்
இவர்தரு வட்ட மேன்மே லெட்டித ழீரெண் கோணம்
உவரிமூ வட்ட மூன்று சதுரமு முளதோர் பீடம். 3

பொ - ரை: சிவனுக்குரிய முக்கோணம் நான்கு; சத்திக்கு உரிய முக்கோணம் ஐந்து; இந்த ஒன்பது முக்கோணங்களும் முறையே மேல் நோக்கியும் கீழ்நோக்கியும் அமைந்து ஒன்றி நிற்றலால், நாற்பத்து மூன்று கோணங்கள் உள்ளனவாம்; இவற்றின்மேல் வட்டமும், அதன்மேல் எட்டிதழ் மேல்வட்டமும்,

அதன்மேல் பதினறிதழும், அவற்றின்மேல் மூன்று வட்டமும், அவற்றைச்சூழ்ந்து பூபுரம் எனப்படும் மூன்று சதுரமும் என ஆகி உள்ளது ஒருபீடம்.

வி - கு: உவரி - உபரி, மேல்.

அப்பெரும் பீட மன்றே யருட்பரா சத்தி பீடம்
ஒப்பரும் பரம யோகத் துறைதலால் யோக பீடம்
தப்பிலா வகில மூலந் தரித்தலாற் றரணி பீடம்
இப்பெரும் பீடத் துள்ளா ளிறைவர்பா லெம்பி ராட்டி. 4

பொ - ரை: திருவருள் வடிவப் பராசத்திபீடம் என்பது அப்பெரும்பீடமே ஆகும். அம்மை உவமிக்கப்படாத கலப்பில் இறைவனேடு உறைதலால், அது யோகபீடம் எனவும், மாயாசத்திகளைத் தப்பாமல் நடத்தும் மூலப்பொருளாகிய பராசத்தி தங்குதலால் தரணிபீடம் எனவும் வழங்கப்படும்; இதன்கண் இறைவன் பக்கலில் அம்மை எழுந்தருளி உள்ளாள்.

நங்கைபா லாதி யிச்சை ஞான நற் கிரியை யென்னப்
புங்கவ னருளா னுன்கு சத்திகள் பொலிந்து தோன்ற
அங்கவர் தம்மா லெம்மா னியற்றுவ னதிகா ரங்கள்
இங்கவ ருருவ மெம்மா லியம்பரி தியன்ற சொல்வாம். 5

பொ - ரை: இறைவனது சங்கற்பத்தால், பராசத்தியினின்றும் ஆதி, இச்சை, ஞானம், கிரியை என்னும் நான்கு சத்திகள் முறையே தோன்றும்; அச் சத்திகளோடு கலந்துநின்று முதல்வன் சிருட்டி முதலிய தொழில்களை மேற் கொள்ளும் நிலையில் அதிகாரசிவன் எனப்படுவன்; இவர்தம் உருவங்களைக் கூறுவது அரிது; ஆயினும் இயல்வனவற்றைக் கூறுவாம்.

நதிமதி புனையு மோலி நாட்டங்கண் மூன்று வாசச்
சததள மபயந் தானை செபவடந் தரிக்கு நாற்கை
மதிமுக மைந்து நான்கு மரபின்மூன் றென்று நான்காம்
பதிவெண்மை பச்சை செம்மை பால்பொன்மை யைவர் மேனி. 6

பொ - ரை: பரை, ஆதி, இச்சை, ஞானம், கிரியை என்னும் சத்திகள் ஐவரும், ஒவ்வொருவரும் கங்கையும் பிறையும் தங்கும் சடையையும், மூன்று கண்களையும், நூற்றிதழ்த்தாமரை, அபயம், தானை, செபவடம் என்பவற்றைச் சேர்த்துள்ள நான்கு திருக்கைகளையும் உடையர்; இவர்கள் முறையே ஐந்து முகம், நான்குமுகம், மூன்றுமுகம், ஒருமுகம், நான்கு முகங்களை உடையர்; இவர் தம் நிறம் பிறநிறங்கள் பதியும் வெண்மையாகிய பளிங்குநிறம், பச்சை, செம்மை, பால்வெண்மை, பொன்மை என்பவை ஆகும்.

இனியசத் திகளோ ரைந்தா லைந்தொழி லியற்று மெங்கோன்
அனிதமில் பரையே யாதி சத்தியா யருளாற் றேன்றி
மனிதயாண் டொன்று சென்றால் வருதின மொன்ருந் தெய்வப்
புனிதயாண் டீரைஞ் ஞூறு பொருந்துவள் கருப்பமாக. 7

பொ - ரை : எமது இறைவன் தன் கருத்தின்வழி நிற்கும் ஐந்து சத்திகளால் ஐந்தொழிலை இயற்றுவன்; அச்சத்திகளுள் இதமேபுரியும் பராசத்தியே சிவசங்கற்பத்தினால் உயிர்களுக்குப் பிறப்பு நிலையில் உபகரிக்கவேண்டி ஆதி எனப்படும் திரோதான சத்தியாய் நிகழும்; தேவர்களுக்கு மக்கள் யாண்டு ஒன்று ஒருதினம்; ஆதிசத்தியின் கருப்பத்திற்கு உரிய பத்துத் திங்கள் என்பது தேவ யாண்டு ஆயிரம் ஆகும்.

ஒருபெருங் கருப்பந் தன்னி லுயர்ந்தகற் பகப்பூங் கொம்பு
தருமிரு நிதிபோற் பொன்னைச் சதுர்முகத் தவனைத் தந்தாள்
கருதுமோர் கருப்பந் தன்னிற் கமழ்வல்லி சாத மொன்று
மரகத மிரண்டீன் றென்ன மாலுட னுமையை யீன்றாள். 8

பொ - ரை : அவள் ஒரு கருப்பத்தில் திருமகளையும் பிரமனையும் ஒருங்கே ஈன்றாள்; இது கற்பகமரம் சங்கநிதி பதுமநிதி இரண்டையும் ஒருங்கே கொடுத்ததுபோலும். மற்றொரு கருப்பத்தில் கற்பகத்தைச் சார்ந்து வளரும் வல்லிசாதம் என்னும் கொடி இரண்டு மரகதக்கற்களை ஒருங்கே கொடுத்தாற்போல உமையையும் திருமாலையும் கொடுத்தாள்.

முற்றரும் புணரி யீன்ற முத்துநற் பவளம் போல
மற்றொரு கருப்பந் தன்னில் வாணியை யரனை யீன்றாள்
வெற்றிநான் முகற்கு வாணி விண்டுவுக் கலர்மேற் செல்வி
உற்றசீர்த் தார மாக்கி யுமைமணம் புணர்ந்தா னெம்மான். 9

பொ - ரை : முதற்கண் படைக்கப்பெற்ற கடல் தரும் முத்தையும் பவளத்தையும் போல, வேறொரு கருப்பத்திலிருந்து கலைமகளையும் அரனையும் பெற்றாள்; மேம்பாடுள்ள பிரமனுக்குக் கலைமகளையும் திருமாலுக்குத் திருமகளையும் தாரமாக்கி அரன் உமையை மணந்தான்.

நிமலனும் பிரம சாரி நின்மலை யென்னு ஞானக்
குமரிபா லகிலந் தோன்றக் குற்றாலங் கோவி தாரம்
சமருக மென்னு நாமத் தருவரை யாத்தி நீழல்
அமர்தலாற் றிருக்குற் றால மானது மூலட் டானம். 10

பொ - ரை : இங்ஙனம் நின்மலனாகிய பிரமசாரி நின்மலையாகிய ஞானக் கன்னிபால் உலகம் தோன்றும்படி, குற்றாலம், கோவிதாரம், சமருகம் என்னும் பெயர்களாற் குறிக்கப்பெறும் மலையாத்தி நீழலில் அமர்தலால், மூலட்டானமானது திருக்குற்றாலம் எனப்பட்டது.

முகிண்முலை யாதி சத்தி மூவரைப் பயந்த தாலும்
திகழுமூ விசேடத் தாலுந் திரிகூட மென்னு நாமம்
நிகழ்வது தலத்துக் கந்த நிமலைசன் னிதிக்கே நின்று
சகமெலாந் தொழநின் றாடுந் தாணுமா லயப்பூந் தொட்டில். 11

பொ - ரை : ஆதிசத்தி மூவரைப் பயந்தமையாலும், மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூன்று சிறப்பும் உடைமையாலும் இத்தலத்துக்குத் திரிகூடம் என்னும் பெயர் உளதாயிற்று. அம்மை சந்நிதியில் தாணுமாலயன் தொட்டில் உலகெலாந்தொழும்படி அசைந்துகொண்டிருக்கும்.

பூவணி மருமத் தானும் பொன்னணி மருமத் தானும்
நாவணி யொருகொம் பானு நனிமுகத் தொருகொம் பானும்
தேவர்தஞ் சிறையை மீட்ட செவ்வேளுஞ் சிலைக்கை வேளும்
ஏவரும் விரவுந் தான மிவள்பெருஞ் சன்னி தானம். 12

பொ - ரை: கொன்றைமலரை மார்பில் அணியும் அரனும், திருமகளை ஏந்திய மார்பனும், நாவில் கலைமகளாகிய ஒரு கொம்பை அணிந்த பிரமனும், முகத்து ஒற்றைக்கோடு உள்ள விநாயகரும், தேவர்களைச் சிறைமீட்ட முருகனும், கரும்புவில் ஏந்திய மன்மதனும் ஆகிய யாவரும் பொருந்திய இடம் பராசத்தியின் திருமுன்பு.

வேறு

பரா நுபவஞ் சிவா நுபவ மெனுநாழிக் கிருநாழிப் படிநெல் லாலே
தராதலந்தொட் டகிலாண்டம் வளர்த்தருளி யறம்வளர்க்குந் தாயா யென்றும்
நிராமயசிற் பரனிடத்துச் சிற்பரையாய்த் திரைகடல்போ னீங்கி நீங்காப்
புராதனியைத் திரிகூடத் திரிபுரையை யலதெவர்க்கும் புகல்வே றுண்டோ.

பொ - ரை: திரிபுரை எனப்படும் பராசத்தி பரை அநுபவம் (துரிய அருள்நிலை), சிவ அநுபவம் (அதீத ஆனந்தநிலை என்னும் பரமுத்திநிலை) என்பவற்றை உயிர்கள் பெறும் காலம் உளவாதற்பொருட்டு இருநாழி நெல்லைப் படியாகப்பெற்று நிலஉலகம் முதல் எல்லா அண்டங்களிலும் உயிர்களை வளர்த்தருளினுள்; அதனுல் அவள் அறம் வளர்க்கும் தாய் ஆனுள்; துன்பமில்லாத உயிரின் அறிவைக்கடந்த முதல்வனிடத்துச் சிற்பரையாய், அலையும் கடலும் பிரிப்பின்றி இருத்தல்போல நீக்கமின்றி நிற்கும் பழையோளும் ஆவள்; திரிகூடத்தில் பராசத்தி பீடத்தில் எழுந்தருளியுள்ள அவளையன்றி யார்க்கும் வேறு அடைக்கலம் யாது உண்டு? இல்லை என்றபடி.

## வழிபாட்டின் பயன்

செங்கதிரும் வெண்கதிரும் வலம்புரியும் பொலம்புரிசைத் திரிகூ டத்து
நங்கைபரை பீடமதின் மேடமதி தனிலாவி னறுநெய் யாட்டி
மங்கலைபொற் பதம்பணிவார் மால்பதமே வுவரிடப மதியின் வாசப்
பொங்கலர்செண் பகப்போதா லருச்சிப்பார் சிவபதத்திற் பொருந்து வாரே.

பொ - ரை: ஞாயிறும் திங்களும் வலம் வரும் பொன் மதில்களையுடைய திரிகூடத்தில் உள்ள அம்மையின் மேலான பீடத்தில் சித்திரையில் நறுநெய் அபிடேகஞ்செய்து மங்கலப்பொருளாம் அவளை வணங்குவார் திருமால் பதவியை அடைவர்; வைகாசி மாதத்தில் செண்பகமலர்கொண்டு அருச்சிப்போர் சிவ பதம் பெறுவர்.

வெள்ளிநிலாக் கொழுந்தோட்டுஞ் செழுந்தோட்டு மல்லிகையான் மிதுனத் [திங்கள்
அள்ளியள்ளி வியன்பதத்தி லருச்சிப்பா ரயன்பதத்தி லணுகி வாழ்வார்
தெள்ளியகற் கடகமதி கருப்புரசந் தனங்கொடுசிற் பரைபீ டத்தில்
ஒள்ளியமந் திரபதத்தா லணிபவரிந் திரபதத்தி லுறைவா ரன்றே. 15

பொ - ரை: ஆனிமாதத்தில் வெண்ணிலவை வெல்லும் செழுமையான இதழ்களையுடைய மல்லிகையால் பீடத்தை அருச்சிப்போர் பிரமபதம் பெறுவர்; ஆடி மாதத்தில் பச்சைக் கருப்பூரம் கலந்த சந்தனத்தை எண்பத்தொருபத மந்திரங்களைச் சொல்லிப் பூசுவோர் இந்திரபதம் பெறுவர்.

அவளவனு மதுவுமென வனைத்துயிரு மனைத்துலகு மருளிச் செய்தாள்
எவளவளாந் திரிகூடப் பரைபீடத் தலரியினு லியாளி மாதம்
தவளமலர் கனகமலர் சாத்துமவர் வாணிதிரு வருளிற் சார்வார்
பவளமலர் சாத்துமவர் பரையருளிற் பயின்றுசிவ பதத்திற் சேர்வார். 16

பொ - ரை: எல்லா உயிர்களையும் உலகங்களையும் ஒருவன் ஒருத்தி ஒன்று என வகைப்படும்படி படைத்த பராசத்திபீடத்தில் ஆவணி மாதத்தில் அலரியின் வெண்மலர் பொன்மலர்களைச் சாத்தி வழிபடுவோர் முறையே கலைமகள் திருமகள் திருவருளைப் பெறுவர்; பவளநிறமுள்ள மலர் சாத்துவோர் அம்மை அருள் பெற்றுச் சிவபதம் எய்துவர்.

கன்னிமதி சென்னிமதி குலவுதிரி கூடவரைக் கவுரி பீடத்
துன்னியுயர் கிருதமுட னமுதமைப்பார் பரிதிவள ருலகிற் சேர்வார்
அந்நிலைது லாமதியிற் சந்தனு தித்தயில மாட்டி னுர்கள்
சென்னிநான் கெழில்படைத்துப் பொழில்படைப்பான் பெரும்பதத்திற்
[சேர்கு வாரே. 17

பொ - ரை: புரட்டாசித் திங்களில் நெய்கலந்த பொங்கல் நிவேதிப்பவர் சூரிய உலகிற்சேர்வர்; அவ்வாறு ஐப்பசித்திங்களில் சந்தனுதித்தைலம் ஆட்டி அபிடேகித்தவர்கள் நான்முகன் உலகிற்சேர்வர்.

பெருகியநெய்த் தீபமிட்டு விருச்சிகத்திங் களிற்காண்பார் பிறவி காணுர்
ஒருதனுவிற் பருப்பமுத மூட்டினர்வா னுட்டமுத முண்டு வாழ்வார்
மருவமர்செண் பகச்சோலை சிற்பரைபீ டத்தினிதா மகர மாதம்
திருமலியுங் கருப்பூர தீபமிட்டா ரமரகுல தீப மாவார். 18

பொ - ரை: கார்த்திகை மாதத்தில் மிகுந்த நெய்விளக்கு ஏற்றித் தரிசிப்போர் பிறவியை அறுத்துக்கொள்வர்; மார்கழியில் பருப்புப்பொங்கல் நிவேதிப்பவர் தேவராய் அமுதுண்டு வாழ்வர்; தைமாதத்தில் பீடத்துக்கு அழகைப் பெருக்கும் கருப்பூரதீபம் இடுவோர் தேவர்குலத்தில் விளக்கம் பெறுவர்.

வடவருவித் திரிகூடச் சாரல்வளர் பரைபீடம் வணங்கி யேத்திக்
கடமதியி லரிசனபா லிதஞ்சாத்திற் சுடர்மதியின் கதியிற் சேர்வார்
அடல்பெருகுங் கயன்மதியி லைவகைய திரவியங்க ளமைத்து வாசக்
குடநறுநீ ராட்டினவ ரழிவிலாப் பரமபதங் கூடு வாரே. 19

பொ - ரை: திரிகூடத்தில் உள்ள பரைபீடத்தை வணங்கித் துதித்து மாசி மாதத்தில் மஞ்சள் காப்புச் சாத்தி வழிபடுவோர் சந்திரலோகம் அடைவர்; பங்குனி மாதத்தில் ஐந்து பிரிவினையுடைய திருமஞ்சனத் திரவியங்கள் அமைத்து வாசநீர் ஆட்டினவர் அழிவில்லாத பரமபதம் சேர்வர்.

துய்யமலர்க் கரங்குவிப்பார் கையினுற் செய்தவினை தொலையு நாவால்
செய்யபுகழ் வாழ்த்தினர்க்கு வாக்கினுற் புரிபாவஞ் சிதையுங் கண்ணுல்
உய்யவெதிர் காண்பார்க்கு விழியினு லிழைத்தவினை யொழியு ஞானத்
தையல்பரை பீடம்வலம் புரிந்தாரைப் பிரிந்தோடுஞ் சகல பாவம். 20

பொ - ரை: பரைபீடத்தைக் கையினுல் தொழுவார்க்குக் கையால் விளைந்த பாவமும், தோத்திரம் சொல்வார்க்கு மொழியால் விளைந்த பாவமும், கண்டு மகிழ்வோர்க்குக் கண்ணுல் விளைந்த பாவமும் நீங்கும்; அதனை வலம் வருவார்க்கு எல்லாப் பாவங்களும் நீங்கும்.

சென்றுபணி வார்புகழ்வார் திரிகூடச் சிற்பரையைத் தியானஞ் செய்வார்
வென்றிமன முதலாக முப்பொறியாற் செயும்பாவம் விரைவி னீங்கும்
மன்றுடையார் குற்ருலம் பரவியருட் பரைபீடம் வணங்கி யேத்தி
நின்றுதொழு மட்டுமன்ருே பழவினைக ளவரிடத்து நிற்ப தெல்லாம். 21

பொ - ரை: திரிகூடச் சிற்பரையைச் சென்று தொழுது வாழ்த்தித் தியானிப்போர் முக்கரணங்களாலும் வரும் பாவந்தீர்ந்து உய்வர்; திருக்கூத்து உடைய பிரான் மகிழும் குற்ருலத்தை வாழ்த்தி பரைபீடத்தை வணங்கி வாழ்த்தி நிற்கும் அளவுதான் ஒருவரிடத்துப் பழவினைகள் நிற்கப்பெறுவது.

உயர்காயத் திரிசெபிக்கிற் கற்பமா யிரம்பிரம னுருவாய் வாழ்வார்
பயனுமெட் டெழுத்துரைக்கி லரியுருவா யிரங்கற்பம் படைத்து வாழ்வார்
புயலாடுந் திரிகூடப் பரைபீடத் தஞ்செழுத்தைப் புகல்வார் வெள்ளிக்
கயிலாயத் தொருபதினு யிரங்கற்ப மிருப்பர்நுதற் கண்ண ராக. 22

பொ - ரை: வேதமந்திரங்களில் சிறந்த காயத்திரியை உருவெண்ணுவார் ஆயிரம் கற்ப அளவு பிரமன் உருப்பெற்று வாழ்வர்; எட்டு எழுத்து உரைப்பார் மாயோன் உருவம்கொண்டு ஆயிரம் கற்பம்வாழ்வார்; அப்பரைபீடத்தின் முன்னிருந்து திருவைந்தெழுந்தைக் கணிப்பார் பதினுயிரம் கற்பம் சிவனுருப் பெற்றுக் கயிலையில் வாழ்வர்.

இவ்வண்ணம் பலவுளவாந் திரிகூடப் பரைமகிமை யென்று வாக்கான்
மைவண்ணக் கந்தரத்தார் மழைவண்ணச் சதுரகவி மலையச் சாரன்
மெய்வண்ண முனிக்குரைத்த படிசூத னுரைத்தருளி மேலோர் வேண்ட
உய்வண்ண மறைவடிவாங் குறும்பலா மகிமையினை யுரைப்ப தானுன். 23

பொ - ரை: திரிகூடத்தில் விளங்கும் பராசத்தியின் பெருமை இங்ஙனம் பலவகையில் விவரிக்கத்தகும்; இங்ஙனம் திருநீலகண்ட இறைவன் மழைபோல நாற்கவியும் பொழியவல்ல வாய்மைநெறிநிற்கும் அகத்திய முனிவருக்கு உரைத்த படி சூதமுனிவர் பிற முனிவர்களுக்கு உரைத்தருளினுர். அப்பெரியோர் மேலும் வேண்டிக்கொள்ள வேதவடிவக் குறும்பலாவின் மாண்பை உரைக்கத் தொடங்கினுர்.

*பராசத்திபீடச் சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் 454

# குறும்பலாச் சருக்கம்

ஈங்கிது வென்னக் காட்டு மியல்பினுக் கெட்டா தாகி
ஆங்கன நினைவு வாக்குக் கரியதாம் பெரிய சோதி
பாங்கரு ளுருவாக் கொண்டு பரையரு ளிச்சை ஞானம்
ஓங்குசீர்க் கிரியை மூன்று லுலகெலா மருளிச் செய்தான். 1

பொ - ரை: இஃது எனச் சுட்டும் இயல்பைக்கடந்து அதனுல் மாற்ற மனங்களுக்கு எட்டாத பரஞ்சோதி, தன்கண் உள்ள அருளே உருவாக் கொண்டு, பராசத்தியினின்றுந் தோன்றிய இச்சை ஞானக்கிரியை என்னும் முச் சத்திகளால் உலகெலாம் படைத்தருளினன்.

அந்திவா னனைய மேனி யரையிருள் புரையுங் கண்டத்
தெந்தையார் வதன மைந்தி லாகம மெழுநான் கேய்ந்த
பைந்துகிர்க் கனிவாய் வள்ளம் பரந்துதேன் வழிந்தா லென்னத்
தந்ததோர் வதன நான்குஞ் சதுர்மறை விரித்த வன்றே. 2

பொ - ரை: மாலைக்காலத்துச் செவ்வானம்போன்ற திருமேனியும் நள் ளிருள்போன்ற கழுத்தும் உடைய சிவபிரான் முகங்கள் ஐந்தில் ஒன்றிலிருந்து கிண்ணத்துத் தேன் வழிந்தாற்போலப் பவளவாயால் இருபத்தெட்டு ஆகமங்கள் பிறந்தன; ஏனை நான்கு வதனங்கள் நான்மறைகளைத் தந்தன.

மூலமா மறைக ளுன்காய் முன்னவ னருளாற் பின்னும்
மேலவா மங்க மாருய் மிருதிகள் பலவாய்ப் பேத
நூல்களாய்ப் புராண மாகி நுவன்றபல் கலையா யென்றும்
காலமுங் கணக்குங் காட்டிக் கதிக்கெலாங் கதியாய் நிற்கும். 3

பொ - ரை: யாவர்க்கும் முற்பட்டோனுகிய சிவபிரானது அருளால் மூல நூல்களாகிய மறைகள் இருக்குமுதல் நான்காய், பின்னும் இவற்றின் அங்கமாய் மேலாயினவாயுள்ள சிக்கை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோவிசிதி, சோதிடம் என்னும் ஆறும் தோன்றி, உபாங்கம் எனப்படும் மிருதி, புராணம், நியாயம், மீமாஞ்சை எனப் பலவித நூல்களாய், ஆயுள் வேதம், வில் வேதம், கந்தருவ வேதம், அருத்த நூல் என்னும் பல கலைகளாய் விரிந்து, மக்களுக்குக் காலவரையறை, அளவைமுறை முதலியவற்றை விளக்கி, உயிர்களின் அறிவு செல்லும் நெறிக்கெலாம் நெறிப்படுத்தும் கருவிகளாய் உலகில் நிலவும்.

வி - கு: கதி முன்னையது வழி, பின்னையது உபாயம் என்னும் பொருளைத்தரும்.

நாரணர் புவனங் காப்பு நான்முகன் படைப்பும் வெள்ளை
வாரண னரசும் வானோர் வாழ்க்கையு மந்த ணாளர்
காரண மகமு மேனைக் கடவுளர் தவமு மாதி
ஆரண நடப்பா லன்றோ வகிலமு நடப்ப தம்மா. 4

பொ - ரை: மாயோனது காப்புத்தொழிலும், நான்முகனது படைப்புத் தொழிலும், இந்திரனது அரசும், தேவர் வாழ்க்கையும், நிலவுலகில் அந்தணர் மழைக்குக் காரணமாகச்செய்யும் வேள்வியும், மற்றும் கடவுளரை நோக்கிச் செய்யும் தவமும் முதலிய எல்லாம் வேத விதிப்படியே நடத்தற்கு உரியன.

அவரவர் குலமா சார மநாசாரங் குணங்கள் குற்றம்
தவர்படு துன்ப மின்பஞ் சத்திய மசத்தி யங்கள்
பவனமே பவர்க்கம் பாவம் புண்ணியம் பகுத்தி யார்க்கும்
கவர்படக் காட்ட லாலே கண்களே பொருவும் வேதம். 5

பொ - ரை: வேதங்கள் மக்களுக்குக் கண்போல நின்று, அவரவர்க்கு உரிய ஒழுக்கமும், அஃதின்மையும், குணம் குற்றங்களும், தவறுதலால் வினையும் துன்பமும் இன்பமும், வாய்மை பொய்ம்மைகளும், சுவர்க்கமும், நரகமும், பாவ புண்ணியங்களும் பிரிந்து தோன்றும்படி விளக்குவன ஆம்.

அன்னது மனுக்கள் வாழ்வு பகலிடத் தழிவும் வேதாத்
தன்னது நிசிகா லத்திற் சகமெலா மழிவு நோக்கிப்
பன்னருங் கால மெல்லா மழிவிலாப் பான்மை மேன்மை
உன்னுதன் கருத்தா லுன்னி யுபநிடப் பொருளா லோர்ந்து. 6

பொ - ரை: அத்தகைய வேதம் பின்வருமாறு ஆய்ந்து உணர்கிறது: பதினன்கு மனுக்கள் வாழ்வு பிரமனது ஒரு பகற்பொழுதாகிய கற்பத்தில் அழியும்; அவனது இராப்போதில் உலகெலாம் அழியும்; யான் அழிவிலாது நிலைபெறுதல் வேண்டும் என உபநிடதப்பொருள் வாயிலாக ஓர்ந்தது.

கண்ணுறை கவின்சேர் நெற்றிக் கடவுளா லன்றி யீது
விண்ணவர் முதலோர் தம்மால் விலக்குதற் கரிதா மந்த
அண்ணல்பே ரருளை வேண்டி னறஞ்செயற் பால தாகும்
மண்ணினி லறமுந் தானந் தவமிரு வகையா மன்றே. 7

பொ - ரை: அழிவைச் சிவபிரானல் அன்றிப் பிறரால் நீக்கவும் நீக்கிக் கொள்ளவும் இயலாது; அவன் திருவருள் வேண்டின் அறம் செயல்வேண்டும்; அதுவும் தானம், தவம் என இருவகைப்படும்.

தானமே தவமே யார்க்குந் தருமமே யெனினு மேலை
வானமே யாதி யாய போகமே வளர்க்குந் தானம்
மோனமேல் விரதம் பூண்டு முற்றுமே பற்றி லார்க்குத்
தீனமே தவிர்த்து வீடு சேர்ப்பது தவமே யாமால். 8

பொ - ரை: அவற்றுள் தானம் மேலுலகவாழ்வு முதலிய போகத்தையே தரும்; அழிவின்மையைத் தராது. தவம் மௌனமும் விரதமும் கொண்டொழுகி இருவகைப்பற்றும் அற்றாரைத் துயர்களைந்து அழிவில் வீட்டின்கண் உய்ப்பது.

என்றுப நிடத வேத மியல்பினு லுணர்ந்து நாளும்
நன்றுமெய்த் தவமே தான நன்னகர்த் தலமே யென்று
நின்றது பனச மாக நெடிது நாட் பரனைத் தேடிக்
குன்றுசூ ழுலக மெல்லாங் குலமறை தன்னைத் தேட. 9

பொ-ரை: என்று வேதம் உபநிடதத்தின் பொருள் நிலைப்படி எண்ணி, என்றும் உண்மைத் தவமும் தானமும் புண்ணியத் தலவாசமே எனக்கருதி, பரம் பொருளைத் தேடிக் குறும்பலாவடிவில் நின்று தவம்புரிந்தது; அஞ்ஞான்று மலைகள்சூழ்ந்த உலகத்தில் உள்ளார் அனைவரும் தமக்கு உரிய மறையைக் காணுமையால் தேடுவார் ஆயினர்.

சீலமந் திரவி லாசச் செண்பகா ரணிய மேவிக்
கோலமந் திரங்க ளெண்ணில் கோடிக்கு மேலாய் நின்ற
மூலமந் திரத்தை நோக்கி மூலமீ றில்லா மூர்த்தி
தூலமந் திரத்தை யேத்திச் சூக்கமந் திரத்தை யுன்னி. 10

பொ-ரை: இங்ஙனம், ஒழுக்கமும் மந்திரமும் விளங்கும் செண்பகக்காட்டில் புகுந்து அழகிய திருக்கோயில்கள் பல கோடிகளுக்கும் மேலாயுள்ள மூலக்கோயிலை நோக்கி, ஆதி அந்தம் இல்லாத சிவபிரானது வாசகமாகிய தூலபஞ்சாக்கரத்தைப் புகழ்ந்து கூறி, தன் அகத்தே சூக்கும பஞ்சாக்கரப் பொருள்நிலையினையே உன்னி.

பூங்கிளி மழலை பாகன் புடார்ச்சுன புரத்திற் சென்றும்
ஓங்கெழு மறைக டாமே யுலப்பிலாத் தவங்கள் செய்து
தூங்கியு மிளைத்துந் தேடித் துளங்கியு மநேக காலம்
ஏங்கின வம்மா முக்க ணிறையரு ளெளிதோ யார்க்கும். 11

பொ-ரை: உமையொருபாகன் அமர்ந்த திருப்புடார்ச்சுனபுரத்திற் சென்றும் ஓங்காரத்தின் விரிவாகிய மறைகளே ஒழிவிலாத் தவங்கள் செய்து தங்கியும் வாடியும் தேடி அலைந்தும் பல்லாண்டுகள் ஏங்கின; யார்க்கும் முக்கட் செல்வர் திருவருள் எளிதிற் கிடைப்பது அரிது அல்லவா!

ஆயிரஞ் சுருதி வேதந் தவம்புரிந் தமர ராண்டில்
ஆயிரப் பதிற்றுண் டெல்லா மெய்தில னுத லாலே
ஆயிர முகஞ்சேர் கங்கை யணிந்தவ னடிகள் பேணி
ஆயிரந் திருநா மங்க ளேத்திநின் றுர்த்த வன்றே. 12

பொ-ரை: ஆயிரம் சுருதிகளையுடைய வேதம் தேவயாண்டில் பதினுயிரம் யாண்டு தவம் புரிந்தும் இறைவன் காட்சிப்படாமையால், அளவிறந்த முகங்கள் கொண்ட கங்கையைச் சடையில் அணிந்த அப்பெருமான் திருவடிகளை உன்னி, ஆயிரந் திருநாமங்களால் அவனைப் புகழ்ந்து ஒலித்தன.

### வேறு

கங்கை வார்சடை யோகீ நமோநம
கஞ்சன் மாலறி யாதாய் நமோநம
மங்கை யாமளை பாகா நமோநம
மந்த்ர ஞானசொ ரூபா நமோநம
சங்க வீதிவி லாசா நமோநம
சம்பு நாதவி னோதா நமோநம
செங்கை மான்மழு வாளா நமோநம
செண்ப காடவி நாதா நமோநம. 13

பொ - ரை: கங்கையைச் சடையில் ஒடுக்கிய, யோக வடிவந்தாங்குவோய் வணக்கம், வணக்கம்; அயன்மால் அறியா அண்ணலே வணக்கம், வணக்கம்; சாமளநிறமுள்ள உமையொருபாகனே வணக்கம், வணக்கம்; ஞான உருவாயும் மந்திர வடிவாயும் உள்ளோனே வணக்கம், வணக்கம்; சங்க வீதியையுடைய ஒளிமயனே வணக்கம், வணக்கம்; சுகத்திற்கு மூலமாக உள்ள தலைவனே, அற்புதனே வணக்கம், வணக்கம்; மான்மழு ஏந்திய செங்கையனே வணக்கம், வணக்கம்; செண்பகவனத்து இறைவனே வணக்கம், வணக்கம்.

### வேறு

நடமிடு பராபரா நமோநம நதிபொதி சடாதரா நமோநம
நிடதபு யபூதரா நமோநம நிருமல நிராமயா நமோநம
குடமுனி தயாபரா நமோநம குழன்மொழி மனோகரா நமோநம
அடலிட பகேதனா நமோநம வரகர சிவாசிவா நமோவென. 14

பொ - ரை: திருக்கூத்தியற்றும் மேலோனே, நதி பொருந்திய சடைமுடிக் கடவுளே, மலைதிரண்டன்ன திண்தோளனே, நின்மலனே, நோயில்லாதவனே, குடமுனிக்கு அருள்வோனே, குழல்வாய்மொழி அம்மைக்கு இனியோனே, வலிய இடபக்கொடியுடையாய், அர அர சிவ சிவ வணக்கம், வணக்கம் என.

வி - கு: நிடதம் - எட்டு மலைகளில் ஒன்று; இங்கு மலை என்பதுபட நின்றது. பராபரன் - முன்னுமாய்ப் பின்னுமானவன்; அல்லது மேலானதினும் மேலானவன். மனோகரன் - மகிழ்ச்சியைச் செய்பவன்.

### வேறு

கலைத்தழும் பிருந்த வேதங் கருதியேத் தெடுப்ப நாதன்
சிலைத்தழும் பிருந்த தோளுஞ் செண்பகக் கோதை கொங்கை
மலைத்தழும் பிருந்த மார்பு மவுலிமேற் பிறையும் வானோர்
தலைத்தழும் பிருந்த கோலச் சரணமுந் தோன்ற நின்றான். 15

பொ - ரை: பல நூல்களின் அடையாளமும் பொருந்திய வேதம் மேற் கூறியவாறு எண்ணி இறைவனைத் துதித்தபோது, முதல்வன் மேருவை வளைத்த தோள்களும், அம்மையின் முலைத்தழும்பேற்ற மார்பும், சடையின்மேல் பிறையும், தேவர்தம் முடித்தழும்பை ஏற்றுநின்ற திருவடியும் தோன்றுமாறு வெளிப்பட் டருளினன்.

வேறு

நின்றுவிடை மேற்காட்சி கொடுத்தருளி யருணேக்கி னிமலன் வாசத்
தென்றலுட னியாமுறையுஞ் செண்பகக்கா வமர்ந்துதவஞ் செய்த வாற்றல்
என்றுமுவ ந்தேமறைகா ளின்றுமக்கு வேண்டும்வர மியம்பீ ரென்ன
மன்றினுளா டியபெருமா னருளுதலுந் திருவடிகள் வணங்கி வாழ்த்தி. 16

பொ - ரை: வெளிப்பட்டு விடைமேற் காட்சிகொடுத்து, வேதங்களை அருள் நோக்கஞ்செய்து கூறுவார்: நறுமணமளாவிய தென்றலுடன் யாம் விரும் பித் தங்கும் செண்பகவனத்தில் தங்கி, நீர் தவம் செய்தமையால் யாம் மகிழ்ந் தோம்; உமக்கு வேண்டும் வரங்களைக் கேண்மின் எனக் கூத்தப்பிரான் அருளிய போது, அப்பெருமான் திருவடிகளைத் தொழுது வாழ்த்தி உரைக்கின்றன வேதங்கள்.

நிற்பதே வேண்டுமூல கீன்றவட்கு முனக்குநறு நிழலா யிந்தச்
சிற்பனச நறுநிழலே திருக்கோயில் கொண்டருளிச் செய்தல் வேண்டும்
கற்பமுறு பிரளயம்வந் துலகமூன் றையுமழிக்குங் கால மேனும்
தற்பரநின் றிரிகூடம் போலெமக்கு மழியாமை தருதல் வேண்டும். 17

பொ - ரை: உனக்கும் அம்மைக்கும் நறுநிழல்தரும் குறும்பலாவாய் யாம் நிற்றல் வேண்டும்; ஞானமயமான அதன் தண்நிழலே கோயிலாகக் கொண்டு எம்பெருமான் எழுந்தருளுதல் வேண்டும்; பிரமகற்பத்தில் வரும் பிரளயகாலங் களில் மூவுலகும் அழியும்போதும் நினது திரிகூடத்தைப்போல யாமும் அழியா மல் நிலைபெறுதல் வேண்டும்.

முந்துவர மிவைமூன்று ந் தருகவெனப் பரவுதலு முக்கண் மூர்த்தி
அந்தவரங் கொடுத்தருளி யொருவடிவாய்ப் பலவடிவா யமரா நிற்பச்
சொந்தமறை யொருநான்கு மொருவடிவாய்ப் பலவடிவாய்த் தோன்றிற்
[றன்றே
எந்தைபிரா னடியரைத்தா னிருந்தபடி யிருத்துவது மியற்கைத் தம்மா. 18

பொ - ரை: முற்பட்ட இம்மூன்று வரங்களையும் தருக என வேண்டிக் கொண்டன; அந்த வரங்களை இறைவன் அவற்றிற்குக் கொடுத்தருளி, ஒப்பற்ற சிவலிங்கமூர்த்தமாய்ப் பலாமரத்தின் அடிக்கண் அமர்ந்தான்; அவனுக்கு உரிய நான்கு மறைகளும் ஒரு வடிவாய், தம் அங்கங்கள் வேறுபாட்டால் பல வடி வாய்த் தோன்றின. சிவபிரான் தன் அடியாரைத் தான் இருந்தபடியே இருக்க வைத்தல் அவன் இயல்பு அல்லவா?

ஆகையாற் சதுர்வேதந் தருவாக மூலமதன் மூல மாகப்
பாகையா னவையிரண்டுங் கவராகச் சுருதியெலாம் பணை களாகச்
சாகையா னவைபசிய சாகையா வுபநிடதந் தளிராச் சூல்கொண்
டோகையார் தருமமுதற் பெரும்பலவுங் குறும்பலவே யுதவு மாதோ. 19

பொ - ரை: இங்ஙனமாகலின், நான்கு கூறுபடும் வேதம் மரமாக, அதன் மூலமாகிய பிரணவம் மரத்தின் வேராக, கரும ஞானகாண்டங்கள் என்னும் பகுப்பு பெருங்கவடுகளாக, சுருதிகள் எல்லாம் பருத்த கிளைகளாக, சாகைகள்

பசிய இலைகளாக, உபநிடதம் தளிராகப் பொருட்கருக்கொண்டு அறமுதல் நாற்பெரும் பொருளும் குறும்பலாவே தருவதாயிற்று.

அப்பலவின் வடிவுசதுர் வேதவடி வாதலினு லதன்பா லாக
எப்பலதே வருமிருக்கு மியல்பினு லொருகுடநீ ரிதன்பால் வார்க்கில்
செப்பரிய தேவருக்கு மூவருக்கு மபிடேகஞ் செய்த தாகும்
கொப்பலரு நீழலிடை யுருச்செயுமந் திரங்களொன்று கோடி யாமால். 20

பொ - ரை: குறும்பலா நான்மறையே ஆதலினலும், அதன்பக்கலில் எந்தப்பல தேவரும் உளர் ஆதலினலும், இதற்குத் தண்ணீர்விட்டவர் பல தேவர்க்கும் மும்மூர்த்திகளுக்கும் அபிடேகஞ் செய்த பயனை எய்துவர்; கிளைகள் விரிந்த நிழலிலிருந்து கணிக்கப்பெறும் மந்திரம் ஓர் உரு கோடியுருவாய்ப் பயன் விளைக்கும்.

ஓதரிய திரிகூடச் சாரலுறை குறும்பலவி லுந்தி பூத்த
மாதவனு மம்புகழ்வார் வைகுந்த பதத்திலென்றும் வைகி வாழ்வார்
வேதபா ராயணஞ்செய் வேதியர்க ளரன்கயிலை வெற்பிற் சேர்வார்
ஏதுமோர் மகம்புரிவா ரிந்திரன்போற் சதமகப்பே றெய்து வாரே. 21

பொ - ரை: திரிகூடமலைச் சாரலில் உள்ள குறும்பலாவின் நிழலிலிருந்து திருமால் நாமம் புகல்வோர் வைகுந்தபதம் பெறுவர்; அங்கிருந்து வேதபாராயணஞ் செய்வோர் திருக்கயிலையைச் சேர்வர்; யாதேனும் ஒரு வேள்வியைச் செய்வோர் இந்திரன்போல் நூறு வேள்விப்பயனை எய்துவர்.

ஒருமதிவெள் ளடைபாகு தானமிடி லிருமதிவா ழுலகிற் சேர்வார்
வருமதிதோ றுங்கொடுப்பார் மகிமையுரைப் பரிதுமறை வருக்கை நீழல்
இருபடிநெல் விளையுநில மீவார்க ளெழுபடிக்கு மிறைவ ராவார்
கருதுபிதுர்ப் பலியிடுவார் தலைமுறைகண் மூவேழுங் கதியிற் சேர்ப்பார். 22

பொ - ரை: ஒருமாதகாலம் வெற்றிலைபாக்குத் தானம் அங்கிருந்து செய்வோர் பெரிய சந்திரன் உலகைப் பெறுவர்; மாதந்தோறும் அத்தானம் செய்வார் எய்தும் பயனை அளவிடல் அரிது; வேதப்பலா நிழற்கீழிருந்து இருபடி நெல் விளைவுதரும் நிலத்தைத் தக்கார்க்குக் கொடுத்தவர்கள் ஏழ் உலகிற்கும் தலைவர் ஆவர்; கடமையாகக் கருதப்படும் தென்புலத்தார் கடனை அங்கிருந்து செய்பவர்கள் இருபத்தொரு தலைமுறையினரையும் உயர்கதியில் சேர்ப்பர்.

நெல்லிடுவார் பொன்னிடுவா ரமுதிடுவார் மறைத்தருவி னிழலி லாவின்
புல்லிடுவார் தமக்கமரர் விருந்திடுவார் திருக்கோயில் பொருந்த வோர்செங்
கல்லிடுவா ருலகாள்வார் கருங்கலிடு வார்கடவுட் கயிலை சேர்வார்
சொல்லிடுவா ரஞ்செழுத்தைத் துதித்திடுவா ரிமையவருந் துதிப்ப வாழ்வார்.

பொ - ரை: வேதப்பலவின் நிழலில் நெல், பொன், அன்னம், ஆவிற்குப் புல் என்னும் தானங்களைச் செய்வோர் தேவர்களால் விருந்தாக உபசரிக்கப்படுவர்; திருக்கோயிலுக்குப் பொருத்தமான ஒரு செங்கல்லாயினும் கொடுப்போர் உலகத்தை ஆளும் மன்னர் ஆவார்; கருங்கற்பணி செய்வார் திருக்கயிலையைச் சேர்வர்; அறவுரை கூறுவாரும் அஞ்செழுத்தைத் துதிப்பாரும் தேவரும் போற்ற மேல் உலகங்களில் வாழ்வார்.

அந்தமா தியுங்கடந்தார் குறும்பலா மகிமையிவை யனைத்து மேனாள்
விந்தமால் வரைகடந்த முனிக்கருளிச் செய்தபடி விளம்பிச் சூதன்
முந்தமா னததான நதித்தான ந்தோயார்க்கு முத்தி தோயும்
மந்தமா ருததான மகிமைமுனி வோர்கேட்ப வழங்கா நின்றான். 24

பொ - ரை : அந்தம் ஆதியில்லானுக்கு உறைவிடமாகிய குறும்பலாவின் பெருமையாகிய இவற்றைச் சூதமுனிவர் ஏனைய முனிவர்களுக்கு, முன் சிவபிரான் விந்தம் அடக்கிய குறுமுனிவர்க்கு அறிவுறுத்தபடி நினைந்து, எடுத்துக் கூறினர். பின், முன்னர் மானத ஸ்நானம், வடவருவி ஸ்நானம் செய்யாதவர்க்கும் முத்தி தருவதாகிய மந்தமாருத ஸ்நானத்தின் பெருமையை முனிவர் கேட்கும்படி கூறுவாராயினர்.

குறும்பலாச் சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் 478

# மந்தமாருதச் சருக்கம்

நல்வி யாதனுஞ் சனகரும் புகழ்வது நவில்வோர்
தொல்வி யாதியும் பாவமுந் தொலைப்பது சுருதிக்
கல்வி யாவையு முணர்வையுங் கொடுப்பது கருதில்
செல்வம் வீடுபே றளிப்பது செண்பகா ரணியம். 1

பொ - ரை: திரிகூடமலைச் சாரலில் உள்ள சண்பகவனம் வியாசர், சனகர் முதலாயினோரால் போற்றப்படுவது; தன்னைப் புகழ்வோர்க்குப் பழைய நோயினையும் அதன் காரணமாகிய பாவத்தையும் போக்குவது; வேதக் கல்வியினையும் மெய்யுணர்வினையும் நல்குவது; தன்னை நினைப்பார்க்குச் செல்வமும் வீடுபேறும் அளிப்பது.

ஐந்து நூற்றுவ ரந்தண ருமகச் சாலை
சிந்தை யாய்முது தவம்புரி தேவராச் சிரமம்
கொந்து பூங்குழற் பரையுடன் பரனுறை கோயில்
சந்த னடவி வேலிசூழ் சண்பகா ரணியம். 2

பொ - ரை: சந்தனமரங்களால் சூழப்பெற்ற சண்பகவனம் ஐந்நூறு அந்தணர் வாழ்ந்து செய்துவரும் அரிய வேள்விச் சாலைகளுக்கும், கருத்து ஒன்றி உயர்ந்த தவம்புரி தேவர்க்கும் இருப்பிடம்; பூங்கொத்துக்களைச் சூடும் கூந்தலையுடைய பராசத்தியுடன் பரமசிவன் எழுந்தருளி விளங்கும் திருக்கோயிலாகவும் உள்ளது.

பிரச மாமலர்ச் செண்பகப் பொதும்பரிற் பிறந்து
திரவு பூஞ்சினைத் தொட்டிலாட் டயர்ந்துதே னருவிப்
பரம வாரியிற் படிந்துநீள் பணிலமாக் கோயில்
குரவன் முன்றில்வாய்த் தவழ்வதோர் தென்றலங் குழவி. 3

பொ - ரை: தென்றலாகிய குழவி தேன்பொருந்திய மலர்களையுடைய சண்பகச்சோலையில் தோன்றி, வலிய பூக்கிளைகளாகிய தொட்டிலில் ஆடல் செய்து, தேன் அருவியாகிய மேலான தீர்த்தத்தில் முழுகி, சங்க வடிவத்து அமைந்த திருக்கோயிலில் முதலாசிரியனாகிய சிவபிரான் முன்றிலில் தவழ்கிறது.

அன்ன தென்றலின் மகிமையா லருந்தவ ருறையும்
நன்ன கர்ப்புடார்ச் சுனபுரத் தெல்லைநாற் றிசையுள்
மன்னி யின்னுயிர் விடுத்ததோர் பாதக மறையோன்
கின்ன நீங்கிமேற் கதிபெறு மகிமையைக் கிளப்பாம். 4

பொ - ரை: அத்தகைய தென்றலின் பெருமையால், புடார்ச்சுனபுரத்து நான்கு எல்லைகளுள் தங்கி உயிர் நீத்த பாதகனாகிய மறையவன் ஒருவன் துன்பம் நீங்கி உயர்கதிபெற்ற மாண்பைக் கூறலுறுகின்றோம்.

வேறு

விண்டலைத் தெங்கின் பாளை மிடறுடைத் தெழுந்து வாளை
கொண்டலைக் கிழியப் பாயக் குழவியைத் துருவுந் தாய்போல்
கண்டலைக் கமுகை மாவைக் கதலியைக் கடந்து தேமாந்
தண்டலைச் சென்னி நாடு தரங்கநீர்ப் பொன்னி நாடு. 5

பொ - ரை: காவிரிநாடு, வாளைமீன் மேலேதாவி ஆகாயத்தில் வளர்ந்துள்ள தெங்கின் பாளையை உடைத்து மேலெழுந்து மேகம் கிழியும்படி பாயும் வளம் உள்ளது; நீர்நிலையில் எழும் அலை தாழையை பாக்கு மரத்தை மாமரத்தை வாழையைக் கடந்து இனிய மாமரச் சோலையின் தலையை நாடுகிறது; இது வாளையாகிய தன் குழந்தையைப் பின் சென்று தேடும் தாயின் செயலை ஒத்து உள்ளது.

பாரிடை நீதி நீராப் பல்குடி பயிர்க ளாக
நேரியர் செங்கோல் வேலி கோலிய நெடுஞ்சோ ணுட்டுப்
பேரிய லந்த ணளர் பெருங்குலத் தலைமை பூண்டோன்
ஆரிய மறைநூ லாதி யருங்கலை பயின்ற நாவான். 6

பொ - ரை: சோழ மன்னர்கள் பலவகைக் குடிமக்களையும் நீதியே நீராகக் கொண்டு வளர்த்துச் செங்கோன்மை என்னும் வேலியால் வளைத்து உலகத்தில் காக்கின்றுர்கள்: இத்தகைய சோணுட்டில், மறையவர்குலத்தலைவன் ஒருவன் வேதம் முதலிய பலகலையும் பயின்றவனுக இருந்தான்.

அருமகம் புரியுங் காட்சி யத்திரி கோத்தி ரத்தான்
பெருமகத் துவஞ்சேர் கல்வி யத்திரி யெனும்பே ராளன்
வருமகத் துணையாங் கற்பின் மடக்கொடி வயிறு வாய்ப்ப
ஒருமக னுத்தி ரேய னுதித்தன னுருவின் மிக்கான். 7

பொ - ரை: செய்தற்கரிய வேள்வி செய்யும் உணர்வுள்ள அத்திரி கோத்திரத்தவன்; பெருமையான கல்வியுள்ள அத்திரி என்னும் பெயரினன்; இவனுக்கு வேள்வித் துணையாகிய கற்புடைய மனைவியின் வயிறு வாய்ப்ப, அழகுள்ள மகன் பிறந்தான்; அவன் பெயர் ஆத்திரேயன்.

சீர்பயில் குடிக்கோர் செல்வத் திருமக னுத லாலே
பார்பயின் றறியான் மூன்று பருவமு மருமைத் தாயர்
தார்பயின் முடிமேற் கைமேற் றந்தையார் மடிமேற் கோல
மார்பின்மேல் வளர்ந்தான் ருருப் புல்லூரி இ வளர்வ தேபோல். 8

பொ - ரை: சிறந்த குடிக்கு ஒரேமகன் ஆதலால், மூவாண்டுவரை அவன் நிலத்தில் அடிவைத்துப் பழகவில்லை; அருமைத் தாயார் முடிமேலும் கைமேலும் தந்தையார் மடிமேலும் மார்பின்மேலும் வைத்து அன்பு பாராட்டி வளர்க்கப் பெற்றுன்; மரத்தின்மேல் வளரும் புல்லுருவிபோன்றுன் எனக் கூறலாம்.

தாலமேற் பயிலுந் தோறுந் தன்குலத் தரும மஞ்சி
ஓலமிட் டரற்றல் போல வொலிமணித் தண்டை யார்ப்ப
ஞாலமேற் கிடந்த பாவ நடைகற்ப நடைகற் ருன்வேள்
கோலுமைம் படைநாண் பூணக் குலவுமைம் படைநாண் பூண்டான். 9

பொ - ரை : நிலத்தின்மேல் அடிவைத்து நடைபழகியபோது அவன் குல தருமம் அஞ்சி ஓலமிடல்போலக் காலில் அணிந்திருந்த இரத்தினத் தண்டை ஒலித்தது; உலகிலுள்ள பாவங்கள் நடைகற்றற்கு ஏதுவாகத் தான் நடைகற்ருன்; மன்மதன் அம்பாக உபயோகிக்கும் பூக்களாகிய ஐம்படைகளை வண்டுகளின் வரிசையாகிய நாண் பூணும்படி ஐம்படைத் தாலியை அம்மகன் தன்மார்பிற் பூண்டான்.

வி - கு : நாண் - நாணமும் ஆம்.

ஒருபிறப் பினியில் லாத வுயர்பிறப் பினில்வந் தானை
இருபிறப் பாள ரெல்லா மிலங்குமுப் புரிசேர் முந்நூல்
பெருகுநான் மறையி னலே பிராயமோ ரைந்திற் சாத்திப்
பருவமா றகன்ற வேழிற் பல்கலை பயிலச் செய்தார். 10

பொ - ரை : இனிமேற் பிறப்பில்லாதபடி செய்துகொள்ளவல்ல உயர் குடிப் பிறந்தானை, அந்தணர் நான்மறை விதிபற்றி ஐந்தாம் ஆண்டில் முப்புரி முந்நூலை மார்பில் அணியச் செய்தார்கள்; ஏழாம் ஆண்டில் பல கலைகளையும் பயில்வித்தார்கள்.

ஒருபதோ டிரண்டாம் யாண்டு மோதின னேதுங் காலைச்
சுருதிநூல் பயிலுந் தோறுஞ் சொற்பயில் கிள்ளை போல்வான்
தருபுனல் படியுந் தோறுந் தாவுநீர்க் கரண்டம் போல்வான்
அருநெறி நியாசந் தோறு மவிநயப் பாவை போல்வான். 11

பொ - ரை : பன்னிரண்டு ஆண்டுவரை வேதம் ஓதினன்; ஓதியபோது கிளிப்பிள்ளையைப் போல் கேட்டதைத் திருப்பிச் சொன்னன்; பொருளைப் பற்றிச் சிந்திக்கவில்லை; தண்ணீரில் முழுகியபோது நீர்க்காக்கையைப் போல முழுகினன்; இறை திருவருளில் முழுகி அவன் பேராற்றலை அகத்து எண்ணவில்லை; செய்தற்கரியசமயநெறிப்படி கர, அங்க நியாசங்கள்செய்தபோது மந்திரம் கிரியை பாவனை மூன்றும் இயையச் செய்யாமல், நாடகமகளிர் செய்யும் அவிநயம் போலக் கருத்தின்றியே செய்தான்.

அருங்கலை பயிலுங் காலை யறம்பொரு ளின்பம் வீடாம்
இருங்கலை நான்கின் முன்னை யிரண்டும்பின் னென்று மோரான்
ஒருங்குசே ரின்பத் தேனு மொழிபெருந் திணையே யன்றி
விரும்புமைந் திணையுந் தேரான் விதிவழி மதிபோ மன்றே. 12

பொ - ரை : கலைகள் பயின்றகாலை உறுதிப்பொருள் நான்கனுள் இன்பம் ஒன்றுபற்றியே நுனித்துக் கற்ருன்; இன்பத் துறையினும் ஒத்த காமம் எனப்படும் அன்பின் ஐந்திணை பற்றிக் கற்காமல் ஒவ்வாக் காமத்தின்பாற்படும் இராக்கதம் ஆசுரம் பைசாசம் போன்ற பெருந்திணைபற்றியே கற்பான் ஆயினன்; விதி வழி மதிபோம் என்பது மெய் அல்லவா !

புருவமு முகமுங் கண்ணும் புயங்களு முந்நூன் மார்பும்
உருவமுங் கண்ட மாத ருள்ளமுங் கலையுஞ் சோரப்
பருவமும் பதின ருகிப் படைமதன் வடிவ மானன்
அருவமொன் றெய்தா னகி லவனிவ னென்ன லாமால். 13

பொ - ரை: புருவம் கண்கள் புயம் முந்நூன்மார்பு உருவம் என்பவற்றைக் காணும் மாதர் காமவயப்பட்டுத் தம் மனமும் சீலேயும் சோரும்படி அழகும் வனப்பும் உளவாகும் பதினறு ஆண்டு எய்தியபோது மன்மதனையே ஒத்தான்; காமன் அருவாய் அநங்கனுயில்லையென்றால், அவனை இவன் எனவே கூறலாம்.

தன்னுடைக் கொழுநன் மேனி தானெதிர் நோக்குந் தோறும்
மின்னிடை யிரதி யார்க்கு வேறுபா டறிய வேண்டில்
கன்னலஞ் சிலையில் லாமற் காமனைப் பொருவா னின்னேன்
அன்னவெஞ் சிலையி னுலே யனங்கனும் பொருவான் மன்னே. 14

பொ - ரை: இரதிதன் கணவனுக்கும் ஆத்திரேயனுக்கும் உள்ள வேறுபாடறிதற்கு இவன் கரும்புவில் இல்லாமையால் அவனை ஒவ்வான் (பொருவான்); காமன் கரும்புவில்கொண்டு போர்புரிவன்.

அளப்பரும் வடிவின் மிக்கா னுதலா லணங்க னுரும்
விளக்கில்வீழ் பதங்கம் போல விருப்புட னவனைச் சூழ்வார்
துளக்கறும் விகாரத் தாலே யவனுமத் தோகை மார்பால்
உளத்தினிற் காதல் கூர வொட்டில்வீழ் பதங்கம் போல்வான். 15

பொ - ரை: ஆத்திரேயன் பேரழகன் ஆதலால், மகளிர் விளக்கில் விழும் விட்டில்போல அவனைச் சூழ்வார்கள்; அவனும் அசைக்கமுடியாத காம விகாரத்தால் பெண்களிடத்துக் காதல் மிக்கு ஒட்டும் பசையில் விழும் பறவைபோல் அகப்படுவான்.

கிளர்பொருள் கல்வி செல்வங் கிளைகளும் படைத்து நீங்கா
இளமையும் பெற்றான் வாழ்வோர்க் கிவைகளி லொன்றே போதும்
விளைபொரு ளைந்துங் காம விடரிடை வீழ்ப்ப தானன்
வளர்குடிப் பிறந்தா ரேனும் வாழ்வுண்டோ மதியற் றூர்க்கே. 16

பொ - ரை: இவன் விளக்கந்தரும் நுகர்ச்சிப்பொருள், கல்வி, செல்வம், சுற்றம் என்னும் இவற்றின்மேலும் இளமையும் பெற்றிருந்தான்; உலகில் வாழ்வோர்க்கு இவற்றுள் ஒன்றே ஒருவனைக் கெடுத்தற்கு அமையும்; இவன் ஆசையை விளைவிக்கும் ஐந்து பொருளையும் காமமாகிய நிலவெடிப்பில் வீழ்த்தினன்; உயர் குடிப் பிறந்தாரேனும் ஊழான்வரும் நல்ல மதி இல்லாதவர்க்கு மேற்கூறிய ஐந்தாலும் நல்வாழ்வு உண்டாகுமோ? உண்டாகாது.

பேய்மொழி கேட்கும் யாமம் பிறன்கடை திரிவா னீன்ற
தாய்மொழி கேளான் மற்றுந் தந்தைதன் மொழியுங் கேளான்
ஏயுமேற் குலத்தே வந்து மிழிகுல விடர்பாற் கூடி
ஆயசூ கரத்தைச் சேர்ந்த வானிளங் கன்று போன்றான். 17

பொ - ரை: பேய்கள் பேசிக்கொள்ளும் மொழியும் கேட்கக்கூடிய அமைதி நிலவும் நடுச்சாமத்தில் பிறர்கடைவாயிலில் திரிவான் ஆத்திரேயன்; தாய்தந்தையர் அறிவுறுத்தும் உறுதிமொழிகளைப் பொருட்படுத்தான்; உயர் குலத்திற் பிறந்தும் இழிகுலத் தூர்த்தர்களோடுகூடி, இழிந்த பன்றிகளோடு சேர்ந்த இளைய பசுக்கன்றைப் போன்றான்.

வேறு

மாவேட்டி லெழுதாது மறைசொல்வார் தமைநீங்கி
மாவேட்டி லெழூதாது மலர்கொய்வான் மாதருக்காத்
தீவேட்ட முறைபுரியுஞ் சிலதருப்பை யேந்துதல்போய்த்
தீவேட்ட முறைபுரியுஞ் சிலையேந்தித் திரிகின்றான். 18

பொ - ரை: பெரிய ஓலையில் எழுதாது மறையை வாய்மொழியாகக் கூறிப் போதிக்கும் அந்தணர்களை விட்டுநீங்கி, வண்டு சூழும் இதழ்களில் எழும் மகரந்தம் உடைய மலர்களை மாதர்கள் பொருட்டுக் கொய்வான்; முத்தீ வேட்கும் ஒழுங்கில் தருப்பைப்புல்லை ஏந்துதலை விட்டு, தீய வேட்டையாடும் செயல்புரியும் நிலையில் வில்லை ஏந்தித் திரிவான்.

பெருக்காயத் திரிகுலத்துப் பிறந்துமே பிறமாதர்
செருக்காயத் திரிகுலத்தார் பிறரோடுஞ் சென்றுழல்வான்
இருக்காயத் திரிவாரை யிகழுவா னினமயில்போல்
உருக்காயத் திரிமயக்கா லுயர்காயத் திரிமறந்தான். 19

பொ - ரை: தன்குலத்திற்குப் பெருக்காய் அத்திரிகோத்திரத்தில் பிறந்தும் கூட, பிற மாதர்தம் கலவிப் போரில் தனக்குப் போட்டியாளரைக் கோபிக்க, அரசர் முதலிய முக்குலத்தார் பிறரோடுஞ் சென்று திரிவான்; இருக்கு (வேத மந்திரங்களை) ஆராய்தற்குச் சஞ்சரிப்பவர்களை இகழ்வானாகி, உயர்ந்த மயில் போன்ற உருவும் (சாயலும்) அழகிய சரீரமும் உடைய ஸ்திரீகள் மயக்கத்தால் உயர்ந்த காயத்திரியை மறந்துவிட்டான்.

அஞ்சுமக மஞ்சுமக மாயினு னுயர்குலத்து
விஞ்சுசீ ரறுதொழிலு மறுதொழிலாக் கைவிட்டான்
பஞ்சணையிற் கலவிநலம் பாராட்டிச் செவிக்கோதும்
வஞ்சியர்கள் சதுர்மறையே வழங்குசதுர் மறையானுன். 20

பொ - ரை: ஐவகை வேள்வியையும் அஞ்சும் அகம் உடையனுயினன்; தன் உயர்குலத்துக்குச் சிறப்புத்தரும் ஆறு தொழிலையும் கெடுகின்ற தொழிலாகும்படி கைவிட்டான்; பஞ்சு மெத்தையில் புணர்ச்சி இன்பத்தைப் பாராட்டித் தன் செவியில் மகளிர் கூறும் திறமையான இரகசியங்களே தான் வழங்கிவரும் சதுர் மறையாகக் கொண்டான்.

சந்தியா னதுமறந்து தரித்தாலும் பொதுச்சேரிச்
சந்தியா னதுமறந்து தரித்திடான் சந்திதொறும்
முந்தியே தொடுமிடங்கண் முறைமறந்து பொதுமாதர்
முந்தியே தொடுமிடங்கண் முறைமறவா தொழுகினன். 21

பொ - ரை: சந்தியாவந்தனச் செயலை மறந்து இருப்பினும் பொதுமகளிர் வாழுமிடத்து முச்சந்தி நாற்சந்தி முதலியவற்றை மறந்து இரான்; சந்தியா காலந்தோறும் முற்படச்செய்யும் நியாசமுறைகளை மறந்து பொது மகளிர்தம் சேலை முகப்பையும் தொடும் இடங்களையும் முறை மறவாது ஒழுகினன்.

பிரமமா நன்மணமும் பிரசாபத் தியமணமும்
விரவுபிர மச்சரியம் விட்டமையால் விட்டொழிந்தான்
சரதமக மிழந்ததனுற் றெய்வமணச் சடங்கொழிந்தான்
அருமறையி னெறிதவறி யாரிடமும் விடுத்தனனுல். 22

பொ - ரை: பிரமசரிய விரதத்தையே விட்டமையால் பிரமமணம், பிரசாபத்திய மணம் என்னும் முறைகளைக் கைவிட்டான்; அவன் அகத்தே மெய்ம்மையை இழந்தமையால் திருமணத்திற்கு உரிய தெய்வச் சடங்குகளைப் பின்பற்றவில்லை; அரிய மறைநெறியை விட்டதனுல் ஸ்மிருதி முறையினையும் கைவிட்டான்.

வி - கு: ஆரிடம் - ஸ்மிருதி; ஆரிட மணத்தைக் கைவிட்டான் எனினும் அமையும்.

பாசுரத்தி லெழுதரிய பாவையரை வழிச்செலவில்
மாசுரத்தில் விழித்துயிலிற் பைசாச மணம்புரிந்தான்
பூசுரர்க்கு முறையல்லாப் போரேறு போய்த்தழுவி
ஆசுரத்திற் கோவைசிய ரணங்காரை மணஞ்செய்தான். 23

பொ - ரை: சொற்ருெடர்களால் வருணிக்க முடியாத அழகிய மகளிரைப் பெரிய ஒற்றைவழியில் செல்லும்போதும் கண்ணுறங்கும்போதும் பைசாசமுறையில் புணர்ந்தான்; அந்தணர்கள் மேற்கொள்ளாத, போர் எருதுகளைத்தழுவி அடக்கி ஆசுரம் என்னும் முறைப்படி இடைச்சேரி மகளிரை மணந்தான்.

மரபுதனி லேழைமையோன் மடமகளை வலிதாக
இரவுதனிற் கொண்டேகி யிராக்கதமா மணம்புணர்ந்தான்
அரவனைய வல்குலார் மூவகையா ரல்லாமல்
கரவுதனிற் சிலமாதர் கந்தருவம் போற்புணர்வான். 24

பொ - ரை: கீழ்க்குல இளமாதரை வலிந்து இரவிற்கொண்டு ஏகி இராக்கதமணம் புணர்ந்தான்; அரசர்குலம் முதலிய மூவகை வருணத்தில் தோன்றிய மகளிரை யன்றிப்பிறர் அறியாதவகையில் கந்தருவ முறைபோல, வேறு கலப்புச் சாதிப் பெண்களையும் கலந்தான்.

கோமளஞ்சே ரிவ்வகையாற் குலவுமனை மடவாரை
மாமனையிற் சாரிகைபோன் மாருத சிறைப்படுத்திக்
காமவெரி மூட்டுகின்ற கலகவிழிக் கணிகையரைப்
பூமலர்மே லன்னமெனப் பொன்றூவி நிறைவித்தான். 25

பொ - ரை: பிறர் இல்லங்களில் உள்ள இளையமகளிரை இவ்வாறு, சிறந்த வீட்டில் வைத்து வளர்க்கும் நாகணவாய்ப் புட்கள்போல மாருதபடி, தன் வரம் புட்படுத்துவதோடு, காமத்தணலை எழுப்பவல்ல, காமக்குறிப்புத் தோன்ற விழிக்கப் பழகிய கணிகையரையும் பூமலர்மேல் அன்னங்களைப்போலப் பொன்னணிகளாற் பொதிந்து இன்புற்ருன்.

### வேறு

பூவிய லன்னம் போல்வார் புலவியே நிலம தாகத்
தூவிய பொருள்கள் யாவுந் துறுமுளை வித்த தாகக்
காவியங் கண்ணூர் மோகக் கலப்பையே கருவி யாக
மேவிய சுரத போக விரகவே ளாண்மை செய்தான். 26

பொ - ரை: குவளைபோன்ற கண்ணையுடையாராகிய பூவில்தங்கும் இயல்புள்ள அன்னம் போல்வாரது ஊடலையே நிலமாகக்கொண்டு, அள்ளிச் சிதறும் பொருள்கள் யாவும் நெருங்கிய முளைத்தற்குரிய வித்துக்களாக, ஆசையால் கலக்கும் கலவியே உழுபடையாக, தான் விரும்பிய புணர்ச்சியால் வரும் நுகர்ச்சியும் ஆசைநோயும் ஆகிய விளைவைத்தரும் பயிர்த்தொழிலை (காமன்றன் ஆளுந் தன்மையை)ச் செய்தான்.

அந்தியும் பகலு மாய வரும்பொழு திரண்டு மூன்று
சந்தியு மறந்து நான்கா மொழுக்கமுந் தவறி வேத
மந்திர விளக்க மெல்லாம் வரவர மாதர் மோகம்
உந்திய சூறைக் காற்று லவிந்தன வொவ்வொன் ருக. 27

பொ - ரை: அறம் பொருள்களைப் பெற முயல்வதற்குரிய பகலும் மாலைக் காலமுமாகிய அரிய பொழுதுகள் இரண்டும், கடவுளரைப் போற்றுதற்குரிய காலை நண்பகல் மாலை என்னும் முச்சந்தியும் செய்யும் கடமைகளை மறந்து, ஞான ஒழுக்கமாகிய நான்காம்நெறி ஒழுகுதலையும் கைவிட்டுப் போனமையால், வேத மந்திர விளக்கம் எல்லாம் மாதர் ஆசை செலுத்திய சூறைக்காற்றுல் நாளாக ஆக ஒவ்வொன்ருக அவிந்தன.

அடிமுறை நடந்து செல்ல வறிவுகண் ணிலனுய் மோகச்
செடிவழி சுழன்று காமத் திரள்புலி தொடர வோடிக்
கொடியிடைக் கணிகை மாதர் கொங்கைவெற் பிடறி வீழ்ந்து
கடிதட வாவி தாவிக் கலவியங் கயத்து ளாழ்ந்தான். 28

பொ - ரை: சான்ருேர் சென்றநெறியில் முறைப்படி நடத்தற்குவேண்டிய அறிவாகிய கண்ணை இழந்து, மயக்கம் என்னும் புதர்கள் உள்ள வழியில் திசை மயங்கிச் சுழன்று, காமம் என்னும் வலிய புலி தொடர்தலினுல் ஓடி, பூங்கொடி போன்ற இடையையுடைய கணிகையர் கொங்கை என்னும் வெற்பில் முட்டி வீழ்ந்து, அவர்தம் அல்குலாகிய வாவியில் நீந்திப் புணர்ச்சி என்னும் மடுவில் வீழ்ந்தான் ஆத்திரேயன்.

கொம்பெலா மன்னேன் காமக் கொடுந்தளிர் தளிர்த்துச் சாதி
பம்பிய வரம்பு தோறும் பழிமொழிக் காடு பல்கி
அம்பலஞ் சந்தி தோறு மம்பலா யரும்பி யெங்கும்
வம்பலர் பெருகப் பூத்து வடுக்களாய்ப் பரந்த வன்றே. 29

பொ - ரை: மாதர்களாகிய கொம்புகளிடத்தெல்லாம் அவனது காமமாகிய வளைந்த தளிர் தளிர்த்து, நெருங்கிய சாதி வரம்புதோறும் அவனைப் பற்றிய பழிச்சொற்களாகிய காடு பெருகி, பொதுவிடம் தெருக்கள்தோறும் பழிச்

சொல்லாய் அரும்பி (தோன்றி) எங்கும் வீண் பழிச்சொல்லாய் அலர்ந்து பூத்துக் குற்றம் என்னும் சிறு காய்கள் எங்கும் நிரம்பின.

வி - கு: அம்பல் - அரும்பல், சிலர் அறிந்து மறைவிற்கூறும் பழிச்சொல். அலர் - பலர் அறிந்து வெளிப்படக் கிளக்கும் பழிமொழி.

ஆனவை செவியிற் கேளா வவன்குலத் தறிஞ ஞவான்
ஞானநூ லவனுக் கோதி நன்னெறி யுணர்த்தச் சென்ருன்
தான்முனம் பயிற்றுங் கல்வி தன்னையு மயர்த்த தோரான்
மேனெறி செறிவி லானை வேறிடத் திருத்திச் சொல்வான். 30

பொ - ரை: இவற்றைக் கேட்டு அறிந்த அவன் குலகுரு ஆத்திரேயனுக்கு ஞான நூல் வாயிலாக ஞானநெறியை உணர்த்த வந்தான்; தான் முன் கற்பித்த நூலையும் மறந்துவிட்டமையை அறியாது, அவனைத் தனியே இருத்தி உணர்த்தத் தொடங்கினுன்.

வேறு

எறும்புகடை யானைதலை யெண்பத்து நான்கிலக்க யோனி பேதம்
பிறந்துழலு முயிர்க்கெலா மனிதராய்ப் பிறப்பரிது பிறந்தா ரேனும்
பறம்பர்சோ னகர்சூன ரீனர்கா னவர்நுளையர் பழைய ராதி
அறைந்தகீழ்க் குலநீங்கி மேற்குலத்தி லவதரிப்ப தரிது மைந்தா. 31

பொ - ரை: யானை முதல் எறும்பு ஈருக உள்ள எண்பத்துநான்கு இலக்க யோனிகளில் பிறவற்றை விட்டு மக்களாகப் பிறத்தல் அரிது; அப்பிறப்பினுள்ளும் குறவர், துருக்கர், சண்டாளர், பரதவர், கள்விலைபகர்வோர் முதலாக உள்ள கீழ்க்குலம் நீங்கி மேற்குலத்தில் பிறப்பது இன்னும் அரிது.

தாழ்குலத்தோர் கோடிசென்மந் தவம்புரிய வேண்டுமுயர் சதுர்த்த ராகக்
கேழுழவர் கோடிதவஞ் செயவேண்டும் வணிகர்சென்மங் கிடைக்க வேண்டில்
சூழ்வணிகர் கோடிசென்மந் தவம்புரியி னரசரெனத் தோன்ரு நிற்பர்
வாழரசர் கோடிசென்மந் தவஞ்செயினுங் கிடையாது மறையோர் சென்மம்.

பொ - ரை: இனி, தாழ்குலத்தோர் கோடிசன்மம் தவம்புரியின் சற்சூத்திர ராவர்; இவ்வாறு சற்சூத்திரர், வணிகர், அரசர் என்போர் கோடி சென்மங்களில் செய்த தவப்பயனுல்தான் மேன்மேல் உள்ள குலத்துவந்து இறுதியில் அந்தண ராவர்.

அந்தணராய்ப் பிறந்திடினுங் குருடுசெவி டுமைமுட மகன்று மேனி
சந்தவடி வுடன்பிறப்ப தரிதுபிறக் கினும்பாலைத் தான மாதி
கந்தவனம் புனமொருவி நீர்நாட்டில் வரலரிது கண்டாய் பார்மேல்
முந்துறவித் தனைக்குயர்சீர் பெற்றனையெத் தனைதவமோ முயன்ருய் முன்னர்.

பொ - ரை: அந்தணர் குலத்துத் தோன்றினும் குருடு செவிடு ஊமை முடம் முதலிய உறுப்புக் குறையின்றி அழகிய வடிவுடன் பிறப்பது அரிது; அங்ஙனம் பிறக்கும்போதும் பாலை முல்லை குறிஞ்சி நிலத்தில் பிறவாது மருதவள நாட்டில் பிறத்தல் அரிது; முதற்கண் உலகில் இவ்வளவு உயர்வுபெற நீ முன்னைத் தவம் உடையை.

ஓதுபிர மச்சரிய மொழிந்தவா னப்பிரத்த முயர்சன் னியாசம்
நீதிநிலை பெறுகாரு கத்தியமா மாச்சிரம நெறிக ணான்கில்
கோதிலா மூவர்நெறிப் படர்பயிர்க்குக் கொளுகொம்பாங் கொள்கை யாலே
மேதினியில் யாவருக்கும் வியன்காரு கத்தியமே விசேட மாமால். 34

பொ - ரை: பிரமசரியம் முதலிய நான்கு நிலைகளிலும் ஏனைய மூன்றும் கொடிபோற் சார்ந்து படர்தற்கு உரிய கொழுகொம்பாக உள்ளது இல்லறமே ஆகும்.

முனமாக வைகறைப்போ தெழுந்துசவு சாதிமுதன் முடித்து வாசப்
புனலாடிச் செபதவங்கண் முயன்றுகட வுட்பூசை முயன்று முப்பால்
அனலோம்பி யைவகைவேள் வியுமியற்றிக் கிளைஞருட னடுத்தோர் தம்மைத்
தினமோம்பி நுகர்ந்துகலை பயின்றிருத்த லில்லறத்தோர் செய்கை யாமால்.

பொ - ரை: இல்லறமாவது வைகறையில் துயில் உணர்ந்து தூய்மைகள் செய்துகொண்டு நீராடிச் செபம், தவம், கடவுட்பூசை, முத்தி வளர்த்தல், ஐவகை வேள்விசெய்தல், உறவினருடன் அதிதிகளை உபசரித்து உண்டு தெய்வக் கலைகளைப் பயின்றிருத்தல் என்பவற்றை நாட்கடனாகக் கொள்வதே ஆகும்.

பூமரமா யூர்வனவாய் மிருகமாய்ப் புட்குலமாய் மனித ராகிப்
பாமரராய்ப் பண்டிதரா யொழுக்கத்தா லுயர்ந்தேணிப் பழுப்போ லேறித்
தேமறையோ னாயினைமேற் சுவர்க்கபதத் துனதுபதஞ் செலுத்தற் பாலாய்
காமமெனு மந்தரத்தே தாவியினிக் கீழ்வீழல் கடனோ வையா. 36

பொ - ரை: மரங்களுள் உயர்ந்த பூமரம், ஊர்வன, பறவை, விலங்கு, மக்களுள் பாமரர், அறிஞர் என்னும் முறையில் நல்லொழுக்கம் காரணமாக ஏணிப் படிகளைப்போல் ஏறித் தெய்வத்தன்மையுள்ள மறையோனாய்ப் பிறந்தனை; இனி, சுவர்க்க பதவிக்கு உன் காலை எடுத்து வைத்தல்வேண்டும்; இப்போது காமம் என்னும் வெட்டவெளியில் தாவிக் கீழேவிழுதல் முறையாகுமா? ஐயனே!

நிதியான நிறைநீருக் குடைகுளமிக் கானகுல நெறிக்கோர் தீன
மதியான மதிவிழுங்குங் கோளரவு பவத்தூறு வளர்க்குங் கானம்
கொதியான நரகிழுக்குங் கொடும்பாச முயிருருக்கிக் குடிக்குங் கூளி
கதியான வழியடைக்குங் கற்பெருங்க பாடமன்றோ கடிய காமம். 37

பொ - ரை: பொல்லாத காமம் வைப்பாக உள்ள நிறை செல்வத்திற்குக் கரைஉடைந்த குளம்போன்றது; மேம்பட்ட குலநெறி ஒழுக்கத்திற்குக் கெடுமதி; நல்ல அறிவை விழுங்கும் இராகு என்னும் கோள்; பிறவிப்புதரை வளர்க்கும் காடு; எரிவாய் நரகத்திற்கு இழுக்கும் கொடிய பாசக்கயிறு; உடம்பிற் புகுந்து என்பை உருக்கி உண்ணும் பேய்; நற்கதியாகிய பெரிய வழியை அடைக்கும் கல்லால் ஆன கதவு அல்லவா!

சுகுடஞ்சேர் பரிமகநூ றியற்றிவா னரசுகன்னற் சுவைபோற் பெற்றான்
சகுடம்போ லவன்மனதிற் சசிகாமம் பிடித்தலைப்பத் தலைகீ ழாக
மகுடம்போய் வானகம்போய் வையகம்போ யரசுபோய் மலைப்பாம் பாக
நகுடன்போய் வீழ்ந்தகதை யறியாயோ சிறியாயோ நளினத் தாரோய். 38

பொ - ரை: ஆண்டிற் சிறிய, அந்தணர்க்கு உரிய தாமரை மாலையைச் சூடியோனே! நகுடன் என்னும் சூரியகுலத்தரசன் வீழ்ச்சியைக் கேட்டதில்லையா? அவன் நல்ல நிறைகுடம் வைத்து இயற்றப்பெறும் நூறு பரிமேதம் முடித்துக் கரும்பின் சுவைபோலத் தேவ அரசைப்பெற்றான்; ஆனால், நாயைப்போல் அவன் மனத்தில் இந்திராணிபற்றிய காமம்புகுந்து அலைத்தமையால், முறைமாறி அவன் மகுடமும், பொன்னுலக வாழ்வும், நிலவுலக வாழ்வும், அரசாட்சியும் எல்லாம் இழந்து மலைப் பாம்பானான்.

வேறு

மனைவளர் குலஞ்சேர் கற்பின் மங்கையர் வருந்த நீபோய்ப்
புனையிழைப் பரத்தை மார்க்குப் புதுநலம் பெருக நல்கல்
சினைதரு பருவப் பைங்கூழ்ச் செந்நெலின் பொதிகள் வாடக்
கனைகுர லெழிலி வீண்போம் கானலிற் பொழிவ தென்றான். 39

பொ - ரை: உன் இல்லத்தில் உனக்கு உரிமைபூண்ட கற்புடைய குல மகள் மனம் வருந்தவும், நீ போய்த் தம்மை அழகுபடுத்திப் பிறரை மயக்கும் பரத்தையர்க்கு நன்மை பெருகும்படி கொடுத்தல், கருக்கொண்டு உள்ள பருவச் செந்நெற்பயிரின் கதிர்கள் வாடாநிற்பவும் இடி முழக்கத்தையுடைய மேகம் அங்குப் பெய்தல் இன்றி வீணாகக் காட்டிற்சென்று மழை பொழிவதை ஒக்கும்.

கொழுந்துவிட் டறிவு தோன்றக் கொளுத்திய குரவன் வாய்மை
கழுந்தனை யானுக் கேதோ கடத்தினைக் கவிழ்த்து வீழ்த்த
உழுந்தெனத் தகைய வாக வுகுத்துமே லுரைப்ப தானான்
எழுஞ்சுடர் விளக்கிட் டாலு மிருளன்றோ குருடர்க் கம்மா. 40

பொ - ரை: அறிவு மேன்மேல் வளர்தற்பொருட்டு ஆசான் வலியுறுத்திக் கூறிய உண்மைகள், தலையில்லாத கழுத்துப் போன்றவனுக்கு, ஏதோ ஒரு குடத்தைக் கவிழ்த்துக் கொட்டிய உழுந்துபோலச் சிதறிச்செல்ல, ஏற்றுக் கொள்ளாது மறுத்து, ஆத்திரேயன் மறுமொழி கூறுவதானான்; குருடர்க்குக் கொழுந்துவிட்டு எரியும் சுடர்விளக்கு ஏற்றினும் இருளாகவே முடியும் அல்லவா?

மணிநகை யாரே தெய்வம் வாக்குப தேசங் கொங்கைத்
துணைகுரு பீடம் பாதத் துணைவரு டுவதே பூசை
அணைவது முத்தி யாசா னின்னமு மறியாய் போலும்
கணிகையர் முகத்திற் கூறுங் காமனு கமங்க ளென்றான். 41

பொ - ரை: முத்துப்போன்ற பற்களையுடைய மகளிரே தெய்வம்; அவர்தம் இன்னுரைகளே உறுதி தரும் உபதேசம் ஆகும்; அவர் தம் கொங்கைகளே குரு பீடமாகும்; அவர் தம் ஊடல் தணிய அடிகளை வருடுவதே வழிபாடு; அணைவதே பரம சாயுச்சியம்; காமன் ஆகமங்கள் கணிகையர் இடம் பற்றி இவ்வாறு கூறு வதை நீர் இது காறும் அறிந்திலீர் போலும்.

மருண்மொழி பொருளாக் கூறும் வஞ்சக மறையோன் றன்னை
அருண்மொழிக் குரவன் சீறி யகன்றன னதை லாலே
திருவொடு கிளையும் வாழ்வுஞ் சிதைந்தனன் சிறிது நாளில்
குருமொழி யிகழ்ந்த மூடர் குவலயத் தெவ்வா றுய்வார். 42

பொ-ரை: மயக்கந்தரும் மொழிகளைப் பொருட்படுத்திக் கூறிய வஞ்சக ஆத்திரேயனை வெகுண்டுகூறி நல்உபதேசம் கூறவல்ல ஆசான் நீங்கினன்; ஆதலால், அம்மறையவன் தன் செல்வமும் சுற்றமும் வாழ்வும் சில நாட்களில் கெட்டனன்; ஆசான் மொழியைப் பொருட்படுத்தாது இகழ்ந்தவர் உலகத்தில் உய்தி பெறூர் அல்லவா !

தனமெலாங் கணிகை மாதர் தனவிலைக் காற்று வாகி
மனையுள பொருள்போய்ப் பார்ப்பான் மற்றுள பொருளுந் தோற்றுக்
கனதைபோய் மெலிவா யூரிற் கடப்படுங் கடப்படாதே
இனையவோர் வறுமை பூண்டா னினியதோ கொடிய காமம். 43

பொ-ரை: ஆத்திரேயன் செல்வம் எல்லாம் பரத்தையர்தம் தனத்திற்குக் கூறும் விலைக்குப் போதாதன ஆயின; பார்ப்பான் தன் வீட்டில் இருந்த பொருள்களைப்போக்கி வேறிடத்திருந்த பொருள்களையுமிழந்து, தன் பெருமையை இழந்து எளியனாய், ஊரிற்கடன் பட்டான்; மேலும் கடன் கொடுக்கப்படாத வறுமை உடையனாகி மனம் நொந்தான்; கொடிய காமம் இனியதாகுமா !

கானக வேட்ட மாடிக் கடுங்கொலை களவு செய்து
தானமு மழிந்து மானந் தவறியுந் தவறான் காமம்
சூனமங் கையர்பா லூனுந் துவசமங் கையர்பாற் கள்ளும்
ஈனமங் கையர்பா லூணும் போகமு மிசைவ தானன். 44

பொ-ரை: காட்டில் வேட்டை ஆடிக் கடுமையான கொலை களவுசெய்து தான் செய்யும் தானங்களைச் செய்யாதாகிப் பெருமையை இழந்தும் காமவொழுக்கத்தை விடவில்லை; ஊன் விலைபகரும் மகளிர்பால் ஊனும், கள்விற்கும் மங்கையர் பால் கள்ளும், புலைப்பெண்கள்பால் உணவும் கொண்டு அவர்தம் புணர்ச்சிக்கு இசைவான் ஆயினன்.

நாரியர் மயக்கில் வீழ்ந்து நாற்குல நடைவிட் டீனர்
சேரியிற் புகுந்தான் செய்கை தெரிந்தன ரந்த ணாளர்
ஊரினிற் புகுதா வண்ண மொழித்தனர் பழித்து நீக்கி
வாரியின் மூழ்கிச் சாந்தி புரிந்துவா லாமை தீர்ந்தார். 45

பொ-ரை: பெண்கள் மயக்கில் தாழ்ந்து நாற்குலத்திற்கு உரிய ஒழுக்க நெறியைக் கைவிட்டுப் புலைச்சேரியிற் சேர்ந்தவன் செயலைத் தெரிந்த அந்தணர்கள் அவனைத் தங்கள் ஊரில் வாராதவண்ணம் தடைசெய்து பழித்து நீக்கி நீரில் முழுகி ஓமம் செய்து அவன் உறவு பற்றித் தமக்கு வந்த அசுசியை (தீட்டை)க் கழித்துக் கொண்டார்கள்.

கீழ்குலத் தாழ்ந்தான் வேறு கிளைவேறு தாரம் வேறாய்
வாழ்வுபோய்க் குலின ந்தீன மைமைமூ வகையின் மாய்ந்தார்
சூழ்தரு நரம்பு தண்டஞ் சுரைமூன்று மிசையில் யாழாம்
வீழ்படில் வேடர் கண்ணி விறகுவெம் பலியோ டன்றே. 46

பொ-ரை: கீழ்க்குலத்து ஆழ்ந்த ஆத்திரேயனும், அவன் சுற்றமும் மனைவியும் என்னும் மூவரும் வேறு வேறு ஆகி முறையே குலப்பெருமைக்கேடு,

எளிமை, மைமை (சந்ததிப்பேறின்மை) என்னுங் குற்றத்தால் விளக்கம் கெட்டார்கள்; நரம்பும், தண்டும், சுரையும் என்னும் மூன்றும் ஒன்று சேர்ந்து இயங்கினல் யாழ் என்னும் பெருமை பெற்று இன்பம் விளைக்கின்றன; அவை தனித் தனிப் பிரிந்தால் முறையே வேடர் கண்ணியும், விறகும், பிச்சை ஏற்கும் ஓடுமாக அல்லவா தாழ்வுறுகின்றன.

அங்கணத் துக்க பால்போ லருங்குலப் பெருமை விட்டுத்
தங்கணக் கிளைகை விட்டுத் தாரமோ டூர்கை விட்டுக்
கங்கணக் கையார் மோகங் கைவிடா னறிஞர் விட்ட
கொங்கணஞ் சிலநாள் வைகிக் காழகங் குறுகப் புக்கான். 47

பொ - ரை: சேற்றில் சொரிந்த பால்போல அரிதாய குலப்பெருமையினை இழந்து,தன் சுற்றத்தாரையும் கைவிட்டு மனைவியையும் ஊரையும் பற்றுதல் விட்டு, காப்பு அணிந்த பெண்கள் ஆசையைக் கைவிடாத ஆத்திரேயன் அறிஞர் சேராத கொங்கண தேயத்தில் சில நாள் வாழ்ந்து கடார தேசம் புகுந்தான்.

வேறு

நீர்நாடு நீங்கியுமே நீங்காது பின்றெடரும்
போர்நாடு காமவெள்ள நீந்தவொரு புணையின்றிச்
சீர்நாடு மாதர்தனக் குடந்தேடித் திரிவாற்கு
வார்நாடுந் தடைதீர்ந்த மலைநாடு வாய்த்ததுவே. 48

பொ - ரை: சோழ நாட்டை நீங்கியும் நீங்காது தன் மனத்துள்ள கலவிப் போரை அவாவும் காமக்கடலை நீந்துவதற்கு ஒரு மரக்கலம் இல்லாமல் சிறப்பை விரும்பும் மாதர்தம் தனமாகிய குடத்தைத்தேடித் திரிந்தவனுக்குக் கச்சை விரும்பும் தடையில்லாத மலையாள நாடு பொருத்தமாகக் கிடைத்தது.

மலைநாட்டில் வருந்தூர்த்த மறையோனை மடக்கொடிமார்
முலையானை மதமூட்டி முரிபுருவச் சிலைகுனித்துக்
கலையாளி தேர்நிரைத்துக் கட்டெழிலி னுற்பகைத்த
சிலைமாரன் பொரவிடுத்த சேனையெனப் புடைவளைந்தார். 49

பொ - ரை: தம் நாட்டில் வந்த காமுகனை மலைநாட்டின் இளமாதர் தம் கொங்கைகளாகிய யானைகளுக்கு மான்மதச்சேறு ஊட்டி, வளையும் புருவங்களாகிய விற்களை வளைத்து மேகலையை ஆளும் அல்குலாகிய தேர்களை நிரை செய்து, மிக்க வனப்பால் பகையாகிய மன்மதன் போர்செய்ய அனுப்பிய சேனை என அவனை எம்மருங்கும் சூழ்ந்தனர்.

காவிநெடுங் கண்வலையான் மடுப்பவருங் காரிகைமார்
ஆவிமருண் டருமறையோ னழகுவலைப் புகுந்துவளை
தூவியனம் போற்றொடர்ந்தார் தூர்த்தமா மறையோனும்
பூவையர்தம் பிடிச்சூழல் புகுந்தமதக் களிறுனுன். 50

பொ - ரை: நீலமலர் போன்ற நீண்ட கண்களாகிய வலைகளால் அகப் படுத்தவரும் மகளிர் தம் உயிர் மயங்கி ஆத்திரேயன் அழகு வலைப்பட்டு வளையல்

களைச் சிந்தி அன்னங்களைப்போல் தொடர்ந்தனர்; காமுகனாகிய மறையவனும் பெண்களாகிய பெண் யானைகளின்குழு விலகப்பட்ட ஆண்யானைபோன்றான்.

ஆம்பதிதன் குலம்வாழ்வும் பறிகொடுத்து மவர்மோகம்
போம்பரிசி னுவந்துவிடான் பொய்களவாற் பொருள்கவர்ந்து
காம்புறழுந் தோளியராங் கணிகையர்பாற் கருத்தழிவான்
வேம்பரிசி லுடல்கரிந்தும் விளக்குவிடாப் பதங்கம்போல். 51

பொ - ரை: வீழ்ச்சியுற்றோன் (பதிதன்) ஆகிய ஆத்திரேயன் மகளிர்தம் விருப்பம் சென்றவழியும் விடாது, பொய்யும் களவுஞ்செய்து பொருள் கவர்ந்து மூங்கிலை ஒத்த தோளுடைய பரத்தையர்பால் தன் கருத்தழிந்தான்; உடல் வேம்படி கரிந்தும் விட்டில் விளக்குச்சுடரில் மீண்டும் மீண்டும் விழுதல்போல.

சிலமாதர் செங்கையொடுஞ் சிலமாதர் கொங்கையொடும்
பலமாதர் புலவியொடும் பலமாதர் கலவியொடும்
நலமேறி யுவட்டெடுப்ப நாளுபோ கம்பொசித்துத்
தொலையாத கனிபழுத்துச் சொரிசோலைக் குருகானான். 52

பொ - ரை: அளவின்றிப் பழுத்துக் கனிகளை உதிர்க்கும் சோலையில் உள்ள பறவையைப்போலச் சில மாதரைக் கைபிடித்தும், சிலரைக் கொங்கைமேல் விழுந்தும், பலரோடு ஊடியும், பலரைக் கூடியும், இன்பம் மிகுந்து தேக்கெறியும்படி, பலவகைப் போகத்தை நுகர்ந்தான்.

வேறு

மான மின்றிய வல்லியர் மாமுலை
யானை வாய்க்கரும் பாகியுங் கண்வலை
மீன மாகியு மல்குல் வியாளத்தின்
பீன வாய்ப்பெருந் தேரையு மாயினான். 53

பொ-ரை: பெருமையில்லாத மகளிர் கொங்கையாகிய யானை வாயில் அகப்பட்ட கரும்புபோலவும், அவர்தம் கண்வலைப்பட்ட மீன்போலவும், அவர்தம் அல்குற்பாம்பின் பெரிய வாயில் அகப்பட்ட தேரைபோலவும் ஆயினான்.

தைய லாரிடைத் தாகம் விளைந்ததும்
பொய்யெ லாநிறை போகம் விளைந்ததும்
மையன் மோகம் விளைந்தது மற்றவன்
மெய்யெ லாம்வினை யாக விளைந்ததே. 54

பொ - ரை: தையலாரிடை ஆசைவந்ததும் பொய் நிறைந்த போகமும் மயக்கந்தரும் மோகமும் அவன் உடம்பெல்லாம் தீவினையாக விளைந்தன.

நாணி லார்நய னப்பெருந் தும்பியே
தூண மாமுட லெங்குந் துளைத்ததோ
காண லாமதன் பூங்கணைக் காயமோ
பூண லாப்பிணி பூண்டுபுண் ணாயினான். 55

பொ - ரை: நாணத்தைவிட்ட பெண்கள்தம் கண்களாகிய வண்டுகளே தூண்போன்ற அவன் உடம்பை எங்கும் துளைத்துவிட்டனவோ! அன்றிக் காணப்படாத மன்மதன்விட்ட மலர் அம்புகளினுல் உண்டான காயமோ! பெறக் கூடாத நோய்கொண்டு உடம்பு முழுவதும் புண்ணுயினன்.

விண்கு லாவுயர் விண்ணவ ராயினும்
பெண்கள் காமம் பிடித்தவ ருய்வரோ
புண்க ளாகிப் புரந்தரன் மெய்யெலாம்
கண்க ளானது காமத்தி னலன்றே. 56

பொ - ரை: வானுலகில் வாழும் தேவராயினும் காமவெறி பிடித்தவர் உய்வரா? இந்திரன் தன் மெய்முழுதும் புண்ணுகிப் பின் கண்களாகத் தோன்றப் பெற்றது காமத்தினுல் தானே?

மருவி ருக்கு மலர்க்குழல் சோரவே
உருகி நித்த முடன்புணர் மாதரார்
பெருவ ருத்தமுற் ருன்பிணி காண்டலும்
அருகி ருக்க வருவருப் பாயினர். 57

பொ - ரை: வாசனையுள்ள மலர்முடித்த கூந்தல் அவிழும்படி மனம் உருகி நித்தம் ஆத்திரேயனைப் புணர்ந்த மாதர், மிகு வருத்தம் எய்தினவனது பிணி யுள்ள உடம்பைக்கண்டதும், அணுகவும் அருவருத்து விலகினர்.

வேறு

முன்பெலாங் களிகூர மோகநல மநுபவித்து
வன்பிணியா லுழல்கால மறுகினிடைத் தள்ளினர்
என்பெலாங் கசிந்துருகு மிற்பிறந்தா ரல்லாமல்
அன்பிலாப் பொதுமாத ராபத்துக் காவாரோ. 58

பொ - ரை: முன் உடம்பு நோயின்றி இருந்தகாலத்துக் களிப்பு மிகும்படி காம இன்பம் நுகர்ந்த கணிகையர் கொடிய பிணியால் வருந்தும்போது வீதியில் தள்ளிவிட்டார்கள்; என்பும் உருகும்படி அன்புசெய்யும் குலமகளிர் அன்றி, அன்பு சிறிதும் இல்லாத பொதுமாதர் இடையூறு நேரும் போது துணையாவார் களா? ஆகார்.

தலைநாடு புறந்தள்ளச் சாரன்மலை நாடேகி
மலைநாடு புறந்தள்ளப் பாண்டிவள நாடணைந்தான்
கலைநாடுங் குலநெறிபோய்க் கைப்பொருள்போய் நோய்பூண்டும்
புலைநாடு காமமெனுந் தேக்கிலையிற் புனல்போல்வான். 59

பொ - ரை: தனக்கு முதல் நாடாகிய சோழநாடு தன்னைவெறுத்து ஒதுக்கினமையால் சாரலையுடைய மலைநாடு சென்று அதுவும் ஒதுக்கிவிட, பாண்டிவளநாட்டை அணைந்தான்; அவன் யாரோ என்னில், சாத்திரங்கள் ஆய்ந்து கூறும் குலநெறியை இழந்து கைப்பொருளும் இழந்து நோயைப்பெற்றும் புலைத் தன்மையை நாடச்செய்யும் காமம் என்னும் தேக்கிலையில் நீர்போல, விடாது ஒட்டி நிற்கும் ஆத்திரேயன் என்னும் பார்ப்பனன்; காமப்பற்றை விடாதவன் என்றபடி.

ஊடயரப் பசிபிடுங்க வுறுப்பெல்லா நோய்பிடுங்க
வாடைதுணி போர்த்தவுட லீப்பிடுங்க வருந்துவான்
பேடைமயி லார்விரகப் பிணிக்குடைந்து புறங்கடைபோய்
வாடையேற் றயர்வானேல் யாரைவிடு வான்மதனன். 60

பொ-ரை: வயிறு சோரும்படி பசிதுன்புறுத்த உறுப்பெல்லாம் நோய் வருத்த வாடையினின்று காத்துக்கொள்ள துணியால் மூடிய உடலை ஈக்கள் மொய்த்துத் துன்புறுத்தவும் அவ் ஆத்திரேயன், பெண் மயில் அனையார் மேல் மனம் வைத்ததனுல் வரும் காமநோயால் வருந்தி அப்பெண்கள் உள்ள புறங்கடைகளிற் சென்று அவர் மேற்பட்டு வரும் வாடை வீசும் காற்றை ஏற்றுச் சோர்ந்தான்; இவனே இங்ஙனமாயின், காமநோய் யாரைத்தான் விடும்?

சரதநெறி மணவேட்கைத் தன்மனையார் மனங்கொதிப்ப
விரகொடும்போய்ப் பிறர்மனையின் மிதித்தகால் விரலழுகி
மரபழிய முந்திதொட்ட மணிக்கரங்க ளூடழுகிப்
பரமனையார் தமைத்தழுவும் படிவமெலாம் புண்ணுனுன். 61

பொ-ரை: மெய்யாக மணந்து தன்னைக் காதலித்த மனைவியர் மனம் வருந்தும்படி விரகநோயோடு பிறர் மனையைநாடி மிதித்த கால்விரல் அழுகியது; நல்ல மரபு கெடும்படி மகளிர் முன்தானையைத் தொட்ட அழகிய கரங்களும் நடுவே அழுகின; பிறர் மனைவியரைத் தழுவிய உடம்புமுற்றும் புண் ஆனுன்.

தலைமைநாற் குலமறுகு சார்கிலான் கீழொழுக்கால்
விலைமாதர் மறுகணையான் மேனியுரு வழிந்தமையால்
வலையர்சே ரியிலூனு மள்ளர்சே ரியின்மதுவும்
புலையர்சே ரியிலருந்திப் புறங்கடையி லுறங்குவான். 62

பொ-ரை: கீழ் ஒழுக்கம் மேற்கொண்டமையால் தலைமையினையுடைய நால்வருணத்தவர் வாழும் இடங்களை அணுகவில்லை; உடம்பு அழகுகெட்டமையால் பரத்தையர் வீதியினையும் அணைகிலன்; பரவர்சேரியில் ஊனும், பள்ளர் சேரியில் கள்ளும் பெற்றுப் புலையர் சேரியில் வந்து உண்டு வீட்டுப்புற இடத்தில் உறங்கினுன்.

அம்மையிலே பலிக்குமென்பர் செய்தவினை யாங்கொருசார்
செம்மையிலா மறையோன்செய் தீவினையெல் லாமிவனுக்
கிம்மையிலே பலித்ததனு லிவையறிந்து விலகாதார்
வெம்மையுறு கொடும்பிணிக்கு நரகினுக்கும் விருந்தாவார். 63

பொ-ரை: ஒருவன் செய்தவினை வருபிறப்பில் விளையுமென்பர் ஒருபக்கமாக; தீயநெறியிற் சென்ற இப்பார்ப்பனன் செய்த தீவினை முற்றும் இம்மையிலேயே விளைந்தன; இதனுல், இவ்வுண்மையை அறிந்து தீயவற்றினின்றும் விலகாதார் தீயைப்போல வந்து துன்புறுத்தும் கொடிய நோய்களுக்கும் மறுமையில் நரகுக்கும் விருந்தினர் ஆவர்.

வருநாளின் முகம்பார்த்தோர் மறுநாட்கண் பாராராய்
ஒருநாளி லுறைபதிமற் றெருநாளி லுறையாமல்
பெருநாடு பலகழித்துப் பிறநாடு சேர்வதற்குத்
தருநாடு மிருள்வனத்து வினைதள்ளத் தனிபோனன். 64

பொ-ரை: ஒருநாளில் ஓர் ஊரில் தன்னைக்கண்டவர் மறுநாளில் அவ் வூரில் தன்னைக் காணமாட்டாதபடி பலநாடுகள் கடந்து சென்று, வேற்று நாட்டில் போதற்காக மரங்கள் அடர்ந்து இருள்சூழ்ந்த காட்டகத்தே தன்வினை செலுத்தத் தனியே சென்றான்.

ஆகத்தி லெழும்புபசிக் கருந்துவதொன் றில்லாமல்
தாகத்தா லுவுலர்ந்து தண்ணீருங் கிடையாமல்
சோகத்தா லயர்ந்துகொடும் பாலையிடைச் சுழல்கின்றான்
பாகத்தாற் பகுத்துண்ணார் படும்பாடு மிதுவன்றே. 65

பொ-ரை: உள்ளே எழும் பசியும் நீர்வேட்கையும் மிக உண்டாகவும் உணவும் நீரும் பெருமல் மிகவும் இளைப்புற்றுப் பாலைவனத்து அலைந்தான்; தான் ஈட்டிய பொருள்கொண்டு தென்புலத்தார் முதலிய ஐந்து இடங்களுக்கும் பகுக்கும் முறையில் பகுத்துக் கொடுத்துத் தாமும் உண்ணுதார் படும் துன்பம் இதுவேதான்.

கூண்டுவரு நெறிதவறிக் கொடுஞ்சுரம்புக் கயர்காலைப்
பூண்டகுல நெறிதவறிப் புலைபுகுந்த மறையோனைத்
தீண்டலுறும் வாலாமை தீரவோ செழுங்கதிரோன்
காண்டலுறு மாபாவங் கழியவோ கடற்குளித்தான். 66

பொ-ரை: பலவாகக் கூடிவரும் நெறிகளில் தவருகச் சென்று கொடிய பாலைவனத்தில் புகுந்து இளைத்தபோது, இப்பார்ப்பனனைத் தன் கரங்களால் தீண்டிய குற்றம் தீரவோ அன்றிப் பார்த்த குற்றம் தீரவோ பகலவன் மேலைக் கடலில் மூழ்கினன் (சூரியன் அத்தமித்தது).

உழிக்கொண்ட புள்ளொளிப்ப வுயர்வனமுங் கண்முகிழ்ப்ப
விழிக்கொண்ட சுரமடைந்தா யினியெங்கே போவதெனப்
பழிக்கொண்ட மறையோன்செய் பாவமெலாங் கூடியொரு
வழிக்கொண்டு வளைந்ததுபோல் வந்துவளைந் ததுகங்குல். 67

பொ-ரை: பறந்து திரிந்த பறவைகள் அடங்க, உயர்ந்த காடும் உறங்க, 'இழிந்த சுரம் வந்து சேர்ந்தாய், இனி எங்கே போவது?' எனப்பழிக்கு அஞ் சாத ஆத்திரேயன் செய்தபாவம் எல்லாம் திரண்டுகூடி அவனை வளைந்து கொண்டதுபோல, இரவிருள் சூழ்ந்தது.

வேறு

அன்றுமோ ருணவில் லாம லதற்குமுன் னிரண்டு நாளா
ஒன்றுமே பலியு மின்றி வெம்பசி யுடற்ற வோய்ந்து
கன்றினன் சைவ மல்லாக் கடும்பர சமயம் போலச்
சென்றுசேர் நெறியொன் றில்லாக் கானிடைத் திகைத்து நின்றான். 68

பொ - ரை : அன்றும் முன் இரண்டு நாளும் உணவு இன்றிக் கொடிய பசியால் வருந்தினன்; சைவநெறி அல்லாதவற்றிற் போல ஓரிடத்திற்குச் செல்லும் செம்மையான நெறி ஒன்றும் காணப்படாத காட்டில் திகைத்து நின்ருன்.

வேறு

வாட்டானை விழியார்க்கு வருந்துவான் வனத்திலுயிர்
வாட்டானை புலியார்க்க வருந்தினன் மாதர்முலைக்
கோட்டானைத் துணைமேவிக் குமுறுகுரல் கேட்டுவப்பான்
கோட்டானைத் துணைமேவிக் குளறுகுரல் கேட்டயர்ந்தான். 69

பொ - ரை : வாளாகிய கருவிபோன்ற கண்களை உடையார்க்கு உருகி வருந்துவோன் காட்டில் உயிரை வாட்டும் ஆனை புலி என்பவை ஆரவாரஞ் செய்தலைக் கேட்டு வருந்தினன்; மகளிர் தம் இரண்டாகிய ஆனைக்கோடுபோன்ற முலையை விரும்பிச் சார்ந்து அவர்தம் பறவைபோல் முழங்கும் ஒலிகேட்டு மகிழ் பவன் கூகை தன் துணையை விரும்பிக் குழறும் குரல் கேட்டு மனம் உடைந்தான்.

ஈனக்கள் எிகள்பாலு மிடுஞ்சோறு மிதழ்க்கனிவாய்ப்
பானக்கள் ளுடனேந்தப் பரிவாயுண் டுறங்குவான்
கானக்கள் எிகள்பாலும் பொதிசோறுங் கடிமலர்வாய்
ஊனக்கள் ளுடனேந்த வுண்ணுன்மற் றுறங்காளுல். 70

பொ - ரை : புலைச்சாதி வியபிசாரிகள் கொடுக்கும் பாலும் சோறும் அவர் தம் வாயூறலோடு எடுத்துத்தர பரிந்து உண்டு உறங்குபவன் காட்டிலுள்ள கள்ளி மரங்கள் பாலும் பொதிந்த சோறும் விலக்கப்படும் மலரின்கண் உள்ள கீழானதேனும் ஏந்தி நிற்பவும் உண்ணமாட்டாதவனுய் உறங்காதவனும் ஆனுன்.

வீங்கிவளர்ந் ததுதிமிரம் விருத்திரா சுரனேய்ப்ப
ஓங்குமுடுக் கண்ணுக விந்திரனைத் ததுவானம்
ஆங்கசுரன் போயொளிப்ப வந்தரநா தன்கரத்தில்
வாங்குமொரு வச்சிரம்போல் வானிலெழுந் ததுபரிதி. 71

பொ - ரை : வைகறையில் விருத்திராசுரன்போல இருள் (திமிரம்) பெருகி ஓங்கிற்று; ஆகாயம் மேலேயுள்ள நட்சத்திரங்களே கண்ணுக இந்திரனை ஒத்தது; அவ்வசுரன் போய் மறையும்படி இந்திரன் கரத்தில் எடுத்த வச்சிரம்போல ஆகா யத்தில் ஞாயிறு தோன்றிற்று.

வேறு

வடிந்திடத் திமிர வெள்ளம் வளர்ந்திடப் பரிதி கானில்
படிந்திடு மாத்தி ரேயன் படருறு வினையோ நோயோ
முடிந்தநா ளதுவோ வென்று முடிவிலாப் பிறப்போ வெல்லாம்
விடிந்தது விடிந்த தென்ன விடிந்தது கங்குற் காலம். 72

பொ - ரை : இருளாகிய வெள்ளம் வற்றும்படி ஞாயிற்றின் ஒளி கிழக்கே வளர்ந்தது; காட்டில் சேர்ந்துள்ள ஆத்திரேயனுடைய உடன்தொடரும் வினையும், நோயும் முடிந்தநாள்தான் எனவும், முடிவிலாப் பிறப்பும் முடிந்தது முடிந்தது எனவும் இராக்காலம் முடிந்தது.

விடிந்ததென் றெழுந்து போவன் மெய்களைத் தயர்ந்து சோர்வன்
அடர்ந்தகல் லிடறி வீழ்வ னடியிடச் சவியி லாதே
முடங்குவன் மரங்க டோறு முட்டுவ னெட்டி யோகி
நடந்தனன் றிருக்குற் ருல நகர்க்குயோ சனைக்கு ஞாங்கர். 73

பொ - ரை: பொழுது விடிந்தது என்று எழுந்துசெல்வான்; உடம்பு அயர்ந்து சோர்வான்; நெருங்கிய பருக்கைக்கற்களால் இடறிவீழ்வான்; மேலும் அடிபெயர்த்து வைத்தற்கு நல்ல இடம் இல்லாமையால் தடைப்படுவான்; மரங்களில் முட்டிக்கொள்வான்; இப்படி நெடிது முயன்று திருக்குற்ருலநகர்க்கு ஒரு யோசனை தூரம் உள்ள இடத்தில் நடந்து சேர்ந்தான்.

வேறு

கடிக்கொண்ட பூங்கோதைக் கணிகையர்க்கே காதலனுய்க்
குடிப்பண்பின் மடவாரைக் கொடுஞ்சிறைசெய் பாதகத்தால்
மிடிக்கொண்டு வெறுந்தனியாய் வெயிற்கானற் பரல்வீழ்ந்து
பொடிக்கொண்ட தழல்வீழும் புழுப்போலத் துடிக்கின்ருன். 74

பொ - ரை: மணந்த மனைவியரைத் தடைசெய்து, இன்பம் கொடாமல், பூமாலை அணிந்த கூந்தலையுடைய கணிகையர்மேல் காதல்வைத்த பாவத்தால், வறியனுகித் தனித்துக் கொடிய வெய்ய பருக்கைக் கற்களால் தடுக்கப்பெற்று வீழ்ந்து நீறுபூத்த நெருப்பில் விழுந்த புழுப்போலத் துடித்தான்.

உண்ணுது பசிதுரப்ப வுடலெல்லாம் பிணியுலைப்பப்
புண்ணுக மெய்யயர்காற் போற்றவொரு துணையின்றி
எண்ணுத பலவெண்ணி யிளைத்திருமி வாய்குளறிக்
கண்ணுரு மொளியிருண்டு காதிலோ சையுமடங்கி. 75

பொ - ரை: பசி, பிணி, உடலிற்படுபுண், களைப்பு, தனிமை என்னும் இவற்ருல் துன்புற்றுப் பலப்பல எண்ணங்களை எண்ணி இருமி, வாய்குழறி, கண் இருண்டு, காது செவிடுபட்டு.

தருணநிலை தடுமாறிச் சாக்கிரஞ்சொப் பனஞ்சுழுத்திக்
கருவிகர ணங்களெலாங் கைகடந்து மெய்யயர்ந்து
துரியவவத் தையில்வீழ்ந்து துரியாதீ தங்கடந்தே
உரியதொரு சூக்குமத்தா யுயிரொடுங்கு மந்நேரம். 76

பொ - ரை: தெளிவு நிலைமாறி, நனவு, கனவு, உறக்கம் என்னும் அவத்தைகளில் தொழிற்படும் கருவி கரணங்கள் மடங்கி, பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்னும் நிலைகளை முறையே அடைந்து உயிர் சூக்கும தேகத்தோடு தூல உடம்பை விடும் அந்நேரத்தில்.

அறநெறிமுற் றவப்பயனே வத்திரிகோத் திரமறையோர்
உறுகதிமெய்த் தவப்பயனே வுயிர்விடும்வே தியனுடலில்
குறுமுனிக்கன் புடையபிரான் றிரிகூடக் குலவரைவாய்ச்
செறிமலர்ச்செண் பகச்சோலைத் தென்றற்கால் பாய்ந்ததுவே. 77

பொ - ரை: இங்ஙனம் உயிர் உடம்பினின்று பிரியும் நிலையில் அவனே முன்செய்த அறம் தவம் என்பவற்றின் விளைவோ, அத்திரிகோத்திரத்தில் பிறந்தோர் நற்கதி பெறச்செய்த தவப்பயனோ, அவன் உடம்பில் சண்பகவனத்தின் தென்றல் வீசிற்று.

மால்பாய்ந்த மறையவன்மேற் றிரிகூட வரைவசந்தக்
கால்பாய்ந்த தென்கேனோ கவுணியன்வாய்க் கவுரிமுலைப்
பால்பாய்ந்த தென்கேனோ பவக்கடலிற் குகப்பெருமான்
வேல்பாய்ந்த தென்கேனோ யாதெனயான் விளம்புகேன். 78

பொ - ரை: இந்த நிகழ்ச்சியை, தென்றல்தான் பாய்ந்தது என்பேனு, திருஞானசம்பந்தர்க்கு அம்மை உண்பித்த ஞானப்பால் பாய்ந்தது என்பேனு, அன்றி ஆத்திரேயனுடைய பிறவிக்கடல் வற்றும்படி திருமுருகன் வேல்தான் பாய்ந்தது என்பேனு, இவற்றுள் ஒன்றைப் பிரித்துக்கூற ஒருப்படேன்.

இந்தவகை யிறந்தானை யியமபட ரெதிர்முடுகி
வந்துநெடு வலைவீசி வளைந்துபெரும் பாசத்தால்
பந்தமுறக் கட்டியொரு பட்டமரந் தளிர்த்ததெனச்
சிந்துதிர மெழப்புடைத்துத் தென்புலத்துக் கொடுசெல்வார். 79

பொ - ரை: மேற்கூறிய நிலையில் இறந்த ஆத்திரேயனை இயமன் வேலையாட்கள் குறுகிப் பாசத்தாற்கட்டி, பட்டமரம் தளிர்த்தாற்போல, அவன் யாதனு சரீரத்தில் குருதி கொப்புளித்தெழும்படி அடித்துத் தம் புரத்திற்கு இழுத்துச் செல்வார் ஆயினர்.

செல்லுகின்ற வேலைதனிற் சிவபிரான் கணநாதர்
நில்லுமெனத் தூதர்தமை நிராகரித்து மறையோனை
வல்லுதிரக் கறைதுடைத்து வன்பாச மறுத்துநயம்
சொல்லுவன பலசொல்லிச் சூட்டுவன பலசூட்டி. 80

அரமகளிர் கவரியிட வந்தரபல் லியங்கறங்க
வரியிசைக்கின் னரர்பாட வானவர்பூ மழைபொழியப்
புரிசடைப்பண் ணவர்புகழப் புட்பகத்தின் மீதேற்றிக்
கரியுரிவை தரித்தபிரான் கயிலைதனிற் கொடுபோனுர். 81

பொ - ரை: அவ்வமயத்தில் சிவகணநாதர் குறுக்கிட்டுத் தூதர்களை விலக்கிப் பாசத்தை அறுத்தெறிந்து, இரத்தக்கறையைத் துடைத்து இன்சொற்கூறி மாலை முதலியவற்றைச் சூட்டி, தேவமகளிர் கவரியிடவும், பல மங்கலவாத்தியங்கள் முழங்கவும், கின்னரர்பாட, தேவர் மலர்மாரி பொழிய, முனிவர் வாழ்த்தப் புட்பக விமானத்தில் ஏற்றி, சிவபிரானது திருக்கயிலையினிற் கொண்டு சென்ருர்கள்.

வேறு

செம்மான மிசையிழிந்து சென்றுமறை யோன்கயிலைச் சிகர மேவிப்
பெம்மானை யடியின்மிசை முடிபணிந்தா னந்தவெள்ளப் பெருக்கி லாடிக்
கைம்மானுஞ் சுடர்மழுவுங் கறைமிடறும் புரிசடையுங் கண்கள் மூன்றும்
மெய்ம்மானுந் திருவடிவுங் கண்டிருகண் களிப்பவுடல் விதிர்ப்ப நின்ருன். 82

பொ - ரை: மறையவன் விமானத்தினின்றும் இறங்கி, திருக்கயிலைத் திருக்கோயிலுட் சென்று சிவபிரான் திருவடிகளில் வீழ்ந்துவணங்கி ஆனந்த வெள்ளத்துள் மூழ்கி, மான் மழுவும் கறைமிடறும் சடைமுடியும் முக்கண்ணும் உமை பாகமும் உள்ள திருவுருவைக் கண்களாற் கண்டு களித்து உடல் கம்பித்து நின்ருன்.

சென்றுதொழு மந்தணனை யருணோக்கிற் கயிலைவளர் சிவபி ரானுர்
நன்றுநீ யுயிர்விடுங்கா னமதுசெண்ப காடவிசேர் நறும்பூந் தென்றல்
ஒன்றியுன தாகமிசைத் தைவரலாற் பாவமெலா மொழித்தோங் கண்டாய்
என்றுமழி யாமலினி யெமதுகணத் தவர்பதத்தி லிருப்பா யென்ருர். 83

பொ - ரை: அவனைச் சிவபிரான் திருவருள் நோக்கஞ் செய்து, "உன் உயிர் நீங்கும்போது நமது சண்பகவனத் தென்றல் உன் உடம்பிற் பட்டமையால் நீசெய்த பாவம் எல்லாவற்றையும் போக்கி அருள்செய்தோம்; இனி எம் கணத்தவர் பதத்தில் என்றும் அழியாமல் இருக்க" என்ருர்.

வேறு

அன்று நாதன் திருவருள் செய்ததால்
மன்றன் மாலயன் வாழ்வு முவர்ப்புறச்
சென்று செல்வச் சிவகணத் தாருடன்
என்று நீங்கலாப் பேரின்ப மெய்தினன். 84

பொ - ரை: அன்று சிவபிரான் அருள்செய்ததால் அயன்மால் வாழ்வையும் வெறுக்கும்படி சிவகணத்தாருடன் என்றும் நீங்காப் பேரின்பம் எய்தி உள்ளான்.

யாமி யந்தனி லெய்திய தூதுவர்
சாமி யந்தகன் ருளிணை போற்றியே
காமி யந்தணன் கண்ணுதல் பாலுற்ருன்
பூமி யந்தரம் போற்றிடப் போயென்ருர். 85

பொ - ரை: தென்திசையில் (யாமியம்) சென்ற தூதர் தமது தலைவனுகிய நமனைப் பணிந்து, காமுகனுகிய அந்தணன் நிலனும் வானும் போற்றும்படி சிவபுரம் சென்ருன்" என்றனர்.

வெய்த வாறுடை வீணனைத் தென்புலம்
எய்த வாறுகொண் டேகலு மேதடை
செய்த வாறுஞ் சிவபெரு மான்றெண்டர்
வைத வாறும் வளர்செவி சாற்றினர். 86

பொ - ரை: கொடிய வழிபற்றி ஒழுகிய வீணனைத் தாங்கள் தென்புலங் கொடு வந்ததும், சிவபெருமான் தொண்டர் தடைசெய்து தம்மை வைததையும் கூறினர்.

செறிவு சேர்மனத் தென்புலக் கோமகன்
குறிகொள் சித்திர குத்தரைக் கூவியே
வெறிகொள் விப்பிரன் மேற்கணக் காலுள
பொறிகள் யாவும் புகலுமி னென்றனன். 87

பொ - ரை: தன் கடமையிற் கருத்துள்ள நமன் சித்திரகுத்தரை அழைத்து ஆத்திரேயன் கணக்கில் உள்ள எழுத்துக்களைப் படிக்கும்படி உத்தரவிட்டான்.

சாத்தி ரம்பல தான்கற்று மத்திரி
கோத்தி ரத்தி லுதித்துங் குலநெறி
நேத்தி ரத்தொழி னீக்கி வைசியர்க்கும்
சூத்தி ரர்க்குங் கடைஞரிற் றேன்றினன். 88

பொ - ரை: ஆத்திரேயன் அத்திரி கோத்திரத்துத் தோன்றிச் சாத்திரம் பல கற்றும் தன் குலத்திற்கு ஏற்றபடி பிறருக்கு நல்வழிகாட்டும் ஒழுக்கத்தை விட்டு நாற்பாலவர்க்குங்கீழ் உள்ள இழிஞர்போலச் செயற்பட்டான்.

கற்பு மங்கையர் கட்டழித் தான்பொருள்
அற்பு மாந்த ரடைக்கலம் வெஃகினன்
பொற்பு மாதர் புறங்கடை நின்றுளான்
நற்பு மாந்தர்க்கு நண்ணரிய தீமையான். 89

பொ - ரை: கற்புடை மகளிர்தம் ஒழுங்கைக் கெடுத்தான்; பொருளில் அன்புவைத்தார் தன்கண் அடைக்கலம் புகுதலை விரும்பினன்; அழகுடைய மகளிர் புறங்கடையில்நின்று கருத்தழிந்தான்; நன்மையில் நின்றூர்க்குத் தீமையை நண்ணுவித்தான்.

சாலை சத்திரந் தன்ம மலைத்துளான்
ஆலை யத்தின் களவுகை யாட்சியான்
மாலை காலையுஞ் சந்தி மறந்துளான்
வேலை தோறு மதுநுகர் வேட்கையான். 90

பொ - ரை: சாலை சத்திரம் முதலிய முன்னோர் செய்துவந்த அறங்களை அழித்தான்; திருக்கோயிலுக்கு உரிய பொருள்களைக் கரவிற் கைக்கொண்டான்; காலை மாலை சந்தியாவந்தனத்தை மறந்து மது அருந்துதலை விரும்பி மேற்கொண்டான்.

குருவுந் தெய்வமு நிந்தைசெய் கோளினன்
கருது நோன்புடைக் கன்னியர் காமுகன்
தரும யோகர் தவங்க ளழித்துளான்
பொருவின் மோகப் புலைச்சியர் போகத்தான். 91

பொ - ரை: குருநிந்தை தெய்வ நிந்தைகளைக் கொள்கையாகக்கொண்டான்; நோன்புடைக் கன்னியரைக் காமுற்றான்; அறவோர், யோகிகள் என்போர் மேற்கொண்ட தவங்களைச் சிதைத்தான்; புலைமகளிர் போகத்தை நுகர்ந்தான்.

அந்த ணார்க்கோ ரருங்களை மூவகைச்
செந்த ழற்குத் தெறும்புனல் சிந்தைசெய்
மந்தி ரத்தின் மறவி பிறரெலாம்
நிந்தை செய்யு நிரக்கர குக்கியான். 92

பொ - ரை: அந்தணராகிய பயிர்களுக்குக் களைபோன்றவன்; மூவகை வேள்வித்தீக்கு அவற்றை அணைக்கும் நீர்போன்றான்; மந்திரங்களை மறந்தவன்; பிறரால் நிந்திக்கப்படும் மூடன் (எழுத்தே இல்லாத வயிற்றினன்).

வி - கு: குக்கி - குக்ஷி (வயிறு).

பிறந்த நாட்பிதுர் நாள்வரு டாதியில்
சிறந்த நாட்சிவ ராத்திரி யாதியா
அறைந்த நாள்விர தாதிமுச் சந்தியும்
மறஞ்செய் வாள்விழி யாரை மறந்திரான். 93

பொ - ரை: தான் பிறந்தநாள், பிதிரர்க்குக் கடன் கழிக்கவேண்டிய திதி நாட்கள், வருடப் பிறப்பு முதலிய புண்ணியநாட்கள், விரத நாட்கள், சந்தியா காலம் இவற்றிலும் கூடப் பாவச்செயலுள்ள மாதரை மறவாதவன்.

அலைவி லாத குடிக ளலைத்துளான்
மலர்செய் காவின் மரங்கள் குறைத்துளான்
புலைசெய் பான்மையும் பொய்கள வாதியும்
கொலைசெய் பான்மையுங் கூறத் தகாதவால். 94

பொ - ரை: அமைதியான குடும்பங்களை அமைதி கெடச்செய்தவன்; மலர்ச் சோலையில் உள்ள மரங்களை வெட்டினவன்; புலைத்தொழிலும் கொலை களவு முதலியனவும் செய்தவன்.

இரும்பு போலு மிதயத்தன் கள்வெறிச்
சுரும்பு போல்பவன் கோபச் சுடரனன்
ஒருங்கு பாவத் துடன்பிறந் தானறம்
இருந்த வூரி லிருந்தறி யானென்றார். 95

பொ - ரை: இரும்பு மனத்தன்; கள் வெறியில் வண்டுபோல் தாழ்ந்து வீழ்பவன்; கோபத்தீ உடையவன்; பாவங்களின் உடன்பிறந்தோன்; அறம் இருந்த ஊரிலும் இரான் என இங்ஙனம் படித்தனர்.

கரண வீரர் கணக்கிவை கூறலும்
நரக வீரனை நல்வழி சேர்த்திடும்
வரவி யாதென மாமனத் தெண்ணினன்
திரம தாநடுச் செய்யுஞ்செங் கோலினன். 96

பொ - ரை: கணக்கர் இவற்றைக்கூற, நடுவன், நரகத்திற்கே செல்லுந் தகுதி உடையானை நல்வழிச் சேர்ப்பிக்கும்படி அவன் செய்த புண்ணியம் யாது என உள்ளத்தே ஆராய்ந்தான்.

அரவ மாலே யவிர்சடை யாரிடைப்
பரம ராசியம் யாது பயந்ததோ
பிரமன் மாலறி யாத பிரானுடன்
விரைவில் விண்ணப்பஞ் செய்திட வேண்டுமால். 97

பொ - ரை: பரமேசுரனுடைய சிவலோகம் செல்லும் பேற்றை எச்செயல் பயந்ததோ? விளங்கவில்லே; இதனே அயன் மால் அறியாமுக்கட்செல்வரிடத்தே விண்ணப்பிக்கவேண்டும்.

செப்பு மேல்வைச் சிவபெரு மான்முறை
தப்பு மேல்வைத் தகல்வது தாக்கெனு
வெப்பு மேல்வைத்த வெம்பக டேறினன்
கப்பு மேல்வைத்த சூலமுங் கைக்கொண்டான். 98

பொ - ரை: விண்ணப்பிக்கும் போது சிவபிரானே முறைதவறின் அவர் தம் ஆணேயை அவரிடமே வைத்து நீங்குவது எதிர்செய்யத்தக்கது எனக் கோபத்தோடு எருமைக்கிடாய்மேல் ஏறி முக்கிளேயாகக் கப்புவிடும் சூலமும் ஏந்தினன்.

பாசந் தண்ட மெழுக்கர பத்திரம்
வீசுங் கைவலே யெஃகம் விறன்மழு
மூசு சம்ப முசலங் கணேயம் வாள்
பூசல் வீரர் கொடுபுறஞ் சுற்றினர். 99

பொ - ரை: அவன் பரிசனங்கள் கயிறு, தண்டு, தூண், ஈர்வாள், கைவலே, வேல், மழு, வச்சிரம், உலக்கை, யானேவாராமல் தடுக்கும் மரம், வாள் என்னும் கருவிகளே ஏந்திச் சூழ்ந்தனர்.

கால னும்பெருங் கால மிருத்துவும்
தூல வுக்கிரன் றுன்முக னுதியா
நீல மேனி நிரைத்தெழு தூதரும்
ஓல மென்ன வொருபுடை சுற்றினர். 100

பொ - ரை: காலன், பெருங்கால மிருத்தியு, பருத்த உக்கிரன், துன்முகன் முதலிய கறுத்த தூதரும் உடன் சூழ்ந்தனர்.

விளங்கும் வைவைச் சுதபுர மேவினர்
துளங்கி யோர்புடை சூழ்ந்தனர் சூழ்திறை
அளந்து போற்றினர் தானவ ராதியோர்
வளர்ந்து கிங்கரர் மல்லர்க ளாடினர். 101

பொ - ரை: இவர்கள் வைவச்சுதபுரம் சென்றனர்; தானவர் முதலியோர் ஒருபுடை சூழ்ந்து திறை அளந்து கொடுத்தனர்; ஏவலாளரும் மல்லர்களும் பெற்றுமகிழ்ந்தார்கள்.

பெருவி யாதி முயல்வலி பீனிசங்
குரும கோதரங் குட்டங்க ளாதியா
மருவு சேற்றும வாதபித் தங்களும்
பொருவு சேனக ளாய்ப்புடை சூழ்ந்தவே. 102

பொ-ரை : பெருநோய் முதலிய பிணிகளும் சேனையாய்ச் சூழ்ந்துசென்றன.

வெட்டு வார்துணிப் பார்மிகு பாவரைக்
கட்டு வாரடிப் பார்நர காதிபர்
கிட்டு வார்பணி கேட்பவ ராய்நமன்
மட்டு வார்கழல் வந்து வணங்கினர். 103

பொ-ரை: வெட்டுதல், துணித்தல், கட்டுதல் முதலிய தண்டம் செய்யும் நரகு அதிபதிகளும் நமனை வணங்கிச் சூழ்ந்தனர்.

ஆய சேனைக் கடலிடை யந்நலார்
தூய சாமரைத் தெண்டிரை துள்ளுறப்
பாயு மோதையிற் பல்லிய மார்த்தெழ
மேய வூர்தியென் வங்கத்து மேயினன். 104

பொ-ரை: இச்சேனை கடல்போலச் சூழ, மகளிர் வீசிய சாமரை அலைகள் போல் காணப்பட, பல வாத்தியங்கள் கடல்போல் முழங்க, தன் ஊர்தியாகிய எருமை கப்பல்போலக் காணப்படச் சென்றான்.

சொந்த வைவைச் சுதபுர நீங்குபு
வந்து சேர்ந்தனன் வைதர ணித்துறை
உந்து தானையை நோக்கின னெண்கயல்
பந்தி சேர்தரு பல்சினை நோக்கல் போல். 105

பொ-ரை: தன் பட்டணமாகிய வைவச்சுதபுரம் நீங்கி, தன் நாட்டின் ஆறாகிய வைதரணியின் துறைக்குவந்து, கயல்மீன் தன் வரிசையாகிய முட்டைகளைப் பார்த்தல்போல், தன் பரிசனங்களை நோக்கினான்.

பாங்கு சேர்பரி வாரத் தொகையெலாம்
நீங்கு கென்ன நிறுத்திவெங் காலனை
ஆங்குக் கூவி யமைச்சனோ டேகியே
வீங்கு சோதிக் கயிலையை மேவினன். 106

பொ-ரை: தன் பக்கலில் உடன்வந்த பரிவாரங்களை அங்கேயே நிறுத்தி, காலன் என்னும் அமைச்சனைக் கூவி அழைத்துக்கொண்டு, திருக்கயிலைக்குச் சென்றனன்.

நீல மால்வரை நின்றிழி கொண்டல்போல்
கோல மேதி யிழிந்துசெங் கோற்கிறை
கால னோடு கயிலையஞ் சாரல்வாய்ச்
சூல மேந்தித் தொழுதெழீஇப் போயினன். 107

பொ - ரை: நீல மலையிலிருந்து இறங்கும் மேகம்போல, எருமையினின் றும் கீழ் இறங்கி, காலன் உடன்வர, சூலப்படை ஏந்தித் திருக்கயிலையை இறைஞ்சி எழுந்து மேலே சென்றான்.

வேறு

சென்று வெள்ளியந் திருமலைத் தென்றிசை காத்திடும் வடமேருக்
குன்று போலுயர் கோபுர வாய்தலிற் குறுகிவிண் ணவரெல்லாம்
நின்று போற்றுபொற் படிமிசைத் தென்புல நிருபன்வெம் மனக்கோட்டம்
அன்றி நின்றுதன் வரவினை யருங்கடை காவலர்க் கறிவித்தான். 108

பொ - ரை: வெள்ளி மலையின் தென்திசை வாயிலாகிய மேருபோன்ற கோபுரவாயிலில் பொற்படிமேல் நின்று, மனக்கோட்டம் இன்றித் தன் வரவைக் கடைகாவலர்க்கு அறிவித்தான்.

கடைக ளேழின ரொருவர்பா லொருவராய்க் கழறமற் றவர்பூதப்
படைகள் காவலர்க் குணர்த்திட வன்னவர் பணவர வணிகோலச்
சடைகு லாமுடிச் சுடர்மழு நந்திநந் தலைவனுக் கமைந்தோத
உடைய நாயகன் சன்னிதா னத்தவ னுணர்த்தலுங் கொணர்கென்றான். 109

பொ - ரை: ஏழு வாயிலைக்காப்போர் ஒருவர்பின் ஒருவராய் நமன் வரவைக் கேட்டுணர்ந்து, ஏழாம் காவலன் பூதகணத் தலைவர்க்கு உணர்த்த, அத்தலைவர் சிவசாரூபம் பெற்றுள்ள திருநந்திதேவர்க்கு அறிவிக்க, அவர் பரமசிவனுக்கு அறிவிக்க, அவர் நமனை அழைத்து வருக என்றார்.

நந்தி நாயக னருண்முறை சிவகண நாதர்கள் புகுந்துய்ப்பப்
பந்தி யாம்பல திருக்கடை கடந்துமேற் படர்ந்துதென் றிசைவேந்தன்
புந்தி யார்ப்புறக் கண்டனன் சிவபிரான் பொன்னணி திருக்கோயில்
முந்தி யாரணர் நாரணர் பெறவொணு முறைமைபெற் றனனென்றான். 110

பொ - ரை: திருநந்திதேவர் ஆணையால் சிவகணநாதர்கள் கொண்டு செலுத்தப் பல திருக்கடை வாயில்களைக் கடந்து சென்று, சிவபிரானது பொன் மயமான திருக்கோயிலைக் கண்களிப்பக் கண்டான்; அயனும் மாலார் பெருத பேறுபெற்றேன் என உள்ளம் மகிழ்ந்தான்.

## திருவோலக்கம்

வேறு

கின்னரர்கின் னரமிழற்றத் தந்திரர்தந் திரிமீட்டிக்கீதம் பாடப்
பன்னகர்கிங் கரர்கருடர் சித்தர்வித்தி யாதரர்தம் பணிசெய் தேத்தப்
பொன்னகரிந் திரன்பரவ வானவர்பொன் மாரிபுட்ப மாரி தூவப்
பின்னகபந் திகளசைய வரம்பையர்கண் மணிக்கவரி பிடிப்ப மாதோ. 111

பொ - ரை: கின்னரர் வீணை வாசிக்கின்றனர்; கந்தருவர் யாழின் நரம்புகளை அமைத்துப் பண்ணைப் பாடுகிறார்கள்; நாகர் கிங்கரர் முதலாயினோர் தமக் குரிய பணிசெய்கின்றனர்; இந்திரன் புகழ்பாட, தேவர் பொற்பூமாரி பொழி

கின்றனர்; பின்னல் வரிசைகள் அசைய அரம்பையர்கள் மணிக்கவரி வீசு கின்றனர்.

புவலோகர் வலம்புரியப் பாதாள லோகர்மணிப் பொற்பூ ணேந்தத்
தவலோகர் சனலோகர் சத்தியலோ கரும்பணிந்து தவப்பே றெய்திப்
பவலோகங் கடந்தேற மாலோகத் தவர்பரம பதமே யான
சிவலோகந் தனைவேண்டி யடிபரவச் சிவகணங்கள் சேவைசெய்ய. 112

பொ - ரை : புவலோகத்தினர் முதலாயினோர் வலம்புரிதல் முதலியவற்றை மேற்கொள்ளச் சிவகணங்கள் சேவிக்கின்றார்கள்.

அணிமாதி சித்திகள்குற் றேவல்செய வீசான னடைப்பை தாங்க
மணிவாரி யோரேழுந் திறையளப்பப் பகல்வேந்தர் மாறாத் தீபம்
பணிமாற மதிபடிமக் கலமேந்த மழைதெளிப்பப் பவனன் றூர்ப்பத்
தணியாத தழற்கடவுள் பரவியா லத்திசுற்றத் தருமம் வாழ்த்த. 113

பொ - ரை : அணிமா முதலிய சித்திகள் குற்றேவல் செய்கின்றன; ஈசானன் அடைப்பை ஏந்த, எழுகடலும் திறை அளப்ப, பன்னிரு சூரியர் விளக்கங்கள் ஏந்த, சந்திரன் கண்ணாடி ஏந்தி முன்நிற்ப, வருணன் நீர் தெளிக்க, வாயு தூக, அங்கியங்கடவுள் ஆலத்தி சுழற்ற, தரும தேவதை போற்றி நின்றது.

அறுசமைய மைம்பூத நான்மறைமுக் காலமிரண் டறங்கள் யாவும்
எறுழ்வலிகள் வேண்டியொரு கோடிவர மந்திரங்க ளெண்ணில் கோடி
மறுவறநின் றிருகோடி புகழ்ந்தேத்த வரிபிரமர் மகுட கோடி
செறிகமலத் தாள்வருடப் பதினொருமுக் கோடியராந் தேவர் போற்ற. 114

பொ - ரை : அறுசமயக் கடவுளர், ஐம்பூதம், நான்மறை, முக்காலம், இல்லற துறவறங்கள் யாவும் மிக்க வலியைவிரும்பி ஒருபக்கம்வந்தன; எண்ணில் கோடி மந்திரங்கள் இருபக்கம் நின்று பொருள்சேர் புகழ் ஏத்தின; அரிபிரமர் தம் முடிதாழ்த்தி இறைஞ்சினர்; முப்பத்து முக்கோடிதேவர் போற்றினர்.

கங்கைசர சோதிசிந்து யமுனைகோ தாவரிநன் மதைகா வேரி
மங்கலமா நதிபலசா மரையிரட்ட விமயவரை வயிறு வாய்த்த
நங்கையொரு பாலிருப்பப் பொருப்பெறிந்த வேற்குமர னடுவண் மேவ
வெங்கயனை யமர்சாய்த்த விசையமதக் களிறொருபால் விளையாட்டெய்த. 115

பொ - ரை : கங்கை முதலிய ஆறுகள் பல சாமரை இரட்டின; பார்ப்பதி அம்மை ஒருபால் அமர்ந்திருந்தாள்; குமரவேள் அம்மைக்கும் அப்பனுக்கும் நடுவண் வீற்றிருந்தான்; விநாயகர் ஒரு பக்கலில் விளையாட்டயர்ந்தார்.

மாணிக்க மரகதங்கோ மேதகமுத் துப்பவளம் வயிர நீலம்
நீணித்த மணிபுருட ராகம்வயி டூரியங்க ணிரைத்த தூணின்
ஆணிப்பொன் மேருவென வுயர்மணிமண் டபத்தரியா சனத்தின் மீது
வேணிச்செவ் வான்படர மதிதவழு மொருபவள வெற்பு மான. 116

பொ - ரை : மாணிக்கம் முதலிய ஒன்பதுவகை மணிகளை பன்றூட்கள் பதித்த, மேருவென உயர்ந்த பொற்றூண்கள் வரிசையாக நிறுவப்பெற்ற

உயர்ந்த மணிமண்டபத்தில் சிங்காதனத்தில் செவ்வந்தி நிறத்தைச் சடைமுடி காட்ட, அதில் பிறைமதி தவழப் பவளக்குன்றம் என இறைவன் வீற்றிருந்தான்.

ஒருமருங்கு மிருசருமத் துகிலுடையு மூன்றுகண்ணு முயர்தோ ளான்கும்
கருணைபொழி திருமுகமு மைந்துபண டவிமுடிமேற் கங்கை யாறும் [டும்
பரிதியெழு வெயிலெறிக்கு மவுலியும்வெண் ணிலவெறிக்கும் பணிலத் தோ
பொருமுரக குண்டலமு மண்டலமும் விண்டலமும் பொலிந்து ளானை. 117

பொ - ரை: இடையில் புலித்தோல் உடை, யானைத் தோல் போர்வை, முக்கண், நாற்புயம், கருணைபொழி திருமுகம், ஐந்தலைநாகமும் கங்கையும் உள்ள முடி, ஞாயிற்றின் ஒளியைத்தரும் மணிமுடி, நிலவொளிதரும் சங்கக்குழை, சர்ப்பகுண்டலம் இவற்றை உடைய மூர்த்தியாக எங்கும் நிறை இறைவனை.

கரதலமு மான்மழுவு மபயவர தமுஞ்சுருதி கனிந்த வாயும்
அரவணியு முரககண கங்கணமுங் காண்டொறுமற் புதமேற் கொண்டான்
திருவடியுங் குரைகழலு மிடம்வலங்காண் டொறும்பயமுந் திடமும் பூத்தான்
பிரமன்மால் சிரமாலை துயல்வருதிண் புயநோக்கிப் பிரமை பூண்டான். 118

பொ - ரை: நாற்கைகளில் மான் மழு அபய வரதம் என்பவற்றைத் தாங்கி, வேதம் மொழியும் திருவாயும், அரவாகிய அணியும், கைவளையும் உடையவனைக் கண்டபோது நமன் அற்புதம் உடையனானான்; இடத்திருவடியும் பொற்கழலணிந்த வலத்திருவடியும் கண்டபோது, அச்சமும் திடமும் உடையனானான்; அயன்மால் சிரமாலை தோள்களில் அசைவதைக் கண்டு உணர்வு மயங்கினான்.

முதியவா னவர்கணமாம் பரவையிடை முழுமணியா சனமென் றோங்கும்
உதயவரை தனிலநந்த கோடிகதி ரோருருக்கொண் டுதித்தா லென்ன
வதியுமுயர் பரஞ்சுடரைக் காண்டொறுங்கண் வழுக்கியன்பின் வழிக்கொண்
[டேகித்
துதிபரவி யெழிற்கடலி னருட்டுறைவீ ழெழிலியெனத் தொழுது வீழ்ந்தான்.

பொ - ரை: பழைய தேவர்குழாமாகிய கடலில், இரத்தின சிம்மாதனம் என்னும் உதயகிரிமேல், பலகோடி சூரியர்கள் ஒரு வடிவெடுத்தாற்போல வீற்றிருக்கும் பரஞ்சுடராகிய சிவபிரானைக் காணுந்தோறும் கண்கூசி, அன்பினால் கரைந்துருகிப் பாடி, அழகுக்கடலின் அருள்துறையில் படியும் மேகம்போலத் தொழுது கீழேவீழ்ந்தான் நடுவன்.

ஆதியாய் சரணமநு பூதியாய் சரணமகி லாண்ட மீன்றாள்
பாதியாய் சரணமறை வேதியாய் சரணமருட் பரமா னந்தச்
சோதியாய் சரணமென வீழ்ந்தானை யெழுகவெனச் சுருதி நாதன்
மேதியான் முகநோக்கி வந்தகா ரணம்யாது விளம்பா யென்றான். 120

பொ - ரை: பரமன் திருப்பெயர்களை வேறு வேறு ஓதிச் சரணம் சரணம் என இறைஞ்சிய நமனை வேதநாயகன் எழுக என அருள்புரிந்து, அவன் முகம்நோக்கி வந்த காரணத்தை வினவினான்.

என்றுமுதல் வன்றிருவாய் மலர்ந்தருளப் பெற்றேனென் றிருகை கூப்பிச்
சென்றுதுணை யடிவணங்கி வணங்குதொறு முடல்விதிர்ப்பச் சிலிர்ப்பரோமம்
நின்றுசெழுந் துகிலொதுக்கி வாய்புதைத்து நடுநடுங்கி நிமல மூர்த்தி
ஒன்றுளதென் னேருவிண் ணப்பமென வுரைத்தருளா லுணர்த்து கின்றான்.

பொ - ரை: நமனும் இருகைகூப்பி மீண்டும் அடிவணங்கி உடல் கம்பித்து உரோமஞ்சிலிர்ப்ப நின்று, உடையொதுக்கி வாய்பொத்தி, திருச்செவிக்கு ஏறமாட்டாத என் விண்ணப்பம் என்று கூறிப் பின் சிவன்றன் ஆணையால் கூறுகின்றான்.

## விண்ணப்பம்

பாரின்மேன் மறைக்குலமாம் பயிர்க்குமுது களையாகப் படர்ந்தா னந்த
ஊரின்மே லுதிக்குமுனம் பாதகத்தி னுடனுதித்தா னொழுக்கந் தீர்ந்தான்
நீரின்மேற் குளித்தறியான் மாதர்முலைத் தடங்குளிப்பா னீச மாதர்
காரின்மே னியுந்தீண்டி யவர்மனைபுக் கூனருந்திக் கள்ளுண் பானால். 122

பொ - ரை: நிலவுலகில் அந்தணர்குலப் பயிர்க்குக் களையாய், பாதகங்களின் உடன்பிறப்பாய்த் தோன்றிய ஒழுக்கங்கெட்ட ஆத்திரேயன், நீரிற்குளியாது மாதர் தனமேற்படிவான்; புலைமகளிர் மேனி தீண்டி அவர் மனை புகுந்து ஊனும் கள்ளும் உண்பான்.

தானமறி யான்மூன்று சந்தியறி யானலது சாம வேத
கானமறி யானோமக் கனலுமறி யான்மனுநூற் கல்வி கேள்வி
மானமறி யான்செபமு மந்திரசித் தியுமறியான் மவுன யோக
ஞானமறி யானிவனே நாங்களறி யாப்பதத்து நண்ணு வானே. 123

பொ - ரை: பலவகை ஸ்நானங்கள், முச்சந்தி, மறை ஓதல், ஓமம் வளர்த்தல், மனுநூற் கல்வி கேள்வி, மானம், செபம், மந்திரசித்தி, மௌனயோக ஞானம் ஒன்றும் அறியாதவன் எமக்கும் அறியப்படாத சிவபதத்து நண்ணினான்.

கோடுபொரு முலையார்கள் காமத்தாற் புலைபுரிந்த கொடியோன் றன்னை
வாடுபெருந் துயர்நீக்கிக் கயிலைதனிற் சிவகணத்தார் வரித்தா ரன்னோர்
ஆடுவது திருக்கூத்தா யதுதானே யலங்கார மாகு மானால்
வீடுபெறு சுவர்க்கமென்று நரகமென்று மெங்களுடன் விகற்பிப் பானேன்.

பொ - ரை: யானைத்தந்தம்போன்ற தனம் உடைய மகளிர்மேல் வைத்த ஆசையால் புலைத்தொழில்புரிந்த கொடியவனை, அக்கொடுமைக்குரிய துயர்தரும் ஒறுப்புமுறையை விலக்கிச் சிவகணத்தார் அவனைக் கயிலையில் கொணர்ந்தார்; சிவகணத்தார் மனஞ்சென்றபடி செய்வதே திருவுளத்திற்கும் அழகிது எனின், வீடுபேறு சுவர்க்கம் நரகம் என்னும் வேறுபாட்டை எங்களுக்கு அடிகள் கற்பிப்பது எதற்கு?

கைப்பொழுகு பாவமெலா மினிப்பொழுக நடந்தானைக் காட்டும் போது
தப்பொழுகக் கணநாதர் தள்ளினா ரெனிற்பாவந் தரும மேது
பொய்ப்பொழுது கழிப்பாரை யலைத்துநான் மெலிவதினிப் போது மெந்தாய்
எப்பொழுதுங் கயிலையினுன் னடியவர்க்கே பணிவிடைசெய் திருப்பே
[னென்றான். 125

பொ - ரை : வெறுக்கத்தக்க பாவங்களையே பெரிதும் விரும்பிச்செய்தானை அவன் தவற்றை அவனுக்கு என் தூதுவர் விளக்கும்போது சிவகணத்தார் விலக்கினர் எனின், அறம் பாவம் என்னும் வேறுபாடு ஏது? உன் திருவடி பிழைத்துப் பொய்ப்பொழுது போக்குவாரை நான் ஒறுப்பது இனிப் போதும்; எந்தையே! திருக்கயிலையில் நின் அடியவர்க்குப் பணிசெய்வதே என் தொழிலாக அமைவது நன்று என்றான்.

தக்கவே தியன்றவமுஞ் சேய்ஞலூர் மறையவன்பா தகமும் பூசை
புக்கமறைப் பாலகன்வா ணாளழிவு முப்புரநாட் பொலிவு மாற்றும்
மிக்கதிருச் செயல்களினும் விதிமுறையை நிலைநிறுத்தும் விளையாட் டாலே
முக்கணா யகர்தருமன் முகநோக்கிக் கருணையுடன் மொழிவ தானார். 126

பொ - ரை : தக்கனாகிய வேதியன்செய்த வேள்வியும், சண்டீசர்செய்த தாதைதாள் எறிந்த செயலும், திரிபுரத்தசுரர் ஆயுள்நாள் மிகுதியினையும் விலக்கும் உயர்ந்த அருட்செயல்களினும் அமைந்துள்ள விதிமுறையைப் பொருந்தக் காட்டும் திருவிளையாட்டால் முக்கட்செல்வர் நமன் முகம்நோக்கி மொழிகின்றார்.

முந்தக்கால் சிவதலத்துத் திரிகூட மான்மியங்கண் மொழியு நாளில்
சந்தக்கா நெடுவேலிச் சண்பகக்கா மகிமைசொன்னோந் தனித்தக் காலே
மந்தக்கான் மகிமைசொல்ல வைத்திருந்தோ மினியதனை வழங்கு வோம்யாம்
அந்தக்கான் மகிமையைநீ யறிந்தக்கா லிவன்மகிமை யறிவா யென்றும். 127

பொ - ரை : முன்னே அக்காலத்தில் சிவதலங்களுள் வைத்துத் திரிகூட நகர்ப் பெருமையை உரைத்த நாளில் சந்தனச்சோலையை நெடுவேலியாகவுடைய சண்பகச்சோலையின் பெருமையைச் சொன்னோம்; அக்காலத்திலே தனித்து மந்த மாருதத்தின் பெருமையைச் சொல்லக் காலம் பார்த்திருந்தோம்; இப்பொழுது அதனை வெளிப்படுப்போம்; அந்தமாருதத்தின் பெருமையை நீ அறிந்தால் ஆத்திரேயன் பெருமையை நீ அறிந்துகொள்வாய் என்றனர்.

கிளையாடுந் திரிகூடக் கடவுண்மால் வரைத்தோன்றிக் கிரித்தேன் கங்கை
அளையாடிப் பொங்குகடற் பாலாடி வடவருவி யமிழ்த மாடித்
தளையாடி மடலவிழ்க்குஞ் சண்பகா டவிதவழ்ந்து சங்கக் கோயில்
விளையாடி யெம்மருங்கில் விளையாடுந் தென்றலங்கால் விளையாட் டேயோ.

பொ - ரை : மூங்கில் அசையும் தெய்வத்தன்மையுள்ள திரிகூடமலையில் தோன்றி, மதுகங்கையில் தோய்ந்து (அளையாடி) பொங்குகடலில் கலந்து, வடவருவி ஆகிய அமுதத்தில்முழுகி, தளையப்பெற்று இதழ்விரியும் சண்பகவனத்தில் தவழ்ந்து, சங்கக் கோயிலைச்சூழ்ந்து, எம்மிடத்தில் விளையாடும் விளையாட்டுத் தென்றலுக்கு உரிய பால்ய விளையாட்டாம்.

மலையாறு கடலலைந்து மண்டுபுடார்ச் சுனபுரத்து மாய்வோர் தீமை
மலையாம ஞமிருந்து மறைப்பொருளை வலக்காதில் வழங்கும் போது
மலையாட்டி கவுரிகுழல் வாய்மொழிசெங் கையிலணைத்து மடிமே லேந்த
மலையாம லிளைப்பாற்றி வீசுவது திரிகூட வசந்தக் காலே. 129

பொ - ரை: மலையும் ஆறும் கடல்துறைகளுமாகத் திரிந்து புனிதம் நிறைந்த புடார்ச்சுனபுரத்தில் இறப்போரைத் தீவினைகள் நலியாதபடி நாமிருந்து உயர்மறைப்பொருளை வலக்காதில் உபதேசிக்கும்போது மலைமகளாகிய குழல் வாய்மொழிக் கௌரி தன் செங்கையால் அணைத்து மடிமேல் தலையைத்தாங்க அப்பொழுது வருந்தாமல் இளைப்பாறும்படி மெத்தென வீசுவது திரிகூடத் தென்றல்.

தீர்த்தமகி மையிலதிகந் திரிகூட வடவருவி திருக்குற் றாலம்
ஆர்த்ததலங் களிலதிக மூவடிவாஞ் சிவலிங்க மருளா னந்த
மூர்த்திகளி லதிகமிவை சாலோக முதன்மூன்று முறையே நல்கும்
சூர்த்துரைக்கி லிவைமூன்று மத்தலத்தி லுலவுதென்றல் கொடுக்கு மாதோ.

பொ - ரை: திரிகூட வட அருவி உலகில் உள்ள தீர்த்தங்களில் உயர்ந்தது; திருக்குற்றாலம் உலகில் நிறைந்துள்ள தலங்களில் உயர்ந்தது; அகர உகர மகர வடிவாம் திரிகூடச் சிவலிங்கம் அருளானந்த மூர்த்திகளில் தலை சிறந்தது. மூன்றும் முறையே மக்களுக்குச் சாலோக சாமீப சாரூப பதங்களைத் தருவன; அத்தலத்தில் உலவும் மந்தமாருதம் மூன்றையும் ஒருங்கே தரவல்லது.

மஞ்சுதோய் முதுகுடுமித் திரிகூட மலைச்சாரல் வசந்த வூதை
துஞ்சுபோ தையின்மேனி தைவரலால் வானெழுந்த சூறைக் காற்றில்
பஞ்சுபோன் மறையவன்செய் பாதகம்போய்ச் சிவதருமம் பலித்த தாலே
தஞ்சமா முயர்கயிலை வரைமேவி யெமதுபதஞ் சார்ந்தா னன்றே. 131

பொ - ரை: திரிகூடவரைத் தென்றல் இம்மறையவன் இறக்கும்போது இவன் உடம்பைத் தடவினமையால், அவன் செய்த பாதகங்கள் எல்லாம் சூறைவளியின் முன் பஞ்சுபோலச் சிதறிக் கெட்டுச் சிவபுண்ணியம் அவனுக்கு உண்டாயது; ஆதலால், யாவருக்கும் அடைக்கலமாகிய உயர் கயிலையில் வந்து எமது பதஞ்சேர்ந்தான்.

ஆதலா லெமதுபுடார்ச் சுனபுரத்தி லெழுதிரைத்தே னாறு பாயும்
காதலா மைந்திணை நாற் றிசைமூன்றி யோசனையுங் கலந்து வாழ்வோர்
சாதலாம் பொழுதிருபா லுயிரிடத்து மொருநாளுந் தரும வேந்தே
போதலா னதுதவிர்தி தூதர்யா வருக்குமிது புகல்வா யென்றார். 132

பொ - ரை: இங்ஙனமாகலின், எமது புடார்ச்சுனபுரத்தில் தோன்றும் அலைவீசும் தேனாறு பாய்கின்ற, உயிர்கள் அன்புசெய்யும் ஐந்திணைக்குரிய நிலங்களில் நான்கு திசையினும் மும்மூன்று யோசனைவரையும் கலந்து வாழ்வோர் உயிர் நீங்கும்போது உயர்திணை அஃறிணை என்னும் இருபகுப்பு உயிர்கள் மாட்டும், தருமனே! நீ செல்வதைத் தவிர்; தூதுவர் அனைவர்க்கும் இதனைச் சொல்லிவை என்றார் பரமசிவன்.

இன்னபடி கயிலைமலை யெம்பிரா னருளியவா றியமன் கேளா
முன்னமிதை யறியாது செய்தமையை நினைந்திரங்கி முகுந்த னாலும்
பன்னரிய மறையாலுந் தெரிவரிய பரமரா சியத்தின் பான்மை
மன்னுபெருந் திரிகூடத் தென்றலங்கான் மகிமையென மகிழ்ச்சி கூர்ந்து. 133

பொ-ரை: இதனை இயமன் கேட்டு, முன்னரே இதனை அறியாது இறைவன்கண் சென்று முறையிட்டமைக்கு இரங்கி, நிலைபெற்ற திரிகூடத் தென்றற்காற்றின் மகிமை மாயோனாலும் மறைகளாலும் அறியப்படாத பரம இரகசியத்தின்பாற்பட்டது எனக் கருதி மகிழ்ச்சி மிக்கு.

பின்னலணி பிறைமவுலிச் சடையினு ரடிபரவிப் பெம்மா னெம்மான்
சொன்னபணி விடைதலைமேற் கொண்டனன்கொண் டனனெனவே
[ தொழுது போற்றித்
தன்னகர்க்கு நம்பெருமான் விடைகொடுப்பப் பகடேறித் தருமன் போந்து
நன்னகர்மந் தாநிலத்து மகிமையே யனைவருக்கு நவில்வ தானுன். 134

பொ-ரை: சிவபிரானைத் தொழுது எம்மான் அறிவுறுத்த பணிவிடையைத் தலைமேற்கொண்டனன் எனக்கூறி விடைபெற்றுத் தன்னகர்க்குப்போய்த் திருக்குற்ருல நன்னகர்த் தென்றலின் பெருமையினை யாவருக்கும் நவின்ருன்.

தருமமே தங்குபுடார்ச் சுனபுரத்து மூன்றியோ சனையின் மேலும்
வருமமே மறந்திடுமின் ருதர்கா ளவணுறைவோர் வருவோர் யாரும்
கருமமே தியற்றுகினுந் தருமமே குறிக்கொண்மெனக் கணக்கர் யார்க்கும்
பருமமே தியையுகைக்கு நடுநெறிச்செங் கோற்கடவுள் பகர்ந்தான் மன்னே.

பொ-ரை: பெரிய எருமையை ஊரும் நடுவன் அறமேவாழும் புடார்ச் சுனபுரத்து மூன்றுயோசனை அளவுள்ள இடத்தில் பகைத்துச்செல்லும் உறுதியை (வருமம்) மறந்துவிடுங்கள்; அவ்வெல்லையில் உறைவோர் வருவோர் யாரும் எதனைச் செய்யினும் அது தருமமே ஆகும் என்பதனைக் குறித்துக்கொண்மின் எனக் கணக்கர் அனைவர்க்கும் பகர்ந்தான்.

பாராது மறையவன்செய் பாதகந்தீர்த் தருள்புரிந்த பரிசி தென்று
வாராத வழிகாட்டு மந்தமா ருதமகிமை வழங்கிச் சூதன்
தீராத சிவத்துரோ கந்தீர்த்த மகிமையுரை செய்வா யென்னும்
ஆராமை முனிவரர்க்குத் தக்கன்மகம் புரிதன்முத லறைவ தானுன். 136

பொ-ரை: சாத்திரவிதியைக் கருதாது மறையோன்செய்த பாதகங்களைத் தீர்த்து அருள்புரிந்த தன்மை இது என்று பிறப்பிற்கு மீண்டுவாராத நற்கதியைத் தரும் மந்தமாருதத்தின் பெருமையைச் சூதன்சொல்ல, முனிவர்கள் தீராத சிவத்துரோகந்தீர்த்த வரலாற்றை உரைக்க என மட்டுப்படாத அன்பினுல் விண்ணப்பிக்க, தக்கன் வேள்விபுரிதல் முதலாக அவர்க்கு அவன் கூறத்தொடங்கினன்.

மந்தமாருதச் சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 614

---

# தக்கன்வேள்விச் சருக்கம்

அலர்க்கமல நறும்பொகுட்டி லயன்றலைநா ளுலகமெலா மளிக்க வேண்டி
மூலைத்தலத்தி லறத்திறைவன் மார்பினிடைப் பிருகுளத்தின் மூதும ரீசி
புலத்தியனத் திரிகிருது வங்கிரா சனபதிமேற் புலகன் றேன்ற
வலப்பதத்திற் றக்கன்முத லாயதசப் பிரமரையு மரபி னீன்றுன். 1

பொ - ரை: தாமரை மலர்ப்பொகுட்டில் வீற்றிருக்கும் பிரமன் முன் ஒரு நாள் உலகத்தைப் படைக்க எண்ணித் தன் தனங்களிலிருந்து அறக்கடவுளையும், மார்பிலிருந்து பிருகுமுனிவனையும், இதயத்திலிருந்து மரீசி, புலத்தியன், அத்திரி, கிருது, அங்கிரா, சனபதி, புலகன் என்னும் ஏழு முனிவரையும், தன் வல அடியிலிருந்து தக்கன் முதலிய பத்து இளம்பிரமர்களையும் முறையாகப் படைத்தான்.

அன்னவராம் பதின்மர்களிற் பின்னவனுந் தக்கனெழுந் தயன்பா லேகிப்
பின்னமிலா துயிர்க்குயிராய் நிற்பவனுஞ் சிற்குணனும் பெருந்தே வர்க்கு
முன்னவனு மிறுதியிலா முதல்வனும்யா ரெனக்கேட்ப முளரி மேலோன்
உன்னரியா னுணர்த்தரியா னிருவர்களுந் தேடநின்ற வொருவ னென்றுன்.

பொ - ரை: இளம்பிரமர்களில் பின்னவனுகிய தக்கன் அயனை நோக்கி உயிர்க்குயிராய் உள்ள அறிவு வடிவாகிய, பிறப்பு இறப்பு இல்லாத முதல்வன் யார் என வினவினன்; யானும் மாலும் தேட மறைந்திருந்த சிவபெருமானே நினைத்தற்கும் உணர்த்தற்கும் அரிய பரம்பொருள் எனப் பிரமன் விடைகூறினன்.

படைப்பதுவுங் காப்பதுவு முன்னர்நீர் புரிந்திருப்பப் பரிவாற் பின்னர்த்
துடைப்பவனை முதல்வனெனச் சொன்னவா றென்னையெனச் சுதன்வி னுவ
உடைப்பிரம மாமவனே யுலகொடுக்கு நாளெமையு மொடுக்கா நிற்பன்
விடைப்பரன்பின் னருளியன்றே யாங்கள்படைப் பதுங்காப்பு மென்றுன்
[வேதன். 3

பொ - ரை: அயன் மால் என்னும் நீங்கள் படைப்பதும் காப்பதும் செய்யும்போது இறுதியில் அழிக்கும் சிவனை முதல்வன் எனக் கூறுதற்குக் காரணம் யாது எனத் தக்கன் மேலும் வினவினன்; எல்லாவற்றையும் உடைய பரம்பொருளாகிய சிவபிரான் உலகம் முற்றும் ஒடுக்குங்காலத்து எங்களையும் ஒடுக்குவன்; மீளவும் எம்மை விடைப்பாகனுகிய சிவன் படைத்தபின், அவன் அருளால் படைக்கும் தொழிலும், காக்கும் தொழிலும் நாங்கள் பெற்று அவன் ஆணைவழி செய்து வருகின்றேம் என அயன் உரைத்தான்.

நாரணனை யுனைப்பூத வகையையுயிர்த் தொகையையெலா நான்கு வேதம்
பூரணமாம் பிரமமெனப் புகல்வதெவ னென்று தக்கன் புகல வேதா
ஆரணநம் பரமனுரை யுண்மைமொழி யவற்கேமற் றவர்கட் கெல்லாம்
காரணமா முகமனுரை வேந்தனையு மீசனெனல் கடுக்கு மென்றுன். 4

பொ - ரை: நான்கு கூறுக உள்ள வேதம் மாயோனையும் உன்னையும் (அயனை), மண் முதலாக உள்ள ஐம்பூத வகைகளையும் எங்கும் நிறைந்த பிரம்மம் என்றே கூறுவதன் கருத்து யாது எனத் தக்கன் வினவினன்; வேதம் நம் முதல்வனாகிய சிவனது உரை ஆகும்; அவனைப் பிரம்மம் எனக்கூறும் கூற்றுக்களே உண்மை மொழிகளாகும்; மற்றவர்களைக் கூறுவது அவன் தங்கித் தொழில் புரிவதற்கு இடமாதல்பற்றி உபசாரமாகக் கூறியதே ஆகும்; உலகில் அரசர்களை இறைவன், ஈசன் எனக் கூறினும் அவர்கள் இறைவன் ஆகார்கள்; அதுபோல - என அயன் விடுத்தான்.

ஆங்கவனோர் செயலுடையன் வடிவுடைய னாதலினா லவனுக் கென்றும்
பாங்குபெறுந் தோற்றமீ றெய்தாதோ வெனுஞ்சேய்க்குப் பதுமத் தண்ணல்
யாங்குமுளன் யாங்குமில னருவுமில னுருவுமில னெம்மா னம்மா
ஓங்குலகின் பொருட்டாகச் செயல்புரியக் கருணைதிரு வுருவாக் கொள்வன். 5

பொ - ரை: தக்கன் மேலும் வினவினன்: சிவபிரான் செயலும் உருவமும் உடையன் ஆதலினால் அவனுக்கும் உருவுடையார்க்கு உரிய தோற்றமும் ஈறும் உள ஆகும் அன்றோ? இங்ஙனம் வினவிய மகனுக்குப் பிரமன் கூறுவன்; இறைவன் எங்கும் உளன்; பொருள்களில் தொடக்குறாமையால் எங்கும் இல்லாதவனும் ஆவன்; அதுபோல அவன் அருவும் அல்லன், உருவும் அல்லன்; வளரும் உயிர்கள்பொருட்டு ஐந்தொழில் புரிவதற்குத் தன் கருணையே திருவுருவாகக் கொள்வன்; மற்றையோர்க்குப்போல அவன் திருமேனி பிராகிருதமோ, மாயேயமோ, வைந்தவமோ அன்று; அவன் திருமேனி சத்தியால் வருவதுபற்றிச் சாத்தம் எனப்படும்.

உயிர்கள்புரி வினைக்கீடா யுருவகுக்க வேண்டிலென துருவ மாவன்
செயிரறவே வினைப்பயன்க ளூட்டுதற்கு மாலாவன் சிதைப்பான் வேண்டின்
அயில்பெறுமுத் தலைச்சூலத் தரனாவன் யாவுமறைத் தருளும் பான்மை
பயின்மகே சனுமாவன் சதாசிவமா யருள்புரிவன் பரம மூர்த்தி. 6

பொ - ரை: பரம்பொருளாகிய பரமசிவன் உயிர்களைப் படைத்தற்குப் பிரமனாய், காத்தற்குத் திருமாலாய், அழித்தற்கு அரனாய், மறைத்தற்கு மகேசனாய், அருளுதற்குச் சதாசிவனாய் நிற்பன் என உணர்க.

வினாமை யுருவாகி யருவுருவ மாகியுரு மேவா நிற்பன்
தள்ளாமை யுருவகத்தும் யாங்களிரு வருமாகித் தான்வே றுவன்
எள்ளாருந் தயிலமும்பூ மணமுமணிச் சோதியும்போ லெங்குந் தானே
உள்ளாகிப் புறமாகி யகம்புறமு நீங்காத வொருவ னவன். 7

பொ - ரை: முதல்வன் புலப்படாத அருவமும் அருவுருவமும் உருவமும் ஆகுவன்; உருவத்தின் கண்ணும் அயன் மால் என்னும் யாங்கள் இருவரும் ஆகியும் வேறாய் நிற்பன்; எள்ளும் அதன்கண் உள்ள நெய்யும், பூவும் மணமும், மாணிக்கமும் அதன் ஒளியும்போல எப்பொருளிலும் உள்ளும் புறமும் கலந்து நிறைந்த ஒருவன் முதல்வன்.

மாதவனே பிரமமென்றும் யான்பிரம மென்றுமதி மயங்கா வண்ணம்
மீதெலா மெம்போல்வார் வெண்டலைமா லைகள்புனைந்தான் விமல மூர்த்தி
ஈதெலா முணர்ந்துணரா மாலாகி மாலுடன்யா னிகலுங் காலம்
நாதனெதிர் விலக்கியன்றே நாங்களடி முடிதேட நடுநின் றானே. 8

பொ - ரை: மாயோனே பரம்பொருள் என்றும் ஆன்மாவே பரம்பொருள் என்றும் அறிவு மயங்காதிருத்தற்பொருட்டே தன் திருமேனிமேல் வெண்தலை மாலைகளைப் புனைந்துகொண்டான் தூயோனாகிய முதல்வன்; இவற்றை உணர்ந்திருந்தும், உணர்வைத்தடுக்கும் மயக்கம் உடையேன் ஆகி யான் மாயோனோடு மாறுபட்டபோது, அம்மாறுபாட்டை நீக்கியல்லவா முதல்வன் தழல் உருவாய், எம் நடுவேநின்று யாம் அடியும் முடியும் தேடச் செய்தான்.

வி - கு: யான் - அயனும் ஆம்.

மூவரா நினைந்தரியை யென்னையரன் றனக்கிணையா மொழிவர் யாரும்
பாவராய்த் தாந்தமையே கெடுப்பதன்றி யெமக்குமவர் பகைவ ராவார்
சேவினா னன்பரென நினைப்பவர்க்கே யாங்களருள் செய்யா நிற்போம்
ஏவரா கிலும்யாரை யிறைவரென விறைஞ்சல்முக்க ணிறைக்கே சாரும். 9

பொ - ரை: மும்மூர்த்திகள் என்னும் வழக்குப்பற்றி என்னையும் மாயோனையும் அரனுக்கு இணை எனக் கருதுவோர் பாவம் உடையராய்த் தம்மையே கெடுத்துக்கொள்வர்; எங்கள் இருவரையும் அரனுக்கு அடியர் என்பவர்க்கே யாம் அருள்புரிவோம்; வேறுவகையில் எண்ணுவோர் எமக்கே பகைவராவர்; எவரை ஒருவர் இறைவர் என இறைஞ்சினும் அவ்வணக்கம் சிவபிரானுக்கே சாரும்.

கவ்வைநீர்ப் பலகோடி நதிகளுக்குஞ் சாகரமே கதியாம் போல
எவ்வகையா கியசமய நெறிக்கெலா மிறைவன்முக்க ணெம்மா னன்றே
அவ்வகையா யிரமறைக ளுரைத்தும்யா னுணர்த்தியுநீ யறியா யையா
நவ்வியணி கரத்தானைப் பரவியருள் பெறுகவென்று னளினத் தானே. 10

பொ - ரை: எல்லா ஆறுகளுக்கும் முடிவிடம் கடல்; அதுபோல, சமயங்கள் எல்லாவற்றுக்கும் இறைவன் சிவபிரானே. இங்ஙனம் மறைகள் எல்லாம் உணர்த்தியும் யான் உணர்த்தியும் நீ மயங்குகின்றாய்; இனி உண்மையைத் தெளிந்து மான் ஏந்திய கரத்தையுடைய சிவபிரானை வழிபட்டு அவன் அருள் பெறுக எனப் பிரமன் தக்கனுக்கு முடித்துக்கூறினன்.

வேறு

கதியின் மேற்பெரு விதிமொழி சிறுவிதி கருதா
முதிய நாயக னரனெனிற் பணிந்துமான் முதலோர்க்
கதிக னாகெனும் வினையமுள் ளமைத்தருந் தவஞ்செய்
புதிய தானம்யா தென்னலு மலரில்வாழ் புத்தேள். 11

பொ - ரை: பதவியின் மேம்பட்ட பிரமன் உரையைத் தக்கன் கருதி, சிவபிரானே பழையோன் எனில், அவனை வழிபட்டு மால் முதலியோர்க்கு மேம்பட்டவன் ஆவேன் (ஆகு) எனும் செயலை (வினையம்) மனத்திற்கொண்டு, அரிய தவம்செய்தற்கு உரிய இடம் யாது என வினவினன்; பிரமன் கூறுவான்.

அந்த மானதங் குணர்வரு மேருவி னணித்தாம்
நந்த மானத தடம்புனன் மூழ்கிநம் பரனை
முந்த மானத வருச்சனை முதற்றவ முயன்று
சொந்த மானதற் பரனடி சேரெனச் சொற்றான். 12

பொ - ரை: அழிவில்லாத மேருவிற்குச் சமீபத்தில் நமக்கு உரிய மானதம் என்னும் தடாகத்தில் முழுகிச் சிவபிரானை முதற்கண் மனத்தால் பூசித்தல் முதலாகிய தவத்தைச்செய்து உயிர்கள் அடைதற்கு உரிய முதல்வன் திருவடிப்பேறு எய்துக எனப் பிரமன் சொன்னான்.

வேறு

பூந்தவிசி லயனுரைத்த போதுமா னததடத்துப் போந்து தக்கன்
ஆந்தவமோ ராயிரம்யாண் டியற்றுதலு முயர்விடைமே லாதி தோன்றிக்
கூர்ந்தபெருந் தவமுவந்தே மீங்குனக்கு வேண்டுவரங் கூறு யென்னப்
பாந்தளணி செஞ்சடையார் பவளவாய் மலர்ந்தருளப் பணிந்து போற்றி. 13

பொ - ரை: அயன் உரைத்தபடி மலர்கள் நிறைந்த மானததடத்தை அணுகித் தக்கன் ஆயிரம் ஆண்டு தவம்புரிய, சிவபிரான், விடைமீது எழுந்தருளி வந்து வேண்டிய வரம் யாது எனக்கேட்டார். தக்கன் வணங்கித் துதித்து மொழிவானாயினன்.

மேகபத முதலாய விசும்புலகு மால்பதமும் விரிஞ்ச னுடும்
நாகருல கமும்புவியு மெண்டிசையு மெனதாணை நடப்ப நாளும்
பாகசா தனன்முதலா வுனைப்பணிவோர் யாவருமென் பணிகள் கேட்ப
மாகனசுற் றமும்வாழ்வு மக்களுஞ்செல் வமுமழியா வயமும் வேண்டும். 14

பொ - ரை: மேகமண்டலம் முதலாக உள்ள வான் உலகு, மாயோன் பதம், அயன் வாழும் சத்திய உலகு, தேவர் உலகு, நிலவுலகு இவை எல்லாம் என் ஆணையில் நடக்கவும், என்றும் இந்திரன் முதலாக உனை வணங்குவோர் அனைவரும் யான் ஏவும் பணிகளில்நிற்கவும், சிறந்த பெரிய சுற்றமும் நல்வாழ்வும் மக்கள் செல்வம் முதலிய பேறும் அழியாத தன்வயமும் வேண்டும்.

சுந்தரியுன் னிடத்துறையுந் தோகையுமென் மகளாகத் தோன்ற நீயோர்
அந்தணன்போல் வந்தருளி மணம்புரிய வேண்டுமிவை யருளா யென்னப்
புந்தியுற வணங்குதலும் புகன்றவர மனைத்துமருள் புரிந்து மேலும்
சிந்தையுற நன்னெறிநீ நிற்கிலிவை நிற்குமென்றான் றேவ தேவன். 15

பொ - ரை: உன் இடப்பாகத் துறையும் அம்மை என்மகள் ஆகிவர நீ அந்தணனாய் வந்து அவளை மணந்துகொள்ளவேண்டும்; இவற்றை அருள்க என மனத்தால் வணங்கி வேண்டினன்; தேவதேவனாகிய சிவபிரான், அவற்றைக் கொடுத்து, நீ கருத்துடன் நன்னெறியில் நின்றால் இவை நிலைபெறும் என்று அருளிச்செய்தான்.

வரமளித்து மழவிடையா ரருளியெழுந் தருளியபின் மதங்கூர் தக்கன்
பிரமனைத்தன் னிடத்தில்வர வுன்னுதலு மவனுணர்ந்து பெருஞ்சீர் முத்திப்
பரமனைக்கண் டிவ்வாறே பெற்றனன்யான் பணித்ததொன்றும் பயின்று
[ னல்லன்
தரமனைக்கு ளமுதூட்டி வளர்த்தாலுங் காளமன்றித் தருமோ நாகம். 16

பொ - ரை: இவ்வரங்களைக் கொடுத்துச் சிவபிரான் மறைந்தபின் தக்கன் தன் தந்தையாகிய பிரமனைத் தன்கண் வரவேண்டும் என நினைந்தான்; பிரமன் உணர்ந்து, சிறந்த வீடுபேற்றை நல்கும் முதல்வனிடத்து வரங்கேட்பது இப்படியா? யான் கூறியவற்றுள் இவன் ஒன்றும் செய்திலன்; தகுதியுள்ள வீட்டில் வைத்துப் பால் உண்பித்து வளர்த்தாலும் பாம்பு தன் இயற்கையால் நஞ்சை அன்றி வேறு நல்லபொருளைத் தாராதன்றே!

சிற்றறிவர்க் கினிதுரைக்கு நன்மொழிகன் மேன்முளைபோற் சிதைவா மென்று
முற்றறிந்த நான்முகன்போய் மைந்தனவை யகத்திசைந்த முகமன் கூற
மற்றவனைக் கம்மியன்போல் வளநகரு முறைபதியும் வகுப்பா யென்றான்
பெற்றவரைப் பெரியவரைத் தெரியுமோ சிறியவர்க்குப் பெருக்கம் வந்தால்.

பொ - ரை: புல்லறிவாளர்க்குக் கூறும் உறுதிமொழிகள், கல்மீது ஊன்றக்கருதும் மரமுளைபோலத் தாமே கெடும் அல்லவா! என்று கருதிக்கொண்டு, நான்முகன் சென்று தக்கன் அவையில் அவன் உள்ளம் உவக்குமாறு உபசார மொழிகளைக் கூறினன்; தக்கன் தனக்குத் தலைநகரும் அரண்மனையும் வகுக்கும்படி தச்சனுக்குக் கட்டளையிடுவதுபோல ஆணைசெய்தான்; சிறியோர்க்குச் செல்வம்வரின் பெற்றோர் என்றும் பெரியவர் என்றும் ஒருவரை மதிக்கத் தெரியாது அல்லவா!

தாலமிசை யயன்வகுத்த தக்கமா புரியிடத்துத் தக்கன் மேவி
மாலயனு முறைபுரிய வாசவனும் பணிகேட்ப வானோர் போற்ற
நீலவிழி யரமகளிர் கவரியிட நிரைமணிப்பூண் மகுடஞ் சூடி
மேலரியா சனத்திருந்தான் வேந்தர்வேந் தாய்விதிக்கு விதியாய் மாதோ. 18

பொ - ரை: நிலவுலகில் தக்கமாபுரி என ஒரு நகரத்தை அயன் படைத்துக் கொடுத்தான்; அதில் தக்கன் முடிசூடி அயன் மால் முதலியோர் தன் ஆணைவழியில் நடக்க, அரமகளிர் கவரியிரட்டல் முதலிய பணிசெய்ய விதிகளைத் தானே விதிப்போனாய்ச் சிம்மாதனத்திருந்து உலகங்களை ஆண்டுவந்தான்.

வேறு

அரசுசெய் காலந் தன்னி லயன்மலர்ப் பதத்துத் தோன்றும்
விரைசெறி குழலாள் வேத வல்லியை விரும்பி வேட்டுத்
தரைதனிற் புதல்வ ரீரா யிரவரை யிருகாற் றந்தான்
உரைசெய்நா ரதனு லன்னோ ரொழிவிலா முத்தி சேர்ந்தார். 19

பொ - ரை: அரசாளும்போது, அயன் அடியில் தோன்றிய வேதவல்லி என்பாளை மணந்து இருமுறையாக ஆயிரம், ஆயிரம் ஆண்மக்களைப் பெற்றுத்

தன்னைப்போல் பதவி பெறுவதற்குத் தவம் புரியும்படி அனுப்பினன்; அவர் நாரதர் இடையே போந்து கூறிய உறுதிமொழியைக் கேட்டுச் சிவபிரான் திருவருளையே விரும்பி முத்திபெற்றார்.

பாலரை முத்தி சேர்த்த பான்மையான் முனியைத் தக்கன்
ஓலநீர்ப் புவனந் தோறு முழன்றிடச் சபித்துப் பின்னர்
நீலவார் கூந்த லைம்பா னேரிழைக் கணத்தை யீன்று
சால்புசேர் சுபுத்தி யாதி பதின்மூவர்த் தருமற் கீந்தான். 20

பொ-ரை: பின் தக்கன் தன் மக்களைத் திசைதிருப்பிவிட்ட நாரதரைப் புவனந்தோறும் உழன்று திரிக எனச் சபித்து, பெண்மக்களைப் பெற்றான்; அவர்களுள் சுபுத்தி முதலிய பதின்மூவரை எமதருமனுக்கு மணஞ்செய்து கொடுத்தான்.

அரிவையர் பதின்மர் தம்மிற் பிருதியங் கிராவுக் காக
மரிசிசம் பூதிவேட்ப வுற்சையை வசிட்டன் மேவக்
கிருதுவே கமையை வேட்பக் கியாதியைப் பிருகு மேவப்
பொருகனல் சுவாவை நண்ணப் பிரீதியைப் புலகன் வேட்ப. 21

பொ-ரை: பின்னர்த் தோன்றிய மகளிர் பதின்மரில் பிருதி என்பாள் அங்கிராவை மணந்தாள்; சம்பூதியை மரீசி வேட்டார்; உற்சையை வசிட்டன் மணந்தான்; கமையைக் கிருது மணந்தார்; கியாதியைப் பிருகுமுனிவர் மணந்தார்; சுவாகாவை அங்கிக்கடவுள் வேட்டான்; பிரீதியைப் புலகன் மணந்தான்.

புத்திரை சனதி மாதைப் புலத்தியன் மணப்ப வாய்மைத்
தத்தையா மனசூ யைக்குத் தலைவனத் திரியே யாக
வித்தகக் கியாதி மைந்தன் விதாதாவே சுவதைக் காக
அத்திரி மகவாஞ் சோம னசுபதி முதலோர்க் காக. 22

பொ-ரை: சனதி என்னும் மகளைப் புலத்தியர் வேட்டார்; மெய்ம்மையுள்ள கிளிபோன்ற அனுசூயையை அத்திரி மணந்தார்; சுவதையை ஞானம் உள்ள கியாதிமைந்தன் விதாதா மணந்தான்; பின் தோன்றிய அசுபதி முதலிய இருபத்தெழுவரை அத்திரி மகனாகிய சந்திரன் மணந்தான்.

தார்முடிச் சுவதை யீன்ற விருவரிற் றரணி தன்னை
மேருவே மணப்ப வாட்கண் மேனையை யிமவான் வேட்ப
வார்முலைத் தரணி யீன்ற மேலையை வருணன் வேட்டான்
ஆரமு தனையா ரீன்ற மக்களு மநேகர் மாதோ. 23

பொ-ரை: சுவதைக்குத் தரணி, மேனை என இருமகளிர் தோன்றினர்; அவர்களை முறையே மேருவும் இமைய அரசனும் மணந்தனர்; அவர்களுள் தரணியின் மகள் மேலை; இவளை வருணன் மணந்தான்; சுவைநிறைந்த அமுதம்போன்ற மகளிர் ஈன்ற மக்கள் பலர்.

வேறு

இங்கிவரிற் காசிபனை யீன்றனன்ம ரீசிபுலத் தியன்சீர் மைந்தர்
பொங்கிராக் கதர்கவிகள் கின்னரர்கிம் புருடர்முதற் புலக னீன்றோர்
அங்கிரா சனபதிகள் கந்தருவர் வசுக்கடமை யளித்தா ராங்கே
வெங்கவியைத் திருவையவு ணரைப்பயந்தான் பிருகுவென விளம்பு
[மேலோன். 24

பொ - ரை: இவர்களில் மரீசி காசிபரைப் பெற்றான்; புலத்தியர் பெற்ற மக்கள் இராக்கதர்கள்; புலகரால் பெறப்பட்டோர் குரங்குகள், கின்னரர், கிம்புருடர் என்போர்; அங்கிரா சனபதிகள், கந்தருவர், வசுக்கள் என்போரைப் பெற்றான்; பிருகுமுனி சுக்கிரரை, திருமகளை, அசுரர்களைப் பெற்றான்.

அன்னவரிற் காசிபன்பின் றக்கனருள் பதின்மூவ ரணங்கார் தம்மை
முன்னர்வேட் டனனவரி லதிதியா தித்தர்தமை முறையி னீன்றாள்
பின்னரிர ணியனிரணி யாக்கனையுந் திதிபயந்தாள் பிரக லாதன்
பொன்னவன்சே யவன்மகன்வி ரோசனன்மா வலியவன்சேய் புதல்வன்
[வாணன். 25

பொ - ரை: அவர்களுள் காசிபன், பின்னர்த் தக்கன்பெற்ற பதின்மூன்று மகளிரை முன்னர் மணந்தான்; அவர்களுள் அதிதி என்பாள் ஆதித்தர்களை (சூரியர்களை) முறையாகப்பெற்றாள்; பின், திதி இரணியன் இரணியாக்கதன் என்போரைப் பெற்றாள்; இரணியனின் (பொன்னவன்) மகன் பிரகலாதன்; அவன் மகன் விரோசனன்; விரோசனன் மகன் மாவலி; அவன் மகன் வாணாசுரன்.

காலகே யரைப்பயந்தாள் காலையா யுவுமசுரர் கணத்தை யீன்றாள்
மேலையோர் நால்வரொடு கலுழனையு மருணனையும் வினதை யீன்றாள்
ஆலவிழி யரம்பைமுதற் பன்னிருவர் தமைப்பயந்தா ளரிட்டை மூவாக்
கோலரா குவைப்பயந்தாள் சிங்கியைகத் துருநாகக் குலத்தை யீன்றாள். 26

பொ - ரை: காலை என்பவள் காலகேயரைப் பெற்றாள்; ஆயு என்பவள் அசுரர் குழுவைப்பெற்றாள்; வினதை என்பவள் தார்க்ஷயன், அரிஷ்டநேமி, ஆருணி, வாருணி என்னும் மூத்தோர் நால்வருடன் கருடனையும் அருணனை (சூரியன் தேர்ச்சாரதி) யும் பெற்றாள்; அரிட்டை என்பாள் அரம்பை முதலிய பன்னிரு மகளிரைப்பெற்றாள்; சிங்கியை என்பாள் அழகிய ராகுவைப்பெற்றாள்; கத்துரு என்பாள் நாகக்குழுவைப் பெற்றாள்.

சம்பரனே முதலாய பன்னிருவர் தானவரைத் தனுவு மீன்றாள்
கொம்பினிலங் கிளைகபிலை யிருவருமே கந்தருவக் குலத்தை யீன்றார்
வெம்பரிதி யிந்திரியம் பாரிமூக் கினில்விடுப்ப விரண்டு கோடி
உம்பர்மருத் துவர்பிறந்தார் பிறந்தனச ராசரங்க ளுலப்பில் கோடி. 27

பொ - ரை: தனு என்பவள் சம்பரன் முதலிய பன்னிருவரைப் பயந்தாள்; இளை, கபிலை என்னும் இருவரும் கந்தருவர் கூட்டத்தைப்பெற்றனர்; வெய்யவன் தன் விந்துவைத் தன் மனைவி (பாரி) மூக்கில்விட இரண்டுகோடி தேவ மருத்துவர் பிறந்தனர்; இவர்களால் சர அசரங்கள் அளவில்லன பிறந்தன.

எண்கிளையா வாண்மகப்பெற் றென்பெற்ரு ருயிரத்தி னிரட்டி யோரும்
விண்கிளையா வீடுபெற்ருர் மீட்டுமக ளிரைப்பயந்த வியப்பா லோங்கி
ஓண்கிளையாய் மலைகடலும் பாதலமும் பூதலமு முயர்வா னுடும்
பெண்கிளையாற் சிறுவிதிக்குப் பெருங்கிளையா னதுதவத்திற் பெரிதொன்
[ றுண்டோ. 28

பொ - ரை: எண்ணப்படும் தன் கால்வழியாக ஆண்மகவைப் பெற்றுப் பயன்பெறவில்லை; இரண்டாயிரம் மக்களை முதற்கண் பெற்ருன் தக்கன்; அவர் மேலுலகு எனப்படும் திருவருள் துணையாக வீடுபெற்றனர்; பின் அவன் மகளிரைப்பெற்ருன்; இவர்களால் வியக்கும்படி மலையும் கடலும் நிலனும் வானும் கீழ் உலகும் தன் சுற்றமே உள்ளது என்னும்படி பெருஞ்சுற்றம் தக்கனுக்கு உண்டாயது. தவத்தினும் பெரியது ஒன்று உலகில் இல்லை அல்லவா!

### வேறு

அத்துணை வாழ்வு மீச னருளென வுணரான் றன்பால்
சித்தென வகந்தை யேறிச் சிறுவிதி பெருமால் பூண்டான்
எத்துணை கற்ரு ரேனு மிருவகைச் செருக்கால் யார்க்கும்
மத்தநோ யறுமோ முக்கண் மருந்தையுட் கொள்வார்க் கன்றி. 29

பொ - ரை: அவ்வளவு வாழ்வும் சிவபிரான் திருவருளால் வந்தது என உளங்கொள்ளாமல் தன் வல்லமையால் வந்தது என எண்ணி, யான் எனும் செருக்கு மிகுந்து பெருமயக்கம் உடையன் ஆனுன் பிரமன் மைந்தனுகிய தக்கன். முக்கண்களை உடைய மருந்தாகிய சிவபிரானை உட்கொள்ளாதவர்க்கு அவர் எத்துணை கற்ருேர் ஆயினும் செல்வம் அதிகாரம் என்னும் செருக்கால் யார்க்கும் வரக்கூடிய செருக்காகிய நோய்மிகாமல் இருப்பதில்லை.

மகக்குழாத் திருபா னேழ்பெண் மக்களை மணஞ்செய் சோமன்
முகத்தெழி லாரல் பாலு மூலையெழி லுரோணி பாலும்
உகப்பினு லேனை யோரை யொருவின னதனைக் கேளாத்
தகைப்பெரு மதியைத் தேய விதிமகன் சாபஞ் செய்தான். 30

பொ - ரை: தக்கன் மகளிர் இருபத்தெழுவரை மணந்த மதி என்பான் முக அழகுள்ள கார்த்திகையிடத்தும், மூலை அழகுள்ள உரோகணியிடத்தும் மிகுந்த காதல்கொண்டு மகிழ்ந்தமையால் மற்றையோரை விலகி இருந்தனன்; இதைக்கேட்ட தக்கன் மதியைக் கலை தேய்ந்து அழியும்படி வெகுண்டு கூறினுன்.

புதியவா னமுத மீந்து புலவரை வளர்ப்பான் மேனி
திதிதொறுந் தேய்வ தானுன் சிறுவிதி சாபந் தீரான்
நதிபொதி பவள வேணி நாதனு ரடியா ரன்றி
விதிதனை மதியி னுலே வெல்லவும் வல்லா ருண்டோ. 31

பொ - ரை: தேவர்களுக்குப் புதிய சிறந்த அமுதம் கொடுத்து வளர்க்கும் மதி, நாள்தோறும் தன்வண்ணம் தேய்வது ஆனுன்; இது சிறுவிதி சாபத்தால் நேர்ந்தது; விதியை மதியால் வெல்ல வல்லவர் உலகில் இல்லை.

பான்மதி தேய்ந்து மேனி பழுதுபட் டுழன்று வானோர்
கோனவை குறுகிக் கூறக் கொழுங்கனல் கரியா வேட்ட
தேனுர்க் கோரஞ் செய்த சிறுமையாற் பெருநோய் பூண்டாய்
மேனெறித் தக்கன் சாபம் விலக்குதற் கெளிதோ நம்மால். 32

பொ - ரை: வெண்மதி தன்மேனி தேய்ந்து திரிந்து இந்திரனிடம் சென்ருன்; அக்கினி சான்ருக மணந்த மனைவியருக்கு ஓரம் செய்த பாவத்தால் பெருநோயை நீ பெற்ருய்; பெரும்பதவியில் உள்ள தக்கன் சாபத்தை நம்மால் விலக்கமுடியாது என இந்திரன் கூறி மேலும் கூறுவான்.

முதிரைமோ தகவி ழாவின் முதுகய முகத்தெம் மான்முன்
அதிகவீ றுரைத்து நீச னுயினை யந்தச் சாபம்
சதுமுக னவனை வேண்டச் சதுர்த்தியி னமைத்து நீத்தான்
இதுவுமங் கவனுற் றீர்தி யென்னலு மயன்பாற் சென்ருன். 33

பொ - ரை: முன்னர் அவரை முதலியவற்றை வேகவைத்து நிவேதிக்கும் விநாயகர் விழாவில் நீ நகையாடித் தற்பெருமை கொண்டதால் நீசன் ஆனுய்; அப்போது அயனை வேண்ட அந்நீசத்தன்மை ஆவணி முற்பக்கச் சதுர்த்தியில் மட்டும் இருக்கும்படி அடக்கித் தீர்வுசெய்தான். இதுவும் அவனுல் தீர்க எனக் கூறப் பிரமனிடம்சென்ருன்.

வியன்மதி யுலகி னுன்கும் விண்ணிடை நான்கும் வீய
வயிரவாட் படையான் முன்னர் வளர்கலை நான்குந் தேய
அயன்முனர்க் கலைமூன் றேக வவன்வழி விடுப்ப வேகி
உயர்பிரான் கயிலை வெற்பி லொருகலை யொடும்போய் வீழ்ந்தான். 34

பொ - ரை: மதியின் கலைகள் பதினுறில் தன் உலகில் நான்கும், ஆகாயத் தில் நான்கும், இந்திரன் முன்னர் நான்கும் தேய்ந்தன; பிரமன் முன் இருந்த காலை மேலும் மூன்று கலைகள் தேய்ந்தன; அவன் அனுப்பச்சென்று ஒரு கலை யோடு திருக்கயிலையில் சிவபிரான் திருமுன்பு இறைஞ்சினுன்.

மறைகளின் முதல்வா வோலம் வானவ ராவி காத்த
கறைகெழு மிடற்று யோலங் கண்ணுதற் பெருமா னேலம்
இறைவனே யோல மோல மென்னலு மிரங்கி நாதன்
பிறையையோர் கரத்தால் வாங்கிப் பிறழ்சடை முடிமேற் கொண்டான்.

பொ - ரை: மறைகளின் முதல்வனே அடைக்கலம்; தேவர்கள் உயிரைக் காத்த திருநீலகண்டனே அடைக்கலம்; நுதற்கண் உடைய பிரானே அடைக் கலம்; இறைவனே ஓலம் ஓலம்; என்று மதிநிற்க, சிவபிரான் இரக்கம்கொண்டு எஞ்சி நின்ற கலையை ஒருகையால் வாங்கித் தன் சடைமுடியிற்கொண்டான்.

அருகுறை மதிமேற் சாப மயனின்று பணிவி னுவ
முருகுறை பிலிற்றுங் கொன்றை மோலியான் முடித்த திங்கட்
கொருகுறை யிலதாய்த் தன்பா லுற்றதால் வளர்வு மந்நோய்
வருமுறை யதனுற் றேய்வு மதிதொறு மதிக்கு வைத்தான். 36

பொ - ரை: பக்கத்தில் நின்ற மதியின்மேல் நின்ற சாபம் சிவபிரான் ஆணையை நோக்கிப் புறத்தேநின்றது; கொன்றைமாலையைச் சூடிய சிவபிரான் முடித்த கலைக்கு அழிவு இல்லையாக, தன்னைச் சார்ந்தமையால் மதிக்கு வளர்ச்சியும், அச்சாபம் நீக்கற்பாலது அன்றாதலின், மாதந்தோறும் கலைக்குறைவும் உள்ளனவாகச் சிவபிரான் அமைத்தனன்.

இன்னவை யுணர்ந்து தக்கன் யான்புரி சாபந் தீர்ப்பான்
பின்னல்வே ணியனோ வென்னப் பிதற்றலும் புலக னோக்கிச்
சன்னிதி யடைந்தோற் காத்துன் சாபமும் நிறுவி நின்சீர்ப்
பொன்னனார் வாழ்வுங் காத்தான் புரையதோ வென்னத் தீர்ந்தான். 37

பொ - ரை: இவற்றை அறிந்து தக்கன் யான் கொடுத்த சாபத்தைச் சடைமுடிக் கடவுளோ தீர்ப்பவன் எனப் பேசினான்; அவன் மருகரில் ஒருவராகிய புலகர் தன் திருமுன்பு அணைந்தோரைக் காத்து உன் சாபமும் ஓரளவு இருக்கச் செய்து உன் அரிய மகளிர்தம் மங்கலவாழ்வும் காத்தான் சிவபிரான்; இது குற்றமா? எனத் தெளிவித்தபோது தக்கன் சினம் தணிந்தான்.

சாதனைத் தவமும் வீறுந் தக்கனார் மிக்க வாழ்வும்
மாதரா றறுபான் மூவ ராகிய மக்கட் பேறும்
ஓதுதல் புரிந்தா மிப்பா லுயர்புகழ்ச் சதியை யீன்று
நாதனுக் கீந்த வாறும் வேள்விசெய் நயப்புஞ் சொல்வாம். 38

பொ - ரை: சிறந்த முயற்சியாகிய தவம், அதனால் கிடைத்த பெருமை, அப்பெருமையோடு வாழ்ந்த தக்கன் வாழ்வு, அவன்பெற்ற அறுபத்துமூவராகிய மக்கட்பேறு என்பவை கூறப்பட்டன; இனி உயர்ந்த புகழ் உள்ள சதியை மகளாகப் பெற்றுச் சிவபிரானுக்கு மணஞ்செய்து கொடுத்தலும் வேள்விசெய்யும் மகிழ்ச்சியும்பற்றிக் கூறுவாம்.

இரசத சிகரி மீதி லிறைவர்பா லெம்பி ராட்டி
அரசுவீற் றிருக்கு மேல்வை யடிதொழு தகில மெல்லாம்
வரதநீ நடத்தும் பான்மை வகுத்தெனக் குணர்த்தா யென்றாள்
முரகரிக் கரிய நாதன் முறுவல்கூர்ந் தருளிச் செய்வான். 39

பொ - ரை: வெள்ளிமலையில் சிவபிரான்பக்கலில் பிராட்டி அமர்ந்திருக்கும் பொழுது, இறைவன் அடியைத்தொழுது, வரந்தரும் பெருமானே, உலகம் முழுவதையும் நீ எவ்வாறு நடாத்துகின்றாய் என, எனக்கு விளக்கி அருள்புரிய வேண்டும் என்று வேண்டினாள்; முரனுக்குப் பகையாகிய மாயோனுக்கு அரிய கடவுள் மகிழ்ந்து அருளிச்செய்வாராயினர்.

சகள நிட் களமே யாகிச் சகலமு மொடுக்கந் தோற்றம்
நிகழ்தரப் புரிவோ மென்று நிகழ்த்தலு நிமலை மேனி
அகளமா முனக்கே தென்றா ளருளுரு வாவ தென்றான்
புகலுநின் னருள்யா னெல்லா மெனதென்றாள் புவன மீன்றாள். 40

பொ - ரை: யாம் உருவும் அருவுமாகி நின்று எல்லாவற்றையும் தோற்ற ஒடுக்கம் அடையும்படி செய்வோம் என்றனர்; உருவு இல்லாத நுமக்குத் திரு

மேனி ஏது என்று தூயோள் வினவினுள்; நமது அருளே உரு ஆவது என விடை கூறினர்; நினது அருள் யானே ஆகலின், எல்லா உலகும் எனக்கு உரியதே என்ருள் உலக அன்னே.

அகிலமா முணர்வை நாத னம்பிகை யுரையான் மாற்ற
நிகிலமு மயங்கிப் பானு நிலாவொளி திறம்பி யேனைச்
சகமுளோர் சடமாய் வீழ்ந்தார் சதுமுகத் தயன்மா லானுன்
முகில்வண்ணன் பிரம மானுன் மூவுல கிருளா யிற்ருல். 41

பொ - ரை: அம்மையின் இவ்வுரை காரணமாகத் தான் எல்லாமாய் ஒன்றி நிலைப்பிக்கும் பெற்றியை இறைவன் மாற்றி நிற்ப; எல்லாம் மயக்கம் அடைந்து ஞாயிறும் மதியும் ஒளிமாறி உலகில் உள்ள உயிர்கள் தாம் அறியும் அறிவை இழந்தன; நான்முகன் மயங்கினுன்; மால் சூனியப்பொருள் ஆனுன்; மூவுலகும் இருண்டன.

யாவுமே மருளாய்க் கன்ம மிகந்துமா சுறலா லஞ்சிப்
பூவையென் மடமை யாவும் பொறுத்தியென் றடியில் வீழ்ந்தாள்
தேவிமெய்த் துளக்க நீங்கத் திருவுள மிரங்கி யண்ணல்
ஆவியாய் நிறைந்து நின்ரு னகிலமு மெழுந்த வன்றே. 42

பொ - ரை: இங்ஙனம் எல்லாப்பொருளும் தம் தம் ஆற்றல்குன்றிச் செயலற்று இருண்டமையால் அம்மை அஞ்சி 'என் அறியாமையைப் பொறுத்தருள்க' என்றுகூறி இறைவனை இறைஞ்சினுள்; அவன் அம்மையின் நடுக்கம் நீங்கும்படி அருள் செய்து மீளவும் உயிர்க்குயிராய் எப்பொருளோடும் கலந்து நின்ருன்; எல்லா உலகும் உணர்ந்து நிலவின.

உணர்ச்சிமீண் டிறைவ னல்க வுலகுயிர்த் தெழுந்த தம்மா
கணத்தினி லுகம்பல் கோடி கழிதலாற் கன்ம மாற்ருப்
புணர்ப்புறு தன்மேற் குற்றம் போக்கெனக் கவுரி போற்றத்
தணப்பினுற் பிறவியெய்தித் தவஞ்செய்து தவிர்ப்பா யென்ருன். 43

பொ - ரை: மீளவும் உணர்ச்சியைத் தருதலால் உலகு உயிர்ப்பு உடைய தாய்ச் செயற்படுவதாயிற்று; இது இறைவிக்கும் இறைவனுக்கும் கணமேயாயினும் மற்றையோர்க்குப் பலகோடியுகங்கள் ஆகிவிட்டன; அத்துணைக்காலமும் செய்யவேண்டிய வைதிக கன்மங்களைச் செய்யாமையை உறுவித்த குற்றம் தன் மேல் உள்ளதை நீக்கியருளவேண்டும் என அம்மை அப்பனை வேண்டிக்கொண்டாள்; இறைவன், அம்மை தன்னை நீங்கி வேருெரு பிறவி எய்தி அதில் தவஞ் செய்து போக்கிக்கொள்ளவேண்டும் என்ருன்.

வள்ளலைப் பிரிந்து தேவி வலம்புரி யெனக்கா ளிந்தி
வெள்ளமேன் மிதந்தும் பூமேல் விரதமுற் றுழன்றுந் தக்கன்
பிள்ளையா யூழி காலம் பெருந்தவ முயன்றும் பாவம்
தள்ளுதற் கரிய தானுற் சகத்துளோர்க் கெளிதோ வம்மா. 44

பொ - ரை: அம்மை இறைவனை நீங்கி யமுனை வெள்ளத்தில் வலம்புரிச் சங்காக மிதந்து தவஞ்செய்து பின்தக்கன் மகளாகிப் பல ஆண்டுகள் தவம்

புரிந்தும் பாவம் நீக்கிக்கொள்ளுதற்கு உரியதாக இல்லை; இங்ஙனமாயின், உலகத்தினர்க்கு அவ்வக்காலங்களிற் செய்ய வேண்டிய கன்மங்களைச்செய்யா திருத்தலால் வரும் பாவம் எளிதின் நீக்குதற்கு உரியதாகுமோ?

மணந்தனன் மறையோ னாகி மழுவலான் மாதை வேட்டுத்
தணந்தனன் மறைந்தா னன்றே தக்கனுங் கதமேற் கொண்டான்
அணங்குபின் வருந்தி நோற்ப வார்வமுற் றெய்தி நாதன்
கணந்தொழ விடைமேற் கொண்டு கயிலைமால் வரைமேற் போந்தான்.

பொ-ரை: அம்மை தக்கன் மகளாகித் தவம் புரிந்திருந்த காலத்தில், மறையோனாகி வந்து தக்கன் கொடுக்க அம்மையை மணந்து கொண்டான் இறைவன்; ஆயினும், திருமணச் சடங்குகள் முடியும் முன்பே அன்றே இறைவன் மறைந்தனன்; தக்கன் சிவபிரான்மீது பெரிதும் சினம் கொண்டான்; அம்மை பின்னுந் தவத்தைச்செய்ய, இறைவன் பூதகணங்கள் புடைசூழ விடைமேல்வந்து அம்மையைக்கொண்டு கயிலைக்குச் சென்றனன்.

தந்தைதா யுணரா வண்ணந் தன்மகட் கொடுசென் றானென்
றெந்தையார் தமையெண் ணும லிகழ்வது தொடுத்தான் றக்கன்
சிந்தையா லமர ருன்னிச் சிறுவிதிக் கிதனாற் றீமை
வந்திடு நமக்கு மேதம் வருமென வெருவிச் சூழ்ந்து. 46

பொ-ரை: தந்தைதாய் அறியாதபடி தன்மகளை இறைவன் இப்படிக் கொண்டுபோனது தவறென்று, இறைவனது பெருமையைக் கருதாது இகழத் தொடங்கினான்தக்கன்; தேவர்கள் இதனை உணர்ந்து, இதனால் தக்கனுக்குத் தீமைவரும், நமக்கும் துன்பம் நேரும் என அஞ்சிச் சூழ்ந்தனர்.

ஆதியார் வரத்தாற் பெற்ற வரசினா லவன்பால் யாமும்
போதரா திருத்தல் கூடா தாதலாற் புனல்சேர் வேணி
நாதர்பா லிவனை யுய்ப்ப நவையறு மென்று தேறி
மாதுநின் மருகற் காண்பான் வருகென வவனுஞ் சென்றான். 47

பொ-ரை: தக்கன் சிவபிரான் கொடுத்த வரத்தினால் அரசன் ஆக உள்ளான்; அதனால் நாம் அரசனிடம் செல்லாதிருத்தல் இயலாது; சிவனை இகழ் வோன் பக்கல் செல்வதும் தவறு; ஆதலால், இவனைச் சிவபிரான்பால் செல்லச் செய்தால் குற்றம் நீங்கும் என்று ஆய்ந்து தெளிந்தனர்; உன்மகளையும் மரு மகனாக உள்ள சிவபிரானையும் காணுதற்கு எம்முடன் வருக என்றனர்; அவனும் இசைந்து சென்றான்.

கவளமால் வரையைக் காத்தோன் கமலத்தோன் குலிசத் தாலே
துவளமால் வரைக ளீர்ந்தோன் சுரர்களுந் திரளாய் வெள்ளித்
தவளமால் வரையை நோக்கித் தக்கனோ டெழுந்து முக்கட்
பவளமால் வரையைக் காண்பான் பரிவினால் விரவிப் போந்தார். 48

பொ-ரை: கயேந்திரன் என்னும் யானையைக்காத்த மாயோன், பிரமன், வைரவேலால் மலைகளின் சிறகுகளை அரிந்த இந்திரன், மற்றைய தேவர்கள்

எல்லோரும் கூடி, தக்கனோடு வெள்ளிமலையை நோக்கி, சிவபிரானைக் காண்ப தற்குச் சென்றனர்.

போந்தனர் வானோர் வெள்ளிப் பொருப்பிறை செம்பொற் கோயில்
சார்ந்தனர் வாயில் பூதர் தடுத்தனர் விழியுந் தாளும்
சேந்தன னகங்கா ரத்தாற் சிறுவிதி நின்றான் செல்வி
காந்தனைப் பணிவா ரெல்லாங் கடைதடை யின்றிச் சென்றார். 49

பொ - ரை: சிவபிரான் எழுந்தருளும் செம்பொற்கோயில் வாயிலில் தேவர்கள் வந்தனர்; பூதகணங்கள் தக்கனை உள்ளே செல்லவிடாமல் தடுத்தனர்; அவன் அகங்காரத்தால் கோபங்கொண்டு கண் சிவந்தான். மற்று இறைவனைப் பணிவார் எல்லாரும் தடையின்றி உள்ளே சென்றனர்.

எரிமணி யிமைக்குங் கோயி லிமைப்பிலா விமையோர் புக்கு
வரிவிழி மடந்தை யோர்பான் மருவிவீற் றிருந்தான் றன்னை
அரியணை யணுகித் தாழ்ந்து பணிந்தன ருகாந்த வாரி
கிரிசனெம் பெருமான் வெள்ளிக் கிரிமுனர்த் தாழ்த லேய்ப்ப. 50

பொ - ரை: சுடர்மணிகள் கதிர்பரப்பும் திருக்கோயிலினுள் இமையவர்கள் புகுந்து அம்மை ஒருபால் மணந்த இறைவனை அணுகித் தாழ்ந்தனர்; கிரிசன் (வேதமாகிய மலையில் தங்குபவன்) என்னும் பெயருள்ள பெருமானது திருக் கயிலையை ஊழி வெள்ளம் வந்து பணிந்ததைப்போன்று இக்காட்சி இருந்தது.

சொல்லினு லரிக்கு மோலித் துளக்கினல் விதிக்கு மூரல்
வில்லினற் குலிசத் தாற்கு விழியினு லமரர்க் கின்பம்
நல்கினன் சமயந் தோறு நண்ணரிய கடவு ளாகி
அல்கலி னுயிர்கட் கெல்லா மளவினுக் களவாய் நிற்பான். 51

பொ - ரை: சிவபெருமான் அவரவர்க்குத் தக்கபடி, மாயோனுக்கு உரை நல்கியும், பிரமனுக்கு முடியை அசைத்தும், இந்திரனுக்கு புன்னகை ஒளிகாட்டி யும், ஏனைத்தேவர்க்குத் திருநோக்கம்கொடுத்தும் இன்பூட்டினன்; சமயந்தோறும் அதனதன் தெய்வமாக இருந்தும் குறைவில்லாத உயிர்கட்கு அளவுக்கு அள வாகியும் உள்ள பெருமான் இங்ஙனம் அருள்புரிந்தான்.

காப்பது கடனுக் கொண்ட கண்ணனை யினிது நோக்கி
மாப்புவ னங்கள் யாவும் வளவிதே யென்று னன்னோன்
பூப்பவன் றனக்கும் யாவும் புரக்குமென் றனக்கு மேதம்
நீப்பவ னுளை நீ யாக நிறைவலாற் குறைவே தென்றான். 52

பொ - ரை: மாயோனைநோக்கி உலகம் யாவும் வளப்பம் உடையனவாக உள்ளனவா என இறைவன் வினவினன்; மாயோன், படைக்கும் அயனுக்கும் காக்கும் எனக்கும் துன்பம் களையும் நீ இருத்தலால், எமக்கு நிறைவு உளதாவது அன்றிக் குறைவு ஏது என்றான்.

கரியுரி யாடை போர்த்த கண்ணுதற் கருணை மூர்த்தி
அரிபிர மாதி யோரை யவரவ ரதிகா ரத்துப்
புரிவன புரிந்து வாழ்மின் போதுமி னென்று வாக்கால்
விரிதரு குறிப்பா னேக்கால் விடைகொடுத் தருளப் போந்தார். 53

பொ - ரை: யானை உரிபோர்த்த இறைவன் அரி அயன் முதலியோரை, அவரவர்க்குக் கொடுத்துள்ள அதிகார வரம்பு கடவாமல் செய்ய வேண்டுவன வற்றைச் செய்து வாழுங்கள் என வெளிப்படையாகவும், குறிப்பாகவும் கூறியும் நோக்கியும் விடைதர வெளிப்போந்தனர்.

படையினர் வணங்கு நேமிப் படையின னாதி வானோர்
விடையினர் சரணம் போற்றி விடையினன் மீளுங் காறும்
கடையினர் முகனுங் கோயிற் கடையினி லமர்ந்தான் தக்கன்
புடையினர் பரவக் கொங்கைப் புடைப்பினர் கவரி யேந்த. 54

பொ - ரை: வேறு வேறு படைக்கலம் ஏந்தும் தேவர்கள் வணங்கும் சக்கரம் ஏந்திய திருமால் முதலியோர் ஆனேறு ஊரும் இறைவன் அடிபோற்றி விடைபெற்று மீளும் வரையும், இறுதியில் உள்ள வாயிலாகிய திருக்கோயிலின் கடையில் தக்கன், பக்கத்தில் இருந்தோர் பரவவும், பருத்த தனங்களையுடைய மாதர் கவரிவீசவும் இருந்தான்.

திருமலைக் கோயில் வாயில் செறிந்தசா ரதரை நோக்கி
மருகனை மகளைக் காண்பான் வருமெனைத் தடுத்தென் னேவல்
அரிதனை யயனை வானி லமரரை விடுத்தீர் நீரென்
பெருகடித் தொழும்ப ராயும் பேதமே புரிந்தீ ரென்றான். 55

பொ - ரை: திருமலைத் திருக்கோயில் வாயிலில் இருந்த பூதகணங்களை நோக்கிக் கூறுகின்றான் தக்கன்; மருகனையும், மகளையும் காணவந்த உரிமை யுடைய என்னை உள்ளே செல்லாதபடி தடுத்து எனக்கு ஏவல்புரிந்து ஒழுகும் மாயோன் முதலியோரை உள்ளே விடுத்தீர்கள்; என் அடித்தொழும்பராய் நீர் இருந்தும், இத்தகைய வேற்றுமையைச் செய்தீர்கள்.

வணங்குதி யாகிற் சேறி வள்ளல்பா லென்றார் பூதர்
அணங்கினை யவனுக் கீந்தே னடியர்போல் வணங்கே னென்னைக்
கணங்களீர் தடுத்த வாற்றாற் காண்மினுங் கடவுள் பூசை
தணந்திட வுலகம் யாவுந் தடுப்பனென் றுருத்துப் போனான். 56

பொ - ரை: பூதர்கள் நீ இறைவனை வணங்கச்செல்வாய் எனின், அவன் பாற் செல்க என்றனர்; தக்கன், என் மகளைக் கொடுத்துளேன் ஆதலால் சிவனை யான் வணங்கேன் என்றான்; கூட்டத்தினராகிய நீர் என்னைத் தடுத்தமையால், உலகம் முற்றும் நும் இறைவன் வழிபாட்டைச் செய்யாதபடி தடுப்பேன்; காண் மின் என்று கோபித்துத் திரும்பினான் தக்கன்.

அன்றுதொட் டயனை மாலை யமரர்கா வலனை மேருக்
குன்றுதொட் டவன்பொற் கோயில் குறுகுதிர் பணிதி ராகின்
மன்றுதொட் டரசும் வாழ்வு மாற்றுவ னெனலு மன்னோர்
நன்றுநின் பணியே நிற்போ நம்பிநீ முனியே லென்ருர். 57

பொ-ரை: அன்றுமுதல் அயன் மால் முதலியோரை நோக்கி மேருவை வளைத்த சிவன் கோயிலுட்சென்று வணங்குவீராயின், நும் நீதித்தலம் முதலாக அரசாட்சியினையும் இன்பவாழ்க்கையினையும் போக்குவன் என்று அச்சுறுத்தினுன்; அவர்கள், நல்லது, சிறந்தோய், நின் ஆணைவழி நிற்போம்; எம்மைக் கோபிக்க வேண்டாம் என்றனர்.

பூமனுங் கண்ணன் ருனும் பூமனும் புனிதத் தெய்வக்
காமனும் போய பின்னர்க் காமனு நெறிதீர் தக்கன்
சோமனை முடித்துத் தோலைச் சோமனென் றுடுத்தா னென்னை
மாமனென் றுணரான் ருனே மாமனென் றிருந்தா னென்று. 58

பொ-ரை: பிரமனும், மாயோனும், பூக்கள் நிலைபெறும் தெய்வத்தன்மையுள்ள கற்பகச் சோலைக்கு இறைவனும் இங்ஙனம் வழிமொழி கூறிச்சென்றனர்; சென்றபின், மக்களைக் காத்தற்கு உரிய மனு நெறியைக் கடந்த தக்கன் பிறையைச்சடையில் முடித்துத் தோலை உடையாகக்கொள்ளும் சிவன் என்னைத் தன் மாமன் என எண்ணுதுதானே சிறந்த மன்னன் என இருந்தான் என்று எண்ணி.

தீர்த்தனைப் பரவு வாரைத் தீர்த்தனன் தீராக் குற்றம்
போர்த்தனன் பிரமன் யாகம் புகுந்தனன் பரமன் பாகம்
நீத்தன னந்தி சாப நிறுவிட வேள்விக் குண்டம்
தூர்த்தன னகந்தை செல்வத் துரவினைத் தூர்ப்ப தோரான். 59

பொ-ரை: தூயமுதல்வனை ஏத்துவோரை இல்லை ஆக்கினன் தக்கன்; அதனுல் உய்தியில் குற்றம் உடையவன் ஆயினன்; பிரமன் செய்ய எடுத்த வேள்வியிற் சென்று சிவபிரானுக்கு உரிய அவியைக் கொடாதபடி தடுத்தனன்; அதனுல், திருநந்திதேவர் சிவனை நீக்கி வேள்விசெய்வார் தலை அறுக எனச் சாபம் இட்டமையால், வேள்விக்குழியை நெருப்பிடாதபடி அடைத்துவிட்டான் தக்கன்; தன் அகந்தை செல்வமாகிய ஊற்றை உடைய கிணற்றை (துரவு) அடைத்துப் பாழ் ஆக்குவதை ஆராயவில்லை அவன்.

திருநந்தி சாப மஞ்சிச் செய்கலர் யாரும் வேள்வி
தருமமாந் துணையை நீங்கித் தவித்தன வுலக மெல்லாம்
வெருவுபே ரவையை நோக்கி வேள்வியான் புரிவே னென்ருன்
எரிபெருஞ் சாபத் தீமுன் னெதிரும்வைத் தூறு போல்வான். 60

பொ-ரை: திருநந்திதேவர் சாபத்திற்கு அஞ்சி யாரும் வேள்வி செய்யவில்லை; உலகில் உள்ள உயிர்கள் அறமாகிய உறுதுணையை நீங்கினமையால் துன்புற்றன; அஞ்சும் தன் பேரவையில் உள்ளாரை நோக்கி, யானேவேள்வியைச் செய்து முன்மாதிரி காட்டுவேன் என்ருன்; தக்கன் திருநந்தி தேவருடைய சாபமாகிய பொங்கி எரியும் தீமுன் வைக்கோல்திரளை ஒத்தான்.

தெருண்டவா னவரைக் கூவிச் செப்புவான் கயிலை யாற்கு
மருண்டபுன் காடு நாடு மலர்க்கையி லெடுப்ப தோடு
சுருண்டபூங் குழலார் வீடு தொறும்பலிக் குழல்வான் கண்டம்
இருண்டது வயிறுற் றும லெழுகடல் விடமுண் டன்றே. 61

பொ - ரை: தக்கன் தெளிவுள்ள தேவர்களை அழைத்து அவர்களுக்குப் பின்வருமாறு சொன்னான்: கயிலைக்குன்றை இடமாகக்கொண்ட சிவனுக்கு நாடாவது மயக்கத்தைத் தரும் புல்லிய சுடுகாடு; கையில் எடுப்பது பலிபாத்திரம்; மகளிர் தனித்து வாழும் வீடுதோறும் பிச்சை எடுக்கச் செல்வது அவன் செயல்; கழுத்து கறுப்புநிறம் பெற்றதற்குக் காரணம் அவன் வயிற்றுப்பசி தாங்காமல் கடலில் எழுந்த நஞ்சை உண்டதே.

விதியெனு மெனது தாதை விதியிலாற் கிரங்கி யென்பால்
சதியெனு மகளை யன்னான் றனக்கரு ளென்ற வாற்றல்
பதியென வவனுக் கீந்தேன் பாக்கிய மவளாற் பெற்றான்
மதியினு மதியா னென்னை மாதுல னெனவு மோரான். 62

பொ - ரை: என்னிடத்துத் தோன்றிய சதி என்னும் மகளை என் தந்தையாகிய படைப்போன் செல்வம் (விதி) இல்லாத சிவனுக்கு இரங்கி அவனுக்கு மணஞ்செய்து கொடு என்று கூறினமையால், அவனைக் காப்பாற்றும் கணவன் என எண்ணிக்கொடுத்தேன்; அவளால் எல்லாப்பேறுகளையும் பெற்றான்; ஆயினும் என்னைத் தன் அறிவில் மதிப்பது இல்லை; யான் மாமன் என்பதையும் கருதுவதில்லை.

தாயிலான் றமரு மில்லான் றந்தையு மில்லான் காடு
கோயிலா னூரு மில்லான் குலமில்லான் குடியு மில்லான்
தீயிலா டரங்க மாகத் திக்கெலா முடைதொட் டாடும்
பேயிலா திருந்தா லுண்டோ பேரிலான் றனக்கோர் சுற்றம். 63

பொ - ரை: தாயும் சுற்றமும் தந்தையும் இல்லாதவன்; காடே கோயிலாகக் கொண்டவன்; ஊர், குலம், குடி என்பவை இல்லாதவன்; ஈமத்தீயை ஆடும் அரங்கு எனக்கொண்டு திக்கெலாம் உடையா உடுத்து ஆடுவான்; பெயரே இல்லாத இவனுக்குப் பேய்கள் இல்லை எனின் சுற்றம் ஏது?

கொற்றவ னல்லன் வேணிக் கோலத்தாற் குருவி லாதான்
கற்றவ னல்லன் மாதர் கற்பினை யழித்த லாலே
நற்றவ னல்ல னீம நடத்தினு லொழுக்க மில்லான்
மற்றவன் றனையே சூழ்ந்து வணங்குதிர் வானோர் நீவிர். 64

பொ - ரை: சடைமுடியே உடைமையால் சிவன் அரசன் அல்லன்; தனக்கு ஓர் குரு இல்லாமையால் கற்றவன் அல்லன்; தாருவனப் பெண்கள் கற்பை அழித்தமையால் தவத்தோனும் அல்லன்; சுடுகாட்டில் ஆடுதலால் ஒழுக்கம் கடைபிடிக்காதவன்; மேலுலகில் வாழும் நீங்கள் இத்தகையோனையே இதுவரை சூழ்ந்து நின்று வணங்கினீர்கள்.

பொன்மையா ரிருவர்க் காக மற்றுள புதல்வி மாரை
அன்மையா யலேத்தான் றன்ஃன யலேத்தனன் சாபத் தீயால்
மென்மைசேர் மகத்தீ யொன்று வேட்டினிச் சதியை வேட்டான்
வன்மையும் பணியுந் தேவர் மடமையுந் தவிர்ப்பே னென்ருன். 65

பொ-ரை: அழகுள்ள கார்த்திகை உரோகணி என்பார்க்காக என்னுடைய மற்றைய இருபத்தைந்து புதல்வியரைத் துன்புறுத்திய மதியை என் சாபக் கொடுமையால் ஒறுத்தேன்; எளிதிற் செய்யக்கூடிய வேள்வித் தீயை யானே மூட்டி என் மகள் சதியை மணந்த சிவஃனயும் ஒறுக்குமாற்ருல், அவன் வன்மையிஃனயும் அவஃன வணங்கும் தேவர்களது அறியாமையிஃனயும் தடுப்பேன் என்றனன் தக்கன்.

என்றன னிருந்தார் தும்ம வெழுந்தன னமர மாதர்
பொன்றுணைக் கவரி யேந்தப் புள்ளிடை தட்பப் போகிச்
சென்றனன் கங்கை யோர்பாற் றிசைமுக னாதி தேவர்
மன்றனன் மகளி ரோடும் வருகென விடுத்தா னேலே. 66

பொ-ரை: இங்ஙனம் கூறியபோது அங்கிருந்தவர்கள் தும்மினர்கள்; அவன் எழுந்து புறப்பட்டான்; தேவமகளிர் இருபாலும் பொற்கவரி வீச, எதிரே பறவைகள் தீச்சகுனங்காட்டிப் பறக்க, கங்கையாற்றின் ஓர் பக்கம் சென்ருன்; அங்கிருந்து, நான்முகன் முதலியோர்க்கு வாழ்க்கைத் துணைவியரோடு தான் செய்யும் வேள்விக்கு வரும்படி ஓலே எழுதி அனுப்பினன்.

கனகல வனத்துத் தெய்வக் கம்மிய னிறைஞ்சிப் புக்கு
புஃனமணி வாயின் ஞாயில் பொன்னெடுஞ் சிகர மன்றம்
சினகர மணங்கார் கோட்ட முனிவராச் சிரமந் தெற்றி
அனமடஞ் சாலே சோலே யறப்புறம் வேதி யாதி. 67

பொ-ரை: தக்கன் ஆஃணயால், தேவதச்சன் கனகலவனம் என்னும் இடத்து அழகிய வாயில், மதில் உறுப்பு, உயரிய சிகரம், மண்டபம், கோயில், மேகத்தைக் கலக்கும் பெருங்கோயில், முனிவர் இருக்கை, திண்ணே, உணவுதரும் மடம், சாலே, சோலே, அறஞ்செய்யும் இடம், மேடை முதலியவை உள்ளதாக வேள்விச் சாலேயை அமைத்தான்.

ஏறுயோ சஃனயோ ரைஞ்ஞூற் றிரட்டியின் யாக சாலே
நூறுயோ சனவி சால நுவலரும் வேள்விக் குண்டம்
கூறுயோ சஃனயான் மேருக் குன்றமு மலேயா நிற்ப
வீறுசேர் கடலு மேங்க விண்ணவர் வியப்பச் செய்தான். 68

பொ-ரை: வேள்விச்சாலேயின் நீள அகலம் ஆயிரம்யோசஃன; வேள்விக் குழிகள் நூறு யோசஃன அளவுகள் உடையவை; தக்கன் கூறிய யோசஃனயைக் கொண்டு, தேவர் வியப்ப, மேருவும் கடலும் சமன் அல்ல எனும்படி மேற்கூறிய வேள்விச்சாலே அமைக்கப்பெற்றது.

### வேறு

இந்தமகச் சாலையுழித் தக்கனு ரோலைவழி யெழுந்து போந்தார்
கந்தருவர் கின்னரர்தா னவரியக்கர் கிம்புருடர் கருடர் போகர்
அந்தரசா ரியரமரர் வித்தியா தரர்பூத ரரக்கர் மாந்தர்
முந்துதா ராகணத்தர் பாதாளர் வேதாளர் முனிவர் சித்தர். 69

பொ - ரை: இந்த யாகசாலையில் தக்கன் விடுத்த ஓலையின்படி தேவர் முதலிய யாவரும் வந்தனர்.

பன்னிருவ ராதவர்கள் பதினொருவ ருருத்திரர்மேற் பதின்மர் தேவர்
மன்னுநவ மணிமவுலி மனுவேந்த ரெண்டிசையின் மகுட வேந்தர்
நன்னதிக ளோரேழு பொழுதாறு தருக்களைந்து நான்கு வேதம்
முன்னருல கொருமூன்று மிருமருங்கு நிறைந்தனரான் முகுர்த்த
[மொன்றில். 70

பொ - ரை: ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மரும் மருத்துக்கள் இருவருமாகிய பதின்மர்களாகிய தேவர்கள், முடிசூடிய மனுவேந்தர், திசைகாப்பாளர், ஆறுகளின் தெய்வங்கள் எழுவர், பொழுதின் தெய்வம் அறுவர், ஐந்தருக்கள், வேதம் நான்கு என மூவுலகினரும் ஒரு முகூர்த்த நேரத்தில் யாகசாலையின் இருமருங்கும் நிறைந்தனர்.

பொன்னுலகி லரம்பையர்கள் பொருப்பிலுறை யரமகளிர் புயங்க நாட்டுக்
கன்னியர்க ளியக்ககுலப் பூவையர்விஞ் சையர்மகளிர் ககுப வேந்தர்
பன்னியர்கள் கந்தருவப் பாவையர்க ளுடுமகளிர் படிவ மாதர்
இன்னகைமே னகையரம்பை யுருப்பசிதி லோத்தமைமே லிந்தி ராணி.

பொ - ரை: சுவர்க்க உலகின் அரம்பையர், மலையரமகளிர், நாககன்னியர்கள், இயக்ககுலமகளிர், வித்தியாதர மகளிர், திசைக்காவலர்தம் தேவியர், கந்தருவப்பெண்டிர், விண்மீன்மகளிர், தவக்கோலப்பெண்டிர், மேனகைமுதலிய நால்வர், இந்திராணி என்போர் வந்து கூடினர்.

### வேறு

வந்துகுழு மினர்மகவான் முதலோ ராக
வானவர்கு ழாத்துடன்பால் வாரி மீதில்
உந்திபூத் தவனிடம்போய்த் தக்கன் வேண்டி
யுயர்மகநீ காத்தருளென் றுரைப்ப மாமால்
முந்தவெழுந் தொருகருடத் துரங்க மேறி
முளரிமலர்த் திருவினொடும் வந்தான் பூமேல்
அந்தணனோர் புறத்தணைந்தா னதனைக் காண
வறுபத்து நாற்கலையோ டொருமான் வந்தாள். 72

பொ - ரை: இந்திரன் முதலிய தேவர்குழு வந்தவுடன், தக்கன் அக்குழுவோடு பாற்கடலுக்குச்சென்று மாயோனைத் தான் செய்யத்தொடங்கும் மகத்தைக்

காத்தருளவேண்டும் எனச் செப்பினுன்; மாயோனும் கருட ஊர்தியில் திருமக ளுடன் யாகசாலைக்கு வந்தான்; பிரமனும் ஒருபுறம் வந்தான்; அது தெரிந்து கலை மகள் அறுபத்துநான்கு கலை (ஆண் மான்) கள் சூழ வந்தாள்.

### வேறு

புக்கநாட் செல்வம் போலும் புகலுண்டோ புகலா முன்னர்த்
தக்கனுர் வேள்விச் சாலை தன்னிலெவ் வுலகத் தோரும்
தொக்கனர் புவன வேந்தர் தொகையிலீ சான னல்லார்
மக்களிற் சதியே யல்லார் மருகரிற் பரம னல்லார். 73

பொ-ரை: செல்வத்தைப்போல அழைக்குஞ்சொல் (புகல்) உலகத்தில் உண்டோ? இல்லை. தக்கன் யாகசாலைக்கு வந்து புகுந்தநாளில், அழைக்காத முன்னரே அவன் வேள்விச்சாலையில் எவ்வுலகினரும் வந்து கூடிவிட்டனர்; புவனபதிகளில் ஈசானரும், தக்கன் மருகரில் பரமனும், மக்களில் சதியும் தவிர மற்ற அனைவரும் அங்கு வந்துவிட்டனர்.

மவுனரிற் பராச ரன்சீர் வசிட்டனத் திரித தீசி
சுவனுயர் கும்ப யோனி துருவாசன் பிருகுத் துங்கன்
இவர்களெம் மானை யன்றி யெய்தில ரிருந்தார் மற்றைத்
தவமுயன் முனிவர் யாருஞ் சார் ந்தனர் யாக சாலை. 74

பொ-ரை: மோனிகளில் பராசரர், வசிட்டர், அத்திரி, ததீசி, சுவர், அகத்தியர், துருவாசர், பிருகு, உத்துங்கன் என்னும் இவர்கள் சிவபிரான் திருவருளுக்கு மாறுபாடாதலின் சென்றிலர்; மற்றைய தவமுனிவர் யாரும் யாக சாலைக்கு வந்திருந்தனர்.

வி-கு: சுவன் - தேவ இருடி, நாரதன்.

## வேள்வித்தொடக்கம்

பதுமநா பனுக்கு மேனைப் பண்ணவர் தமக்குஞ் செய்யும்
முதன்மையாஞ் சிறப்புச் செய்து முறைமுறை வரிசை யாவும்
புதல்வியர் மருகர்க் காற்றிப் பொருவரு நெடுங்கூ டத்து
மதகயம் புகுந்தா லென்ன மகப்பெருஞ் சாலை புக்கான். 75

பொ-ரை: மாயோனுக்கும் ஏனைய தேவர்க்கும் முதற்கண் செய்ய வேண்டிய சிறப்புக்களைச் செய்து, முறையான சீர்வரிசைகளைத் தன் புதல்வியர்க் கும் மருகர்க்கும் செய்து, ஒப்பற்ற நீண்ட கூடத்தில்வரும் மதங்கொண்ட யானை போலத் தக்கன் யாகசாலையினுள் நுழைந்தான்.

ஆகவ னீயங் காரு கபத்திய ந்தென்பா லங்கி
மாகனற் கொழுந்து வீச வடவரைத் தறிவா னேங்கப்
பாகமாங் காம தேனு பரந்தவி சொரியா நிற்ப
யாகமார் பொருள்கள் யாவு மீந்திடப் பாரி சாதம். 76

பொ - ரை: ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணுங்கி என்னும் மூன்றும் பெருங்கொழுந்து விட்டு ஓங்கின; மேருபோல யூபத்தம்பம் ஆகாயத்தை அளாவி நின்றது; காமதேனு பாகமாகிய அவிகளைச் சொரிந்துகொண்டிருந்தது; பாரி சாதம் வேள்விக்குரிய பொருள்களைக் கொடுத்துக்கொண்டிருந்தது.

திரவியங் குன்று குன்ருத் தேவர்கள் குவிப்ப வானோர்
புரவலன் பணிப்ப மோனைப் புங்கவர் திசைகள் காப்ப
இரதமார் வருக்க மெல்லா மிந்துவே கொடுப்ப வேனை
மருகரோ டதிதி யாதி மக்கள்கைக் கரும மாற்ற. 77

பொ - ரை: தேவர்கள் வேள்விப்பொருள்களை இனம் பிரித்து மலை மலை களாகக் குவித்தனர்; இந்திரன் பணிகேட்டு அவன் முதலாக உள்ள தேவர்கள் எண் திசைகளைக் காத்தனர்; இரசம் உள்ள பொருள்களை (பழம் முதலியவற்றை) வெண்ணிலாவே எடுத்துக் கொடுக்க, ஏனைய மருகரும் அதிதி முதலிய மகளிரும் சிறு செயல்களைச் செய்தார்கள்.

இருபுறத் தமர மாதர் கோடிக மேந்திச் சூழத்
திருநுத லிந்தி ராணி செயும்பணிக் குறைக டீர்ப்பக்
கருணையா லுலக மெல்லாங் காப்பவன் வேள்வி காப்பப்
பொருவரும் யாகத் தெய்வம் பொலிவுற நடிப்ப மாதோ. 78

பொ - ரை: இருபக்கங்களிலும் தேவமாதர் பூந்தட்டு ஏந்தி நின்றனர்; இந்திராணி மேற்பார்வைசெய்து நேரும் குறைகளைத் தீர்த்தாள்; உலகம் காக்கும் திருமால் வேள்வியைக் காத்தார்; ஒப்பற்ற எச்சன் (வேள்வித்தெய்வம்)விளக்கம் பொருந்தும் மகிழ்ச்சிக் கூத்து ஆடினன்.

தருமனே குரவ னுகச் சதுர்முகப் பிரம னீன்ற
பிரமரி லொருவன் மேவிப் பிரமதா னத்தில் வைகக்
கருநிறக் கலைத்தோல் போர்த்துக் கைத்தலம் வெண்ணெய் பூசித்
திருமகப் பொலிவு பூண்டு சிறுவிதி யிருந்தான் மன்னே. 79

பொ - ரை: எமதருமன் வேள்வி ஆசான் ஆக, பிரமன் மைந்தரில் ஒருவன் பிரமன் இடத்தில் அமர்ந்தான்; இங்ஙனம் இவர்கள் இருப்ப, தக்கன் கரும்புள்ளிமான் தோல் போர்த்துக்கொண்டு, கையில் நெய்யைப் பூசிக் கொண்டு வேள்வி செய்வோனுக்கு உரிய கோலம் உடையவனுய் இருந்தான்.

மடுத்துச்சொல் லுரையா வாணி மறையுரைப் பவளாம் யாவும்
எடுத்துக்கை நீட்டு வாளா மெழிற்பெருந் திருவாஞ் செல்வி
விடுத்துக்கைம் மறுப்பா ருண்டோ தக்கனர் வேள்விச் செல்வம்
கொடுக்கக்கை சடைப்பா ரில்லை கொள்ளக்கை சடைப்பா ரன்றி. 80

பொ - ரை: சொல்லைத் தடுத்துப் பேசாத வாணி வேத மொழிகளை உரையாநிற்க, திருமகள் எவற்றையும் எடுத்துக் கொடுப்பவளாக இருந்தாள்; ஆதலால், கொடுத்ததை வீழ்த்தி வேண்டா என்பார் ஆங்கு இல்லை; தக்கன் செல்வத்தைக் கொள்ளுதற்குப் பின்வாங்குவார் இருந்தனர் அன்றி, கொடுத் தற்குப் பிற்பட்டார் அங்கு இல்லை.

இன்னவை நிகழு மேல்வை யீசனெம் பெருமா னன்றிப்
பன்னரு மகத்தின் சாலை படருவான் மடமை நோக்கிச்
செந்நெறி விளைப்பா னுன்னிச் சென்றனர் முனிக்கு ழாத்துத்
துன்னுசீர்ச் சுவனுத் துங்கன் றுருவாசன் றதீசி மாதோ. 81

பொ - ரை: இவை போன்ற செயல்கள் வேள்விச்சாலையில் நிகழும் போது, சிவபிரானை நீக்கிச் சொல்லுதற்கு அரிய வேள்விச் சாலையை நடத்தும் தக்கனது அறியாமையைக் கருதி உலகத்திற்கு நன்னெறியைக் காட்டும் நிமித்தம் முனிவர்களுக்குள் சுவன், உத்துங்கன், துருவாசன், ததீசி என்போர் ஆண்டுச் சென்றனர்.

சிறுவிதி முகத்தை நோக்கிச் செப்புவான் றதீசி யார்க்கும்
உறுதியே யறங்கள் செய்த லுயர்பல வறத்தின் மேன்மை
பெறுகதி மகமே மிக்காம் பிறங்குசீர் மகத்தி லுன்போல்
மறுவறு முயற்சி வல்லார் வழங்குமூ வுலகிற் காணேம். 82

பொ - ரை: தக்கனை நோக்கித் ததீசி கூறுகின்றார்: அறம் செய்தல் யார்க்கும் நல்லது; அறங்கள் பலவற்றுள்ளும் மேன்மையான நடையுள்ள வேள்வி மிக்கது ஆகும்; உன்னைப்போல வேள்விச்செயலில் குற்றம் அற முயல்வாரை மூவுலகினும் யாம் கண்டதில்லை.

நிச்சமார் தருவும் வானோர் நிருபனு மேவல் கேட்பப்
பச்சைமால் வேள்வி காப்பப் பண்ணவர் விண்ணோ ரேத்த
விச்சையா மகஞ்செய் கின்றாய் விதிமகன் விதிநீ செய்யும்
எச்சமென் பதற்கோ ரெச்ச மீசனில் லாத தென்றான். 83

பொ - ரை: என்றும் உள்ள கற்பக தருவும் இந்திரனும் பணிகள்செய்ய, மாயோன் வேள்வியைக் காப்போன் ஆக, முனிவரும்தேவரும் புகழாநிற்ப, அறிவோடு செய்தற்கு உரிய வேள்வியைச் செய்கின்றாய் பிரமன் மகன் இளம் பிரமனாகிய நீ; இங்ஙனம் நீ செய்யும் இவ்வேள்விக்கு ஈசன் இல்லாதிருப்பது ஒரு குறை என்றனன் ததீசி.

தேசமர் முனிவன் கூறச் சிறுவிதி யொருவர்க் கிங்கே
ஈசர்பன் னொருவ ருள்ளா ரென்றன னிவரோ நேர்வார்
ஓசைவிந் துவுமா மூல வுருத்திரர்க் கென்றான் யோகி
ஆசறு மனத்தன் மீட்டு முருத்திர ரவரே யென்றான். 84

பொ - ரை: தக்கன் ஓர் ஈசனுக்குப் பதிலாகப் பதினோர் ஈசர் இங்கு உளரே என மறுத்துரைத்தான்; நாதவிந்து வடிவம் ஆகும் காரண ருத்திரருக்கு இப்பதினோர் உருத்திரர் எங்ஙனம் சமம் ஆவர் என வினவினன் ததீசி; குற்றம் நீங்காத மனத்தனாகிய தக்கன் இவர்களே உருத்திரர்கள் என்றான்.

உமையொரு பாகர்க் கோது முருத்திர நாமஞ் சொல்வார்
தமதுருப் பெற்றோ ரங்கி சம்புவின் கணத்தோர்க் கெல்லாம்
சுமையுறு தாது வைந்தும் பொன்னெனிற் சுவண மாமோ
அமரரோ புலவ ரென்றா லாடினோர் பாடி னோரும். 85

பொ - ரை: உமையோடு உடனாகிய சிவபிரானுக்கு உரிய உருத்திரன் (துன்பத்தினின்றும் கடப்பிப்போன்) என்னும் பெயரை அவன் உருப்பெற்றோர்க்கும், அக்கினிக்கும், சிவகணத்தோர்க்கும் பெரியோர்கள் உபசார வழக்கால் கூறுவர்; ஓசையையுடைய மூலப்பொருள் இரும்பு, செம்பு, ஈயம், வெள்ளி, பொன் என்னும் ஐந்தனுக்கும் பொன் என்னும் பெயர் பொதுவாயினும் செம்பொன்னுக்கு ஏனையவை சமமாதல் உண்டோ? அமரர், கூத்தர், பாடுவோர் மூவரும் புலவர் எனப்படினும் கூத்தரும் பாடுவோரும் அப்பெயர் ஒற்றுமை பற்றி அமரர் ஆகிவிட முடியுமா?

கடைநடு முதலி லாமுக் கண்ணனே கடவு ளென்று
சடைமுடித் தலைவன் கூறச் சாற்றுவான் முனிந்து தக்கன்
இடையினிற் சடையின் மாத ரிருவர்வைத் தவனே யோகி
விடையினைப் பரியா வேறி வீதிபோ மவனே வீசன். 86

பொ - ரை: இறுதி நடு முதல் இல்லாத முக்கண்ணன் ஒருவனே கடவுள் எனப்படுவோன் எனத் ததீசி கூறத் தக்கன் கோபித்துக் கூறத்தொடங்கினன்; இடுப்பிலும் சடையிலும் இருமாதரை வைத்திருப்பவன் யோகி ஆவனோ? விடையை ஊர்தியாகக் கொண்டு தெருக்களில் சென்றவனோ ஈசன்?

நஞ்சினை யமுதுண் பானோ நாணிலா நக்கன் றானோ
குஞ்சிதப் பவுரி யாடுங் கூத்தனோ தீர்த்த னவான்
வெஞ்சினப் பன்றிக் கோடு மீன்விழி யாமை யோடு
கஞ்சுகி பிறவும் பூணுங் கருத்தனோ கருத்த னவான். 87

பொ - ரை: நஞ்சைச் சோறாக உண்டவன், நாணுதல் இல்லாத நிருவாணி, காலை வளைத்துக் கூத்தாடும் விளையாட்டுக் காரன் — இவனோ தூயோன்? பன்றியின் எயிறு, மீனின் கண்ணெலும்பு, ஆமையின் ஓடு, பாம்பு, இவை போன்றவற்றை அணியும் கருத்து உடையவன் எப்படி உலகத்திற்குக் கருத்தா (ஆக்கியோன்) ஆவன்?

கழிதலை மாலை யானே கையிலோ டேந்து வானே
சுழிபுலி கரித்தோ லாடை சுற்றிவெண் ணீறு பூசி
அழிதரு மயான நந் தன்னி லலகையோ டாடு வானே
விழியில்வேற் றுருவு காட்டும் விகிர்தனே விமல னென்றான். 88

பொ - ரை: தசைகழிந்த தலை மாலை அணிவோன், தலையோட்டை மகிழ்ந்து கையில் ஏந்துவோன், கொடிய புலி யானைத்தோலை ஆடையாகச் சுற்றிச் சாம்பற்பூச்சு உடையவன், யாவரும் அழியும் இடனாகிய மயானத்தில் பேய்களோடு ஆடுவான், கண்ணில் பிறர் போல் அன்றி வேறுபாட்டை உடைய விகிர்தன் — இத்தகையனோ பாசம் அற்ற விமலன்? என இவ்வாறு ஈசனை இகழ்ந்து கூறினன் தக்கன்.

முறையிலான் முனிந்து கூற முனிவிலான் மொழிவான் மூல
மறையெலாங் கற்றுங் கல்லா மனத்தராய் மதத்தா லுன்போல்
இறைவனை யெண்ணா ராகி யிருந்தவம் புரிந்தார் மன்னோ
கறைகெழு மனத்தார் தாரு காவன முனிவர் முன்னாள். 89

பொ - ரை : முறையின் நீங்கிய தக்கன் இவ்வாறு கோபத்துடன் கூற, கோபத்தைக்கடந்த ததீசி முனிவர் கூறுகிருர்: தாருகாவனத்து முனிவர் முன்ஞெருகாலத்தில் மாசுசேர் மனத்தர் ஆகி, மறைகளைக்கற்றுணர்ந்தும் உன்போல் செருக்குக் காரணமாக அறிவுவிளக்கம் இல்லாதவராய், இறைவனைச் சிறிதும் நினையாதவராகித் தவம்புரிந்தார்.

ஈங்கிவர் தவத்தை மாய்ப்ப மாயனை யேவி யெம்மான்
தீங்கனி மொழியார்க் கெல்லா ந் திகம்பர ஞகிச் சென்ருன்
ஆங்கவர் மருங்கு நெஞ்சு மாசையே யுடைய ராகி
நீங்கருந் தவமுங் கற்பு நிறைகளுந் தோற்ரு ரன்றே. 90

பொ - ரை : அவர்கள் தவத்தை அழிக்க மாயோனைமகடூஉ ஆகச்செல்லச் செய்து தான் அவர்தம் பத்தினிமார் இருந்த இடத்திற்கு நிருவாணியாகச் சென்ருன் இறைவன்; அப்பெண்டிரின் இடை திசையையே உடையாகக்கொண்டது; நெஞ்சு காதலையே உடையதாயிற்று. அவர்கள் நீங்குதற்கு அரிய தவம், கற்பு, மனத்தை நிறுத்துதல் என்னும் செயல்களை இழந்தார்கள்.

அவ்வவ ராபிசார முயன்மிதித் தாடி வேங்கை
வெளவுரி யுடுத்து நாக மிலைந்துகூர் மழுவுந் தீயும்
நவ்வியுந் துடியு மேந்தி நகுதலை முடித்துப் பூதம்
வெவ்வடர் படையா நாதன் விரதர்வீ றடக்கி யாண்டான். 91

பொ - ரை : அம்முனிவர்கள் சிவபிரானைக்கொல்லுதற்குச் செய்த அபிசார வேள்வியினின்றும் எழுந்த முயலகனை மிதித்து ஆடினுன் இறைவன்; புலியினின்றும் கொண்ட தோலை உடுத்தான்; நாகங்களை அணிகலன்களாகக்கொண்டான்; கூரிய மழு, தீ, மான், உடுக்கை என்பவற்றைக் கைகளில் ஏந்தினுன்; சிரிக்கும் வெண்டலையை முடித்துக்கொண்டான்; வெம்மையுடன் அடர்த்துவந்த பூதங்களைத் தனக்கு உரிய படைகளாகக் கொண்டான்; இங்ஙனம் அவ்விரதியர் மேம்பாட்டை அடக்கி அவர்களை ஆட்கொண்டான் முதல்வன். மழு = கோடரி.

உலகமீன் றருளப் பெண்பா லுகந்தனன் மலர்ந்த நாட்டம்
திலகவா ணுதலாள் பொத்தச் செங்கைவேர் வெழுந்த வாரி
புலமெலா மழித்தல் கண்டு புவனமூன் ருரு வுய்த்தான்
பலநதிப் பரப்பி லொன்றே பகிரதற் கேந்து கங்கை. 92

பொ - ரை : உலகத்தைப் படைத்துக் காத்தற்பொருட்டு முதல்வன் தன் இச்சை, சத்திய சங்கற்பம் எனப்படும் அம்மையை ஒரு பக்கத்திற்கொண்டான்; அவ்வம்மை விளையாட்டாக ஒரு காலத்தில் இறைவன் விழிகளை இருகைகளாலும் பின்னிருந்து மூட உலகம் இருண்டது; அதனல் அஞ்சி எடுத்த அம்மையின் கைகள் வியர்த்து, அந்நீர் பெருக்கெடுத்து உலகெலாம் அழித்தல் கண்டு, அவற்றை நெறிப் படுத்தி முப்புவனங்களிலும் ஆறுகளாகச் செல்லச்செய்தான்; இவ்வாறு வந்த பல ஆறுகளில் ஒன்றே பகீரதன் பொருட்டுச் சடையில் ஏந்திய கங்கை.

வீறுநீ ருகாந்தம் பொங்கி யெரிதெற வெளியாங் காலம்
ஈறிலா மையினு லீச னிவ்வெளி மயானத் தந்த
நீறணிந் தாடல் செய்வா னின்மலை யொருத்தி காண
ஊறிலாத் தருமஞ் சேவா யுகந்தொறு மொருதா டுக்கும். 93

பொ - ரை: ஊழி இறுதியில் பெருகி எழும் வெள்ளமும், பின் எழும் ஊழித் தீயும் உலகை அழித்தலாலே எங்கும் பெருவெளியே ஆகும்; அக்காலத்தில், சிவன் ஒருவனே ஈறு இலாதானுய் எஞ்சிநிற்போன்; ஆதலால், அவ்வெளி யாகிய மயானத்தில், காரிய'உலகு வெந்துவந்த பொடியாகிய நீற்றை அணிந்து, அவன் அருள் உருவமாக உள்ள அம்மை ஒருத்தியே காணும்படி திருக்கூத்து இயற்றுவான்; இறைவன் ஆணையால் அழியா வரம்பெறும் அறம் அரனுக்கு ஊர்தியாக உள்ள ஆன்விடையாயிருக்கும்; அது உலகம் நடைபெறும் நான்கு யுக காலங்களில் முதல் யுகத்தில் நான்கு கால்களை ஊன்றியும், இரண்டாம் யுகத் தில் மூன்று கால்களை ஊன்றியும், மூன்ரும் யுகத்தில் இரண்டு கால்களை ஊன்றி யும், நான்காவதாகிய கலியுகத்தில் ஒருகாலை ஊன்றியும் நடக்கும்.

மீனமாய் மறையை மீட்டுக் கமடமாய் வெற்பைத் தாங்கி
வானவர்க் கமுத மீந்து மகிதலம் விழாமற் கோட்டால்
ஏனமா யெடுத்து மாமா லெய்துமா லடக்கி மைந்தர்
ஞானநா யகன்பா லுய்த்தார் நாட்டமு மோடுங் கோடும். 94

பொ - ரை: சோமுகன் வேதங்களைக்கொண்டு கடலில் மறைய அவனைக் கொன்று அவற்றை மீட்டற்கு மீன் ஆனபோதும், மந்தரமலையைத் தாங்க ஆமை ஆனபோதும், பன்றியாய்க் கடலில் மறைந்த நிலத்தைக் கோட்டில் ஏந்திக் கொண்டுவந்து நிற்பித்தபோதும் திருமால் ஆனவர் கொண்ட செருக்கைநீக்கி விநாயகர் முதலிய குமாரர்கள் கொண்டுவந்த மீனின் கண்ணும், ஆமை ஓடும், பன்றிக்கோடுமே ஞானநாயகன்பால் உள்ளவை.

கயமெனு மவுணக் குன்ற முயிர்க்கடல் கலக்குங் காலம்
வியமுரு துலக முய்ய வென்றுதோ லுரித்துப் போர்த்தான்
அயன்மதஞ் சிரத்தா னீக்கி யதுபலிக் கலமாச் சூலம்
வயிரவற் கீந்து விட்டான் மாலாதி சுரர்மான் மாற்ற. 95

பொ - ரை: கயாசுரனல் உலகம் அலைப்புண்டபோது உலகம் வேறுபாடு அடையாதபடி அவனை வென்று இறைவன் அவன் தோலை உரித்துப்போர்த்துக் கொண்டான்; அயனது செருக்கைநீக்கக் கொய்த சிரமே பலிக்கலமாக உள்ளது; மாயோன் முதலியவர் செருக்குநீக்கி அருளுதற்பொருட்டே வயிரவக் கடவு ளுக்குச் சூலம் கொடுத்து அனுப்பியது.

வாசவன் மதமோர் கால மாற்றவேற் றுருவா யெங்கோன்
பூசல்வெங் கதத்தி லுய்த்த சலந்தரன் புவன மூன்றில்
கேசவன் முதலோர் சாயக் கிளர்சமர் விளைத்தான் வெற்பில்
ஈசனந் தணன்போ லுய்த்த நேமியா லிருகூ ருனுன். 96

பொ - ரை: இந்திரன்கொண்ட செருக்கைமாற்ற வேற்றுருவாய் இறைவன் சென்று வெகுள அவன் இறைஞ்சிப் பணிந்தமையால், அவ்வெகுளித் தீயைக் கடலில் உய்க்க, அவ்வெகுளியே வடிவாய்த் தோன்றியவன் சலந்தரன்; அவன் தேவர்களைப் புறங்காட்டச் சென்று திருக்கயிலை இறைவனோடு போர்புரிவேன் என்று செல்ல, அந்தணனாய் எதிர்ப்பட்டு ஒரு வட்டத்தை நிலத்திற்கீறி அதனை எடுக்கும்படி சொல்ல, அவன் வருந்தி எடுத்தபோது அச்சக்கரத்தால் சலந்தரன் உத்தமாங்கம் வேறு உடல் வேறாய் இருகூறு ஆனான்.

வீந்தவ னுருவிற் புக்கு விறலரி விருந்தை யென்னும்
காந்தையைப் புணர்காற் சோரங் கண்டவள் சபித்துத் தீயின்
மாய்ந்தனள் மயானத் தூடு மயங்கலு முமையோர் வித்தால்
பூந்துழா யருள வன்றோ புனைந்துமா லொழித்தான் மாலும். 97

பொ - ரை: இறந்தவன் உருவிற்புகுந்து அவன் மனைவி விருந்தையைத் திருமால் மருவியபோது அவள் திருமாலின் வஞ்சனை கண்டு சபித்துத் தீயில் தன் பரு உடல்விட்டாள்; அவளது சாம்பரில் திருமால் மயங்கிப் புரள உமை அம் மயக்கம் நீங்குதற்பொருட்டு இட்ட வித்தினின்றும் தோன்றிய துழாய் மாலை அணிந்து மால் மால் அகன்றான்.

அகிலகா ரணமா வாட லாடலுக் கிசைந்த கோலம்
சகலமு மங்கங் காகத் தரிக்குவன் விடுப்ப னல்லால்
புகலரு முருப்பேர் செய்கை பூண்படை யுடையூண் மற்றும்
நிகிலநா யகனுக் குண்டோ நிகழ்ந்தது நிகழ்த்து ஞாலம். 98

பொ - ரை: இறைவன் ஆடல் எல்லாம் உலகம் தான் நிமித்தமாதல்பற்றி நன்கு தொழிற்படுதற்கு மேற்கொள்வன; அவ்வவ் ஆடலுக்கு ஏற்ற கோலத்தை இறைவன் மேற்கொள்ளுதலும் களைதலும் செய்வன்; மற்றுத் தனக்கென உருவும் பெயரும் செய்கையும் அணியும் படையும் உடையும் ஊணும் எல்லாமாய் நிற்கும் ஈசனுக்கு இல்லை; அவன் திருமேனி விளைவுகள் உலகத்திலும் நிகழ்வன ஆகும்.

சரமனைத் தசர மெல்லாந் தந்தையாய்த் தாயாய்த் தந்த
பரமனைப் பணிந்தே நீயும் பண்ணவர்க் கரசா யுந்தை
பிரமனைப் பிறரை யாண்டாய் பிஞ்ஞகர்க் கவியும் பெய்து
சிரமனைச் செல்வ மெய்தித் திறம்பெற வாழ்தி யென்றான். 99

பொ - ரை: சரம் அசரம் அனைத்தும் தாய் தந்தையாய் இருந்து படைத்த சிவபிரானை இறைஞ்சியே நீயும் முனிவர்களுக்கும் அரசனாய் உன் தந்தையாகிய பிரமனையும் பிறரையும் ஆண்டாய்; ஆதலால், இவ்வேள்வியில் சிவபிரானுக்கு உரிய அவியை மாற்றாமல் கொடுத்துச் சிரஞ்சீவியாய் மனை செல்வம் முதலிய வற்றைப் பெற்று திறம்பெற வாழ்க என்றான் ததீசி முனிவன்.

ஆங்கவன் பொருட்டா லென்னு மமுதின்றி விடமுண் டார்க்குப்
பாங்கினாற் பலியேற் றுண்ணப் பரிகலங் கொடுத்தா னெந்தை
நீங்கலா வறுமை நீக்கி நேரிழை சதியை யானே
ஓங்குசீர் மனத்தா லீந்தே னுயர்மனை வாழ்வு பெற்றான். 100

பொ - ரை : தக்கன் கூறுவான் : அச்சிவனல் என்ன ஆகும்? திருவமுது இன்றி நஞ்சு அயின்ற சிவனுக்கு என் தந்தை பிரமன் பிச்சை ஏற்று உண்ணு தற்குப் பாத்திரம் கொடுத்தான்; நீங்காத வறுமை நீங்கச் செய்து என் மகள் சதியைச் சிறந்த மணஞ்செய்து கொடுத்தேன் யான்; அதனல், உயர்ந்த இல் வாழ்வும் பெற்ருன் சிவன்.

துன்னரும் புலித்தோன் மாற்றித் துகில்சுற்றி மகுடஞ் சூட்டி
மன்னுபொன் னணிகள் பூட்டி மணவாளக் கோலஞ் செய்த
என்னையோ ரணுவா வெண்ணு விகழ்ந்தன னதனு லீசன்
தன்னையு மருகா வெண்ணேன் சதியையு மகளா வெண்ணேன். 101

பொ - ரை : புலித்தோலை மாற்றிப் பட்டு உடுக்க வைத்து, முடியும் சூட்டி, பொன் அணிகள் அணிவித்து மணமகன் கோலம் பெறச் செய்த என்னை அச் சிவன் ஓர் அணுவாகக் கருதி இகழ்ந்தான்; ஆதலால் ஈசனை மருமகன் என்றும் சதியை மகள் என்றும் கருதேன்.

பற்றில னெனவே தக்கன் பகர்தலு முனிவ னேக்கி
உற்றுநீ புரியும் வேள்விக் குறுபய னளிப்பார் யாவர்
பெற்றமா மறைகள் யாரைப் பிரமமென் றுரைக்கும் பேதாய்
வெற்றிகொண் டெழுமோ சேனை வேந்தனை யின்றி யென்ருன். 102

பொ - ரை : யான் அச்சிவனிடத்துப் பற்று இல்லாதவன் எனத் தக்கன் சொன்னுன்; ததீசி, அவன் கருத்தை நோக்கி வினவுகிருன் : வருத்தம் உற்று நீ செய்யும் வேள்விக்குப் பயன் தருவார் யார்? நீ உன் தந்தை மூலம் பெற்ற மறைகள் யாரைப் பரம்பொருள் என்று உரைக்கின்றன? சிவனே பயன் தரு வோன்; அவனையே பரம் பொருள் என்கின்றன; நீ அறிவில்லாதவனுக உள்ளாய்; அரசன் இல்லாதபோது, சேனை வெற்றிகொண்டு எழுமா? என்ருன் ததீசி.

முனிவனீ துரைப்பத் தக்கன் முயற்சியே பயனை நல்கும்
எனவுரை வலிப்பப் பின்னு மிறையின்றிச் சடமா மூக்கம்
நனிபயன் றருமோ வென்ன நற்றவன் மறுப்ப மற்றும்
உனதுரை கேட்பார்க் கன்ருே வுரைப்பதென் றுருத்துச் சொன்னுன்.

பொ - ரை : தக்கன் நாம் செய்யும் முயற்சியே பயனைத்தரும் என வலிந்து சொன்னுன்; தவமுடைத் ததீசி அறிவில் ஆற்றலாகிய ஊக்கம் பயன்தராது என மறுத்தான்; தக்கன் உன் உரையைப் பொருட்படுத்திக் கேட்போருக்கு அல்லவா நீ நிகழ்த்தவேண்டும் என்ருன்.

அவனது பகர்த லோடு மடன்முனிச் சீயஞ் சீறிச்
சிவனரு ளின்றிச் செய்கை சீவகோ டிகளுக் குண்டோ
இவனையெண் ணுது நீயு மியலுமட் டியற்றும் யூபம்
கவனவெங் களத்தி லாவி கழியுமட் டாடும் யூபம். 104

பொ - ரை : பின்னர்த் தவவலியுடைய முனிவர்சிங்கம் வெகுண்டு சிவன் அருள் இன்றி எண்ணிறந்த சீவர்களுக்கும் எச்செயலும் இல்லை; இத்தகைய

சிவனே எண்ணுது வேள்வியின் உண்மையியல்பையும் அழித்து நாட்டும் யூபத் தம்பம் விரைந்து தொழிற்படும் போர்க்களத்தில், உயிர் முற்றும் நீங்கும்வரை ஆடிக்கொண்டிருக்கும் குறை உடலே (யூபம்) ஆகும்.

விதுவணி சடையா னன்றி வேள்விநீ யியற்றுஞ் செய்கை
மதுமலர் குழலிற் சூட்டி வனமுலை யாரம் பூட்டிக்
கதிர்மணிக் கலாபஞ் சாத்திக் கன்னிகை யொருத்தி தன்னைப்
புதுமணக் கொழுந னின்றிப் புரிமணக் கோலம் போலும். 105

பொ - ரை: பிறை அணிந்த சடைமுடிக்கடவுள் இல்லாமல் நீ இங்கே செய்யும் வேள்வி, மணமகன் இன்றி ஒரு கன்னிகைக்கு மணக்கோலம் புனைவது போன்றது.

கண்ணனென் பவனு மெங்கள் கடவுள்பாற் சத்தி மற்றை
விண்ணவர் பசுக்க ளன்றே வியன்பசு பதியை நீக்கிப்
பண்ணமை பசுப்ப டுத்துப் பயனுநீ யெய்து வாயேல்
பெண்ணெரு பெண்ணைக் கூடி மகவினைப் பெறலு மாமே. 106

பொ - ரை: மாயோனும் சிவபிரானுக்குப் புருடாகார சத்தியே ஆகும்; மற்றைய தேவர் அனைவரும் பாசத்திற்கட்டுண்ட பசுக்கள்; சிவபிரான் உயிர்களுக்கு நாயகனுகிய பசுபதி; அவன் இல்லாமல், தகுதியுள்ள பசுக்களைக்கொன்று வேள்வி செய்வாய் ஆயின், ஒரு பெண் மற்ருெரு பெண்ணைக்கூடி மகவைப் பெறுதலும் ஆகும்.

வசுக்களே யாதி வானேர் காசிபன் மற்ருே ராய
முசுக்கள்போன் முனிவ ராலு முடிவதொன் றிலையாற் கவ்வை
உசுக்கள்போ லரிப்பக் கூடி யுயிரரித் திருந்தீ ரும்மைப்
பசுக்கள்போற் படுப்பன் வந்து பசுபதி யவனே யின்னம். 107

பொ - ரை: வசுக்கள் முதலிய தேவராலும் காசிபர் முதலிய குரங்குகள் போன்ற முனிவராலும் முடியும் செயல் ஒன்றும் இல்லை; பழிமொழிகள் புழுக்கள் போலத் தக்கவர் உள்ளங்களை அரித்துத் துன்புறுத்த, வேள்வி விலங்குகளை அரித்துத் தின்பீராய்க் கூடியுள்ளீர்; உங்களைப் பசுபதியே இங்குவந்து பசுக்களை நீங்கள் வதைப்பதுபோலப் பின்னர் வதைப்பான்.

உகம்பல கடந்த முக்க ணெருவனை மழுவ லானை
அகந்தையா லிகழ்ந்த நீயு மழிகநின் யாக சாலை
புகுந்தவர் சிதைக வேள்வி பொன்றுக வென்று சாற்றித்
திகந்தமும் புகழும் யோகி முனிக்குழாத் தெழுந்து சென்ருன். 108

பொ - ரை: பழையோன் ஆகிய சிவபிரானைச் செருக்கினுல் பழித்த தக்கனே, நீ அழிக; நின் வேள்விச்சாலையில் வந்தோர் சிதைந்து ஓடுக! வேள்வியும் அழிக எனச் சாபம்கொடுத்து, எவ்வுலகும் புகழும் மா யோகியாகிய ததீசி முனிவர் முனிவர்குழாம் சூழ எழுந்து வெளியே சென்ருர்.

ஆங்கவன் போய பின்ன ரமரரோ டிருந்து தக்கன்
வீங்குதீ வேள்வி செய்தான் மேல்வருங் கரும மோரான்
யாங்குமே நிறைந்த முக்க ணிறைவனே யறிவித் தன்றித்
தீங்குநன் கெய்தும் பான்மை தேவர்க்குந் தெரியொ ணாதால். 109

பொ - ரை: அவர் சென்றபின் தக்கன் அங்கிருந்த தேவர்களோடிருந்து வேள்வி செய்தான்; அவன் பின் விளைவை அறியான் ஆயினன்; சிவபிரான் அறிவித்தால் அன்றிப் பின்விளையும் நன்மை தீமைகளைத் தேவராலும் அறியமுடியாது.

இருநிலப் பரப்பும் வானு மேவல்கேட் டிறைஞ்சத் தக்கன்
திருகுசெய் மகத்தின் கோப்புந் திங்கள்கா சிபனே யாதி
மருகர்தஞ் செருக்கு மன்னோர் மனைவியர் களிப்பும் வானோர்
பெருமையுங் கண்டு வெள்ளிப் பிறங்கல்யாழ் முனிவன் சேர்ந்தான். 110

பொ - ரை: மண்ணவரும் விண்ணவரும் பணிசெய்யத் தக்கன் செய்யும் நேர்மையில்லாத வேள்வியின் கட்டுக்கோப்பும், சந்திரன், காசிபன் முதலிய மருகர்களது பெருமிதமும், அவர் தம் மனைவியரது (தக்கன் மகளிரது) பெருமகிழ்ச்சியும், தேவர்களது மையலையும் நாரதர் கண்டு ஸ்ரீ கயிலாயமலைக்குச் சென்றார்.

திருமலைக் கோயில் வாயிற் றிருக்கடை பலவு நீங்கி
மருமலர்த் திருவோ லக்க மண்டபங் கடந்து போகி
அருளினைக் கண்டான் சிற்சூ தகிலமு மாடுங் கையால்
கருணை நம் பரம னோர்பாற் கவறெறிந் தாடு வாளை. 111

பொ - ரை: நாரதன் திருக்கயிலையில் வாயில்கள் பலவும் திருவோலக்க மண்டபமும் கடந்துசென்று உமையம்மையைக் கண்டான்; அம்மை உலகங்களைத் தொழிற்படுத்துவதாகிய ஞானவிளையாட்டை உடையவள்; பரமன் எதிரில் இப்பொழுது கவறு உருட்டிக்கொண்டு இருந்தாள்.

சடைமுடி தாளிற் சூட்டித் தாழ்ந்துவீழ்ந் திறைஞ்சி முக்கண்
உடையநா யகனைப் போற்றி யுலகெலா மீன்ற தாயைப்
புடையுற வணங்கி வாழ்த்திப் போந்துவாய் புதைத்துத் தக்கன்
விடையமார் வேள்வி மார்க்கம் விரைவின்விண் ணப்பஞ் செய்தான்.

பொ - ரை: தம் சடைமுடி சிவபிரான் திருவடியில் அணையும்படி இறைஞ்சி, அம்மையையும் மீண்டும் இறைஞ்சி, வாய்புதைத்து நின்று தக்கன் தீய நோக்கத்தோடு செய்யும் வேள்வி வரலாற்றை விண்ணப்பித்தான்.

கேட்டனள் கவறுஞ் சூதுங் கிடத்தின ளிறைமுன் றாதை
ஈட்டிய மகத்தினேர்வத் தெழுந்தனள் பணிந்து வீழ்ந்தாள்
வேட்டகத் தெவர்க்கு மெய்தா வியன்சிறப் பெய்தி னாலும்
பேட்டன நடையி னார்க்குப் பிறந்தகத் தாசை போமோ. 113

பொ - ரை: அம்மை இதைக்கேட்டவுடன் உருட்டு கருவிகளையும், பெயர்க்கும் கருவிகளையும் அப்படியே வீழ்த்தி, தன் தந்தை இயற்றும் வேள்வியிற் கலந்து

கொள்ளும் விருப்பினுல் இறைவனைப் பணிந்து இறைஞ்சினுள்; பெண்மக்களுக்குப் புகுந்த கணவன் அகத்தே எவ்வளவு சிறப்பு இருப்பினும் பிறந்த இடத்தில் வைத்த ஆசை போவதில்லை.

அன்னை தாள் பணிந்து கேட்ப வையர்தா முறுவல் பூத்து
நின்னையு மழையா னெம்மை நினைவிலு நினையான் சென்ருல்
உன்னையே மதியான் போத லொழியென மறுத்துந் தாயர்
தன்னையர்க் கண்டு மீள்வே னென்றுபொற் சரணில் வீழ்ந்தாள். 114

பொ-ரை: இறைவி இவ்வாறு திருவடிகளில் பணிந்து வேண்ட இறைவன் புன்னகைசெய்து கூறுகிருர்; தக்கன் உன்னை அழைக்கவில்லை; எம்மை மனத்திலும் நினைக்கவில்லை; நீ சென்ருல் உன்னையே அவமதிப்பான்; செல்லற்க என்ருன். என் தாயையும் மூத்தோரையும் கண்டு மீள்வேன் எனக்கூறி மீளவும் இறைஞ்சினள் அம்மை.

வல்லியங் கொம்பு வேண்ட வரதன்மேற் கரும மோர்ந்து
சொல்லிய வண்ண நேர்ந்தான் றூயபொன் விமான மேறிப்
பல்லியங் கொம்பு பம்பப் பனிமொழி யணங்கார் சூழச்
செல்லியற் கணங்க ளார்ப்பச் சிறுவிதி சாலை சார்ந்தாள். 115

பொ-ரை: இறைவன் மேல் விளைவு கருதி இசைவு கொடுத்தார்; அம்மை பொன் விமானத்தில் வாத்தியங்கள் ஒலிக்கத் தோழியரும் கணங்களும் சூழ வேள்விச் சாலை சேர்ந்தாள்.

ததிநிலக் குண்டங் கீண்டு சமிதையா முரந்தூஉய்ச் சாலி
முதிரைவித் தெறிந்து நெய்யா முதுபுனல் சொரிந்து நாளும்
திதியொடு கோளுஞ் சூழத் தீவினைப் பயிர்செய் வான்முன்
புதிய நல் வினைபோற் சென்று புகுந்தனள் புவன மீன்ருள். 116

பொ-ரை: கடல் சூழ்ந்த உலகில் (உததி—முதற்குறை) வேள்விக்குழியை எடுத்தலாகிய உழுதலைச்செய்து, ஓமத்துக்கு உரிய கட்டை முதலியவற்றைத் தூவுதலாகிய எரு இட்டு, நெல், புன்செய்த்தானியம் முதலியவற்றை நெருப்பில் தூவுதலாகிய விதைத்தற் செயலைச் செய்து, நெய் சொரிதலாகிய தண்ணீரைப் பாய்த்தி அசுரர் தாயாகிய திதியும், சுக்கிரன் முதலிய கோள்களும் தன்னைச் சூழும் படி இருந்து தீவினை விளைவைச் செய்துகொண்டிருக்கின்ருன் தக்கன். அம்மை அவன் எதிரே சென்றது புதிதாகச் செய்யப் பெற்ற நல்வினை போல் காணப் பட்டது. ததி - வலியுமாம்.

வன்சுதை தீற்றுஞ் சாலை வாஞ்சையின் வருகின் ருளைத்
தன்சுதை யெனவும் பாரான் றகவிலன் வருகன் றூட்டாப்
புன்சுதை யனைய ளுகிப் புறக்கணித் தகலா நின்ருன்
மென்சுதை தனைக்கண் டாலம் விலங்குதல் வழக்கே யன்ருே. 117

பொ-ரை: சுண்ணும்பு தீற்றிய வேள்விச் சாலையில் வந்த உமையம்மையைத் தன் மகள் (சுதை) என்றும் கருதாது, பாலை உண்ணவரும் தன்

கன்றுக்குப் பால்கொடுக்க மறுக்கும் உதைகாற்பசுவைப் போலத் தக்கன் புறக்கணித்து, இடம்பெயர்ந்தான்; நல்ல அமுதத்தைக் கண்டு ஆலகால விடம் விலகுதல் பொருத்தமே அன்றோ.

தீயவ னிருந்த மார்க்கந் திருவுளந் தனிலெண் ணுமல்
நாயகி நடந்தா ளுள்ளே நடத்தலு மவன்கா ணுது
தாயருந் துணைவி மாருந் தழுவினர் மகிழ்ச்சி கூர்ந்தார்
ஆயிழை பாச வர்க்க மகற்றினு மகலு மேயோ. 118

பொ-ரை: தீய தக்கன் இருந்த தீநெறிப் போக்கைத் திருவுளம் கொள்ளாமல் அம்மை உள்ளே சென்றாள்; அவன் காணுதபடி, தாயும் உடன் பிறந்தாரும் அம்மையைத் தழுவி மகிழ்ந்தார்கள்; பெண்களாகிய அன்பின் கூட்டம் நீக்கினும் நீங்க மாட்டா.

பயந்தனள் சிறப்புச் செய்யப் பயந்தனள் பதக னுலே
வியந்துடன் பிறந்தார் யாரும் விருப்பினர் வெறுப்பார் போன்றார்
அயர்ந்தன ளகன்றாள் செல்வி யணங்கனுர் குழாத்தை நீக்கிப்
புயங்கலை யுரிவை போர்த்தான் புரிமக முன்னர்ப் போந்தாள். 119

பொ-ரை: பெற்றவளாகிய வேதவல்லி பாவியாகிய தக்கன் வெறுப்பான் என்று உமையம்மைக்குச் சிறப்புச் செய்ய அஞ்சினாள்; உடன் பிறந்தார் உள்ளத்தில் விருப்புடையராயிருந்தும், தக்கன் போக்கை வியந்து, அம்மையை வெறுப்பார் போன்று இருந்தனர்; உள்ளந்தளர்ந்து அம்மை பெண்கள் குழுவை நீங்கி, புயத்தில் மான்தோல் போர்த்து எஜமானனுய் உள்ள தக்கன் செய்யும் வேள்வி முன்பு சென்றாள்.

கண்ணனை மலரு ளானைக் கற்பக வனத்து ளானை
விண்ணவர் பிறரை வானில் வெண்மதிக் கடவு ளாதி
எண்ணரு மருகர் தம்மை யாகத்தில் வரித்தாய் முக்கண்
அண்ணலெம் பரனை யெந்தா யயர்த்தனை போலு மென்றாள். 120

பொ-ரை: மாயோன் முதலியோரையும், மற்றும் நின் மருகர்களையும் இவ்வேள்வியில் அழைத்து வருவித்துள்ளாய்; முக்கண் உடைய எம்பிரானை மறந்தனையோ என்றாள் அம்மை.

அலைகட லமுதப் பாய லண்ணலு மமுத முண்ணும்
புலவரும் புலவர் கோனும் புலவருக் கமுத நல்கும்
கலைநிலா வொளிருந் திங்கட் கடவுளும் வளர்பொற் சாலை
நலமிலா விடத்தை யுண்டா னண்ணுதற் குரித்தோ வென்றான். 121

பொ-ரை: தக்கன் அமுதக்கடற் (பாற்கடற்) பாயலுடையான், அமுதம் உண்ணும் தேவர்கள், அவர்கள் தலைவன் இந்திரன், அமுதக்கலையுடைய சந்திரன் என்போர் கூடியுள்ள வேள்விச்சாலையில் நன்மையில்லாத நஞ்சுண்டவன் வருதற்கு உரிமை உண்டா என்றனன்.

ஆரணன் வெருவி யோட வமரர்க ளோட வோடா
நாரணன் வெளிய மேனி கரியதாய் நடுங்கி யேங்கிப்
பூரண முறையோ வென்னப் புகறலும் விடத்தை யெங்கோன்
பாரணஞ் செயலா லன்ரே பருகின ரமுத மென்ருள். 122

பொ - ரை: பிரமன் அஞ்சி ஓட, மற்றவரும் ஓட, மாயோன் எதிர்த்து நின்று மேனி கறுத்துத் துன்புற்றுச் சிவபிரானிடம் சென்று முறையிட அவன் அந்நஞ்சை உண்டமையால் அல்லவா மற்றையோர் அமுதுண்டனர் எனறனள் உமை.

மன்றிடை நிருத்தஞ் செய்து மனைதொறும் பலியேற் றுண்டு
குன்றுறை குலமி லானைக் கூட்டலன் வேள்விக் கென்ருன்
உன்றனி மகவை யன்னுற் குதவினை குலமென் சொல்வாய்
என்றன ளதனு னீவி ரிருவருந் தவிர்க வென்ருன். 123

பொ - ரை: பலர் காணும் மன்றில் கூத்தாடி, பலிக்கு உழன்று உண்டு மலையின்கண் தனக்கென ஒரு குலமின்றி உள்ள சிவனை வேள்விக்கு அழையேன் என்றனன் தக்கன்; அம்மை உன் குலமகளாகிய என்னை அவருக்கு மணம்செய்து கொடுத்தபின் குலம் பேசுகிருயே என்ருள்; அக்காரணத்தால், நீங்கள் இரு வருமே வேள்வியில் வரவேண்டா என்றனன் மூர்க்கன்.

அங்கணு யகனை முக்க ணகிலநா யகனை மூர்க்கன்
பங்கமா விகழ்த லாலே தந்தைமேற் பழைய காதல்
மங்கைநா யகியாண் முற்று மறந்தனண் மடவார்க் கெல்லாம்
தங்கணு யகனே யன்றித் தந்தைதாய் தமர்வே றுண்டோ. 124

பொ - ரை: இங்ஙனம் தக்கன் சிவபிரானை இகழ்ந்தமையால், அம்மை தந்தையின் மீது வைத்திருந்த அன்பை மறந்தனள்; பெண்களுக்குத் தன் தன் கணவனே தாயும் தந்தையும் உறவும் ஆவதன்றிப் பிறர் உறவாவார் உளரோ?

மந்திர மறைகள் பாய்மா மகத்திலெண் டிசைகள் காக்கும்
இந்திரன் முதலோர் தூச ரிமையவர் முனிவர் தொண்டர்
சந்திரன் கதிரோ னங்கி தம்பிரான் விழிதேர் பூமி
அந்தர மனைத்து மேனி யவனலா துலக முண்டோ. 125

பொ - ரை: அம்மை மேலும் கூறுகிருள்: சிவபிரானுக்கு மந்திரங்களைக் கொண்ட வேதங்கள் பாய்ந்து செல்லும் குதிரைகள்; வேள்வியில் திசைகாவலரா யுள்ள இந்திரன் முதலியோர் படையின் முற்செல் பகுதியினர்; தேவரும் முனிவரும் பணி ஆட்கள்; மதியும் ஞாயிறும் அங்கியும் திருக்கண்கள்; நிலனேதேர்; ஆகாயமே திருமேனி; ஆதலால் அவனே உலக உருவினன் (விச்சுவரூபி).

சீர்மக முனக்கே தீண்டுச் செயுமிட மேது நீதான்
யார்மகன் றந்தை தாயர் யாவரென் றுணராய் போலும்
போர்மழ விடையார்க் கன்பு புரிந்தமெய்த் தவத்தா லன்ரே
தார்மக பதியே யாதி தலைவர்க்குந் தலைமை பூண்டாய். 126

பொ - ரை: சிறப்புள்ள வேள்வியைச் செய்தல் உனக்கு எப்படி வந்தது? செய்யும் இடம் உனக்கு ஏது? நீ யார் மகன்? தந்தை தாயர் ஆவார் யார் என்று உணராய்நீ; சிவபிரானுக்கு அன்பு வழிபாடு செய்தமையால் அன்றோ மாலையை அணியும் இந்திரன் முதலிய தலைவர்க்கும் தலைவன் ஆனாய்?

நெறியுளார் செல்வம் பெற்றா னெறிநின்று நீடு வாழ்வார்
அறிவிலார் செல்வம் பெற்றா லளவிலா வகந்தைப் பேயும்
பிறிதுகண் டெரியா நோயும் பிடித்திடு மவையை மாற்ற
வறுமையே தண்ட மென்னு மிரண்டுமா மருந்து மாதோ. 127

பொ - ரை: நல்வழியில் ஒழுகுவோர் செல்வம் பெற்றால் அவ்வழியில் வழுவாது சென்று நீடுவாழ்வர்; அறிவிலார் செல்வம் பெற்றால் அகந்தையாகிய பேயாலும் பிறர் ஆக்கம் கண்டு பொறாமை கோபம் என்னும் பிணியாலும் பற்றப் படுவர்; இப்பேயையும் நோயையும் நீங்கச் செய்வதற்கு வறுமையும் தண்ட முமே சிறந்த மருந்துகள் ஆகும்.

சிட்டரைப் பரிக்குந் தேவ தேவை நீ யிகழ்த லாலே
துட்டநிக் கிரகஞ் செய்யத் தோன்றலார் தோன்றா நிற்பர்
இட்டமா முனிவர் சொல்லு மெம்மனோர் மொழியுங் கேளாய்
மட்டறு செல்வ மந்தோ மதத்தினா லழிக்கின் றாயால். 128

பொ - ரை: சன்மார்க்கரைக் காக்கும் தேவதேவனை நீ இகழ்தலாலே, அவர் துட்டரை ஒழிக்க வெளிப்பட்டுத் தோன்றுவர்; உயிர்களிடத்து அன்புள்ள முனிவர் சொல்லும், எம்போன்றார் நல்லுரையும் பொருட்படுத்தவில்லை; உன் செருக்கால் அளவற்ற செல்வங்களை இழக்கின்றாய்!

யாவரே மழுவ லானை யிகழ்வரே லுடனே யந்தப்
பாவரை யடுதல் வேண்டும் படாதெனிற் பழிமேல் வைத்து
வீவதே வேண்டு மாவி வீந்திடா ரவ்வூர் விட்டுப்
போவதே வேண்டும் வேண்டார் பொருந்துவர் சிவத்து ரோகம். 129

பொ - ரை: யாரும் சிவபிரானை இகழ்ந்து கூறின் அவரை அழிக்க! அது கூடவில்லையெனின், அப்பழிகாரணமாகத் தான் உயிர்விடல்வேண்டும்; அங்ஙனம் உயிரைவிடத் துணியாதார் அவ்வூரைவிட்டு நீங்கவேண்டும்; அதுவும் செய்யா தார் சிவாபராதம் செய்தவர் ஆவர்.

என்றனள் கவுரி மானத் திவர்ந்தன ளணங்கார் சூழச்
சென்றனள் கயிலை வாழ்வைத் தெண்டனிட் டிறைஞ்சி யோர்பால்
மன்றலங் குழல்பின் சோர மனத்தொரு வேகந் தூண்ட
நின்றனள் கமலம் வேர்ப்ப நீலங்கள் சிவப்ப நாணி. 130

பொ - ரை: இங்ஙனம் கூறி, கௌரி விமானத்தில் ஏறித் தோழியர் சூழத் திருக்கயிலை வந்து இறைவனை இறைஞ்சி, ஒருபக்கத்தில் கூந்தல் அவிழ, மனத் தில் வெகுளிதூண்ட முகம்வேர்ப்ப, கண்கள் சிவப்ப, வெட்கப்பட்டு நின்றாள்.

அணங்கெழுந் தருளும் பான்மை யறிதலா லமரி லேற்ற
கணங்களைத் துரந்திட் டன்றேன் கனன்மகத் தாபி சாரத்
துணங்கெழு தறுகட் பூத மொறுத்ததும் பிறவு நோக்கி
மணங்கெழு கொன்றை யார்முன் சென்றனன் மகதி யாழோன். 131

பொ - ரை: அம்மை வேள்விச்சாலையை நீங்குதலைக்கண்ட சிவகணங்கள் தக்கன்மீது போர்தொடுக்க,அவன் கொலை வேள்வியால் உலர்ந்த நெஞ்சமுள்ள, கொடிய பூதத்தை எழுப்பி அதனால் சிவகணங்களைத் தண்டித்துத் துரத்தினன்; இவற்றைக்கண்ட மகதி என்னும் யாழ் ஏந்திய நாரதர் கொன்றை மாலையை அணிந்த சிவபிரான் முன் வந்தனர்.

வேறு

மமதை யான்மதி யழிந்திடு தக்கன்மா மகளாம்
உமையை யெண்ணல னுனதரு ளெண்ணல னுமையோ
டமைய வேகுநின் கணங்களை யடர்த்தன னமலா
விமைய வர்க்கவி சொரிந்துனை யிகழ்ந்தன னென்றான். 132

பொ - ரை: எனது என்னும் செருக்கால் அறிவழிந்த தக்கன், தன் மகளாகிய உமையைப் பொருட்படுத்தவில்லை; உன் திருவருளையும் கருதவில்லை; அம்மைக்குப் பாதுகாப்பாகச் சென்ற நின் கணங்களை எதிர்த்துத் துன்புறுத்தினன்; தேவர்க்கு அவிகொடுத்து உனக்குக்கொடாது இகழந்தனன் என நாரதர் கூறினர்.

முனிவன் வாசகந் திருச்செவி புகுதலு முதல்வன்
புனித வாயிதழ் துடித்தது நெறித்தது புருவம்
நனிகொள் வாணுத லிவர்ந்தது சிவந்தது நயனம்
அனில மங்கியு மொடுங்கின நடுங்கின வகிலம். 133

பொ - ரை: சிவபிரானுக்குச் சினம் மூண்டது; காற்றும் நெருப்பும் ஒடுங்கின; உலகம் நடுங்கிற்று.

மார னிங்கிலை விழிக்கடை சிவந்திட வறிதா
மூரல் வந்திட முப்புரங் களுமிலை முழுதும்
வேரம் வந்திடக் கடையுக மிலையென விமலன்
பார வெங்கத மடக்கியோர் குறிப்பொடும் பார்த்தான். 134

பொ - ரை: கண்ணால் வெகுண்டு நோக்க ஈண்டு மன்மதன் இல்லை; கோபச்சிரிப்புச் செய்ய முப்புரம் இல்லை; முழுவதும் செற்றம் கொண்டு நோக்கக் கடை ஊழியும் வரவில்லை என இறைவன் எண்ணிக் கோபத்தை அடக்கி ஓர் நினைப்போடும் நோக்கினன்.

தக்கன்வேள்விச் சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 748

# தக்கன்வேள்வி அழிந்த சருக்கம்

பார்த்த திக்கினிற் கொடுமுடி யாயிரம் பரப்பிச்
சூர்த்த திண்புய வரையிரண் டாயிரந் துளக்கிப்
பேர்த்த தாள்களி லண்டமு மகண்டமும் பெயர
வேர்த்தெ ழுந்தனன் வீரரில் வீரரில் வீரன். 1

பொ - ரை: இறைவன் நோக்கிய திசையில் வீரர்களுள். தலை சிறந்த வீரபத்திரக்கடவுள் தோன்றினர்; அவர் சிகரம் போன்ற ஆயிரம் முடிகளும் அச்சத்தை விளைக்கும் திண்ணிய இரண்டாயிரம் கைகளும் உடையவராய் இருந்தார்; அடியைப்பெயர்த்து வைக்குந்தொறும் அண்டமும் மற்றும் எல்லாமும் இடம் பெயர்ந்தன.

அண்ட கோளகை முகடுறு நெடுமுடி யனந்தம்
சண்ட பானுவோர் வடிவெடுத் தெனவொளி தழைப்பக்
கண்ட கங்கதி ரெறிப்பவோர் கனகமால் வரைமேல்
முண்ட கங்களா யிரமுகிழ்த் தெனக்கர முகிழ்த்து. 2

பொ - ரை: மிக்க வலியுள்ள சூரியன் அண்டத்தின் வட்டமான உச்சியை முட்டும் ஆயிரம் சிகரங்களுடன் வடிவெடித்தாற் போன்றது திருமேனியின் ஒளி; பொன்மயமான மாமேருமேல் அளவிறந்த தாமரைகள் முகிழ்த்தாற்போலத் திருக்கைகள் விளங்கின; அக்கைகளில் வாள் ஒளிக்கதிர் பரப்பிற்று.

வி - கு: கண்டகம் — வாள்.

காற்று மொன்றுதீ யொன்றலா விரண்டலை கடப்பக்
கூற்ற மென்பது மொன்றலா விரண்டலை குமைப்பத்
தோற்ற யன்சிர நான்கலா லைந்திலை துமிப்ப
வேற்றெ ழுந்திசை யெட்டலாற் பிறிதிலை யிறுப்ப. 3

பொ - ரை: இங்ஙனம் தோன்றிய வீரர் சிவபிரானை நோக்கிக் கூறுகிறார்: காற்றும் தீயும் தனித்தனி ஒன்றே ஆகலின், அவற்றைக் கடக்கவேண்டுவதில்லை; யமனும் ஒருவனே; இருவராயின் ஒருவனைக் குமைக்கலாம்; அயனுக்குத் தலை நான்கே உள்ளன; ஐந்தாயின், ஒன்றை அறுக்கலாம்; எல்லாம் அடங்கக் கொண்டு விரியும் திசையும் எட்டே; மேல் ஒன்று தோன்றின் அழிக்கலாம்.

குரைபு றக்கட லொன்றலா விரண்டிலை குடிப்ப
வரைசெய் மேருவு மொன்றலா விரண்டிலை வளைப்ப
உரைசெ யண்டமேற் பித்திகை யிரண்டிலை யுடைப்பப்
பரசு பாணியா யழைத்ததென் பணிக்கெனப் பணிந்தான். 4

பொ - ரை : பெரும்புறக்கடலும் இரண்டாகவில்லை; ஒன்றைப்பருகி வற்றச் செய்ய; மேருவும் ஒன்றே; இரண்டாயின் ஒன்றை வளைக்கலாம்; அண்டச் சுவரும் ஒன்றே; இரண்டாயின் ஒன்றை உடைக்கலாம்; மழுவேந்தியபெருமானே! என்ன பணியின் பொருட்டு அடியேனை அழைத்தருளியது என்று பணிந்தார்.

பொன்ப ருப்பத மண்டமெண் டிசைகள்யாம் புரிந்த
மென்ப ரப்பெலா மழிப்பது குறித்திடேல் வீர
அன்ப கத்திலாச் சிறுவிதி பெருமக மழித்து
வன்சி ரத்தையுந் துணித்திவண் வருகெனும் வரதன். 5

பொ - ரை : பொன்மலை முதலியவை எம்மால் படைக்கப்பெற்றவை; ஆதலின் அவற்றை அழிக்கக் கருத வேண்டா; வீரனே! உள்ளத்தில் அன்பில்லாத தக்கன் இயற்றும் பெருவேள்வியை அழித்து, அவன் தலையினையும் துணித்து இங்கே வருக என்றான் சிவபிரான்.

என்ன லும்பணிந் தேகின னிறைவிபாற் றோன்றி
அன்னை பத்திர காளிபல் கணத்தொடு மணைந்தாள்
தன்னி டைப்பல கோடியர் வீரரைத் தந்தான்
பின்னர் முன்னரு மருங்கினு நெருங்குறப் பெயர்ந்தான். 6

பொ - ரை : இவ்வாணையைப்பெற்று வீரபத்திரர் புறப்பட்டார்; இறைவியினிடத்துப் பத்திரகாளி பலகணங்கள் சூழத் தோன்றி உடன் அணைந்தாள்; வீரபத்திரர் தம்மிடத்துப் பலகோடி வீரர்களைத் தோற்றுவித்து அவர்கள் தம்மைச் சூழச் சென்றனர்.

ஆனை தந்தமீப் போர்வையு மடற்புலி கொடுத்த
தானை யும்பெருந் தானையங் கடற்புவி தாங்கும்
ஏன மாமருப் பணியுட னெரிகடற் கிடையே
போன மாமறை மீட்டசேற் கண்களும் பொலிய. 7

பொ - ரை : யானைத்தோல் போர்வை, புலித்தோல் ஆடை, பன்றிக்கோடு, சேல்மீனின்கண்கள் ஆகியவை வீரர் திருமேனியை அழகுசெய்தன.

உரவு மார்பிடைச் சிங்கவேற் றுரிவையுத் தரிகம்
விரவு மாசுணக் கங்கணம் விரிபணு மணிகள்
கரத லந்தொறுங் கதிர்தரக் கலைமதிக் கணம்போல்
பிரமர் மால்சிர மாலைகள் புயந்தொறும் பிறங்க. 8

பொ-ரை : வலிய மார்பின்கண் நரசிம்மத்தின் தோலால் ஆகிய உத்தரீயம், பாம்புகளாகிய கைவளைகள், பாம்பின் படத்தில் உள்ள மணிகள், திருக்கைகளிலும் புயங்களிலும் நிலவுகள் போன்ற வெண்தலை மாலைகள் விளங்கின.

ஆயி ரம்பணு நெடுமுடி யுடையகச் சசைய
வாயி ரங்குபொற் கழலொலி யுருமொலி மடுப்பச்
சேயி ருந்திரு முகந்தொறுஞ் செறிநுதல் விழியால்
காய கங்கையும் புறக்கடல் களுங்குடர் கலங்க. 9

பொ - ரை: ஆயிரம் முடியை உடைய ஆதிசேடன் கச்சாக இடுப்பில் விளங்கினன்; பொற்கழல் ஒலி இடி ஒலியை அடக்கிற்று; திருமுகந்தொறும் உள்ள நெற்றிக்கண் அங்கியால் ஆகாயகங்கையும் புறக்கடல்களும் கொதித்தன.

வி - கு: காயகங்கை - ஆகாயகங்கை.

வடிநெ டுங்குடை கொடிகள்வான் கதிரொளி மறைப்ப
விடைநெ டுங்கொடி நிலவுமே லிருளெலாம் விழுங்க
அடிபெ யர்ந்திடும் விசைதொறுந் திசைதொறு மதிரத்
தொடிநெ டும்பணி கதிர்மதி மண்டலந் துரப்ப. 10

பொ-ரை: நெடிய குடை கொடிகள் சூரியன் ஒளியை மறைத்தன; விடைக் கொடிகள் இருளைப்போக்கின; அடிகளைப் பெயர்த்துவைக்கும் வேகத்தில் திசைகள் அதிர்ந்தன; தோள்வளைகளாக இருந்த பாம்புகள் வட்டமதியை விலகி ஓடச்செய்தன.

அடல்செய் திண்புய மெண்டிசா முகவெளி யடைப்ப
உடைய பொன்முடி யண்டகோ ளகைமுக டுடைப்பப்
படைகள் கண்டகர் மனந்தொறுங் கொடுங்கனல் பரப்பத்
தொடையன் மார்பமுந் தடித்ததோள் களும்வலந் துடிப்ப. 11

பொ - ரை: கொலைத்தொழிலைக் குறிக்கும் திண்ணிய புயங்கள் எட்டுத் திசையிலும் வானை மறைக்க, சிரத்திற்றரித்த முடி அண்ட முகட்டை முட்ட, கைகளில் உள்ள படைகள் பகைவர் உள்ளங்களில் நெருப்பைத் தோற்றுவிக்க, மார்பும் வலத்தோளும் துடிக்க வீரர் நடந்தார்.

கண்க ளிற்பொறி யூழிவெங் கனலையுங் கனற்ற
விண்க ளிப்புறு முடுக்கள்போன் மலர்த்தொடை மிடைய
மண்க ளிற்பில மதிர்தர வரும்பெருஞ் சேனை
எண்கு லப்பெருங் கிரிகளை விசைகளா லெடுப்ப. 12

பொ-ரை: கண்களினின்று எழுந்த நெருப்புப் பொறிகள் ஊழிக்கனலையும் சுட, மலர்மாலை விண்மீன் கோவைகள்போல் திருமேனியில் திகழ, நிலத்தின் மேல் சூழ்ந்து பாதலம் அதிரும்படி நடந்துவரும் பெருஞ்சேனை எழுப்பும் காற்றின்வேகம் குலமலைகள் எட்டையும் பெயர்க்க வீரர் நடந்தார்.

கன்னி காவுயர் கயிலைநின் றிழிந்தொரு கோடி
துன்னு பூதமொவ் வொன்றுபே ரண்டமுஞ் சுமப்ப
உன்னி வாங்கிய வுயர்மணிக் கொடுஞ்சியந் தேர்மேல்
என்னை யாள்பவ னேறின னுலகமீ டேற. 13

பொ - ரை: இங்ஙனம் அழிவின்மையும் காத்தலும் மிகுந்த திருக்கயிலையினின்றும் இறங்கி, ஒருகோடி பூதர்கள் - ஒவ்வொன்றும் பேரண்டத்தைத் தாங்க வல்லவை - நினைத்து ஈர்த்துச் செல்லும், தாமரை முகைபோலத் தொழிற்பாடு

அமைந்த தேர் மேல் வீரபத்திரக்கடவுள் உலகம் நலன் பெறற் பொருட்டு ஏறினர்.

வி - கு: கா - சோலையுமாம்.

வேறு

கப்பணம் பிண்டி பாலங் கணிச்சிமுற் கரங்கோ டாரி
வைப்பெருஞ் சுரிகை தோட்டி வச்சிரம் வெதினந் தண்டம்
துப்புடை முசலங் கைவாள் சூலமே திகிரி யாதி
வெப்புடைப் படைகார் கால மின்னெனப் பரந்து மின்ன. 14

பொ - ரை: பலவகைப் போர்க்கருவிகளும் கார் காலத்து மின்னல் போல ஒளிவீசி அசைந்தன.

வி - கு: கப்பணம் - கைவேல், பிண்டிபாலம் - எறிதண்டு, கணிச்சி - மழு, சுரிகை - உடைவாள், முற்கரம் - இரும்பு நெருஞ்சில்முள், தோட்டி - அங்குசம், முசலம் - உலக்கை, வெதினம் - வேதினம், ஈர்வாள், முற்கரம் - பெரியதடி.

முருடுசல் லரிகள் பேரி முரசுமத் தளித டாரி
கரடிகை திமிலை மொந்தை கைமணி படகம் பம்பை
திரடரு பணவந் தக்கை திண்டிம நவுரி காளம்
வருடகா லத்துத் தோன்று மாமுகி லொலிபோ லார்ப்ப. 15

பொ - ரை: பலவகை வாத்தியங்கள் மழை பெய்யுங்கால் தோன்றும் மேகத்தின் ஒலிபோல ஒலித்தன.

வேறு

நந்தி பல்கணத் திரளொடு நனிபுறங் காப்ப
வந்து சண்டனும் வலத்துற விடத்துற மணிமான்
முந்து பல்கண நாதரும் பூதரும் முரணிச்
சிந்து ரக்குழாந் திரிந்தெனச் சாரிகை திரிய. 16

பொ - ரை: திருநந்தி தேவர் பல்கணங்களோடும் நன்ருக முன்பக்கம் காத்துச்செல்ல, சண்டன், மணிமான் என்னும் படைத்தலைவர் முறையே வலப் பக்கமும் இடப்பக்கமும் பொருந்திவர, முற்பட்டுச்செல்லும் கணநாதர்கள் மாறு பட்டுச் சுழலும் யானைக் கூட்டங்கள்போல வலம் இடமாக மாறிமாறிச்செல்ல.

புலிமு கத்தன கலைமுகத் தனவயப் புலிமான்
ஒலிமு கத்தன கொய்யுளை யுத்தரி முகத்த
கலைமு கத்தன கரடியின் முகத்தன கணங்கள்
மலைமு கத்தினு மறிகடன் முகத்தினும் வாவ. 17

பொ - ரை: புலி, மான், சிங்கம், குதிரை, குரங்கு, கரடி இவற்றின் முக முடைய கணங்கள் மலையிடத்தும் கடலிடத்தும் தாவிச் சென்றன.

வி - கு: கொய் உளை உத்தரி - குதிரை. வயப்புலிமான் - சிங்கம்.

அடித்த லங்களி லலைகடல் கலக்குவ வனந்தன்
முடித்த லங்களு முளுக்கநின் ருடுவ முகிலோ
டிடிக்கு லங்களைப் பிசைவன மிசைவன விமையோர்
கெடிக்க லங்குறக் ககனமண் டலங்களைக் கிழிப்ப. 18

பொ-ரை: இக்கணங்கள் கால்களால் கடலைக் கலக்கின; ஆதிசேடன் தலைகள் நொறுங்கும்படி நின்று கூத்தாடின; இடிகளோடும் கூடிய மேகங்களைப் பிசைந்து தண்ணீரைக் குடித்தன; தேவர்கள் இடம் கலங்கும்படி ஆகாய மண்டலங்களைக் கிழித்தன.

வி-கு: கெடி - இடம், ககனம் - ஆகாயம்.

மேற்றி சைக்கரி கீட்டிசைக் களிற்றின்மேல் விடுப்பக்
காற்றி னைக்கொடு சுழற்றுவ கனலைவாய் மடுப்பப்
போற்று பாரிடஞ் சூழ்தரத் தேர்மிசைப் போந்தான்
கூற்றி னுக்குமோர் கூற்றெனும் வீரகோ ளரியே. 19

பொ-ரை: மேல்திசை யானையைக் கீழ்த்திசை யானைமேல் எறிவன; காற்றைக் கையிற்கொண்டு சுழற்றுவன; நெருப்பை வாயில் இட்டு உண்பன; இத்தகைய பூதங்கள் தம்மைச்சூழத் தேர்மீது வந்தார் எமனுக்கும் எமனாக உள்ள, வீரர்களுள் சிங்கமாகிய வீரபத்திரக் கடவுள்.

காளி வஞ்சனி காடுகாள் கடற்படை கஞலக்
கூளி சிந்துவெங் குறள்புலிப் பறழெனக் குழும
ஆளி சென்றெனச் சென்றன ரடற்கண நாதர்
தூளி சென்றது சிறுவிதி மகக்குழி தூர்ப்ப. 20

பொ-ரை: பத்திரகாளியின் ஏவற்பெண்டிராகிய வஞ்சனி காடுகாள் என்பவர்கள் கடல் போன்ற படைகளுடன் நெருங்க, பேய்கள், சிந்து, குறள் என்பவை புலிக்குட்டிகள் போலச் சூழ்ந்துவர, வலிய கணத்தலைவர்கள் அம்பினும் வேகம் உடையராய்ச்சென்றனர்; இவர்களால் எழுந்த தூளி தக்கன் வேள்விக் குழியைத் தூர்க்கும்படி முன்சென்றது.

மலையதிர்ந்தன மாதிர மதிர்ந்தன வான
நிலையதிர்ந்தன வீரர்க ளதிர்தலு நெடுநீர்
அலையதிர்ந்தன மகஞ்செயு மயன்மகன் குடுமித்
தலையதிர்ந்திட வதிர்ந்தன வானவர் தகுதி. 21

பொ-ரை: வீரர்கள் செய்த ஓசையில், மலை, திசை, வானம், அலைகளையுடையகடல் என்பவை நடுங்கின; தக்கனது சிகையையுடைய தலை நடுங்கும்படி அங்குக் கூடியிருந்த தேவர்கள் உரிமையும் நடுக்கம் எய்திற்று.

காலை வானுடுத் தெரிந்தன கதிர்தனை நோக்கிக்
கோல ஞாளிகள் குரைத்தன நரிக்குழாங் குழுமிச்
சாலை யூடவி கவர்ந்தன தக்கனு தியர்க்கும்
ஏல வேமன மடித்தன துடித்தன விடமே. 22

பொ - ரை : காலையில் ஆகாயத்தில் நட்சத்திரங்கள் தோன்றின; நாய்கள் சூரியனை நோக்கிக்குரைத்தன; நரிக்கூட்டங்கள்வேள்விச்சாலை அவிகளைக்களவி உண்டன; தக்கன் முதலியோர்க்கு மனத்தில் சோர்வு தோன்றின; இடத்தோள் இடக்கண் துடித்தன.

தக்க னைவன் றன்மகங் கடிந்துதான் புரிவான்
மிக்க னுவது காண்டுமென் றயனின்ற விரிஞ்சன்
முக்க ணுயகன் சேனைகண் டுளம்வெரீஇ முதுவான்
புக்கு நாமினி யுய்ந்தன மெனப்புறம் போனுன். 23

பொ - ரை : பிரமன் சிவபிரான் அனுப்பிய சேனையைக் கண்டு உளம் அஞ்சி, தான்செய்தயாகத்தை முனிந்து தக்கன் வேறுவகையில் யாகம் செய்து தன்னினும் வலியன் ஆவதைப்பார்ப்போம் என்றிருந்தவன், ஆகாயத்திற்சென்று நாம் பிழைத்தோம் என்று வெளியே சென்றனன்.

தொகைத்த டங்கடல் வீரன்மாப் படைவருந் துழனித்
தகைக்கு மாலுமா லாகினன் முனிவருஞ் சடைத்தார்
திகைக்கு மன்னரே யாகினர் தேவர்கோன் முதலோர்
அகைத்து மாமக மயரும்வா னவர்களு மயர்ந்தார். 24

பொ - ரை : பலவகை வீரர்கள் சேர்ந்து கடல்போல்வந்த வீரபத்திரர் சேனையின் முழக்கொலியின் மிகுதியைக் கேட்டுத் திருமாலும் மயங்கினன்; முனிவரும் மருண்டனர் (சடை பூண்டனர்); தேவர் தலைவன் (இந்திரன்) முதலியோர் திகைப்பு அடையும் (திசைக்கு) அரசரே ஆயினர்; வேதவிதியைக் கடந்து சிறந்த வேள்வியைச் செய்யும் தேவர்களும் சோர்வடைந்தனர்.

ஞால மேழையு மீன்றநா யகியையு மிகழ்ந்து
மால யற்குயர் தேவையு மறந்துளான் மகஞ்செய்
சாலை புக்கதே யவலமென் றமரருஞ் சலித்தார்
மேலி னிச்செயல் யாதென முனிவரும் வெருண்டார். 25

பொ - ரை : உலகம் ஈன்ற அன்னையைப் பழித்து, மால் அயனுக்கு மேலான சிவபிரானை மறந்த தக்கன் செய்யும் வேள்விச்சாலையில் நுழைந்ததே தவறு என்று தேவரும் உளம் சலித்தனர்; இனிச் செய்வது யாது என முனிவரும் அஞ்சினர்.

ஆதி நாயகன் புதல்வனை முன்னிடா தமிர்தம்
ஓத வாரியிற் கடைந்துமுன் பட்டபா டுணர்வோம்
மாதுபாகனை யிகழ்ந்தவன் மகத்திடை மதிபோய்ப்
போதன் மேயினம் புரிந்தனம் பிழையெனப் புகல்வார். 26

பொ - ரை : முன்னர் மூத்த பிள்ளையாரை இறைஞ்சி முன்னிடாது பாற்கடல் கடைந்து அளவிறந்த கவலையும் துன்பமும் அடைந்தோம்; இன்று, உமையொருபாகனை இகழும் தக்கனது மகத்தில் அறிவின்றிக் கலந்துகொண்டு பெரியதோர் பிழையைச்செய்துவிட்டோம் என்று தேவர்கள்பேசிக்கொண்டனர்.

துன்று திக்கெலாந் துந்துபி யதிர்தலுந் துளங்கிக்
குன்ற டர்த்தவன் முதலினோர் மாலொடுங் குழுமி
இன்றி னிச்செயல் யாதென வெருவுவார்க் கெதிரே
சென்று தாக்கின பாரிடப் பெரும்படைத் திரள்கள். 27

பொ - ரை: பேரி முழங்கவும் நடுங்கி இந்திரன் முதலியவர்கள் மாயோனோடும் கூடிச் செய்வது ஒன்றும் இல்லையே என நடுங்கும் சமயத்தில், பூதகணங்கள் அவர்களை எதிர்ந்து தாக்கின.

ஓல மிட்டெழு கூளிக ளும்பர்மே லுதிரக்
கோல மிட்டெனக் கிழித்தன வாய்வழி குருதி
கால விட்டன வானவர் மகளிர்கா தரிந்து
நால விட்டன புரந்தரா தியர்சபை நாப்பண். 28

பொ - ரை: முழங்கி எழும் பத்திரகாளியின் சேனையைச் சார்ந்த கூளிகள் ஆகாயத்தில் இரத்தத்தால் கோலம் இட்டாற்போல, தேவமகளிர் வாயைக் கிழித்து உதிரத்தை ஒழுகச்செய்தன; அவர்தம் வடித்த செவிகளை அறுத்து, இந்திரன் முதலியவர் கூடியிருந்த அவையில் தொங்கவிட்டன.

மனமு ருத்தெழு குறட்படை மகப்பெருஞ் சாலை
அனல்கொ ளுத்தின யாகமேற் கொழுங்கன லவித்த
கனக நற்சுவ ரிடித்தன வுடைத்தன கடங்கள்
சினைம லர்த்தருப் பிடுங்கின நடுங்கின திசையே. 29

பொ - ரை: வெகுண்டு எழுந்த பூதப்படைகள் யாகசாலையை நெருப்பிட்டு எரித்தன; வேள்விக்குண்டத்தில் எழுந்த நெருப்பை அணைத்தன; பொன்மயமான சுற்றுச் சுவர்களை இடித்தன; குடங்களை உடைத்தன; மலர்க் கிளைகளோடிருந்த மரங்களை வேரோடு அசைத்து எடுத்தன; எம்மருங்கும் நடுங்கிற்று.

சாலை யிற்கனல் கொளுத்துசா ரதர்தமை நெருக்கி
ஆலை யிற்படு கரும்பென வலைத்தன ரமரர்
பாலை யிற்பெருங் கிழத்திசென் றமரர்தம் படைமேல்
வேலை யிற்கலங் கலக்கிடுஞ் சுறவென மிடைந்தாள். 30

பொ - ரை: யாகசாலையில் தீயிட்ட பூதர்களைத் தேவர்கள் சுற்றி நெருக்கி, கரும்பாலையிற்படு கரும்பு போலத் துன்புறுத்தினர்; அப்பொழுது, பாலை நிலத் தெய்வமாகிய துர்க்கை, கடலிற்செல்லும் மரக்கலத்தைக் கவிழ்க்குஞ் சுறுமீனைப் போலத் தேவர்களாகிய படைகள்மேற் சென்றனள்.

மிடைந்து முத்தலைப் படையினு லதிர்த்துவாள் விதிர்த்துத்
தடிந்து சென்னியு மூளையுந் தகர்படத் ததியைக்
கடைந்த மத்தெனத் தண்டினு லலைத்தனள் காளி
உடைந்து விண்ணவ ரோடினர் தரிபடா துலைந்து. 31

பொ - ரை : நெருங்கிச் சூலத்திஞலும், வாளாலும், குத்தியும் தடிந்தும், சென்னியை வீழ்த்திஞள்; குடரைச் சரித்தாள்; தயிரைக்கடையும் மத்தைப்போலத் தண்டிஞல் புடைத்தாள்; தேவர்கள் எதிர்நிற்க முடியாது தப்பி ஓடினர்.

அமரர் தாங்கிய கொடிப்படை நெரிதலு மழன்று
நமனு மங்கியு நிருதியும் வருணனு நலங்கூர்
தமனி யப்பெருந் தலைவனும் பாகசா தனனும்
திமில முற்றெழு பவனனு மெதிர்ந்தனர் செருவில். 32

பொ - ரை : எதிர்த்துநின்ற தேவர்களது முதற்படை சிதைந்தபோது, எமன், அக்கினி, நிருதி, வருணன், குபேரன், இந்திரன் வாயு என்போர் வெகுண்டு போரில் எதிர்த்து நின்ருர்கள்.

வலம மூப்படை நந்திதே வனுமணி மானும்
குலவு பல்படைச் சண்டனுஞ் சாரதர் குழுவும்
கலக விற்கொடு வாள்கொடு கதைகொடு கலந்தார்
புலவு மைக்கடன் மேல்வட வனற்றிரள் புகல்போல். 33

பொ - ரை : திருநந்திதேவர், மணிமான், சண்டன் என்னும் கணநாதர்களும், பூதகணங்களும் வில், வாள், கதை என்பவற்றைக்கொண்டு மீன்நாற்றம் நாறும் கருங்கடலை உண்ண வட அனல் செல்லுதல் போல உட்புகுந்தனர்.

இந்தி ரன்பொர நந்திபல் கணத்தொடு மெதிர்ந்தான்
முந்து செங்கதிர் தழன்முதன் மூவர்மேற் சண்டன்
வந்தெ திர்ந்தன னெறுழ்வலித் தடம்புய மணிமான்
உந்து மாமதி வருணனு தியருட னுடன்ருன். 34

பொ-ரை: இந்திரனைத் திருநந்திதேவர் எதிர்ந்தார்; சூரியன், அக்கினி முதல் மூவரையும் சண்டன் எதிர்ந்தான்; முற்பட்டுவரும் சந்திரன், வருணன் முதலியோரை மணிமான் எதிர்ந்தான்.

பம்பை யார்த்தன படலிகை யார்த்தன பணைபோர்க்
கொம்பு தாரைகள் குழறின பிளிறின வேழம்
அம்பு வார்சிலை முற்கர மெறிமழு வடல்வாள்
சம்ப மாதிய படைகொடு தாக்கினர் சமர்மேல். 35

பொ - ரை : பல போர்ப்பறைகள் ஒலிக்க, பலவகைப் படைக்கலங்களைக் கொண்டு போர் புரிந்தனர்.

தாள்க ளைப்பெருஞ் சிரங்களைக் கரங்களைத் தடிந்து
தோள்க ளைச்சிறு புறங்களை யுரங்களைத் துமித்து
வாள்க ளிற்பொரு சாரதப் படைகளை மடுத்துக்
கோள்க ளைப்பொரு கோளென வானவர் கொதித்தார். 36

பொ - ரை : வாள்கொண்டு கால், தலை, கை, தோள், முதுகு, மார்பு என்பவற்றை வெட்டியும் துணித்தும் போர் செய்யும் பூதப்படைகளைக் கலந்து கிரகத்தோடு கிரகம் மோதுவதுபோலத் தேவர்கள் வெகுண்டு எதிர்த்தனர்.

சித்த ரைப்பெருந் தேவரை யியக்கர்விஞ் சையரை
மொய்த்த கின்னரர் கருடர்கிம் புருடரை முரணிக்
கைத்த லத்திநற் புடைத்துவெங் காலினு லுதைத்துத்
தத்தம் வானிடத் தெறிந்தனர் பாரிடத் தலைவர். 37

பொ - ரை : பூதத்தலைவர்கள் சித்தர் முதலிய தேவகணங்களைக் கைகளால் அடித்தும் கால்களால் உதைத்தும் தத்தம் பதவிகளில் செல்லும்படி ஆகாயத்தில் வீசி எறிந்தனர்.

கருநி றத்தெழு காரெனக் கார்முகந் தாங்கி
உருமெ னச்சிறு நாணொலி திசைதொறு மொலிப்பத்
தருமழைப்பெருந் தாரைபோ லமரர்கோன் சரந்தூஉய்
வருக ணப்படை துரந்தெதிர் நந்திமேன் மலைந்தான். 38

பொ - ரை : இந்திரன் இந்திரவில் ஏந்தும் மேகம்போலத் தன்வில்லை வளைத்து, இடி ஓசைபோல நாண் ஒலி எழுப்பி, மழை பொழிவது போல அம்புகளைச் சொரிந்து பூதகணங்களைத் துரத்தித் திருநந்தி தேவரை எதிர்த்தான்.

ஒன்று பத்துநூ றுயிர மெனப்பொலிந் துலவாத்
துன்று பத்திர மாயிரம் வாசவன் றுரப்ப
நின்று நந்திதன் கணிச்சியா லடுதலு நீறுய்ப்
பொன்றி விட்டன விளக்கில்வீழ் பதங்கமே போல. 39

பொ - ரை: ஒன்று, பத்து, நூறு, ஆயிரம் எனும்படி வேறு வேறு எண்ணிக்கையில் அளவிறந்த பாணங்களை இந்திரன் விடுக்க; திருநந்திதேவர் அவற்றைத் தம் மழுப்படையால் தாங்கி அழித்தனர். அவை விளக்கில் வீழ்ந்திறக்கும் விட்டிலை ஒத்தன.

நிரைநி ரைப்பொரு கணையெலா மவ்வண நிகழ
வரையெ னப்பெருங் கதைகொடு மலைந்தனன் மகவான்
புரைத விர்ப்பவன் மழுவினற் போயது பொடியாய்த்
தரைத னிற்சினத் தெறிந்தமட் கலமெனத் தகர்ந்து. 40

பொ - ரை : பின் இந்திரன் பெருங் கதைகொண்டு தாக்கினன்; அதுவும் தரையில் சினத்தால் எறிந்த மட்கலம் சிதறி அழிவதுபோல, திருநந்திதேவர் மழுப்படையால் சிதறி அழிந்தது.

குலிசம் வாசவன் பிடித்தன னிடித்தெதிர் குமுறும்
ஒலியி னுற்பெருஞ் சாரதர் மலைந்தன ருலைந்தார்
வலியை யேயினி நில்லென வள்ளன்மேல் விடுத்தான்
கலைக ளார்த்தன வார்த்தனர் வானவர் கணமே. 41

பொ - ரை: இந்திரன் வைரவேலை எடுத்து, எதிரில் முழங்கிச் சூழ்ந்த பூதகணங்களைச் சிதறச்செய்து, திருநந்திதேவர்மேல், நீர்வல்லிரேல் இதன் எதிர் நில்லும் எனச் சொல்லித் திரித்து விட்டான்; படைக்கலக்கலை ஆரவாரஞ் செய்தது; தேவர்கள் ஆர்த்தனர்.

எரிப ரப்பியெண் டிசைகளும் புகைத்துரு மேறும்
கரிப டப்படர் புரந்தரன் வச்சிரக் கதிர்வாள்
விரிச டைப்பெரு நந்திதன் கணிச்சியின் மிடலால்
எரிக னற்கிடுஞ் சமிதைபோ லடலையா னதுவே. 42

பொ - ரை: அது நெருப்புப்பொறிகளைப் பரவச்செய்து, எத்திசையும் புகை மூட, ஆண் இடியும் கரிந்து போகும்படி வந்தது; ஆயின் திருநந்திதேவர் கரத்திருந்த மழுவின் ஆற்றலால் நெருப்பில் இட்ட சமிதைபோல, சாம்பராகி விட்டது.

வி - கு: அடலை - சாம்பர்.

காயும் வச்சிரப் பொருபடை நெரிதலும் கனன்றுன்
ஆயி ரந்தடங் கண்ணினு னடற்பெருங் கரியைப்
பாய விட்டெதிர் படர்தலுங் களிற்றைவால் பற்றிச்
சீய மொத்தவன் றிசைதொறுங் கறங்கெனத் திரித்தான். 43

பொ - ரை: பின் இந்திரன் தன் யானையைப் பாயும்படி விட்டு, அதன் மேல் ஏறி எதிர்த்துவந்தபோது, சிங்கத்தை ஒத்த திருநந்திதேவர் யானையின் வாலைப்பற்றிக் காற்றாடியைப்போலத் திசைகள்தோறும் சுழலும்படி சுழற்றினர்.

கறைய டிப்பெருங் களிற்றொடுஞ் சுழற்றலுங் கலங்கிப்
பறவை யின்குயி லுருக்கொடு வாசவன் பறந்தான்
மறைபு காதுவிண் மறைதலு மழுவினன் மலையைச்
சிறை யரிந்தவன் சிறையையு மரிந்தனன் செய்யோன். 44

பொ - ரை: இவ்வாறு களிற்றோடு சேர்த்துச் சுழற்றப்பட்டமையால், இந்திரன் குயில் உருவைக்கொண்டு பறந்தான்; இங்ஙனம், தம்மிடம் அடைக்கலம் புகாது மறையத்தொடங்கியபோது, மலைகளின் சிறகுகளைக் கொய்த அவன் சிறகை அறிந்தான் இறைவன்.

இயம னங்கியை நிருதியைப் பரிதியை யிகலி
அயம னங்கியேழ் கரங்களிற் சிலகர மரிந்து
வயம னங்கிபல் லுகுத்துவா னவரைவான் மடுத்துச்
சயம னங்கிபோர்த் தாடின னெறுழ்வலிச் சண்டன். 45

பொ - ரை: சண்டன், இயமன் அக்கினி நிருதி சூரியன் என்போரை எதிர்த்து, ஆட்டின்மேல் ஏறும் (அயம்மன்) அக்கினியின் ஏழ்கைகளில் சில கைகளை அறுத்தான்; வெற்றிபொருந்திய நெருப்புருவச் சூரியனைப் பல்லை வீழ்வித்து, பிற தேவர்களை ஆகாயத்தில் ஓடச்செய்து, வெற்றி இறைவனுகிய இயமனது சட்டையைத் தன்மேல் போர்த்திக்கொண்டு வீரநடம் ஆடினன்.

வருணன் வாயுவைத் தனதனிந் துவைப்பொரு மணிமான்
தருண வேந்தரைச் சேனையைத் தானையைத் தடிந்து
கருணை வாழ்கென விருந்துணும் பருந்தொடு காகம்
அருண மண்டல மறைத்திடும் பந்தரி லார்த்தான். 46

பொ - ரை: வருணன் வாயு குபேரன் சந்திரன் என்பாரை எதிர்ந்த மணிமான் அந்த இளமையுள்ள அரசரையும், அவர்தம் சேனைகளையும் படைக் கலங்களையும் அழித்து, அப்பொழுது அவர்தம் உடலை உண்ணும் பருந்தும் காக மும் சூரிய ஒளியை மறைக்க, அப்பறவைகளால் அமைந்த பந்தர்க்கீழ் இருந்து "கருணை வாழ்க" என ஆரவாரம் செய்தான்.

அடித்து மார்பிடை யுதைத்துமேற் கதுப்பிடை யறைந்தும்
இடித்து மெற்றியுந் துகைத்துமேற் பற்றியு மீர்த்தும்
கடித்தும் விஞ்சையர் விண்ணவர் தானையங் கடலைக்
குடித்து மைப்புயற் குழாமெனத் திரிந்தன கூளி. 47

பொ - ரை: பேய்க்கணங்கள் வித்தியாதரர் தேவர் சேனைகளை அடித்தும் மார்பின்கண் உதைத்தும், கன்னத்தில் அறைந்தும், தாக்கியும், காலால் தூக்கி எறிந்தும், துவைத்தும், பிடித்தும், இழுத்தும், கடித்தும், குருதியைக் குடித்தும் கரிய மேகக்கூட்டம் போலத் திரிந்தன.

சூழு மெண்டிசைக் காவலர் தொலைதலுந் தொலையாப்
பூழி மொய்த்தெழச் சாலையுட் சாரதர் புகுந்தார்
ஊழி யண்டங்க ளுடைப்பபோ லவிக்கட முடைத்தார்
ஆழி மால்பெரு வேள்விகாப் பவனெதி ரடர்ந்தான். 48

பொ - ரை: இங்ஙனம், திசைக் காவலர் தொலைந்தபின், புழுதி எழும்படி பூதர்கள் வேள்விச்சாலையுள் புகுந்தனர். ஊழிக்காலத்து அண்டங்களை உடைப் பதுபோல, அவிகள் வைக்கப்பெற்றிருந்த குடங்களை உடைத்தார்கள்; பாற்கட லில் பள்ளிகொள்ளும் திருமால் வேள்வியைக் காப்பவன் ஆகலின், எதிர்த்து வந்தான்.

தக்க னெங்குளான் சாலையெங் குளதவன் சாலை
புக்க வானவ ரெங்குளார் போதுமின் புகுமின்
சிக்க யாத்திவட் கொணர்மினென் றமரிடைச் சினவி
முக்க ணுயக னருளலுஞ் சாரதர் மொழிவார். 49

பொ - ரை: முக்கண் இறைவனாகிய வீரபத்திரர், தக்கன் எங்கு இருக் கின்றான்? சாலை எங்கு உள்ளது? அதில் வந்திருந்த தேவர் எங்கு உள்ளனர்? உள்ளே வந்து புகுந்து, அவர்களைச் சிறைப்படக் கட்டிக்கொண்டு வருக எனக் கோபித்துக் கூறினார்; பூதர்கள் அவருக்கு மொழிகின்றார்கள்.

வெற்றி யானைவிட் டோடின னிந்திரன் மேதிச்
சிற்றி யானைவிட் டேகின னந்தகன் றேவர்
மற்றி யாவரு மிரிந்தனர் வேள்விகா வலன்போல்
எற்று போர்செயப் புகுந்தனன் முகுந்தனே யென்றார். 50

பொ-ரை: இந்திரன் ஐராவதத்தைவிட்டு ஓடிவிட்டான்; யமன் தன் எருமையாகிய சிறு யானையைவிட்டு ஓடினன்; ஏனைத்தேவரும் சிதைந்து ஓடினர்; வேள்வி காவலன் என்னும் முறையில் போர் செய்யப் புகுந்துள்ளவன் மாயோன் ஒருவனே என்றனர்.

எந்தை யார்பதம் பணிந்துகண் ணிடந்துசாத் தியதும்
வந்தை யாவருள் புரிகெனத் திகிரிவாங் கியதும்
முந்தை யார்திரு வருளினுன் மோலிபெற் றதுவும்
சிந்தை யாலுற மறந்தன னேகொலாந் திருமால். 51

பொ-ரை: சிவபிரான் அடிபணிந்து கண்ணை மலராகச் சார்த்திச் சக்கரம் பெற்றதும், வைகுந்த பதவிபெற்றதும் தன் மனத்தினின்றும் மறந்து விட்டனன் போலும் திருமால்.

வி-கு: இரண்டாம் அடியில் வந்து - ஐயா - அருள் எனப் பிரிக்க, மோலி - முடி.

யாங்கு ளானவன் யாங்குளா னெனப்புகா வெதிர்ந்து
தாங்கு நின்னுழைத் தக்கனைத் தருதியோ சமர்மேல்
ஊங்கு நின்றெதிர் பொருதியோ வென்னலு முருத்து
வாங்கு வெஞ்சமர்க் கெழுந்தனன் கலுழன்மேன் மாயன். 52

பொ-ரை: அவன் எங்கு உளன் எனக் கூறி எதிர்சென்று, காக்கும் நின் கண் உள்ள தக்கனை இங்கே வெளியே தருவிக்கின்ருயா, அன்றிப் போர் மேற் கொள்ளப் போகின்ருயா என வீரர் கேட்க, மாயோன் கருடன்மீது ஏறிப் போர்க்கு முனைந்தான்.

ஒறுத்து மால்சிறு நாணொலி யுருமென வொலிப்ப
மறுத்து வில்லிடு முகிலெனச் சரமழை வரதன்
குறித்த தேரின்மேற் காளிமேற் கூளிமேற் குறண்மேல்
பொறுத்த நந்திமேற் சண்டன்மேற் கணங்கண்மேற் பொழிந்தான். 53

பொ-ரை: எதிர்த்து, திருமால் சார்ங்கம் என்னும் வில் ஏந்தி இடியோசை போல நாணொலி எழுப்பி, மழைத்தாரைபோலப் பாணங்களைத்தூவினன்; அவை வீரபத்திரர் தேர்மேலும், பத்திரகாளிமேலும், கூளிகள்மேலும், பூதகணங்கள் மேலும், திருநந்தி, சண்டன்மேலும், கணங்கள்மேலும் வந்தன.

மாத வன்கணை கணங்கண்மேற் சொரிதலும் வரதன்
மோது தானவர் தயித்தியர் சேனைபோன் முகுந்தா
பூதர் மாப்படை யெளிதென நினையலை பொருபோர்
பேது ருயெனில் வருகென வொருசிலை பிடித்தான். 54

பொ-ரை: வீரர், திருமாலைப் பார்த்து, தானவர் தைத்தியர் போலப் பூதர்களை எளியர் எனக் கருதவேண்டா; மயக்கமின்றிப் போர் மேற்கொண்டே எதிர்வாய் எனின், வருக எனச் சொல்லி ஒரு வில்லை ஏந்தினர்.

வேறு

பிடித்தன னமலன் சாபம் பிறந்தன பகழிக் கூற்றம்
குடித்தன செறுந ராவி குவிந்தன குணபக் குன்றம்
துடித்தன வுடல்கள் சோரி சொரிந்தன கணங்கள் பாட
நடித்தன கவந்த பந்தி நடுங்கின திசைக ளெங்கும். 55

பொ-ரை: உடனே வில்லினின்று பாணங்களாகிய கூற்றுவன் புறப்பட்டான்; பகைத்தோர் உயிர் போயின; பிணக்குவியல் மலைபோல் உயர்ந்தது; குறையுடல்கள் துடித்தன; உடலினின்றும் குருதிபொங்கி வழிந்தது; கணங்கள் பாட உடற்குறைகள் வரிசையாக ஆடின; திசைகள் நடுங்கின.

சேனையைத் துமிக்குஞ் சில்லித் தேர்களைச் சிதைக்குந் தேவர்
தானையைத் தொலைக்குந் தானைத் தலைவரைத் துணிக்குந் தாவி
யானையை யுருட்டும் வாசி யடர்த்தெழு மமலன் பாணம்
வானமுங் கடலுந் திக்கும் வரைகளும் வரையா தேகும். 56

பொ-ரை: வீரர் வாளிகள் சேனையைத் தேர்களை, யானையைக் குதிரையைப் பல வகையில் சிதைத்தன; ஆகாயம், கடல், மலை, எண்திசை எங்கும் தடையின்றிச் சென்றன.

கரங்களைக் கடிந்து நீண்ட கால்களைத் தடிந்தும் வீரர்
உரங்களைப் பிளந்துந் தாவி யுயிர்களைக் குடித்து மோதிச்
சிரங்களைத் துணித்து மூளை தெறிபடத் தகர்த்தும் வானோர்
வரங்களைப் புகுந்து சூறை யாடின வரதன் வாளி. 57

பொ-ரை: அவை தேவர்கள் உறுப்புக்களைக் கிழித்து வரங்களையும் போக்கின.

நீடின விகடர் சேனை நெரிபட வுரங்கள் கீறி
ஓடின வுலகந் தோறு முலவின வொருவன் வாளி
வீடின ருடலங் கீண்டு மெய்ந்நிணம் பருகி யாவி
தேடின திசைக டோறுந் திரிவன பொருவு மாதோ. 58

பொ-ரை: உன்மத்தராகிய தேவர்களது மிகுந்த சேனையை நெரிபடும்படி மார்பைக்கிழித்து ஓடின; உலகந்தோறும் ஓடின. இறந்தவர் உடலதைக் கிழித்து அவர்தம் ஊன் உண்டு உயிரைத்தேடி அலைவதை ஒத்தன.

அமரரா யுடலுண் டார்க ளலகையா யுடலுண் பாராய்ச்
சமருளார் படைகண் மாய்ந்து தம்பிரான் படையாய்ச் சூழக்
குமரியா ணலகைக் கூட்டங் கூளிகள் குரவை யார்ப்பத்
திமிலையார் களத்திற் காகப் பந்தரிற் சீர்வேட் டன்றே. 59

பொ-ரை: முன்தேவராய் வேள்வியில் ஊன் உண்டவர்கள் பின் பேய்களாய் அவ்வூனை உண்பாராய், போரில் படைகளாய் இருந்தவர்கள் இறந்து

வீரபத்திரர்க்கு உரிய பேய்க்கணங்களாய்ச் சூழ்ந்தார்கள். இங்ஙனம் வந்தபெண் ஆண் பேய்க்கூட்டங்கள், கூளிகள் குரவைக்கூத்தாட, போர் வாச்சியம் ஒலிப்ப, காகங்கள்பந்தராய் நிழற்ற மணம் செய்துகொண்டன.

வேறு

நொடிக்கு ளண்டமு மகண்டமும் வெடிபட நொறில்போர்
முடிக்கு மாயினு முடிவிலான் விடுகொடுஞ் சரங்கள்
இடித்தெ ழூந்துல கெவையினு மெண்ணல ராவி
குடித்து மீள்வன பரவுவார்க் கின்னருள் கொடுத்து. 60

பொ - ரை: வீரபத்திரர்விடும் சரங்கள் நொடிப்பொழுது எல்லா உலகையும் அழித்து வலிய போரைமுடிக்கவல்லன; எனினும், அவை இடியோசைசெய்து எழுந்து, எவ்வுலகத்தும் சென்று தம்மைப்பரவினோரைக்காத்துப் பகைவர்கள் (சிவத்துரோகிகள்) உயிரை உண்டன.

வெய்ய வோர்பசு விதிமகன் விதியற்றுன் விரவார்
கையு மெய்களும் யூபமாக் களமமர்க் களமா
நெய்க டுவுவாய் நெருப்புமிழ்ந் தவியுண நிரப்பி
ஐயன் மாப்படை யனந்தமாம் பசுப்படுத் தன்றே. 61

பொ- ரை: விருப்பத்தை உண்டுபண்ணும் ஒரு பசுவையே பிரமன் மகனாகிய தக்கன் விதியை (ஆயுளை) அறும்படி செய்தான் (அஃதாவது, வேட்டான்) வீரபத்திரர் படைகள் பகைவர்கையும் உடம்பும் யாகத்தம்பங்களாக, போர்க்களமே யாககளமாக, நெய்யைத்தூவும் இடம் நெருப்பை மேலிடச்செய்து அவியை ஏற்கும்படி நிரப்பி (நெய்யை உண்டவாய்கள் நெருப்பைப்போன்ற குருதியை உமிழ்ந்து அவியும்படி நிரப்பி) அளவற்ற பசுக்களைப் படுத்தன.

ஏறு வெஞ்சம ரிமையவர் தொலைதலு மெதிர்போர்
வீறு வெஞ்சிலை மாதவன் வளைத்துவெங் கணைகள்
ஆறு நூறெரு தொடைதொடுத் தனனதை யமலன்
நூறு நூறென நூறினு னொருகணை நுதியால். 62

பொ - ரை: தேவர்கள் போரில் அழிந்தபோது, போரில் எதிர்ந்த வில்லை ஏந்திய மாயோன் அதனை வளைத்து ஆறுநூறுகணைகளை ஒரே வரிசையில் செலுத்தினன்; அத்தொகுதியை இறைவன் ஒரேகணையின் கூர்மையால் சின்னபின்னமாக அழித்தான்.

ஆயி ரம்படை காந்தமால் விடுத்தலு மனகன்
பாயி ரும்படை காந்தநே ரொருகணை பணித்தான்
மாய வன்பதி னுயிரங் கணையிருண் மலைந்தான்
தூய வன்கணை யாயிரங் கதிரெனத் துரந்தான். 63

பொ - ரை: சீகாந்தனாகிய மால் ஆயிரம் கணைகளைச் சுடும்படி விடுத்தான்; தூயோனாகிய வீரன் பரந்த இரும்பு அடையும் காந்தத்தை ஒத்த ஒருகணை விடுத்து

அவை அனைத்தையும் கவர்ந்தான். மாயோன் பதினுயிரம் கணைகளால் இருளை உண்டுபண்ண நிமலன் ஞாயிற்றைப்போல் ஒளிவிடும் ஆயிரம் கணைகளை ஏவினன்.

மாரி யிற்சர மாரிபெய் தனன்மழை வண்ணன்
மூரி விற்சரஞ் சூறையின் விடுத்தவை முருக்கிப்
பாரி டத்தவன் முராரிதேர்ப் பரியினைப் படுத்துத்
தேரி டத்தவன் பாரிடத் தவனெனச் செய்தான். 64

பொ-ரை: கணைத்தாரைகளை மழை எனப் பொழிந்தான் கார்வண்ணன்; வலியுள்ள வில்லினின்றும் கணைகளைச் சூறுவளியைப்போல விடுத்து அவற்றை மாற்றி, பூதப்படையை உடைய வீரபத்திரர் திருமாலின் தேரும் பரியுமாகிய கருடனைக்கொன்று திருமாலுக்குத் தேர்த்தானத்தில் இருந்தவனை நிலத்தில் உள்ளவனுகச் செய்தார்.

சேமத் தேர்மிசைக் குதித்தன னெதிர்த்தனன் திருமால்
வாமத் தானையின் வலம்படு கணைகளான் மலைந்தான்
சோமத் தாரவன் சரமொரு தொடையினுற் றுளவத்
தாமத் தான்விடு கணையொடு சிலையையுந் தடிந்தான். 65

பொ-ரை: திருமால் உதவித் தேர்மீது இவர்ந்து, தாவி முற்படும் பூத சேனையின் வன்மையை, அழிக்கும் கணைகளால் எதிர்ஊன்றினன்; சந்திரனைத் தலைமாலையாக அணிந்தவீரர் ஒருதொகுதிகணைகளால் துளவமாலையணிந்த திருமால் விடுத்த கணைகளை வில்லோடும் அறுத்தார்.

புதைய வெஞ்சரஞ் சிலையொடு தொலைதலும் புழுங்கி
இதைய மண்டுறத் தண்டமொன் றெடுத்தரி யிறைமேல்
உதைய மால்வரைக் கிறுதிமால் வரையென வுய்த்தான்
கதையி னுற்கதை யிலையெனக் கடிந்தனன் கடவுள். 66

பொ-ரை: கட்டாக உள்ள கொடிய சரங்கள் சிலையோடு அழிந்துவிட்டமையால், திருமால் மனம் வருந்தி, வீரபத்திரர் மார்பிற்படும்படி உதயகிரிமேல் அத்தமனகிரியை விடுப்பதுபோல், ஒருபெரிய தண்டைவீசினன்; வீரர் தம்கையிலிருந்த தண்டால், இனிக்கதை முடிந்துவிட்டது என்று சொல்லும்படி, தாக்கித் தூளி ஆக்கினர்.

குல்லை மாலினித் திகிரியே படையெனக் குறியா
எல்லை யண்டமும் புவனமு நடுக்குற வெடுத்து
வல்லை யேலினித் தாங்கென வலியினல் விடுத்தான்
ஒல்லை வானவ ரார்த்தனர் சாரத ருலைந்தார். 67

பொ-ரை: துளவமாலை அணிந்த மால் இனி உள்ளது சக்கரப்படையே எனக்கருதி, "நீ வல்லையேல் இதன் வேகத்தைத்தாங்கு" எனச்சொல்லி எவ்வுலகும் நடுங்கும்படி தன் வன்மைகொண்ட அளவு சுழற்றி விட்டான்; தேவர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்; பூதர்கள் அஞ்சி ஓடினர்.

நேமி யம்படை நேமிமால் விடுத்தலு நெரிந்து
பூமி யந்தர நெருப்பெழக் கொதித்தெழும் போதில்
மீமி சைத்தவுங் காரமொன் றிசைத்தனன் விமலன்
காமி யந்தனைப் பக்குவன் மடுப்பது கடுப்ப. 68

பொ-ரை: வட்டமாகிய அழகிய சக்கரப்படையைத் திருமால்விட, அது நிலனும் ஆகாயமும் நிலைகுலைந்து தீ எழும்படி செல்லும் போது தூயோனாகிய வீரன் உரத்த சத்தத்தில் உம் (ஹூம்) என்னும் ஓசையைச் செய்தார், பிறர் பயன் குறித்துச் செய்யும் காமியம் எனப்படும் அறச்செயல்களைப் பக்குவமுதிர்ச்சி பெற்றோன் பயன் குறியாது செய்து அதன் பயனாகிய மனத்தூய்மை அல்லது மெய்யுணர்வை மேன்மேலும் பெறுவதுபோல. பக்குவன் காமியத்தின் குற்றத்தைத்தன் கருத்து வகையால் நீக்கி ஏற்றுக்கொள்வதுபோல, வீரபத்திரர் உங்காரத்தால் திகிரியைப்பகைதீர்த்து ஏற்றுக்கொள்ளுகிறார் என்பது கருத்து.

அலைகள் வற்றுறக் குடித்துமூ வுலகமு மதிர்த்து
மலைக ளைப்பொடித் தெதிர்வரு திகிரிமாப் படையை
மிலைத ரப்புயப் பொருப்பின்மே லேற்றனன் வீரன்
தலைவர் போற்றலை மாலையிற் கடைமணி தயங்க. 69

பொ-ரை: கடல் வற்றவும், உலகம் அதிரவும், மலைகள் நீறு படவும் வந்த சக்கரப்படையை வீரபத்திரர் தம்புயமலையில் அணியாக ஏற்றுக்கொண்டார். சிவபிரான்போல் தாம் அணிந்துள்ள சிரமாலையில் இறுதி மணிபோலச் சக்கரம் விளங்கிற்று.

சண்ட நேமிபோய் வாள்கொடு குறைகடற் சயனன்
கொண்டன் மின்னொடு வருதல்போல் வருதலுங் குமுறி
அண்ட மெண்டிசை வெடிபட வார்த்தன னையன்
விண்டு வாய்வெரீஇ யுருமொலிக் கரவென வீழ்ந்தான். 70

பொ-ரை: சக்கராயுதத்தை இழக்கவே, எஞ்சியுள்ள வாளை விதிர்த்து மேகம் மின்னலுடன் வருவதுபோலத் திருமால் எதிர்த்துவர, வீரபத்திரர் பேர் ஒலி எழ ஆரவாரம்செய்தனர்; திருமால் பேச்சு இழந்து இடிமுழக்கம் கேட்ட அரவைப்போலக் கீழே விழுந்தான்.

வீழ்ந்த வன்றனைத் தடிந்தில னருளினால் விடுத்தான்
ஆழ்ந்த தண்கட லரண்புகுந் தொளித்தன னவனும்
சூழ்ந்த திண்குர லிடித்தலு ந் துடித்துவீழ்ந் தனனே
போழ்ந்தி டும்படை தொடுத்திடி லாற்றுமோ புவனம். 71

பொ-ரை: வீழ்ந்த திருமாலை அருளினால் வெட்டாமல் விடுத்தார் வீரபத்திரர்; குரலிடியிலேயே திருமால் வீழ்ந்தனன் என்றால், பிளக்கும்படை தொகுப்பின் உலகம் தாங்குமோ? திருமால் தம் இடமாகிய பாற்கடல் புகுந்து அதுவே அரணாக ஒளித்தனன்.

சண்ட னுந்திரு நந்தியுந் தனிமணி மானும்
மண்டு மேதிமேற் சண்டனைத் தனதனை மடுத்துக்
கண்ட கால்கனல் வருணனை நிருதியைக் கடைநாள்
கொண்ட லாமென வாய்வழி கறையுகக் குமைத்தார். 72

பொ - ரை: சண்டன், திருநந்தி, மணிமான் என்னும் கணநாதர்கள், எருமை வாகனமுடைய எமனையும், குபேரன், கலந்து எதிர்ப்பட்ட வாயு, அங்கி, நிருதி என்பாரையும். இடித்து மழைபொழிந்தாற்போல வாய் வழி குருதிபொழியும்படி ஒறுத்தார்கள்

ஒருவ னைச்சிவ பரமனைக் கருதலா வுதயன்
ஒருவ னைத்தனி விழிகுறைத் தனர்மதி யுருவாம்
ஒருவ னைத்தலை நிலத்தொடு தேய்த்தய முகைக்கும்
ஒருவ னைக்கரங் களைந்தனர் நாவையு மொறுத்தார். 73

பொ - ரை: ஒப்பற்ற பரமசிவனைக் கருதாத சூரியன் ஒருவனுக்கு (பகன்) ஒற்றை விழியைக் கெடுத்தார்கள். மதியை நிலத்திலே உருட்டித்தேய்த்தார்கள்; ஆட்டை ஊரும் அங்கியின் கையைத் துணித்தார்கள்; நாவையும் அறுத்தனர்,

குடர்ச ரிந்தனர் தாள்குறைந் தனர்கரங் குறைந்தார்
முடிசி தைந்தனர் விண்ணவர் விஞ்சையர் முதலோர்
படுக ளந்தனிற் கிடந்தன ருடல்பதை பதைத்தார்
உடைய நாதனை யிகழ்ந்தவர் யாவரே யுய்வார். 74

பொ - ரை: தேவரும் வித்தியாதரர்களும் குடர் சரிந்தும் கைகால் குறைந்தும், தலைசிதைந்தும் போர்க்களத்திற்கிடந்து பதைத்தனர்: சிவபிரானை இகழ்ந்தவர் உய்வதில்லை.

கணையுங் குந்தமுஞ் சுரிகையுங் கயலினங் கடுப்ப
இணையில் குஞ்சர மிடங்கர்மா வெனவெடுத் தேகித்
திணைநெ டுங்களக் குறுதியா றுயர்பிணத் திரளாம்
அணைக டந்துதேர்க் கலிங்குமுன் சுழிந்துபாய்ந் ததுவே. 75

பொ - ரை: அம்பும் கைவேலும் உடை வாளும் மீனை ஒத்தன; உயர்ந்த யானைகள் முதலைபோன்றன: இவற்றை அடித்துக்கொண்டு பாலை நிலமாகிய போர்க்களத்திற் செல்லும் இரத்த வெள்ளம் பிணக்குவியல்களாகிய, அணையைக் கடந்து தேர் ஆகிய மதகினிடத்துச் சுழித்துப் பாய்ந்தது.

அண்டர் சேனைக டொலைதலு மமர்க்கள மகன்று
மண்டு சாரத ரிருபுடை வலம்புரி முழக்க
விண்ட வேள்வியஞ் சாலையிற் புகுந்தனன் விமலன்
கண்ட பல்வகைக் கணங்கள்மேற் புகுந்தன கணங்கள். 76

பொ-ரை: தேவர்கள் சேனை இங்ஙனம் அழிந்தொழிய வீரபத்திரர் போர்க்களத்தின் நீங்கிப் பூதர் இருபக்கமும் வலம்புரிச் சங்குகளை முழங்கப் புறக்கணிக்கப்பட்ட யாக சாலையுள் சென்றனர். அங்குக்காணப்பட்ட பல வகைக்குழுக்கள் மேலும் சென்றன பூதகணங்கள்.

தூண்கள் பற்றிய பசுக்களை விடுத்தனர் துரப்பார்
ஊண்கள் பற்றிய வமரரை முனிவரை யொறுப்பார்
சேண்கு டத்தவி முனிவர்தஞ் சிரங்கண்மே லுடைப்பார்
வீண்கு வைப்படு திரவியங் கடல்புக வீழ்ப்பார். 77

பொ-ரை: தூண்களில் கட்டப்பட்டிருந்த சாகபசுக்களை அவிழ்த்து ஓடச்செய்தனர்; உணவு உட்கொண்டிருந்த தேவர் முனிவர்களை ஒறுத்தினர்; உயர்ந்த அவி (நெய் பால்) நிறைந்த குடங்களை முனிவர்கள் தலைமேல் வீசி உடைத்தனர்; மிகுதியாகக் குவிந்து கிடந்த வேள்விப் பொருள்களைக் கடலிற் புகும்படி வீசினர்.

தீர்த்த னெம்பிரான் றனையிகழ் வேள்வியைத் தேவர்
பார்த்த கண்களைப் பறிப்பன கேட்டவர் செவியை
ஏர்த்த கைகளை யவிநுகர் நாவினை யீர்த்துக்
கூர்த்த வாளினு லரிந்தன திரிந்தன கூளி. 78

பொ-ரை: தூயோனுகிய சிவபிரானை இகழ்ந்து செய்த வேள்வியைப் பார்த்த கண்களைப்பறித்தன கூளிகள்; கேட்ட செவிகளை அழகுசெய்த கைகளை; அவியைச் சுவைத்த நாவை இழுத்துக்கூறிய வாளால் அரிந்து திரிந்தன.

வாணி யிந்திரை துண்டமுஞ் சசிவன முலையும்
சேண ரம்பைய ரதிதிமற் றவர்குமிள் சிமிழும்
நாணி ரம்பவோ கண்ணெச்சில் கழியவோ நடுவே
காணு முன்பிடித் தரிந்தனள் சொரிந்தனள் காளி. 79

பொ-ரை: கலைமகள் திருமகள் மூக்குகளையும் இந்திராணியின் அழகிய தனத்தையும், தெவலோக அரம்பையர், அதிதிமுதலான மற்றவர் மூக்கும் தன மும், வெட்கப்படவேண்டும் என்றோ அவர்தம் அழகினுல் வரும் திருட்டி குற்றம் கழியவோ மிக விரைவாக அரிந்து வீழ்த்தினள் பத்திரகாளி.

திக்க னைத்தையும் யாகதண் டத்தமர் செலுத்தி
இக்க னைத்தவர் பணிசெய முனிவரேத் தெடுப்ப
முக்க னைத்தழன் முருக்கெனப் பூத்துமுன் னிருந்த
தக்க னைச்சிகை பிடித்துவாள் பிடித்தனன் றலைவன். 80

பொ-ரை: இங்ஙனம் எத்திசையினும் யாகத்திற் கலந்துகொண்டாரை ஒறுக்கும் போர்முடித்து, வீரபத்திரர், இந்நிலத்து (இ+கு) உள்ள அனைவரும் குற்றேவல் செய்ய முனிவர் புகழ் சொல்ல மூன்று வகையாக ஒலி செய்து எழும் கனலை முருக்கமலர் போலச் சுடர்ந்தெழச்செய்து, யாக குண்டத்து எதிரில் இருந்த தக்கனைக் குடுமியைப் பிடித்து வாளையும் எடுத்தனர்.

மக்க டாரமு முலேகண்மூக் கிழந்தமை மதியாய்
திக்க டாமல்விட் டோடிய தேவரைத் திருப்பாய்
மிக்க டாவினே விடிந்ததோ முடிந்ததோ வேள்வி
அக்க டாவுனக் கெளியனே மழுப்படை யமலன். 81

பொ - ரை: உன்மக்கள் மனேவியர் மூக்கும் தனமும் இழந்தமையைக் கருதாய்; உன்னே அடுத்துநில்லாமல் திசைகளில் ஓடிய தேவர்களே மீள உன் பக்கல் வரச்செய்யாய்; வரம்புகடந்து பொருந்தாத வினே பயன்தருவதாயிற்ருே? வேள்வி முடிந்ததோ? சிவபிரான் உனக்கு அவ்வளவு எளியனே?

வேறு

சிற்பரா பரைமகளாச் சிவபெருமான் மருகாக
முற்பராய்த் தவம்புரிந்த முறைமையா லுலகாண்டாய்
தற்பரா பரனேமறுத் திகழ்ந்துதனித் தாய்பாவி
அற்பரா னவர்முடிமேற் றங்குமோ வபிடேகம். 82

பொ - ரை: ஞானவடிவினளாய பராபரை உனக்கு மகளாகவும், சிவபெருமான் மருகனுகவும் முன்னர் இறைவனேப் பரவித் தவம்புரிந்தமையால் உலகை ஆண்டாய்; அந்தப் பராபரனே அவன் உயர்வை மறுத்து இகழ்ந்தமையால் இப்போது தனியானுய்; பாவி! அற்பர்கள் தலேயில் அரச முடி தங்குமோ?

உன்னேயீன் றெடுத்தவனே யுயர்மவுலி தேடவவன்
தன்னேயீன் றெடுத்தவனே தாட்கமலந் தேடநின்ற
என்னேயீன் றெடுத்தபிரான் தன்னேமதத் தாலிகழ்ந்து
சொன்னவாய் சிரத்திெனுடு துணிக்கின்றே னெனத்துணித்தான்.

பொ - ரை: உன்னேப் பெற்ற அயன் முடியைத் தேடவும், அவனே ஈன்ற திருமால் அடியைத்தேடவும் ஒளிப்பிழம்பாய்நின்ற எந்தையை உன்செருக்கால் இகழ்ந்தாய்; அங்ஙனம் இகழ்ந்த வாயைத் தலேயோடு துணிக்கின்றேன் எனச் சொல்லித் தலேயைத் துணித்தார் வீரபத்திரர்.

எச்சகா யத்தவரு மிடைந்துமாய்ந் தனர்போதன்
எச்சனுஞ் சிறுவிதியு மிமைப்பொழுதில் வீடினுன்
எச்சநா மல்லதிலே யெனவிரலே யாயெழுந்த
எச்சனு மவன்றலேயும் வாளினு லறவெறிந்தான். 84

பொ - ரை: வேள்வியில் உதவியாயிருந்த யாவரும் தோற்று இறந்தனர்; துணிந்து முடிவு செய்யும் வேள்வியியற்றுவோனுகிய தக்கனும் ஒரு கணத்தில் இறந்தான்; இனியானே எஞ்சி உள்ளேன் என யாக தெய்வமாகிய எச்சன் மான் உருக்கொண்டு எழலும் அவன் தலேயினேயும் வாளினுல் வீரர் வெட்டிவீழ்த்தினர்.

மந்திரத்தின் முறையறியார் பூசைபோன் மகவேள்வி
இந்திரர்க்கு மிமையோர்க்கு முடியாம லிருந்ததால்
சிந்திரத்த மொடுதக்கன் சிரமறுத்தா குதிபுரிந்து
தந்திரத்தி னுெடுமுடித்தா னுெருகணத்திற் சகநாதன். 85

பொ - ரை: மந்திரமுறை அறியாதார் சிவவழிபாட்டைப்போல வேள்வி இந்திரனுக்கும் பிறர்க்கும் செய்ய இயலாததாய் இருந்தது; சிந்தும் இரத்தத்தோடு தக்கன் சிரம் அறுத்து ஆகுதிசெய்து செயல்முறையோடு ஒரு கணத்தில் வீரர் அவ்வேள்வியை முடித்துவிட்டனர்.

வேறு

அமர ராகவே மகத்திடை யவியுணப் புகுந்தார்
அமர ராகவே களத்திடை யவியுண்டா ரதனுல்
தமர வாரிதி விடமுண்ட தம்பிராற் பரவும்
தமர லாதவர் நினைத்தவா முடிப்பரோ சகமேல். 86

பொ - ரை: தேவர்களாக யாகத்தில் அவியுண்ணப் புகுந்தவர்கள் போர் செய்வாராய் அக்களத்தில் இறந்து ஒழிந்தார்; ஓசை உள்ள கடல் நஞ்சமுண்ட உயிர்கள்நாயகன் அடிபரவும் அடியர் அல்லாதவர் உலகத்தில் நினைத்தபடி முடிக்கவல்லரோ?

உகம ழிப்பவ னனையபோர் வீரனென் னலரைக்
ககம ழித்திடப் பொருதுபோய்க் கணத்தொடு கயிலை
இகன்ம ழுப்படை யெம்பிராற் றெழுவவ னீந்தான்
மகம ழித்ததோர் நாமமு மழிவிலா வரமும். 87

பொ - ரை: ஊழியில் சங்கரிப்பவன்போன்ற வீரபத்திரர் பகைவரைப் பறவைகள் (ககம்) உடலை உண்ணும்படி போர்செய்து முடித்து, தன் கணங்களோடு திருக்கயிலை சென்று இறைவனைத் தொழ; அவன் யாக சங்காரக்கடவுள் என்னும் பெயரும் அழிவிலா வரமும் கொடுத்தான்.

நண்ணு வீரனு நந்திபல் கணமுநா ரதனும்
கண்ண னும்புடை பரவவிற் றிருந்தருள் கயிலைப்
பண்ண வன்றனைப் பணிந்தன ளெழுந்தனள் பகர்வாள்
அண்ணல் பாகமு மாகமும் பிரிகலா வணங்கு. 88

பொ - ரை: வீரபத்திரக் கடவுளும் நந்திகணமும் நாரதரும் திருமாலும் பக்கத்திலிருந்து பரவ எழுந்தருளியிருந்த கயிலைப்பெருமானை அவன் உடம்பையும் பாகத்தையும் பிரியா நங்கையாகிய அம்மை பணிந்தெழுந்து கூறுகின்றாள்.

வேறு

ஏவரும் பரவு நின்னை யெண்ணலா திருந்த தக்கன்
பாவையென் றென்னைக் கூறும் பரிபவ மொழிப்பா யென்று
தேவிநின் றுரைப்ப நாதன் றிருவுள மகிழ்ந்து நம்பால்
ஆவல்சே ரிமவான் செல்வி யாகென வருளிற் போந்தாள். 89

பொ - ரை: எல்லோரும் போற்றும் நின்னைச் சிறிதும் கருதாத தக்கன் மகள் என, என்னை உலகம் கூறும் அவமானம் நீங்கும்படி அருளவேண்டும் என்றாள்; நம்மிடம் அன்புள்ள இமவான் மகள் ஆகுக என, அருளோடு அம்மை இமயமலை சேர்ந்தாள்.

சிறந்தநான் முகத்தோன் போற்றிச் செகங்களின் குறைபா டோதி
இறந்தவ ருயிரை மீட்பா னெம்பிரா னருள்பெற் றேகி
அறுங்கைகால் சிரங்க ளாதி யவயவம் பொருத்து மேல்வை
உறங்கினர் விழித்தா ரென்ன வெழுந்தன ரும்ப ரெல்லாம். 90

பொ - ரை: நான்முகன் சிவபிரானிடத்து உலகத்தின் குறையை எடுத்துக் கூறித் தக்கன் வேள்வியில் இறந்தோரை எழச்செய்ய வேண்டும் என முறையிட, சிவபிரான் திருவருள்தர, அவன் துணிந்த உடல்களைப் பொருத்தியபோது பலரும் உறங்கி விழித்தவர் போன்று எழுந்தனர்.

அத்தலை யூபந் தோறு மவரவர் முடிபெற் றுய்ந்தார்
நெய்த்தலை யூபத் தூடு நிணத்தலை பறிபோய்த் தக்கன்
மைத்தலை யூப மேவி வானவர் தலைமை தீர்ந்தான்
மெய்த்தலை விதியே வந்து விலக்கினும் வினைவி டாதால். 91

பொ - ரை: அங்கு உடற்குறைதோறும் (யூபம்) தலைபெற்று உய்ந்தார்; தக்கன் சிரம் எரியுண்ணப்பட்டமையால் ஆட்டுத் தலையோடுகூடிய உடல்பெற்று அமரர்க்குத் தலைமையாம் நிலையும் இழந்தான்; உண்மையாகப் பிரமனே வந்து வேண்டினும் வினை விடுவதில்லை.

யாகத்தின் வினையாய்த் தக்க னெடுத்தநல் வினையே யென்றும்
சோகத்தீ வினையாய் வந்து சூழ்ந்திடத் துயரி லாழ்ந்தான்
மேகப்பூங் குழலோர் பாக னருளன்றி வினைக ளாலே
பாகத்தி னுயிர்கட் கெல்லாம் பயனறிந் தூட்டற் பாற்றே. 92

பொ - ரை: வேள்விச் செயலாகத் தக்கன் மேற்கொண்ட நல்வினையே என்றும் துன்பம் தரும் தீவினையாக முடிந்து துயர்க்கடலில் மூழ்கினன்; அம்மை பாகனாகிய சிவன் அருளால் அன்றி வினை பக்குவப் படுதலும் பின் விளைவதும் இல்லை.

சிவநெறி யோர்ந்து மோராச் சிறுவிதி செயலின் மாய்வும்
குவவுறு திணிதோள் வீரன் கொற்றமு முரைத்தாம் பின்னர்த்
தவநெறி யில்லான் வேள்விச் சாலைபுக் குழன்ற வானோர்
அவநெறி யடைந்து பாவ மடைந்தமை தொடர்ந்து சொல்வாம். 93

பொ - ரை: சிவநெறியை ஆராய்ந்தும் தான்செய்யும் செயலின் விளைவை ஆராயாத தக்கன் மேற்கொண்ட செயலின் அழிவும் வீரபத்திரர் வெற்றியும் சொன்னோம்; அவநெறி ஒழுகிய தக்கன் வேள்விச்சாலை புகுந்தமையால் தேவர்கள் சிவாபராதம் செய்தவர்களாகிப் பாவம் அடைந்தமையைத் தொடர்ந்து கூறுவோம்.

*தக்கன்வேள்வி அழிந்த சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — 841

# தேவர்கள் சிவத்துரோகமடைந்த சருக்கம்

மோலியிற் பிறைவைத் தாரை முறையிலா திகழ்ந்த தக்கன்
சாலையிற் புகுந்து வேள்வி சமைத்ததீ வினையி னாலே
மேலையி லிமையோர் தம்மை வெண்மதி விரவி லாத
மாலையி லிருள்போல் வந்து வளைந்தது சிவத்து ரோகம். 1

பொ - ரை: பிறைமுடித்த பிரானை முறை பிறழ்ந்து இகழ்ந்த தக்கனது வேள்விச்சாலை புகுந்து கலந்துகொண்ட பாவச்செயலால் தேவர்களை நிலவில்லாத இராக்காலத்தை இருள் சூழ்ந்தாற் போலச் சிவத்துரோகம் சூழ்ந்து கொண்டது.

தளர்மதி முடித்தார் நேயந் தவிர்தலா லமரர் பாவக்
களர்நிலத் திடைக்கா லாழ்ந்த கயக்குழா மென்னத் தாழ்ந்தார்
கிளர்சமத் தஞ்சி யோடிக் கீழ்ப்படு மவுண ராங்கு
வளர்நரிக் கணம்போற் றாக்கி வளமெலாங் கவர்ந்தார் மன்னோ. 2

பொ - ரை: தளர்ந்து வந்த மதியின் கலையை முடியிற்கொண்டு காத்த சிவபிரானிடத்து அன்பு நீங்கினமையால் தேவர் சேற்று நிலத்தில் கால் ஆழ்ந்த யானைக்குழாத்தைப் போலச் செயலற்றனர்; வழக்கமாகப் போரில் அஞ்சி ஓடித் தோற்கும் அசுரர்கள் அவ்வமரர்களை, கால் ஆழ்ந்த யானைகளைத்தாக்கும் நரிகள் போல, தாக்கி வென்று அவர்தம் செல்வங்களைக் கவர்ந்து கொண்டனர்.

பல்லவ முயிர்க்கும் பாரி சாதமும் பசும்பொ னாடும்
செல்வமுஞ் சுரபி சிந்தா மணிகளுந் தெய்வ மாதர்
நல்லெழிற் புணர்வு நீங்கி நல்குர வடைந்தார் கல்லாப்
புல்லர்தம் மருங்கிற் சேர்ந்த புலவர்போற் புலவ ரெல்லாம். 3

பொ - ரை: தேவர்கள் அனைவரும் தமக்கு உரிய தளிர்விடும் பாரிசாத மரமும், பொன்நாடும், செல்வமும், காமதேனு, சிந்தாமணி என்பவற்றையும் தேவமகளிர் புணர்ச்சியினையும் இழந்து வறியர் ஆனர், கல்வி அறிவில்லாத அற்பர்களைச் சேர்ந்த வித்துவான்கள் தம் சிறப்பை இழத்தல்போல.

கவிகையு மரசும் வாழ்வுங் கடவுள்வா ரணமுஞ் செம்பொற்
சிவிகையு மிழந்து காலா லுழந்தனன் தேவர் வேந்தன்
நவியமு மறியு மேந்து நம்பனை நம்பார்க் கென்றும்
புவிதனிற் பிலத்தில் வானப் பரப்பினிற் புகல்வே றுண்டோ. 4

பொ-ரை : இந்திரன் தனக்கு உரிய குடை, அரசு, யானை, சிவிகை முதலியவற்றை இழந்து காலால் நடந்து வருந்தினன்; மழுவும் மானும் ஏந்தும் சிவபிரானிடத்து அன்பில்லார்க்கு மூவுலகிலும் புகல்யாது உண்டு?

இந்திர பதத்தை நீத்த விந்திரன் முதலோ ரெல்லாம்
மந்திரக் கிழவர் சூழ மதிநெறி முறையிற் சூழ்ந்து
தந்திரக் களைக ணுவான் சதுமுகத் தவனே யென்று
சுந்தரப் பதுமத் தண்ண ஞென்னகர் நோக்கிச் சென்ருர். 5

பொ - ரை : தம் பதவியை இழந்த இந்திரன் முதலியோர் சூழ்ச்சிவல்லாரோடு ஆராய்ந்து, தமக்குச் சூழ்ச்சித்துணையாவான் நான்முகனே எனத் தீர்மானித்து அவன் உலகிற்குச் சென்ருர்கள்.

வேறு

பரவை யாரமு துணவுபோய் வாழ்வுபோய்ப் பனிநாள்
இரவு தாமரைக் காடுபோன் முகம்புலர்ந் திமையோர்
குரவ ஞன்முகன் கோயிலின் றிருக்கடை குறுகிப்
புரவி பூண்டதே ரிரவிமுன் கமலமே போன்ருர். 6

பொ - ரை : அமுத உண்டியும் இன்பவாழ்வும் நீங்கிப் பனிக்காலத்தில் இரவில் உள்ள தாமரைமலர்களைப்போல் முகம் கூம்பி வருந்தும் தேவர்கள் தம் தந்தையான நான்முகன் கோயில் வாயிலை அடைந்தபோது சூரியனைக்கண்ட தாமரைபோல் அகமும் புறமும் மகிழ்ந்தார்கள்.

பா - ம் : புலரிமையோர்.

நாலி ரண்டுகட் கமலமு மதிமுக நான்கும்
மேலி ரண்டிரண் டருமறை விரிக்குநாத் தடமும்
பாலி ரண்டினு நாலிரு தடம்புயப் பணைப்பும்
நூலி ரண்டையு மகம்புறந் தரித்தநோன் மார்பும். 7

பொ - ரை : தாமரை போன்ற எட்டுக்கண்களும், மதிபோன்ற நான்கு முகங்களும், நான்மறைகளை விரித்துக்கூறும் நாவின் பெருமையும், இருமருங்கும் எண் தோள்களின் பருமையும், பூணுநூலைப் புறத்தும் வேதநூலை அகத்தும் கொண்டுள்ள வலியமார்பும்.

மீதி லங்குநான் மகுடகோ டிகள்வெயில் விரிப்பும்
காதி லங்கிய குண்டல மொளிவிடு கதிர்ப்பும்
போதி லங்கிய கரங்களுங் கமண்டலப் பொலிவும்
தாதி லங்கிய தாமரைத் தாமமுந் தயங்க. 8

பொ - ரை : முடிமேல் விளங்கும் நான்கு கிரிடங்களின் முனைகள் வீசும் ஒளியும், செவிகளில் விளங்கும் குண்டலங்கள் விடும் சுடர் ஒளியும், தாமரை போல் ஒளிரும் கைகளும், ஏந்திய கமண்டலத்தின் விளக்கமும், மகரந்தத்தோடு விளங்கும் தாமரையாகிய அடையாள மாலையும் விளங்க.

நாவின் மாடத்து நறைவிரி நளினபீ டத்துத்
தேவி பாரதி மகிழ்வொடு சிறந்துவீற் றிருப்ப
ஆவி பேதக மனந்தகோ டிகளுமங் குரிப்பத்
தாவில் வேதமு மங்கமுங் கலைகளுந் தளிர்ப்ப. 9

பொ - ரை: நாவாகிய இடத்து வெண்டாமரை இருக்கையில் கலைமகள் மகிழ்வோடு சிறந்து வீற்றிருப்ப, எண்ணில்கோடி உயிர்வகைகள் தோன்றும் படி. குற்றமற்ற வேதம், அங்கம், மற்றும் கலைகள் வளரும்படி.

மடன்மு றுக்கவிழ் வனருக மண்டப நாப்பண்
சுடர்வி ளக்கென வுறைதரு சுருதிவா னவனைக்
கடல்கொ ழித்தன கருணையங் கடவுளைக் கண்டார்
இடர்த விர்த்தன மினியென விறைஞ்சின ரிமையோர். 10

பொ - ரை: பிணிப்பு நீங்கி அலராநிற்கும் தாமரையாகிய மண்டபத்தில் விளக்குச்சுடர்போல இலகும் மறைக்கிழவனைக் கண்டார்; இனி நம் இடர் நீங்கினேம் என எண்ணி வணங்கினர்.

வான மாதியா லுயிர்க்குடல் கரணங்கள் வயக்கி
ஏன போகமும் புவனமும் வினைவழி யிசைத்து
மேன காலமுங் கருமமு நடைபெற விதிக்கும்
தான பங்கயாச் சிரமனே பரமனே சரணம். 11

பொ - ரை: ஆகாயம் முதலியவற்றால் உயிர்களுக்கு உடலும் அந்தக் கரண முதலியனவும் விளங்கச்செய்து, பிறவாகிய நிலனும் நுகர்ச்சியும் வினைக் கீடாகக் கொடுத்து, மேலான காலதத்துவமும் நியதிதத்துவமும் நடைபெறும்படி படைக்கும் பதவியையுடைய, தாமரையாகிய நிலையத்தில் எழுந்தருளும் மேலோனே, உன்னைப் புகலிடமாக அடைந்தோம்.

வான நாதனே மண்பொதுத் தந்தையே மறைதேர்
கான வேதியர் களைகணே கருதுவார் கனியே
ஞான பாரதி நண்பனே நாற்பெருங் கோணில்
பானு வாயொளிர் பகவனே சரணெனப் பணிந்தார். 12

பொ - ரை: தேவருலகத்தலைவனே; நிலவுலகப்பொதுத்தந்தையே; வேதங்களை ஆராயும் சுரங்களில் வல்ல மறையவர்களுக்கு அரணாக உள்ளவனே; நினைப்பவர்க்குக் கனிபோல் இனிப்பவனே; அறிவு மயமான கலைமகளது துணைவனே; நாற்பெருங் கோணத்தில் சூரியனாய் விளங்கும் தொழத்தக்கோனே; உன்னைப் புகலாக அடைந்தோம். நாற்கோணம் - பிருதிவி மண்டலம்.

எந்தை யேயென விறைஞ்சுவார்க் கெதிர்முகங் கொடுத்து
நொந்த வானவ ரெழுமெனத் திசைமுக னோக்கி
வந்த காரணம் யாதெனப் பவளவாய் மலர்ந்தான்
அந்த ராதிபன் பரவிவாய் புதைத்துநின் றறைவான். 13

பொ-ரை: எமது தந்தையே என வானவர் இறைஞ்சினர்; அவர்களை இரக்கத்தோடு பார்த்து, வருந்தும் தேவர்களே, எழுமின் எனக்கூறி, நீர் இங்கு வந்த காரணம் யாது எனவினவின்ன் பிரமன்; இந்திரன் மேலும் புகழ்ந்துவாய் பொத்தி நின்று கூறத்தொடங்கினன்.

சேம மாநிதித் திறைகொண்டு வந்தெமைப் பரவும்
நாம வாளுடைத் தானவர்க் குடைதந்து நலிந்தோம்
காம தேனுவுங் கற்பகக் கானமு மிழந்தோம்
சோம சூரியர் வழங்கிடாத் திசைதொறுஞ் சுழன்றேம். 14

பொ-ரை: வைப்பாகிய சிறந்த நிதிகளை நமக்குக் கப்பமாகச் செலுத்தி நம்மைப்புகழ்வோராகிய, அச்சந்தரும் வாள் ஏந்தும் அசுரர்களுக்கு யாங்கள் தோற்றுத் துயரடைந்தோம்; காமதேனுவையும் கற்பகவனத்தையும் இழந்தோம்; சந்திரர் சூரியர் வழங்காத இடங்கள் தோறும் சென்று வருந்தினேம்.

வான மாநதி வைகறை யாடலு மறந்தோம்
தான பானமுஞ் சந்தியு நியதியுந் தவிர்ந்தோம்
பீன மார்தனத் தரம்பையர் முயக்கமும் பிரிந்தோம்
கான மாமறை யுறுதிபோய் வறிதுநாட் கழித்தோம். 15

பொ-ரை: வைகறையில் தேவகங்கையில் முழுகுதலை மறந்தோம்; தொடும் இடங்களையும், ஆசமித்தலையும் தியானித்தலையும் ஏனைய நியமங்களையும் கைவிட்டோம்; பருத்ததனம் உடைய அரம்பைமகளிரைப் புணர்தலையும் விடுத்தோம்; பண்ணேடுகூடிய வேதம் ஓதும் உறுதியை இழந்து வீணக நாட்களைக் கழித்தோம்.

வசைக்க லம்புனை யவுணராஞ் சுறவின மடுப்ப
விசைக்க லங்கவிழ் வணிகர்போ லிடர்க்கடல் வீழ்ந்தோர்
நசைக்க லந்தன நறுஞ்சுவைக் கலந்தன நல்யாழ்
இசைக்க லந்தன மெமக்கிவை புகுந்தன வென்றூர். 16

பொ-ரை: இகழ்ச்சியாகிய அணிகலம் பூண்ட அவுணர்களாகிய சுருக்கள் தடுக்க, கடலில் விரைந்து செல்லும் மரக்கலம் கவிழ்ந்த வணிகர்போல், நன்மை பலவும் இழந்து துன்பக்கடலில் ஆழ்ந்தோம்; அன்பிற்கும், சுவையுடைப் பொருளுக்கும், நல்லயாழ் இசைக்கும் விரும்பிக்கிடைக்கப்பெருமல் வருந்தினேம் (அலந்தனம்); எமக்கு நிகழ்ந்தது இது என்றனர் தேவர்.

மிக்க நான்முகன் விளம்புவா னென்மகம் விலக்கித்
தக்க னவை னல்லதற் கோமகஞ் சமைத்தான்
உக்க பேரவி யுருத்திர பாகமு மொழித்தான்
முக்க ணயகன் றன்னையு மிகழ்ந்தனன் முடிவால். 17

பொ-ரை: அறிவுமிகுந்த பிரமன் கூறுவான்: யான் செய்யப் புகுந்த வேள்வியைத் தடைசெய்து, தக்கன் வேள்வி செய்யப் புகுந்தது நன்மை விளைவதற்காகவா? தீயின்கண் தரப்படும் அவியில் உருத்திரர்க்கு உரிய பாகமும்

தராமல் தடுத்தான்; தன்முடிவு வருவித்துக்கொள்ளும் வகையில் சிவபிராஜேயும் இகழ்ந்தனன்.

தகவின் மக்களே யழைத்தன னழைத்திலன் சதியை
அகில முற்றவு மீன்றரு ளன்னேயென் றுணரான்
வகையு ணர்த்தவு முணர்ந்திலன் மதத்திஞ லழிந்தான்
புகலி னுங்கெடு மதிகள்கண் டோற்றுமோ புலவீர். 18

பொ-ரை: தேவர்களே, அத்தக்கன் தகுதி இல்லாதவர்களேத் தன் வேள்விக்கு அழைத்தனன்; சதியை அழைக்கவில்லே; சதி உலகத்தைப்படைத்த அன்னே என்பதையும், உணரவில்லே; அறிஞர் உணர்த்தவும் உணரமறுத்துத் தன் செருக்கால் அழிந்தான்; கெடுமதிகளுக்கு எவ்வளவு சொன்ஞலும் அறிவு விளங்காது.

அறிவி லானவ னப்படி யாகுவா ஞகில்
பொறியி லீருங்கள் புத்தியும் வெறுவிதாய்ப் போமோ
எறிம ழூப்படை யிறைவனே ஆவரே லிகழ்ந்த
நெறியில் யாவரு நிற்பரோ நீவிரே நின்றீர். 19

பொ-ரை: அறிவற்ற தக்கன் அங்ஙனம் ஒழுகினும், பொலிவுள்ள நீங்களும் உங்கள் அறிவைப் பயனற்றதாக்கியது என்னே? சிவபிராஜே ஆக்கப் பாடு எய்துவார் யாரும் இகழார்; நீங்களோ அவஜே இகழும் நெறியில் நின்றீர்.

ஆதி யார்விட முண்டதா லமரரா யமர்ந்தீர்
காதி முப்புரம் வென்றதாற் கனகநாட் டுறைந்தீர்
மாது பாகர்செய்ந் நன்றியை மறத்தலின் மகத்தால்
ஓது நல்விஜே தீவிஜே யானதா லுமக்கே. 20

பொ-ரை: முதல்வன் முன் ஆலகால நஞ்சை உண்டு உங்களேக் காத்தமையால் நீங்கள் மரணம் இல்லாதவர்களாய் விரும்பி இருந்தீர்; அவன் முப்புரம் எரித்தமையின் பொன்னுட்டில் இருந்து இன்புற்றீர்; உமையொரு பாகன் செய்த நன்றியை மறந்தமையின், தக்கன் யாகத்தால், வேதத்தில் நல்விஜே எனக் கூறப்பட்டது உமக்குத் தீவிஜேயாய் விளேந்தது.

நந்தி நாயகன் முகுந்தஜேப் படைப்பநா னவன்றன்
உந்தி மாமலர் மிசையவ னருளிஞ லுதித்தேன்
அந்த நாண்முத லீன்றுகாத் திருந்தன மதனுல்
எந்தை யாரலா லெமக்குமோர் களேகண்வே றுண்டோ. 21

பொ-ரை: ஆநந்தி (பேரின்பன்) ஆகிய தலேவன் திருமாலேப் படைப்ப, யான் அத்திருமாலின் உந்தியிற்ருேன்றிய தாமரையில் சிவபிரான் அருளால் தோன்றினேன்; அன்றுமுதல் யாங்கள் இருவரும் முறையே உலகைப் படைத்தும் காத்தும் வருகின்ருேம்; ஆதலால், சிவபிரான் அருள் அன்றி எங்களுக்கும் ஒரு சார்பு உண்டோ?

அனந்த சாயியும் யானுமேத் தமலனை யரவம்
புனைந்த வேணியெம் புனிதனைப் பொருளெனப் போற்றீர்
மனங்கொண் மாமறை யோதியுஞ் சுவர்க்கமேல் வதிந்தும்
கனங்கொண் மெய்ந்நெறி கடந்தனிர் நவையுறக் கடவீர். 22

பொ-ரை: ஆதிசேடன்மேல் பள்ளிகொள்ளும் திருமாலும் யானும் புகழ்ந்து இறைஞ்சும் தூயோனை, சடையில் பாம்பணிந்த முதல்வனை முதற்பொருள் எனத் தெளிந்து போற்றுவீர் அல்லீர்; மனப்பாடம் செய்யப்படும் சிறந்த வேதத்தை ஓதியும், சுவர்க்கத்தில் சிவன் அருளால் வாழ்ந்தும் உயர்ந்த மெய்யான இறை நெறியைக்கடந்து நடந்தீர்; அதனால் நீங்கள் தீங்கை அனுபவித்தற்கு உரியீர்.

பாவ மேதரும் பழிதரும் பகைவராற் படுக்கும்
தாவ சோபமே விளைத்திடுங் குலத்தையு ந் தாழ்க்கும்
ஆவ தாம்பொரு ளழித்திடு நரகிடை யழுத்தும்
தேவ ராகிலும் விடுத்திடு மோசிவத் துரோகம். 23

பொ-ரை: சிவபிரானுக்குச் செய்யும் குற்றங்கள் பாவம் பழி இரண்டையும் தரும்; பகைவரால் கொல்விக்கும்; வெய்ய சோர்வையே வளர்க்கும்; குலத்தை இழிவுபடுத்தும்; வளரும் செல்வத்தை அழிக்கும்; நரகில் வீழ்த்தும்; தேவராயினும் அப்பிழை பயன்தராது-விடுமோ?

கறைய ணிந்திடுங் கண்டனைப் பழித்திடுங் கயவோர்
இறைசி வாகமஞ் சிவபுரா ணங்களை யிகழ்வோர்
முறைமை யன்பரை யன்பர்வே டங்களை முனிவோர்
மிறைசெய் கும்பிபா கக்கொடு நரகிடை வீழ்வார். 24

பொ-ரை: திருநீலகண்ட முதல்வனை இகழ்வோர், அவனால் கொடுக்கப்பெற்ற சிவாகமம் சிவபுராணங்களைப் பழிப்போர், அவன் அடியார்களையும் அவர்தம் திருவேடத்தையும் வெறுப்போர், துன்பம் விளைக்கும் கும்பிபாகம் (சேற்றுப்பகுதி) எனப்படும் நரகில் வீழ்ந்து வருந்துவர்.

எழுந்தி டாநர கழுந்தியு மியமதண் டத்தின்
கழுந்தி னலடி யுண்டுமே கற்பங்கள் கழிவார்
செழும்பு னற்சடை யெம்பிரான் சிவநெறி யகன்று
பழங்க ணெய்திடப் பரமதம் புகுந்தபா தகரே. 25

பொ-ரை: அழகிய சடைமுடிக்கடவுளது சிவநெறியை விலகித் துன்பம் வரும்படி பிறசமயம் புகும் பாவிகள் எழுந்திடாத நரகத்தில் வீழ்ந்தும், இயமனது தண்டின் அடியால் அடியுண்டும் பலகாலம் கழிப்பர்.

ஆகை யாலுமைச் சிவத்துரோ கம்பிடித் தலைப்ப
வாகை தானவர்க் கீந்துமா சுணப்படங் கிழிக்கும்
தோகை கோம்பியாற் சுழல்வதொத் தீரது தொலைந்து
போக யான்முத லெந்தையா லியற்றவும் போமோ. 26

பொ - ரை : இதனுல், உம்மைச் சிவத்துரோகம் பற்றினமையின் அசுரர்க்கு அதுவெற்றியைக்கொடுத்தது; பாம்பின்படத்தைக் கிழிக்கவல்ல மயில் அற்ப பிராணியாகிய பச்சை ஒந்திக்கு அஞ்சி அலேவதைப்போல நீங்கள் அலேந்து துன்புற்றீர்; அத்துரோகம் நீங்குவதற்கு என்னுலும் எனக்கு முதலாகிய மாயோனுலும் தீர்வு இயற்றல் முடிவதன்று.

வேறு

வேதநெறிக் கடங்காத பாவமியான் போக்குவனென் விதியிற் றீராப்
பேதமுறு பாவமெலா மாலொழிப்ப னவனுலும் பிரியாப் பாவம்
தாதவிழ்கொன் றைச்சடையான் போக்குவிப்ப னவனருளாற் றவிராப்
சீதரனுர் தம்மாலு மெம்மாலு மெவராலுந் தீர்க்கொ ணுதால். 27 [பாவம்

பொ - ரை : வேத நெறியில் வராத பிற பாவங்களே யான் போக்குவேன்; என் கட்டளேயில் நீங்காத வேருன பாவங்களேத் திருமால் தீர்ப்பர்; அவராலும் தீர்த்தற்கரிய பாவங்களேச் சிவபிரான் போக்குவன்; அவன் அருளால் நீங்காத பாவம் இல்லே; அப்படி ஒரு பாவம் இருப்பின், அது திருமறுமார்பனுலும் என்னுலும் யாராலும் தீர்த்தற்கு ஒண்ணுததே ஆம்.

ஓராத கோகத்தி பிரமகத்தி திரிகத்தி யொன்றென் றேற்றம்
சாராத குருத்துரோ கஞ்சனத்து ரோகஞ்சா மித்து ரோகம்
நேராக வொன்றிலொன்று நூறுமடங் கதிகமிவை நீங்கு மேனும்
தீராது தீராது சிவநெறியிற் பிழைத்தவர்தஞ் சிவத்து ரோகம். 28

பொ - ரை: அறியாதுசெய்த பசுக்கொலே, அந்தணனேக் கொல்லுதல், பெண்கொலே, இவை ஒன்றின் ஒன்று கொடுமை மிக்கவை; வரக்கூடாத குரு நிந்தை, மக்கள் நிந்தை, கடவுள் நிந்தை இவை ஒன்றற்கு ஒன்று நூறுமடங்கு மிக்க கொடுமை உடையவை; இவை தீருமேனும், சிவநெறி பிழைத்தமையால் வரும் சிவத்துரோகம் தீர்வதில்லே.

என்றுதிசை முகனுரைத்து நின்றுமுறை யிடுவாரேர்க் கிரங்கிப் பின்னும்
தொன்றுசே ரகிலாண்டத் துள்ளசிவா லயங்களெலா ந்தொழுவீ ராகில்
அன்றுபோ முமதுவினே யல்லதெனில் வகைநான்குண் டவைக ளுன்கில்
ஒன்றுசெயத் தீருமெனத் தொகையுணர்த்தி வகைவினவ வுணர்த்து
[கின்ருன். 29

பொ - ரை: இங்ஙனம் வானவர்க்கு நான்முகன் கூறினுன்: தேவர்கள் பின்னும் நின்று முறையிட்டனர்; பழமையாகிய எல்லா உலகிலும் உள்ள சிவபிரான் திருக்கோயில்கள் அனேத்துஞ் சென்று தொழுவீராயின் அன்றுதான் உமது தீவினே கழியும்; அன்றி வேறுவழி வேண்டும் எனின், நான்குவகைகள் உள்ளன; அவற்றுள் ஒன்று செயின் தீவினேதீரும் எனக்கூறி, அதன்வகையைத் தேவர்கள் விரும்பிக் கேட்கக் கூறுகின்ருன்.

### வேறு

பூதலமே லோசனையோ ரிலக்கம் பானுப்
புதுமதியோ ரிலக்கமுடு மேலொன் ருகும்
மேதைபுகர் செவ்வாய்பொன் சவுரி தானம்
மேன்மேலே யிவ்விரண்டா விளங்கித் தோன்றும்
ஆதிமுனி வோரெழுவர் தான மேலொன்
றப்புறமோ ரிலக்கமென்பர் துருவ தானம்
மேதினியி லிருந்துபுவ லோகங் காறும்
விலக்கரிய தொகைபூவைந் திலக்க மாமால். 30

பொ - ரை: நிலவுலகத்தின் மேலே சூரியமண்டலம் ஓர் இலக்க யோசனை தூரத்தில் உள்ளது; அதன்மேல் சந்திரமண்டலமும் அதன்மேல் நட்சத்திர மண்டலமும் ஒவ்வோரிலக்க யோசனை தூரத்தில் உள்ளன; அதற்குமேல் இவ்விரண்டு இலக்க யோசனை தூரத்தில் புதன், சுக்கிரன், செவ்வாய், வியாழன், சனி என்போர் சுழலும் இடம்; சனிக்குமேல் ஏழுமுனிவர் இடம் ஓரிலக்க யோசனை; அதன்மேல் துருவனிடம் ஓரிலக்கம் யோசனை; இங்ஙனம் நிலவுலகத்தின் குறுக்கு உயர்வு பதினைந்து இலக்க யோசனையெனக் கண்டுகொள்க.

வி - கு: மேதை - புதன்; சவுரி - சனி.

சுவலோக மிலக்கமெண்பத் தைந்து மேலே
சொல்லரிய மகலோக மிரண்டு கோடி
நவமேவு சனலோக மிருநாற் கோடி
நண்ணுதவ லோகமும்பன் னிரண்டு கோடி
இவைமேற்சத் தியலோக மீரெண் கோடி
எம்பதமுக் கோடியரி பதமுக் கோடி
சிவலோக நாற்கோடி பித்தி கோடி
செப்புதொகை யுரைக்கிலைம்பான் கோடி பார்மேல். 31

பொ - ரை: புவலோகத்தின்மேல் சுவலோகம் எண்பத்தைந்து இலக்கம் யோசனை உயரத்தில் உள்ளது; அதற்குமேல் மகலோகம் இரண்டுகோடி யோசனை; அதன்மேல் சனலோகம் எட்டுக்கோடி யோசனை; தவலோகம் பன்னிரண்டுகோடி யோசனை; இவற்றின்மேல் சத்தியலோகம் பதினறுகோடி; அதற்குமேல் பிரமனது மண்டலம் முக்கோடி; மாயோன் பதம் முக்கோடி; சிவலோகம் நாற்கோடி; அதற்குமேல் அண்டச்சுவர் ஒருகோடி யோசனை. இங்குச் சொன்ன தூரங்களைக் கூட்டின் நிலத்திற்குமேல் அண்டமுகடுவரை ஐம்பது கோடி யோசனை உயரம் ஆகும்.

பூதலத்தின் கனமிலக்க மெண்பா ருகும்
புயங்கமெட்டுஞ் சேடனுமெண் களிறுங் கீழாய்
மாதலத்தைத் தாங்கிநிற்கு மதன்கீழ்க் கோடி
மற்றிருபா னிலக்கமா டகர்தங் கோயின்

மேதகுபன் னகரரக்க ரவுணர் சூழ்வோர்
விடுத்ததல முதலேழு மேழொன் பானும்
சோதிபெறு கூர்மாண்டர் பதங்கீ ழொன்பான்
தொண்ணூற்றென் பானிலக்க மதன்கீழ்க் கும்பி. 32

பொ - ரை: நிலவுலகத்தின் கனம் எண்பது இலக்க யோசனை; இதனை எட்டு நாகங்களும் ஆதிசேடனும் எட்டு யானைகளும் தாங்கிநிற்கும்; அதன்கீழ் ஆடகேசர் கோயில் ஒருகோடியே இருபது இலக்கம் யோசனை; அவரை நாகர் இராக்கதர் அசுரர் எனச் சூழ்வார்க்கு விடுத்த அதலம் முதலிய ஏழனுக்கும் அறுபத்துமூன்று இலக்க யோசனை; ஒளியுள்ள திருமேனியையுடைய கூர்மாண் டர் இருக்கை ஒன்பதிலக்க யோசனை; அதன்கீழ்த் தொண்ணூற்றென்பது இலக்க யோசனை ஆழம் கும்பி என்னும் நரகம்.

இருணிலமு மெழுநான்கு கோடி யாகும்
இலக்கமிரு பத்தொன்பான் கீழ தாக
ஒருகமட மிருக்குமிட மொருகோ டிக்கீ
ழுயங்குநெடும் புகைப்படல மைந்து கோடி
மருவுறுமக் கினிச்சுவலை பதின்கோ டிக்கீழ்
வயங்குகா லாக்கினியின் வரதர் கோயில்
பெருகுபித்தி கோடியதன் கனமோர் கோடி
பெரும்புவிக்கீ ழுலகமைம்பான் கோடி யாமால். 33

பொ - ரை: ஆங்கு உள்ள இருள் உலகம் இருபத்தெட்டுக் கோடி யோசனை; அதன் கீழ் இருபத்தொன்பது இலக்க யோசனைக்கீழ் ஓர் ஆமை இருக்கும்; அஃது இருக்கும் நிலம் ஒருகோடி யோசனை ஆழம் உடையது; புகைப் படலம் ஐந்துகோடியும், அக்கினிச்சுவாலை பத்துக்கோடியும் தோன்ற உள்ள காலாங்கி உருத்திரர் கோயில் ஒருகோடி யோசனை; அதன்கீழ் அண்டச்சுவர் ஒருகோடி யோசனை ஆழம். இங்ஙனம் நிலப்பரப்பின்கீழ் ஐம்பதுகோடி யோசனை ஆழம் உடைத்து இவ்வண்டம்.

வேறு

கோவலைய நடுமுதலா நாவலொடு தேக்கு
குசைகவுஞ்ச மிலவிறலி புட்கரமே யாகப்
பாவலவர் புகழ்தீவு மேழாகு முப்பு
பாறயிர்நெய் கரும்புமது நீர்க்கடலே ழாகும்
நாவலந்தீ வோரிலக்க மிரட்டிமேன் மேலும்
நரலையுப்பு முதலேழு மன்னவே யாகு
மேவுதிரைக் கடலேழுந் தீபமோ ரேழு
மிருகோடி யைம்பதினன் கிலக்கம்யோ சனையே. 34

பொ - ரை: நிலவட்டத்தின் நடுமுதலாக நாவல், தேக்கு, குசை, கிரௌஞ்சம், இலவு, இறலி, புட்கரம் என ஏழுதீவுகளும், இவை ஒவ்வொன்றை யும் முறையே சுற்றி உவர்நீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன், தூயநீர்

இவற்ருலாகிய ஏழுபெருங் கடலும் உள்ளன; இவற்றுள் நாவலந்தீவு ஓரிலக்கம் குறுக்களவு உள்ளது; அதைச் சுற்றியுள்ள உவர்க்கடலின் அகலம் ஓரிலக்கம் யோசனை; தேக்குத்தீவின் அகலம் இரண்டிலக்கம் யோசனை; அதைச்சூழும் பாற்கடலின் அகலமும் அது. இங்ஙனம் தீவுகளும் கடலும் பின்வருவன முன் உள்ளவற்றின் இரட்டி அகலம் உடையவை. ஆக ஏழுகடலும் ஏழுதீவும் இரு கோடியே ஐம்பத்துநான்கிலக்கம் யோசனை.

வி - கு: சொற்சுருங்குதற்கு இருகோடி ஐம்பத்து நான்கிலக்கம் எனினும், நாவலந்தீவின் விட்டம் ஓர் இலக்கம் ஆகலின், அதன் மையத்திலிருந்து சுத்தோதக எல்லைவரை எத்திசையிலும் உள்ளதூரம் ஐம்பத்து மூன்றிலக்கத்து ஐம்பதாயிரம் யோசனை எனக் கருத்திற்கொள்க. நாவலந்தீவின் ஆரம் 50,000 யோசனை. இங்ஙனம் கொண்டாலன்றி பின்கொடுக்கும் எண் பொருந்தாது.

சூழ்கனக பூமிபதின் கோடி யப்பால்
சுடர்த்திகிரி வரையதனைச் சூழா நிற்கும்
வாழ்வரையின் பெருங்கனமோ ரயுத மாகும்
வளைந்தபுறக் கடல்கோடி யிருபத்தே ழிலக்கம்
பாழிருண்ட பூமிமுப்பா னைந்து கோடி
பத்தொன்பா னிலக்கமுட னயுத நான்கா
வாழ்கனபித் திகைகோடி யாக மேரு
வரைக்குநிலந் திசைகடோ றைம்பான் கோடி. 35

பொ - ரை: இவற்றைச் சுற்றியுள்ள பொன்மயமான நிலத்தின் அகலம் பத்துக்கோடி யோசனை; ஒளிவிடும் சக்கரவாளகிரி அப்பாற்சூழ்ந்து நிற்கும்; அதன் கனம் பதினுயிரம் யோசனை ஆகும்; எல்லாவற்றையும் வளைத்து நிற்கும் பெரும்புறக்கடலின் அகலம் ஒரு கோடியே இருபத்தேழ் இலக்கம் யோசனை; சக்கரவாளகிரிக்கும் நாயகக்கடலாகிய பெரும் புறக்கடலுக்கும் இடையேயுள்ள வெற்றிடமாகிய இருள்நிலத்தின் அகலம் முப்பத்தைந்துகோடியே பத்தொன்பது இலக்கத்து நாற்பதினுயிரம் யோசனை; மிக்க கனமுள்ள அண்டச் சுவர் ஒரு கோடி யோசனை; இங்ஙனம் ஆக, மேருவரைமையத்திலிருந்து அண்டத்தின் ஆரம் எத்திசையினும் ஐம்பது கோடி ஆதலைக் கண்டு கொள்க.

வாசனையைம் பதுகோடி திசைதோ றுன
மகிதலஞ்சூழ்ந் தாலயங்கள் வணங்கு வீரோ
யோசனையைம் பதுகோடி வான்மே லேறி
யுயர்விடையார் பதம்பரவித் தீர்க்கின் றீரோ
தேசனையைம் பதுகோடி யிறங்கிக் கீழ்போய்ச்
செறிந்தபா தலங்கடந்து காண்கின் றீரோ
ஈசனையே நினைந்தொருபாற் றவஞ்செய் வீரோ
விவைநான்கி லுமதுகருத் தியம்பீ ரென்ருன். 36

பொ - ரை: எங்கும் தங்குவோனை, திசைதோறும் ஐம்பதுகோடியோசனை நீளமுள்ள கோளவடிவமான இவ்வண்டத்தில் உள்ள திருக்கோயில்கள்தோறும் சென்று வணங்க விருப்பமா, அன்றி ஆகாயத்தில் ஐம்பதுகோடி மேற்சென்று அங்குள்ள சிவலோகத்தில் முதல்வனைக்கண்டு இறைஞ்சிச் சிவத்துரோகத்தைத்

தீர்த்துக்கொள்வீரா; அன்றி ஒளியுடைப் பரம்பொருளை ஐம்பதுகோடி யோசனை கீழ்ச்சென்று பாதலங்கடந்து காணவல்லீரா, அன்றி, ஓரிடத்திருந்து ஈசனையே நினைந்து தவம்புரிகிற்பீரா இந்த நான்கு வகையில் எதனைச் செய்யக் கருது கின்றீர்கள் கூறுங்கள் என அயன் தேவர்களை வினவினன்.

வி - கு: வாசன் - எங்கும் தங்கும் இறைவன், சிவபிரான்; ஈசாவாஸ்யம் இதம் ஸர்வம் (இஃதனைத்தும் ஈசன் தங்கும் இடம்) - ஈசாவாஸ்ய உபநிடதத்தின் முதல் தொடர்.

மேலான சிவபதத்தி னுயர்ச்சி தானும்
மேதினியெண் டிசைபரந்த விரிவுங் கீழ்மைப்
பாலான பாதலமு நரகின் வீறும்
படர்புகையுங் கனற்சிகையும் பரிந்து தாவிக்
காலாங்கி யுருத்திரரைக் காணு மாறுங்
கருத்திலுன்னி நடுநடுங்கிக் கரங்கள் கூப்பி
நாலான திசைமுகத்துக் கமலத் தேவை
நனிதொழுது புத்தேளிர் நவில்வ தானுர். 37

பொ - ரை: மேலாகிய சிவபதத்தின் தூரமும், உலகத்தின் எட்டுத் திசையிலும் செல்லும் பரப்பும், கீழேயுள்ள நரகங்களின் தன்மையும், காலாக்கினி ருத்திரரது அனற்கொழுந்தும், புகைப்படலமும் இவற்றையெல்லாம் எண்ணிமிக நடுங்கி நான்முகனிடத்தில் விண்ணப்பிக்கின்றுர்கள் தேவர்கள்.

முன்னமே வீரன்வலிக் குடைந்து போனே
முழுதுமே சிவபதத்து முயன்று சென்ருல்
இன்னமே சிவகணத்தார் பொறுப்ப ரேனு
மிகலும்வயி ரவர்சூலத் திடைய மாட்டோம்
பின்னர்மேற் புவனிவலம் புரித லாற்றேம்
பிலத்திறங்கி யுருத்திரரைக் காண மாட்டேம்
தன்னமே தனியிருந்து சிவபி ரானைத்
தவம்புரிந்து காணும்வகை சாற்று யென்ருர். 38

பொ - ரை: முன்னமே வீரபத்திரரால் துன்புற்றேம்; மேலே சென்ருல் சிவகணங்கள் சும்மா இருப்பினும் வைரவர்வாளா இரார்; உலகை வலம் வருத லும் இயலாத செயல்; காலாங்கி முதலிய உருத்திரரைக் காணவே பேரச்சம் தோன்றும்; ஆதலால், சிறிது நேரமேனும் தவம்புரிந்து சிவபிரானைக் காணும் வகையைத் தெரிவியுங்கள் என்ருர்கள்.

வி - கு: தன்னம் - சிறிது (காலம்).

### வேறு

வானவ ருரைப்பச் செந்தா மரைமலர்த் தவிசின் மேவும்
ஞானநான் முகத்தோன் சொல்வா னற்றவம் புரியுந் தானம்
பேனமாப் புணரி சூழ்ந்த பெரியபூ தலமே யாகும்
ஆனதோர் திகிரிவெற்பி னகமலாற் புறமு மாகா. 39

பொ - ரை : நற்றவம் புரிதற்கு உரிய இடம் கடல் சூழ்ந்த பெரிய நிலப் பகுதியே ஆகும்; சக்கரவாளமலைக்கு உட்பட்டுச் செயல்வேண்டும் என்றான் நான்முகன்.

வி - கு : பேனம் - நுரை.

மற்றையேழ் தீவின் வேந்தர் மனுமகன் விரத னென்பான்
பெற்றசீ ரங்கி தீரன் பெரியமே தாதி புட்டு
உற்றசீர்ச் சோதிட் டென்பா னுயர்தரு துதிமான் மற்றும்
அற்றமில் சிறப்பின் மிக்க வார்வலிச் சவனன் மன்னே. 40

பொ-ரை : முன்கூறிய ஏழுதீவுகளுக்கும் அரசராவார் முறையே மனுவின் மகனாகிய விரதன், அங்கிதீரன், மேதாதி, புட்டு, சோதிட்டு, துதிமான், சவனன் என்போர்.

அவரினுஞ் சம்புத் தீவி லங்கிதீ ரனுக்கு மைந்தர்
புவிபுகழ் பார தன்கிம் புருடனே யரியே கேது
தவறில்பத் திராச்சு வத்தன் றனியிளா விரதன் மேலும்
நவிலிர மியனே பொன்னன் குருவிவர் நவகண் டத்தோர். 41

பொ - ரை : இவ்வெழுவருள் அங்கிதீரன் மைந்தர்கள் பாரதன், கிம்புருடன், அரி, கேதுமாலன், பத்திராச்சுவத்தன், இளாவிருதன், இரமியன், இரணியன், குரு என்போர் நாவலந்தீவை ஒன்பது கண்டமாக்கித் தனித்தனி ஆள்வர். அக்கண்டங்கள் அவரவர் பெயரால் பாரத வருடம் முதலிய பெயர் பெறும்.

வீறுசேர் சம்புத் தீப நடுவுற விளங்கு மேரு
கூறுநாற் றிசையுஞ் சூழக் குலவுநாற் குன்ற மப்பால்
மாறிலாத் தென்பான் மூன்று வடதிசை மூன்று மேல்பால்
ஊறிலா வொன்று கீழ்பா லொன்றுசூழ் குன்ற மெட்டாம். 42

பொ - ரை : மேன்மையுள்ள நாவலந்தீவின் நடுவில் பொன்மயமான மாமேரு விளங்கும்; அதன் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்குத்திசைகளில் முறையே மந்தரம், கந்தமாதனம், விபுலம், சுபாரிசம் என்னும் மலைகள் உள்ளன. இவை மேருவை அசையாமல் காப்பன; பின், தென்திசையில் மூன்று மலைகளும், வடதிசையில் மூன்றும், மேல்பால் கீழ்பால் ஒவ்வொன்றுமாக வேறு எட்டு மலைகள் உள்ளன.

வி - கு : கீழ்பால் உள்ளது மாலியவான்; மேல்பால் உள்ளது கந்தமாதனம்; வடபால் உள்ளவை முறையே நீலம், சுவேதம், சிருங்கவான்; தென்பால் உள்ளவை முறையே நிடதம், ஏமகூடம், இமயம் எனப்பெயர்பெறும்.

ஈரெண்ணா யிரமே கீழும் பக்கமு மெண்பா னன்கு
மேருமே லுயரம் பாதி மிக்குள வரைகட் காகும்
சேருமெண் கிரிச்சா ரெட்டுஞ் செம்பொன்மால் வரையின் சுற்றும்
சாருமே கண்ட மொன்பா னவ்வகை சாற்றக் கேண்மின். 43

பொ-ரை: மேருவின் மொத்த நீளம் நூறாயிரம் யோசனையில், நிலத்தின் கீழ் பதினாயிரம் யோசனை புதைந்திருக்கும்; ஆகாயத்தில் எண்பத்து நாலாயிரம் உயர்ந்து நிற்கும்; எஞ்சியுள்ள வரைகளின் அளவுகள் இவற்றிற் பாதியாகும்; மேருவைச் சுற்றிலும், மலைகளுக்கு இடையீடும், கடல்களுக்கும் மலைக்கும் இடையீடும் ஆக ஒன்பது கண்டங்கள் உள்ளன ஆகும்; அவற்றைக் கூறுவோம்; கேளுங்கள்.

வடகடல் சிருங்க நாப்பண் வளர்குரு வருட மிப்பால்
இடவிய சுவேதங் காறு மிரமிய வருட மேனைத்
தடவரை நீலங் காறுந் தனியிர ணியமாங் கண்டம்
சுடர்வரை மேருச் சூழ்ந்த திளாவிர தப்பேர் சொல்லும். 44

பொ-ரை: வடகடலுக்கும் சிருங்க மலைக்கும் நடுவண் உள்ள கண்டம் குருவருடம்; சிருங்கத்திற்கும் அதற்குத் தெற்கே உள்ள சுவேத மலைக்கும் இடையில் உள்ளது இரமியவருடம்; சுவேதத்திறகும் அதற்குத் தெற்கே உள்ள நீல மலைக்கும் இடையில் உள்ள கண்டம் இரணியவருடம்; மேருவைச் சூழ்ந்து வடக்கே நீலம், கிழக்கே மாலியவான், தெற்கே நிடதம், மேற்கே கந்தமாதனம் என்னும் நான்கு மலைகளுக்குட்பட்ட கண்டம் இளாவிருதவருடம் எனப்படும்.

கந்தமா தனமே மேல்பாற் கடலிடைக் கேது மாலம்
வந்தபத் திரியே கீழ்பால் வாரிமா லியவான் மட்டும்
அந்தமா நிடதத் தென்பா லரிகண்ட மேம கூடத்
துந்திய தென்பா லாகு முயர்ந்தகிம் புருட கண்டம். 45

பொ-ரை: கந்தமாதனத்திற்கும் மேலைக்கடலுக்கும் இடையிலுள்ள தேயம் கேதுமாலவருடம் எனப்படும்; கீழ்க் கடற்கும் மாலியவான் மலைக்கும் இடையிலுள்ள கண்டம் பத்திரிகண்டம் எனப்படும்; தெற்கே நிடதத்திற்கும் ஏமகூடத்திற்கும் இடைப்பட்ட கண்டம் அரிகண்டம்; ஏமகூடத்திற்குத் தெற்கே இமயம்வரையுள்ள கண்டம் கிம்புருடகண்டம்.

பனிவரை சேது நாப்பட் பாரத கண்ட மாகும்
நனிதரு மிவையொன் பானி னண்ணுபத் திரியே கேது
இனியமுப் பதிற்று நாலா யிரமென்ப ரேனை யாறும்
அனையயோ சனைக ளொன்பா னயிர நாப்பண் மற்றே. 46

பொ-ரை: இமயமுதல் சேதுவரையுள்ள நிலம் பாரதகண்டம்; இந்த ஒன்பது கண்டங்களில், பத்திரி (பத்திராயு எனவும் படும்) கேதுமாலம் என்பவற்றின் அகலம் முப்பத்து நாலாயிரம் யோசனை என்பர்; ஏனை ஆறுகண்டங்கள் ஒவ்வொன்றும் ஒன்பதாயிரம் யோசனை குறுக்களவு உடையவை.

தருமமே தரும பாவந் தகவிலாப் பாவ மூன்றும்
கருமபூ மியிற்செய் வோர்கள் கதிதரு சுவர்க்கம் பூமி
இருணில மூன்றும் போக மெய்துவ ரிவைகண் மூன்றில்
பொருவருஞ் சுவர்க்க சேடம் பொசிப்பது போக பூமி. 47

பொ-ரை: அறம், அறம்பாவம் என்பவற்றின் கலப்பு, பாவம் மூன்றனை யும் கருமபூமி எனப்படும் பரதகண்டத்தில் செய்வோர்கள், அவற்றின் பயனைத் தரும் சுவர்க்கம், பூமி, இருள்நிலம் மூன்றினும் இறந்தபின் சென்று, அவற்றின் பயன்களை முறையே நுகர்வர்; இம்மூன்றனுள் சுவர்க்கத்துள் அனுபவித்துத் தொலையாது எஞ்சிநின்ற புண்ணிய மிகுதியைப் புசிப்பது போகபூமியாகிய ஏனை எட்டுக்கண்டங்களும் ஆகும்.

ஓதிய பரத கண்ட முழவுவா ணிபங்கள் வித்தை
காதல்சேர் வரைவு சிற்பங் கருமத்தாற் கரும பூமி
மீதுறை பவர்க்கு நெல்லூண் மேனியு முழநா லெட்டுக்
கோதறு பருவ நானூ றுகந்தொறுங் குறையா நிற்கும். 48

பொ-ரை: மேலே சொன்ன பரதக்கண்டத்தில் வாழ்வோர் உழவு, வாணிபம், கல்விபயிற்றல், ஓவியம், சிற்பம் முதலிய செயல் செய்து வாழ்தலால் இது கருமபூமி எனப்படும். இதில் உறைபவர்க்கு நெல் உணவு; உடம்பும் அவரவர் கையால் முழம் முப்பத்திரண்டு; வயது நானூறு, இவ்வுயரமும் வயதும் முதல்யுகம் முதலாகப் பப்பாதியாகக் குறைந்து வரும்.

கருமசே டங்க ளுண்பார் கதிகண்மேல் விழைவார்க் கெல்லாம்
தருமமுந் தவமுஞ் செய்யத் தக்கது கரும பூமி
புரிதவ மநேகங் காலம் போகபூ மியிற்செய் வார்க்கு
வருபலன் கரும பூமி வளரொரு தினத்தே நல்கும். 49

பொ-ரை: சுவர்க்க நரகங்களிற் சென்று இன்பத்துன்பங்களை முறையே நுகர்ந்து, தொலையாது எஞ்சிநின்ற வினைக்குறையை நுகர்வார்க்கும் மேற் கதியை விரும்புவார்க்கும் அறமும் தவமும் செய்தற்கு உரிய இடம் கன்மபூமியே ஆகும்; போகநுகர்ச்சிக்குரிய சுவர்க்கம் முதலியவற்றில் பலகாலம் தவம்புரிவார்க் குக் கிடைக்கும் நற்பலனை இப்பூமி ஒருநாளில் வளர்த்துத்தரும்.

வேறு

ஒண்டொடியோர் பாகனிட முரைப்பி னண்டத்
துச்சியுருத் திரர்கோயி லதன்கீ ழாகும்
அண்டர்பிரான் சிவலோக மண்ட மூலத்
தமர்வதுகா லாங்கியுருத் திரர்தங் கோயில்
மண்டுமா டகர்கோயி லதன்மே லாக
மகிதலத்தி னிருகோடி கீழா மன்னும்
விண்டநடுக் குடதிசையின் கீழ்பா லாகும்
மேருமே கலைமூன்றில் விமலன் கோயில். 50

பொ-ரை: இனி மாதொருபாகனர் மன்னும் இடங்களைக் கூறின், அண்டத்தின் உச்சியில் உருத்திரர் கோயில் உள்ளது; அதன்கீழ் உலகநாயகனது சிவலோகம் நிலைபெறும்; அண்டத்தின் அடியில் உள்ளது காலாக்கினி ருத்திரர் கோயில்; அதற்கு மேலே, பூமியின்கீழ் இருகோடி யோசனை ஆழத்தில் ஆடகேசர் கோயில் உள்ளது; மேருவரையின் மூன்று மேகலையினும் சிவபிரான்

கோயில்கள் உள்ளன; முதல் மேகலையில் நடுவிலும், இடைப்பட்டதில் மேற்குத் திசையிலும், மேல் மேகலையில் கிழத்திசையிலும் திருக்கோயில்கள் உள்ளன.

வேறு

பொன்மலையுத் தரத்திலண்டச் சுவரணவும் வடகயிலைப் பொருப்புங் கோடும்
பன்மதிலு மளப்பரிய வுருத்திரர்நா ராயணரும் பதுமத் தோரும்
கொன்மலிவேற் கந்தர்கண பதிகள்சா ரதர்சாத்தர் குழூவி னூர்ப்பும்
நின்மலச தாசிவமுந் தெய்வதக்கு ழாமுமெம்மா னிகழ்த்தொ ணுதால். 51

பொ - ரை: மாமேருவின் வடக்கே அண்டச்சுவரில் வடகயிலைமலை பொருந்தும்; அதன்குவடுகளும், பொன்மதிலும், அங்குள்ள அளவில்லாத உருத்திரர், நாராயணர், பிரமர்கள், கந்தர்கள், கணபதிகள்; பூதர், சாத்தாக்கள் என்பாருடைய ஆரவாரமும் மலசம்பந்த மில்லாத சதாசிவ மூர்த்தியும், தேவர்கணங்களும் பற்றி எம்மால் விரித்துரைக்க ஒண்ணாது.

பொன்னிமய மால்வரைக்கு வடமேல்பான் மந்தரத்தின் புடைசேர் தென்பால்
கன்னிநெடுங் கயிலைவரை கற்பகோ டிகள்கடந்து ககனந் தாவிச்
சென்னிமதி யாறணிந்த தேவனே யன்றிமற்றத் தேவ ரெல்லாம்
நன்னிலைவிட் டிறப்பதுவும் பிறப்பதுவும் கண்டுகண்டு நகையா நிற்கும். 52

பொ - ரை: பொன்மயமான இமயமலைக்கு வடமேற்கில், மந்தரமலை பக்கத்தில் உள்ள தென்கயிலாயமலை அளவிறந்த ஊழிகளைக் கடந்து, ஊழி தோறும் ஆகாயத்தில் தாவி மேற்சென்றிருந்து, முடியில் சந்திர கலையினையும் கங்கையினையும் அணிந்த பரமசிவன் அன்றி ஏனைய தேவர் எல்லாரும் இறப்பதும் மீளப்பிறப்பதும் கண்டு, ஈறிலாதவன் ஈசன் ஒருவனே என்பதை உட்கொண்டு நகைக்கும்.

வேறு

துங்கவட கயிலாய முதலா வைந்து
துளுவொன்று தொண்டைவள நாடெண் ணுன்கு
தங்குநடு நாட்டிருபத் திரண்டு பொன்னித்
தலநூற்றுத் தொண்ணூறு மலைநாட் டொன்று
கொங்கேழு சிங்களத்தி லிரண்டு வைகை
கொழிதமிழ்நாட் டீரேழு முதலாஞ் சூலச்
செங்கையார் தலமிருநூற் றெழுபா னுன்கிற்
றெக்கிணபாற் கயிலாயந் திருக்குற் றாலம். 53

பொ - ரை: வடநாட்டில் உயர்ந்த திருக்கயிலை முதல் ஐந்து சிவதலங்கள் முதன்மையானவை; துளுநாட்டில் ஒன்று; தொண்டை நாட்டில் முப்பத்திரண்டு; சோழநாட்டிற்கும் தொண்டை நாட்டிற்கும் நடுவே உள்ள திருமுனைப்பாடிநாட்டில் இருபத்திரண்டு; காவிரிபாயும் சோழநாட்டில் நூற்றுத்தொண்ணூறு; மலைநாட்டில் ஒன்று; கொங்கு நாட்டில் ஏழு; சிங்களம் எனப்படும் ஈழ

நாட்டில் இரண்டு; தமிழின் வகைகள் சிறந்து விளங்கும் பாண்டிநாட்டில் பதினான்கு என முதன்மையாக எண்ணப்படும் சூலப்படையார் திருத்தலங்கள் இருநூற்று எழுபத்து நான்கனுள் தென்திசைக்கயிலாயமாக விளங்குவது திருக்குற்றாலம்,

அம்புவியி லித்தகையா னுரைத்த வெல்லா
　　மாதிதலம் பிறதலங்க ளனந்த மாகும்
சம்புநிலப் பரதகண்ட மடநல் லாட்குத்
　　தாணீட்டு வடதிசைதென் றிசையே சென்னி
நம்புசீர்ப் பருப்பதங்கே தாரங் கொங்கை
　　நளினவயற் றமிழ்நாடு வதன மாகக்
கொம்பலர்சூழ் செண்பகா ரணியஞ் சூழ்ந்த
　　குற்றால மபிடேகத் தான மாமால். 54

பொ - ரை: நிலவுலகத்தில் மேல் உரைத்தனவெல்லாம் பண்டு உள்ள தலங்கள்; வேறுதலங்களும் அளவிறந்தன உள்ளன; நாவலந்தீவின் பரதகண்டமாகிய இளமகளுக்குத் தான் நீண்டிருக்கும் வடதிசை; தென்திசை தலை ஆகும். அன்புவிளைக்கும் சிறப்புள்ள சீசைலமும் திருக்கேதாரமும் கொங்கைகள்; தாமரைமலரும் வயல்களையுடைய தமிழ்நாடு முகம்; செண்பகவனம் சூழ்ந்ததிருக்குற்றாலம் திருமுடித்தானம் ஆகும்.

புவனநெடும் பரப்பெலாந் திணையைந் தாகப்
　　பொன்னிமய கிரிவடபா னன்கு போகக்
கவனவரை யிமையமுதற் கன்னி காறுங்
　　கண்டபெரு நிலமுழுதுங் கழனி யாகும்
சிவனுறைகே தாரமுதற் கருப்பந் தோட்டம்
　　சென்னிவள நீர்நாடு கன்னற் சாறு
குவளைவயற் றமிழ்நாடு வடித்த பாகு
　　குற்றாலஞ் சருக்கரைவட் டாகு மன்றே. 55

பொ - ரை: உலகெலாம் மலை, பாலை, காடு, வயல். கடல் என நிலன் ஐந்தாக, இமயமலைக்கு வடக்கே உள்ளன வயல் நீங்கலாக உள்ள நான்கு வகை நிலனே ஆக, நினைவைவரையும் இமயம் முதல் குமரிவரை உள்ள நிலப் பரப்பு வயலாகும்; அப்பரப்பில் கேதாரம் முதலிய சிவதலங்கள் கருப்பஞ்சோலை; சோழநாடு கருப்பஞ்சாறு; அதனைவடித்துக் காய்ச்சிய பாகே பாண்டிநாடு; திருக்குற்றாலம் அப்பாகின் கட்டியாகிய சருக்கரை வட்டு ஆகும்.

வேறு

தற்பரையெம் பெருமாட்டி யகிலாண்டஞ் சிற்றிலெனத் தனிநின் றாடும்
முற்பதியா யுயர்தாணு மாலயப்பூந் தொட்டிலுக்கோர் மூல வீடாய்க்
கற்பமெனுங் கடல்கடத்துந் தோணியாய்க் குணங்குறிகள் கடந்த ஞானச்
சிற்பரைவா ழிடமான பரமரக சியத்தான் திருக்குற் றாலம். 56

பொ - ரை: அது என்னும் சுட்டைக்கடந்த பராசத்தி ஆகிய உலகத்தாய் எல்லா உலகையும் சிற்றில் எனஅமைத்தும் அழித்தும் விளையாடும் எல்லாவற்றுக்கும் முன்னே உள்ள பதியாய், தாணு மால் அயன் என்னும் குழவிகளை இட்டு ஆட்டும் அழகிய தொட்டில் உள்ள முதல் இல்லமாய், வாழ்நாள் என்னும் கடலைக் கடத்தற்கு உதவும் தோணியாய், குணம் பெயர் என்பவற்றைக் கடந்து நின்ற ஞானமே வடிவாகிய பராசத்தி வாழும் இடமாகிய மேலான இரகசியத்தலம் திருக்குற்றாலம்.

வி - கு: கற்பம் - பிரமன் வாழ்நாள், இங்கு வாழ்நாள் என்னும் பொதுப் பொருளில் வந்தது.

சிறக்குமிடஞ் சிற்பரைக்கும் பரமனுக்கு மூவருக்குந் தேவர் யார்க்கும்
பிறக்குமிடம் கவுரியறம் வளர்க்குமிடம் பிறந்தோர்கள் பிறவி பின்னை
மறக்குமிடம் வடவருவி யெனுங்காம தேனுவளர் பால்க ணான்கும்
கறக்குமிடம் பரகதியே காட்டுமிடந் திரிகூடக் கடவுட் டானம். 57

பொ - ரை: திரிகூடமலையையுடைய தெய்வ இடம், பராசத்தி, பரமசிவன் இருவருக்கும் எவற்றினும் மேம்பட்டு நிற்கும் இடம், அயன் மால் உருத்திரன் என்னும் மூவர், மற்றும் தேவர்கள் வந்து தோன்றும் இடம்; உமையம்மை அறம் வளர்க்கும் இடம்; பிறந்தோர்கள் பின்னைப் பிறவியைப் பகைத்து ஞானநெறியில் நிற்கும் இடம்; வடஅருவி என்னும் காமதேனு அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள் பகுப்பு நான்கையும் இடையறாது சொரியும் இடம்: மேலான கதியை எளிதில் விளக்கும் இடம் ஆகும்.

வி - கு; கறக்கும் - வெளிப்படுக்கும்,

ஆண்டுபதி னாயிரமோர் புண்ணியமாத் தலந்தரும்பே றனைத்துங் காசி
கூண்டுதவு மோராண்டி லயனமொன் றிற் கேதாரங் கொடுக்குங் காஞ்சி
பூண்டுதவு மிருமதியி லொருமதியிற் பெரும்பற்றப் புலியூர் நல்கும்
சேண்டருமெய்ப் பயன்களெலா மொருநாளிற் கொடுத்தருளுந் திருக்குற்
[றாலம். 58

பொ - ரை: ஒரு புண்ணியத்தலம் பதினாயிரம் ஆண்டு தன்கண் தங்கி வாழ்வதனால் தரும் பயன் முழுவதையும் காசி ஓராண்டு வாழ்விலேயே சேர்த்து வழங்கும்; கேதாரவாழ்வு ஆறு திங்களில் அப்பயனைத் தரும்; காஞ்சி இருதிங்கள் வாழ்வில் தரும்; சிதம்பரவாசம் ஒருதிங்களில் வழங்கும்; வானம் வழங்கும் மெய்ப்பயன் எல்லாம் ஒருநாள் வாழ்விலேயே பாலிக்கும் திருக்குற்றாலம்.

வேறு

தாய்பசிக்கத் தந்தைபசித் திருக்கக் காண்போர்
தங்கள்சுற்ற மனங்கொதிக்கத் தாங்கள் வாழ்வோர்
சேய்பசிக்கத் துடிக்கவிருந் துண்போர் தாரஞ்
சிறையிருத்திப் பரதாரம் விரும்பிச் செல்வோர்

வாய்பதைத்துப் பிறர்குடிக்குத் தீங்கு சொல்வோர்
மன்றிருந்து வழக்கோரஞ் சொல்வோர் பொல்லா
நாய்வளர்த்துக் கொலைபுரிவோர் பாவமெல்லாம்
நன்னகரே தவிர்க்குமெனு மிருக்கு வேதம். 59

பொ - ரை: தாய்தந்தையரைப் பசியால் வருந்தச் செய்தோர், சுற்றத்தார் வறுமையில் வாடத் தாம் வாழ்வோர், குழவிகள் பசியால் வருந்தத் தாம் உண்போர், தன்மனைவியை இல்லத்துத் தனித்திருக்கச் செய்து வேறொருவர் மனைவியை விரும்பிச் செல்வோர், பிறர் குடிக்குத் தீங்கான வரலாறுகளை நாவடக்கம் இன்றிக்கூறுவோர், நீதிவழங்கும் சபையில் ஒருபக்கம் சார்ந்து முடிபு கூறுவோர், பொல்லாத நாய்வளர்த்து அதனைக்கொண்டு கொலைபுரிவோர் - இவர்செய்த தீராப் பாவங்களையும் திருக்குற்றால நகர் தீர்க்கும் என இருக்கு வேதம் கூறும்.

அடுத்தார்க்கு நன்குசெய்யா ரிடுக்கண் செய்வா
ரந்தணரை யுயிர்செகுத்தா ராவைக் கொன்றார்
கொடுப்பாரை யருகிருந்து தடுப்பார் கற்பின்
குலமாதர் வரம்பழித்தார் குருவைப் போற்றார்
கெடுப்பார்க்குத் துணையாவா ரறஞ்செய் வார்க்குக்
கேடுசெய்வார் பாவமெலாங் கிரிக்கோ தண்டம்
எடுப்பார்க்கு வளம்பதியாந் திருக்குற் றால
மிமைப்பொழுதி லொழிக்குமெனு மிரண்டாம் வேதம். 60

பொ - ரை: தம்மை அடுத்தவர்க்கு நன்மைசெய்யாது தீமை புரிவார், அந்தணரைக் கொன்றார், ஆவைக் கொன்றார், ஈவதை விலக்கினர், கற்புள்ள குலமாதரை வரம்பு அழித்து நடந்தார், குருவை இகழ்ந்தோர், பிறரைக் கெடுப்பார்க்குத் துணைநின்றோர், அறம்புரிவோர்க்குக் கேடு விளைப்பவர் என்பவருடைய பாவங்களை மேருவில் ஏந்தினரது திருக்குற்றாலம் மிகுவிரைவில்தீர்க்கும் என யசுர்வேதம் மொழியும்.

அன்னமிட்டார் தமக்கிரண்டு நினைக்கின் றாரும்
அடைக்கலத்தை வயிறெரியத் தொடுகின் றாரும்
பின்னமிட்டுக் கிளைக்கூட்டம் பிரிக்கின் றாரும்
பெரியாரைப் புறம்பழித்துப் பேசு வாரும்
கன்னமிட்டுக் களவாடிக் கள்ளுண் பாரும்
காமத்தா லழிவாரு மெய்து பாவம்
முன்னவர்க்கு முன்னவர்குற் றால மென்று
மொழிந்தாலுந் தீருமெனு மூன்றும் வேதம். 61

பொ - ரை: தம்பசிக்கு உணவளித்தார்க்குப் பொருமை காரணமாகத் தீங்குபுரிய எண்ணுவாரும், பிறர் தன்கண் வைப்பாகக்கொடுத்த பொருளை அவர் வயிறு கலங்கும்படி கைப்பற்றிக்கொள்வாரும், உறவினரை வேற்றுமை செய்து

பிரிப்பவரும், பெரியாரைப் புறங்கூறிப் பழிப்பவரும், கன்னம் வைத்துக் களவாடுவோர், கள்உண்போர், காமவயப்பட்டு அழிவார் என்னும் இவரும் எய்தும் பாவங்களை முன்னவர்க்கும் முன்னேன் ஆன சிவபிரான் திருக்குற்றுலம் தன் பெயர் சொல்லத் தீர்க்கும் எனச் சாமவேதம் பகரும்.

உலகிடத்துத் தொலையாத பாவ மெல்லா
முயர்தருபுண் ணியதலத்துத் தீர வேண்டும்
பலபலபுண் ணியதலத்துந் தீராப் பாவம்
பரமனுறை சிவதலங்கள் பரவத் தீரும்
திலகமெனுஞ் சிவதலத்துச் சென்றூர் பாவம்
தீருமே தீராது சிவத்து ரோகம்
நலமலிசீர்த் திரிகூடத் திருக்குற் றுல
நன்னகரே தீர்க்குமெனு நான்காம் வேதம். 62

பொ - ரை: உலகில் தீராத பாவம் எல்லாம் புண்ணிய தலத்தில் தீர்தல் வேண்டும்; பற்பலவாகிய புண்ணிய தலத்தும் தீராத பாவங்கள் சிவதலங்களிற் சென்று சிவனை வழிபடுவதனுல் தீரும்; தலங்களுள் உயர்ந்த சிவதலத்துச் சென்று வழிபட்டார் பாவம் அனைத்தும் தீரும் எனினும் சிவத்துரோகம் அங்கும் தீருவதில்லை. நன்மை மிகுந்த சிறப்புள்ள திரிகூடத் திருக்குற்றுல நன்னகரே சிவத்துரோகமும் தீர்க்கவல்லது என அதர்வணவேதம் மொழியும்.

வேறு

இன்னபடி மறைநாலுந் துறைதோறு முழங்குதலா லிமையோர் நீவிர்
நன்னகர்ச்செண் பகவனத்துச் சென்றுதவம் புரிந்துமது நவைக டீர்ந்து
சின்னமதி புனைவேணிச் சிவபிரான் றிருவருளால் தெய்வக் காவும்
பொன்னுலகு மரம்பையர்பாற் புதுநலமும் பெற்றுமுற்றும் பொலிவீ
[ரென்றுன். 63

பொ - ரை: இங்ஙனம் நான்கு வேதங்களும் இடந்தோறும் சொல்லுதலால், தேவர்களே, நீங்கள் திருக்குற்றுலம் சென்று சிவபிரானை வழிபட்டு அவன் அருளால் பழைய நலங்களைப் பெறுக என நான்முகன் உரைத்தான்.

விண்ணிலுறை சதுர்முகத்து வேதியனீ
துரைத்தருள விடைகொண் டேகிக்
கண்ணியவா றுரைத்ததனற் களிகூர்ந்து
களிச்சுரும்பின் கணம்போல் வானேர்
மண்ணிமணி யலைகொழிக்குங் கடல்வாவிக்
குவலையமா மலர்ந்த பூமேல்
புண்ணியமா மதுவூறி யுவட்டெடுக்குந்
திரிகூடப் பொகுட்டிற் சேர்ந்தார். 64

பொ - ரை: தேவர்கள் விடைபெற்று, தாங்கள் கருதிய படியே நான்முகனும் உரைத்தமையால் மகிழ்ச்சி மிக்கு வண்டுகளின் கூட்டம்போல, அலைகள்

மணிகளை மாசு நீக்கிச் சேர்க்கும் கடலாகிய தடாகத்தில் மலர்ந்த நிலமாகிய தாமரைமலரில் புண்ணியம் என்னும் தேன் ஊறிப்பெருக்கு எடுக்கும் திரிகூடம் என்னும் பொகுட்டிற் சேர்ந்தார்கள்.

பிரமனைக்கண் டுறுதிபெறும் பேறுரைத்தாந் திரிகூடப் பிறங்கன் மேலாச்
சிரமமிசைத் தவம்புரிந்து சிவத்துரோ கந்தவிர்ந்து திங்கள் சூடும்
பரமனைச்செண் பகவனத்திற் பண்ணவனைக் கண்டுபதம் பரவி வானோர்
புரமனைத்துங் குடியேறக் கரையேறு மகிமையினைப் புகறல் செய்வாம். 65

பொ-ரை: தேவர்கள் பிரமனைக்கண்டு நல்ல உபதேசம் கேட்ட வரலாற்றைக் கூறினோம். அவர்கள் திரிகூடமலையின் மேல் ஆச்சிரமத்தில் இருந்து தவம் செய்து சிவபிரான் வெளிப்படக் கண்டு வணங்கி, தங்கள் உலகில் குடியேறும் பெருமையை இனிக்கூறுவோம்.

தேவர்கள் சிவத்துரோகமடைந்த சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 906

# தேவர்கள் சிவத்துரோகந்தீர்ந்த சருக்கம்

வற்றுத தேனருவி வானருவி மான
நற்றல மேவுதுறை யாடி நனி வானோர்
குற்றல மேயதிரி கூடமிசை வந்தார்
பொற்றல மேல்விழைவு புந்தியி லொழிந்தார். 1

பொ - ரை : தேவர்கள் நல்ல பூமியின்மீது, தேன் அருவியும் ஆகாய கங்கையும் போன்ற புனிதமான நீர்த்துறைகள் தோறும் நீராடிச் சிவனை வழிபட்டு, திருக்குற்றலத்திலுள்ள திரிகூடமலைமீது வந்தார்கள்; பொன் பூமியின்மேல் தமக்கு முன் இருந்த ஆசையை நீங்கினர்கள்.

வி- கு : தாலம் - பூமி.

விண்பக வுயர்ந்தகிரி மேவுசிலை யெல்லாம்
எண்பகரி லிங்கவடி வென்றதி சயித்தார்
சண்பக வனத்ததி சயத்தையெதிர் கண்டார்
வண்பகல்செய் கற்பக வனத்தையு மயர்த்தார். 2

பொ - ரை : வானம் பிளவுபடும்படி உயர்ந்த மலையில் உள்ள சிலைகளை யெல்லாம் எண்ணப்படும் இலிங்கவடிவே என்று கருதி அதிசயித்தனர்; சண்பக வனத்தின் புதுமையை நேரிற்கண்டு வளப்பமாகி ஒளியையுடைய கற்பகச்சோலையினையும் மறந்தனர்.

கானவர்க ளேனல்விளை கானிலெதிர் மேவித்
தானவரை யீறுபுரி சாரதரை யெய்தி
ஞானவரை யோகியர்க ணண்ணுகுகை நண்ணி
ஏனவர்கண் மாதவ மியற்றுமிடை சென்றார். 3

பொ - ரை : வேடர்கள் புன்செய்தானியங்களை விளைக்கும் புலங்களைக் கடந்து, அசுரர்களை அழிக்கும் பூதகணங்களைக்கண்டு, அறிவின் எல்லையாக உள்ள சிவயோகிகள் தங்கும் குகைகளைக்கண்டு மற்றையோர் சிறந்த தவம் புரியும் இடத்திற் சென்றனர் தேவர்கள்.

வேறு

சந்தகில் குரவ வேலிச் சண்பகச்சோலை சார்ந்து
புந்தியின் மகிழ்ச்சி கூர்ந்து பொன்னக ரமரர் முன்னாள்
அந்தமார் தக்கன் வேள்வி யழலினுற் காய்ந்த மேனி
மந்தமா ருதத்தி னாலே வரவரக் குளிர்ந்தார் மன்னோ. 4

பொ - ரை: சந்தனம் அகில் குரா என்னும் மரங்களால் சூழப்பெற்ற சண்பகச்சோலையை அடைந்து, மனமகிழ்ந்து, முன் தக்கன் வேள்விச்சாலை நெருப்பினல் வாடிய தம் உடம்பு ஆண்டுத் தவழும் தென்றலால் குளிரப்பெற்ருர்கள் தேவர்கள்.

பாளையஞ் சடைகள் பின்னிப் பழுப்பிலைக் காவி தாங்கி
நீளவு மொருதா ணின்று நெய்யரிச் சீரை சாத்தித்
தாளினீர் சிரத்தி லேற்றுத் தவத்தர்யோ கியர்கள் போலும்
நாளிகே ரங்கள் கண்டார் நலம்பெறு மகிழ்ச்சி கொண்டார். 5

பொ - ரை: தேவர்கள் தென்னைமரங்களைக் கண்டு மகிழ்ந்தனர்; அவை பாளைகளாகிய சடைகளை நெருக்கமாகக் கொண்டிருந்தன; பழுத்த ஓலையாகிய காவி உடையும், பன்னுடையாகிய மரவுரியும் போர்த்திருந்தன; நீளமாக ஒரு தாளை ஊன்றி நின்றன; தாளால் உண்ட நீரைத் தலையில் இளநீர் ஆக ஏற்று நின்றன. (யோகியர் காலின் தன்மையைச் சிரத்திற்கு ஏற்றினர் - சிரசாசனம் உடையராயிருந்தனர்). இங்ஙனம் அவை தவயோகியர் போல் நின்றன.

வி - கு: நாளிகேரம் - தெங்கு.

கன்னியம் பசிய பாளை கமழ்தரு பருவத் தெங்கின்
மன்னிய குரும்பை காய்த்து மழைமுகில் பொதிந்த தோற்றம்
மன்னிய வுலகிற் றெய்வ வாடவர் வந்தா ரென்று
துன்னுபார் மடவார் கொங்கை துகிலினுன் மறைத்தன் மானும். 6

பொ - ரை: இளமையான பசிய பாளைவிரிந்து குரும்பை காய்த்திருந்த தெங்கின்மேல் மேகங்கள் வந்து மறைத்தன. அக்காட்சி, நிலத்துமடவார் தெய்வ ஆடவர் வந்தார் என்று தம் நகில்களைத் துகிலினுல் மறைத்து நின்ருற் போன்றது.

புண்ணிய தருக்க ளாகப் பொலிந்தபூஞ் சோலை வேலித்
திண்ணிய கதலி நின்று தென்றலா லசையுந் தோற்றம்
விண்ணினி லரம்பை மாரை வேட்டவர் வந்தா ரென்று
மண்ணினி லரம்பை யால வட்டங்கள் சுழற்றன் மானும். 7

பொ - ரை: புனிதமான மரங்களாக விளங்கும் சண்பகப் பூஞ்சோலையின் வேலியாகத் திட்பமான வாழைகள் நின்று தென்றலால் இலைகளை அசைக்கும் காட்சி, தேவ அரம்பையரை விரும்பினவர்கள் வந்தார் என்று மண்ணில் உள்ள அரம்பைகள் விசிறியைச் சுற்றி வீசுதல் போன்றது.

வி - கு: அரம்பை - தேவமகள், வாழை.

துருக்கமா மலரில் வீழ்ந்து சுரும்பின நறவ மாடி
மருக்கமழ் தாதி னுலே வடிவுவே றமைந்த தோற்றம்
திருக்கிளர் தழலின் மூழ்கித் திருநாளைப் போவார் மேனுள்
உருக்கிளர் சைவத் தெய்வ வுருவுபெற் றெழுந்த தாமால். 8

பொ - ரை : ஆண்வண்டுகள் குங்குமமலரில் தங்கித்தேன்உண்டு அதன் மகரந்தத்தால் தம் உரு ஒளிபெற்று வெளியே வருவது, திருநாளைப்போவார் தில்லை எல்லையில் வேதியர் வளர்த்த ஓமத்தழலில் மூழ்கிப் பின் சைவமுனிவர் வேடத்தில் உருக்கொண்டு எழுந்ததை ஒக்கும்.

பன்மலர் துளிக்குந் தேறல் பைம்பொனு டளித்தே மென்னும்
கொன்மலி தாரை யன்றிக் குளிர்மழைத் தாரை போலும்
சன்சலி சீனைக டுவுஞ் சண்பக மலர்கள் வானம்
பொன்மழை பொழிவ தன்றேற் பூமழை பொழிவ தாமால். 9

பொ - ரை : தேவர்கள் வந்தபோது பலவகை மலர்கள் சொரிந்த தேன் துளிகள் உங்களுக்கு யாம் பொன்நாட்டைக் கொடுத்துவிட்டேம் என்பதற்கு அடையாளமாக அபிடேகிக்கும் நீர்த்தாரை போலவும், மழைத்தாரை போலவும் பூமாரிபொழிவது போலவும் இருந்தன. நன்மை மிகுந்த கிளைகள் தூவும் சண்பக மலர்கள் மேகம் பொன்மழை அல்லது பூமழை பொழிவது போல இருந்தன.

வி - கு : கொன் - பெருமை. சன்மலி - சத்மலி, நன்மை மிகுந்த.

இலவிதழ் விரியுந் தோற்ற மிவர்கொலோ தக்கன் வேள்வி
நலனவி நுகர்ந்தா ரென்ன நவிலவாய் திறத்தல் போலும்
புலனுற வடைந்தார் தம்மைப் புறஞ்சொலத் தருமோ வென்ன
அலருமாந் தளிர்கள் கையா லமைத்துவாய் புதைத்தன் மானும். 10

பொ - ரை : ஆங்குள்ள இலவமலர் இதழ்விரிதல் இவரோ தக்கன் வேள்வியில் அவியை நன்று என்று நுகர்ந்தார் என வாய்திறத்தல் போன்றது; பக்கத்தில் மாமரங்கள் தளிர்த்து நின்றது அறிவுவந்து அடைக்கலம் புக்காரைப் புறங் கூறல் தகாது என்று அவ்வாய்களைக் கைவிரல்களால் மூடுதல் போன்றது.

தேவர்கள் வந்தா ரென்னச் செண்பக வனமாங் கன்னி
மாவடு விழியா னேக்கி முருக்கின்வாய் மலர்ந்து முல்லைப்
பாவனை முறுவல் பூத்துப் பாடல்வண் டிசையா லேத்தி
ஆவல்சேர் தளிர்க்கைப் பூந்தே னருக்கிய மளித்த தன்றே. 11

பொ - ரை : சிவபிரானை வழிபடுவதற்குத் தேவர்கள் வந்தார் என்பதைக் கருதிச் செண்பகவனமாகிய கன்னிப்பெண் மாவடுவாகிய கண்ணால் நோக்கி, முருக்கு மலராகிய வாய்மலர்ந்து முல்லையாகிய புன்முறுவல் பூத்துத் தன்வரவேற்கும் எண்ணத்தைத் தெரிவித்து, வண்டிசையாகிய பாடல்களால் ஏத்தி விருப்பம் தரும் தளிர்களாகிய கைகளால் பூக்களில் உள்ள தேனாகிய அருக்கியம் (முடிக்குத் தெளிக்கும் மணம் உள்ள குளிர்ந்த நீர்) அளித்தாள்.

கண்டன னமரர் வேந்தன் கண்களா யிரத்தின் பேறு
கொண்டன னிமையா நாட்டங் கொண்டபே றமைந்தார் விண்
தண்டலைக் கமுக வேலிச் சண்பக வனச்சீர் நோக்கில் [ணோர்
அண்டர்தங் குரவன் வாய்மை யாயிரத் தொன்றே யென்றார். 12

பொ - ரை : சண்பகவனத்தைக் கண்டு இந்திரன் ஆயிரங்கண் படைத்த பேற்றினையும், ஏனைய தேவர்கள் இமையாநாட்டம் பெற்ற பயனையும் பெற்றனர்; அதன் சிறப்பைக் கண்டபோது தாங்கள் தங்கள் குரவனிடத்துக் கேட்டது அதில் ஆயிரத்தில் ஒரு கூறே என்று வியந்தனர்.

பூவின்மேல் வணடு டாடப் புதியசண் பகக்கா வெங்கும்
தேவரே பூவின் மேவிச் செழுந்தவத் தேன்வண் டானர்
மூவராய்ப் பரமமூர்த்தி முத்தொழில் புரியுந் தானம்
யாவரே வலஞ்செய் யாதார் யாவரே தவஞ்செய் யாதார். 13

பொ - ரை : சண்பகக்காவின் பூவில் வண்டுகள் மொய்த்து இன்புற்றன; தேவர்களும் நிலத்தின்மேல் செழுந்தவமாகிய தேனை நுகரும் வண்டானர். பரமசிவன் மும்மூர்த்திகளாயிருந்து முத்தொழில்புரியும் இடமாகிய திரிகூட மலையை வலஞ்செய்யாதவரும் அதனல் தவம் இன்றியிருந்தாரும் இலர்.

கந்தர வருடஞ் சேர்ந்தான் கமழ்புனற் கிறைவன் வாரி
இந்திர தனுவைச் சார்ந்தா னிந்திர னெழிற்பூஞ் சோலை
மந்தமா ருதத்தைச் சார்ந்தான் மருத்துமா முனிவர் வேள்விச்
செந்தழ லதனைச் சார்ந்தான் செழுங்கனற் கடவுண் மாதோ. 14

பொ - ரை : நீருக்கு இறைவனுகிய வருணன் ஆண்டு உள்ள மேகத்தின் பொழிவைச் சேர்ந்தான்; அருவிநீரில் தோன்றும் எழுநிறவில்லை இந்திரன் சார்ந்தான்; வாயு அச்சோலையின் தென்றலைச் சார்ந்தான்; அங்கிக்கடவுள் முனிவர் வளர்க்கும் வேள்விக் கனலைச் சார்ந்தான்.

வி - கு: கந்தரம் - நீரைத்தரிக்கும் மேகம். வருடம் - பொழிவு.

அந்தகன் றரும வேட மாகின னிருதி யாவான்
முந்துவேட் டுருவ மானன் முதுதவம் புரியு மேனைத்
தந்திரர் யாழோர் சித்தர் தவத்தர்விஞ் சையர்புத் தேளிர்
வந்தகிம் புருடர் மற்றோர் வண்மையை வகுத்துச்சொல்வாம். 15

பொ - ரை : தென்றிசைக்கிறையாகிய நமன் தரும உரு எய்தினன்; நிருதி முற்பட்ட வேடர் உருவானன்; மற்றைய விஞ்சையர் கந்தருவர் முதலியோர் செயலையும் கூறுவோம்.

மனிதராய் வடிவு கொண்டு மாக்களாய்ப் புள்ளாய் வாசப்
புனிதமார் தருக்க ளாயும் புயல்கெழு திரிகூ டத்து
முனிவராய்ப் புதலாய்ப் புல்லாய் முற்றும்வேற் றுருவம் பூண்டும்
தனிதராய்த் தவங்கள் செய்தார் தானவர் பயத்தான் மன்னே. 16

பொ - ரை : தேவர்கள் தானவர்கள் தம்மைக் காண்பர் என்னும் அச்சத்தால், மக்கள், விலங்கு, பறவை, மரம், திரிகூட முனிவர்கள், புதர், புல் என முற்றும் வேற்றுருவங்கொண்டு மந்திரமுழக்கம் உடையராய்த் தவங்கள் செய்தார்கள்.

ஆலயச் சங்க வீதி யண்ணலை யுன்னி வானோர்
நால்வகைச் சங்கத் தோரு நளினங்கோ முகஞ்சொத் தீகம்
சால்புசேர் வீரஞ் சிங்கா சனமுத்தஞ் சுகாச னங்கள்
பீலிபத் திரமா மொன்பான் பெரியவா சனத்தி ருந்தும். 17

பொ-ரை: சங்கவடிவ ஆலயத்தையும் வீதியையும் உடைய குற்றலக் கூத்தனைத் தியானித்து வசுக்கள், மருத்துக்கள், ஆதித்தர், உருத்திரர் என்னும் நால்வகைக் கூட்டத்தினரும் பத்மம், கோமுகம், சுவத்திகம் முதலிய ஒன்பது பெரிய ஆசனங்களில் இருந்து தவம் புரிந்தனர்.

ஆறுடற் பகையை யோட்டி யைம்புல னடக்கி யாண்டும்
ஏறுநாற் கரணங் கட்டி யியலுமுக் குற்ற மாற்றி
ஊறுகால் வளியி ரண்டு மொருக்கியோர் வழிக டாவி
மாறிலா யோகு நீராற் றவப்பயிர் வளரச் செய்வார். 18

பொ-ரை: உடல் காரணமாக உயிர்க்குப் பகையாய் உள்ள காமம் குரோதம் உலோபம், மதம், மோகம் மாற்சரியம் என்னும் ஆறு தீய குணங்களை விலக்கி, ஐம்பொறிகளை நெறிப்படுத்தி, எவ்விடத்தும் அந்தக்கரணங்களை ஒழுங்கு படுத்தி, ஆணவம் கன்மம் மாயை என்பவற்றால் வரும் குற்றம் நீக்கி, மூலாதாரத் தினின்று எழும் இடை பிங்கலைகளிற் செல்லும் வாயுவை ஒருமைப்படுத்திச் சுழி முனையாகிய ஒருவழியில் செலுத்தி மாறுபடாத யோகத்தன்மையால் (யோகமாகிய நீரால் - உருவகம்) தவமாகிய பயிரை வளர்த்தனர்.

இயமமா சனந்தி யானந் தாரணை பிராணா யாமம்
நியமமே சமாதி நீண்ட பிரத்தியா கார நிட்டை
உயருமட் டாங்க யோக முஞற்றியு மாறா தாரத்
தியல்பெறு பாந்தண் மூலத் தெழுப்பிமே லாடல் கண்டும். 19

பொ-ரை: நிட்டையில் உய்க்கும் இயமம் முதலிய எண்வகை உறுப்புக் களையுடைய யோகத்தைச் செய்தும்; மூலாதாரத்தில் உள்ள குண்டலி அனலை ஆறுதாரத்தும் சென்று மேல் எழும்படி எழுப்பியும். பாந்தள் - பாம்பு வடிவில் உள்ள குண்டலிசத்தி.

காய்பல தின்றுங் கானிற் கனிபல நுகர்ந்தும் வாவிப்
பாய்புனல் பருகா நின்றும் பச்சிலை கறித்துங் கல்லிற்
சாய்பல கிழங்க சித்துஞ் சருகினைப் புசித்துந் தாங்கா
வாயுபக் கணங்கள் செய்தும் வசிவறப் பசியைத் தின்றும். 20

பொ-ரை: காட்டிற் கிடைக்கும் காய், கனி, நீர், பச்சிலை, தோண்டி எடுக் கப்படும் பஞ்சாய்க்கோரைக்கிழங்கு, சருகு இவற்றை உண்டும், வாயுவையே பட்சணம் செய்தும், வருத்தம் இன்றிப் பசியையே பொருட்படுத்தாதிருந்தும்.

வி-கு: கறித்து, அசித்து என்பன தின்று என்னும் பொருளை உடைய.

சாந்திரா யணமு டித்துந் தருதிங்க ளுபவா சித்தும்
மாந்தியு மயனத் தோர்நாள் வருடத்தி லோர்நா ளுண்டும்
காந்தியின் வெயில்சேர் பஞ்சக் கனலின்மத் தியிலே நின்றும்
நீந்துத லரிதாம் வாரி நீரிலே நிலையா நின்றும். 21

பொ-ரை: சந்திரனது கலைகள் வளர்ந்தும் தேய்ந்தும் வருதல்போல, உணவுச் சிகைகளைக் குறைத்தும் கூட்டியும் உண்டுவரும் சாந்திராயண விரதம் முடித்தும், மாதம் ஒருநாள் உண்டும், ஆறுமாதத்திற்கு, வருடத்திற்கு ஒருமுறை உண்டும், சூரியனது கடுமையான வெயிலில் தீ நடுவில் நிற்றலாகிய பஞ்சாக்கினி நடுவிருந்தும், நிலைக்காத நீரில் நிலைத்து அசையாது நின்றும்.

கல்லெனக் கிடந்து நீரிற் கயலென வாழ்ந்தும் பாரிற்
புல்லெனப் பொருந்தா நின்றும் புற்றென வளர்ந்து மேனி
வில்லென வளைந்து மாலின் வீழெனச் சடைகள் வீழ்த்தும்
செல்லெனக் கலங்கு ருதுந் தீயெனப் பயமு ருதும். 22

பொ-ரை: கல்போல அசைவற்றிருந்தும், நீரில் மீன்போல எப்போதும் இருந்தும், புல்போற் பொருந்தியும், தம்மேல் புற்று வளர நின்றும், வில்போல வளைந்து இருந்தும், ஆலின்விழுதுபோலச் சடைகளை வளரவிட்டும், மேகத்திற்கும், இடிக்கும், நெருப்பிற்கும் அஞ்சாதிருந்தும்.

ஊசிமே லொருகால் வைத்து மொருவிர லூன்றிக் கண்கள்
நாசிகா மூலம் வைத்து நன்னிலத் தொருகை யூன்றி
ஆசுவாய் முடிகீ ழாக வடியிணை மேலா நின்றும்
வீசுகை சிரமேற் கொண்டும் விடாதுமெய்த் தவங்கள் செய்தார். 23

பொ-ரை: ஊசிமேல் ஒருகாலால் ஊன்றி அசையாது நின்றும், ஒருவிரல் நிலத்தில் ஊன்றியிருப்ப அசைவற்று நின்று கண்களின் நோக்கு மூக்கு நுனியைப் பொருந்தவைத்தும், சமமான நிலத்தில் ஒருகையை ஊன்றிப் பொருத்துவாய்போல முடியை நிலத்தில் வைத்து இரண்டு தாள்களை மேலே உயர்த்தித் தூக்கித் தலைகீழாய் நின்றும், வீசும் இயல்பினவாகிய கைகளைச் சிரமேல் அசைவற்றிருக்கச் செய்தும், மனஉறுதியை விடாமல் உண்மையான தவத்தைச் செய்தனர் தேவர்.

அப்பரி சமரர் யாண்டி லாயிரப் பதிற்றுண் டெல்லாம்
மெய்ப்பெருந் தவங்கள் செய்து மெய்யெலாம் வருந்தித் தேம்பிச்
செப்பருங் கவலை கூர்ந்தார் தேவரே யாகி லம்மா
இப்பெருஞ் சிவத்து ரோகம் யாவரே தொலைக்க வல்லார். 24

பொ-ரை: இவ்வாறு தேவயாண்டில் பதினாயிரம் செல்லும்படி உடல் வருந்தி உண்மைத்தவம் செய்தனர் தேவர். இங்ஙனம் தேவர்களே வருந்திச் சொல்லுதற்கு அரிய மனத்துயர் அடைந்தனர் எனின், சிவத்துரோகத்தை யாரால் விலக்கிக்கொள்ள முடியும்?

அத்தனை கால மெல்லா மருந்தவம் புரிந்து மாதி
கத்தனை விடஞ்சேர் நீல கண்டனைத் திரிகூ டத்து
நித்தனை வரவு காணுர் நின்றனர் திகைத்து வாடிச்
சித்தநைந் துலைந்த வானேர் சிந்தையில் வருந்திச் சொல்வார். 25

பொ - ரை : அவ்வளவுகாலம் மெய்வருந்தித் தவம்புரியினும் ஆதிமுதல்வனுகிய சிவபெருமான் காட்சி அளிக்கவில்லை; அவர்கள் மனம் வருந்திச் சொல்கிருர்கள்.

வேறு

உருகினே முடலெலா முளமெலா மறுகினேம்
விரவினே மனலிலே வெயிலிலே கருகினேம்
வருகிலா ரருள்கிலார் மழுவலா ருலகெலாம்
அருளுமோர் பரமனு ரருளிலா தவர்கொலோ. 26

பொ - ரை : யாம் இவ்வளவுவருந்தியும் சிவபிரான் வெளிப்படவில்லையே; அவர் அருள் இல்லாதவரா?

வரமெலா முதவுமோர் வரதனுர் கருதலார்
புரமெலா மெரிசெய்தே புவியெலா நிலைசெய்தார்
பரமனுர் நமதுபாற் பரிகிலார் வருகிலார்
பிரமனுர் மொழியுமே பிசகுமோ பிசகுமோ. 27

பொ - ரை : சிவபிரான் எல்லாவரமும் தருபவர்; உலகத்தைக்காக்கத் திரிபுரம் எரித்தவர்; நம்மை அவர்கருதி வரவில்லை. பிரமன்மொழி தவறுமோ?

வேகமே யிடையரு வேழமே யுரிசெய்தார்
ஆகமே லணிசெய்தே யாதிநா ளருள்செய்தார்
நாகமே யணிகுவார் நாமெலா மெலியவே
ஏகநா யகர்வரா ரேழையேம் வினையிதே. 28

பொ - ரை : வேழத்தை உரித்து, தம் மேனி ஒளியைக் காணமுடியாத நம் பொருட்டுத் திருமேனியின்மேல் அவ்வுரியைப் போர்த்து அழகு செய்தார்; அரவணிந்த பெருமான் நாம் தவத்தால் மெலியவும் வாராமைக்குக்காரணம் நம் தீவினையே ஆதல் வேண்டும்.

செங்கைமான் மழுவினுர் செண்பகா டவியினுர்
எங்குமாம் வடிவுளா ரெங்குமாம் விழியுளார்
கங்கைவார் சடையினுர் கண்டுமே வருகிலார்
அங்கமே புகழ்துநா மென்றுவா னவரெலாம். 29

பொ - ரை : நம் தவம் கண்டும் வெளிப்படாமையால், நாம் அவர்தம் திருமேனியைப் புகழ்ந்து ஏத்துவோம் எனத் துணிந்தார்.

### வேறு

அவரவர்கண் மனந்தோறு மறிவென்னுஞ் சுடர்தூண்டப்
பவரமர்செஞ் சடைக்காட்டுப் பசுங்கனகத் தனிக்குன்றைக்
கவரமருந் திரிகூடக் கனவரைவாழ் கற்பகத்தைத்
துவரமரு நறுங்கனியைத் தோத்திரஞ்செய் தேத்தெடுத்தார். 30

பொ - ரை: அவரவர் மனத்தில் எழுந்த அறிவு விளக்கத்திற்கு ஏற்றபடி இறைவனைத் துதித்தனர்.

வி - கு: பவர் - நெருக்கம். கவர் - கவர்த்தல். துவர் - செம்மை.

தேவருக்கும் பெருந்தேவே திரிகூடப் பரஞ்சுடரே
மூவருக்கு முதற்பொருளாய் முளைத்தருளுந் தனிமுதலே
மேவருட்கண் வாரிதியே மேலான குணக்குன்றே
ஏவருக்கு முனையல்லாற் புகலுண்டோ வெம்பெருமான். 31

பொ - ரை: தேவதேவரே, திரிகூடத்தில் விளங்கும் பேரொளியே மூவருக்கும் முதலாக முன்னே தோன்றும் முதல்வனே, திருக்கண்களாகிய மடைவழி அருளைச்சுரக்கும் கருணைக்கடலே, அருட்குணங்கள் திரண்ட குன்றமே, எம் பெருமானே, உனையன்றி யாருக்கும் சார்பு ஏது?

தூயார்க்குத் தோன்றாத துணையாவா யனைத்துயிர்க்கும்
சேயாவா யணித்தாவாய் செண்பகப்பூங் காவுடையாய்
தாயாவா யெமதுரிமைத் தந்தையா வாய்பரவார்
நோயாவாய் பணிவார்க்கு நோய்தீர்க்கு மருந்தாவாய். 32

பொ - ரை: மனத்தூய்மை உடையார்க்குத் தோன்றாத் துணையாக நிற்பாய்; எல்லா உயிர்களுக்கும் தூரமாயும் நிற்பாய் அணுக்கமாயும் நிற்பாய்; சண்பகவனம் உடையானே, எமக்குத் தாயும் உரிமைத் தந்தையும் நீயே; பரவுவார் நோய்தீர்க்கும் மருந்தும், பரவாதவர்க்குத் துன்பம் வரும்படி விலகி நிற்பவனும் நீயே.

மண்ணுடையாய் நீருடையாய் வன்னியுடை யாய்மருத்து
விண்ணுடையாய் சங்கநெடு வீதியுடை யாய்பாகம்
பெண்ணுடையாய் சென்னிமிசைப் பிறையுடையாய் கண்களின்மேல்
கண்ணுடையா யெங்கடுயர் காணுவா றென்னேயோ. 33

பொ-ரை: ஐம்பூதங்களுக்கும் சங்கவீதிக்கும் தலைவனே, மாதொருபாகனே, முடியில் மதிக்கலையை முடித்தோனே, நெற்றிமேலும் கண்ணிருந்தும் எங்கள் துயர் கருதாதது என்னை?

நரிகூட வேடனுக்கு நந்தாத பதமளித்தாய்
பரிகூட நரிநடத்தும் பரமகா ரணமூர்த்தி
அரிகூட வயனறியா வண்ணலே யிரங்காயுன்
திரிகூடங் கண்டவர்க்குத் தீராத வினையுண்டோ. 34

பொ - ரை: நரிக்கும் வேடனுக்கும் குறையாத நற்கதிகொடுத்தாய், குதிரையின் தோற்றம் கூடும்படி நரிகளைநடத்தவல்ல பரமகாரணமூர்த்தியாவாய் நீ; அரியும் பிரமனும் அறியமாட்டாத பெருமையிற் சிறந்தோய்; எம்பால் இரக்கம் வைத்து அருள வேண்டும்; உன் திரிகூடத்தைக் கண்டோர்க்குத் தீராதவினை உளதோ?

புகழ்வார்க்கு நல்குதியோ புட்பகந்த ளுர்முதலாய்
இகழ்வார்க்குங் கதிகொடுத்தா யல்லையோ வெங்கோமான்
திகழ்வார்க்கு வினைதீர்க்குஞ் செண்பகா டவியுடையாய்
அகழ்வாரைத் தாங்காத நிலமுண்டோ வச்சோவே. 35

பொ - ரை: உன் பொருள்சேர் புகழ் பாடினார்க்கு அருளுகின்றாய்; புட்பகந்தன் முதலாக உன்னை இகழ்ந்தார்க்கும் நற்கதி கொடுத்துள்ளாய். எம் தலைவனே! அன்போடு விளங்குவோர்க்கு வினைதீர்க்கும் செண்பகவனம் உடையானே! தன்மேல் நின்றே தன்னை அகழ்ந்து வருத்துவோரைத் தாங்கியேநிற்கும் நிலம்போல, எல்லா உயிர்க்கும் பரம தாரகமாய் நிற்பவன் நீ அல்லையோ? அந்தோ!

ஈயறியாப் பூந்தேனே யெழுத்தறியா மறைப்பொருளே
காயறியாச் செழுங்கனியே கற்பகத்தின் பசுங்கொழுந்தே
தாயறியாக் கருவிலிருந் தமுதூட்டுந் தாய்த்துணையே
நீயறியாச் செயலுண்டோ நிகிலபரம் பரமூர்த்தி. 36

பொ - ரை: வண்டுமொய்க்காத, நெஞ்சக்கமலத்து ஊறும்தேனே, எழுதப்படாத வேதப்பொருளே, காய்ப்பருவம் இன்றி எப்பொழுதும் கனிந்தே சுவைதரும் நல்லபழமே, கற்பகக்கொழுந்தே, தாயும் அறியமாட்டாத, அவள்தன் கருவில் உள்ள உயிர்க்கு உணவுகொடுத்து வளர்க்கும், தாய்க்குத் துணையாவானே, எல்லாவற்றுக்கும் தலைவன் நீயே ஆதலின், நீ அறியாதசெயல் எதுவும் இல்லையே!

கங்கைதனைச் சென்னிமிசைக் காதலாற் றாங்கியதும்
பங்கயப்பொற் றாள்பரவும் பகிரதனுக் காவன்றோ
சங்கையற நொந்தேமைத் தாங்காயோ மானையொரு
செங்கைமிசைத் தாங்குந் திரிகூடத் தம்மானே. 37

பொ - ரை: மானை ஏந்திய கையுடையானே, கங்கையை விருப்புடன் சடையிற் கொண்டது பகீரதன்பொருட்டு அல்லவா? அதுபோல, வருந்தும் எங்களை ஐயமறக் காக்கமாட்டாயோ!

அன்றுநர காசுரனை யந்தகனை யீடழித்துத்
துன்று முலகெல்லாந் துயர்தவிர்த்தா யல்லையோ
இன்றுநீ வாராயோ வேழையே மெய்துதுயர்
குன்றுந் திரைக்கடலுங் கொள்ளாது கொள்ளாதால். 38

பொ - ரை: முன்னர் நரகனையும் அந்தகனையும் வலி அழித்து உலகத்தைத் துயர் நீக்கினை; அறிவிலாத யாங்கள் படும் துன்பம் கடலினும் ஆழமானது; மலையினும் மிகுந்தது; இப்போது வந்து எம் துயரை நீக்காயோ?

நஞ்சம் பொறுத்தாய் நகுபார வெண்டலையின்
வஞ்சம் பொறுத்தாய் மழுவேந்துங் கையுடையாய்
தஞ்சந் திரிகூடத் தாணுவே யெங்கள்பிழை
நெஞ்சம் பொறுத்தருள நின்மேற் கடனன்றே. 39

பொ - ரை: நஞ்சை அமுதாக ஏற்றனை; வெண்டலையின் வஞ்சத்தையும் நீக்கி அதனை மேற்கொண்டாய்; மழு ஏந்தும் கையினனே; நீயே எமக்கு அடைக்கலம். திரிகூட முதல்வனே! எங்கள் பிழையையும் பொறுத்து அருள் புரிதல் உன்கடன் அல்லவா?

நாரா யணனுமொரு நான்முகனுங் காண்பரியாய்
ஆரா வமுதே வருக்கைநிழ லம்மானே
வாரா யிதுசமயம் வந்தருளி நின்னருட்கண்
பாரா யென்றும்பர் பரிதவிக்கு மந்நேரம். 40

பொ - ரை: மாயோனும் அயனும் காண்பரிய பேர்ஒளியே, தெவிட்டாத அமுதே, பலாவடிமுளைத்த அண்ணலே, இச்சமயம் வெளிப்பட்டு எங்களது துயரை நீக்கி அருள்க என வருந்தி வேண்டினர். அப்போது,

வேறு

குளிர்புனற் கொழுந்தும் வில்வத் தழைகளுங் கொன்றைப் போதும்
மிளிர்மதிப் பிஞ்சுங் காயும் விரிசடைப் பவளக் காடும்
நளிர்மறை பழுத்த வாயு நாட்டங்கண் மூன்றும் வானோர்
தெளிதர விடைமேல் வந்தான் சிவதிரி கூடத் தம்மான். 41

பொ - ரை: குளிர்ந்த கங்கையும், வில்வ இதழ்களும், கொன்றைமலரும், குளிர்ந்த பிறைமதியும், ஒளிவிடும் பவளக்கொடி போன்ற சடைக்காடும், இனிய மறைநீங்காத திருவாய்மலரும், மூன்று திருக்கண்களும் உடையனாய் விடைமேல் வெளிப்பட்டு வானவருக்குக் காட்சிகொடுத்தான் மங்கலமாகிய திரிகூடப் பெருமான்.

வாடிய பயிர்கள் கண்ட மழைமுகம் போல வாடித்
தேடிய வறியோர் கண்ட திரவியம் போலக் கங்கை
சூடிய கனகக் குன்றைச் சித்திரச் சுருதி மன்றில்
ஆடிய பெருமான் தன்னைக் கண்டன ரமர ரெல்லாம். 42

பொ - ரை: வாடிய பயிர்கள் மழையின் பொழிவைக் கண்டாற்போலவும், வறுமையால் துன்பப்பட்டுத் தேடினோர் பொருளைக் கண்டாற்போலவும், தேவர்கள் சிவபிரானைக்கண்டு களிப்படைந்தனர்.

கண்டனர் விழியு நெஞ்சுங் களித்தனர் களியாந் தேறல்
உண்டனர் திருக்குற் றாலத் தொருவனைப் பரவி வாழ்த்து
விண்டனர் பரமா னந்த வெள்ளத்துட் டிளைத்து வானோர்
தெண்டனிட் டாடிப் பாடிச் சென்னிமேற் கரங்கள் கூப்பி. 43

பொ-ரை: கண்டதேவர்கள் கீழே விழுந்து இறைஞ்சி, முடிமேற் கை கூப்பிப் பாடி ஆடிப் பேரானந்தக் கடலுள் மூழ்கி உளங்குளிர்ந்து மேன்மேலும் பரவி மகிழ்ந்தனர்.

ஒன்றாகி யிரண்டு மாவா யொன்றிரண் டாவாய் மற்றும்
இன்றாகி யென்று மாவா யிலதுள தாவா யெல்லாம்
அன்றாகி யனைத்து மாவா யாதியா யந்த மாவாய்
குன்றாகி யணுவு மாவாய் குறும்பலா வுடையாய் போற்றி. 44

பொ-ரை: குறும்பலா உடையோனே, நீ ஒருவன்; அம்மையோடு இரண்டுமாவாய்; உலகத்தோடு ஒன்றாய் வேறாய் நிற்பாய்; கால தத்துவமாய் நிற்பாய்; விளங்காமையால் இலதாய், அருள் புரிதலின் உளதும் ஆவாய்; எல்லா மாய் அல்லனுமாய் நிற்பாய்; முதலும் முடிவுமாவாய்; பெரியதிற் பெரிதும் சிறிய திற் சிறிதும் ஆவாய்; உனக்கு வணக்கம்; எம்மைக் காக்க.

படைப்பவ னீயே யாவும் பரிப்பவ னீயே முற்றும்
துடைப்பவ னீயே மூன்று தொழிலன்றித் திரோப வங்கள்
அடைப்பவ னீயே யாவு மநுக்கிர கிப்பாய் நீயே
உடைப்பெருந் திரிகூ டத்தா யுனையலா துலக முண்டோ. 45

பொ-ரை: திரிகூட முதல்வனே, நீ படைத்தல் முதலிய ஐந்தொழிலும் செய்பவன்; உன்னை நீங்கி உலகம் எங்கே நிற்பது?

கருவியாய்ச் செயல்க ளாகிக் காலமா யிடமாய்ச் செய்யும்
பொருள்களாய்ப் புரிவா னாகிப் புவனகோ டிகளுஞ் செய்வாய்
மருவியே கலந்து நிற்பாய் மற்று நீ யவைக ளெல்லாம்
ஒருவியே பிரிந்து நிற்பா யுன்னையா ருணர்தற் பாலார். 46

பொ-ரை: உலகத்தில் நிகழும் நிகழ்ச்சிகளுக்கு நீயே கருவியும், செயப் படுபொருளும், காலமும், இடனும், கருத்தாவும், செயலுமாய் உள்ளனை; உலகத் தோடு கலந்து நிற்பாய்; அதனினீங்கிப் பிரிந்தும் நிற்பாய்; ஆதலால், உன்னை உணர்தல் உயிர்களுக்கு இயலாதது.

காணவுந் தொழவுந் தொண்டர் கருதவுந் திரிகூ டத்துப்
பூணவு முரியாய் நின்னைப் புலப்படத் தேடிக் காணச்
சேணதோ நிலம தேயோ சிவப்பதோ கறுப்ப தேயோ
ஆணதோ பெண்ண தோவென் றறிகில மறைக ளின்னம். 47

பொ-ரை: மறைகள் இன்னும் நின்னை ஆகாயம் என்றும் நிலன் என் றும் செம்மை என்றும் நீலம் என்றும் ஆணென்றும் பெண்ணென்றும் துணிந்து

அறியவில்லை; ஆயினும் நீ தொண்டர்க்குக் காணவும், தொழவும், கருதவும், திரிகூடத்து அணுகிப் பொருந்தவும் அனுபவப் பொருளாய் நிற்கின்றாய்.

அரும்பிய பொருள்க ளாவா யல்லையு மாவா யன்பர்
துரும்பெனிற் றுரும்பு மாவாய் தூணெனிற் றூணு மாவாய்
இரும்பெனு மனத்தார் காண வெளியையோ திரிகூ டத்துத்
திருந்திழை பாகா வேகா சித்திரக் கூத்தா வென்றார். 48

பொ - ரை : திரிகூடத்து உமையுடன் அமர்ந்த ஒருவனே, சித்திரசபையில் நடம்புரிவோனே, நீ தோன்றிய பொருளுமாவாய்; என்றும் உள்ளவனும் ஆவாய்; அன்பர் துரும்பென்றோ தூணென்றோ கூறின், அங்ஙனம் காட்சி அளிப்பாய்; இரும்புபோல் வலிய நெஞ்சம் படைத்தார்க்கு நீ அரியவனே ஆவாய். இவ்வாறு தேவர்கள் துதித்தனர்.

வேறு

நின்றுபுகழ் வானவரைத் திரிகூடப் பரன்கருணை நிறைந்து நோக்கி
ஒன்றுபெரு மாதவமுந் தோத்திரமு மினிதுவந்தோ முமக்கு வேண்டும்
வென்றிவரங் கேண்மினென வருளுதலு மெங்களுக்கும் வெளிநின் றாயை
என்றுமெழு தாவேத மன்பருக்கே யன்பனென விசைப்ப தென்னே. 49

பொ - ரை : இங்ஙனம் புகழுரை கூறிய தேவர்களை இறைவன் நோக்கி, நும் மனம் ஒன்றிச்செய்யும் சிறந்த தவத்தையும் துதியையும் மகிழ்ந்தோம்; உமக்கு வேண்டிய மேன்மையுள்ள வரம் யாது என்றனன் தீவினையேமாகிய எங்களுக்கும் எதிர்ப்பட்ட உம்மை எழுதாக்கிளவி எனப்படும் வேதம் அன்பருக்கே அன்பன் என்று மொழிவது வியப்பாக உள்ளது என்றனர் தேவர்.

முன்னாளி லுனையிகழ்ந்து சிறுவிதிதீ மகத்தடைந்த முரணா லன்றோ
பன்னாளு மரசிழந்து பதியிழந்து வறுமையினாற் பதைக்கின் றேம்யாம்
அந்நாளி லெமைத்தொடர்ந்த சிவத்துரோ கந்தனையின் றகற்றல் வேண்டும்
எந்நாளு மெங்கள்பதம் யாங்கள்பெற வேண்டுமென விறைஞ்சிப் பின்னும்.

பொ - ரை : முன் தக்கன் உம்மை இகழ்ந்து செய்த தீய வேள்வியில் கலந்துகொண்டமையால் அரசும் பதியும் இழந்து வறுமையினால் வருந்துகின்றோம்; அந்நாள் எமைப் பற்றிய சிவத்துரோகத்தை நீக்கி எமக்கு உரிய பதம் என்றும் நிலைக்கும்படி, அருள்செய வேண்டும்.

சந்துகா ரகில்வேலிச் சண்பகா டவியொருநாட் டங்கி னோர்க்கும்
மந்தமா ருதக்கொழுந்து வந்தொருகான் மெய்தினைப்ப வரப்பெற் றோர்க்கும்
முந்துநீர்த் திரிகூட வடவருவி யொருபொழுது மூழ்கி னோர்க்கும்
அந்தவான் பிரயாகை மாகமா யிரந்தருபே றளித்தல் வேண்டும். 51

பொ - ரை : மேலும், சந்தனமரமும் மேகமும் சூழ்ந்துள்ள சண்பவனத்தில் ஒரு நாள் தங்கியவர்க்கும், இங்குள்ள இளந்தென்றல் ஒருநாள் உடம்பிற் படப்

பெற்றோர்க்கும், மணிமுதலியவற்றை எறிந்து விரைந்து விழும் வடவருவியில் ஒருபொழுது முழுகப்பெற்றோர்க்கும் அந்த உயர்ந்த பிரயாகையில் ஆயிரம் முறை மாசித்திங்களில் முழுகிய பயனைக் கொடுத்தருளல் வேண்டும்.

என்னபா தகம்புரிந்தா ரென்றாலு மித்தலத்தி லெய்து வாரேல்
அன்னபா தகமவரை யாதவன்முன் பனிபோல்விட் டகறல் வேண்டும்
பொன்னகர மழிந்தாலு மழியாமை வேண்டுமிவ்வூர் புலியூ ராதிப்
பன்னகரம் பிரியினுநீ நன்னகர நீங்காமற் பதிதல் வேண்டும். 52

பொ - ரை: எத்தகைய பாவம் செய்தவரும் இத்தலத்தில் வரப்பெறின் அவர்க்கு அப்பாவம் ஞாயிற்றின்முன் பனி நீங்குவதுபோல நீங்கும்படி அருளல் வேண்டும்; சுவர்க்கம் அழியினும் இந்நகர் அழியாது நிலைபெறல் வேண்டும்; சிதம்பரம் முதலாகிய பல தலங்களினின்றும் எக்காரணம் பற்றியேனும் பிரிய நேரினும், நீ இந்நகரைவிட்டு நீங்காமல் எப்பொழுதும் உறைதல் வேண்டும்.

புல்லெனினு மரமிலைகாய் கனியெனினுந் திரிகூட புரத்து நீர்பாய்
நெல்லெனினு மமுதெனினு முண்டவர்க்குங் கண்டவர்க்கு நிலத்தில்வாய்ந்த
கல்லெனினு நிதியெனினும் பூண்டவர்க்கும் பரகதியே காட்டல் வேண்டும்
எல்லெனினு மிரவெனினும் யாங்கள்பணி செயவேண்டு மென்றார் வானோர்.

பொ - ரை: திரிகூட நகரத்தில் கிடைக்கும் யாதேனும் ஒரு பொருளை உண்டவர்க்கும், அந்நகரைக்கண்டவர்க்கும், அங்குக் கிடைக்கும் மணியோ நிதியோ ஒன்றைப் பூண்டவர்க்கும், மேலான கதியையே உணர்த்தல் வேண்டும்; பகலாயினும் இரவாயினும் யாங்கள் உமக்கே பணிசெய்யவேண்டும் என்று இரந்தனர் தேவர்.

அவ்வரங்கள் கேட்டலுமே யமுதரங்க வாய்முறுவ லரும்ப நோக்கி
இவ்வரங்கள் குற்றாலத் தியற்கைநம தந்தரங்க மமக்கா விந்தச்
செவ்வரங்கள் வெளியரங்கம் பெறத்தந்தோ மினிப்புலவீர் சேணு டெய்தி
மெய்வரங்கள் பெருகவென்றா னெழுதரங்க மிசைநடிக்கும் விமல மூர்த்தி. 54

பொ - ரை: சிவபிரான் அமுதுக்கு இடமாகிய திருவாய் புன்முறுவல் பூத்து, இவ்வரங்கள் குற்றாலத்தின் இயற்கையாதல் நமது பரமரகசியமான உள்ளக் கிடை; நும்பொருட்டு இவற்றை வெளிப்படையாகக் கூறி அருள் புரிந்தோம்; தேவர்களே, இனி வானுலகம் எய்தி மெய்யான விருப்பங்கள் பெருகும்படி வாழ்க என,எழுதப்படும் ஓவிய மன்றில் நடிக்கும்பிரான் அருள் புரிந்தான்.

அந்திப்பான் மதியணிவா ரவ்வரங்க ளருளிவிடை யருளப் போந்து
சிந்திப்பாம் பொன்னுடுஞ் செல்வமும்பெற் றனர்வானோர் சிவபி ரானை
நிந்திப்பார் படும்பாடு நினைதோறுந் தக்கன்மக நினைவார் நாளும்
வந்திப்பார் பெறும்பேறு வாழ்த்துதொறுந் திரிகூடம் வாழ்த்து வாரால். 55

பொ - ரை: மாலையில் தோன்றும் வெண்மதி சூடும் முதல்வன் இவ்வரங்களை அருளி விடை அளித்தான்; தேவர்கள் தம் நினைவாகிய சுவர்க்கமும்

செல்வமும் பெற்று இன்புற்றனர்; சிவபிரானை இகழ்வார் படும் துன்பங்களை நினைக்குந்தோறும் தக்கன் வேள்வியை நினைப்பார்கள்; அன்றுடம் வழிபடுவோர் பெறும் பேறுகளை வாழ்த்துந்தோறும் திரிகூடத்தையும் வாழ்த்துவார்கள் தேவர்கள்.

வேறு

சிலம்புரி திருக்குற் றாலஞ் சேர்ந்துபா தகங்க டீர்ந்த
பொலம்புரி வானோர் செய்கை புகன்றபின் றவர்க்குச் சூதன்
சலம்புரி சிலைக்கை வேடன் சம்புவைத் தொடர்ந்து மேனாள்
வலம்புரிப் பணில வீதி வலம்புரி மகிமை சொல்வான். 56

பொ - ரை: திரிகூடமலையை உரிமையாகவுடைய திருக்குற்றாலம் சேர்ந்து சிவத்துரோகம் தீர்ந்த பொன்னிறத்தையுடைய வானவர் செயலைச் சூதமுனிவர் ஏனைய தவர்களுக்குக் கூறியபின், கோபம் உடைய வில்வேடன் நரியைப்பின் தொடர்ந்து ஓடி வலம்புரிச் சங்கவீதியை வலம் வரும் பெருமையைக் கூறுவாராயினர்.

தேவர்கள் சிவத்துரோகந்தீர்ந்த சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 962

# வேடன் வலம்வந்த சருக்கம்

தரையி னலயம் வலமுதற் றிருப்பணி சரியை
கிரிச னெம்பிரா னருச்சனை புரிவது கிரியை
ஒருமை யுள்ளுறத் தியானமுற் றிருப்பது யோகம்
பொருவி லானுட னிரண்டறக் கலப்பது போதம். 1

பொ - ரை: உலகில் சிவபிரான் திருக்கோயிலை வலம்வருதல் முதலிய புறவழிபாடு சரியை எனப்படும்; வேதமாகிய மலையில் தங்கும் சிவபிரானை அகத்தும் புறத்தும் வழிபடல் கிரியை; அம்முதல்வனை மன வொருமையுடன் மனத்தால் நினைவது யோகம்; உவமையில்லாத முதல்வனை மெய்யுணர்வால் தலைப்பட்டு ஒன்றி இன்புறுவது ஞானம் எனப்படும்.

அன்ன நால்வகைச் செய்கையு நாற்பத மளிக்கும்
பன்னு நான்கினும் பணியணி பரமர்பொற் கோயில்
முன்னி யேவலம் வருவது சரியைபன் முறையின்
மன்னு மோர்வகை யன்னது விரிக்கிலேழ் வகையாம். 2

பொ - ரை: இந்த நான்கு சாதனங்களும் முறையே சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்னும் பேறுகளைத் தரும்; இவற்றுள், முதல்வன் கோயிலை வலம் வருவது சரியை ஆகும்; அங்ஙனம் வலம் வருவது பலவகை எனினும், விரிக்கின் ஏழுவகையில் அடங்கும்.

மதிலி னுட்புறம் வலம்வரல் புறம்வலம் வருதல்
விதியி னற்கரங் குவித்தன்மெய்த் தோத்திரந் தியானம்
எதிரி றைஞ்சுசாட் டாங்கமெய் வலமென வேழும்
அதிக மொன்றிலொன் றுயிர மடங்கென லாமால். 3

பொ - ரை: திருக்கோயில் மதிலின் உட்புறம் வலம்வரல், அதன்வெளியே வலம்வரல், விதிப்படி முடிமேற் கூப்பி வலம்வரல், தோத்திரம் சொல்லிக் கொண்டு வலம்வரல், திருவுருவத் தியானத்துடன் வலம்வரல், சாஷ்டாங்கமாக இறைவனை வணங்கி, வணங்கி வலம் வருதல், உடம்பு கீழே விழுந்துபுரள வலம் வருதல் என்னும் ஏழுவகையும் ஒன்றின் ஒன்று ஆயிரம் மடங்கு ஏற்றமாகப் பயன் தருவன.

நகர நாடொரு தேயநற் கண்டநற் றீபம்
மகர வாரிசூழ் புவனமெண் டிக்குவா னுலகம்
பகரு மன்னராய்ப் புரந்துமிவ் வெழுவகைப் பணியோர்
சிகர வில்லியா ருறைசிவ லோகமே சேர்வார். 4

பொ - ரை: இவ்வெழுவகைத் திருப்பணி செய்தோர் முறையே ஒரு நகரம் நாடு, தேயம், கண்டம், தீவு, கடல்சூழ் உலகம், எண் திக்கோடுகூடிய வானுலகம் என்பவற்றிற்கு மன்னராய் ஆண்டு முடிவில் மேருமலையை வில்லாகக்கொண்ட சிவபிரானது உலகத்தைச் சேர்வர்.

கான வேடுவன் கொலையுங்கோ மாயுவின் களவும்
மான வோடிய வலமொரு வலமெனும் பிழையும்
ஏன பாவமு நீக்கியெம் பரமர்குற் றாலம்
மோன மாக்கதி கொடுத்தவா கேண்மென மொழிவான். 5

பொ - ரை: வனத்தில்வாழ் வேடுவன் செய்த கொலையும், நரிசெய்த களவும் ஒக்கும்படி துரத்தி ஓடியதால் வலம் வருதலில் உள்ள பிழையும், பிற பாவங்களும் நீங்கும்படி செய்து திருக்குற்றால நாதர் பேசா அனுபூதிநிலையைக் கொடுத்த வரலாற்றைக் கேண்மின் எனச் சூதர் கூறுகின்றார்.

வி - கு: கோமாயு - நரி; மான ஓடுதல் - துரத்தி ஓடுதல்.

காலத் தாம்பிரக் கனிகள்பந் தாடுதெண் டிரைக்கைக்
கோலத் தாம்பிர வன்னியாங் கொழிதிரை நதிபாய்
சூலத் தாம்பிரக் குன்றம்வா ரிசந்தமிழ் சுருதி
மூலத் தாம்பிர மன்பெருந் தவக்குறு முனிவன். 6

பொ - ரை: (வேனிற்) காலத்தில் மாங்கனிகளை பந்துபோல் கொண்டு ஆடும் தெள்ளிய அலையாகிய கையையுடைய அழகிய தாமிரவன்னி என்னும் பெயருள்ள ஆறு பாய்கின்ற, பெரிய செம்பு விளையும் பொதியில் என்னும் குன்றமே தாமரை ஆகும்; ஆங்கு உள்ள தமிழே சுருதி; ஆதியில் உண்டாகிய பிரமனே தவமுடைய அகத்திய முனிவர்.

வி - கு: ஆம்பிரம் - மா.

போத னுல்விதி யாப்பெரும் புடார்ச்சுன புரத்து
வேத நாயகர் விண்டுவா யிருத்தலான் மேவ
நாத னார்திரி கூடமால் வரையொடு நறும்பார்
மாத ராண்முலை யிரண்டெனத் திரண்டது மலையம். 7

பொ - ரை: அயனுல் படைக்கப்படாத புடார்ச்சுனபுரத்தில் சிவபிரான் மாயோன் வடிவில் இருத்தலின்; அவர் விரும்புவதற்கு நல்ல நிலமகள் இறைவனுக்கு விருப்பமாகிய திரிகூடத்தை ஒரு தனமாகக் கொண்டு அதற்கு இணையாக உள்ள தனமாகப் பொதியிலையும் கொண்டாற்போலப் பின்னையது திரண்டு உள்ளது.

நடக்கும் யாவரும் வடதிசைக் குழுமலான் ஞாலம்
முடக்கு நீக்கிடத் தென்திசைத் தோன்றிய முனிவன்
குடக்கு நோக்கிய மதியணி வார்திரி கூடம்
வடக்கு நோக்கிமெய்த் தவம்புரி தமிழ்மலை மலையம். 8

பொ - ரை: உமைதிருமணத்தில் பலரும் வடதிசையில் கூடினமையால் நிலத்துக்கு வந்த வளைவு நீங்குவதற்குத் தென்றிசையில் வந்த அகத்தியமுனிவர் மேற்குத் திசையில் காணப்படும் பிறைமதி சூடிய சிவபிரான் எழுந்தருளியுள்ள திரிகூடத்தை வடக்கே இருக்கக் கண்டு தவம்புரியும் தமிழ்க்கு உறையுளாகிய மலை பொதியில். மலையம் - பொதியில்.

இந்த மால்வரைச் சாரலின் சிறுகுடி யிருக்கும்
விந்தை வார்சிலை வீரனும் வேடுவன் றனக்கு
மைந்த னும்வல னென்பவன் கொலைத்தொழில் வலியால்
சந்த னடவிச் சர்ப்பமா மெனத்தலை யெடுத்தான். 9

பொ - ரை: இப்பொதியமலைச்சாரலில், சிறுகுடியாக இருந்த வில்வித்தை வல்ல வீர வேடுவன் ஒருவனுக்கு வலன் என்னும் ஒருமகன் தோன்றினன்; அவன் கொலைத்தொழில் வன்மையால் சந்தனவனத்தின் சர்ப்பம் எனக்கூறும்படி தலைமை உடையவன் ஆனன்.

வேறு

செருப்புங் கானமுந் தேய்த்ததிண் காலினன்
பொருப்பி னேங்கி வளர்ந்த புயத்தினன்
நெருப்பி னீர்பெய் நிறத்தினன் செங்கடா
மருப்பு மான முறுக்கும்வன் மீசையான். 10

பொ - ரை: கால்செருப்பால் வனத்தைத் தேய்த்த வலிய காலினன்; மலையெனத் திரண்ட புயம் உடையன்; நெருப்பில் நீர் பெய்தபோது தோன்றும் கறுத்த நிறத்தினன்; ஆட்டுக்கடாவின் கோடுகளைப்போல முறுக்கிவிட்ட மீசையை உடையவன்.

மைய லுங்கொடும் பாவமும் வஞ்சமும்
பொய்யு மோருருக் கொண்டன புன்மையான்
வெய்ய வூனுணத் தந்தங்கண் மேனியுங்
கையுங் காலுமொய்த் தன்ன கவடியான். 11

பொ - ரை: மயக்கம், பாவம், வஞ்சனை, பொய் என்பவற்றின் உருவாக இருந்தான்; கொடிய ஊனை உண்ணுதற்கு உடம்பிலும் கையிலும் காலிலும் பற்கள் முளைத்தாற்போல கவடியால் ஆன சரங்களைப் பூண்டவன்.

வி - கு: கவடி - சோகி, பலகறை.

முயலு மான்களு மூரிக் கலைகளும்
கயலுஞ் சேல்களுங் கானமுஞ் சேனமும்
குயிலும் வீட்டுங் கொலைத்தொழி லேநடை
பயிலுங் காலத்தின் முன்பயில் பான்மையான். 12

பொ - ரை: நடைபயிலும்போதே முயல், மான், வலிய ஆண்மான், கயல், சேல் எனும் மீன்கள், வானம்பாடி, பருந்து, குயில் என்பவற்றைக் (கவண் கல்லால்) கொல்லுதற்கு முற்படப் பழகியவன்.

தோயும் வாடை யெடுத்துச் சுவடுபோய்
நாயு நாண நடக்குந் திடத்தினன்
காயுஞ் சிந்தைக் குழிநரிக் கள்ளத்தான்
பாயும் போர்க்குப் பதுங்கும் புலியனன். 13

பொ-ரை: உடம்பின் வாடையை உணர்ந்து ஒருவர் சென்றவழியே பின் தொடர்ந்து பற்றுவதில் நாயும் நாணத்தகும் உறுதி உடையவன்; குழிநரிபோல வஞ்சனையால் தன் உள்ளக்கொதிப்பைக் காட்டாது மறைக்கவல்லவன்; போர்க்கு முன்பதுங்கி நிற்கும் புலிபோன்ற இயல்பினன்.

கோப மின்றிச் சிவக்குங் கொடுங்கணன்
தீப மென்ன வெரிசிகைப் பங்கியான்
தூப மாகி யெழுமுயிர்த் துண்டத்தான்
பாப மன்றிப் பழிக்கும் பயப்படான். 14

பொ-ரை: சினம் இன்றியே சிவந்த கண்ணையுடையவன்; தீபத்தைப் போலச் சிவந்த முருட்டுத் தலைமயிரை உடையவன்; புகைபோல உயிர்க்கும் மூக்கினை உடையவன்; பழிபாவங்களுக்கு அஞ்சாதவன்.

உடலை யேவளர்த் தூனுண்டு பல்லுயிர்ச்
சுடலை யேயெனத் தோன்று முதரத்தான்
நடலை யேயெனு நஞ்சுறை நெஞ்சினன்
அடலை யேயறி யாமுழு முண்டத்தான். 15

பொ-ரை: ஊன் உண்டு உடலை வளர்ப்பவன்; பல உயிர்களுக்கும் சுடலை எனத்தக்க வயிற்றினன்; வஞ்சனை என்னும் நஞ்சு பொருந்திய உள்ளத்தான்; திரு நீற்றை இட்டு அறியாத நெற்றியை உடையவன்.

மாலுந் தென்றலுஞ் சேர்மலை யாசலம்
கோலு நீள்வரைக் கொல்லி மயேந்திரம்
மேலும் போகி விலங்கொடு புள்ளெலாம்
காலந் தோறுங் கருவறுத் தானரோ. 16

பொ-ரை: மேகமும் தென்றலும் உள்ள பொதியில், (வளைக்க) வளையும் நீண்ட மூங்கில்கள் வளரும் கொல்லிமலை, மயேந்திரமலை, அவற்றுக்கு அப்பாலும் சென்று விலங்குகளையும் பறவைகளையும் காலந்தோறும் அவற்றின் மூலமே இல்லாதபடி கொன்றான்.

அங்கண் வேட்டமெய் தாதயல் சூழ்வரை
எங்கும் வேட்டம் புகுவதற் கெண்ணியே
மங்குல் வேட்ட மலையத்து ளார்க்கெலாம்
தங்கு வேட்ட மெனப்பறை சாற்றினன். 17

பொ-ரை: அவ்விடத்து விலங்கு முதலியவை கிடைப்பது அரிதானமையால் வேறு எங்கும் வேட்டையாட எண்ணி, மேகம் தங்கும் மலையமலையில் வாழ்

வோர்க்கு எல்லாம் தான் வேட்டை மேற்கொள்ளும் செயலை பறைகொட்டு வித்துச் சொல்வித்தான்.

வெள்ளி வாரத்தில் வேலனை முன்புகூஉய்த்
தெள்ளி தாம்வரைத் தெய்வதம் போற்றுபு
துள்ளி யாடித் தொழுது வணங்கென
அள்ளி யீந்தன னைவன மாதியா. 18

பொ - ரை : வெள்ளிக்கிழமையில் வெறியாட்டாளனை வரவழைத்து மலைத் தெய்வத்திற்குப் பூசைபோட்டு வெறியாட்டு அயர்க என மலைநெல் முதலிய வற்றைக் கையால் அள்ளிக்கொடுத்தான்.

முதுபு னத்தினை யும்மூங்கில் தோரையும்
மதுவுங் கந்தமு மற்றவுங் கொண்டவன்
கதுமெ னச்சுனை மூழ்கிக் கடிகமழ்
புதும லர்ப்பெய்து பொங்கவி தூவியே. 19

பொ - ரை : வேலன், பழையதினையும் மூங்கில் அரிசியும் மது, வாசனைப் பொருள் முதலியவும் கொண்டு சுனையில் முழுகிப் புதுமலர்களைப் பரப்பிப் பொங்கிய சோற்றினைப் படைத்து.

பரவி யேத்திப் பலிவைத்த சேடமும்
வரவி சேடமுஞ் சொல்லி வழங்கலும்
விரவு நல்ல நிமித்தென வேடர்கோன்
சுரவு தாங்கி யொடுதொடு தோலிட்டான். 20

பொ - ரை : வேலன் முருகனைப்பரவி வழிபட்டு, படைத்தபொருள்களின் மிச்சமும், தெய்வம் கொடுத்தவரத்தின் சிறப்பும் கொடுத்தும் சொல்லியும் மகிழ் வித்து, நல்ல சகுனம் ஆகிறது எனச் சொல்ல, வேடர்தலைவன் செருப்பைக் காலில் அணிந்து கொண்டான்.

அம்ம லைக்குரி யானவ னுதலால்
வெம்ம லைப்புற வேடுவர் யாவரும்
செம்ம லைப்புடை சூழ்ந்து செருமினர்
கைம்ம லைக்குலங் கார்மலை சூழ்தல்போல். 21

பொ - ரை : அம்மலைக்குத் தலைவன் அவன் ஆதலால், விருப்பம் விளைக் கும் அம்மலைப்பக்கங்களில் வாழ்ந்த வேடர்கள் அவனைச் சூழ்ந்து நெருங்கினர்; அது மேகம்படிந்த மலையை யானைக்கூட்டம் சூழ்ந்துகொண்டதுபோல்இருந்தது.

ஆங்கு நின்றவர்க் காதி முதியவன்
வீங்கு பல்குர லாந்தை விளித்தலும்
தீங்கு காட்டிய சேதமென் றுன்மறுத்
தோங்கு மாக்கமென் றுன்மற் றெருவனே. 22

பொ - ரை: அப்பொழுது ஓர் ஆந்தை உரத்த பல ஒலி எழுப்பிற்று; அங்கிருந்த ஒரு பழைய முதியவன் அவ்வறிவுடைப் பொருள் தீங்கு குறித்தது என்றான்; மற்றொருவன் அவனை மறுத்துச் செல்வம் பெருகுவதைக் குறிக்கும் என்றான்.

வேறு

பரிசையுடை வரியதளாற் பரியபுலிப் போத்தானான்
அரவுரிகண் முதலசக்கி யடற்கூளி யெனநின்றான்
சுரிகையெனும் படைதுளக்கி யிடும்பனெனத் தோன்றினான்
கரடியுரிக் கஞ்சுகத்தாற் கார்மேக மெனப்பொலிந்தான். 23

பொ - ரை: கேடகத்தின் கீற்றுக்களையுடைய தோலினால் பருத்த ஆண் புலிபோல் காணப்பட்டான்; பாம்பின் தோல் முதலியவற்றைக் கட்டிக் கொண்டமையால் வலிய பேய் போன்றான்; உடைவாள் ஏந்தி அசைத்தலால் இடும்பாசுரன் போன்றான்; கரடித்தோற் போர்வையால் கறுத்த மேகம்போற் காணப்பட்டான். இடும்பன் - அபிமன் - என்பதும் பாடம்.

வளைதடியர் வளைகோட்டுப் பகடுபோன் மருங்கேற
முளைதடியர் மூரிமருப் பிரலைபோன் முன்னடப்பக்
கொளையுடுத்த கொடுமரத்தர் வரையாட்டின் குலமேய்ப்பத்
திளைதிளைத்து நடுவருமோர் சிங்கமெனத் தோன்றினான். 24

பொ - ரை: வளைதடியை ஏந்தியோர் வளைந்த கோடுகளையுடைய ஆண் எருமைகள்போல் பக்கத்தில் வர, தண்டு ஏந்திய தடித்த வடிவினர் நெரிந்த கோடுகளையுடைய கருமான்கள் போல முன்னேசெல்ல, கொலைத்தொழிலையுடைய வில் ஏந்தினோர் மலைஆடுகளின் கூட்டத்தைப்போல் தாவிவர, நெருங்கி நெருங்கி நடுவில் வந்துகொண்டிருக்கும் சிங்கம் போல அவ்வேடர் தலைவன் காணப்பட்டான்.

வி - கு: கொளை - கொலை, பிடிப்பும் ஆம். கொடுமரம் - வில்.

ஆளெழுந்த திரண்முழக்க மலைசுருட்டுங் கடலேய்ப்ப
வாளெழுந்த வயப்படைகண் மகரமச்ச நிரைமானத்
தூளெழுந்த படலம்போய்ச் சுடர்மறைப்பப் படரிருளால்
வேளெழுந்து தன்கரியா மெனத்திகைப்ப வெளிக்கொண்டான். 25

பொ - ரை: எழுந்த மக்கட் குழுவின் பேரொலி கடலின் ஓசையை ஒத்தது; இது வேளின் முரசு; வெற்றிப்படைகளான வாட்படைகள் மகரமீனை ஒத்தன; இஃது அவன்கொடி; எழுந்த மண்தூளின் நெருக்கம் ஞாயிற்றை மறைத்தமையால் பேரிருள் உண்டாயிற்று. இதனால், மன்மதன் எழுந்து இருளாகிய தன் யானை வந்துவிட்டதாகத் திகைத்தான். இங்ஙனம் நிகழ வேடர் தலைவன் வேட்டம் மேற் புறப்பட்டான்.

தளிரிலையு மோலைகளும் பாளைகளுந் தானையராய்க்
கிளைகிளைவல் லயந்தரித்துத் தருக்குலம்போற் கிட்டினார்
இளையர்கா ளையராய விறவுளரும் வனசரரும்
பழையர்களுஞ் சூனர்களும் பறம்பருங்கி ராதருமே. 26

பொ - ரை : இளைய காளைகள் போன்ற மலை நிலத்தோர், காட்டிற் சரிப்போர், கள்விற்போர், ஊன்விற்போர், தோல்வினைஞர், வேடர் என்னும் இவ்வகையினர் தளிர், இலை, ஓலை, பாளை என்பவற்றை உடையாக உடுத்து, கவர்த்த கிளைகளையுடைய வலிய இரும்புக் கருவிகளை ஏந்தி மரக்கூட்டங்களைப் போல் நெருங்கி வந்தனர்.

வி - கு : தானை - உடை, வல் அயம் - எறி ஈட்டி.

வேறு

கொடிபி டிப்பக் குழல்கொம்பு தொண்டகத்
துடிமு ழக்கந் துவைத்தெழ ஞாளிகள்
செடிகள் சுற்றுபு வாடை தெரித்தெழத்
தடமெ டுத்து வலைஞர்பின் சாரவே. 27

பொ - ரை : கொடிகளைச் சிலர் பிடிக்க, ஊதுகுழல், கோடு, தொண்டகப் பறை முழங்க, நாய்கள் புதர்களைச் சுற்றிவந்து நாற்றம் தெரிந்து புறப்பட, அவ்வழியைப் பின்பற்றி வலையுடையோர் சார்ந்தனர். தடம் - வழி.

சென்று காணுஞ் சிலம்பும் பதுக்கையும்
துன்று சாரலுஞ் சூரலங் கானமும்
குன்றும் யாறுங் குவடும் வளாகமும்
நின்று மோடியு நீடினர் தேடினர். 28

பொ - ரை : பல்லோர் சென்று காணத்தக்க ஓசை எழும் இடனும், சிறு தூறும், நெருங்கிய சாரல்களும், பிரப்பங்காடும், குன்றும், ஆறும், மலைஉச்சியும், தினைப்புனமும் நின்றும் ஓடியும் விலங்குகளைத் தேடினர்.

காடு முற்றக் கலைத்தெழு வார்சிலர்
மாடு சுற்றி வலையெறி வார்சிலர்
ஊடு பற்றி யொடியெறி வார்சிலர்
கோடு பற்றிக் குமுறிநிற் பார்சிலர். 29

பொ - ரை : சிலர்காடு முழுவதும் செடிகளையும் புதர்களையும் அசைத்து விலங்குகளைத் தேடுவர்; புதர்களின் பக்கத்தில் சூழும்படி வலை கட்டுவார் சிலர்; சிலர் குறுக்கேசென்று உலர்ந்த கிளை முதலியவற்றை வெட்டி வழி செய்வர்; கோட்டை எடுத்துக் காடு அதிரும்படி ஓசைசெய்வர் வேறு சிலர்.

வேடு பாய்வ ருழுவையை வேழத்தின்
கோடு சாய்தரக் குத்துவர் மேல்வரை
ஆடு பாய்வ ரறைபாய்வர் சூகர
மோடு பாய்வர் முயன்மறித் தோடுவார். 30

பொ - ரை : புலியைச் சூழ்ந்து பாய்வர்; யானையின் தந்தம் விழும்படி குத்துவர்; உயர்ந்த வரைகளில் உள்ள ஆடுகளைப் பாய்ந்து பன்றியின் வயிற்றில் குத்துவர்; முயல்களை வழிமறித்து ஓடுவர்.

வி - கு : உழுவை - புலி, அறை - பாறை, மோடு - வயிறு.

அழுங்கு கீரி யணில்கவு தாரிபுள்
ஒழுங்கு காடை யுடும்புபுல் வாய்கலை
எழும்ப நாய்கலைத் தேறிய திக்கெலாம்
கழுந்து போல்பவர் கைசெயுஞ் சூழல்வாய். 31

பொ - ரை: ஆமை, கீரி முதலியவை தம் இடம்விட்டு எழும்படி நாய் கலைத்து முன்னேறிய திசைகளில் எல்லாம் உலக்கைப் பொருத்துப் போன்ற வேடர்கள் ஓடி எறிதல், வலைவீசுதல் முதலிய கைவினைகளைச் செய்யும் இடத்தில்.

நீல மொன்றிய குன்றினை நீள்சரற்
கால மேகம் வளைந்தெனக் கானராத்
தூல மொன்றிய மெய்யெங்குஞ் சுற்றலால்
ஓல மென்றதோர் மும்மத வோங்கலே. 32

பொ - ரை: நீலமலையை மழைக்கால மேகம் வளைந்துகொண்டாற்போல, காட்டுப்பாம்பு ஒரு மதயானையின் பருத்த உடலை முழுவதும் சுற்றி இறுக்குதலால் அது பெரு முழக்கம் செய்தது.

தந்தி கூப்பிடச் சக்கரத் தானென
வந்தெ திர்த்தனன் வென்றி வலனென்பான்
முந்து தாவிமுன் னேகினர் யாரையும்
அந்த மாசுண மள்ளி விழுங்குமால். 33

பொ - ரை: கயேந்திரன் என்னும் யானை அழைத்தபோது உதவிக்குச் சென்ற மாயோன் போல, வெற்றிவலன் வந்து பாம்பை எதிர்த்தான்; முன் பாய்ந்து சென்றூர் அனைவரையும் அந்தப் பெரும்பாம்பு அள்ளி விழுங்கிற்று.

கட்டு நாகங் கராமென நேமியாத்
தொட்ட வாளியி னற்றெலைத் தானையை
விட்ட மாலின் விடுத்தனன் மீனவன்
இட்ட கார்தளை விட்டது மென்னவே. 34

பொ - ரை: சுற்றிய நாகமே முதலையாக, வில்லில் தொடுத்த அம்பே சக்கரமாக, நாகத்தைக் கொன்று யானையை முன் காத்த திருமாலைப்போலக் காத்தான் வலன்; மேகத்தைப் பாண்டியன் இட்ட தளையை மீள அவிழ்த்து விட்டாற்போலவும் இஃது இருந்தது.

வல்லை பாந்தளின் விட்டபின் வாரணம்
செல்லும் வேடரைச் சீறித் துரந்ததால்
வெல்லும் வல்விட மீட்ட சகாயனைக்
கொல்ல வேகுங் கொலைவரி வேங்கைபோல். 35

பொ - ரை: பாம்பினின்றும் விடுவித்தவுடன் விரைவாக யானை வேடரைச் சீறித் துரத்தியது; விடத்தினின்றும் விடுவித்த உபகாரியைக் கொல்லுவதற்குச் செல்லும் வேங்கைப்புலியைப் போல்.

ஆனை தாக்கலு மாங்கெதிர்ந் தான்வலன்
ஏனை வேட ரிரிந்தன ரேகினர்
தானை வேந்தைச் சமரில்விட் டோடிடும்
சேனை யேயன் றித் தெவ்வரும் வேண்டுமோ. 36

பொ - ரை: யானை எதிர்த்தவுடன் வலன் அதை எதிர்த்தான்; அவன் சேனைகள் பல வழிகளில் சிதைந்து ஓடினர். அரசனைப் போரில் தனியேவிட்டு ஓடும் அவன் சேனையினும் வேறு பகைவரே வேண்டா.

சோனை யொத்த சுடுசர மாரியால்
வேனில் விட்டென வேழம்விட் டேகலும்
வானி றைத்து வெறித்தது மானவே
தானெ ருத்தனுஞ் சாபமு மாய்நின்றான். 37

பொ - ரை: விடாது பெய்யும் மழையால் வெய்யில் தன் கொடுமையை விட்டொழிவதுபோல, துன்பம் தரும் அம்புகளை விடாது தொடர்ச்சியாக வலன் யானைமேல் விட்டமையின் வேழம் அவ்விடம் விட்டு நீங்கிற்று; மழையைச் சொரிந்த மேகம் வெறுமையுடையதாய் இருந்தாற்போல வலனும், தானும் தன் வில்லுமாய்த் தனி நின்றான்.

சேணில் வேடரைத் தேடலுங் காண்கிலான்
ஊணி லாம லொருபகல் வெம்பினன்
வீணி லோடும் விலங்குபுட் காண்டலும்
பாண மொன்றிலன் பற்கறித் தேநின்றான். 38

பொ - ரை: மிக்க தூரத்திலும் உடன்வந்த வேடரைத் தேடியும் காண கிலன்; ஒரு பகல் முழுவதும் உணவின்றி வயிறு காய்ந்து உள்ளான்; துரத்துவோர் இன்றி ஓடும் விலங்கும் பறவையும் கண்டும் தன்கையில் அம்பு இல்லாமையால் பல்லைக்கடித்துக்கொண்டு நின்றான்.

கான மெங்கு முழந்தொரு கார்முயல்
கூன விற்குணி லாகக் கொலைசெய்தான்
மான வேடுவன் வன்பசிக் குண்ணவே
ஊனை வாட்ட வுறுகனல் காண்கிலான். 39

பொ - ரை: காடு எங்கும் சுற்றி ஒரு கரிய முயலை வளைந்த வில்லையே குறுந்தடியாகக் கொண்டு கொன்றான்; வீரமுடைய வலன் பசிக்கு உதவும்படி முயலின் ஊனை வாட்டுவதற்கு நெருப்பைக் காண்கிலன்.

கொம்பு தேடிக் கடைந்து கொடுங்கனல்
வெம்ப வீழ்த்தலும் வெண்ணெய் படாமுனம்
பம்பு தாழி யுடைந்தெனப் பாய்ந்தொரு
சம்பு வூனைக் கவர்ந்தது தாயதே. 40

பொ - ரை: தீக்கடை கோலைத் தேடிக்கடைந்து தீயைப் பெருக்கும் போது, வெண்ணெய் உருவெடுக்கும் முன் பானை உடைந்தாற்போல, ஒரு நரி சடக்கெனப் பாய்ந்து ஊனைக் கவர்ந்துகொண்டு தாவி ஓடிற்று.

சம்பு வோடித் தசைதனைக் கவ்வியே
சம்பு நீண்மரக் காவுந் தனிவரைச்
சம்பு வோடையுஞ் சாரலும் தாவிப்போய்ச்
சம்பு வாழ்திரி கூடத்தைச் சார்ந்ததால். 41

பொ - ரை: ஊனைக் களவிக்கொண்டு நரி (சம்பு) ஓடி, நாவல் மரக்காவும், ஒப்பற்ற வரைச்சாரலில் உள்ள சம்புப்புல் வளரும் ஓடையும் சாரலும் கடந்து, சிவபிரான் எழுந்தருளியிருக்கும் திரிகூட எல்லையைச் சேர்ந்தது.

ஓட வோடிப் பவக்கட னீந்தவோர்
ஓட மேறுதல் போலுயர் மேற்கதி
கூட வோர்வழிக் கூடுத லாய்த்திரி
கூட மால்வரைச் சாரலிற் கூடினன். 42

பொ - ரை: நரி ஓட, வலன்பின் ஓடி, பிறவிக்கடல் நீந்த ஓர் ஓடம் ஏறுதல் போல, உயர்ந்த சிவகதி கூடுவதற்கு உரிய ஒரு வழியைச் சேர்வதுபோல, திரிகூடமலைச் சாரலைச் சேர்ந்தான்.

வேறு

அனைய வூனவே றமைத்தபின் வினைபிரித் தகன்று
தனையும் வேறுறப் பிரித்தவ னெனத் தனித்தான்
வினைபி ரித்தபின் சம்புவைத் தொடருமெய் யனைப்போல்
துனைவி லூன்கவர்ந் தேகிய சம்புவைத் தொடர்ந்தான். 43

பொ - ரை: முயலின் ஊனை வேறு வைத்தபின், வினையைப்பிரித்து நீக்கி விட்டு வேறாக நிற்பவனைப்போல் தனிப்பட்டவனாகிய வலன், அங்ஙனம் வினையைப் பிரித்தபின் சம்பு எனப்படும் சிவபிரானைத் தொடரும் உண்மை ஞானம் உடையோனைப்போல; விரைவில் ஊன்கவர்ந்து ஓடிய நரியைத் தொடர்வான் ஆயினன்.

ஊரை நோக்கல னுறுபசி நோக்கல னுடலின்
சோர்வு நோக்கல னடித்தமுட் கடித்தசூ ழரவம்
பார்வை நோக்கல னிகலன்மேற் பார்த்தகண் பறியான்
பூர்வ நாடியுண் ணோக்குமோர் யோகியே போன்றான். 44

பொ - ரை: நரியைத் தொடர்ந்தபோது ஊர், பசி, உடல் வருத்தம், தைத்தமுள், கடித்துச் சுற்றிய பாம்பு முதலிய எதனையும் கருதாது நரியின்மேல் வைத்த கண்ணை எடாமல் பின் தொடர்ந்தான்; முற்பட்ட நாடியாகிய சுழுமுனை நாடியை உள்நோக்கி நிற்கும் யோகியைப் போன்றான் வலன்.

வி - கு: இகலன் - நரி. பூருவநாடி - சுழிமுனை.

வரியு டற்பொறி மாசுண வாய்ப்படு மதம்பாய்
கரியை மீட்டவன் கைப்படை தொலேந்தகா லத்து
நரியின் வாய்த்தசை மீட்கவும் வலியின்றி நலிவான்
பரிய கூகையை வெல்லுமே காகமும் பகலில். 45

பொ - ரை: யானையை மலைப்பாம்பினின்றும் காத்த வலவன் தன்கைப் படை போனபின், நரி கௌவிச்சென்ற ஊனையும் மீட்க வலியின்றி வருந்தினுன்; பகலில் பருத்த கூகையினையும் காகம் வெல்லும் அல்லவா!

நிவந்த கானெலா நேடியு மோடியுந் தவித்தும்
கவர்ந்த வூனைவாய் விடுக்கில தோரியுங் கரங்கால்
சிவந்து மெய்யெலாங் கருகியும் வேடனுந் திரும்பான்
உவந்த வூன்பொருட் டுயிரையு மதித்திடா ருலகோர். 46

பொ - ரை: மரம் உயர்ந்த வனம் முழுவதும் ஓடித் தேடித் தவித்தும் நரி ஊனைவாயினின்றும் வீழ்த்தவில்லை; கைகால் சிவந்து உடம்புகறுத்தும் வேடனும் அதனை விடவில்லை; தான் விரும்பும் ஊன் பொருட்டு உலகினர் உயிர்க்கு வரும் கேட்டையும் நினைக்க மாட்டார்.

தொடர்வ னெட்டுவன் வாடுவ னேடுவன் றுடிப்பன்
படப டத்துடல் சோருவன் பொறியெழப் பார்ப்பன்
குடர்கொ திப்பதும் பார்க்கல னிகலன்மேற் கொதிப்பான்
மிடல்கு றித்தபின் றமதிடர் பார்ப்பரோ வீரர். 47

பொ - ரை: வெற்றிபெற வீரர் தமக்கு வரும் இடையூறுகளைப் பொருட் படுத்தார்; அங்ஙனமே, பலவகையிலும் வருந்தி நரியைப் பின் தொடர்ந்து எட்ட முடியாமல் அதனைக் கோபித்து ஓடினுன் வலன்.

முன்பு தெவ்வர்தந் திறையின்மேற் றிறைகொளு முனைவன்
பின்பு தானைவிட் டூனைவிட் டோரிபின் பெயர்வான்
இன்ப மெய்துநா ளின்பமே லின்பமா மெவர்க்கும்
துன்ப மெய்துநாட் டுன்பமேற் றுன்பமே தொடரும். 48

பொ - ரை: முன்பு பகைவர் கப்பத்தின்மேல் நண்பர் கப்பத்தையும் பெற்று வந்த வேடர் தலைவன், இப்போது தன் சேனையை இழந்து, தன் உணவாகிய ஊனையும் இழந்து நரியின் பின் ஓடுவான் ஆயினன்; எவர்க்கும் இன்பம் நுகர வரும் காலத்து மேன்மேலும் இன்பமே விளையும்: துன்பம் நுகரவரும் காலத்து மேன்மேலும் துன்பமே அடுக்கிவரும்.

விரைவிற் சம்புவைத் தொடர்தலால் வியன்றிரி கூட
வரையைக் கண்டனன் வரைபொரு கடல்வட வருவித்
திரையைக் கண்டனன் சித்திர நதிப்பெருந் தீர்த்தக்
கரையைக் கண்டனன் பிறவியங் கடற்கரை காண்பான். 49

பொ - ரை: விரைவாகச் சம்புவை (சிவனை, நரியை)த் தொடர்ந்தமையால் பெரிய திரிகூடமலை, மலையில் மோதும் கடல்போன்ற வட அருவித் திரைகள், சித்திரா நதியின் புனித நீர்க்கரை என்பவற்றைக் கண்டான் வலன்; பிறவிக் கடலின் கரையைக் காண்பவனைப்போல.

இருவ லம்புரி நந்தன வனம்புகுந் திமையோர்
தருவ லம்புரி சண்பகத் தண்டலை தாவித்
திருவ லம்புரித் திரளொடு சித்திர நதிசூழ்
வருவ லம்புரி மறுகுசூழ்ந் தனன்வினை மறுக. 50

பொ - ரை : பெரிய நந்தியாவட்டமலர் மலர்ந்துள்ள நந்தவனம் புகுந்து, இமையவர் தருவும் வலம்புரியத் தக்க சண்பகக் காட்டைக்கடந்து, அழகிய வலம்புரிச் சங்குகளோடு சித்திரநதி சூழ்ந்துவரும் சங்க வீதியைச் சூழ்ந்து வந்தனன்; தன் வினை சுழலும்படி.

கிளரு முத்தலை யருவிபாய் முத்தலைக் கிரியின்
வளரு முக்கணு ரமுதுறை கோயில்சூழ் வரலால்
உளரும் வெம்பசி யொழிந்தது பகைமையு மொழிந்தான்
தளரும் வெவ்வினை தணந்தபோ லிகலனைத் தணந்தான். 51

பொ - ரை : ஒளியையுடைய முத்துக்களை அலைக்கும் அருவி பாயும் திரிகூட மலையில் உள்ள முக்கண்களையுடைய அமுதமாகிய சிவபிரான் உறையும் திருக்கோயிலை வலம் வந்தமையால் சுழலும் கொடிய பசி நீங்கிற்று; பகையும் நீங்கிற்று. தன் வலியை இழந்த வினை தணந்ததுபோல இகலனை (நரியை) வலன் விட்டு நீங்கினன்.

தணந்து தத்தம திடங்குலாய் முடிவின்மா தவரும்
வணங்க மானமேற் கயிலையி லேகிவல் வேடன்
அணங்கு பாகர்மெய் யருளினுற் சிவகண மானுன்
இணங்கு சம்புவுங் கிங்கர னெனப்பொலிந் ததுவே. 52

பொ - ரை : இங்ஙனம் பிரிந்தமையின் வலனும் நரியும் தம் தம் இடங்களில் விளங்கி, வேடன் முனிவர் பரவும்படி விமானத்தில் திருக்கயிலை சென்று சிவபிரான் அருளால் சிவகணத்திற் சேர்ந்தான். இவனேடு ஒத்த நரியும் தேவ தூதனுய் விளங்கிற்று.

தலைவர் சங்கமா மறுகினை வலம்வரு தவத்தால்
சிலைவல் வேடனுஞ் சம்புவுஞ் சிவகதி சேர்ந்த
நிலைமை கூறினன் சூதன்மா தவர்க்குமே னிகழ்த்தும்
உலைவில் யானைசெய் பூசையை யாசையா லுரைப்பாம். 53

பொ - ரை : முதல்வனது சங்கவீதியை வலம்வந்ததன் பயனுக வேடனும் நரியும் சிவகதிபெற்ற வரலாற்றை இங்ஙனம் கூறினன் சூதன்; இனி அம்முனிவன் பிறமுனிவர்களுக்குக் கூறும், வருத்தமில்லாத யானை செய்த வழிபாட்டினை விருப்பத்தோடு விவரிப்போம்.

வேடன் வலம்வந்த சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1015

---

# யானைபூசித்த சருக்கம்

முந்து மெண்வகைப் பத்திநித் தியமுதன் மூன்றால்
ஐந்து சுத்தியா லாகம விதியினு லரனை
மந்தி ரத்தினல் வருபுனல் போதுமற் றவையால்
புந்தி வைத்துமுக் குறியினிற் புரிவது பூசை. 1

பொ-ரை: பூசையாவது உடலுக்கு உயிர்போற் சிறந்த பத்தியின் எண் வகையுள் ஒன்றும் பலவும் உடையராய், நித்தியம், நைமித்திகம், காமியம் என்னும் மூன்றன் விதியினலும், பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திர சுத்தி, இலிங்கசுத்தி என்னும் ஐவகைச் சுத்திகளோடு சிவாகமத்தில் விதித்துள்ள படி சிவபிரானை, மந்திரங்கள், தண்ணீர், மலர்முதலிய உபகரணங்கள் கொண்டு, மனஒருமையோடு, குரு லிங்க சங்கமம் என்னும் ஆதாரத்தில் அணுகுவது.

அந்த மெய்ந்நெறி யறிகலா வடுகொலை வேழம்
இந்து வார்சடை நன்னக ரிறைவனை யோர்நாள்
வந்து பூசனை புரிந்துநற் கதிபெறு மகிமை
சிந்தை யன்பினுற் கேட்பவ ருயர்கதி சேர்வார். 2

பொ-ரை: யாவருக்கும் அரியதாகிய இந்தமுறைகளை அறியமாட்டாத கொலைத்தொழிலையுடைய யானை திருக்குற்றாலநாதனை ஒரு நாள் வந்து வழிபட்டு நற்கதிபெற்ற வரலாற்றினை அன்புடன் கேட்போர் மேற்கதியை அடைவர்.

அருமைப் பேடைகண் களிப்புறக் களிமயி லகவும்
பெருமைக் காரெனும் பருவமுங் குருகிளம் பெடைகள்
ஒருமைச் சேவலி னூடலுக் கூடல்கூர் குளிரும்
பருமைக் கூரலி னிடைவிடா தன்றில்சேர் பனியும். 3

பொ-ரை: அரிய பெண் மயில்கள் மகிழ ஆண்மயில்கள் அகவும் சிறப் புடைக் காலமாகிய கார்ப்பருவமும், இளமையான பெண்நாரைகள் ஆண் நாரைகளின் ஊடலுக்கு எதிரிட்டுத் தாமும் ஊடல் மிகுவதற்கு வாய்ப்பான குளிர் காலமும், ஆண் அன்றில் பெண்அன்றிலைத் தன் பருத்த சிறகால் இடை விடாது அணைத்துக்கொள்வதற்கு ஏதுவாய் நிற்கும் முன்பனிக்காலமும்.

பாங்கு தண்கயப் பங்கயத் தலர்முகம் வாட்டும்
தாங்கு பின்பனிக் காலமும் வண்டுதா லாட்டத்
தூங்கு சீரிள வேனிலும் தொலைந்திடச் சுடரோன்
வீங்கு வெய்யில்வாள் விதிர்த்தெழுந் ததுமுது வேனில். 4

பொ - ரை : அழகிய குளிர்ந்த தடாகத்தில் தோன்றும் தாமரை மலரை வாடச்செய்யும் பின்பனிக்காலமும், வண்டு இன்னிசை ஒலிசெய்யத் தங்கும் இளவேனிற் காலமும் கழிய, ஞாயிறுதன்மிக்க ஒளிக்கதிர் என்னும் வாளை அசைத்து எழும்படி வந்தது முதுவேனில்.

பாரு மண்டமும் படர்கதிர் தெறுதலாற் பரவை
நீரும் வேறொரு நீரினை வேட்டுநின் றேங்கும்
ஊரு லாவுதண் மதியுமோர் மதியைவேட் டுருகும்
காருங் காரினை வேட்டுடல் விளர்க்குமோர் காலம். 5

பொ - ரை : நிலனும் வானும் ஞாயிறு வருத்துதலால், கடல்நீரும் வேறொரு நீரினைப் பருக அவாவும்; பரிவேடத்துள் உலவும் சந்திரனும் வேறொரு தண்நிலாவை அவாவிநிற்கும்; மேகமும் காரினை (கரியநிறத்தினை) அவாவித் தன் மெய் வெளிறு அடையும் அக்காலத்தில்.

வி - கு : ஊர் - பரிவேடம்.

துள்ளு தெண்டிரைப் புலவுநீர் சுலவியு நிலமேல்
வெள்ளி வீழெனக் கார்துளி யாமையால் வெதும்பிக்
கள்ளி பாலறப் பொரிந்தது கரிந்ததா வரையும்
வள்ளி யோர்கொடை மறந்திடிற் கயவரோ வளர்ப்பார். 6

பொ - ரை : அலைகள் வீசும் புலால் மணம் உள்ள கடல் நிலத்தைச் சூழ்ந்திருந்தும், மேகம் வெள்ளிவிழுவது போலத் தண்ணிய துளியைத்தராமையால், கள்ளியும் பால் வற்றிப் பொரிந்தது; பரவும் மூங்கிலும் கரிந்த, வள்ளல்கள் கொடையை மறப்பின் உலோபிகள் எங்ஙனம் பிறரைக்காப்பர்?

வருந்து கானிடை வானிடைச் சுழல்வன பருந்து
பருந்தி னீழலி லொதுங்குவ விரிபணப் பாந்தள்
கரிந்த பாந்தளின் படநிழ லொளிப்பன கருப்பை
பொரிந்த கானெரி தளிரெனப் புகுவன புனமான். 7

பொ - ரை : வருத்தத்தை விளைக்கும் காட்டிடத்தும் வானிடத்தும் பருந்து சுழலும்; அதன் நீழலில் ஒதுங்குவன படம் விரிக்கும் பாம்பு. வாடிய பாம்பின் படநிழலில் ஒளிப்பன கறுத்த எலி. மலைப்புனத்துள்ள மான் பொரிந்து எரிகின்ற காட்டுத்தீயைத் தளிரென எண்ணி ஆங்கு நிழலுக்குச் செல்லும்.

வி - கு : கருப்பை - கார்எலி.

மத்தி யானமொத் திரவினும் வெதுப்பும்வன் கோடை
மத்தி யானபல் லுயிர்களை விடுக்குமோ மதம்பாய்
அத்தி யாயருந் தோலதாய்த் தூங்கலா மசலம்
அத்தி யாயருந் தோலதாய்த் தூங்கலா னதுவே. 8

பொ - ரை : நண்பகலிற் போலவே இரவிலும் வெம்மையைத்தரும் கோடை தன் நடுவே வந்த உயிர்களை விடுமோ? அத்தி எனவும், அரியதோல் எனவும், தூங்கல் எனவும் பெயர் பெறும் மலையாகிய யானை எலும்பாய், அரிய தோலாய், சோம்பல் உடையதாயிற்று.

இன்ன காலையிற் பன்னமு மிரைபெறு திரங்கிப்
பன்ன காதிகள் போற்பவ னசனம் பழகித்
துன்னு நீரென வானலை கானலைத் தொடர்ந்து
தன்ன மாமெனச் சுழன்றதோர் மும்மதச் சயிலம். 9

பொ - ரை: இத்தகைய வேனிற்காலத்தில் ஒருயானை இலையையும் உணவாகப்பெறாது திரிந்து, பாம்பு முதலியவை போலக் காற்றையே உணவாகக் கொள்ளப்பழகி ஆகாயத்தில் அலையும் கானலை நெருங்கிய நீர் எனக்கருதித் தொடர்ந்து அற்ப செந்துவைப்போலச் சுழன்று அலைந்தது.

வி - கு: பன்னம் - இலை, பன்னகம் - பாம்பு, பவனஅசனம் - காற்று உணவு. தன்னம் - அற்ப ஜெந்து.

கடவு திக்கெலாங் கனல்வது புனலெனக் காட்டித்
தொடர்த ரத்தர வகன்றுபோய்த் தொலைதருங் கானல்
வடவ ரைச்சிலை வரதனைப் பொருளென மதியா
துடலும் பொய்யினை மெய்யெனுஞ் சமயமொத் ததுவே. 10

பொ - ரை: கானலானது செல்லும் திசையெலாம் நீர்போற்காணப்பட்டு அழல்வது பின்தொடரத் தொடரச் சேய்மைக்கண் சென்று இல்லையாயிற்று; மேருவை வில்லாகக்கொண்ட சிவபிரானை முதல்வன் என ஆய்ந்துணராது தன்னையே தான்பகைத்து நிற்கும் பொய்யை மெய் எனச் சாதிக்கும் சமயத்தை அக்கானல் ஒப்பாயிற்று.

பருகு நீரின்றி யுணவின்றிக் குஞ்சரம் பசியால்
உருகு தாகத்தா லுலக்குமுன் னூழிநாட் புரந்த
தருமம் போலவந் தடுத்தது சண்பகத் தடங்காக்
கருது மெய்யின்முன் பொய்யென மறைந்தது கானல். 11

பொ - ரை: உணவும் நீரும் கிடைக்காமல் பசியாலும் நீர்வேட்கையாலும் யானை உயிரிழக்குமுன் முன்னைய ஊழியில் சேமித்துவைத்த அறத்தைப்போலச் சண்பகவனம் எதிர்ப்பட அடுத்தது: மெய்யின்முன் பொய் இல்லையாய்க் கழியுமாறுபோலக் கானல் மறைந்தது.

பற்ப வாவியு நதிகளும் வறந்துபா ருலகில்
பற்பல் காவெலா முலர்ந்தகா லமுங்குளிர் பயிராய்க்
கற்ப காடவி நிகர்த்தது செண்பகா டவியே
கற்ப காலமுந் தானழி யாதமை காட்டி. 12

பொ - ரை: தாமரைக்குளங்களும் ஆறுகளும் நீர் வற்றிப் பற்பல சோலைகளும் உலர்ந்துவிட்ட காலத்தும் செண்பகவனம், நீர் அறவு இல்லாத பயிர் போலக் கற்பகவனத்தை ஒத்திருந்தது; தான் கற்பகாலமும் அழியாமையை இது மெய்ப்பித்தது.

கான வாரணம் பேடைசேர் பதுக்கையுங் கமஞ்சூல்
கூன வாரண வாவியுங் குளிர்மரக் காவும்
மோன வாரணங் கார்பயின் முத்தலைப் பொருப்பும்
தான வாரணங் கண்டதோ ரதிசயந் தழைப்ப. 13

பொ - ரை: காட்டுக்கோழி பேடையுடன் சேர்ந்துள்ள சிறுதூறும், நிறைந்த கருவையுடைய வளைந்த சங்குகள் உள்ள தடாகமும், குளிர்நிழல் உள்ள மரச்சோலையும், சத்துவகுணம் உள்ள அரிய தெய்வமகளிர் வந்து தங்கும் திரிகூட மலையும் ஆகியவற்றை மதமுள்ள யானை கண்டதனுல் வியப்புமிக எய்தி.

வி - கு: வாரணம்-கோழி, சங்கு, யானை. தானம் - மதம். மோனம் - சத்துவ குணம். அணங்கார் - தெய்வ மகளிர்.

அடுத்தி டச்சுடுங் கடுவெயிற் கானம்விட் டகன்று
மடுத்த டங்குளிர் செண்பகப் பொதும்பரில் வரலும்
தொடுத்த சூக்கும மெய்துபு தூலமாஞ் சுமையை
விடுத்த வாவிபோ லயர்வுயிர்த் ததுமத வேழம். 14

பொ - ரை: கடுமையான வெயிலின் கொடுமையால் வந்தபோதே சுடும் பாலைவனத்தைக் கடந்து, ஆழ்ந்த தடாகமுள்ள குளிர்ந்த செண்பகச் சோலையை அடுத்ததும் மதயானை அயர்வு நீங்கிற்று; கனவு உறக்க நிலைகளில் தொடர்புள்ள சூக்கும உடலை உயிர் பற்றும்போது நனவு நிலையில் பருவுடம்பால்வந்த சுமையை நீங்கி நிற்றல் போன்றது இது.

முன்னெ லாம்பசிக் குலைந்ததோர் மும்மத வோங்கல்
பன்னெ டுங்கவிப் பாணனர் பாணியைப் பரிவால்
சென்னி வைத்தவர் திருமுகங் கொடுத்தொரு சேரன்
பொன்னின் மாளிகை புகுந்தெனப் பொழில்புகுந் ததுவே. 15

பொ - ரை: பலநீண்ட தேவபாணிகளை யாழிற்பாடிய பாணபத்திரர் கங்கையைச்சடைவைத்த சிவபிரான் கொடுத்தருளிய திருமுகப்பாசுரம்கொண்டு சேரமான் பெருமாள் திருமாளிகையை அடைந்தாற்போல, முன்பசியால் வாடிய யானை செண்பகவனம் வந்தடைந்தது

வாழை யிற்குலை மறுகரித் தலையெனத் திருகிக்
கூழை முக்கிமாங் கனியுண்டு கொழுநிதிக் குவைசேர்
பேழை யைத்திறந் தெனப்பல வினிற்சுளை பிதிர்த்துத்
தாழை முப்புடை நறுங்கனிச் சாறெடுந் தாக்கி. 16

பொ - ரை: வாழைக்குலையைப்பகைக்கும் யானையின் தலையெனத்திருகி, பின் உள்ள கனிகளை உண்டு, மாங்கனியையும் விழுங்கி, பெட்டியைத்திறந்தாற் போலப்பலாப்பழத்தை விரித்துச் சுளைகளை வெளிப்படச்செய்து, முப்பக்கங்களையுடைய தென்னங்காய்களை இளநீரொடும் உண்டு.

வி - கு: முக்கி - உண்டு; கூழை - பிற்பகுதி.

ஆக மான்மத முவட்டுற நுகர்ந்ததா ளசலம்
தாக மானது கொடுபரி தபித்தலுந் தவத்தோர்
போக மேதரும் யோகமே நிகர்த்தது பொருப்பின்
மாக மாநதி வருதல்போல் வரும்வட வருவி. 17

பொ - ரை: தன் உடம்பில் மயக்கந்தரும் மதம்பெருக இங்ஙனம் அனுபவித்த முயற்சியையுடைய யானை நீர்வேட்டுத் துன்புற்றது; அந்நிலைக்கண் மலையில், ஆகாய கங்கைபோல் வரும் வடஅருவி, தவத்தருக்குப் போகத்தைத் தரும் யோகப்பயன் போன்றிருந்தது.

தூபம் போன்முகில் படர்வரைச் சுடர்மணி கொழித்துத்
தீபம் போலொளி ரருவிகாண் டலுந்தழை செவிமாத்
தாபம் போய்த்துயர் தவிர்ந்தது படிந்தமெய்த் தவத்தோர்
பாவம் போய்விடப் பவத்துயர் பறிபடும் படிபோல். 18

பொ - ரை: புகைபோல மேகம் படியும் திரிகூடமலையில் ஒளிவிடும் மணிகளை ஒதுக்கித் தீபம்போல விளங்கும் வடவருவியைக் கண்டவுடன் விரிந்த செவியையுடைய யானை நீர்வேட்கையும் நீங்கித் துன்பத்தின் நீங்கிற்று; வடவருவியில் முழுகினவர் பாவம் நீங்கப் பிறவித்துன்பம் நீங்கும் தன்மைபோன்றது இது.

அப்பெ லாநுக ராவலாற் கரத்துமொண் டருந்தி
வெப்பெ லாமறக் குளித்துமெய்ப் புறமெலாம் வீசி
வைப்பெ லாம்புக வலையமிட் டிறைத்தது மதமா
வொப்பில் கோளரா மதியையுண் டுமிழ்வது கடுப்ப. 19

பொ - ரை: மதயானை தன் தும்பிக்கையால் நிரம்ப அருவிநீரை முகந்து அருந்தி, உடம்பு முழுவதும் குளிரும்படி தண்ணீரை மேலே வீசிக்குளித்து, அங்கிருந்த இடமெலாம் வட்டமாக விழும்படி தண்ணீரை முகந்து உயிர்த்து வெளியே இறைத்தது: தும்பியின் நின்று வெள்ளிய தண்ணீர் வட்டமாக வெளிவந்தது, வலிய இராகுவினின்றும் விடுபடும் நிலவைப்போன்றது.

இருமை நாகமே லிந்திரன் வயிரவா ளெடுப்ப
வொருமை நாகமே யெனப்புனல் படிந்தயர் வுயிர்த்துப்
பருமை நாகநீள் பணைக்கைமே லெடுத்தது படர்கோள்
கருமை நாகமென் றிருமதி யொருமதி கலங்க. 20

பொ - ரை: பெரிய மலையின்மேல் இந்திரன் தன்வைரவேலை வீசிச்சென்றபோது ஒப்பற்ற மைநாகம் என்னும் மலை கடலில் மூழ்கியிருந்தாற்போல, இவ் யானை வடவருவிப் புனலில் மூழ்கி மெய்வருத்தம் நீங்கி - இப்பருத்த யானை - தன் பணைபோன்ற தும்பிக்கையைத் தண்ணீருக்கு மேலே உயிர்த்தியது. அது கோள்களுள் ஒன்ருகிய இராகுபோல் காணப்பட பெரியமதி தன் ஒப்பற்ற அறிவு கலங்கிற்று.

நத்த மோர்மருப் பிருபிறை மும்மத நால்வாய்ச்
சித்த மைந்துடைச் சிந்துர மெடுத்தெடுத் தேந்தி
முத்த வாரிமொண் டெறியுநீர் நிகர்த்ததான் முழங்குஞ்
சத்த மாமுகி லெண்டிசைப் பொழியு நீர்த்தாரை. 21

பொ - ரை : தனது ஆக்கத்தை உணர்ந்த இரு பிறைபோன்ற தந்தங்களையும் தொங்கிய வாயையும் மன உறுதியையும் உடைய யானை முத்துப்போன்ற தெளிந்த நீரைத் தும்பிக்கையால் முகந்து முகந்து பலதிசைகளிலும் வீசிற்று; அஃது இடிமுழக்கத்தையுடைய ஏழு மேகங்களும் எட்டுத்திசைகளிலும் மழை நீரைப் பொழிந்தாற் போலக் காணப்பட்டது.

வி - கு : மைந்து - வலிமை.

கந்த ரத்தெழிற் கறையடிக் கவுண்மதக் கலுழிச்
சிந்து ரப்பெருஞ் சிந்துர மெடுத்தெடுத் தெறியச்
சுந்த ரத்தன துடல்வழிச் சொரியு நீர்த்தாரை
மந்த ரத்தட வரையில்வீ ழருவியை மானும். 22

பொ - ரை : மேகம்போன்ற எழுச்சியினையும், உரல்போன்ற அடியினையும் கன்னங்களினின்று ஒழுகும் மத நீராகிய காட்டாற்றினையும், திலகத்தையும் உடைய பெரிய யானை தன்மீது தண்ணீரை முகந்து முகந்து வீசும் தண்ணீர் தாரையாகத் தன் உடம்பினின்றும் வழிந்தது; அது மந்தரமலையினின்றும் வீழும் அருவியை ஒத்தது.

வி - கு : கந்தரம் - மேகம்; சிந்துரம் - திலகம், யானை; மானும் - ஒக்கும்.

மூரி வாரண முதுபனைக் கரத்துமொண் டெறியும்
வாரி நீர்தொறும் வரையின்மா மணிகிடந் திமைப்ப
நாரி பாகர்மெய் யன்பரா நமிநந்தி யடிகள்
நீரின் மேல்விடு நிரைசுடர் விளக்கினை நிகர்க்கும். 23

பொ - ரை : வலிய யானை தனது பெரிய பனைபோன்ற தும்பிக்கையால் தண்ணீரை மொண்டு எறியும்போது அத்தண்ணீருடன் திரிகூடமலையில் உண்டாகும் மணிகள் ஒளிர்வது சிவபிரானுக்கு அன்பரான நமிநந்தி அடிகள் நீரின் மேல் ஏற்றிய விளக்குகளை ஒத்து வரிசையாக விளங்கின,

வி - கு : மூரி - வலிமை.

தூங்க லாமெனத் துறையில்வீழ் வாரணந் துயர்நீத்
தோங்க லாமென மதர்த்தெழுந் ததுகிழ வுருவாய்த்
தேங்க லாரநீர்த் தடம்படி தில்லைவேட் கோவர்
நீங்க லாதபே ரிளமைபெற் றெழுந்தது நிகர்க்கும். 24

பொ - ரை : மெலிவுள்ளதாக நீர்த்துறையில் வந்து முழுகிய யானை தன் இளைப்புத் தீர்ந்து மலையைப்போலக் கருவத்துடன் எழுந்தது; அது கிழவுருவிற் சென்று திருப்புலீச்சரத்தின் புலிமடுவில் முழுகி இளம்பருவத்தினராய் எழுந்த திருநீலகண்ட நாயனாரை ஒத்தது.

குளிர்த டம்புன லருவிதோய்ந் தகன்றகைக் குன்றம்
அளிய தண்டலை வண்டலைத் துகுத்ததா தாடித்
தளிர்ப ரிந்துபைம் போதுதூஉய்த் தழைபல சிதறி
நளிர்த டஞ்சினைக் கனிகளு நனியுகுத் ததுவே. 25

பொ - ரை : வடவருவியில் முழுகி நீங்கிய யானை குளிர்ச்சியைத்தரும் மலர்ச்சோலையில் வண்டுகளால் உதிர்க்கப்பெறும் மகரந்தப்பொடியில் மீளமுழுகி தளிரைமுறித்து, மலர்களைச் சிதறி, நல்ல கனிகள் பலவற்றை உதிர்த்தது.

துறும்ப லாபல மறிகலா மதகயஞ் சொரிநீர்
நறும்ப லாதிபூத் தளிரெலா நன்னதித் துறைவாய்
உறும்ப லாயிர வண்டகோ டிகளுயிர்க் குயிராய்க்
குறும்ப லாவுறை குழகர்பா னிறைந்தன குழுமி. 26

பொ - ரை : செறிந்த பயனையும் பயனின்மையினையும் ஆய்ந்து அறிய மாட்டாத யானை சொரிந்த நீரும், நல்ல கனி முதலியனவும், பூவும் தளிரும் எல்லாம் சித்திராநதித்துறைக்கண் உள்ள, பல்லுயிர்க்கும் உயிராய் அமைந்துள்ள, குறும்பலா நாதர் பக்கலில் சேர்ந்து நிறைந்தன.

வி - கு : குழகர் - அழகர், இளையர்.

திமில வாரண முமிழுநீர் திண்ணனம் பரனுர்க்
குமிழு நீரதாத் தழையெலா மவன்சிகை யுகுக்கும்
கமழும் பூவதாச் சிதறிடுங் கனியவன் கனிவாய்
அமிழ்த மாகமென் றளித்திடு மவிகள்போன் றனவே. 27

பொ - ரை : முழக்கம் செய்யும் யானை தும்பியினின்றும் உமிழ்ந்தநீர் திண்ணன் காளத்தியப்பர் மேல் உமிழ்ந்த வாய்க்கலசநீராக. தழைகள் எல்லாம் அவன் குடுமியினின்றும் வீழ்த்திய நறுமலர்களாக, சிதறியகனிகள், அவன் வாயால் சிறிது மென்று சுவைபார்த்துத் தெரிந்து வைத்த அவி உணவுகளாகத் திருக்குற்றாலநாதர்க்கு ஆயின.

கருது முற்பவச் சுகிர்தமோ செண்பகா டவிசேர்
தரும மோவட வருவிநீர் படிந்தமெய்த் தவமோ
பருமை வேழமுய்த் தனவெலாம் பழமறைப் பலவின்
அருமை நாயகர்க் கற்புத மாயின வம்மா. 28

பொ - ரை : கருதியுணரப்படும் முன்னை நல்வினைப் பயனோ, செண்பக வனத்தைச் சார்ந்ததனல்வந்த அறப்பயனோ, வட அருவியில் மூழ்கிய மெய்த்தவப் பயனோ, பருத்த யானையால் செலுத்தப்பட்ட அனைத்தும் பழமறை வடிவாகிய பலா மரத்தடியில் வீற்றிருக்கும் இறைவருக்கு உயர்ந்த நற்பொருள்களாகி விட்டன.

வி - கு : சுகிர்தம்-நல்வினை. இங்கு அதன்பயன்:- அறம், தவம் முதலியவை ஆகுபெயர்.

பருகி விட்டெறி புனலபி டேகமாம் பனைக்கை
சருகு திர்த்ததுந் தழையுதிர்த் ததுமருச் சனையாம்
அருகி லுக்ககாய் கனிநிவே தனங்களா மயன்மால்
இருவர் பத்திசெய் யொருவர்தம் பூசையா மிதுவே. 29

பொ - ரை: யானை உண்டுவிட்டு எறிந்த தண்ணீர் இறைவனுக்கு அபிடேக நீராயிற்று; பனைபோன்ற துதிக்கையால் உதிர்த்த தழையும் சருகும் தூவும் மலர்களாயின; பக்கத்தில் விழுந்த காய்கனிகள் நிவேதனப் பொருள்களாயின; யானையின் செயலாகிய இது அயனுமாலும் பத்திசெய்யும் ஏகநாயகருக்குரிய பூசனை ஆகும்.

இருகை மஞ்சன மாகிலு மொருகையா லெடுத்துப்
பருகு தண்புன லாகிலும் பச்சிலை பசும்புற்
சருகை யாகிலு நன்னகர்ப் பரமர்தாள் சாத்தி
ஒருமை யெய்திலார் பேதைமை யாதென வுரைக்கேன். 30

பொ - ரை: இரண்டு கைகளால் எடுக்கப்படும் திருமஞ்சன நீராகிலும், வலக்கையால் எடுத்து உண்ணும் ஆசமன நீராகிலும், பச்சிலை பசும்புல் சருகு என்பவற்றுள் ஒன்றுகிலும் திருக்குற்றுலநாதர் திருவடிக்கண் உய்த்து மன ஒருமையோடு அவரை நினைக்காதவர் அறியாமையை என் என்று கூறுவது !

வேறு

கவளக்கார் மதவேழங் காவினிடை வைகியநாள்
பவளக்கான் முத்தளப்பார் பாண்டிவள நாடனைத்தும்
திவளக்காய் கோடையெலாந் திரிகூடஞ் சேர்ந்தார்க்குத்
துவளக்காய் கொடியவினை தொலைந்ததெனத் தொலைந்ததால். 31

பொ - ரை: திரளாக உணவு உட்கொள்ளும் கரிய மதயானை செண்பக வனத்தில் தங்கிய நாளில் அதன் கொடிய வினை தொலைந்தது; பவளத்தால் செய்த மரக்காலால் முத்தை அளந்து தரும் பாண்டி நாடு முழுவதும் உடல் மெலியும்படி வெயில் காயும்போது திரிகூடம் சேர்ந்தவர்க்கு உடம்பு நடுங்கும்படி வந்து வருத்தும் கொடிய வினைதீர்ந்தமையை ஒக்கும் இது.

அந்நெறிக்கட் சிவபெருமா னருள்போல முகில்சுரந்து
செந்நெறித்தண் டமிழ்நாடு திங்கண்மும்மா ரியும்பொழிந்து
பொன்னுமுத்துந் துறைகொழிப்ப வெங்கும்வளம் பொருந்தியதால்
மெய்ந்நெறித்தந் தாவளமு மேயதுதந் தாவளமே. 32

பொ - ரை: அங்ஙனம் நிகழ்ந்தபோது சிவபெருமான் திருவருள் போலச் சிவநெறி பரப்பும் பாண்டி நாடு முழுவதும் மேகம் வானிற் பரவி மழை சுரந்தது; திங்கள் மும்மழை பொழிந்தது; நீர்த்துறைகள் தோறும் பொன்னையும் முத்தையும் அலைகள் ஒதுக்கும்படி நேர்ந்து ஏனைய வளங்கள் எல்லாம் வந்து கூடின; நல்வழியைச் சார்ந்த யானையும் தன் இருப்பிடம் சென்றது.

வி - கு: தந்தாவளம் - யானை; தன்தாவளம் - தன் இருப்பிடம். தன் என்பது தம் என நின்றது ஒருமை பன்மை மயக்கம்; வேறு முடிபு எனினும் ஒக்கும்; அவன் தம் ஊர்புக்கான் என்பது போல.

திரிகூடப் பெரியபிரான் சிவபணிசெய் மெய்யடியார்
தரிகூடப் பெரும்புவனந் தனில்வாழ்வு தழைத்தோங்கி
அரிகூட வயனறியா வரன்பதமே சேர்வரென
விரிகூட விரித்துரைக்கும் வேதவாக் கியந்தழைப்ப. 33

பொ - ரை: திரிகூட முதல்வனது மங்கலமான பணிசெய்வோர் தங்குதல் உண்டாகப் பெரிய உலகங்களில் வாழ்வு மிகுத்து, அரியோடு அயன் அறியாத மலர்ப்பதம் சேர்வர் என விரிவாக வேதமொழிகள் பகர்கின்றன; அம்மொழிகள் மேலும் வளரும்படி.

நன்புலத்து மதவேழ நனிபோகம் பொசித்தவைமேல்
அன்புலப்பப் பூதலத்தி லநுபவம்விட் டொழிந்தநாள்
தென்புலத்தான் றூதர்வரச் சிவகணத்தா ரெதிரேற்றூர்
புன்புலத்தின் கொலைவிலங்கு புரிதருமம் யாதெனவே. 34

பொ - ரை: நல்ல இடங்களில் அவ்யானை நல்ல நுகர்ச்சிகளைப் பெற்று அவற்றின்மேல் ஆசை தீர்ந்தமையால் நிலவுலகவாழ்வு முடிந்தபோது, எமனது தூதர்வரச் சிவகணத்தாரும் யானையை வரவேற்க வந்தார்கள். இயமன் தூதர் அற்ப அறிவினையுடைய யானைசெய்த அறம் யாது என வினவினர்.

நடுவன்றூ துவர்வினவ நம்பர்கணத் தவர்நோக்கிக்
கடுவன்பா னுவைச்சிவந்த கனியாகத் தனிதாவும்
நெடுவண்சீர்க் குறும்பலவி னேசனைப்பூ சனைபுரிந்து
கொடுவன்பா தகந்தவிர்ந்த குஞ்சரங்கா ணிதுவென்றூர். 35

பொ - ரை: சிவகணநாதர், ஆண் குரங்கு ஞாயிற்றைக் கனி எனக்கருதித் தனியாகத் தாவும் மிகு புகழ் உள்ள குறும்பலாநாதனை வழிபட்டுக் கொடிய வலிய பாவங்களைக் கழுவிக்கொண்ட யானை இது காண்மின் என்றனர்.

அற்பேறும் பூசனைக்கோ விளையாட லருச்சனைக்கோ
நற்பேறு பெறுவதெனு நமன்படர்க்குச் சிவகணத்தார்
கற்பேறுங் கொடிபாகன் கழல்கண்டோ தழைசொரிந்து
முற்பேறு பெற்றுயர்ந்தான் முசுகுந்த னெனமொழிந்தார். 36

பொ - ரை: அன்பு மிகுந்த பூசைக்கா விளையாட்டாக நேரும் பூசைக்கா நல்ல பேறுபெறுவது? என நமன் தூதர் மேலும் வினவ, சிவகணத்தார், முன் திருக்கயிலையில் குரங்காயிருந்து வில்வ இதழ்களை முதல்வன் முடிமேல் விழச் செய்து முசுகுந்தப் பேரரசானவன் கற்புக்கரசியை ஒருபாகம்கொண்ட சிவ பிரான் திருவடியை நினைந்தா தழையைத் தூவினன்? இல்லை அல்லவா என்றனர்.

எங்குளா ரறிந்தறியா தியற்றுகின்ற பூசனைக்கும்
கங்கைவே ணியரருளே கதிகாட்டு மென்பார்முன்
அங்கசா தனமாக வருபாவக் கடல்கடத்தும்
வங்கமாய்த் தோன்றியதால் வானிலொரு புட்பகத்தேர். 37

பொ-ரை: எங்குள்ளாரும் அறிந்தோ அறியாமலோ செய்கின்ற பூசையை ஏற்றுச் சிவபிரான் திருவருளே நற்கதியைக்காட்டும் என்னும் சிவ கணங்களின் முன், உடம்பால் முயன்று ஈட்டிய பாவக்கடலை நீந்துவதற்குக் கிடைத்த தோணிபோல ஒரு புட்பக விமானம் வானில் புலப்பட்டது.

கூற்றினர் விடுத்தகலக் குஞ்சரத்தைப் புட்பகத்தேர்
ஏற்றினு ரேற்றுதலும் வேதிசே ரிரும்பதுபோல்
மாற்றினன் கரியுருவ மாதங்க வுருவானன்
போற்றினன் கயிலையிற்போய் போதநா யகனடிக்கீழ். 38

பொ-ரை: நமன் தூதர் விட்டகன்றார்; யானையை விமானத்தில் ஏற்றினர்; பரிசவேதியைச் சேர்ந்த இரும்புபோல, யானையாய் இருந்தவன் அவ் உருவம் மாற்றிச் செம்பொன் உருவம் எய்தித் திருக்கயிலை சென்று ஞானநாயகன் சேவடிக்கீழ்த் தாழ்ந்து எழுந்து துதித்தான்.

சென்றடியிற் பணிதலுமே திருவருட்கண் பார்த்தருளி
அன்றுநமைத் திரிகூடத் தருச்சனை நீ புரிந்தமையால்
நன்றுகெச கருணனென நந்திகணத் தினுமுயர்ந்து
முன்றிலிடைக் கிங்கரர்க்கு முதல்வனென வாழ்கென்றார். 39

பொ-ரை: சிவபிரான் திருவருள் நோக்கஞ்செய்து, முன் நீ திரிகூடமலையில் நம்மைப்பூசித்தமையின் கஜகர்ணன் எனப் பெயர் பெற்று நந்திகணத்தினும் மேலாகி நமது முற்றத்தில் தூதர்களுக்குத் தலைவன் என வாழ்க என்று அருளினர்.

மைகொடுக்கும் பழவினைபோய் வளர்பூசைப் பலன்கிடைத்துப்
பொய்கொடுக்கும் விலங்குருவம் புத்தேளா யெவ்வுயிர்க்கும்
கைகொடுக்கும் விடையார்க்குக் கைகொடுக்கும் பணிபூண்டான்
மெய்கொடுக்குந் திரிகூட மகிமையார் விளம்புவார். 40

பொ-ரை: கரிய பாவவினை நீங்கிச் சிவபூசைப்பயன் கிடைக்கப்பெற்று யானைஉரு நீத்துத் தேவனாய், எவ்வுயிர்க்கும் உதவும் சிவபிரானுக்கு கைலாகு கொடுக்கும் பணியைப் பெற்றான்; மெய்யாகப் பயன் தரும் திரிகூடப் பெருமையை யாராலும் அளந்து கூறமுடியாது.

சிந்தைசெயா நரிவேடன் சென்றதே வலமாகத்
தந்திசெய்யும் விளையாட்டே தருபூசை முறையானல்
இந்திரனு மேத்தரிய திரிகூடத் தெம்மானைப்
புந்தியுடன் வலம்வருவார் பூசிப்பார் பேறெளிதோ. 41

பொ - ரை: அறிந்து செய்யாத நரியும், வேடனும்செய்த சுற்றே வலமாக முடிந்தது; யானையின் விளையாட்டே சிவபூசை ஆயிற்று; இந்திரனாலும் போற்று தற்கு அரிய திரிகூட முதல்வனை அறிந்து வழிபடுவார் பேற்றினை எளிதாகச் சொல்லக்கூடுமோ?

இன்னகரி செயும்பூசை யியம்புதலு நயந்தேத்திப்
பொன்னகமா மிமயவரைப் போந்தருளெம் பெருமாட்டி
தன்னருமைப் பெருந்தவமுந் திருமணமுஞ் சாற்றுகெனப்
பின்னருமா தவர்வேண்டப் பேசுவா னுயர்சூதன். 42

பொ - ரை: இந்த யானை செய்த வழிபாட்டை விரும்பித் தொழுது, முன் பொன்மயமான இமய மலையிற் சென்ற உமையம்மை அங்குச் செய்த அரிய தவமும் பின் நிகழ்ந்த பார்வதி திருமணமும் விளங்க உரைக்க என முனிவர் வேண்டச் சூதமுனிவர் கூறுவார் ஆயினர்.

*யானைபூசித்த சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — 1057

தானவைபவ காண்டம் முற்றிற்று

---

# சிவரகசிய காண்டம்

## உமை திருவவதாரச் சருக்கம்

---

### காப்பு

பெருமதத்தி ஞெருகரத்து மாருதமெவ் வுயிர்க்குமுயிர்ப் பிறக்கங் காட்ட
இருகரத்தங் குசபாசம் பரமதத்தி னிடைவீழா தெடுப்ப வீரம்
தருகரத்து மருப்புவினைத் துரிசறுப்ப மோதகக்கை சைவத் தெய்வ
ஒருமதத்தின் சுவைநிறைக்கு மும்மதச்செண் பகக்களிற்றை யுளத்துள்
[வைப்பாம்.

பொ - ரை: மிகுந்த மதநீர் ஒழுக்கும் தும்பிக்கையிலிருந்து வரும் காற்று மூச்செறியும் வாயுவின் விளக்கத்தைத் தெரிவிக்க, மேலே எடுத்த இருகரங்களில் ஏந்தியுள்ள அங்குச பாசங்கள் பிறசமயக் குழியில் விழாதபடி அன்பர்களைப் பாது காக்க, வீரத்தைக் குறிக்க ஒடித்த கோடேந்திய கீழேயுள்ள வலக்கை குற்றமுள்ள வினையை நீக்குவதாக அமைய, அதற்கு நேர் ஒத்த மோதகம் ஏந்திய இடத் திருக்கை தெய்வத்தன்மையுள்ள சைவ சமயத்தின் சுவையை நிறைவிப்பதாக அமைய இங்ஙனம் நாற்ரேளும் ஐங்கையும் மும்மதமும் கொண்டுள்ள ஆனைமுகக் கடவுளைத் தியானிப்போமாக.

தேகமார் மன்னுயிர்கள் சுவர்க்காதி போகமுண்டு சேட முண்ணும்
போகபூ மியின்வரம்பு தருமமெனும் பயிர்வளர்க்கும் பொழிற்கோர் வேலி
யோகமா தவர்தவத்தின் விளைவுபனிக் காலயமூ வுலகுக் காணி
மாகமார் கடவுளரும் வரநதியு நல்லறமும் வளரத் தாணி. 1

பொ - ரை: இமயமலையானது உடம்போடு பொருந்திய உயிர்கள் சுவர்க்கம் முதலிய மேல் உலகங்களிற் சென்று இன்பம் நுகர்ந்து எஞ்சியுள்ள நல்வினைப்பயனை அருந்துதற்குரிய போக பூமியின் வரம்பு; அறப்பயிர்வளர்க்கும் சோலைக்கு ஒரு வேலிபோன்றது; தவயோகியர்க்குத் தவத்தை விளக்கும் இடம்; பனிக்கு உறைவிடம்; மூவுலகுக்கும் அச்சாணி; வான் உலகத்தவரும் கங்கை நதியும் சிவபுண்ணியமும் வீற்றிருக்கும் அத்தாணி மண்டபம்.

தாருதிக்கு மணியுதித்தும் பொன்பூத்தும் புவிமடந்தை தரிக்கு மோலி
காருதிக்குந் தொறுமவட்கு வாருதிக்குங் களபமுலை கலையாய்ச் சூழ்ந்த
வாரிதிக்கு நீருதிக்கு நாலுதிக்கும் வரைகடவா மான வேலி
தேருதிக்கு மழற்கதிரைச் சீதமதி யாக்குபனிச் சிகரக் குன்றம். 2

பொ - ரை: தேரின்கண் தோன்றும் வெப்பமுள்ள சூரியனைக் குளிர்ந்த சந்திரனுக்கவல்ல பனிமூடிய சிகரங்களையுடைய இமயத்துக்குன்றுகள் இரத்தினங் களைத் தோற்றுவித்தும் பொன்னைத் தோற்றுவித்தும் நிலமடந்தை முடியிற்

சூடும் மாலையோடுகூடிய கிரீடமாக உள்ளன; மேகம் அக்குன்றுகளிற் படியுந் தோறும் அவை அவளுடைய வாரைக்கடந்து வீங்கும் சந்தனக்கலவை அணிந்த தனங்கள்போல உள்ளன; நிலமகளுக்குக் கலையாகச் சூழ்ந்துள்ள நீர்மிகுந்த கடலுக்கு நாலுதிசையிலும் எல்லையைக் கடவாமல் தடுத்து நிற்கும் சிறந்த வேலி யாகவும் உள்ளன.

பொன்னினு லயன்கமலப் பொகுட்டாகும் பசுந்தழையாற் பொதுளுஞ் சோலை
துன்னிநாற் றிசைநிரம்பி மால்வளர்பச் சால்போலுந் துகினத் தோயம்
மன்னலாற் பரமனுறை வடகயிலை வரைநிகர்க்கும் வடிவு மூன்றும்
உன்னினுற் பனிச்சிமைய வுயர்வரைமுத் தேவியரு முறமு மாதோ. 3

பொ - ரை: பனிமூடிய உயர்ந்த இமயமலை பொன்னுளி உடைத்தாதல் பற்றி, அயன் தங்கும் தாமரையின் பொகுட்டை ஒக்கும்; பசுந்தழை நெருங்கிய மரச்சோலைகளை நாற்றிசைகளிலும் நிரம்பக்கொண்டிருத்தலின், திருமால் கண் உறங்கும் பச்சையான ஆல் இலையை நிகர்க்கும்; பனியாகிய நீர் எப்பொழுதும் பொருந்துதலால் சிவபிரான் உறையும் வடகயிலையினையும் ஒக்கும். சிந்தித்தால், இவ்வடிவு மூன்றும் முறையே கலைமகள், திருமகள், மலைமகள் எனப்படும் முத் தேவியரையும் ஒக்கும்.

வேறு

அறைகு திக்கும்வெள் ளருவியை யானைமத் தகமேன்
மிறைவ ருத்தும்வா ளரியெனக் கரியினம் வெருவும்
பிறைவ ளைப்பெருந் துண்டத்துப் பெரும்புயல் வரையைச்
சிறைவி ரித்தசிம் புள்ளென முழைபுகுஞ் சீயம். 4

பொ - ரை: இமயமலையில், பாறையின் மேல் விழும் வெள்ளருவியை யானையின் தலையின் மேல் குதித்து உலையும்படி வருத்தும் சிங்கம் எனக் கருதி யானைக் கூட்டம் நடுங்கும்; பிறையாகிய வளைந்த பெரிய மூக்கையுடைய, மேகத் தால் மூடுண்ட பக்கமலையைத் தன் சிறகுகளை விரித்து வரும் சிம்புள் என்னும் எண்காற் பறவை என மயங்கிச் சிங்கம் தன்குகையுள் நுழையும்.

யாவ ரம்பையர் கண்ணினர் நண்ணின ரிவரைத்
தேவ ரம்பையர் பணிவது சிறுகுடிச் சிருர்பால்
காவ ரம்பையில் கனியளித் திமையவர் ககனம்
தாவ ரம்பையின் கனிகொளு நனிகொண்மாச் சயிலம். 5

பொ - ரை: எவருடைய அம்பும் மழுங்கக்கூடிய கண்ணினராய் அடைந்த இவர்களைத் தேவ அரம்பை கண்டு பணிவது; சிறுகுடியில் வாழும் குழந்தை களிடத்துக் கற்பகச் சோலையில் வரம்பின்றிக் கனிந்த கனிகளைக் கொடுத்துத் தேவர் வானத்தில் தாவிச்செல்லும் வாழைக்கனிகளைக் கொள்ளும் மிகுந்த சிறப்பையுடைய இமயம்.

வி - கு: யாவர் அம்பு (உம்) அயர் கண்ணினர், காவரம்பு (ஐ) இல் கனி அளித்து, தாவு அரம்பையின் கனி - எனப்பிரித்துக்கொள்க. இவர் - மண்ணக மகளிர்.

சமைய மந்தர மத்திம தாரம்வண் டிசைக்கும்
அமைய மந்தரத் தசுணமா வலமரு மடவிச்
சிமைய மந்தரத் தவருறை குலவரை தெரிப்போர்
இமைய மந்தர மென்னலான் முதல்வரை யிதுவே. 6

பொ - ரை : பொருந்தும்படி மந்தரம், மத்திமம், தாரம் என்னும் சுவரங்களை வண்டுகள் இசைக்கும் சமயத்தில் வானத்தில் அசுணப்பறவை அவற்றைக் கேட்டு அலமரும், சோலை சூழ்ந்த உச்சியில் தேவர்கள் தங்கும் நல்ல மலையைச் சுட்டியுரைப்போர் இமயத்தைச் சார்ந்த மந்தரம் அன்றி இமயம் மந்தரம் எனக் குறித்தலால், இமயமே முற்பட்ட மலை என்பது தெளிவாகும்.

வேறு

மேருவார் மந்தர நிடத வெற்புளார்
பாருளார் திசையுளார் பாத லத்துளார்
சூருளார் கற்பகச் சோலை யார்முதல்
யாருளா ரவர்தவத் தெய்து மால்வரை. 7

பொ - ரை : மேரு, நீண்ட மந்தரம், நிடதம் என்னும் மலைகளில் உள்ளவர், நிலம் எண்திசை பாதலம் என்னும் இடங்களில் உள்ளவர், தெய்வமாய் உள்ளவர், கற்பகச் சோலையில் உள்ளார் ஆகிய யாவரும் தவத்தின் பொருட்டு வரும் பெரிய மலை இமயம்.

கடும்புலி முழையிடைக் கலைகள் காறிமிர்த்
தொடுங்குமே யரிகளுங் கரியு மோருழைப்
படும்பணி மயிற்சிறை யடையும் பானுவும்
நடுங்குறப் பொழிபனிச் சிசிர ஞாட்பினுல். 8

பொ - ரை : சூரியனும் அஞ்சும்படி பொழியும் பின்பனியின் திண்மையினுல் கொடியபுலி வாழும் குகையில் மான்கள் கால் திமிர்த்து ஒடுங்கும்; சிங்கமும் யானையும் ஓரிடத்துக் காணப்படும்; பாம்பு அழகிய மயிலின் பக்கத்தில் செல்லும்.

அகலிடம் விசும்புதொட் டழன்று காய்கதிர்ப்
பகலவன் றேர்ப்பரி பச்சை யாயது
முகநிகர் மதிக்கலை முடங்கு பான்மையும்
சிகரவெம் பனிவரைச் சீதத் தாலன்றே. 9

பொ - ரை : இமயத்தின் விரிந்த இடம் ஆகாயத்தைத் தொடுதலால் அக்குளிர் காரணமாக, கொழுந்துவிட்டுக் காயும் ஞாயிற்றின் தேர்க்குதிரை பச்சைநிறம் உடையதாயிற்று: பெண்களின் முகத்தை ஒத்த சந்திரனில் உள்ள மான் முடங்கிய தன்மையும் இமயத்தின் குளிர் மிகுதியினுல்தான்.

தடவரைத் தென்றிசை சார்ந்த வெய்யவன்
வடபெருந் திசையினும் வருந்திச் செல்வது
குடமுறு பனிவரைக் குளிர்பொ ருதுபோய்
மிடல்வட வனலின்மெய் வெதுப்ப வேகொலாம். 10

பொ - ரை: மேருமலைக்குத் தென்றிசையில் வந்த சூரியன் மீள வடதிசையிலும் வருத்தத்துடன் செல்வது எதனால் எனின், கும்பராசியில் உள்ளபோது இமயத்தினால் ஏற்பட்ட குளிர் பொருது தெற்கே சென்று, வட கடலின்கண் உள்ள வடவாமுக அங்கி தன் உடம்பைக் குளிர்நீக்கி சூடு உண்டாக்கவே மீளவும் வடக்கே செல்கின்ருன்.

கற்பக மிசைப்படர் காம வல்லிகள்
வெற்பக மெறிபனித் திவலை வேய்ந்தன
நற்பகக் கொடிச்சியர் நாணிற் கோத்திடும்
பொற்பக நித்திலக் கோவை போலுமால். 11

பொ - ரை: இமய வெற்பின்கண் வீசும் பனித்திவலையை மேற்கொண்டுள்ள கற்பக மரத்தில் படரும் காமவல்லி என்னும் கொடிகள் நல்ல செல்வத்தை உடைய குறிஞ்சி நிலப்பெண்கள் கயிற்றில் கோக்கும் அழகைத் தன்னிடத்துக் கொண்ட முத்து மாலைகளை ஒக்கும்.

தமையர மடந்தையர் தணப்ப வானவர்
அமையன தோள்பிரிந் தலக்க ணெய்துவார்
சிமையமார் தவத்தினுற் சேர்வ ராதலால்
இமையவர் துதிசெயு மிமய மால்வரை. 12

பொ - ரை: தேவ மகளிர் தம்மை நீங்குதலால் தேவர்கள் அவர்களுடைய மூங்கில் போன்ற தோள்களைக் கூடுதலின்றி வருந்துவாராய் இமயம் சார்வர்; அங்கு உச்சியிலிருந்து செய்யும் தவத்தினுல் மீளவும் அரமகளிரைக் கூடப்பெறுவர். இதனுல், இமயம் தேவர்களால் துதி செய்யப்படும்.

வேறு

அந்தமலைக் கரசானு னுலான சிற்றுதரக்
கந்தமலை மலர்க்குழலாண் மேனைகா வலன்வானோர்
வந்தமலை புரிகோட்டு மைந்நாகன் றனைமகவாய்த்
தந்தமலைத் தனைப்பெறுவா னெடுங்காலந் தவம்புரிந்தான். 13

பொ - ரை: ஆல் இலை போன்ற சிறுத்த வயிறும், கலவைச் சாந்து அணிந்த மலர் சூடிய கூந்தலும் உடைய மேனையின் கணவன், தேவர்கள் வந்து முழக்கம் (அமலை) செய்யும் குவட்டையுடைய மைந்நாகனை மகவாய்ப் பெற்றுப் பின் அமலையாகிய உமையை மகளாகப் பெற நீண்டகாலம் தவம் செய்தான்.

வி - கு: கந்தம் மலை - கலவைச்சாந்து அணிந்த; அமலை - முழக்கம், தூயோளாகிய அம்மை.

அக்கண்ண னொருகண்ணை யடிசாத்த வருள்புரியும்
முக்கண்ணன் முடிசாத்து மறுகண்ணன் முளரியந்தாள்
மெய்க்கண்ணன் புறநோக்கி விரதமுயல் வெற்பனுக்கே
எக்கண்ணு மெய்தாத தவப்பயன்வந் தெய்தியதால். 14

பொ - ரை: மயோன் தன் கண்ணை மலராகத் திருவடியிற் சாத்த அருள் புரிந்த முக்கண்ணன், திருமுடிக்கண் அறுகு அணியும் சிவபிரான் - அப்பிரானுடைய தாமரை போலும் திருவடியில் உண்மையில் அன்பு பொருந்த ஒரு நெறிய மனம் வைத்துத் தவம் புரிந்த இமயவெற்பனுக்கு எவ்விடத்தும் வாராத தவப்பேறு கிடைத்தது.

வேறு

மன்னவன் றவமதோ மண்ணும் வானமும்
முன்னர்செய் சுகிர்தமோ முதுவெற் போர்சுனைப்
பொன்னவாங் கமலமென் பொகுட்டி லீன்றதால்
இன்னபே ருலகெலா மீன்ற செல்வியை 15

பொ - ரை: இமயமன்னவன் தவப்பயனோ? நிலமும் வானமும் முன்பு செய்த நல்வினைப்பயனோ? பழைய அம்மலை, ஒரு சுனையில் உள்ள திருமகள் விரும்பும் அழகிய தாமரைப் பொகுட்டில் உலகம் ஈன்ற அன்னையைக் குழவியாகத் தந்தது.

சேயிழைக் கவுரியைத் தெய்வப் பங்கயக்
கோயிலிற் காட்சிகண் குளிரக் காண்குற
ஆயிர நயனமோ வனந்த நாட்டமோ
மேயின னற்றைநா ளிமைய வேந்தனே. 16

பொ - ரை: தேவியாகிய கௌரியைத் தாமரையாகிய கோயிலிற்காண இமயவெற்பன் பல்லாயிரம் கண்கள் வேண்டும் என்று விரும்பினன்.

வி - கு: மேயினன் - விரும்பினன்.

அடுத்தன னுவாமதி கண்ட வாழிபோல்
எடுத்தனன் பொன்னையீன் றெடுத்த வாரிதி
கடுத்தனன் கயிலையார் வாழ்வைக் கண்ணுறீஇக்
கொடுத்தனன் மேனையாங் கொம்ப னுள்கையில். 17

பொ - ரை: திருக்கயிலையில் பொருந்தும் வாழ்வாகிய அம்மையைக் கண்டு, நிறைமதியைக்காணும் கடல்போல் மனம் உவந்து, திருமகளை ஈன்ற பாற்கடலை ஒத்தவனாய், குழவியை மேனை கையிற் கொடுத்தனன்.

வாங்கினள் செல்வியை வாங்கி வாழ்வுபெற்
றோங்கினள் பால்சுரந் துகள வார்முலை
வீங்கினள் களித்தனண் மேனை வானெலாம்
ஏங்கின குரவைக ளெழுந்த பல்லியம். 18

பொ-ரை: மேனை வாங்கித் தன் இரண்டு தனங்களிலும் பால் சுரக்க மகிழ்ந்து உண்பித்தனள். ஆகாயம் எங்கும் குரவைக்கூத்து ஒலியும் பலவாத்திய ஒலியும் எழுந்தன. உகளம் - இரண்டு.

### வேறு

இச்சை கூர வெடுத்தனண் மார்பணைத்
துச்சி மோப்பப் பசுநரம் போடியே
கச்சை மீறு கனகவள் ளத்தின்பால்
பச்சை வல்லி பவளத்திற் பாய்ந்ததே. 19

பொ - ரை: மேனை விருப்பம் மிகக் குழந்தையை எடுத்து உச்சிமோந்தாள்; அவளுடைய கச்சை மீறி வளரும் பொற்கிண்ணம் போன்ற தனங்களில் பச்சை நரம்பு தோன்றிப் பால்சுரந்தது; அப்பால் மரகதக்கொடிபோன்ற பார்வதியின் பவளக்கிண்ணம்போன்ற திருவாயிற்பாய்ந்தது.

புவன கோடியைப் போக்கு வரவெனும்
கவன வூசலிட் டாட்டுங் கவுரியைப்
பவன வானவர் தச்சன் பணித்ததோர்
சுவன மாமணித் தொட்டிலிட் டாட்டினள். 20

பொ - ரை: அளவற்ற உலகங்களையும் அவற்றில் உள்ள உயிர்களையும் இறப்பு பிறப்பு என்னும் விரைவான ஊசலில் இட்டு ஆட்டும் அம்மையை தேவர் உலகத் தச்சன் அமைத்துத்தந்த பொன்மயமான தொட்டிலில் இட்டுஆட்டினள்.

வி - கு: பவனம் - வானுலகம். சுவனம் - பொன் (சுவர்ணம்).

சிலம்பு தண்டைகள் சில்லரிக் கிண்கிணி
அலம்பு கின்றதை யன்றடி நோமெனக்
கலம்பு லம்புற வோகடுந் தானவர்
தலம்பு லம்புற வோதவழ்ந் தாளரோ. 21

பொ - ரை: சிலம்பு, தண்டை, சிலவாய பருக்கைக் கற்கள் அமைந்த கிண்கிணி என்பவை ஒலிப்பது, அப்பொழுது சிற்றடி நோவும்'என அணிகலமே ஓசைசெய்யவோ, அசுரர் தலம் அழவோ, அம்மை தவழ்ந்து சென்றாள்.

இறைய ளந்த படியிரண் டாற்சகம்
முறைய ளந்து வளர்ப்பவண் முந்துசெய்
அறம்வ ளர்ந்தது போலருண் மாமனப்
பொறைவ ளர்ந்தது போல்வளர்ந் தாளரோ. 22

பொ - ரை: இறைவன் அளந்துகொடுத்த இருநாழி நெல்கொண்டு தான் வளர்த்த அறம் வளர்ந்தது போலவும், அருள்உள்ள சிறந்த உள்ளத்தில் பொறுமை வளர்வது போலவும், அம்மை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துவந்தாள்.

வானநாட் டன்னமு மருள மால்வரைக்
கானமாப் பிடிகளுங் கண்டு நாணுறத்
தானமுந் தருமமுந் தவமுஞ் சைவமும்
ஞானமு நடைபெற நடைகற் றாளரோ. 23

பொ - ரை : தேவர் உலக அன்னமும் மலைக் காட்டில் உள்ள பெண் யானைகளும் நாணும்படி, தானம், தருமம், தவம், சிவநெறி, மெய்யுணர்வு என்பவை உலகத்தில் வழங்க, அம்மை நடை கற்ருள்.

துற்றிய புவனங்க டுதையும் பேரண்டம்
முற்றிலுஞ் சிற்றிலா முறையி லாடுவாள்
எற்றிலு மமைவதோ ரியைபு காட்டவோ
சிற்றிலு மாடினள் சிமைய முன்றில்வாய். 24

பொ - ரை : இமயத்தின் முற்றத்தில் சிற்றில் இழைத்து விளையாடினள் அம்மை; நெருங்கிய புவனங்கள் செறிந்த அண்டங்களெல்லாம் சிற்றிலாக அமைக்கும் அம்மை எத்தன்மையிலும் தனக்கு உள்ள தொடர்பைக் காட்டுவது போல இருந்தது அது.

பாவையுங் கழங்குபொற் பந்துங் கிள்ளையும்
பூவையும் பயிற்றுதல் புந்தி செய்கலாள்
யாவையும் படைத்தளித் தழிக்குஞ் செய்கைதள்
தேவையும் பயிற்றுதல் சிந்தை யுன்னியே. 25

பொ - ரை : படைத்து அளித்து அழிக்கும் செயல்களைத் தன் நாயகனுகிய சிவபிரானுக்கும் பயிற்றும் தன் உயர்வு எண்ணி, மரப்பாவை, கழற்சிக்காய், பந்து, கிளி, நாகணவாய்ப்புள் என்பவற்றிற்கு அவ்வவற்றின் செயல்களைப் பயிற்றுதலைக் கருதவில்லை.

வேறு

பேதையார் பருவந் தன்னிற் பேருல குடையார் கொன்றைக்
கோதையார் சடில ஞானக் கொழுந்தையார் வத்தான் மேவ
மேதையார் விரதம் பூண்டு மேனையார்க் குணர்த்த மேனை
தாதையா ரலங்கன் மோலித் தந்தையார்க் குணர்த்தி னளே. 26

பொ - ரை : ஏழாண்டு என்னும் பேதைப்பருவத்தே கொன்றையை முடிக் கணிந்த ஞானமூர்த்தியைப் பெறும் அன்பால் அறிவுள்ள கோட்பாட்டை மேற்கொண்டு மேனைக்கு உரைப்ப, அவள் மகரந்தம் பொருந்திய மலர்மாலை சூடிய முடியுடைய இமயவெற்பனுக்கு உரைத்தாள்.

அழகின துறையுள் போல்வா யருந்தவங் கூடு மோநின்
மழலையம் பருவத் தென்று வழங்கின னிமவான் முக்கட்
குழகனை நினைவார்க் கென்று நினைத்தவை கூடு மென்ருள்
பழமறைக் கிழவி நோற்பப் பசும்பொனுற் சாலை செய்தான். 27

பொ - ரை : இமவான் அம்மையே, உன்னுடைய இளமைக்குத் தவம் பொருந்துமோ என்ருன்; முக்கட்செல்வரை நினைவார்க்கு எப்பருவத்தும் நினைத்தவை முடிக்கப்பெறும் என்ருள் அம்மை. பழமையான வேதங்களுக்குத் தலைவியாகிய அம்மை தவம்புரிய, பொன்னுல் சாலை அமைக்கப்பட்டது.

திலகமா மலைக்கு வேந்தன் றிருமக ளொருபெண் வாலை
மலர்கொய்யாள் சுனைபந் தாடாள் வல்லியர் குழுவிற் கூடாள்
குலமெலா மிறும்பூ தெய்தக் கொழுந்தவத் தனிமை பூண்டாள்
உலகெலாம் பரவு முக்க ணொருவனைத் தனிமை நீக்க. 28

பொ - ரை: பார்வதி அம்மை இளம்பருவத்தினள் ஆயினும் மற்றைய மகளிர்போல மலர் கொய்தல், சுனைநீர்ஆடல், பந்து ஆடுதல், மகளிர் குழாத்துள் புகல் என்ற இவற்றைச் செய்யாமல், தம் குலத்தவர் பெருமகிழ்ச்சியடையத் தனித்திருந்து தவம்புரிந்தாள்; உலகம் போற்றும் முக்கட் பகவனைத் தனிமை தீர்த்துத் திருமணம் செய்துகொள்ள இங்ஙனம் செய்தாள்.

சங்கநீர் படியுந் தோறுந் தவளமெய் வாணி போல்வாள்
பங்கயா சனத்தின் மேவிற் பதுமையை நிகர்வாள் சூலச்
செங்கையார் தம்மை நீங்காச் சிந்தையாற் கவுரி யாவாள்
மங்கைமெய்த் தவஞ்சேர் சிந்தை வயிரத்தால் வரைப்பெண் ணுவாள். 29

பொ - ரை: வலம்புரிச் சங்கத்தால் எடுத்துத் தரப்பெறும் தண்ணீரில் மூழ்குந்தோறும் உமையம்மை வெண்ணிறம் உள்ள கலைமகள் போல்வாள்; தாமரை இருக்கையில் அமர்ந்து தவம்புரியும் போது இலக்குமிபோல்வாள்; சூலப்படையானைப் பாவிக்குஞ் சிந்தையால் கௌரியே ஆவாள்; மன உறுதியால் மலைப்பெண் ஆவாள்.

அலைபுனற் றடஞ்சேர் ந் தன்ன மாகுவாள் கூல மேவி
மலைமிசைப் பிடியை நேர்வாள் வனத்திடை நிற்குங் காலை
நிலைமலர்க் கொம்பு போல்வா ளிட்டையி லிருந்தா லம்பொன்
சிலையினை நிகர்வா ளன்றிச் சித்திரம் போல்வா ளன்றே. 30

பொ - ரை: அலையைச் செய்யும் நீர்த்தடாகத்தில் உள்ளபோது அன்னம் போல்வாள் அம்மை; அதன் கரையில் நிற்கும்போது மலைமீதுள்ள பெண் யானை போல்வாள்; தண்ணீரில் நின்று தவம்புரியும்போது நிலைத்த மலர்களையுடைய பூங்கொம்பு போல்வாள்; மனம் ஒருங்கி உள்ளபோது சிலையும் ஓவியமும் போல்வாள்.

வி - கு: கூலம் - தடாகக்கரை. வனம் - தண்ணீர்.

வேறு

புலன்க ளைந்தையும் பொருத்திநாற் கரணமேற் புகட்டி
அலங்கு நாற்கர ணங்களை யுள்ளமூ டமைத்துப்
பலன்செய் யுள்ளத்து ஞானமாம் விழியினைப் பதித்தாங்
கிலங்கு சோதியை நோக்கிமேற் கண்முகிழ்த் திருந்தாள். 31

பொ - ரை: ஐம்பொறி வழிச்செல்லும் அறிவை அந்தக் கரணங்கள் மேற் செலுத்தி உள்நோக்கி, அவை நான்கும் சிந்தையேயாகும்படி அமைத்து, பயனைத் தரும் சித்தத்தில் தன் உள் உணர்வைப் பொருத்தி, அவ்வுள்ளத்தில் தன்னல்

தியானிக்கப்பெற்று விளங்கும் பரஞ்சோதியை இடையறவின்றி நோக்கி, கண்களின்மேல் இமைகளை அரைப்பார்வையாக மூடி அசைவற்று இருந்தாள் அம்மை.

வி - கு : உள்ளம் - சித்தம்.

மேனை யாரும்வெற் பரசனும் வியப்பவிண் ணவரோ(டு)
ஏனை யார்தொழ வெம்பிரான் றிருவுள மேற்ப
மோனை யார்வமே கொழுகொம்பா முதுதவப் பயிரை
வானை யோங்குற வளர்த்தனள் பனிமலை வல்லி. 32

பொ - ரை : தாய்தந்தையர்கள் அதிசயிக்க, வானும் நிலனும் தொழ, சிவபிரான் மகிழ்ந்து ஏற்றுக்கொள்ள, எல்லாச் செயல்களுக்கும் முதலாக உள்ள விருப்பமே கொழுகொம்பாக ஊன்றிப் பழைய தவமாகிய பயிரை வானில் உறும் படி வளர்த்தனள் பார்வதி.

வேறு

உண்ணிலா வியபே ரன்பா லுளமெலா நிரம்பி ஞானக்
கண்ணிலா னந்த வெள்ளக் கடல்பரந் திமய மீன்ற
பெண்ணிலா ரமுதார் செய்யும் பெருந்தவப் பெருக்க மேறித்
தெண்ணிலா மதியம் வேய்ந்தார் திருவுள நிறைந்த தன்றே. 33

பொ - ரை : திருவுள்ளம் அன்பால் நிரம்பி, உள் நிறைந்த மெய்யுணர்வு பேரின்ப வெள்ளமாய்ப் பெருக்கெடுத்து விரிய, பெண்களில் ஆரமுதாகிய பார்வதி செய்த தவமிகுதி சிவபிரான் திருவுள்ளத்தில் சென்று நிறைந்தது.

உடையநா யகியார் செய்யு முயர்தவப் பரிவு காண்பான்
சடையினின் மதியஞ் சூடித் தடங்கையின் மழுமா னேந்தும்
விடையினர் கயிலை யாதி வெற்பினர் பொற்பி னுழிப்
படையினர் முதலோர் சூழப் பனிவரைச் சாரல் சார்ந்தார். 34

பொ - ரை : ஆளுடைய நாயகி செய்யும் உயர்ந்த தவமும் அன்பும் கண்டு அருள்புரிதற்பொருட்டுத் திருக்கயிலை முதல்வனுர் மாயோன் முதலியவர்சூழ இமயமலைச் சாரலைச் சார்ந்தார்.

வந்தவா னவரை யெல்லாம் வரைப்புற நிறுவித் தாமோர்
அந்தண முதியோ ராகி யணிந்தமா மதிபோற் கூனும்
சந்தமா நரையுந் தோன் றத் தவப்பொறை சுமந்து மேனிப்
பைந்தளிர் வாட நின்றுள் பணிதவச் சாலை சார்ந்தார். 35

பொ - ரை : உடன் வந்த தேவர்களை வெளியே நிறுத்திவிட்டுத் தாம் தம்முடிக்கு அணிந்த பிறைபோன்ற கூனிய உடலும் நரையும் உடைய அந்தணப் பெரியோராகத் தவவேடம் பூண்டு தவச்சாலைக்குச் சென்றார்.

சென் றபி னெழுந்து தாழ்ந்து சிவமறை யவரைப் போற்றி
அன்றவர்க் கியைவ நல்கி யாசனத் திருத்திக் கீழ்போய்
நின்றன ளிமயப் பாவை நேரிழை வதன நோக்கி
மன்றலங் கோதாய் மேனி வருந்திய தென்னே யென்றார். 36

பொ - ரை: அம்மையும் வந்த மறையவரை உபசாரங்களுடன் வரவேற்று உயர்ந்த இருக்கை அளித்துத் தாம் கீழே நின்றார். வந்தவர் அம்மையின் முகத்தை நோக்கி, மணம் பொருந்திய கூந்தலை உடையாய், உன் உடம்பு வாட்டம் உற்றிருப்பதற்குக் காரணம் என்னை என்றார்.

தோழியர் பரவித் தூய வுணவொடு துயிலு நீக்கி
வாழியங் கயிலை மேய வரதனை மழுவ லானை
ஊழியு முலகு நீத்த வொருவனைக் கருத்தி லுன்னி
ஆழியி னமுத மன்னா ளருந்தவ முயன்றா ளென்றார். 37

பொ - ரை: அம்மையின் தோழியர், வந்தவரை ஏத்தி, அம்மை உணவும் உறக்கமுமின்றித் திருக்கயிலை முதல்வனை நோக்கித் தவம் புரிகின்றார் என்றனர்.

பிடியன நடையும் வாலப் பிறையன நுதலும் வாய்ந்த
கொடியன விடையாய் மேனி குழைந்தபூங் கொம்பு போல்வாய்
வடிவமு மழகுந் தேம்ப வண்ணமும் வருந்த நோற்றல்
கடிஞையு பிலைய மேற்றுக் கடுநுகர்ந் தார்க்கோ வென்றார். 38

பொ - ரை: வேதியர் வினவுகிறார்: பெண் யானை போன்ற நடையும், இளம்பிறை போன்ற நெற்றியும், கொடிபோன்ற சிறுத்த இடையும் உடையவளே, வாடிய பூங்கொம்பு போன்றவளே, நீ இங்ஙனம் உடம்பும் அழகும் நிறமும் வாடும்படி தவம்புரிதல் ஓடே கலனாகப் பிச்சை ஏற்று நஞ்சம் உண்டாரை மணத்தற்பொருட்டோ?

வியன்மறைத் தலைவர் கூற மெல்லியர் மொழித லாற்றார்
சயிலமா னருளான் மற்றோர் தலைமையாம் பாங்கி நோக்கி
அயன்முத லமரர் வீறு லடற்பலி கொண்டா ரண்டர்
உயிர்நிலை நிறுத்த வன்றோ வுண்டனர் விடத்தை யென்றாள். 39

பொ - ரை: சிவபிரான் இங்ஙனம் வினவ அம்மையார் விடைகூற விரும்ப வில்லை; தோழியர்களுக்குள் தலைமையுள்ளாள் ஒருத்தி அயன் முதலியவர் தம் செருக்கு அடங்குவதற்கு ஓடு ஏந்தினர்; தேவர்களுடைய உயிர் நிலைபெறுதற் பொருட்டு நஞ்சை உண்டார்; இவை சிவபிரானுக்கு உயர்வாவதன்றி இழிவா வது எங்ஙனம் என்றாள்.

அலைபொரு தடங்கட் பேதா யருமணம் புரிந்தா லம்பொன்
மிலைதரு நகர்நா டின்றி வெற்பிலோ புகுவா ளென்றார்
கலைதெரி மறைநூல் வல்லீர் கல்வியின் பெருமை யீதோ
மலைமக ளாகத் தோன்றி யிகழ்வதோ மலையை யென்றாள். 40

பொ - ரை : கடல்போன்று அகன்ற கண்ணாய், திருமணம் புரிந்தபின் பொன்னால் அணிசெய்யப்பெறும் நகரமோ நாடோ புகுதல் இன்றி உம் தலைவி மலையிற் புகுவாளோ என்றனர் வேதியர்; கலைகளையும் மறைகளையும் உணர்ந்தீர், மலைக்கு மகளாகத்தோன்றி மலையை இகழ்வாளோ எம்தலைவி? உம் கல்வியின் பெருமை இவ்வளவுதானா என்றாள்.

இப்படி யநேக கால மிமையவர் தவங்கள் செய்தார்
மைப்படி விழியா யீசன் வந்திலன் வருமோ வென்றார்
அப்படி யிரங்கா ரல்ல ரடியவர்க் கெளியார் சித்தம்
ஒப்பிலா தொழிந்தா ரேனு மொழிகல முயிரோ டென்றாள். 41

பொ - ரை : வேதியர்: மைதீட்டிய கண்களையுடையாய், இப்படித் தேவர்கள் பலகாலம் தவஞ்செய்தும் இறைவன் தோன்றிலன்; உங்களுக்கு இறைவன் தோன்றுமோ, என, தோழி இறைவன் அடியார்க்கு எளியன்; ஆதலால், அங்ஙனம் இரங்காதவன் அல்லன். இனி இறைவன் எம் தவத்தை மனம் கொள்ளவில்லை எனினும், உயிர் உள்ளவரை தவத்தை யாம் விடேம் என்றாள்.

மறைவலீர் போந்த வாறு வழங்கி நீர் போமி னென்ன
அறைகலு மமரர் நோக்கி யணங்கியாம் போந்த வாறு
பிறைநுதற் கருங்கட் செவ்வாய்ப் பெய்வளைத் தைய லாளை
நறைமலர் மாலை சூட்டி நன்மணம் புரிதற் கென்றார். 42

பொ - ரை : மறையவரே, நீர்வந்த கருத்தைத் தெரிவித்துச் சென்மின்; வேறு வீண்வார்த்தைகள் வேண்டா என்றாள் தோழி. வேதியர், யாம் இங்கு வந்தது உம் தலைவியை மணமாலை சூட்டி நன் மணம்புரிந்துகொள்ளுதற்கு என்றார்.

கறையணி கண்டத் தண்ணல் கன்னிதன் பொருட்டாற் கொண்ட
மறைவடி வுணராள் சொல்லு மறைமொழி யென்ப தோராள்
இறைமக ளிதய மாழ்கி யிருசெவி புதைத்து வெட்கி
நறைமலர் வதனங் கோட்டி நாணமுற் றகன்று போனாள். 43

பொ - ரை : சிவபிரான் தன் பொருட்டு மறைவடிவுகொண்டு மறைமொழி கூறுகின்றான் என்பதை அம்மை அறியமாட்டாமையின், அவள் தன்மனம் கவன்று, செவிகளைக் கைகளாற் பொத்தி, நாணத்தோடு முகத்தை வளைத்து அவ்விடம் விட்டு நீங்கினள்.

மடவர லகன்ற காலை மற்றுமோர் விளையாட் டாக
விடமணி மிடறுங் கங்கை வேணியுங் கரந்து போந்த
கடவுள்வே தியனார் தாமுங் கரந்தனர் திகைத்தாள் வல்லி
இடம்வலந் தேடிக் காணா ளிறைவனென் றிரங்க லுற்றாள். 44

பொ - ரை : அம்மை அவ்விடம் விட்டு நீங்க, இறைவனும் ஒரு விளையாட்டாக மறைந்தான்; அம்மை திகைத்து வந்தவன் இறைவனே என உணர்ந்து இங்கும் அங்கும் தேடிக் காணமாட்டாது வருந்தித் துதித்தாள்.

வேறு

ஒன்றே பலவே யுலகெலா மோங்குகுணக்
குன்றே கடலே கொழுங்கருணைப் பேராறே
நன்றே யரிதேடு ஞானமலர்த் தாள்சிவப்ப
இன்றே தமியேற் கெழுந்தருள வேண்டிற்றோ. 45

பொ - ரை: ஒன்றாய்ப் பலவாய் உலகெங்கும் நிறைந்த குணக்குன்றே, இன்பக்கடலே, பெருங்கருணைப் பேராறே, திருமால் தேடும் திருவடிகள் சிவப்ப அடியேன் பொருட்டு நடக்க விரும்பியதோ!

பொன்னே மணியே பொருளே பொருண்மறையின்
முன்னே நடுவே முடியா முழுமுதலே
மின்னே யெனத்தோன்றி விண்ணிலே போய்மறைந்தாய்
என்னே தமியே னியற்றும் பிழையேயோ. 46

பொ - ரை: அரிய பொருளே, வேதத்தின் முன்னும் நடுவும் முடிவும் ஆய் ஒளிரும் முழுமுதற் பொருளே மின்னல் போலத் தோன்றி மறைந்தனை; அடியேன் செய்த பிழை உளதோ?

காரா யழகொழுகு கந்தரத்தா யந்தரத்தாய்
ஆரா வமுதேயென் னானந்த மாகடலே
நீராய் வெளியாய் நெடுங்காலாய் வெங்கனலாய்ப்
பாரா யொளியாய்ப் பரந்தாய் பரமேட்டி. 47

பொ - ரை: திருநீலகண்டனே, தனிமையானவனே, இன்புருவச் சுடர் ஒளியே, ஐம்பெரும் பூதமாய்க் கலந்து நிற்போனே, முதன்மையான தொழுதகையோய்! (அருள் புரிக).

என்றாள் புகழ்ந்தா ளிமயவரைப் பூம்பாவை
நின்றா ளயர்ந்தா ணெடுநீல முத்துகுத்தாள்
சென்றாள் பலதிசையும் தேடி யலமருங்கால்
மன்றாடும் பாதர் மழவிடைமேற் றோன்றினார். 48

பொ - ரை: இவ்வாறு துதித்து எங்குந் தேடிக் கண்ணீர் மல்க வருந்தும் போது சிவபிரான் விடைமீது தோன்றிக் காட்சி அளித்தான்.

பனகமணி திருமார்பும் பவளம்போற் படர்சடையும்
தினகரோ தயவடிவுந் திருநுதலின் மேல்விழியும்
அனவரத நடம்புரிவா ரபயவர தமுங்காட்டிக்
கனவரையின் திருமகளார் கண்களிப்ப முன்னின்றார். 49

பொ - ரை: பாம்புகளை அணிந்த திருமார்பும், பவளம் போல் விரிந்த சடையும், ஞாயிற்றின் ஒளியும், நெற்றிக்கண்ணும், எப்போதும் திருநடனம்

புரியும்பெருமான் தன் அபயம் வரதம் குறிக்கும் திருக்கைகளும் தோன்ற பார்வதி அம்மைமுன் விளங்கினன்.

வி - கு: மணித்திருமார்பும் என்பதும் பாடம்.

பூணர் நகிலவரைப் பூம்பாவை நோன்பிருந்து
நாணளு மேனி நலிந்தாண் மெலிவகலச்
சேணர் கயிலைச் செழுந்தேனை மாலயனும்
காணாத தெள்ளமுதைக் கண்ணான் முகந்துண்டாள். 50

பொ - ரை: பொன்னணி பூண்ட தனமாகிய மலையை உடைய அழகிய பாவைபோல்வாள் பன்னாளும் உடல் மெலியத் தவம்புரிந்த தன்மெலிவு நீங்கும்படி உயர்ந்த திருக்கயிலை மலைத்தேனைகவும், அயன் மாலுக்கு அரிய தெளிந்த அமுதாகவும் உள்ள சிவபிரானைக் கண்களால் முகந்து உண்டு மகிழ்ந்தாள்.

தாராற்றுங் கொன்றைச் சடையா யெனையுடையாய்
ஆராற்று வார்நின் னடியா ருனைப்பிரிந்து
காராற்றுங் கண்டா கரையேற்றாய் நின்காதல்
பேராற்றில் வீழ்ந்தேன் பிரிவாற்றேன் யானென்றாள். 51

பொ - ரை: கொன்றைமாலை அணிந்த சடையுடையாய், உன் அடியார் உனைப் பிரிந்து நிற்கல் ஆற்றார் அன்றே! கறைமிடற்றாய், நின் காதலாகிய ஆற்றில் வீழ்ந்தேன்; பிரிவாற்றேன்; என்னைக் கறை ஏற்றுவாயாக என அம்மை வேண்டினள்.

கொந்துதா ரிமயச்செல்வக் கோதையாள் பயந்த கோதாய்
முந்துநீ தவங்கள் செய்த முறையெலா முவந்தோ நின்னை
வந்துநாம் வதுவை செய்வோம் வருந்தலென் றயன்மால் சூழ
விந்துநா தாந்த மானர் வெள்ளியங் கிரியிற் போனர். 52

பொ - ரை: மேனை பயந்த கோதையே, முன் நீ செய்துள்ள தவத்தை மகிழ்ந்தோம்; யாம்வந்து நின்னை முறையாகத் திருமணம் செய்துகொள்வோம்; வருந்தற்க. எனக்கூறி, அயன்மால் முதலோர் சூழ விந்துநாதம் முடிவாக விளங்கும் சிவபிரான் திருக்கயிலை சேர்ந்தார்.

உமை திருவவதாரச் சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1109

---

# திருமணச் சருக்கம்

தனிவரைச் சாபத் தார்சொற் சாபத்தா ரெழுவ ராய
முனிவரை வரித்து நோக்கி முகிழ்முலை யிமய மாதை
நனிவரை வதுவை சூட்ட நயந்தனம் விரைவி னீவிர்
பனிவரை வேந்தன் முன்போய்ப் பகருதிர் வருதி ரென்றார். 1

பொ-ரை: மேருவை வில்லாகக் கொண்ட சிவபிரான், சொல்லால் சபிக்கவல்ல எழுமுனிவரை வருவித்து, யாம் பார்வதியைத் திருமணஞ் செய்து கொள்ள விரும்புகின்றோம்; இதனை இமயமலை அரசனுக்குக் கூறி வருதிர் என உத்தரவிட்டார்.

ஆங்கவ ரிமவான் பக்க லணைதலு மெழுந்து போற்றித்
தேங்கமழ் மலர்க டூவிச் சிறந்தவா சனத்தி ருத்திப்
பாங்கெழு வரையைச் சூழும் பரிதிபோல் வலம்வந் தேத்தி
ஈங்குமெய்த் தவத்தீ ரெய்த வெத்தவம் புரிந்தே னென்றான். 2

பொ-ரை: அம்முனிவர்கள் இமவான் இருப்பிடம் சென்றபோது, அவன் வரவேற்று இருக்கையளித்து மலர் தூவி வழிபட்டு வலம்வந்து அவர்கள் தன்னிடம் வருவதற்கு எத்தவம் தான் புரிந்தது எனக் கூறினன்.

பின்னரு மவரை நோக்கிப் பிரமனே ழுருக்கொண் டன்னீர்
பொன்னகர் கழிப்பி யீண்டுப் போந்தவா றென்னே யென்னக்
கன்னலங் கனியை நின்பாற் கற்பகக் கொழுந்தன் னாளை
நன்னர்பூங் கயிலை யார்க்கு நல்குதி நயப்பா லென்றார். 3

பொ-ரை: பின்னர் வந்த செய்தியைத் தெரிவிக்கும்படி வேண்ட, நின் மகளைச் சிவபிரானுக்கு மணஞ்செய்து தருக என்றனர்.

தந்தையா மிமவா னிற்பத் தனையன்மைந் நாகன் போந்து
முந்தையார் குலமே தென்ன மொழிதலு முனிவர் நோக்கி
எந்தையா ருலக மெல்லா மீன்றுகாத் தழிப்பர் யார்க்கும்
கொந்தையார் கொன்றை வேய்ந்தார் கொடுத்தது குலங்கா ணென்றார். 4

பொ-ரை: இதைக் கேட்டு இமவான் நின்றபோது, அவன் மூத்த மகன் மைந்நாகன், முற்பட்ட சிவபிரானது குலம் யாது என வினவினன்; முனிவர்கள் சிவபிரான் உலகம் முழுவதையும் படைத்தளித்தழிப்பவன் ஆகலின், குலம் என்பது அவன் தன்னாற் படைக்கப் பெற்றோருக்கு கொடுத்தது; அவன் குலத்தைக் கடந்தவன் என்றனர்.

மேனையா ரதனைக் கேளா வியன்மகட் கொடுத்தார் தம்மைத்
தானையா லரிந்து ளார்க்கோ சம்பந்த மெனலு மோனர்
தேனையார் மொழியாய் தத்தந் திகழ்மனைத் தீப மேனும்
மோனையாய் முத்தங் கோடற் கிசையுமே மொழியா யென்றார். 5

பொ-ரை: அந்நிலையில் இமவான் மனைவி மேனை முன் சிவபிரானுக்குத் தக்கன் மகள் கொடுக்க அவனைக் கருவிகொண்டு தலையரிந்தான்; அவனோடு சம்பந்தம் செய்வது எப்படி என்றாள். முனிவர்கள், ஒருவர் தம் வீட்டில் எரியும் விளக்கே எனினும் அதனைத் தொழுது போற்றுதலன்றி முத்தம் கொடுப்பார் உளரேல் அஃது அவர் வாயைச் சுடும் அல்லவா என விடைபகர்ந்தனர்.

தன்பெரு மனைக்குஞ் சேய்க்குந் தகவுரைத் திமய வேந்தன்
என்பெருங் குலத்தில் வந்த வெழின்மலர்க் கொம்ப னாளை
நன்பெருங் கயிலை யாதி நாதனே வேட்ப தானான்
முன்பெருந் தவமே யென்றான் முனிவரர் மகிழ்ந்து நோக்கி. 6

பொ-ரை: இங்ஙனம் குறுக்கிட்ட மகனுக்கும் மேனைக்கும் இமவான் தக்க அமைதிகள் கூறி, என் பெருங்குலத்தில் தோன்றிய பூங்கொம்பு போன்ற பார்வதியைச் சிவபிரானுக்குத் திருமணஞ்செய்து கொடுக்க நேர்வது என் தவப் பயனே ஆகும் என முடிவு கூறினன். முனிவர்கள் மகிழ்ந்தார்கள்.

பூளையார் கரந்தை வேணிப் புனிதர்க்கும் பொருப்ப னீன்ற
வாளைநேர் விழியி னாட்கு மங்கலத் திதிநாள் வாரம்
வேளையே யோரை யாவும் விதிமுறை யுரைத்து மேலோர்
நாளையே முகுர்த்த மென்ன நயந்தனர் நவின்று போனார். 7

பொ-ரை: பூளை ஆத்தி கரந்தை என்பவற்றை முடிக்கு அணியும் சிவபிரானுக்கும் பார்வதிக்கும் திருமணம் நிகழ்த்துதற்கு உரிய திதி, நட்சத்திரம், கிழமை, ஓரை, இலக்கினம் என்பவற்றை எடுத்துக்கூறி மறுநாளே முகூர்த்த நாள் என விரும்பிக் கூறிச் சென்றனர் முனிவர்.

போந்தனர் முனிவர் வெண்பொற் பொருப்புறை செம்பொற் கோயில்
சேர்ந்தனர் நந்தி யுய்ப்பச் சிவபிரான் சன்னி தானம்
சார்ந்தனர் நிகழ்ந்த வாறு சாற்றின ரிமவான் செல்வி
மாந்தளிர்ச் செங்கை பற்றி மணக்குநா ணாளை யென்றார். 8

பொ-ரை: பின்னர் முனிவர்கள் திருக்கயிலையில் சிவபிரான் திருமுன்பு சென்று தாம் அம்மையை மணக்கும் நாள் மறுநாளே என்றனர்.

பண்ணவ ருரைப்ப நாதர் பசுந்துழாய் முகுந்தன் வேதா
விண்ணவர் தலைவன் மேலை யுருத்திரர் முனிவர் சித்தர்
எண்ணரு முலகத் தாரு மேந்திழைக் குழாத்தோ டங்கு
நண்ணுதற் கருள நந்தி நம்பிரான் மனனஞ் செய்தான். 9

பொ - ரை : முனிவர்கள் இங்ஙனம் கூறச் சிவபிரான் திருமால் முதலியோர் தம் மனைவியரோடு திருமணத்திற்கு வரும்படி அழைக்கத் திருநந்தி தேவருக்கு அருள்புரிய, அவர் அவர்கள் எல்லோரும் திருக்கயிலைக்கு வரும்படி நினைத்தார்.

அங்கவ ரிமய மீன்ற வமுதனை யாளை நாளைத்
திங்களங் கண்ணி வேய்ந்த தெய்வங்கண் மனுளர் வேட்கும்
மங்கல மென்று தோன்ற வகைபெறும் புவனந் தோறும்
பொங்கொலி முரச மார்ப்பப் பொருக்கென வெழுந்தார் மன்னே. 10

பொ - ரை : இமவான் மகளைத் தெய்வநாயகன் திருமணம் புரிதற்கு உரிய சுபமுகூர்த்தம் நாளை என வேறு வேறு புவனந்தோறும் முரசு அதிர்ந்து ஒலி பரப்ப, திருமால் முதலியோர் உடனே எழுந்து புறப்படுவார் ஆயினர்.

வேறு

பங்கை யாசனத் திருவுறை மார்பினன் பங்கையா சனச்செல்வன்
அங்கை வாரணத் திந்திரன் பாவக னந்தக னிருதேசன்
பொங்கு வார்கடற் கிறைபவ னுதிபன் பொருவிடை யீசானன்
திங்கண் மாதங்கள் வருடங்கள் வாரங்க டிதிகளுள் கரணங்கள். 11

பொ - ரை : திருமறுமார்பன், பிரமன், கலைமகள், இந்திரன், அங்கி, நமன், நிருதி, வருணன், வாயு, ஈசானன், திங்கள் முதலிய காலக்கூறுகளின் அதி தெய்வங்கள்.

அண்ட மூலகா லாக்கினி யுருத்திரர் பதின்மர்மற் றவர்போல்வார்
கொண்ட பூதநாற் கணத்திர ளாடகர் குறட்படைக் கூர்மாண்டர்
மண்டு நாலெழு கோடியா மிருணிலம் வளர்க்குமட் டகராவார்
கண்ட பாதலம் புரக்குமா மணிமுடிக் கணபணத் துரகேசர். 12

பொ - ரை : அண்டத்தின் அடிக்கண் உள்ள காலாக்கினி உருத்திரர், அவரைச் சூழ்ந்து அவரைப்போன்றுள்ள பதின்மர், நான்கு வாயில்களைக் காக்கும் நால்வகைப் பூதகணம் சூழ உள்ள ஆடகேசர், குறட்பூதங்கள் சூழ உள்ள கூர்மாண்டர், இருபத்தெண்கோடி நரக உலகு காக்கும் புத்தி குணம் எட்டின் தலைவர்கள், பாதலம் காக்கும் நாகர்கள்.

அண்ட கோளகை யுச்சிய ருருத்திர ரைந்துநூற் றுவராவார்
கொண்டல் வண்ணனை விரிஞ்சினைப் பணிகொள்வார் குரகத மாசாத்தர்
சண்ட மால்விடைப் பசுபதி யுருத்திரர் தரிக்குமீ ரைஞ்ஞூறும்
கண்ட பேரனி கத்திர ளுருத்திர கணப்பெரும் படைவீரர். 13

பொ - ரை : வட்டமான அண்டத்தின் உச்சியில் உள்ள ஐந்நூறு உருத்திரர், மாயோனையும் பிரமனையும் பணி கொள்ளவல்ல, குதிரையை ஊரும் மாசாத்தர்கள், விரைந்து செல்லும் விடைஊர்தியை உடைய பசுபதியாகிய சிவபிரானுக்கு உரிய ஐந்நூறு என்னும் பிரிவுள்ள சேனைக்கூட்டங்களுக்குத் தலைவர்களாகிய உருத்திரப் படைவீரர் நூறுகோடியர்.

நூறு கோடியர் பதினொரு கோடியர் நூற்றுவர் நுதற்கண்ணர்
ஆறு கோடியி னிரட்டியர் நடத்துதே ராதவ ரவர்மேலும்
வீறு கோடியி னிரட்டியர் மருத்துவர் வசுக்களாம் விழுச்செல்வர்
கூறு நாலிரு கோடியர் மூன்றரைக் கோடிய பெருந்தீர்த்தம். 14

பொ - ரை : பதினொரு பிரிவினராய பதினொருகோடி உருத்திரர், பத்துத் திசையிலும் உள்ள நூறுகோடி உருத்திரர், பன்னிருகோடி சூரியர், இருகோடி மருத்துவர், எட்டுக்கோடி வசுக்கள், மூன்றரைகோடி புனித தீர்த்தங்கள்.

மூல நான்முக னடங்குற வவன்முரி புருவத்தி னிடைத்தோன்றும்
நீல லோகிதர் முதலினோர் மூவிலை நெடியவேற் கங்காளர்
சூல பாணியர் கேத்திர பாலர்மெய்ச் சுவாவினர் நிருவாணக்
கோல மேயவர் பச்சிளங் கஞ்சுகக் கொற்றவ ரிருநால்வர். 15

பொ - ரை : பழைய பிரமனது செருக்கு அடங்கும்படி அவன் முகத்திற் றோன்றிய நீலலோகிதர் முதலியவர், திரிசூலம் ஏந்திய கங்காளம் பூண்டோர், சூலம் ஏந்தி, நாய்வாகனம் உடையராய் நிருவாணமாயுள்ள திருமாலின் — வாமனரது - தோலை உரித்துச் சட்டையாகப் போர்த்துள்ள எட்டு வைரவர்.

கருது பாற்கட லுண்டுதன் னருட்கடல் கண்ணனுக் கருள்செய்தோன்
அரிய மாமறை வியாதமா முனிசுகன் றதீசியத் திரியென்பான்
பிருகு ரோமசன் கண்ணுவன் பராசரன் பெருந்தவத் துருவாசன்
சரத நாரதன் கபிலன்மா சத்தியன் சதாநந்தன் பரத்வாசன். 16

பொ - ரை : பாற்கடலைக் குழவிப்பருவத்து உண்டு பின் கண்ணனுக்குத் தீக்கை புரிந்த உபமனியு, வியாதன், சுகன், ததீசி, அத்திரி, பிருகு, உரோமசன், கண்ணுவன், பராசரன், துருவாசன், மெய்யை நிலையுறுத்தும் நாரதன், கபிலன், சிறந்த சத்தியன், சதாநந்தன், பாரத்துவாசன் என்னும் முனிவர்கள்.

சித்த மாதவர் தந்திரர் கருடர்கிம் புருடர்கின் னரர்போகர்
வித்தி யாதரர் சாலக டங்கடர் நிசிசரர் வேதாளர்
சித்தர் விண்ணவர் மாகசா ரியர்தயித் தியர்கட வுளர்யோகர்
சத்த நாரிய ரட்டமா சித்திகள் சத்தமா முகில்வேந்தர். 17

பொ - ரை : பழைய பெருந்தவத்தர், தந்திரர்முதலிய தேவ இனத்தவர், சாலகடங்கடராகிய நிசிசரர். பேய்க்கணங்கள், சித்தர் ஆகாயத்தில் உள்ளோரும், அதில் சஞ்சரிப்போரும், அசுரர், தேவர், யோகிகள், ஏழு கன்னியர், எண் பெரும் பேறுகள், ஏழுமேகத்தலைவர்.

அனக நீள்சடை யகத்தியன் புலத்திய னங்கிரா மார்க்கண்டன்
மனநி லைப்பெருங் காசிபன் கவுதமன் வசிட்டனு மெழுவோர்கள்
சனக னேசனற் குமாரனே சனுதரன் சனந்தனென் பவர்நால்வர்
பனக நீண்முடிப் பதஞ்சலி கால்கையிற் கண்பெறு புலிப்பாதன். 18

பொ - ரை : அகத்தியன், புலத்தியன், அங்கிரா, மார்க்கண்டர், காசிபன், கவுதமன், வசிட்டன் என்னும் எழுவர், சனகன் முதல் நால்வர், பதஞ்சலி, வியாக்கிரபாதர்.

ஒருதி னம்பொழு திரண்டுமுக் காலநான் குயர்மறை யைம்பூதம்
இருது வாறுட னெழுபெரு நதிக்குல மெண்கிரி நவகண்டம்
அருமை யெண்டிசை யெழுதடம் புவனமா றங்கமைம் புலனான்கு
கரண முக்குண மிரண்டற மொருபெருங் கதிர்மதி விதிமாதோ. 19

பொ - ரை : தினம், பகலிரவு என்னும் இருபொழுது, இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் முக்காலம், நான்குவேதம், ஐம்பூதம், ஆறு பெரும்பொழுது, ஏழு நதி, எட்டுமலை, ஒன்பது கண்டம், அரிய எட்டுத்திசை, ஏழுபுவனம், ஆறு அங்கம், ஐம்புலன், நான்கு அந்தக்கரணம், முக்குணம், பசு அறம், பதி அறம், சூரியன், சந்திரன், ஊழ்.

சரிதை யாதிய சதுட்டய மந்திரந் தத்துவம் புவனங்கள்
வருண பேதங்கள் கலைகள்வன் பதங்களா மத்துவா வகையாறும்
திரும டந்தைபா ரதிபுலோ மசைமுதற் றெய்வமங் கையர்யாரும்
இரத மூர்திக ளுகைத்தனர் கயிலையி லெய்தினர் விசும்பாறு. 20

பொ - ரை : சரியை முதல் நான்கு, மந்திரம், தத்துவம், புவனம், எழுத்துக்கள், கலைகள் ஐந்து, பதம் எண்பத்தொன்று ஆகிய அத்துவாக்கள் ஆறு, திருமகள், கலைமகள், இந்திராணி முதலிய தெய்வ மங்கையர் என்னும் இவர்கள் அனைவரும்ஆகாயவழியாகத் தத்தம் ஊர்திகளில் வந்து திருக்கயிலையில் கூடினர்.

புவனம் வானமும் புதைபட மீமிசைப் புடைபரந் தாகாய
கவன ரேமுதல் யாவருந் தாழ்ந்தெழீஇக் கயிலைமால் வரைசூழ்ந்தார்
குவலை யந்தொடுத் தண்டகோ ளகையெலாங் கோத்தெழு முகவாரி
சிவபி ரான்பெருந் திருமலை பணிந்துபோய் வலஞ்செயுஞ் செயன்மான. 21

பொ - ரை : ஊழிமுடிவில் நிலவுலகம் முதல் அண்ட முகடுவரை பொங்கி எழும் பெருவெள்ளம் திருக்கயிலையைப் பணிந்து வலம் வருவதுபோல, நிலனும் விசும்பும் மூடும்படி எங்கும் பரவி வந்த ஆகாயவழியினர் முதலிய யாவரும் திருக்கயிலையை இறைஞ்சி எழுந்து அதனை வலம் வந்தனர்.

ஓத்தெ ழும்பதி னான்குபே ருலகமு மொருமுகங் கொடுபோந்தும்
அத்து ணைக்கெலா மவரவர்க் கிடங்கொடுத் தண்ணலார் கயிலாயம்
பத்தி முத்தமிழ்ப் புலவருக் கருள்சங்கப் பலகையொத் ததுமேலும்
தத்தி யண்டமும் பூண்டதோர் பாரிடத் தலைவனைத் ததுமாதோ. 22

பொ - ரை : பதினான்கு உலகத்தினரும் ஒருங்கே வந்தும் அத்துணைப் பேர்களுக்கும் கயிலை அவரவர்க்குத் தக இடம் கொடுத்தது; இறைவன்பால் அன்புள்ள முத்தமிழ்ப் புலவருக்கு விரிந்து இடங்கொடுக்கும் சங்கப்பலகையினை யும் தாவி அண்டமெல்லாம் தன்கண் அடங்க அருள்வெளிப் பரப்பாயுள்ள பூத நாதனாகிய சிவபிரானையும் ஒத்தது.

எயில்சி தைத்தவில் லாதலா லெம்பிரான் றிருக்கடை யினின் மேருச்
சயில நிற்றல்போ னின்றபொற் கோபுரந் தனைத்தொழு தெழுந்தேகிப்
பயின்ம ணப்பெருங் குழுவெலா நிறைதலாற் பரம்பர னுடன்மேவிக்
கயிலை நற்கிரி யுலகெலா மீன்றருள் கவுரியு நிகராமால். 23

பொ - ரை: இறைவன் திரிபுரங்களை அழித்தற்பொருட்டு ஏந்திய வில்லா தல் பற்றி மேரு திருக்கயிலைக் கடையில் நிற்றல்போல் உள்ளது முன்கோபுரம். அதனைப்பணிந்திறைஞ்சித் திருமணத்திற்கு வந்தார் அனைவரும் சூழ்ந்து நிற்கின்றார்கள். இங்ஙனம், இறைவனைத் தன்பாற்கொண்டுள்ள திருக்கயிலை எல்லா உயிர்களும் சூழ இருத்தலின், இறைவனோடு உடனாகி உலகெலாம் படைக்கும் கௌரியையும் ஒத்தது.

உவரி மாலய னுருத்திர கணமுத லுயர்ந்தவர் குழுவெல்லாம்
சிவபி ரான்றிரு வாய்தலின் மொய்த்தனர் தேன்குடத் திரளீப்போல்
அவர்கள் பூதர்பா லவர்கண நாதர்பா லறிவிப்ப வவரேகி
மவுன நந்திபா லுணர்த்தலு மாங்கவன் வள்ளலார்க் கறிவித்தான். 24

பொ - ரை: திருமால் அயன் உருத்திரர் முதலிய அதிகாரம் பெற்றுள்ளோர் அனைவரும் திருவாயிலில் தேன்குடத்தைச் சூழும் ஈத்திரள்போல் சூழ்ந்திருந்தனர். பின், அவர்கள் தம் வருகையைப் பூதர்கட்குத் தெரிவிக்க, அவர்கள் கணநாதருக்குத் தெரிவிக்க, அவர்கள் வாய் பேசாது சிந்தனையிலிருந்த திருநந்தி தேவர்க்குத் தெரிவிக்க, அவர் சிவபிரானுக்குத் தெரிவித்தார்.

தருக வீண்டென வருளலும் வேத்திரத் தனிப்பெரும் படையோச்சி
வருக வென்றவன் மரபினு லுய்த்திட வந்திறைஞ் சலும்வாக்கால்
அருமை நோக்கினு லருட்குறு முறுவலா லவரவர்க் கருள்செய்தான்
ஒருவ னாகிமற் றுலகெலா மாகிநின் றுயிர்க்கெலா முயிராவான். 25

பொ - ரை: சிவபிரான் அவர்களைத் தம் திருமுன்பு கொணர்க என ஆணையிட்டார்; திருநந்திதேவர் பிரம்பால் நெறிப்படுத்தி உள்ளே முறையாக அனுப்பியபோது அவர்கள் அனைவரும் இறைவனைக்கண்டு தொழுதிறைஞ்சினர். முதல்வன் அவரவர்களுக்குத் தக்கபடி மொழியாலும், நோக்காலும், புன்னகையாலும் அருள் புரிந்தான்: முதல்வன் தான் ஒருவனே எல்லாமாகிக் கலந்து நிறைந்து உயிர்க்குயிராய் எப்பொருளையும் செலுத்துவோன் ஆவன்.

எம்பி ரானிடத் திவ்வண நிகழ்தலு மிமயமால் வரைவேந்தன்
கொம்ப னுண்மண வோலையுய்த் தலுங்குல வரைக்கிறை யவர்யாரும்
அம்பு ராசிகட் கதிபர்தங் கணங்களு மருண்முனிக் கணம்யாவும்
பம்ப மால்வரைத் தெய்வதக் குழாங்களும் பரவைபோற் பரந்தன்றே. 26

பொ - ரை: இங்ஙனம் திருக்கயிலையில் நிகழா நிற்ப, இமவான் தன் மகள் திருமண இதழை அனுப்பினமையின், மலைக்கு இறையவர் யாரும், கடலுக்கு உரிய அதிதெய்வங்களும் கணங்களும் திருவருளை நாடும் முனிவர் கணங்களும் நெருங்க, தெய்வக்கூட்டங்கள் கடல்போல பெரிய இமயமலையில் பரவின.

கமலே பூமகள் பாரதி வயிணவி காடுகாள் பிரமாணி
குமரி வீரிமந் தாகினி யோகினி கொற்றவை யயிராணி
அமல மேனகை யுருப்பசி திலோத்தமை யரம்பையர் குழுவெல்லாம்
உமையை வந்தடி தொழுதெழீ இத் திங்கள்சூ ழுடுக்குல மெனச்சூழ்ந்தார். 27

பொ-ரை: திருமகள், நிலமகள், கலைமகள், வைணவி காடுகிழாள், பிராமி, துர்க்கை, காளி, கங்கை, காளியின் ஏவற்பெண்டிராகிய யோகினி, கொற்றவை என்போர், இந்திராணி மேனகை முதலிய அரம்பைமாதர் முதலியவர்கள் உமையம்மையைத் தொழுது, திங்களைச் சூழ்ந்துள்ள விண்மீன்களைப் போலச் சூழ்ந்திருந்தனர்.

நகர மாடங்கள் கூடங்கள் கோயில்கண் ஞாயில்கள் செய்குன் றம்
சிகர கோபுர மாளிகை சூளிகை தெற்றிசித் திரகூடம்
மகர தோரணங் காவணம் பூவண மன்றநா டகசாலை
அகர மாயிர கோடிகள் வகுத்தன னமரர்கம் மியன்போலும். 28

பொ-ரை: தேவதச்சன் இமவான் வரையில் நகரமும், மாடகூடங்களும், கோயில்களும், மதிலுறுப்புக்களும், செய்குன்றுகளும், சிகரத்தோடுகூடிய கோபுரங்களும், மாளிகைகளும், நிலாமுற்றங்களுமும், திண்ணைகளும், ஓவியம் வரைந்த கூடங்களும், மகர தோரணங்களும், பந்தரும், மலர்களால் அலங்கரிக்கப்பட்ட மன்றமும், நாடகசாலைகளும், அந்தணர் இருக்கையும் அளவற்றன இயற்றினன்.

மேடை மேனிலை யுபரிகை வேதிகை விரவுசா ளரங்கோடி
மாடை மாமதி மணியினு லரமிய மலரினன் மணப்பந்தர்
ஆடை நீள்கொடி படங்குசா மரைகுடை யணிகொள்பூ ரணகும்பம்
ஓடை மாகரி யாளிகண் மீளிக ளுருக்கள்பற் பலகோடி. 29

பொ-ரை: மேடைகள், மேலே நிலைத்துள்ள மேல்வீடுகள், திண்ணைகள், சாளரம் என்பன அளவிரந்தன; பொன் சந்திரகாந்தக்கல் என்பவற்றலாகிய நிலாமுற்றம்; மலரினல் அணிசெய்யப்பெற்ற திருமணப்பந்தர்; சேலைகள் நீண்ட கொடிகள், மேற்கட்டிகள், சாமரை, குடை, அழகிய நிறைகுடங்கள், ஓடைகள், சிறந்த யானை, சிங்கம், வீரர்கள் உருவங்கள் பற்பலகோடி.

இரச தத்தபூ கதம்வயி டூரியத் தெழிலரம் பைகணட்டி
மரக தத்தினற் பாசடை காய்க்குலை வகுத்துநற் பசும்பொன்னல்
விரவு மென்பழுக் காய்பழத் தாறுவெண் ணித்தில விரிபாளை
புருட ராகத்தாற் பவளமா மணியினற் பூங்கொத்து மமைவித்தான். 30

பொ-ரை: வெள்ளியால் பாக்குமரங்கள், வைடூரியத்தால் வாழைகள் நாட்டி, பச்சைக்கற்களால் பசிய இலைகளும் காய்க்குலைகளும் செய்து, பொன்னல் பாக்குப் பழங்களும் வாழைப்பழத் தாறுகளும் இயற்றப்பெற்றன. முத்தால் விரிந்த பாளைகளும், புருடராகம் பவளம் மாணிக்கம் என்பவற்றல் பூங்கொத்துக்களும் அமைக்கப்பட்டன.

மண்ட பங்களு மாளிகைப் புறங்களு மாடகூ டமும்வான்மேல்
கொண்ட கோபுர நிரைகளும் வரைகள்போற் குழுமலாற் பனிக்குன்றம்
பண்டை யாதியம் பரனைவேட் டவனுறை பரைதிரு விளையாட்டால்
அண்டம் யாவையு மெடுத்தெடுத் தடுக்கிய சிற்றில்போன் றதுமாதோ. 31

பொ-ரை: மண்டபம், மாளிகை, மாடம், கூடம் என்பவை வான் அளாவும் கோபுரவரிசைகளோடு குன்றுகள்போலச் செறிந்திருந்தன. அதனல், இமயமலை, சிவபிரானைத் திருமணங்கொண்டு ஆண்டுத் தங்கிய பராசத்தி திருவிளையாட்டாக அண்டங்களையே எடுத்தெடுத்து அடுக்கிவைத்த சிற்றில் போலக் காணப்பட்டது.

தெருக்கள் பற்பல வமைத்தன புவனமாத் திரள்வகுத் தனபோலும்
உருக்கள் பற்பல வகுத்தன வுயிரெலா மொருங்குதித் தனமானும்
பொருப்பி லிங்கிவை வகுத்தவான் கம்மியன் பூவின்மே லயன்போன்றான்
அருத்த வீதியி லணியினுக் கணிசெய்வா ரயன்கொடித் திரள்போன்றார். 32

பொ-ரை: பற்பலவாக அமைக்கப்பட்டதெருக்கள் உலகத்திரள்களை அமைத்தாற்போன்றன; ஓவியங்கள் பற்பல அமைத்தவை உயிர்கள் எல்லாம் ஒருங்கே தோற்றுவிக்கப்பட்டதை ஒத்தன; இமயமலையில் இவற்றை இங்ஙனம் அமைத்த தெய்வத்தச்சன் அயனை ஒத்தான்; பொன்மயமான தெருக்களில் அழகுக்கு அழகு செய்வாரைப்போன்று மேலும் ஒப்பனை செய்த மடவார்கள் அயன் கொடியில் உள்ள அன்னப் பறவைகளை ஒத்தனர்.

வல்லி தோரணந் தழைதொடுத் தியற்றுவார் மாத்தழை வனமாக
முல்லை மல்லிகை சண்பக நாற்றுவார் மொய்ம்மலர்ப் பொழிலேய்ப்ப
எல்லை மொய்த்தெழு கொடிபல நிரப்புவா ரெங்கும்வா னதிமானத்
தொல்லை மீனெளிர் தூயவா னகமெனச் சுடர்விளக் கணிசெய்வார். 33

பொ-ரை: மாவிலை முதலியவற்றைத் தொடுத்துத் தோரணம் விரைவில் செய்வார்கள்; சிறந்த தழையையுடைய காடு சார்ந்த உலகம் எனும்படி முல்லை மல்லிகை சண்பகம் என்பவற்றின் மாலைகளைத் தொங்கவிடுவார்கள்; மலர்ப் பொழில்போலத் தோன்றும்படி சூரியனை மறைத்து எழும் கொடிகள் பலவற்றை நிரைசெய்வார்கள்; எங்கும் ஆகாயகங்கையை ஒப்பவும், உடுக்கள் நிறைந்த ஆகாயம் ஒப்பவும் சுடர்ந்து எரியும் விளக்குகளை நிரைசெய்வார்கள்.

அரிய நாண்மலர்த் தேன்களாற் குறிஞ்சிமேற்குறிஞ்ரியா னதுசாந்தால்
மருத மானது முல்லையே நிகர்த்தது மாதர்மெய் விளையாட்டால்
பரவு மாமணித் திரள்களாற் பரல்படு பாலையொத் ததுபன்னீர்
நிரவி வீசலா னீர்வளர் நெய்தலே நிகர்த்தது பனிக்குன்றம். 34

பொ-ரை: அரிய மலர்த்தேன்கள் விரவலின் இமயமலை மேலான குறிஞ்சியாகவே காணப்பட்டது; சாந்து வீசப்பெற்றுச் சேறு ஆயினமையின் மருதமும் போன்றது; பெண்கள் குரவைக் கூத்தாடுதலின் முல்லையும் ஆனது; இரத்தினக்கற்கள் பரல் போன்றமையின் பாலை நிலமாயிற்று; பல நீரும் கலந்து வீசுதலால் நெய்தலும் போன்றது இமயம்.

மலரி னாற்கரும் பாற்சுரும் பான்மட மாதரா னடைக்காவால்
குலவு தென்றலாற் கொடிநிரைத் திருண்டதாற் கோமத னுயிர்மீட்பான்
சிலையு நாணும்வெங் கணைகளும் வேழமுஞ் சேனைதேர் படைவீடும்
உலக நாயகி திருமணச் செவ்விபார்த் தொருங்குநிற் பனமானும். 35

பொ - ரை: இமயத்தில் மலர்களும், கரும்பும், வண்டுகளும், மடப்பத்தை யுடைய மாதர்களும், இலை செறிந்த சோலையும், தென்றலும், கொடிகள் நிரைத்தமையால் இருளும் உளவாயின: இதனால், தம் தலைவனாகிய மன்மதனை உயிர்பெறச் செய்து மீட்டற்பொருட்டு அவன்றன் பாணங்களும், வில்லும், நாணும், சேனைகளும், படைவீடும், தேரும், யானையும் அம்மையின் திருமணம் நிகழும் பக்குவ காலம் பார்த்து ஒன்று சேர்ந்து காத்திருத்தலைக் குறித்தன.

இறைத்த சுண்ணமுஞ் சிதறும்வெண் பொரிகளு மெடுத்தெறி விடுபூவும்
நிறைத்த மாலையி னுகுத்ததண் மலர்களு நிரைத்துவீழ் பூந்தாதும்
நறுக்கி யொப்பிடு சரங்களிற் சிதறிய நவமணி களும்பொன்னும்
குறித்த குப்பையாற் பனிவரை யனந்தமாங் கொடுமுடி யுடைத்தம்மா. 36

பொ - ரை: சிதறிய பொற்சுண்ணமும், வெண்பொரிகளும், விடுபூக்களும் மாலையினின்றும் வீழும் தண்ணிய மலர்களும், வரிசையாக உள்ளபூக்களினின்றும் உதிரும் மகரந்தமும், இணையொக்கும் மாலைகளை நறுக்குதலின் உதிரும் நவமணிகளும், பொன்னும் தனித்தனிக் குப்பையாகக் குவிந்து கிடத்தலின், பனிமலை அளவற்ற கொடுமுடிகளை உடையதாகக் காணப்பட்டது.

இமநெ டுங்கிரி காவல னின்னண மெழில்வரை யணிசெய்யக்
கமழ்ப சுந்துணர்க் கொன்றையந் தொடைபுனை கயிலையம் பெருமானைத்
தமனி யப்பணி கொடுமணா வணிசெயச் சதுமுக னெதிர்வேண்ட
அமரர் தம்பிரா னணிந்தமை காண்கென முறுவல்பூத் தருள்செய்தான். 37

பொ - ரை: இமவான் இங்ஙனம் தன்மலையை அழகு செய்யா நிற்ப திருக்கயிலையில் நான்முகன் சிவபிரானை திருமணமாகலின் பொன்னாலாகிய அணிகள் பூண்டு அலங்கரித்துக்கொள்க என வேண்டியபோது, யாம் அங்ஙனம் செய்து கொள்வதைக் காண்க எனப் புன்முறுவல் செய்தான் முதல்வன்.

புலவு நாறுகோட் டாம்பல்வெம் புலிதரு போர்வையு முட்சாத்தும்
கலிகொள் பாரெலா மொருபணத் தேந்திய கணபணா டவிக் கச்சும்
ஒலிய லாகிமே லொளிறுபீ தாம்பர வுத்தரி கமுமாகி
வலிய காஞ்சனப் பட்டிகை யாகவு மலிந்துதோன் றியவன்றே. 38

பொ - ரை: யானைத்தோலும் புலித்தோலும் உட்சாத்தப்பெற்ற நாகக் கச்சும் முறையே நல்ல உடையும், பொன்னாடையாகிய உத்தரீயமும், பொன்னாற் செய்த கச்சாகவும் சிறந்து விளங்கின.

காதிற் குண்டல மார்பணி சரப்பணி கண்டிகை திருத்தோளின்
மோது பொன்வளை கங்கணம் பவித்திர மோதிரங் கணையாழி
போதிற் பொங்கிய வாசிகை கரோடிகை புனைதிரு வரைநாண்கள்
பாத நூபுரப் பொற்பணி யாயின பணாமுடிப் பணியெல்லாம். 39

பொ - ரை : படத்தையுடைய பாம்புகளெல்லாம், காதில் மகரகுண்டலம், மார்பில் அசையும் பொற்சரங்கள், கண்டிகை, தோள்வளை, காப்பு, பவுத்திரம், மோதிரம், கணையாழி, பூமாலை, சிரமாலை, அரைஞாண், சிலம்பு முதலிய அணிக ளாயின.

தூம ருப்பொடு மீனலோ சனம்புடை தொடுத்தவெண் டலைமாலை
காமர் பொன்னணி சன்னவீ ரம்பல காசணிப் பணியாக
மீம யானத்து வெண்டிரு நீறுவெண் கருப்புர நறுஞ் சாந்தா
ஆமை யோடுபொற் பதக்கமா வென்பெலா மாரமா யினமாதோ. 40

பொ - ரை : பன்றிக்கோடும், மீன்கண்ணும், வெண்டலைமாலையும் பொன் ஆபரணமாக, தோள்வளையாக, மணிமாலைகளாக ஆயின. மேலான சுடலைப் பொடி கருப்புரச் சாந்தாயிற்று; ஆமை ஓடு மார்பிற் பதக்கம் ஆயிற்று; எலும் பெல்லாம் முத்தாரம் ஆயின.

கண்ணின் மேற்றிகழ் கண்ணொளிர் தருங்குறி கவினுதற் குறியாக
வண்ணன் மேற்குழை மகரகுண் டலத்தொடு மணிவளைத் திருத்தோடும்
விண்ணின் மேற்பொலி கதிரென நிலவென விளங்குபே ரொளிவீச
வண்ண மாமணித் திருமுடி யானது வளர்சடை முடியம்மா. 41

பொ - ரை : நெற்றிக்கண் நுதலிற்றீட்டிய திலகம் ஆயிற்று; மகரகுண் டலமும் சங்கக்குழையும் திருத்தோடும் ஞாயிறும் நிலவும் போலவொளிவீசின; சடை முடி மணிக்கிரீடம் ஆயிற்று.

வேறு

மணிப்பணி யங்கதப் புயமும் வாய்ந்தபொன்
அணிப்பணி யகலமு மகலங் காண்குறத்
தணிப்பணி தகைமையாற் சலித்திட் டான்சகம்
பணிப்பணி யகிலமும் பார்த்த பார்வையான். 42

பொ - ரை : தலையில் மணியையுடைய பாம்பாகிய தோள்வளை சூழ்ந்த புயமும், அழகிய பணிகள் பூண்ட மார்பும் முற்றும் நோக்குதற்குத் தன் கண்கள் தணிப்பு உடையவாதலின், உலகத்தைப் பண்ணிப் பண்ணிப் பார்த்த நோக்கு உடைய நான்முகன் சலிப்பு அடைந்தான்.

பூதநா யகன்முடி தொடுத்துப் பூணெலாம்
வேதநான் முகன்விழி குளிர்ப்பக் கண்ணுறீஇப்
பாதமேற் பணிந்தெழீஇப் பண்டு தானுந்தன்
தாதையும் பெறவொணுத் தவம்பெற் றேகினன். 43

பொ - ரை : தோன்றியுள்ள பொருள்களுக்கெல்லாம் தலைவனாகிய சிவபிரானது முடி முதலாக உள்ள அணிகளையெல்லாம் நான்முகன் தன் கண் குளிரக்கண்டு சிவபிரான் திருவடிகளில் வீழ்ந்து இறைஞ்சி, முன்தானும் தன் தந்தையாகிய மாயோனும் பெறக்கூடாததாக இருந்த தவப்பயன் பெற்று அப்பாற் சென்றான்.

வேறு

கொம்ப னாள்பெரு மண நிறை வேறவா னிமையவர் குறைதீர
எம்பி ரானெழுந் தருளுக தருணமென் றிமயவெற் பிறையேகித்
தம்பி ரான்றனக் குணர்த்தலுங் கயிலையஞ் சயிலநின் றடலேற்று
நம்பி ரான்புறத் திவர்ந்தன னுயர்கண நாதர்போற் றியநாதர். 44

பொ - ரை: அம்மையின் திருமணம் நிறைவேறவும், தேவர்கள் குறை தீரவும் எம்பிரானே எழுந்தருள வேண்டும்; இது தக்க நேரம்; என இமவான் வந்து விண்ணப்பித்துக்கொள்ள, உயர் கணத்தலைவர்கள் போற்றும் முதல்வன் திருக்கயிலை மலையைவிட்டு இடபதேவர் மீது இவர்ந்தான்.

நீல லோகித ராடக ரட்டகர் நிமலர்நூற் றுவரண்ட
மேலை யுச்சிய ரண்டமூ லத்துறை விமலருத் திரர்யாரும்
மாலும் வேதனுஞ் சயசய சயவென வரதனைப் புடைசூழ்ந்தார்
கோல மேருமால் வரையினைச் சூழ்தரு குலவரைத் திரண்மான. 45

பொ - ரை: நீலலோகிதர், ஆடகேசர், அட்டகர், சதருத்திரர், அண்டத்தின் உச்சியிலும் அடியிலும் உள்ள தூயோராகிய உருத்திரர்கள், திருமால் பிரமன் என்போர் வெல்க. வெல்க எனக்கூறி வரங்கள் தரும் முதல்வனைச் சூழ்ந்தனர், மேருவைச் சூழ்ந்துள்ள எட்டுக்குல மலைகளைப் போல.

பிந்து பல்கண நாதரும் பூதரும் பெருந்திரைக் கடலேய்ப்ப
ஐந்து பல்வகை வாத்திய முழக்கொலி யந்தர வெளிபோர்ப்ப
இந்து வைத்தவர் திருமணப் பெருங்குழா மெண்டிசைக் கடங்காதே
தந்த மைத்தெளிந் தவர்பிரா னருளெனச் சகமெலாங் கடந்தேக. 46

பொ - ரை: பின்வரும் பலகணத்தலைவர்களும் பூதங்களும் பேரலைகளையுடைய கடல்போற் செல்ல, தோல், துளை, நரம்பு, கஞ்சம், மிடறு என்னும் ஐவகைக் கருவிகளால் எழுப்பும் இன்னோசைகள் வான்வெளியை நிரப்ப,முடியில் நிலாவை வைத்தவர் திருமணம் காண எழுந்த பெருந்திரள் எட்டுத்திசையினும் அடங்காது மேற்செல்லுதலின், தம்மியல்பை உணர்ந்தவர் பெறும் திருவருள் என்ன உலகத்தைக் கடந்து சென்றார்கள்.

மோத கம்பணைக் கோடுபா சாங்குசந் தரித்துமூ டிகமேறித்
தாதை தன்மணத் தங்குர மெனமுனர்த் தந்திமா முகனேக
வேத பாரகர் வாழ்த்தொலி முழங்கிட விஞ்சையர் புகழ்பாடக்
கீத கின்னரர் தும்புரு நாரதர் கிளரிசை யமுதூற்ற. 47

பொ - ரை: ஆனைமுகக்கடவுள் மோதகம், தன் கொம்பு, தோட்டி, பாசம் என்பவற்றைக் கைகளில் தாங்கிப் பெருச்சாளியின் மீது ஏறி, தன் தந்தையார் திருமணக் குழுவில், முளைப்பாலிகை போல முன் சென்றார்; வேதங்களைக் கரை கண்டவர்கள் வாழ்த்தினர்; கலைவல்லோர் இசைவல்லோர் தும்புரு நாரதர் என்போர் உள்ளத்தைக் கிளரச்செய்யும் இன்னிசை எழுப்பிச் சென்றனர்.

இந்தி ரன்குடை நிழற்றிடப் பாவக னெடுத்திட நறுந்தூபம்
அந்த கன்படை தாங்கவீ சானன்வந் தடைப்பைகைக் கொளவூதை
முந்து மாலவட் டங்கொடு சுழற்றமுந் நீர்க்கிறை துளிதூவச்
சிந்து பல்கொடைத் திரவிய மெடுத்தெடுத் தேந்திட வளகேசன். 48

பொ-ரை: இந்திரன் குடையை ஏந்தினுன்; அங்கியங்கடவுள் நறும்புகை எடுத்தான்; யமன் படை ஏந்தி முன் சென்ருன்; ஈசானன் அடைப்பை ஏந்தினுன்; வாயுதேவன் ஆலவட்டம் சுழற்றினுன்; வருணன் சிறுதுளிகளைத் தூவி மண் துகள் எழாமை செய்தான்; அளகைக்கு இறைவனுகிய குபேரன் கொடைப் பொருள்களை எடுத்தெடுத்து ஏந்தி நின்ருன்.

நிருதி பாதுகை சுமப்பமா நாகங்க ணிரைமணி விளக்கேந்தப்
பரிதி சோமர்தீ வர்த்திகை பிடித்திடப் படிவர்பல் லாண்டோதச்
சுருதி யாயிர நாமமேத் தெடுப்பவான் சுரர்கள்பூ மழைதூவ
இருது நாள்களுங் கோள்களு நிமித்தமு மேவிய பணிகேட்ப. 49

பொ-ரை: நிருதி பாதுகையை ஏந்தி வந்தான்; மாநாகங்கள் மணி விளக்கு ஏந்திச்சென்றன; சூரிய சந்திரர் தீவர்த்தி ஏந்தினர்; முனிவர்கள் பல்லாண்டு ஓதினர்; வேதங்கள் இறைவனுடைய ஆயிரம் பெயர்களைப் படித்தன; வானவர் பூமழை பொழிந்தார்; இருது நாள் கோள் என்பனவும், நிமித்தத் தெய்வமும் இறைவன் விரும்பிய பணி கேட்டுச் செய்தன.

பனிவ ரைக்கிரி பொழிதல்போ லிமசலம் பண்ணவர் புடைதூற்றக்
கனிமொ ழித்திர ளரம்பையர் தமனியக் கவரிகா லசைத்தேக
இனிய மாலய னிருபுடை காப்பமற் றிமையவர் புறங்காப்பப்
புனித நந்திதன் கணத்தொடும் வேத்திரப் படையொடு முன்போத. 50

பொ-ரை: இமயமலை பனி சொரிவதுபோல முனிவர்கள் குளிர்நீரைப் பக்கங்களில் தூவிச் சென்றனர்; அரம்பையர் பொற்கவரிக் காம்பு அசைத்துப் பக்கத்திற்சென்றனர்; மாலும் அயனும் இருபக்கங்களில் பாதுகாவலாகச் சென்றனர்; ஏனைத் தேவர்கள் பின்புறம் காத்துவந்தனர்; தூய திருநந்திதேவர் பிரம்பு ஏந்தித் தம் கணங்களோடு முன் சென்றனர்.

அருமை நாயகன் வருகின்ரு னடிமுடி யரியய னறியாத
பெருமை நாயகன் வருகின்ரு னுலகெலாம் பெற்றருள் பெருமாட்டி
திரும ணஞ்செய வருகின்ரு னுதல்விழித் தெய்வங்கண் மணவாளன்
வருகின் ருன்வள நிறைவொடு குறைவிலா வாழ்வினுன் வருகின்ருன். 51

பொ-ரை: திருச்சின்னங்கள் அருந்தலைவன் வருகின்ருன்; திருமால் அயனுல் அடிமுடி காணப்படாத முதல்வன் வருகின்ருன்; உலகம் ஈன்ற அன்னையைத் திருமணங்கொள்ள வருகின்ருன்; நெற்றிக் கண்ணையுடைய தெய்வநாயகன் வருகின்ருன்; நிறைவளனும் குறைவிலா வாழ்வும் அருள்வோன் வருகின்ருன் எனப் பணிமாறின.

அமரர் நாயகன் வருகின்ற ஞலமுண் டமரர்தே வியர்க்கெல்லாம்
தமது மங்கலந் தத்தமக் கருளிய தனிமுதல் வருகின்றன்
நிமல நிட்களா நிராமயன் வருகின்ற னினைப்பவர் மலமாயைத்
திமிர பாற்கரன் வருகின்ற னெனப்பல சின்னங்கள் பணிமாற. 52

பொ - ரை : தெய்வ நாயகன் வருகின்றன்; ஆலம் உண்டு அமரரைக் காத்த கருணையாளன் வருகின்றன்; தூய, உருவமும் பிணியும் இல்லவன் வருகின்றன்; நினைப்பவர் மலமாயை இருள்கடியும் ஒளியுடையோன் வருகின்றன்; எனவும் அவை பணிமாறின.

புடவி சூழ்தரு பெருந்திரைக் கடலெலாம் புறக்கட லொடுந்தாவிப்
படரு காந்தநாள் வெள்ளியங் கிரியின்மேற் பானுவா யிரகோடி [ளத்
சுடர்த ழைத்திடத் தோன்றிய தெனமணத் தொகுதியாம் பெருவெள்
திடைதி ளைத்துமால் விடையின்மே லெம்பிரா னெழுந்தரு ளியவேலே. 53

பொ - ரை : நிலத்தைச் சூழும் எழுகடலும் பெரும் புறக்கடலுடன் கலந்து எழுந்து உலகை மூடிவரும் உகமுடிவில் திருக்கயிலையில் ஆயிரகோடி ஞாயிறு தோன்றினற்போல, திருமணக் குழாத்தின் நடுவில் மால்விடையின்மேல் சிவபிரான் எழுந்தருளினன். அப்போது,

வடபெ ருங்கிரிக் காவலன் மந்தர மன்னவன் வடவிந்தத்
தடவ ரைக்கிறை கந்தமா தனத்திறை சக்கரக் கிரிவேந்தன்
நிடத வெற்பின னேமகூ டத்திரை நீலவெற் பினஞதி
அடல்வ ரைக்குல வேந்தரு மெழுகடற் கரசரும் புடைசூழ. 54

பொ - ரை : மேருமலைத் தலைவன் எண்குலகிரித் தலைவர்கள் முதலியவர்களும் கடல்களுக்கு இறைவரும் பக்கத்திற் சூழ்ந்துவர.

அம்ம லைச்சிலை வளைத்தவர் புயமலை யதிசயந் தனைக்காண்பான்
எம்ம லைக்குலங் களுமெதிர் போந்தென விமயமா மலைவேந்தன்
மைம்ம லைப்புர வலரொடு மருகனுக் கெதிர்கொடு மலர்தூவிச்
செம்ம லைப்பணிந் தினியன மொழிந்துதன் செழுமலைப் பதிசேர்ந்தான். 55

பொ - ரை : மேருவை வளைத்த புயமாகிய மலைகளைக் காண எம்மலைகளும் வந்தாற்போல, இமயமலை அரசன், மலையரசர்களோடு மருகராகிய சிவபிரானை எதிர்கொண்டு மலர்தூவி வழிபட்டு இன்மொழிகள் கூறித் தன் மலைப்பகுதிக்கு அழைத்துச் சென்றன்.

ஈசர் நற்றிரு மருமக ஞகவந் தெய்துறத் தவஞ்செய்தான்
பாச னத்தொடு மெதிர்பணிந் தேகலும் படர்விடைக் கொடியாட
நாச மில்லவ ரிமவரை வீதிவாய் நகர்வலஞ் செய்ப்போந்தார்
வாச நற்பதி ஞல்வகைப் புவனமுந் தமைவலஞ் செயமாதோ. 56

பொ - ரை : ஈசனே மருகஞக வரும்படி தவம் புரிந்த இமவான் தன் சுற்றத்தாரோடு எதிர் வணங்கி முன்செல்ல, விடைக்கொடி அசையும்படி,

அழிவற்ற முதல்வன் இமயமலை வீதிகளின்வழி நகர்வலம் செய்யப்புகுந்தார்; வசித்தற்கு இடமாகிய பதினன்கு புவனங்களும் அவரை வலமாகச் சூழ்ந்தன.

## கண்ட மகளிர் இயல்பு

வேறு

பண்க ளித்த பனிமொழிச் செய்யவாய்
வண்கி ளிக்குலம் போல்பவர் வள்ளலார்
விண்க ளிக்கு மிடற்றெதிர் நோக்கினர்
கண்க ளித்தனர் கார்கண்ட தோகைபோல். 57

பொ - ரை: பண்ணமைந்த இன்மொழிகளையுடைய, கிளி போல்வாராகிய மாதர்கள், தேவர்களுக்கு மகிழ்ச்சி ஊட்டும் பரமசிவனது திருநீலகண்டத்தைக் கண்டு, மேகத்தைக் கண்ட மயில்போலக் கண் குளிர்ந்தார்கள்.

கார்த்த பூங்குழல் கட்டழ குக்கெலாம்
ஏர்த்த பேரெழி லாள ரிவரென்பார்
தீர்த்தன் மேனியுஞ் சேயிழை மேனியும்
பார்த்த கண்கள் பறிப்பரி தாமென்பார். 58

பொ - ரை: கருங்கூந்தலையுடைய பார்வதியின் கட்டழகுக்கு முழுவதும் எழுச்சியுள்ள பேரழகினர் இவரே என்றனர்; புனிதன் திருமேனியினையும் சேயிழையாள் திருமேனியினையும் ஒருமுறை பார்த்தகண்களை மீட்டுக்கொள்ளுதல் அரிது என்றனர்.

அண்டர் நாத ரழகினுக் கோர்குறை
கண்ட மீது கறுப்புள தாலென்பார்
வண்டு வார்குழன் மாதெழில் பார்க்கினும்
உண்டு சிற்றிடை யாற்குறை யொன்றென்பார். 59

பொ - ரை: சிலர் தேவ தேவனுக்கும் ஒரு குறை உளது; அது கழுத்தில் உள்ள கறுப்பே என்பர்; வேறு சிலர் அம்மைக்கு இடை சிறுத்துள்ளமை ஒரு குறை என்பர்.

மண்ணின் மேற்புனன் மேல்வன்னி மாருதம்
விண்ணின் மேலடங் காவுரு மேவினர்
பெண்ணின் மேலவள் பேரெழில் காணவோ
கண்ணின் மேலொரு கண்படைத் தாரென்பார். 60

பொ - ரை: ஐம்பூதங்களினும் அடங்காத அறிவுருவாகிய சிவபிரான் இருகண்களின் மேலும் ஒருகண் உடையராதல் பெண்களுட்சிறந்த உமையம்மையின் பேரழகைக் காணுதற்காகவோ என்பர்.

சங்கு சோர்வதுந் தாழ்குழல் சோர்வதும்
தொங்கன் மேகலை சோர்வது நோக்கலார்
அங்க ணனெழி லாரா வமுதினை
நுங்கு வாரென நோக்குவர் நோக்கினல். 61

பொ - ரை: சிலமகளிர் சிவபிரான் திருமேனி அழகைக் கண்களால் பருகுவார் போல நோக்கி நிற்பர்; அவர்தம் சங்குவளை கழல்வதையும், கூந்தல் அவிழ்வதையும், இடுப்பில் உள்ள மேகலை கழல்வதையும் உணரமாட்டார் ஆயினர்.

காய்த ரும்பிறை மாமுடி காட்டியே
மோய்த ரும்பெரு மோகத்தை நல்கினர்
சாய்த ருந்தொடி கொண்டனர் தக்கவோ
வாய்தி றந்தொரு வார்த்தைசொல் லாரென்பார். 62

பொ - ரை: சுடும்பிறையை முடிக்கண்காட்டி நம் நிறையைக் கெடுக்கும் மோகத்தைக்கொடுக்கும் இறைவன் நம் கைகளினின்று கழலும் தொடிகளைக் கொண்டனர்; வாய் திறந்து ஒரு சொல்லும் அருளார்: இது தக்கதோ என்பர் சிலர்.

வி - கு: மோய்தரல் - கெடுதல்.

சுழிகு லாமுந்தித் தோகையன் னீர்நமைக்
கழிவி லாதுயிர் காத்தலு மோனமோ
விழியி னுன்மத வேளையும் வென்றுளார்
மொழியி னுற்சக மூன்றும்வெல் வாரென்பார். 63

பொ - ரை: நீர்ச்சுழி போன்ற உந்தியை உடையீர், நம்மைக் கெடாது உயிரைக்காப்பது இவர் தம் மௌனமே ஆகும்; முன் மன்மதனை விழித்து எரித்தவர்; பேசுவாராயின் மூவுலகையும் வெல்வார் என்பர் சிலர்.

தூய சோதி யருள்சுரக் கின்றகண்
காயு மோவிவர் கட்டெழில் காணவே
போய மாரன் பொறுமையின் மாய்ந்தனன்
வேயுங் கண்ணழல் வெந்தமை போலென்பார். 64

பொ - ரை: மன்மதன் சிவபிரானது பேரழகைக் கண்டு போய்ப் பொறுமையினால் வெந்து மாண்டான்; மூடப் பெற்றிருக்கும் கண்ணின் அழலால் மாய்ந்தமைபோல: தூய பரஞ்சோதியின் அருள் சுரக்கும் கண் அவனைக் காயுமோ? காயாது என்பர்.

ஆர மாதவஞ் செய்ய வயர்கின்றோம்
வீர மாதவிர் வெம்புயத் தண்ணலைச்
சார மாதவன் றங்கைநற் கங்கைபோல்
சேர மாதவஞ் செய்திலம் யாமென்பார். 65

பொ - ரை: சந்தனம் வெப்பத்தை உண்டுபண்ண யாம் சோர்கின்றோம். திருமால் தங்கையாகிய உமையும் கங்கையும்போல வீரமகள் விளங்கும் விரும்பத்தக்க புயங்களையுடைய இம்முதல்வனை அணைவதற்கு உரிய சிறந்த தவத்தைச் செய்தோம் இல்லை என்பர். தவம் - வெப்பம்.

நுதலைக் கண்டு நுடங்கிய கூன்மதி
மதலைத் தார்முடி வந்தெமைக் காயுமால்
முதலைச் சேர்ந்து கலுழனை மோடனம்
விதலைப் பாந்தள் விளைத்தமை போலென்பார். 66

பொ-ரை: எம் நெற்றியைக்கண்டு வாட்டம் அடைந்த வளைந்த பிறை மதி, சிவபிரானது கொன்றைமாலை அணிந்த முடியிற் சேர்ந்தவுடன் எம்மைத் துன்புறுத்துகின்றது; இது கருடனைக்கண்டு நடுங்கிய பாம்புகள் முதல்வன் முடியைச் சார்ந்தபின், அக்கருடனை அவமதித்தமைபோல உள்ளது என்றனர் சிலர்.

வஞ்சி கைவளை போம்வழி மற்றுமோர்
அஞ்சொ லாளை வினவ வவளுந்தன்
நெஞ்சு போம்வழி தேடவு நேடிப்போய்த்
துஞ்சல் போக்கிநின் றுளொடு சொல்லுவார். 67

பொ-ரை: வஞ்சிக்கொடி போல்வாள் ஒருத்தி தன் கைவளை எங்குச் சென்றது என்று வேறு ஒருத்தியை வினவ, அவள் தன் நெஞ்சு எங்குச்சென்றது என்று தேடுவாளாக, இருவரும் இங்ஙனம் இழந்த பொருள்களை நாடிச் செல்கையில் உறக்கம் வாராது வருந்திய மூன்றுவது ஒருத்தியிடத்துத் தம் இழப்பைக் கூறுவாராயினர்.

போது சாந்தமும் பூரண கும்பமும்
மாதர் தாங்குபொன் மாடம் புகாமலே
மீது நாதனை யுங்கொடு வீதிபோம்
ஈது மால்விடை யென்பது மெய்யென்பார். 68

பொ-ரை: மலரும் சந்தனமும் நிறைகுடமும்கொண்டு மாதர்கள் நிற்கும் பொன் மாளிகைகளில் செல்லாது சிவபிரானைச் சுமந்து செல்லும் விடை வீதி வழியே செல்கின்றது; இதனை மால்விடை (மயக்கமுடைய, பெரிய, திருமால் ஆகிய விடை) என்பது பொருத்தமே என்றனர் சில்லோர்.

அஞ்ச லென்ற கமலமெய் யாரருள்
கஞ்ச மாம்பொதுக் காட்சியைத் தம்மனம்
உஞ்ச லாட வுமக்கெமக் கென்னவே
விஞ்சு பூசல் விளைத்துநிற் பார்சிலர். 69

பொ-ரை: சிவபிரான் திருக்கைகளுள் அபயம்தரும் தாமரைக் கையையும், உண்மை அருள்தரும் வரதம் காட்டும் கையையும், அவை பொதுவாக ஏந்தி நிற்பினும், காணும் மகளிர் தம் மனம் ஊசலாடுதலால், இஃது உமக்கு, அஃது எமக்கு எனச் சொல்லி மிக்க சண்டையை விளைப்பார் சில மகளிர்.

அகிலுண் கோதையா ராயிர கோடியர்
துகிலு மாரமுஞ் சோர்வது கண்டுநீர்
முகிலுண் கூந்த லொருத்திமுன் னேகுவார்
நிகில நாதர்க்கு நீதியி தோவென்பார். 70

பொ-ரை : அகிற்புகை ஊட்டப்பெற்ற கூந்தலையுடையார் அளவிறந்தவர் காமத்தால் உடையும் மாலையும் நெகிழ்வது கண்டும், நீர் உண்ட, மேகம் போன்ற கரிய கூந்தலையுடைய கௌரியைத் திருமணம் செய்துகொள்ளச் செல்வோராகிய இவர் உலகத்திற்கெல்லாம் பொதுத்தலைவர்; இங்ஙனம், ஒருத்திக்கே அருள்வது நீதி ஆகுமா என்பார்.

பரவு மால்வரை வீதியிற் பாவைமார்
சுரத வாள்விழி வண்டினஞ் சூழ்வர
விரத யோகர் விழித்தும்பி யார்தலால்
வரதர் மேனி மதுத்திரண் மானுமே. 71

பொ - ரை : பலராலும் பரவப்படும் இமயமலை வீதியில் பாவைபோல்வார் அன்பும் ஒளியும் உள்ள கண்களாகிய வண்டுகள் சூழ்ந்துவர விரதங்களை யோகிகள் விழிகளாகிய ஆண் வண்டுகள் உண்ணப்படுதலால் இறைவன் திருமேனி தேன்திரளை ஒக்கும்.

வேறு

உரகர் தானமுங் கீழ்பட வெண்மர்வா ழுலகமுந் திகைத்தேங்க
இரவி மாமதி புகர்குரு வாதிய ரிடங்கள்கோ ளிடமாக
விரவு கின்னரர் தந்திரர் வாழிடம் வீணையெய் திடவோங்கிப்
பரமர் மாமணப் பெருக்கொடும் பொலிந்ததாற் பனிவரை வளமூதூர். 72

பொ - ரை: நாகர்வாழ் இடம் கீழே இருப்பதாக, திசைக்காவலர் இடங்கள் திகைப்பை அடைந்து வருந்த, கின்னரர் தந்திரர் வாழ் இடம் வீண் நிலையை அடைய (ஞாயிறு நிலவு முதலியவர் இடம் குற்றமுடைய இடமாக அமைய) இமயமலையாகிய பழைய ஊர் இறைவர் திருமணச் செல்வப்பெருக்கு உடையதாக விளங்கியது.

விந்தை வானவர் வருதலாற் பவனமும் வெறுக்கையெய் திடவாணி
அந்த ணாளனுங் கணத்தொடு வருதலா லவனுல கலரெய்தப்
பைந்து ழாயனுங் கமலையு மேவலாற் பாற்கடல் சலமேவ
நந்தி நாயகன் வருதலாற் கயிலையு நனிவிளர்த் ததுமாதோ. 73

பொ - ரை : வெற்றிவானவர் தம் உலகின் நீங்கிவந்தமையின் தேவர் உலகம் வெறுப்பு (பொன்) அடைந்தது; அயன் கலைமகளுடன் கணங்கள் சூழ வந்துவிட்டமையின் அவன் உலகு அலர் (தூற்றப்படுவது) ஆயிற்று; மாயோன் திருமகளுடன் வந்துவிட்டமையின் பாற் கடல் சலிப்பை அடைந்தது; நந்தி கணத்தலைவன் திருக்கயிலையைவிட்டு வந்தமையின், அது வெள்ளென ஆயிற்று.

மேவு விஞ்சைய ருலகமென் பார்சிலர் விரிஞ்சன்வா ழுலகென்பார்
தேவ லோகமா லுலகமென் பார்சிலர் சிவபுர மிதுவென்பார்
தாவி லேழுட னேழுபே ருலகமுந் தந்ததிந் நகரென்பார்
யாவு மீன்றவ டன்னையின் றருள்பதிக் கிதுகொலோ வரிதென்பார். 74

பொ - ரை : இமயவரையை வித்தியாதரர் உலகு என்றும், அயன் மால் உலகு என்றும், சிவபுரம் என்றும், பதினன்கு உலகத்தின் திரட்சி என்றும் வியந்து கூறினர்; உலகனைத்தையும் படைத்தானைப் பெற்ற பதிக்கு இங்ஙனம் சிறந்து விளங்குதல் எளிதே என்றும் கூறினர்.

வேறு

பூதர் சங்கமும் வானவர் சங்கமும் புவன
நாதர் சங்கமு முருத்திரர் சங்கமு நான்காம்
வேதர் சங்கமு மாமுகிற் குலத்தொடு மிடைந்த
மாதர் சங்கமா மின்ெனுடும் பொலிவன மறுகு. 75

பொ - ரை : வீதி பூதக்கூட்டம், வானவர் ஈட்டம், புவனத் தலைவர் தம் குழுக்கள், உருத்திரப் பல்கணம், நால்வேதம் ஓதும் அந்தணர் தொகுதி என்ப வற்றெடு கூந்தலாகிய முகில் சுமந்து இடையாகிய மின்னொளி வீசும் மாதர்தம் சங்கமும் நிறைந்ததாயிற்று.

கொடிக ளும்பெருங் குடைகளு நிரைத்தகோ வேந்தர்
தொடிக ளுந்திரண் முடிகளு முகுத்தபொற் சுண்ணப்
பொடிகள் சிந்திட மிமசலச் சேறுகால் புதைந்து
பிடிக ளுந்துடி யடிகொளுங் களிறெடு பிளிறும். 76

பொ - ரை : கொடி குடைகளை வரிசையாக ஏந்திநிற்கும் பேரரசர்க ளுடைய தோள்வளை முடிகள் என்பவை உதிர்த்த பொற்சுண்ணப் பொடிகள் சிந்துதலின் பனிநீரால் சேருகி, யானைகள் தம் வலிய அடிகளையும் பெயர்க்க ஒண்ணுதபடி கால் புதைதலால் பிளிறிடும். சிந்தும் + இடம் = சிந்திடம்.

தெருவ டங்கலாப் பெருந்திர ளாகினுஞ் செகத்தோர்
பொருவி னைப்பயன் பொருத்திடு நியதியே போல
மருவு ஞாயிலின் றிருக்கடை நெருக்குற வருவோர்
பெருமை கீழ்மையி னமைத்திடு நந்திகைப் பிரம்பு. 77

பொ - ரை : வீதிகளில் அடங்காத பெருங் கூட்டமாகவரினும், பொருந்திய மதிலின் தலைவாயிலில் வரும்போது, திருநந்திதேவர் கைப்பிரம்பு அவர் அவர் பெருமை தாழ்வு என்னும் தகுதிக்கு ஏற்பவே உள்ளேவிடும்; இது ஊழ் மக்களது முரண்பட்ட வினைப்பயனை பக்குவத்திற்கு ஏற்றபடி விளைவித்தல் போலும்.

குன்று ளார்திசை வேந்தரு நாரியர் குழாமும்
வென்றி மாலய னுருத்திர கணத்துமே லவரும்
மன்று ளார்மழ விடையுமா முனிவரு மல்லால்
நின்று ளார்பதம் பெயர்த்திலர் மறுகெலா நிரம்பி. 78

பொ - ரை : மலைவாழ்நர், திசைக்காவலர், அவர்தம் பன்னியர், மால் அயன் உருத்திரர், சிவபிரானது ஊர்தியாகிய விடை, பெருமுனிவர் என்போர் அல்லது பிறர் அனைவரும் வீதிகளில் நிரம்பிக் கால்பெயர்த்து வைக்காமல் நின் றனர். முன்சொன்னவர்களே உள்ளே செல்வாராயினர்.

தவமு னிக்கண மரசிலை தருப்பைநீர் தெளிப்ப
அவர்தி ருக்குல மாதர்நீ ராஞ்சன மமைப்பத்
துவச நற்குட மணிகொடி முரசுபூந் தோட்டி
கவரி தீபமா மெண்வகை மங்கலக் கலங்கள். 79

எண்கு லக்கிரி மடந்தைய ரிவைமுறை யெடுப்ப
வண்க ருப்புர தீபமோர் மேருமால் வரையில்
பெண்கை யிற்கொடு வலஞ்செயத் தெய்வதப் பிணுக்கள்
கண்க ளிப்புற வேந்துமா லத்திகள் கஞல. 80

பொ - ரை: தவமுனிவர்கள் அரசிலை தருப்பை என்பவற்றால் மந்திர நீர்த்திவலைகளைத் தெளித்தனர்; அவர்தம் பன்னியர் ஆலத்தி ஏந்தினர்;

துகிற்கொடி, நிறைகுடம், மணி, கொடி, முரசு, தோட்டி, கவரி, விளக்கு என்னும் எண்வகை மங்கலப் பொருள்களை எண்குலமலைப் பெண்கள் முறையாக ஏந்திநின்றார்கள்; கற்பூரச் சுடர்விளங்கும் தட்டை மேருவரைமகள் ஒருத்தி எடுத்து இறைவனை வலம்வந்தாள்; தெய்வப்பெண்கள் கண் களிக்கும்படி ஆலத்தி ஏந்தி நெருங்கி நின்றனர். (இவை இருபாடலும் ஒருதொடர்).

### வேறு

முருகையார் தழையா னீரான் முதுவரைத் திரிகூ டத்தில்
ஒருகையாற் பதம்பூ சித்த வுயர்கய கருண னென்பான்
இருகையாங் கமலம் பற்றி விடையினின் றிழிந்து நந்தி
தருகையா லமரர் மோலி சாத்துபா துகைதாள் சாத்த. 81

பொ - ரை: மணம் பொருந்திய தழையால் நீரால் திரிகூடமலையில் துதிக்கையால் முதல்வனைப் பூசித்து இப்போது திருக்கயிலைக் கணங்களில், கஜகருணன் என்னும் பெயரோடு உள்ள தொண்டன் நீட்டிய இருகைகளாகிய தாமரைகளைப்பற்றி முதல்வன் விடையினின்றும் இறங்கினர்; தேவர்கள் முடியில் சாத்துவதாகிய பாதுகையைத் திருநந்திதேவர் கீழேஇட, அதன்மீது இறைவன் அடிவைத்து.

இடம்வல மயன்மால் செங்கை பற்றிமுத் தொழிலுக் கென்றும்
உடைமைதோன் றிடவ சுக்கள் சுவத்திக முரைப்ப மாதர்
நடைபடம் விரிப்ப வானோர் நாண்மல ரிறைப்பச் சென்றார்
வடவரை வளைத்த வள்ளல் பனிவரைக் கோயில் வாயில். 82

பொ - ரை: மேருவை வில்லாக வளைத்த முதல்வன் இமயமலை அரண்மனை வாயிலில், இடம் வலமாக அயன்மால் என்பவர் கைகளைப்பற்றி வசுக்கள் மங்கலவாழ்த்துக்கூற, மகளிர் பாவாடை விரிக்க, வானவர் நாண்மலர் தூவச் சென்றார்; இருவர் கைகளைப்பற்றிச் சென்றது தமக்கு முத்தொழில் செய்யும் உரிமை என்றும் உள்ளது என்னும் உண்மையைக் காட்டிற்று.

ஈசனே மருகா வெய்த வேழுல கீன்ற டன்னை
வாசமா மகவாப் பெற்று மரபெலாம் புனிதம் பெற்றுள்
ஆசறு புனலா லண்ண லடியிணை விளக்கிச் செய்யும்
பூசனை நீரா லுள்ளும் புறத்தினும் புனிதஞ் செய்தாள். 83

பொ-ரை: சிவபிரான் மருகராகக் கிடைக்கும்படி உலகம் படைத்த அன்னையைத் தன்கண் தங்கி வாழும் குழவியாகப் பெற்றுத் தன் குலம் முழுவதும் தூய்மைபெற்ற மேனை, சிவபிரான் திருவடிகளைக் குற்றமற்ற புனலால் விளக்கி மலர்கொண்டு அருச்சித்து, அந்தத் தண்ணீரை உள்ளும் புறமும்கொண்டு தூய்மை பெற்றாள்.

அந்நிலை கடந்து போகி யாயிரம் பவளச் செங்கால்
பொன்னின்மண் டபத்து நாப்பட் புருடரா கத்தின் வேதி
மன்னுபொற் பதும ராக மடங்கலா சனத்தின் மேவிப்
பன்னெறி யமரர் போற்றப் பரஞ்சுட ரிருந்தார் மன்னோ. 84

பொ-ரை: அவ்வாயிலைக் கடந்து சென்று பவளத்தால் அமைந்த ஆயிரக்கால் பொன் மண்டபத்து நடுவில் புட்பராகத்தால் மேடையும் பதும ராகத்தால் சிங்கங்களும் அமைந்த இருக்கையில், பலவகையாலும் தேவர்போற்ற சிவபிரான் எழுந்தருளியிருந்தார்.

இருந்தபின் பிரமன் மாமா லிந்திர னெழிற்கூர் மாண்டன்
ஒருங்கம ராட கேச னுருத்திரர் முதலோர் யார்க்கும்
நெருங்குபொற் றவிசுந் தூசு நிரைத்தகம் பலமு நாதர்
தரந்தர மிருக்கை காட்டித் தடங்கண லருளிச் செய்தார். 85

பொ-ரை: தாம் இருந்தபின், பிரமன், மாயோன், இந்திரன், கூர்மாண்டர் முதலிய உருத்திரர் முதலிய யாருக்கும் அவரவருக்குத்தக்கபடி மேற்கட்டியோடு அமைந்துள்ள அழகிய இருக்கைகளைத் திருநோக்கால் குறிப்பித்தார்.

பாருளார் விசும்பி னுள்ளார் பாதலத் துள்ளார் பார
மேருவா ரிமய மாதி வெற்புளார் புவன வேந்தர்
ஆருளா ரவர்கட் கெல்லா மண்டப மமைந்த தம்மா
சேருவார்க் கெல்லா நாதர் திருவடிக் கமலம் போல. 86

பொ-ரை: அடைந்தார்க்கு எல்லாம், இடமும் பேரின்பமும் பயக்கும் இறைவனுடைய திருவடியைப்போல, திருமண மண்டபம் நிலவுலகத்தர், வானவர், பாதலத்தர், மேருமுதலிய மலைக்கண் உள்ளார், புவனத்தலைவர்கள் யாருக்கும் அமைந்து இடம் கொடுத்தது.

### வேறு

மன்ற லின்குழ நிறைதலாற் றாழ்ந்தது வடபெருந் திசையாவும்
நின்ற தெக்கணம் வானுற வுயர்ந்தது நெளித்தன னுரகேசன்
தென்றி சைக்கடல் வடதிசைக் கெழுந்தது திகைத்தது வடமேரு
மென்ற ளிர்க்கரம் விதிர்த்தனள் பார்மகள் வெருவின வுலகெல்லாம். 87

பொ-ரை: திருமணக்கூட்டம் மிகுதலால் வடக்குத்தாழ்ந்து தெற்கு உயர்ந்தது; ஆதிசேடன் நெளிந்தனன்; தென்றிசைக் கடல்நீர் வடதிசைசென்றது; மேருதிகைத்தது; நிலமகள் கை உதறினுள்.

மனிதர் மாதவ முனிவர்பா லுரைத்திட மாமுனி வரரேகிப்
புனித வானவர்க் கியம்பவா னவர்வெரீஇப் போந்துபொன் னுலகாளும்
நனிகொள் வாசவற் குணர்த்திட வாசவ னுன்முகற் குரைசெய்ய
இனிய நான்முகன் மாதவர்க் குணர்த்தின னெழுந்தன ரிருவோரும். 88

பொ-ரை: மக்கள், முனிவர், தேவர், இந்திரன், நான்முகன், திருமால் என்னும் வரிசையில் இந்நிகழ்ச்சி ஒருவர்க்கு ஒருவர் கூறப்பெற்று முடிவில் அயன்மால் இருவரும் எழுந்தனர்.

உவண வூர்தியுந் திசைமுகக் கடவுளு மும்பருந் திரண்டேகிப்
புவன மூன்றுமோர் பொருப்பின்மேற் படர்தலாற் புவிபொறை யாற்ருமல்
கவன மேகொடு வடதிசை தாழ்ந்துதெக் கணதிசை மேலாகிப்
பவன நோக்கிய தெனவுயர் கயிலையம் பரமர்பா லறிவித்தார். 89

பொ-ரை: அவ்விருவரும் தேவர்கள் சூழ எழுந்து, மூவுலகும் பனிவரையில் வந்தமையின், விரைவாக வடக்குத்தாழ்ந்து தென்தேசம் மேலுலகை நோக்கித் திரிந்தது என இறைவனுக்கு உணர்த்தினர்.

உம்பர் யாவரு முறையிடு தலுந்திரு வுளத்திடை யருள்கூர்ந்து
கும்ப சம்பவ முனிவனைத் திருமணக் குழாத்திடைக் குறிப்பாக
எம்பி ரான்றிருக் கடைக்கணு னேக்கலு மிறைஞ்சின னெழுந்தேகிச்
சம்பு நாயக சரணென நின்றுவாய் புதைத்தனன் செவிதாழ்த்து. 90

பொ-ரை: சிவபிரான் அருள்கூர்ந்து அகத்தியரை நோக்க, அவர் இறைவனிடத்து வணங்கிச்சென்று வாய்பொத்திச் செவிதாழ்த்து நின்றூர்.

தாழ நின்றெது பணியெனப் பரவுவான் றனிமனங் களிதூங்க
வாழ்பெ ருங்கட லமுதுகுத் தெனத்திரு வாய்மலர்ந் தருள்செய்வார்
சூழ்பெ ரும்பதி னுல்வகைப் புவனமுந் தொக்கபே ரவைகாட்டி
ஏழ்பெ ருங்கட லெழுபெருந் தீபமு மெடுத்துமே லிசைக்கின்ருர். 91

பொ-ரை: பணிந்துநின்று தமக்கு யாதுபணி என வினவிய அகத்தியர் செவியில் அமுதம் வார்த்தாற்போல இறைவன் அருள்புரிகின்ருன்: பதினன்கு உலகமும் வந்து கூடியுள்ள திருமண அவையைக் காட்டி எழுபெருங்கடலும் எழுபெருந்தீவும் எடுத்தோதி மேலே கூறுகின்ருர்.

மகர வாரிதி நடுவுறை மரக்கலம் வளைந்தநா வலந்தீபம்
பகரு மாடகக் கிரியொரு பாய்மரந் துருவசக் கரம்பாயல்
சிகர வெண்குலக் கிரிகளு நங்கூரத் தீவிசை கல்லாகும்
நிகரில் பல்லுயிர்த் தொகைகளே வகைபெற நிறைத்திடும் பலபண்டம். 92

பொ - ரை: வட்டமாகிய நாவலந்தீவு கடல்நடுவில் உள்ள மரக்கலம் போல்வது; கூறப்படும் மேருவே அதற்குப் பாய்மரம்; துருவச்சக்கரம் பாய் போல உள்ளது; எட்டு குலகிரிகளும் தீவில் உள்ள நங்கூரக்கல்; அளவற்ற பல்லுயிர்கள் மரக்கலத்தில் உள்ள பலசரக்குகள்.

மன்றல் சேர்பெரு மங்கலக் குழுவினன் மகிதல மெனுநாவாய்
தென்றி சைப்புற முயர்ந்திட வடதிசை சென்றுதாழ்ந் ததுபாராய்
நின்று நீள்கட லமிழ்ந்திடா தினிநிலை நிறுத்துதற் கியாம்வேண்டும்
இன்றி யெம்மையே யிடைவிடா துளத்தினி லிருத்திய நீவேண்டும். 93

பொ - ரை: நமது திருமணத்தின்பொருட்டுக் கூடியுள்ள பெருங்குழுவால் நிலம் என்னும் மரக்கலம் தெற்குப்பாகம் உயர வடபாகம் தாழ்ந்துள்ளதைக் காண்க; இது கடலில் அமிழ்ந்து விடாது நிலைபெறுதற்கு யாம் செல்லுதல் வேண்டும்; அன்றி எம்மை இடையறவின்றி உளத்தில் கொண்ட நீ உதவ வேண்டும்.

சந்தி ராதித்தர் வலம்வரு முலகெலா ந் தழைத்திட மனைவாழ்வும்
இந்தி ராதியர் சுவர்க்கமு நிலைபெற விமயமீன் றருண்மாதை
மந்தி ராகமப் படிமணஞ் செயமனம் வைத்தநம் பொருட்டாக
நந்தி ராவிட முனிவ நீ தென்றிசை நயப்பொடுஞ் செலவேண்டும். 94

பொ - ரை: இருசுடரும் வலம்வரும் உலகெலாம் வளர்ச்சி பெறவும், இல்வாழ்க்கையும் இந்திரன் முதலியோர் போகவாழ்வும் நிலைபெறவும் உளங் கொண்டு இமவான்பெற்ற நமது அருள் வடிவமாகிய கௌரியை மந்திரங்களை யுடைய ஆகமமுறைப்படி மணஞ்செய்ய எண்ணியுள்ள நம்பொருட்டு, முனிவனே நமது திராவிட தேசமாகிய தென்திசைக்கு நீ மகிழ்ச்சியோடும் செல்லுதல் வேண்டும்.

வேறு

சென்றுநீ தெக்கணபான் மெலிவகற்றித் தென்மலைக்கே செறிந்து வாழ்தி
துன்றுகதிர் முதல்வானோர் நெறிசெலுத்தி மேருவில்வாழ் துருவன் போல
என்றுபரம் பரனருள வேருவின் ணப்பமென விறைஞ்சி யேத்தி
ஒன்றுதமிழ்க் குறுமுனிவ னிரண்டுவரம் வேட்டருளா லுணர்த்து கின்றான்.

பொ - ரை: நீ தென்றிசைசென்று வடதிசையின்கீழ்மையை நீக்கிப் பொதியிலிலே தங்கி வாழ்க! ஞாயிறு முதலியவற்றைச் செலுத்தி மேருவில் வாழும் துருவன்போல நீ தெற்கே என்றும் இருக்க எனச் சிவபிரான் அருள் செய்தான். தனியாக அடியேனுடைய விண்ணப்பம் உள்ளது என முதல்வனை வணங்கி, திருவருளால் இரண்டுவரங்களை விரும்பித் தெரிவிக்கின்றார் முனிவர்.

முன்னதுநீ யிமயவரைச் செல்விதனை மணம்புரியு முறைமை காணப்
பின்னதுநின் றிருநடனங் காணவெனு மாசையினற் பெரிது காலம்
பொன்னசலத் திருந்துதவ மியற்றியொரு காட்சிபெறப் போந்தே னிப்பால்
இன்னமுமொன் றுளதாக விரண்டுமெனக் கெய்திடுநா ளெந்நா ளென்
[றான்.

பொ - ரை: முதற்கண்ணது நீ இமவான்மகளைத் திருமணஞ் செய்து கொள்ளும் காட்சியைப்பெற; பின்னையது நின் அற்புதத் திருக்கூத்தைக் காண. இவற்றைப்பெற மேருவில் நீண்டகாலம் தவம் இயற்றி அவற்றுள் ஒன்றைப் பெறவே இங்கே வந்தேன்; இப்பொழுது அது கூடாதாக, திருக்கூத்தோடு திருமணமும் என்னும் இரண்டையும் அடியேன் காணப்பெறும் நாள் எந்நாளோ என்றார் முனிவர்.

பனகவரை நாணுடையார் குறுமுனிபா லருள்கூர்ந்து பரிவா னோக்கிக்
கனகவரை யாயிரயாண் டுதவுபல னூறாண்டிற் காமக் கோட்டி
சனகவரை கொடுக்குமந்தத் தவப்பயனை யோராண்டு தனிலே நல்கும்
அனகவரைத் தெக்கணபாற் கேதார முதலுளவென் றருளிப் பின்னும். 97

பொ - ரை: வரையிற்பூட்டும் பாம்பாகிய கயிறுடையார் அகத்தியர்பால் அருள்கூர்ந்து உணர்த்துகின்றார்: மேருவரை ஆயிரம் யாண்டுத்தவத்திற்கு உதவும் பயனை அம்மை தோன்றிய இமயமலை நூறு ஆண்டிற்கொடுக்கும்; அப் பயனையே ஓராண்டிற்றருவன தூய அவ்வரைக்குத் தெற்கே கேதாரம் முதலாக உள்ளவை எனக்கூறி மேலும் கூறுவாராயினர்.

தென்பாலி லொருதத்துக் கோடிநா ளுதவுபலன் சிறிது நாளின்
முன்பாகக் கொடுப்பதொரு தலமுளதங் கதுபிறர்க்கு மொழியோ நம்பால்
அன்பாக வினவுமவர்க் கருள்செய்வோ மெனவுரைப்ப வருளா யென்று
மின்பாவுஞ் சடைமுனிவன் பாதமலர் சூடுதலும் விளம்பா நின்றார். 98

பொ - ரை: தென்திசையில் ஒரு தலத்தில் கோடிநாள் தவம்புரிந்து பெறும்பயனைச் சில நாட்களிலே கொடுக்கும் ஒரு இரகசியத்தலம் உள்ளது; அதை நம்மிடத்து அன்போடு வினவுவார்க்கே வெளியிடுவோம் என்றான் முதல்வன். அகத்தியர் திருவடியை வீழ்ந்திறைஞ்சிக் கேட்க விரும்பியபோது அதனைக் கூறுவாராயினர்.

பொன்மலைக்குங் கயிலையெனும் வடமலைக்குந் தென்மலைநின் பொதிகை
தென்மலைக்கு வடமலைநந் திரிகூடத் திருமலைமேற் செம்பொன் னாட்டு [வாசத்
மின்மலைக்கு மணிகொழிக்கும் வடவருவிக் குற்றாலம் விபுல மீன்ற
நின்மலைக்கு மெமக்குமொரு பொதுத்தான மூவருக்கு நியமத் தானம். 99

பொ - ரை: அது மேருவிற்கும் வடமலை எனப்படும் திருக்கயிலைக்கும் தெற்கே உள்ள மலை; நின்வாழ்விடமாகிய பொதியத் தென்மலைக்கு வடக்கண் உள்ளமலை; நமக்கு மிகவும் இனிய திரிகூடத்திருமலையே அது; மேலே உள்ள பொன்நாட்டின் ஒளியை மலையச்செய்யும் ஒளிமணிகளைக் கரையில் ஒதுக்கும் வட அருவியை உடைய குற்றாலம் எனவும் பெயர்பெறுவது; சிறந்த உணர்வைத் தரும் நிமலையாகிய அம்மைக்கும் எமக்கும் பொதுவாகவுள்ள இடம் அது; மும் மூர்த்திகளும் எம்மை வந்து வழிபடும் நியமத்தைக் கற்பிக்கும் திருத்தலம் அது.

புண்டரிகத் தயனுரைப்ப வத்தலத்துப் புரந்தரா தியர்கள் போந்து
மண்டுபெருந் தவம்புரிந்து மாருத பாதகங்கண் மாற்றுந் தானம்
விண்டலத்தோர் மகிதலத்தோர் வினைதீர்க்குங் கங்கைவினை தீர்க்குந் தானம்
தண்டமிழ்ச்சொன் மாமுனியே தருமமொன்று கோடியெனத் தழைக்குந்
[தானம். 100

பொ-ரை: அயன் உரைப்ப இந்திரன் முதலிய இறைவர் அங்கு வந்து எம்மை வழிபட்டுத் தீராத வினைகளைத் தீர்த்துக்கொள்ளும் புனிதத்தலம்; வானவர் நிலவுலகத்தார் வினையைக் கழுவும், கங்கை தன்வினையை வந்து தீர்த்துக்கொள்ளும் உயர்ந்த இடம் அது; தமிழ் முனிவனே, அங்குச் செய்யும் ஓர் அறம் கோடியாக வளரப்பெறும்.

செல்வம்வேண் டினர்க்கருளத் திருநமைக்காத்
திருப்பதனுற் செங்கண் மாலுங்
கல்விவேண் டினர்க்கருளக் கலைவாணி
யுறைதலினுற் கமலத் தோனும்
வெல்விசையங் கொடுப்பதற்குக் கொற்றவையு
மகப்பொலிவால் வேள்வி வேந்து
நல்வடுகச் செம்மலுங்காத் துறைதான ந்
தமிழ்ச்சுருதி நடிக்குந் தானம். 101

பொ-ரை: அங்குச் செல்வம் வேண்டினர்க்கு உடனே கொடுத்தற்குத் திருமகள் காத்திருப்பள்; அதனுல் திருமாலும் அங்கு நீங்கார்; கல்வி வேண்டினர்க்கு வழங்குதற்கு கலைமகள் என்றும் காத்திருத்தலின், அயனும் அங்கே இருப்பன்; பகைவரை வெல்லும் வெற்றியைத் தருவதற்குக் கொற்றவையும் அங்கு உறைவள்; யாகத்தின் பொலிவு இருத்தலின் இந்திரனும் நல்லவடுகர் எனப்படும் வைரவரும் அவ்விடத்துக் காவல் புரிந்துள்ளனர்; அவ்விடம் தமிழ்மறை நடம் புரியும் தானமாகும்.

முத்தநகை யரமகளிர் முலைத்தடத்து
வானவர்கண் முயங்குந் தோறும்
உத்தரிகந் துயல்வருவா னவர்புயத்தி
லவர்முலைக்கோ டுழக்குந் தோறும்
இத்தலத்தின் மகிமையெனக் களிகூர்ந்து
திசைநோக்கி யிறைஞ்சுந் தானம்
சித்தர்சா ரதரியக்கர் கின்னரர்கிம்
புருடர்தவஞ் செய்யுந் தானம். 102

பொ-ரை: வானவர்கள் அரமகளிர் மார்பைத் தழுவுந்தோறும், அரமகளிர் உத்தரீயம் இடும் வானவர் புயங்களில் தம் தனங்களை அழுத்துந்தோறும் இருபாலரும் தமக்கு அப்போகம் கிடைத்தது திரிகூடமலையில் இறைவனைத் தொழுதமையால்தான் எனத் துணிந்து, இத்தலத்தைத் திசைநோக்கி இறைஞ்சுவர்; சித்தர் முதலிய தேவகணத்தவர் இங்குவந்து தவம்புரிவார்கள்.

பந்தாடல் கழங்காடல் கற்பகப்பூம் பந்தரிடைப் பசும்பொன் னூசல்
வந்தாடல் கங்கைநதி விளையாடல் பூங்காவின் மலர்கொய் தாடல்
இந்தாடன் முகமலர விந்திரனே டாடுதொறு மிந்தி ராணி
சந்தாடன் முலைதடிப்ப விதழ்துடிப்பப் பாடியசீர் தழைக்குந் தானம். 103

பொ - ரை: இந்திராணி பந்தாடல் முதலியவற்றில் மகிழும்போதும், சந்திரனை அடிமைகொள்ளும் தன் முகம்மலர இந்திரனேடு உரையாடும்போதும், சந்தனம் தோயும் தன்முலே வீங்கும்படி இதழ்துடிக்கும்படி பாடிய புகழ்மிகும் இடம் திருக்குற்ருலம்.

வேறு

கலேப்பெருங் கடல்க ளெல்லாங் கருத்தினி லடக்கிக் கையில்
அலேக்கட லடக்கி நம்பா லருட்பெருங் கடலி லாடும்
நிலேக்கட முனிவ கேண்மோ நின்மலப் பரையும் யாமும்
கொலேக்கட கரிசெய் பூசை கொண்டினி திருக்குந் தானம். 104

பொ - ரை: கலேக்கடலே அகத்தடக்கி அலேக்கடலேக் கரத்தடக்கி நம் திருவருட்கடலில் திளேக்கும் குடமுனியே, கேட்க; தூய பராசத்தியும் யாமும் யானே செய்த வழிபாட்டை ஏற்று இனிதிருக்கும் இடம் திருக்குற்ருலம்.

அந்நகர்க் கணியா யூழி யாழிதாங் கெயிலா யோங்கு
முன்னதத் திரிகூ டத்தி லுத்தர பாக மாக
நன்னர்சித் திரப்பூங் கங்கை நமதரு ளாகத் தோன்றி
முன்னின ரெவர்க்கும் பாவ மோசனஞ் செய்யா நிற்கும். 105

பொ - ரை: அந்நகரத்திற்கு அழகுசெய்வதாய், ஊழிவெள்ளத்தைத் தடுக்கும் மதிளாய் உள்ள உயர்ந்த திரிகூடமலேயின் வடக்குப் பாகத்தில் நல்ல சித்திரகங்கை நமது அருள்வெள்ளமாகத் தோன்றித் தன்னே நினேத்தார் எவர்க்கும் பாவக்கழிவைச் செய்யும்.

தேனமர் திரிகூ டத்திற் சித்திர நதிதோய் வார்க்குத்
தானமுந் தவமும் வேறு தருமமுஞ் செய்ய வேண்டா
ஞானமும் புகழுங் கல்வி நலங்களும் பொருளு மெய்தும்
வானவர் பதமும் வேண்டும் வரங்களும் கொடுக்கு மாதோ. 106

பொ - ரை: திரிகூடச் சித்திர நதியில் மூழ்குவோர் வேறு தானம், தவம், தருமம் இயற்ருமலே, ஞானம் புகழ் கல்வி செல்வம் என்பவற்றையும் சுவர்க்க பதவியையும் வேண்டிய வரங்களேயும் பெறுவர்.

உத்தர முகம தாக வுயர்திரி கூடந் தோன்றும்
சித்திர கங்கை நம்பாற் றிருமணங் காண வேண்டி
இத்தலே போந்த தங்க ணெய்துதற் கருளு கின்ருேம்
அத்தலே யந்நீ ராடி யருந்தவம் புரிதி யென்று. 107

பொ - ரை: உயர்ந்த திரிகூடத்தில் வடக்குநோக்கி வரும் சித்திரகங்கை இங்கு நம் திருமணம் காணவந்துள்ளது; அஃது அங்குத் திரும்பிவர அருள் செய்கின்ருேம்; அங்கு அத்தீர்த்தத்தில் நீராடி உன் அரிய தவங்களேச் செய்து கொண்டிரு. இங்ஙனம் கூறி, மேலும் கூறுகின்ருர்.

வேறு

வேடனெரு பன்றிதொடர்ந் தொருதுறையில் வீழ்ந்துபெற்ற வீடு பேறும்
தேடருமெய்த் தலமூர்த்தி திரிகூட வடவருவித் தீர்த்தஞ் சத்தி
பீடமகி மையும்வேதக் குறும்பலா மான்மியமும் பிறவு நாளும்
ஆடல்பெருஞ் சிற்பொதுவி னதிசயமுந் திருவாக்கா லருளிச் செய்து. 108

பொ - ரை: வேடன் ஒருவன் ஒரு பன்றியைத் தொடர்ந்து ஒருதுறையில் வீழ்ந்து வீடுபேறு எய்தியதும், திரிகூடத்தலம், மூர்த்தி, வட அருவித் தீர்த்தம், சத்திபீடமகிமை, வேதமாகிய குறும்பலாவின் பெருமை, பிறவரலாறுகள் என்னும் திருக்கூத்தியற்றும் ஞானசபையின் வியத்தகு சிறப்பு என்பவற்றையும் தாமே உரைத்தருளினர்.

ஓதியபே ருலகனைத்து மொடுக்குமுறை யொடுங்கியநா ளொடுங்கா தாகி
நீதிபெற நமதருளா லின்றபுடார்ச் சுனபுரத்து நின்றி யாமே
சோதிபெறு திருமுகமா யிரம்படைத்துத் தரும்புவனத் தொகைக ளெல்லாம்
போதிலுறை யயனுகி வகுத்தருளித் திருமாலாய்ப் புரக்கின் றேமால். 109

பொ - ரை: உலகனைத்தையும் யாம் ஒடுக்கும்போதும், எமது ஆணையால் புடார்ச்சுன புரம் ஒடுங்காது நமக்குச் சிறந்த நிலைக்களனுகத் தங்கும்; பின்வரும் தோற்றக் காலத்தில் யாம் ஆயிரம் முகம் படைத்துத்தரும் புவனத்தொகைகளை நான்முகனை அதிட்டித்துப் படைத்தலையும் மாயோனை அதிட்டித்துக் காத்தலையும் செய்துவருகின்றேம்.

மாலாகி யிருக்குநமைப் பணிந்துசிவ வடிவாக்கி மகுட மென்னும்
நூலாதி யாகமத்தாற் பூசைசெய்து நுவலுமணக் கோலங் காண்டி
மேலான திரிகூடச் சாரலிடை யைஞ்ஞூறு வேள்வி செய்து
நாலான மறைபரவு நம்பெருஞ்சித் திரசபைக்கே நடனங் காண்டி. 110

பொ - ரை: இப்போது மாயோன் உருவில் காட்சிதரும் அவ்விடத்து நம்மைத்தொழுது சிவலிங்க வடிவமாக அமைத்து மகுடாகம முறைப்படி பூசை செய்து, அதன்பயனுக நமது திருமணக் கோலததைக்கண்டு இன்புறுக; திரிகூட மலைச்சாரலில், ஐந்நூறு சிவவேள்வியை முடித்து நான்மறைகள் ஏத்தும் சித்திர சபையில் நமது அற்புதக்கூத்தையும் காண்க.

முந்தமலை யொடுநாமு மினிதுறையுங் குற்றால முறையிற் போற்றிச்
சந்தமலைத் தடங்கோட்டி லுறைதியென வருளுதலுந் தம்பி ரானை
வந்தமலைக் கடலடக்கு மலர்க்கையாற் பரவிநின்று வரம்வே றென்று
விந்தமலை வாதாவிக் கிடந்துடிப்ப வலம்புரிந்து வேண்டிப் பின்னும். 111

தொழுதுபுனல் வேண்டுதலும் பொன்னிநதி
சென்னிமதித் தொடையார் நல்க
ஒழுகுநிறைப் பெண்டகைமா ராண்டகைபின்
றனித்தேக லுரித்தோ வென்றுள்

கெழுதகைநம் மன்பனிவ னிருவினைவென்
றவனெனவே கிளப்ப மீளும்
பொழுதுகுறித் தருளுகெனப் புவியிலவன்
கைகாட்டும் பொழுதே யென்றார். 112

பொ - ரை: யாவருக்கும் முன்னே உள்ள அமலையாகிய பராசத்தியுடன் யாமும் மகிழ்ந்து உறைதற்கு இடமாகிய திருக்குற்றாலத்தை முறையாக வணங்கி, பின் சந்தனமலை என்னும் பரந்த பொதியத்தில் தங்குக எனச் சிவபிரான் அகத்தியருக்கு மொழிந்தார்; இந்திரன் விருப்பத்திற்கு இசைந்துவந்து நீரும் அலையும் உடைய கடலை (அம் அலைக்கடல்)ச் சுருக்கிய கைகளால் இறைவனைத்தொழுது விந்தமலைக்கும் வாதாவிக்கும் இடத்தோள் இடக்கண் துடிப்பு உண்டாகும்படி, வலம்வந்து, வேறொரு வரம்வேண்டிப் பின்னும் தமக்கு ஒரு தூய புனலைவேண்டி நின்றபோது, காவிரியைச் சிவபிரான் உடன்செல்லப் பணித்தான்; ஒழுக்கமும் கற்பும் உள்ள பெண்கள், ஆண்மக்கள் பின்செல்லல் வழக்கு அன்றோ என்றாள் பொன்னி; அகத்தியன் நம் அன்பன்; இருவினைகளைக் கடந்தவன் என்றான் இறைவன்; யான் அவனிடமிருந்து மீளும்பொழுது யாது? குறித்தருள்க! நிலவுலகில் உன்னைச்செல்லும்படி அவன் கைகாட்டும்போது, நீமீளலாம்.

நம்பரருள் கொண்டுவிடை கொண்டேகித் தென்புவியி னவைகண் மாற்றிக்
கும்பமுனி தண்பொதியந் தென்பொதிய மாமலைமேற் குறுகுங் காலை
உம்பர்வட திசைபோலத் தென்றிசையு மொத்ததுகோ வணத்தா லோர்நாள்
எம்பெருமா னமர்நீதி யுவந்தேறு மொருதுலையி னிருதட் டேபோல். 113

பொ - ரை: இறைவன் திருவருளும் விடையும் பெற்று, தென்னாட்டில் இருந்த தீமையை நீக்கிக் குடமுனிவர் பொதியம் சேர்ந்தபோது, சிவபிரான் தம் கோவணத்தை ஓர் தட்டில் இட்டு அதனைச் சமன் செய்யும்படி கூற, அமர்நீதியார் தம் உடைமையை மற்றொரு தட்டில் வைத்துத் தாமும் ஏறியபோது இருதட்டும் சமமானது போல, தேவர்கள் நிரம்பிய வடதிசையோடு ஒத்துத் தென்றிசையும் உலகைச் சமன்செய்து நின்றது.

## அம்மையின் திருமணக்கோலம்

### வேறு

ஒருதிண்புவி கோணற நிற்றலி னும்ப ரெல்லாம்
வருநம்பனை மாலிம யத்து வணங்கி யார்த்தார்
இருமங்குலி னேதியை யோதிய ரீன்ற பொன்னைத்
திருமங்கையர் பொற்பினை யொப்பனை செய்வ தானார். 114

பொ - ரை: திண்ணிய நிலன் மேற்கூறிய வகையால் சாய்வு இன்றிச் சமநிலை பெற்றபோது, தேவர்கள் சிவபிரானை இமயமால்வரைக்கண் வணங்கி ஆரவாரம் செய்தனர்; பெரிய மேகம்போன்ற கூந்தலையுடையாளாகிய மலையரசர் பெற்ற அரிய பொருளை, செல்வமங்கையர்தம் அழகாக விளங்குவோளை மண அணி செய்யத் தொடங்கினர்.

அகிலாண்டமு மீன்றழ குக்கழ காகி னுளைத்
திகழ்பேரெழி லுக்கெழில் செய்யவள் செய்ய நேர்ந்தாள்
இகமேலுறு பேதைமை மாத ரியற்கை யாலோ
சகமேலள வுக்கள வாமவ டன்மை தேர்ந்தோ. 115

பொ-ரை: திருமகள் உலகமீன்ற, அழகுக்கு அழகாக உள்ள பார்வதியை ஒப்பனைசெய்ய இசைந்தாள்; அவ்விசைவு மாதர்க்கு இயற்கையிலுள்ள பேதைமை காரணமாகவோ, உலகில் அவர் அவர் அளவுக்கும் மூல அளவாய் நிற்கும் தேவியின் தன்மையை (எளிவருந்தன்மை)த் தெரிந்தோ என்பது தெளியப் படாதது.

ஆலத்தை யவர்க்கமு தாக்கி யகண்ட மெல்லாம்
சாலப்பெரு மங்கல மாக்கிய தைய லாட்குக்
கோலத்திரு மேனியை மங்கலக் கோலஞ் செய்யக்
காலத்தின்முன் னெண்ணிய பூசைக் கடன்சமைந்தாள். 116

பொ-ரை: சிவபிரானுக்கு ஆலாகலவிடத்தை அமுதாக்கி அதனால் உலகத்தில் உள்ளார் அனைவர்க்கும் மங்கலத்தைச் செய்தருளிய தேவிக்கு அவள் தன் அழகிய திருமேனியை மங்கல அணி நிகழ்த்துதற்கு உரியகாலத்தில் முற்பட எண்ணிச் செய்யும் சிவபூசையைச் செய்து அமைந்தவள் திருமகள் என்பது கருதி உணரப்படும்.

கங்கைப்புன லாட்டி மணிக்கலை நீறு சாத்தி
அங்கைத்திரு மாமலர் செய்த வருந்த வத்தால்
மங்கைக்கணி செய்வது போன்மலர் மாம டந்தை
செங்கைப்பல செம்பொ னணிக்கணி செய்வ தானள். 117

பொ-ரை: பார்வதியைக் கங்கைப்புனலில் முழுகச்செய்து, மணிகள் கோத்த பொன்சேலையை அணிவித்து, திருநீறுசாத்தி, தன் கரம் செய்த தவப் பயனுக, மணக்கோலம் செய்வதுபோல, திருமகள் தன் சிவந்த கைகளால் பல வகை அணிகளுக்கும் அழகு செய்வதானள்.

காராடு கருங்குழ லாகிய கங்குன் மீதே
தாராகண மொய்த்த தெனப்பல தார்கள் சூட்டி
ஏராடிய கொண்டலின் மின்றளை யிட்ட தேபோல்
சீராடு தலைப்பணி யுத்தி திருத்தி னளே. 118

பொ-ரை: கரிய கூந்தலாகிய இருளில் விண்மீன்கள் மின்னுவதுபோலப் பல மலர்மாலைகளைச் சூட்டி, அழகிய மேகத்தில் மின்னலைச் சிறைப்படுத்தியது போலச் சீதேவி என்னும் தலைக்கோலத்தை அமைத்தாள்.

கருமைக்குழல் விண்டுளி நுண்டுளி காட்டு மாபோல்
பருமுத்தணி தொங்க லசைத்தொரு பட்டம் வீக்கி
ஒருமைப்பிறை மேலிரு பானு வுதித்தன் மான
இருமைத்தில தந்திரு நெற்றியி லிட்டு மாதோ. 119

பொ - ரை: கரிய கூந்தலாகிய மேகத்தின்கண் சிறு நீர்த்துளிகளைக் காட்டுதல் போலப் பரிய முத்துக்களைக் கோத்துச் செய்த மாலையைக்கட்டி, நெற்றிப்பட்டத்தைப்பின் கட்டி, நெற்றியில், ஒருபிறையின்மீது பெரிய ஞாயிறு தோன்றியது போலப் பெரிய குங்குமப்பொட்டை இட்டாள்.

வி - கு: விண்டுளி - மேகத்தின்கண்; விண்டு - மேகம், உளி - ஏழன் உருபு.

குமிழ்முத்த மணிந்தனள் கொவ்வை முகிழ்க்கு முத்தின்
அமரத்தவ மூசியி னிற்குமோ ரார மேபோல்
கமழ்பொற்குழை யிற்குழை சாத்தினள் கால நீலம்
உமிழ்கட்கட லிற்புடை பாய்சுற வொத்து லாவ. 120

பொ-ரை: கொவ்வைக்கனி போன்ற வாய் இதழ்களால் மூடப்பெற்றுள்ள பற்களாகிய முத்துக்குச் சமமாகத் தங்குதற்கு ஒரு முத்து ஊசி முனையில் தூங்கித் தவம் இயற்றுதல் போலத் தோன்றும்படி குமிழமலர் போன்ற மூக்கில் முத்துப் பொருந்திய மூக்கணியை அணிந்தாள்; அழகியகாதில் மகரக்குழையைச் சேர்த்தாள்; அவை நீலமலர் நிறத்தைச் சிதறும் கண்ணாகிய கடலின் பக்கலில் பாயும் சுறவு ஒத்து அசைந்தன.

வி - கு: குமிழ் - குமிழ்போன்ற மூக்கு; முகிழ்த்தல் - மூடுதல்; ஆரம் - முத்து; நீலம் உமிழ் எனப்பிரிக்க.

வயிரப்பணி தங்கிய கொப்பு வயக்கு கின்றாள்
பயில்பொற்குழை யூடுரு விக்குழல் பாய்கண் வாளி
கயிலைத்தனி நாயகர் சிந்தை கவற்று மென்றோ
எயிலைப்பொரு வாளி தனைப்பொரு மென்று தானோ. 121

பொ - ரை: திருமகள் வயிரத்தொழில் அமைந்த கொப்பைக் காதில் விளங்கவைத்தாள்; அம்மையினது கண்கள் குழைகளை ஊடுருவிக் கூந்தல் மீதும் செல்லுதலால் சிவபெருமான் சிந்தையை மேலும் சென்று கவலச்செய்யும் என்றோ, திரிபுரத்தை எரித்த சிவபிரான் அம்பு கண்ணோடு போர்செய்யப் புகும் என்றோ கருதி - இரண்டையும் தடுத்தற்பொருட்டு.

வி - கு: எயில் - மூவெயில், திரிபுரம்.

வருமங்கல நாணணி மல்கு வலம்பு ரிக்கே
திருமங்கல நாணணி தாங்கம தாணி சேர்த்தித்
தருமங்கல மான தடங்கை தனைத்தி னஞ்சூழ்
பெருமங்கல மார்கட கஞ்சரி சங்கு பெய்தாள். 122

பொ- ரை: வரும் திருமணத்தின்பொருட்டு நாண்களில் வரிசைப்படுத்தியுள்ள அணிகள் நிரம்பிய வலம்புரிச் சங்கை ஒத்த கழுத்தில் திருமாங்கல்யத்தை இறைவன் அணியும்போது அதைத் தான் இடமாக இருந்து தாங்கும்படி மார்பில் பதக்கம் சேர்க்கப்பெற்றது. தருமத்தை அணியாகக்கொண்ட திருக்கைகளில் என்றும் உள்ள மங்கலத்திற்கு அடையாளமாகிய கடகமும் சரிக்கும் சங்கு வளையலும் இட்டாள்.

மதர்வைத்த விழிப்பொரு காரை வலஞ்செய் கார்போல்
உததிக்கெழு நஞ்சென வஞ்சன மொன்று தீட்டி
விதுவைத்தன வெள்ளி வளைக்கு முகிழ்த்த கஞ்சங்
கதிர்வைத்து விரித்தன பொற்கணை யாழி யிட்டாள். 123

பொ - ரை: களிப்பையுடைய கண்ணாகிய மோதும் மேகத்தை வலஞ் செய்யும் மேகம்போல, கடலில் எழும் நஞ்சைப்போல, மைதீட்டி, பொருந்திய சந்திரனை வைத்தாற்போன்ற வெள்ளி வளையல்களுக்குக் குவிந்த திருக்கைத் தாமரையைச் சூரியனைக்கொணர்ந்து மலர்வித்தாற்போலப் பொன்னாலாகிய கணையாழி இட்டாள்.

எழுமுத்தல மீன்றவை முற்றுவ தின்றி முற்றாச்
செழுமுத்த முலைத்துணை முக்கணர் செவ்வி யெய்தக்
கெழுமுத்தவ மெய்தினை யென்று கிளந்து பைம்பூண்
முழுமுத்த மிடற்கிணை முத்தணி யார மிட்டாள். 124

பொ - ரை: பார்வதியின் மார்பில் முத்தாரம் சார்த்தப்பெற்றது: அது, பார்வதியால் பிறப்பித்த இருபத்தொரு தலங்களும் முதிர்வதன்றி, தான் முதிராத இளஞ்செவ்வியையுடைய தனமே, நும் துணையாகிய பரமசிவன் காதலிக்கும் செவ்வியைப் பெறும்படி பொருந்திய தவப்பயன் எய்தினை எனச் சொல்லி, அவ்வாரம் முழுமுத்தம் கொள்வதுபோல இருந்தது.

பொருகுன்றின் முளைத்த கரும்பொடு வல்லி போல
முருகுந் தொயில் குங்கும மான்மத மொண்டு தீட்டிப்
பருமம்பெரு மேகலை தந்து பனிக்க லாபம்
அருமென்கலை சுற்றி மருங்குலை வாட்டி நின்றாள். 125

பொ - ரை: குன்றில் முளைத்த கரும்பும் காமவல்லியும் போலத் தோன்றும் படி அகில், சந்தனம், குங்குமம், கஸ்தூரி என்பவற்றில் இறகைத் தோய்த்துத் தொய்யில் எழுதி, பருமம், மேகலை, கலாபம் என்பவற்றோடு அரிய மெல்லிய சேலையைச் சூழ்வித்து அம்மையின் இடையை வருந்தும்படி செய்தாள்.

வி - கு: முருகு - அகிற்சாந்து, மான்மதம் - கத்தூரி. பருமம், மேலை, கலாபம் என்பவை முறையே பதினன்கு, எட்டு, இருபத்தொரு கோவையுடைய மணிவடங்கள்.

போதுங்கல னுந்திரு மேனி பொதிந்து நின்றீர்
ஏதின்று செயுங்கொன் மருங்கென வேங்கு மாபோல்
பாதங்கள் புலம்பு சிலம்பொடு பாத சாலம்
கீதம்பொலி கிண்கிணி தண்டை கிளர்த்தி யிட்டாள். 126

பொ - ரை: பார்வதியின் திருமேனியில் மலர்மாலைகளையும் அணிகளையும் சேர்த்து மூடியுள்ளீர்; அவள் தன் இடைக்கு என்ன நேருமோ என வருந்துவது போல ஒலிக்கும் சிலம்பும், பாதசரங்களும், இன்னிசை எழுப்பும் சிறு சதங்கையும், தண்டையும் ஆகியவற்றைப் பாதங்களில் விளங்கும்படி செய்தாள்.

### வேறு

பொருப்பினுக் கரச னீன்ற புனைமலர்க் கொம்ப னாளை
அருத்தியால் வலங்கொண் டேகி யணிமணிக் காப்புச் சாத்திக்
கருப்புர தீபஞ் சுற்றிக் கண்ணெச்சில் கழித்து நின்றாள்
திருப்பதம் பரவி முன்னே திருப்பதம் பெற்ற செல்வி. 127

பொ - ரை: அம்மையின் திருவடிகளை ஏத்திச் சிறந்த பதவியை முன் பெற்றுள்ள திருமகள், பூங்கொம்பு போன்ற பார்வதியம்மையை அன்பினால் வலஞ்செய்து, அழகிய கங்கணம் சேர்த்து, கருப்பூரச்சுடர் சுழற்றி, தீப்பார்வைக் குற்றம் கழித்து நின்றாள்.

முனிவர ரெழுவர் போந்து முகூர்த்தம்வந் துற்ற வாற்றால்
பனிவரை யரசை நோக்கிப் பாவையைக் கொணர்வா யென்ன
நனியவ னருளாற் போந்து நளிர்வரைக் குலத்து மாதர்
புனிதநா யகிமுன் கூறப் பொருக்கென வெழுந்தாண் மன்னோ. 128

பொ - ரை: முகூர்த்த வேளைவந்தபோது எழுமுனிவர் இமவானிடத்துத் தன்மகளை அழைத்துவரச்சொல்ல, அவன் வரைமகளிர் சூழ இருந்த அம்மை முன் வந்துகூற, அம்மை உடனே எழுந்தாள்.

செல்வியு மதுர வாணி தேவியு மெழுந்து போற்றி
மெல்விரற் றளிர்க்கை யேந்த வியன்வல மிடப்பால் பற்றி
எல்விரி காலை மாலை யேத்துவார் தமக்கே செல்வம்
கல்வியுங் கதியு நல்குங் கரதலத் தியற்கை காட்டி. 129

பொ - ரை: திருமகளும் கலைமகளும் எழுந்துபோற்றித் தம்கைகளை ஏந்த அம்மையார் அக்கைகளை வலத்தும் இடத்தும் தம்கைகளால் பற்றி ஒளிபெருகும் காலையும் அதுசுருங்கும் மாலையும் தம்மை ஏத்துவார்க்கே செல்வம் கல்வி மெய் உணர்வு என்பவற்றைத் தம் கரங்கள் தரும் என்னும் தன்மையை யாவர்க்கும் விளக்கினாள்.

அலத்தக முறுத்து தாளி லயிராணி மலர்க டூவப்
பலப்பல சிலம்பு தண்டை பயப்பயப் பயவென் றார்ப்பத்
திலத்தமை தூசு தாங்கச் செயமகண் மருங்கு காப்ப
நலத்தகுங் கங்கை யாதி நங்கையர் கவரி காட்ட. 130

பொ - ரை: அம்மையார் நடந்தபோது, அவர்தம் செம்பஞ்சுக் குழம்பு ஊட்டப்பெற்ற திருவடிகளில் அயிராணி மலர்களைத் தூவினள்; சிலம்பு தண்டை முதலியமை மெல்ல ஒலித்தன; திலோத்தமை பின்தானையை ஏந்திவந்தாள்; துர்க்கை பக்கத்தில் வாளேந்தி வந்தாள்; கங்கை முதலியோர் கவரி வீசினர்.

உருப்பசி களாஞ்சி தாங்க யோகினி யடைப்பை யேந்த
விருப்புறு நடைப்பா வாடை மேனகை விரிப்ப யாண்டும்
பருப்பதக் குலத்து மாதர் பனித்துளி தெறிப்ப வேதந்
திருப்பலாண் டிசைப்பத் தெய்வச் சிலதியர் சுண்ணந் தூவ. 131

பொ - ரை: ஊர்வசி களாஞ்சி ஏந்தினள்; காளி அடைப்பை தாங்கினள்; மேனகை வழியில் விரிக்கும் சேலையை விரித்துச் சென்றாள்; மலைக்குலமகளிர் எங்கும் பனிநீர் தெளித்தனர்; வேதம் பல்லாண்டிசைத்தது; தெய்வத்தோழியர் பொற்சுண்ணம் தூவினர்.

கின்னர மகளிர் பாடக் கிரியர மகளிர் வாழ்த்தப்
பன்னகர் குலத்து மாதர் பன்மணி விளக்க மேந்த
அன்னமென் பெடையு நாண வணிமலர்க் கொம்பர் நாப்பண்
பொன்னிளங் கொடிபோ லொல்கிப் பொருப்பிளம் பிடிபோற் சென்றாள்.

பொ - ரை: கின்னரமகளிர் பாடினர்; மலையர மகளிர் வாழ்த்தினர்; நாகர்குலப்பெண்கள் மணிவிளக்கு ஏந்தினர்; அன்னமும் நாணும் நடையும், பூங்கொம்பின் நடுவில் உள்ள பொற்கொடி போல மெல்ல அசைந்து, இளம்பிடி போல் அம்மை நடந்து சென்றாள்.

குலத்திரள் கொங்கை காட்டக் குணத்திரள் வடிவு காட்ட
நலத்திரள் சுமந்து தொய்யு நாண்மலர்க் கொம்பு போல
நிலத்திடை யிறைஞ்சி யேகி நீளரித் தவிசி லெம்மான்
வலப்புறத் திருந்தாள் வல்லி மதியுடன் விதிசேர்ந் தென்ன. 133

பொ - ரை: மலைகள் கொங்கையைக் குறித்தன; குணங்களின் ஈட்டம் வடிவைக்காட்டின; நல்ல மலர்களைச் சுமந்து வளையும் பூங்கொம்பு போல, நிலத்தில் இறைவனை வீழ்ந்து இறைஞ்சி எழுந்து அகன்ற சிங்காதனத்தில் ஒருவர்க்கு நன்மதியோடு நல்லூழும் சேர்ந்தாற்போல, பரமன் வலப்பக்கத்தில் அம்மை அமர்ந்தாள்.

மண்பெற்றார் சுவர்க்கம் பெற்றார் வரைபெற்றார் திரைகள் பெற்றார்
விண்பெற்றார் புவன மூன்று மிகப்பெற்றார் மகப்பெற் றாரில்
பெண்பெற்றார்க் கெய்தாப் பேறு பெற்றன னிமய வேந்தன்
கண்பெற்றா ரன்று பெற்றார் காட்சியாற் பெறும்பே றெல்லாம். 134

பொ - ரை: மண் உலகத்தவர் திருமணத்தில் வந்தமையால் மேல் உலக இன்பம் அடைந்தார்கள்; மலையகத்தினர் வெற்றியை பெற்றார்கள் - இறைவனோடு சம்பந்தம் செய்து கொண்டனர் என்பது கருத்து; தேவர்கள் மூன்று புவனங்களையும் ஒருங்கே காணப்பெற்றனர்; இமவான் பெண்பெற்றார்களுள் யாரும் எய்தாத உயர்ந்த பேற்றினைப்பெற்றான்; கண்ணுடையார் அனைவரும் அம்மையை அப்பன் வலப்பக்கத்தில் அமரக்கண்டு காட்சியான பெரும்பேற்றினைப் பெற்றனர்.

## திருமணம்

இன்னண நிகழு மேல்வை யிமயவெற் பரசி மேனை
மின்னனார் தசும்பி லேந்தும் விசும்புதோய் கங்கை நீரால்
சின்னவெண் பிறைசேர் மோலித் தேவனென் பெருமான் கஞ்சப்
பொன்னடி விளக்கிச் சார்ந்தார் பூவினால் பூசை செய்தாள். 135

பொ - ரை : இவ்வமயத்தில் மேனை கங்கைநீரால் இறைவன் திருவடியை விளக்கிச் சாந்தம் மலர்கள் சாத்தி வழிபட்டாள்.

அந்நிலை யிமய வேந்த னருந்தவக் கொழுந்தின் செங்கைக்
கன்னியம் புயத்தை முக்கட் கருணையங் கடலின் பாணி
மன்னுற வமைத்துப் போற்றி மங்கலச் சொல்லால் வாழ்த்திப்
பன்னெடும் புவன வாழ்க்கைப் பயிர்தழைத் திடநீர் வார்த்தான். 136

பொ - ரை : இமவான் பார்வதியின் கைத்தாமரையைச் சிவபிரான் திருக்கையில் பொருந்த வைத்துத் துதித்து வாழ்த்தி உலகில் இல்வாழ்க்கை நடைபெறும்படி நீர்வார்த்துக் கொடுத்தான்.

வி - கு : தாமரையை கடலின் பாணி (நீர்) யில் பொருந்தவைத்து நீர் வார்த்தான் - என்றது சொல்நயம்.

முழங்கின முரசு பேரி முழங்கின துடித டாரி
முழங்கின சுருதி வேத முழங்கின பணில நாத
முழங்கின முனிவ ராசி முழங்கின நடன கீதம்
முழங்கின குரவை யோசை முழங்கின திசைக டோறும். 137

பொ - ரை : முரசுமுதலியனவும், வேதங்களும், சங்கங்களும், முனிவர் வாழ்த்துக்களும், நடனஇசையும் மாதர்களின் குலவை ஓசையும் பலதிசைகளிலும் முழங்கின.

ஆடினர் பவுரி மேன்மே லார்த்தனர் சிரமேற் செங்கை
சூடின ரனந்தா னந்தத் துறைபடிந் தாடி யாடி
பாடினர் பரம கீதம் பரவின ரழியா வின்பம்
தேடின ரகில நாதன் திருமணங் கண்டோ ரெல்லாம். 138

பொ - ரை : திருமணம் கண்டோர் எல்லாரும் பலவகைக் கூத்தாடினர்; வாழ்த்திச்சிரமேற் கைகூப்பினர்; இன்னிசைபாடினர்; பேரின்பத்தைத் தலைப் பட்டனர்.

தாமரை யுழவன் வேதச் சடங்கெனுந் திரளேர் பூட்டி
யோமநன் னிலஞ்செய் யாக வுயர்திர வியங்கள் வித்திக்
காமரு தேனு நெய்யாங் கமழ்புனல் வார்ப்ப வார்ப்ப
மாமகப் பயிராஞ் செந்தீ வலஞ்சுழித் தெழுந்த தன்றே. 139

பொ - ரை : பிரமன் வேதச்சடங்காகிய ஏரைப்பூட்டி, ஓமஞ்செய்யிடம் விளைநிலமாக, ஓமப்பொருள்களாகிய விதையைத்தூரி, காமதேனுவின் நெய்யாகிய நீரை மேன் மேலும் சொரிய, பயிர் போன்ற செந்தீ வலஞ்சுழித்து எழுந்தது.

குணின்முர சியம்ப வொற்றை வலம்புரி குளிர வாணி
துணைவனே சடங்கு செய்யச் சுருதிமங் கலநாண் சாத்தி
இணையிலி முக்க ணெம்மா னிமயமான் மலர்க்கை பற்றி
மணநிறை கோலங் காட்டி வானவர் வாழ்த்த நின்ருர். 140

பொ - ரை : முரசு குறுந்தடியால் முழங்க, வலம்புரியும் மங்கல ஓசையை எழுப்ப, அயன் சடங்கு செய்வோனுக இருக்க, இறைவன் இறைவியின் கழுத்தில் திருமங்கலநாண் சாத்தி, அம்மையின் மலர்க்கைபற்றி திருமணக்கோலத்தைக் காட்டித் தேவர்கள் வாழ்த்தும்படி நின்றருளினர்.

பிலத்துறை வேந்த ரோரா யிரப்பெருந் தீப மேந்த
மலர்த்திரு மகள்கொண் டாட வாணிமங் களங்கள் பாடக்
குலக்கிரி மகள்பின் னேகக் கொழுந்தழல் வலங்கொண் டேகி
நலத்தகு பொரிக டூவி நயம்பெரு வேள்வி யாற்றி. 141

பொ - ரை : நாகருலக இறைவன் ஆயிரம் மணி விளக்கு ஏந்தி, திருமகளும் கலைமகளும் மங்கலம் பாட, பார்வதி பின்செல்ல, வேள்வி அங்கியை வலம் செய்து நல்ல பொரிகளை அவிசாக இட்டு வேள்விக்கடனை முடித்தான் இறைவன்.

செப்பொடு பணைத்த கொங்கை திருப்புயங் காணுந் தோறும்
கொப்பொடும் பொருவாட் கண்ணாள் குலத்தொடு பணைப்புக் காட்டக்
கைப்பிடித் தருளுங் கையாற் கால்பிடித் தம்மி சேர்த்தி
மெய்ப்புகழ் வசிட்டன் றேவி விண்ணிடைப் பரவக் காட்டி. 142

பொ - ரை : செப்புக் குடத்தினும் பருத்த தன் கொங்கை, கொப்போடு மோதும் கண்ணையுடைய அம்மை சிவபிரான் திருப்புயங்களைக் காணுந்தொறும் தன்குலமாகிய மலைகளினும் பூரிப்புக்கொள்ள, கையைப்பிடித்த கையால் அம்மையின் பாதங்களைப்பற்றி அம்மி மிதிக்கச்செய்து, அப்போது, ஆகாயத்தில் தோன்றித் துதித்து நின்ற அருந்ததியை அம்மைக்குக்காட்டினன் முதல்வன்.

மருமலர் விதான வேள்வி மண்டபங் கடந்துள் போகித்
திருமண வறையின் மேவித் தேவியுந் தாமு மாக
அருண்மணக் கோலக் காட்சி யருளிவீற் றிருந்தார் மன்னே
கருதுவார் கருதும் வண்ணங் காட்சிதந் தருளும் வள்ளல். 143

பொ - ரை : மணமுள்ள மலர்களால் அழகுபெறும் மேற்கட்டி அமைந்த திருமணமண்டபத்தின் நீங்கி, திருமண அறையிற்சென்று தேவியும் தானும் இடம் வலமாகத் திருமணக்காட்சியை அருளி வீற்றிருந்தான் இறைவன்; அவன் தன்னைக் கருதுவார் கருத்தின்படி அருள் உருக்கொண்டு காட்சி தருபவன் அல்லனே !

வருக்கையின் சுளையும் பாலும் வாழைமென் கனியும் பாகும்
அருத்திமாம் பழமுந் தேனு மமிழ்தெனத் திருத்தி யன்பால்
பருப்பதத் திறைவன் செம்பொற் பாசனத் தமைப்ப நாதர்
திருக்கைதொட் டுவந்தோ மென்றார் செகமெலா நிறைந்த தம்மா. 144

பொ - ரை: இமவான் பொற்கிண்ணத்தில் மதுவருக்கம் கொண்டுவர, இறைவன் கைதொட்டருளி உவந்தோம் என்றான்; அது மூவுலகிற்கும் இன்பம் ஊட்டிற்று. அருத்தி - ஆசை.

வாசனை சுகந்தம் பன்னீர் மணங்கெழு தெய்வச் சாந்தம்
ஈசனெம் பெருமான் முன்ன ரியற்றின னுவப்பப் பின்னர்ப்
பாசன நிமல சேடம் பரிசனத் தவர்க ளேந்தத்
தேசன தருளா லுய்த்தான் திருமணக் குழுவுக் கெல்லாம். 145

பொ - ரை: மணமுள்ளமாலை, பன்னீர், சந்தனம் என்பவற்றையும் இறைவனுக்கு இமவான் முன்னர்ச்சேர்ப்பித்து, அவற்றின் எஞ்சிய தூய பாகங்களைத் தன்பரிசனங்கள் ஏந்தி உடன்வரத் திருமணத்தில் வந்தோர் அனைவருக்கும் பகிர்ந்து அளித்தான்.

நிமலர்பாற் கழித்த சேட நின்மல வுணவைத் தேவர்
அமரர்கோன் முனிவர் பூத ருருத்திர ரயன்மா லாதி
இமவரைக் கிறைவன் மேனை யேனைய சுற்றத் தாரும்
திமிலமுற் றருந்திச் சென்னி தெளித்தனர் களித்தார் மன்னோ. 146

பொ - ரை: அங்ஙனம் பகிர்ந்த சேடங்களை எல்லோரும் பெருமுழக்குடன் பெற்று மகிழ்ந்தனர்.

சொல்லற நின்றார் வீறுந் துறவறத் திருந்தார் பேறும்
இல்லறம் புரிவார் தம்பா லியைவதா லிதுவே யார்க்கும்
நல்லற மெனவே வானு ஞாலமுந் தெளியக் காட்டி
மெல்லற லனைய கூந்தன் மணந்துவீற் றிருந்தா னெங்கோன். 147

பொ - ரை: சொல்லின்றியுள்ள மோனிகள், துறவிகள் என்பாரது சிறப்பும் பேறும் இல்லறத்தாரையே சார்ந்தவை ஆதலால், இல்லறமே நல்லறம் என உலகிற்குக்காட்டி இறைவன் அம்மையை மணந்து வீற்றிருந்தான்.

மாமனூர் பரவத் தெய்வ மலையாட்டி மகிழ வைகிச்
சோமனூர் புனைந்த வேணித் துங்கனா ரமரர் வேண்டக்
காமனா ராவி மீட்டுக் கவுரியுந் தாமு மாகப்
பூமனா ரணனும் போற்றக் கயிலையம் பொருப்பிற் போந்தார். 148

பொ - ரை: இமவானும் மேனையும் தொழுது மகிழ அங்கு இருந்து, மதியினையும் அந்திமாலையையும் அணிந்த சடைமுடிக்கடவுள் தேவர்கள் வேண்ட மன்மதனை உயிர்ப்பித்து, அம்மையும் தானுமாக அயன்மால் போற்றத் திருக்கயிலைக்கு வந்துசேர்ந்தனர்.

திருப்பொலி மழுவா ளங்கைச் சிவபிரான் கயிலை மேவி
மருப்பொலி குழலுந் தாமு மடங்கலா சனத்து வைகி
உருத்திர ரயன்மா லாதி யும்பர்மா முனிவர்க் கெல்லாம்
விருப்பொடு சிறப்பு நல்கி விடைகொடுத் தருளப் போந்தார். 149

பொ - ரை: திருக்கயிலையில் சிங்காதனத்தில் உமையொரு பாகனுய் அமர்ந்து உருத்திரர் முதலாயினருக்குச் சிறப்பும் விடையும் நல்க அவரவர் தத்தம் இடம்புகுந்தார்கள்.

கயிலைமால் வரையின் மேய கண்ணுதற் கருணை மேகம்
சயிலமின் னெருபான் மேவித் தண்ணளி பொழித லாலே
பயில்வன வூர்வ நிற்ப பறப்பன நடப்ப வாதி
உயிரெலாம் பயிரா யீரே யுலகெலா ந் தழைத்த மாதோ. 150

பொ - ரை: திருக்கயிலையில் கண் சுமந்த நெற்றிக்கடவுளாகிய மேகம் உமையாகிய மின்னலை ஒருபாற்கொண்டு தண்ணெளி சொரிதலால் உலகெலாம் பல்வகை உயிர்களாகிய பயிர்கள் செழித்து வளரல் ஆயின.

மவுன நாண் மவுன முற்றுர் மடந்தையை மண ந்த ஞான்றே
பவனமேல் விண்மேன் மண்மேற் பரந்தபா தலமேன் மற்றைப்
புவனமே லுள்ளோ ரெல்லாம் புவனபோ கங்கள் பெற்றுர்
சிவன து செயலே யல்லாற் செயலுண்டோ வுலகுக் கெல்லாம். 151

பொ - ரை: இறைவன் யோகிருந்தபோது உயிர்கள் இணைவிழைச்சின்றி இருந்தன; அம்மையை மணந்தகாலத்து தேவர் உலகம் முதல் எங்கும் உள்ள உயிர்கள் போகம் நிரம்பப்பெற்றன; உலகுக்கு இறைவன் செயலல்லாமல் வேறு செயல் இல்லை அன்றே.

## திருமுருகன் திருவவதாரம்

சூரின லலக்க ணெய்தித் துயர்பெரி தாற்று ராகி
மேருவின் மறைந்து வைகும் விரிஞ்சன்மான் முதலாம் விண்ணேர்
காரியல் கண்டத் தண்ணல் கயிலையின் முறையிட் டார்க்கு
நேரிழை யொருபால் வைகு நின்மலன் கருணை கூர்ந்து. 152

பொ - ரை: சூரபதுமனல் துயர்எய்தி அதனைத்தாங்க மாட்டாராய் மேருவில் மறைந்து வாழ்ந்த அயன்மால் முதலிய தேவர்கள் திருநீலகண்டனுகிய சிவபிரானுக்குத் திருக்கயிலையிற் சென்று முறையிட, உமையொருபாகனுகிய அம்முதல்வன் கருணை கூர்ந்தான்.

முந்திரா சியமு மாக மூவிரு முகமாய்த் தோன்றிச்
செந்தழற் பொறிக ளாறு தந்தனர் தேவ ருய்ய
வந்தமாப் பொறியைக் காலு மங்கியுங் கங்கை சேர்ப்ப
உந்துவா னதிகொண் டேகிச் சரவணத் துய்த்த தன்றே. 153

பொ-ரை: முற்பட்ட மறைவான தம் ஆறுமுகங்களும் தோன்றவிளங்கி, நெற்றிக்கண்கள்தோறும் ஒவ்வொரு பொறியாக ஆறுநெருப்புப்பொறிகளை இறைவன் தந்தனன், தேவர் உய்யும்படி; அவற்றை வாயுவும் அங்கியும்கங்கையிற் சேர்க்க, கங்கைசரவணப்பொய்கையிற் சேர்த்தது.

இமயமேற் சரவணப்பூந் தடத்தினி லெய்தி வாசக்
கமலமேற் பொறிக ளாறுங் கண்ணுத லருளி னாலே
யமர்தரு குழவி யாறு யாறுமீன் முலைப்பா லுண்டு
தமரநீ ருலகும் வானுந் தழைத்திட வளருங் காலை. 154

பொ-ரை: இமயத்திற் சரவணப் பொய்கையில் ஒருதாமரைமேல் அப் பொறிகள் ஆறும் சிவபிரான் திருவருளால் ஆறுகுழவிகளாய்த் தோன்றிக் கார்த்திகை மகளிர் அறுவர் முலைப்பால் உண்டு, முழக்கஞ்செய்யும் கடல் சூழ்ந்த நிலனும் வானும் உய்யும்படி வளர்ந்தன.

எந்தையா ருடன்பூ வாவி யெய்தினு ளிமயச் செல்வி
மைந்தரென் றெடுப்ப வாறு வடிவமும் படிவ மொன்றாய்
அந்தமார் முகங்க ளாறு யம்பிகை முலைப்பா லுண்டு
கந்தவே ளெனப்பேர் கொண்டு கயிலையின் வளர்ந்தான் மன்னோ. 155

பொ-ரை: பின் ஒருநாள் இறைவனோடு இறைவி சரவணப்பொய்கையிற் சென்று, குழவிகளைத் தன்மைந்தர் என்று எடுத்து அணைத்தபோது அழகிய முகங்கள் ஆறு உள்ள ஒரே வடிவமாய் அமைந்து, அம்பிகை கறந்து கொடுத்த முலைப்பால் உண்டு கந்தவேள் என்னும் திருப்பெயருடன் திருக்கயிலையில் கொண்டுவரப்பெற்று வளர்வதானான்.

அன்னவ னண்ட கூட மலைத்தெழு தகர்மேற் றாவி
நன்னவ வீரர்சூழ மேடமேன் ஞாயி றென்னப்
பொன்னமர் பொருப்பும் பொன்னாட் டிறைவனும் புத்தேள் யாரும்
வெந்நிடக் கதிந டாத்தி விதிசிறை யமைத்து மாற்றி. 156

பொ-ரை: அக் கந்தப்பெருமான் நாரதர்செய்த வேள்வியில் எழுந்து உலகம் அனைத்தையும் துன்புறுத்திய ஆட்டுக்கிடாவினை ஊர்தியாகக் கொண்டு, தனது தம்பியாராகிய ஒன்பது வீரர்கள் சூழ, மேடராசியில் உச்சம்பெற்று விளங்கும் ஞாயிற்றைப்போலத் திகழ்ந்து நடத்தி, மேருவும், இந்திரனும், தேவரும் புறங்காட்டும்படி போர்செய்து, பின் அயனைச்சிறையிலிட்டு, இறைவன் வேண்டுகோளால் அவனைச் சிறையினின்று விடுவித்தான்.

மிறைபுரி கொடுஞ்சூ ரிட்ட விண்ணவர் சிறையை மீட்பான்
முறையிடு மகவா னாதி முதல்வர்பா லிரங்கி முக்கட்
கறைமிடற் றண்ண லேவக் கண்களா யிரத்தோ னான
சிறைமயி லூர்ந்து செந்தீச் செல்வனுஞ் சேவ லேந்தி. 157

பொ - ரை: அச்சம் விளைக்கும் கொடிய சூரன் தேவர்களைச் சிறைப்படுத்த, அவர்களை மீட்டற் பொருட்டு இந்திரன் முதலியோர் முக்கட்செல்வரை வேண்டினர்; அவர் இரக்கங்காட்டி திருமுருகனை ஏவ இந்திரனை மயிலாகவும், அங்கியைச் சேவற்கொடியாகவும் கொண்டான் முருகன்.

உருத்திரர் கொடுத்த தானை பதினொரு கரத்து மோங்க
அருத்தியா லகில நாத னருளும்வே லொருகை தாங்கிக்
கிருத்திமத் தானை வெள்ளங் கிளர்தரத் துணைவர் சூழ
மருத்துவர் முதலோர் நோய்க்கு மருத்துவ னெனவே போந்து. 158

பொ - ரை: பதினோர் உருத்திரர் ஆயுதங்களாகிவர அவர்களைப்பதினொரு கைகளில் ஏந்தி பரமசிவன் அன்பாற் கொடுத்த சத்திவேலை மற்றொரு கையில் ஏந்தி, பூதங்களாகிய சேனைகள் சூழ, துணைவர்களாகிய இலக்கத்தொன்பது வீரர் உடன்வர அச்சுவினிதேவர் முதலியோர் மருத்துவர் முதலியோராக உடன் வரச்சென்று.

வி - கு: கிருத்திமம் - பூதம். தானை - ஆயுதம், சேனை.

வன்கடல் சுவற்றிக் குன்ற மெறிந்துவல் லசுரர் சேனைத்
தென்கட லனைத்துஞ் செவ்வேல் வடவனற் கீந்து சூத
நன்கடல் புரிந்து வீழ்த்து நனிகட வுளரை மீட்டுப்
பின்கடன் மிசையோர் பானுப் பிறையுட னுதித்தா லென்ன. 159

பொ - ரை: கந்தப்பெருமான் தாரகன் சேனையாகிய வலிய கடலை வற்றச் செய்து, கிரௌஞ்சத்தை அழித்து, தென்கடலை வடவாமுக அங்கிக்கு வேல் கொடுக்க, மாமரமாய் நின்ற சூரபதுமனுடன் நன்குபோர்புரிந்து, தோற்கச் செய்து, தேவர்களை சிறைமீட்டான். பின் நீலக்கடலில் சூரியன் பிறையுடன் தோன்றிறைற்போல,

மரகதக் கலாப துங்க மணியணி விழிம யூரக்
குரகத முகைத்து வெண்பாற் குக்குடத் துவச மேந்திச்
சுரர்குழாத் தேகிச் செந்தூர் துறையெழீஇத் திரிகூ டத்துத்
தரணிபீ டத்து நீங்காத் தந்தையார் பாதம் போற்றி. 160

பொ - ரை: பச்சைத் தோகையும் உயர்ந்த மணிபோன்று அழகிய கண்களும் கொண்ட மயில் ஊர்தியைச் செலுத்தி, வெண்ணிறமுள்ள கோழிக் கொடியை உயர்த்தி, தேவர்குழுவுடன் திருச்செந்தூர் வந்து திரிகூடத்தில் தரணி பீடத்தில் உள்ள சிவபிரான் திருவடிகளை அருச்சித்தான் முருகன்.

புரந்தரன் மகளை வெற்பின் புள்ளிமான் மகளை வேட்டுப்
பரங்கிரி தணியன் மேவிப் பரவுகுன் றிடந்தோ றுடி
வரங்கெழு கயிலை நண்ணிக் கந்தவெற் புறைதன் மான
அரன்றிரி கூடம் போற்றி யிலஞ்சியி லமர்ந்தா னையன். 161

பொ - ரை : திருப்பரங்குன்றம் மேவி இந்திரன் மகளையும், தணிகைமலை மேவி வள்ளியம்மையினையும் மணந்து, குன்றுதோறும் அன்பர்க்கு அருள் புரிந்து, சிறந்த திருக்கயிலை எய்திப் பின் கந்தவெற்பில் உறைந்ததுபோலத் திரிகூடம் தரிசித்து இலஞ்சியில் எழுந்தருளினன் பெருமான்.

தேவர்தந் தேவர் தேவன் திருமணப் பொலிவீ தென்று
தாபதர்க் குணர்த்தப் பின்னுந் தமிழ்முனி தென்பாற் சென்று
மேவரும் புதுமை யாவுந் தொகையுற விளம்பா நின்றுன்
ஆவலின் விரிவா யெங்கட் கருளென வறைவான் சூதன். 162

பொ - ரை: மகாதேவனது திருமணச் சிறப்பு இது என்று சூதர் நைமி சாரணிய முனிவர்களுக்குக் கூற, தமிழ் முனிவன் தெற்கே வந்தவரலாற்றைச் சுருங்கக் கூறினீர், விரிவாகக் கூறுக என ஆவலோடு கேட்கத் தொடர்ந்து கூறுவாராயினர்.

திருமணச் சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1271

# மாயோன் பரமனுன சருக்கம்

ஐந்துநூற் றிரட்டியுட னிருநா லண்டம்
அரசுசெயுஞ் சூர்மாய்ப்ப அடல்வே லேந்திச்
செந்தின்மா நகரில்வரு குமர வேட்குச்
செங்கண்மா லயன்தேவர் சபையி னூடே
விந்தைவான் சுரர்குருவாய் புதைத்துப் போற்றி
விண்ணப்பஞ் செய்ததெனத் திருக்குற் றாலத்
தெந்தைமால் வடிவுசிவ வடிவ மாக
விருந்தருளு மகிமையெடுத் திசைப்ப தானன். 1

பொ - ரை: ஆயிரத்தெட்டு அண்டங்களை ஆண்ட சூரனை அழிக்க வெற்றி வேல் ஏந்திச் செந்தில் வந்து தங்கிய குமாரக் கடவுளுக்கு, மால் அயன் தேவர் இருந்த அவையில், தேவகுருவாகிய வியாழன் வாய்புதைத்துத் திருமுருகனைப் போற்றி அசுரர் வரலாற்றை உரைத்தனர்; அதுபோல, இங்குச் சிறந்த பெரு முனிவர் சபையில் சூதமுனிவர் சிவத்தியானம் நீங்காதவராய், திருக்குற்றால முதல்வனது மால்வடிவு சிவவடிவமாக மாறிய வரலாற்றை எடுத்துக்கூறல் உற்றார்.

கற்றாரும் பலகலைநூற் கவிவல் லாரும்
கதிபுகன்முத் தழலுடையீர் கயிலைச் சாரல்
முற்றாலி னுயர்ந்தகுறும் பலவின் மேவு
முதலைப்போ லுயர்கருணை முதலு மாதிக்
குற்றாலம் போலுயர்ந்த தலமுஞ் சைவக்
குறுமுனிபோன் மாதவனுந் திரிகூ டத்து
வற்றாத வடவருவி நிகர்க்குந் தெய்வ
வரைநதியுந் திரிபுவன வரையி லுண்டோ. 2

பொ - ரை: பலகலை நூல்களைக் கற்றாரும், கற்றுக்கவிபாட வல்லாரும் கதி எனப்புகலும் தகுதி வாய்ந்த தாபதர்களே, திருக்கயிலைச்சாரலிலுள்ள ஆல மரம் போன்றுயர்ந்த குறும்பலா அடியில் விரும்பி எழுந்தருளும் சிவலிங்க மூர்த்தியைப் போன்ற மூர்த்தியும் திருக்குற்றாலம் போன்ற சிறந்த தலமும் அகத்தியர் போன்ற முனிவரும், திரிகூடத்து வற்றாது ஓடும் வடவருவியைப் போன்றதொரு மலையருவியும் மூவுலகிலும் இல்லை.

மூவுலகும் பனிவரைமேன் மொய்த்த தாலே
முதியதிசை தெற்குயர்ந்து வடபாற் றாழ்ந்த
பூவுலகின் பெருங்கோட்டந் தவிர்க்க வேண்டிப்
புரந்தரன்மா லயன்முதலாம் வானோர் சங்கம்

யாவுமெதிர் நிற்கவுநீ போதா யென்ன
எம்பிரான் பிறைமவுலித் தம்பி ரானும்
தேவர்பிரான் திருவாக்கா லருளிச் செய்தான்
சிறியதொரு குறுமுனிவன் பெருமை யம்மா. 3

பொ - ரை: இமயமலையில் மூவுலகும் வந்து நெருங்கப் பழைய தெற்கு உயர்ந்து வடக்குத்தாழ்ந்து பூவுலகம் கோணியது; அப்பொழுது வடக்கே தேவர்குழாம் முழுவதும் ஒருங்கே இருப்பவும் அதைச் சமன்செய்ய அகத்திய னரை இறைவன் தெற்கே அனுப்பினன் எனின் அம்முனிவன் பெருமை அளத் தற்கு உரியதோ?

விரிகூட விரித்ததமிழ் முனிக்கு நாதன்
மிக்கபுடார்ச் சுனபுரத்து மாலா மெம்மைப்
புரிகூட முடித்தசடைப் பரம னுக்கிப்
பூசைசெய்து வதுவைநடங் காண்பா யென்ன
அரிகூட வயன்றேடிக் காணொ ணாத
அண்ணலார் திருவாக்கா லருளிச் செய்த
திரிகூட வரைநோக்கிச் சிந்தைகூடச்
செய்தவமுங் கைகூடச் செல்லு கின்றான். 4

பொ - ரை: தொகை வகைகளோடு விரிவுஞ்சேரும்படி தமிழ் இலக்கணம் வகுத்த அகத்தியருக்கு மேன்மை பொருந்திய புடார்ச்சுன புரத்துத் திருமாலாக எழுந்தருளும் எம்மை முறுக்குச் சேரும்படி சடையாக முடித்த பரசிவவடிவ மாக்கி வழிபட்டுத் திருமணமும் காண்க என, அரியோடு அயன் காணமாட்டாத சிவபிரான் திருவாய் மலர்ந்த திரிகூடவரையை நோக்கி முன் நினைவுசெல்ல முன்செய்த தவப்பயனும் ஒருங்கு சேர்தலால் அம்முனிவர் செல்கின்றார்.

வேறு

வரதனரு ளாலிமய மலைகடந்து கலைகடந்த மலைய யோகி
பரதனுறை கருமகண்ட மொன்பதுபா கத்திலெண்மர் பாக நீக்கி
விரதநெறிக் குமரிகண்ட மாயிரம்யோ சனைக்குள்வந்து விசையத் தண்டம்
கரதலத்து மணிவிளக்காக் கவுஞ்சவரை யிருட்படலங் கடந்து போகி. 5

பொ - ரை: கலைகளை உணர்ந்த அகத்தியர் திருவருளால் முன்னர் இமயத்தின் எல்லையை நீங்கி, பரதக்கண்டத்தின் ஒன்பது பாகத்தில் எண்மர் பாகம்நீங்கி, தவநெறிக்குப் பொருந்திய குமரிக்கண்டம் ஆயிரம் யோசனைப் பரப் பிற்குள் வந்து, அங்கிருந்த கிரௌஞ்சமலையின் வஞ்சனையாகிய இருளைத் தமது யோகதண்டமாகிய விளக்கின் உதவியால் கடந்தார்.

எந்தைகும ரப்பெருமா னேவுநெடும் படைவேலா லிமைப்பி னீருச்
சிந்திடுதி யெனச்சாபம் வரைக்கமைத்துக் குடுமிதொறுந் தெய்வச் சாபக்
கந்தரஞ்சேர் கேதார வரையணுகிச் சிவபெருமான் கழல்கள் போற்றி
மைந்தனுந்தன் தேவியும்வாழ் விதர்ப்பநா டணைந்துவளர் காசி மன்னி. 6

பொ - ரை: குமரக்கடவுள் வேலால் ஈறு எய்துகெனக் கிரௌஞ்சத்தைச் சபித்து, இந்திரதனுசு காட்டும் மேகம் பொருந்திய திருக்கேதாரம் சேர்ந்து சிவ வழிபாடு செய்தார்; பின், அம்மையும் குமாரக்கடவுளும் விளங்கும் விதர்ப்பம் அடைந்து காசியில் தங்கினர்.

வி - கு: சாபம் - வில். கந்தரம் - மேகம்.

மேருவுடன் பணைப்பாகி யாழ்முனிவன் புணர்ப்பதனல் விந்தஞ் சோம
சூரியரை மடுத்துலகி னெறிதடுத்துக் குறுமுனியுந் துன்ன தோங்கி
நேரியர்க்கும் பூரியர்க்கு மூன்றிரண்டொன் றெனத்தேரு நெறியுந் தீர்த்துச்
சீரியரல் லார்க்குவந்த செல்வம்போ லிறுமாந்து திமிர்ந்த தன்றே. 7

பொ - ரை: நாரத முனிவர் சூழ்ச்சியால் விந்தமலை மேருவினும் பருத்து, சந்திர சூரியர் செலவைத் தடுத்து, மற்றையோரும் அகத்தியரும் தெற்கே வருவதற்கு உரிய வழியை விடாதாகிக் கீழோரெய்திய செல்வத்தைப்போல, இறுமாந்து நின்றது; மேலோரும் மேலோரும் எதிர்ப்பட்டால், இருவரும் வழிவிலகுதலால் மூன்றுவழி உளவாகும்; மேலோரும் கீழோரும் எதிர்ப்பட்டால், மேலோர் மட்டும் வழிவிலகுதலால் இருவழி உளவாகும்; கீழோரும் கீழோரும் எதிர்ப்பட்டால் இருவரும் வழிவிலகாமையால் ஒரேவழிதான் உண்டு என்னும் உலக வழக்கையும் தீர்த்து, விந்தமலை விலகிச்செல்லவும் இடம் கொடுக்கவில்லை; இவ்வாறு திமிர் கொண்டு நிமிர்ந்தது.

கரவிந்த வரைவளர்ந்த தெவ்வளவோ வவ்வளவுங் கையை நீட்டி
அரவிந்த மசலமிசைக் கவித்ததெனக் குடுமிபற்றி யவனி தாழ்ப்பத்
தரவிந்த ருறைமனத்தா யுய்வதரு ளென்று சென்னி தாழ்த்த தம்மா
வரவிந்த முறையெனமே லவர்முன்னே யறிவர்வந்தா லறிவர் கீழோர். 8

பொ - ரை: கள்ளத்தையுடைய விந்திய மலையின் உச்சிவரை திருக்கையை நீட்டி அதன் உச்சியில் தாமரை மலர்ந்தாற்போலப் பற்றி நிலத்தின்கீழ் தாழும்படி செய்தார் முனிவர்; தகுதியுள்ள சந்திரனை முடிக்கணிந்த முதல்வனை உளங்கொண்ட முனிவரே, யான் இனி எப்போது எழுவது எனத் தலைவணங்கி வினவிற்று விந்தம்; கீழோர் யாம் வருவது இம்முறைதான் என மேற்செல்லும் அறிவர் வரும்போதுதான், தம் தாழ்வை உணர்வார்கள்.

செம்புவரை தனிலேகி வெள்ளிவரைக் கிவ்வழிநான் செல்லுங் காறும்
வெம்புவரைக் குடுமிபடிந் திவ்வாறு கிடத்தியென விளம்பி யாதிச்
சம்புவரை நாண்டுகிலாஞ் சாதிமிரு காதிகள்சஞ் சரிக்குங் கான்போய்
நம்புவரைச் சலம்வருத்தும் வில்வலன்வா தாவிவன நண்ணி னுனல். 9

பொ - ரை: தாமிரவருணி பாயும் பொதியஞ்சேர்ந்து, திருக்கயிலைக்கு இவ்வழி யான் திரும்பும்வரை சுடும் மூங்கில்களையுடைய உன் சென்னி தாழ்ந்து இங்ஙனமே கிடக்க எனச்சொல்லி ஆதியாகிய சிவபிரானுடைய அரைநாணும் உடையும் ஆகிய பாம்பின் இனமும் புலியாதி மிருகங்களும் உலவும் காடுகடந்து, நம்புவோரைச் சலத்தால் வருத்தும் வில்வலன் வாதாவி தங்கியிருந்த காட்டிற்கு வந்தார்.

உருத்திரா வணந்தனக்கு வருவதுண ரான்வருவ துணர்ந்து மேனாள்
விருத்திரா சுரனெனுநம் மேலோனை முடிப்பதற்கா வேலை யுண்ட
குருத்திரா விடமுனியை வெல்லவிது தருணமெனக் குறிப்பி னோர்ந்து
கருத்திரா வணமிருண்ட வில்வலன்மெய்த் தவவேடங் கரவிற் பூண்டான். 10

பொ-ரை: தன் நோக்கம் இரவின் நிறம்போல இருண்ட வில்வலன் ஒரு சோலையின் மெய்த்தவ வேடத்தை மேற்கொண்டான்; அவன் தனக்குக் கேடு வருவதை உணரவில்லை; பின் விளைவதை முன் உணர்ந்து விருத்திராசுரனை அழித்தற்பொருட்டுக் கடலையுண்ட குருவாகிய தமிழ் முனியை வெல்ல இது சமயம் எனக் குறித்து ஆய்ந்து தவவேடம் பூண்டான்.

வி-கு: உருத்து இராவணம் - உருக்கொண்டு இராதபடி; அஃதாவது கேடு.

குறுமுனிமுன் போய்விருந்து விளம்பியொரு சாலையுய்த்துக் குறைதீ ரன்ன
மறுமுனிதண் டுலத்தமைத்துக் கருனைவா தாவிதனை மறிசெய் தாக்கி
உறுமுனிவு விருப்பகன்ற னுண்டதற்பி னயன் வரத்தா லொருகாற் கூவக்
கறுமுனிமுன் கறியானன் மறியாகி முனியுதரங் கலக்கா நின்றான். 11

பொ-ரை: அகத்தியரை விருந்தினராக உடன்படுவித்து, ஒரு பன்ன சாலையில் தங்கச்செய்து, குறைவில்லாத சோற்றைக் குற்றம் இல்லாத அரிசியால் சமைத்து, தன் தம்பியாகிய வாதாவியை ஆடாக்கி அவனைக்கொண்டு பொரிக் கறி சமைத்து, விருப்பு வெறுப்பு நீங்கிய முனிவர் உண்டதற்பின், பிரமன் கொடுத்த வரம் நினைந்து வாதாவி என ஒருமுறை அழைத்தான்; கோபிக்கவல்ல முனியால் முன் கறியாக உண்ணப்பட்டவன் மீளவும் ஆடாகி முனிவர் வயிற் றைக் கலக்கினான். கருனை - பொரிக்கறி.

அன்னவன்வஞ் சனையோர்ந்து பரமன்வரத் தான்முனிவ னகங்கை யாலே
தன்னகடு தைவரலுந் தலைவனுண்ட காளமெனச் சமித்தான் பின்னோன்
முன்னவன்வெஞ் செருப்பயில முன்னுதலுந் தருப்பையினான் முடித்து வீட்டித்
துன்னுபுனற் கோதமியிற் படிந்தாடி மல்லிகார்ச் சுனமும் போற்றி. 12

பொ-ரை: அவன் வஞ்சனையை முனிவர் அறிந்து சிவனை நினைந்து உள்ளங்கையால் தனது வயிற்றைத் தடவ, பின்னவன் சீரணித்து இறந்தான்; மூத்தவன் அஃது அறிந்து முனிவரைக்கொல்ல வந்தபோது ஒரு தருப்பையினால் அவனை அழித்துக் கோதமி ஆற்றில் முழுகி மல்லிகாரச்சுனம் வழிபட்டார். கோதமி - கோதாவரி நதி.

ஆனதுங்க பத்திரிநன் னதிபடிந்து காஞ்சிநக ரருணை போற்றி
ஞானதுங்கர் முத்தாறு திருமுதுகுன் றமும்பரவி நயப்பா லேகும்
பீனகும்ப சம்பவனை வில்வலன்வா தாவிகொடும் பிரமச் சாயை
கானமெங்குந் தொடர்ந்துதொடர்ந் தலைத்தா லாறலைக்குங் கள்வர் போல.

பொ-ரை: துங்கபத்திரை ஆற்றில் முழுகி, காஞ்சி, திரு அருணை, மணி முத்தாறு வலஞ்செய்யும் திருமுதுகுன்றம் என்பவற்றைக் கண்டு தொழுதுசென்ற

அகத்தியரை வில்வலன் வாதாவி என்போர் சாயைகள் வழிப்பறிசெய்யும் கள்வர் போல் தொடர்ந்து இடையூறு விளைத்தன.

வி - கு: பீனம் - பருமை. துங்கர் - உயர்ச்சியுடைய அகத்தியர்.

அங்கிருந்து மறைச்சிறுவ ரிருவர்போ லுருவெடுக்கு மடுக்கு நீங்கும்
எங்கிருந்து மிகல்விளைக்கும் பழிகுறிக்கும் வழிமறிக்கு மிவைக டீர்ப்பான்
கொங்கிருந்து சிவபரனைக் குறுமுனிபூ சனைபுரிந்தான் குலிச வேந்தன்
பொங்கிருந்தண் காவிரிக்காப் புகலிதனிற் கயமுகனைப் பூசை செய்வான். 14

பொ - ரை: அந்தணச் சிறுவர்போல் குறுகி நீங்கும்; போர் செய்ய முன் வரும்; பழி குறித்துச் சொல்லும்; வழி மறிக்கும். இப்படி வந்த பிரமக் கொலைப் பாவம் தீரவேண்டிக் கொங்கு தேயத்தில் குடகில் இருந்து சிவபூசை செய்யத் தொடங்கினர் முனிவர்; அவ்வமயம் இந்திரன் சீகாழியில் ஒரு சோலை வளர வேண்டி விநாயகரைப் பூசித்தான். கா - சோலை.

வேறு

ஆவினி லைந்துப லோதக மைந்தோ டைவகைத் திரவிய மைவகை யமிர்தம்
நாவிம தங்கமழ் சாந்தமு மாட்டி நற்கலை பூண்மலர் மாலை யணிந்து
தூவிய பாளித பாயச மன்னஞ் சுவைதரு மோதகம் வடையவல் கன்னல்
மேவிய பண்ணிய முப்பழ மப்ப மிக்கநி வேதன மொக்க வமைத்து. 15

பொ - ரை: பஞ்சகௌவியம், ஐவகைப்பழச்சாறு, ஐவகைப்பொருள்கள், பஞ்சாமிருதம், கஸ்தூரி கமழும் சந்தனம் இவற்றால் ஆட்டி, புத்தாடை, அணிகள், மலர்மாலை என்பவற்றைச் சாத்தி, தூய சர்க்கரைசேர்ந்த பாயசம், அன்னம், சுவையுள்ள மோதகம், வடை, அவல், சருக்கரை, பலவகைப் பண்ணியங்கள், முப்பழம், அப்பம் என்னும் உயர்ந்த நிவேதனங்களை ஒருங்கே அமைத்து.

வி - கு: பாளிதம் - கண்ட சருக்கரை.

தூபமு டன்பல தீப மியற்றிச் சோதி தரும்படி மக்கல மேந்தி
மாபல சத்திர சாமர மேந்தி மறைபயி லாயிர நாமமு மோதித்
தாபன மந்திர வோம மியற்றிச் சயசய சயவென வானவர் வாழ்த்தத்
தீபமெ னுங்கய மாமுக வாழ்வைச் செஞ்சர ணிற்சர ணென்று பணிந்தான்.

பொ - ரை: மணங்கமழ்புகை, பலவகை விளக்குச் சுடர்கள், விளக்க மாகிய கண்ணாடி இவற்றைக் காட்டி, சிறந்த பலவாகிய குடை, சாமரம் என்பவற்றை ஏந்தி, ஆயிரம் பெயர் சொல்லிப் பூத்தூவி, ஓமத்தீயில் தாபித்து வழிபட்டுத் தேவர்கள் வெல்க வெல்க என வெற்றிகூற ஒளிவடிவாகிய ஆனைமுகக் கடவுளைத்தொழுது அவர்தம் பாதங்களில் அடைக்கலம் என வீழ்ந்து இறைஞ்சினன்.

வி - கு: படிமக்கலம் - கண்ணாடி.

படலையின் மலரறு கணிபவ சரணம் பனிவரை மகள்பெறு தனிமுதல் சரணம்
நடமிடு பரிபுர பதயுக சரண நதிபதி நிதிபதி யதிபதி சரணம்
கடன்மடை யெனவரு மதமலை சரணங் கயமுக நிசிசரன் வயவரி சரணம்
குடநிகர் தடவயி றுடையவ சரணங் குணதர சிவசுத கணபதி சரணம். 17

பொ - ரை: மலர்மாலை அறுகு அணிபவனே, பார்வதி பெற்ற தனி முதல்வனே, திருக்கூத்தியற்றும் சிலம்பணி சேவடியுடையவனே, ஆறு, செல்வம் என்பவற்றுக்குத் தலைவனே, மதசலம் ஒழுக்கும் மலைபோன்றவனே, கயமுக அசுரனை வதைத்த சிங்கம் போன்றவனே, பருத்த வயிறுடையோய், மங்கலக் குணங்களுக்கு உறைவிடமே, சிவகுமாரனே, கணபதியே உன் திருவடியே புகல்.

முடியடி தெரிவரு முதியவ சரண முறைதெரி மறையவ ரிறையவ சரணம்
வடிவினி லுயரிய பெரியவ சரணம் வலவையை மருவிய புயதர சரணம்
நெடியவன் விழிதரு நெடியவ சரண நினைபவர் பவமற நினைபவ சரணம்
அடியவர் வினைகெட வருள்பவ சரண மரகர சிவசுத கணபதி சரணம். 18

பொ - ரை: முதலும் முடிவும் காணமுடியாத மூத்தோனே, நூல் உணர் வேதியர் தலைவ, உயர்ந்த வடிவுடையாய், வல்லபையின் மணவாள, மாயோனுக் குக்கண்கொடுத்த பெரியோய், நினைப்பவர் பிறவியை அறுப்போனே, அடியவர் வினைதீர்த்தருள்வோனே, அரகர, சிவசுத, கணபதி சரணம்.

வி - கு: வலவை - வல்லபை. அர + அர - பாவத்தை அரிப்பவனே.

வேறு

எனவருச் சனைசெய் வான்முன் னெழிற்கர மைந்து நான்கு
கனவரைப் புயமுந் தோன்றக் கடகரி முகத்தெங் கோமான்
தினகரோ தயம்போல் வந்தான் றேவர்கோன் விழிக ளெல்லாம்
வனருகக் காடு போல மலர்ந்தனன் வணங்கி வீழ்ந்தான். 19

பொ - ரை: இங்ஙனம் அருச்சித்தபோது நாற்றோளும் ஐங்கரமும் உடைய கணேசர், சூரியன் தோன்றினாற்போல வெளிப்பட்டார்; இந்திரன் தன் கண்க ளாகிய தாமரை மலர்ந்து வணங்கி இறைஞ்சினன்.

வி - கு: வனருகம் - தாமரை.

பாகசா தனனை யன்பா லங்குச பாசச் செங்கை
ஆகுவா கனத்து முக்க ணைங்கரத் தானை நோக்கி
ஓகையா லுனது பூசை தோத்திர முவந்தோம் வேண்டும்
வாகைசேர் வரங்கள் கேண்மோ வென்னலும் வணங்கி வாழ்த்தி. 20

பொ - ரை: இந்திரனை நோக்கி, பிள்ளையார் உன் வழிபாட்டை உவந் தோம்; உனக்கு வெற்றியைத்தரும் வரங்களைக் கேள் என அநுக்கிரகித்தார். இந்திரன் மீண்டும் வணங்கி வாழ்த்தினன்.

பந்தன முலையாள் பாகப் பரன்றிருப் பள்ளித் தாம
நந்தன வனங்கள் வாடி நலிந்தன தழைக்கும் வண்ணம்
சந்தன வனங்கள் சூழுந் தனிவரை முனிவன் கைமேல்
வந்தனள் பொன்னி யீண்டு வரப்பணித் தருள்வா யென்ருன். 21

பொ - ரை: அடியேன் செய்யும் சிவபூசைக்கு உதவும் நந்தவனங்கள் வாடிவிட்டன; ஆதலால், அவை தளிர்த்தற்கு அகத்தியர் உடன் உள்ள பொன்னி ஆற்றை ஈண்டுத் தந்தருள்க என இந்திரன் வேண்டினன்.

காண்டகை யண்டங் காக்கை யெனக்கய முகத்தோன் செல்லச்
சேண்டகை யண்டங் காக்கைத் தேவனென் றுணரான் கும்பன்
கூண்டகை நீட்டி யோச்சக் கும்பநீர் துண்டத் தாலே
யாண்டகை கவிழ்ப்பப் பொன்னி யருள்வழிப் பார்மேற் புக்காள். 22

பொ - ரை: குடமுனிவர் காணத்தக்க கரிய காக்கையை வானில் உள்ள அழகிய தேவருலகம் காக்கும் விநாயகர் என்று உணராது, தம் குறுகியகையால் துரத்த, அவர்தம் கமண்டல நீரை ஆளுந்தகுதிவாய்ந்த பிள்ளையார் மூக்கால் கவிழ்த்தார்; இறைவன் ஆணைவழி பொன்னியாறு நிலத்திற் பாய்ந்தது.

புக்கபா ரிடந்து பாரப் பொருப்பினை யெடுத்து வாரிச்
சக்கரஞ் சங்க மேந்தித் தடம்பணை மருத முந்தி
நெக்கநீர்ப் புள்வாய் போழ்ந்து நெடியபே ரம்பி னுலே
மைக்கடல் கிழித்து நேமி வளருமால் பொருவும் பொன்னி. 23

பொ - ரை: பொன்னி ஆறு, தான்புகுந்த நிலத்தைத் தோண்டிக் கீழ்ச் சென்று, திண்ணிய மலையை எடுத்துப்பிடித்து, சக்கரம் சங்கம் தாங்கி, அகன்ற பருத்த மருதமரத்தைத்தள்ளி, நெகிழ்ந்த நீர்ப்பறவை வாயைப்பிளந்து, பெரிய அம்பினுல் கரிய கடலைக் கிழித்துப் பாற்கடலில் பள்ளிகொள்ளும் திருமாலை ஒத்தது.

நிலத்தைக் கீண்டு, கரையாகவுள்ள பக்க மலைகளை விளங்குபடி தழுவிச் சென்று, சக்காரம் (மாமரம்) சங்கு என்பவற்றை அடிததுசசென்று விரிந்த வயல்களையுடைய மருத நிலத்தில் முற்படச்சென்று, நீர்வாழ்பறவை உள்ள இடங்களில் போழப்பட்டு, மிகுந்த தண்ணீரால் கரிய கடல் நீரையும் கிழித்துச் சென்றது எனக் கொள்க.

வி - கு: சக்கரம் - சக்காரம், மாமரம். அம்பு - தண்ணீர். நேமி - கடல்,

பொன்னியைப் பிரித்த பிள்ளை பூசுரப் பிள்ளை யாகச்
சென்னியிற் செங்கை தாக்கச் சேறலு மஞ்சி னுன்போல்
அன்னிய னரிய னுகி யாசைக டோறு மோடிப்
பன்னிசை முனியோ டாடல் பலபல பயின்ரு னையன். 24

பொ - ரை : காவிரியைக் கவிழ்த்த (பிள்ளையார்) அந்தணச் சிறுவனாகத் தோன்றி, அகத்தியர் முடியிற் குட்டச் சென்றபோது அஞ்சுவார்போல அவருக்குத் தூரமாகவும் அணிமையிலும் சென்று, திசைகள் தோறும் ஓடிப் பற்பல திருவிளையாடல் இயற்றினர்.

வி - கு : பிள்ளை - காக்கை, பிள்ளையார். ஆசை - திசை. அன்னியன் - சேயன்.

பாரின்மேற் படர்ந்து மேழு பரவைமேற் கடந்தும் பார
மேருமேன் மிதித்துந் தாவி விண்ணின்மேற் குதித்தும் வேண்டும்
சாரிமேல் விளைத்தா ளையன் றமிழ்முனி யிளைத்தா னம்மா
ஆரியன் மகிமை பார்க்கி லாதியம் பரனே யென்றான். 25

பொ - ரை : பிள்ளையார் நிலத்தின்மேற் சென்றும், கடலைத் தாண்டியும், மேருமேல் ஏறியும், வானிற் குதித்தும் தாம் விரும்பியபடி அகத்தியர் கைக்கு எட்டாதபடி சூழ்ந்து வந்தார்; தமிழ் முனிவர் இளைப்பு அடைந்து இங்கு வந்த உயர்ந்தோன் செயல்களைப் பார்க்கின் இவனைப் பரமசிவன் எனவே கருத வேண்டும் என உட்கொண்டார்.

குறுமுனி மெலிவு நோக்கிக் குஞ்சர முகத்தெங் கோமான்
உறுதனிப் பிறைவெண் கோடு முபயபா தமுமுக் கண்ணும்
செறிதிருப் புயங்க ளைன்குஞ் செழுமலர்க் கரமோ ரைந்தும்
அறுகணி முடியுந் தோன்ற வருளொடுந் தோன்று நின்றான். 26

பொ - ரை : குறுமுனிவர் மெலிவு அடைந்தபோது, மூத்த பிள்ளையார் யானைமுகமும், ஒற்றைக்கொம்பும், அறுகுஅணிந்த முடியும், நாற்றோளும், ஐங்கரமும், இரண்டு பாதமும் தோன்ற அவருக்குக் காட்சி அளித்தார்.

நம்பியோ விதற்கா வந்தா னுனிதோ கொடுமை செய்தேன்
எம்பிரான் சென்னி தாக்க வெடுத்தகை யிதுவோ வென்று
பம்புதன் சென்னி செந்நீர் பறிபட நின்று தாக்கும்
கும்பமா முனியை நோக்கிக் கும்பமா முகத்தெங் கோமான். 27

பொ - ரை : காவிரியைக் கவிழ்க்க மூத்த பிள்ளையாரோ வந்தவர்; யான் தவறு செய்துவிட்டேனே என்று முட்டியாகப் பற்றிய கைகளால் தம் தலையில் குருதி வெளிவரும்படி குட்டிக்கொண்டார் முனிவர்.

வி - கு : கும்பமா - மத்தகத்தையுடைய யானை.

மாதவ வஞ்சேல் சென்னி வருந்தநின் செங்கை தாக்கும்
ஈதுவந் தனையாக் கொண்டோ மிவ்வணம் புரிவார்க் கெல்லாம்
கோதிலாக் கதிகள் செல்வங் கொடுக்கின்றோ நினக்கு வேண்டும்
காதல்சேர் வரங்கள் கேண்மோ கருதின தருது மென்றான். 28

பொ - ரை : ஆனைமுகக்கடவுள் மாதவம் உடைய குறுமுனிக்கு அஞ்சல் அளித்து, அவர் குட்டிக்கொண்டதை வழிபாடாகக்கொண்டு, அங்ஙனம் செய்யும் பிறர்க்கும் குற்றமற்ற மேல் நெறிகளும் செல்வமும் கொடுப்போம் எனக் கூறி, விரும்பும் வரங்களைக் கேட்கச் சொன்னார்.

நீகமண் டலத்து நன்னீர் நிறைத்தருளெனலு நாதன்
மேகமண் டலத்து முந்நீர் மிசைந்தெனத் துதிக்கை நீட்டி
மாகமண் டலத்து வாரி மானுகா விரிநீர் வாரிக்
காகமண் டலத்திற் சாய்த்த கரகமண் டலத்திற் பெய்தான். 29

பொ - ரை : அடியேனுடைய கமண்டலத்தில் நீர் நிறையும்படி செய்தருள்க என வேண்ட, விநாயகர் மேகமானது வட்டமாகிய கடல்நீரை உண்டாற்போல, தம் துதிக்கையை நீட்டி, ஆகாய வட்டத்தில் உள்ள கங்கையை ஒத்த காவிரி நீரை ஏற்றுக் காகம் மண்ணாகிய இடத்திற் சாய்த்த முனிவர் கையில் உள்ள கமண்டலத்தில் பெய்தார்.

வி - கு : மண்டலத்து முந்நீர் - வட்டமாகிய கடல். மாக(ம்) மண்டலம் - ஆகாயவட்டம். காகம் மண் தலத்திற் சாய்த்த கமண்டலம் என்க.

கரகநீர்ப் பெருக்கும் பார்மேற் காவிரிப் பெருக்கும் நோக்கிப்
புரகர னருளின் மிக்காம் புதல்வன்மெய் யருளென் றேத்திச்
சிரகர கம்பஞ் செய்து தெண்டனிட் டிறைவ னுருக்
குரகதம் வடபாற் செல்லக் குறுமுனி தென்பாற் சென்றான். 30

பொ - ரை : கமண்டலம் நீர் பெருகி நிறைந்ததையும், நிலத்தின்மேல் காவிரி பெருகி ஓடுதலையும் கண்டு, திரிபுரம் அழித்த சிவன் அருளினும் மூத்த பிள்ளையார் அருள் மிக்கதாக உள்ளது என ஏத்தி முடிசாய்த்துக் கைகூப்பி இறைஞ்சினர் முனிவர்; இறைவன் ஆகு வாகனம் வடக்கே செல்லக் குறுமுனி தெற்கே சென்றார்.

சுழியெறி தரங்கப் பொன்னித் துறைகெழு குடந்தை யாரூர்
வழிபுனற் றிருவை யாறு வலஞ்சுழி மருதூர் மாயன்
விழிதுயி லரங்கங் காவை வெண்காடு மறைக்கா டேத்திச்
செழுமறைப் பொருளார் தொல்லைத் தில்லைமா நடனம் போற்றி. 31

பொ - ரை : அகத்தியர் காவிரித்துறை பொருந்திய கும்பகோணம், திருவாரூர், திருவையாறு, திருவலஞ்சுழி, மருதூர், திருவரங்கம், திருஆனைக்கா, திருவெண்காடு, திருமறைக்காடு என்னும் தலங்களில் இறைவனைக் கண்டு தொழுது, வேதத்தின் முடிந்த பொருள்பொருந்திய பழைய திருத்தில்லையில் திரு நடனம் கண்டு தொழுதார்.

தருபுனற் செழுங்கா வேரிச் சங்கமத் துறைநீராடிக்
குரைகடற் சேது மேவிக் கொடுங்குன்றங் கானை புத்தூர்
பரமரே டகமா டானை பரங்கிரி மதுரை நெல்லைத்
திருநகர் பரவிப் போந்தான் தென்றிசை தழைக்க வந்தான். 32

பொ - ரை: தென்திசை உறுதி பெறுதற்கு எழுந்தருளும் அம்முனிவர், காவிரிச் சங்கமத்தில் நீராடி, திருச்சேதுவில் நீராடி, திருக்கொடுங்குன்றம், திருக்கானப் பேரூர், திருப்புத்தூர், திரு ஏடகம், ஆடானை, பரங்குன்றம், மதுரை, திருநெல்வேலி ஆகிய இடங்களைத் தொழுது மேற்சென்றார்.

இருஞ்சிவ லிங்க மாக்கி யிடந்தொறு மருச்சித் தேத்தி
வருந்தமிழ்ப் பொதிய மேவி வடதிசைக் கனமுந் தென்பால்
பெருந்திசை மெலிவுந் தீர்த்தான் பிறவியாம் பிணியைத் தீர்க்கும்
அருந்திரு மருந்தைக் காண்பா னணிதிரி கூடஞ் சார்ந்தான். 33

பொ - ரை: ஆங்காங்குச் சிவலிங்கம் நிறுவி வழிபட்டுவரும் முனிவர் வடதிசை உயர்வும் தென்றிசை மெலிவும் பொதியில் மேவித் தீர்த்தார்; பிறவிப் பிணிக்கு அரிய மருந்தாகிய சிவனைக் காணுதற்குத் திரிகூடமும் சார்ந்தார்.

கவனவெங் கான நீங்கிக் கடவுளர் திருக்குற் றாலம்
புவனமார் குரோச மைந்திற் புகுதலும் புனிதத் தென்றல்
சிவமணம் வீசக் கண்டு தெய்வமா முனிமுன் செய்யும்
தவமினிப் பலித்த தென்று தடம்புயந் தடிப்பச் சென்றான். 34

பொ - ரை: விரைவாகக் கொடிய காட்டை நீங்கி, திருக்குற்றாலம் ஐந்து குரோசத்தில் உள்ளது என்னும் நில எல்லையிற் புகுந்தபோது, தூய தென்றல் சிவமணம் கமழ வருவதுகண்டு தெய்வ முனிவர் இப்பொழுது தவப்பயன் கைகூடிற்று என்று புயங்கள் பூரிக்க நடந்தார்.

வி - கு: குரோசம் - கூப்பிடுதூரம், இரண்டு கல் தூரம் என்ப.

நூற்கடல் கடந்த மேலோ னுவலருந் திரிகூ டத்து
மேற்கடு விடமுண் டாரே விண்டுவா யிருந்தா ரென்று
நாற்கட வுளரும் போற்று நன்னகர்த் திசைகள் சூழ்ந்து
பாற்கடல் கிடந்தா லென்னப் பங்கயத் தடங்கள் கண்டான். 35

பொ - ரை: நூலறிவைக்கடந்த முனிவர் சிவபிரானே திரிகூடத்தில் திருமாலாக இருந்தார் என்று உணர்ந்து ஆதித்தர், உருத்திரர், வசுக்கள், மருத்துவர் என்னும் நால்வகைக் கடவுளரும் போற்றும் நன்னகரை வலமாக வந்து எத்திசையிலும் பாற்கடல்போலத் தாமரைத் தடாகங்கள் உள்ளதைக் கண்டு மகிழ்ந்தார்.

அறத்துறை முனிவன் வாவி யருந்துறை யணுகுங் காலை
நிறைப்புனல் கரைமேற் றாவி நெடுந்திரை சுருட்டுந் தோற்றம்
புறத்துறு சமயத் தோரைப் போகெனப் புறங்கை யோச்சி
விறற்சிவ சமயத் தோரை விரைவுட னழைத்தன் மானும். 36

பொ - ரை: அறம் உணர்ந்த முனிவர் நீர்த்துறையில் சென்றபோது நிறைந்த தண்ணீர் கரைமேல் மோதிப் பின் அலையாகச் சுருண்டு மீளும் தோற்றம் புறச்சமயத்தாரைப் போக எனக் கையால் வீசிக்காட்டி வெற்றியுள்ள சிவ நெறியினரை விரைந்து வம்மின் என அழைத்தலை ஒத்தது.

செறிதடங் கரையின் மீதே செழுந்திரை கொழிக்கு முத்தம்
நறியபூந் திருவெண் ணீற்று நாயன்மார் வருதல் போலும்
எறிபுனற் றிரையி னூடே யெழுகயன் மறையுந் தோற்றம்
மறுபுறச் சமயத் தோர்கள் வயின்வயி னொளித்தன் மானும். 37

பொ - ரை: தடாகங்களின் கரைகளில் அலைகளால் ஒதுக்கப்பெறும் முத்துக் குவியல்கள் திருநீற்றுத் தொண்டர்கள் அகத்தியரை வரவேற்க வந்து கூடுதலை ஒத்தது; மீன்கள் தண்ணீரில் ஓடிமறைவது புறச்சமயத்தவர்கள் இடந்தோறும் மறைதலை ஒத்தது.

உரவுநீர்த் துறைமண் டூக மொலிப்பது முனியைக் கண்டே
அரவொலி பரப்புந் தொண்ட ரார்ப்பொலி நிறைத்தல் போலும்
விரவுநீ ரமுத தாரை விண்மிசைப் பொழிதன் முக்கட்
புரகரன் கருணை மாரி பொழிவது போலு மாதோ. 38

பொ - ரை: வலிய நீர்த்துறைகளில் தவளை ஒலிப்பது அரவொலி எழுப்புவது போன்றிருந்தது; நீராகிய அமுததாரை மேல்நின்று ஒழுகுவது இறைவன் கருணைமாரி பொழிவது போன்றிருந்தது.

காஞ்சிசூழ் கழனி தோறுங் கழைகள்கண் வெடித்த முத்தம்
தாஞ்சிலர் வருவார் போவார் தரத்திசை கணிகை மார்போல்
பாஞ்சராத் திரிக டம்மைப் பழித்திடு நகையைப் போலும்
வாஞ்சைசேர் சைவர்க் கண்டு மகிழ்தரு முறுவல் போலும். 39

பொ - ரை: காஞ்சிமரம் சூழ்ந்த கழனிகளில் கழைக்கரும்பு கணு வெடித்துச் சிதறும் முத்தம் தம்மாட்டு வருவார் போவார் சிலர் தகுதிக்கு ஏற்ப இணங்கும் பரத்தைமார்போல், பாஞ்சராத்திரிகளைக் கண்டுபழித்தும், அன்புள்ள சைவரைக்கண்டு மகிழ்ந்தும் நகைத்தல் போன்றன.

அரத்தநெட் டிலையாங் காவி யணிந்துநித் திலநீ ருடிச்
சிரத்தினிற் கதிர்க ளாய செஞ்சடை பின்னலிச் சென்னி
தரத்துற வளைந்த செந்நெல் சைவமா முனியை யீண்டு
வரத்தவம் புரிந்தோ மென்ன வணங்குமா முனிவர் போலும். 40

பொ - ரை: செந்நெற்பயிர் சிவந்த நீண்ட இலைகளாகிய கல்லாடை அணிந்து, முத்துக்களாகிய திருநீறு பூசி, முடியில் கதிர்கள் எனப்படும் சடையைப் புரிகளாகப்பின்னி விளங்கி, தகுதி பொருந்த தலைவணங்குதலால் அகத்தியர் வரத் தவம்புரிந்தோம் எனக் கருதி அவரை வணங்கி எதிர்கொள்ளும் முனிவர்களைப் போன்றன.

வருபுனற் புகலி வேந்தர் வழுதிநோ யொழித்த காலை
இருமனத் தருகர் போலு மிடைபழம் பழுத்த வாழை
விரிகனற் புனலி லேடு வென்றநாள் விருப்பாஞ் சைவத்(து)
ஒருமனத் தவரே போலு மொளிறுசெம் பழுக்காய் பூகம். 41

பொ - ரை: பழமும் காயும் விரவியுள்ள குலைகளையுடைய வாழை மரங்கள் திருஞானசம்பந்தர் கூன்பாண்டியனது சுரநோய் தீர்த்தபோது வருத்தமும் மகிழ்ச்சியுமாகிய இரண்டுதன்மை கொண்ட மனத்தராய் நின்ற அருகர்களை ஒத்தன; முழுவதும் பழுத்த குலைகளையுடைய பாக்குமரங்கள் அவர் ஆற்றிலிட்ட ஏடு எதிர் ஏறியபோது மகிழ்ச்சியும் துணிவும் உடையராய் நின்ற ஒருநெறிப் பட்ட மனமுடைய சிவனடியாரைப் போன்றன.

ஊறிடு மலர்த்தே னாடி யுவந்துதா தாடுந் தும்பி
ஆறிடு தடத்தி லீச னன்பராய் முழுகித் தெய்வ
நீறிடு வாரைப் போலு நீறணி தொண்டர்க் கெல்லாம்
சோறிடு வாரைப் போலு மகர ந்தஞ் சொரியுங் கைதை. 42

பொ - ரை: மலர்களில் ஊறுகின்ற தேனை நாடி வந்து மகரந்தம் பூசப் பெறும் வண்டுகள் ஆறு நீரை நிறைக்கும் தடாகத்தில் ஈசனுக்கு அன்பராய் முழுகித்தெய்வத்தன்மையுள்ள திருநீறு அணியும் அன்பர்களை ஒத்தன; மகரந்தத்தைச் சொரியாநிற்கும் தாழை திருநீறு அணியும் அடியார்க்குச் சோறிடுவாரைப் போன்றன.

புண்டரீ கத்தின் வாவிப் புடார்ச்சுன புரத்தி னெல்லை
ஒண்டவ முனிவன் செல்ல வுதயவன் மறைந்த தோற்றம்
பண்டுசேர் தக்கன் வேள்விப் பயத்தினாற் சமைய பேதங்
கொண்டவர் குழாத்து நின்றான் குன்றுபுக் கொளித்தல் போலும். 43

பொ - ரை: தாமரைத்தடாகங்களையுடைய புடார்ச்சுனபுரத்தை அகத்தியர் அடைந்தபோது சூரியன், மேற்குமலையில் மறைந்தான்; முன் தக்கன் வேள்வியில் நிகழ்ந்த அச்சத்தினால், பகலில் வைணவர் கூட்டத்தில் இருந்த சூரியன் முனிவர் வரவுகண்டதும் மலையிற் புகுந்து ஒளித்துக்கொள்வது போன்றது.

ஒழுகுநீர்த் தடங்க டோறு மொங்குசீர்ப் பழனந் தோறும்
செழுமுகை யுடைந்து நீலந் திசைதொறு மலர்ந்த தோற்றம்
எழுபெரும் புணரி யுண்டான் குறுமுனி யிவனோ வென்னப்
பழுதிலா விறும்பூ தெய்திப் புனன்மகள் பார்த்தல் போலும். 44

பொ-ரை; தடாகங்களிலும் வயல்களிலும் நீலமலர்கள் முறுக்கு உடைந்து மலர்ந்துள்ளது கடலை உண்ட குறுமுனி இவரோ என மகிழ்ச்சியுடன் நீர்மகள் காண்பது போன்றிருந்தது.

தேம்பிய துயிலை நீக்கிச் செங்கழு நீர்க்கண் ணோக்கி
ஆம்பல்வாய் மலர்ந்து வண்டால் வருகென வழைத்து நீலப்
பூம்பொடிச் சுண்ணந் தூவிப் புனிதமா முனியைக் கண்டு
கூம்பல்சேர் கமலச் செங்கை குவித்தது சிறுபுன் மாலை. 45

பொ - ரை: சிறிது காலமே உள்ள மாலை செங்கழு நீராகியகண்ணைத் திறந்து நோக்கி, ஆம்பலாகிய வாயைத்திறந்து ஆங்குள்ள வண்டின் ஒலியால்

முனிவரைவரவேற்று நீலப்பூவில் உள்ள பொற்சுண்ணந்தூவி குவிந்த தாமரையாகிய செங்கைகளைக்குவித்துத் தொழுதது.

எண்பல வுடுக்கள் வானி லெங்கணு மிமைக்குந் தோற்றம்
தண்புவி மடந்தை வாட்டந் தவிர்த்திட வந்தான் றன்னை
விண்புல மடந்தை காண்பான் விழியிரண் டமையா தென்று
கண்பல கோடி பெற்றுக் களிப்புறக் காண்டல் போலும். 46

பொ-ரை: நிலமகள் வருத்தம் தணிக்க வரும் முனிவரைக் காண்பதற்கு அளவில்லாத கண்களைப்பெற்று வானமாகிய மகள்கண்டாற்போலவிண்மீன்கள் இமைத்தன.

மிக்கசெஞ் சடைகள் சூடி மேனியில் வெண்ணீ றுடித்
தக்கமா முனிக்கு ழாத்துத் தமிழ்முனி வருதல் போல
மைக்கடல் வரைப்புக் கெல்லா மாலையி னிருள்விட் டோடச்
செக்கர்வா னுடுக்கள் சூழத் திங்கள்வந் தெழுந்த தன்றே. 47

பொ-ரை: முனிவர்குழாம் சூழச் சடைமுடித்துத் திருநீறு பூசி அகத்தியனுர் வந்ததைப் போல, செக்கர்வான் ஒளிக்கற்றையில் விண்மீன்கள் சூழ கடல் சூழ்ந்த நிலவுலகின் இருள் நீக்கி வெண்ணிலா எழுந்தது.

ஆங்கன மமர்ந்து வைகி யந்திவந் தனைக ளாற்றி
ஓங்குசீர் நீறு சாத்தி யுண்மையைஞ் செழுத்தை யுன்னிக்
கோங்கரும் பனைய கொங்கைக் கோதையோர் பாகன் றன்னைப்
பூங்கழல் வணங்கி யேத்திப் பூசனை புரிய வெண்ணி. 48

பொ-ரை: இத்தகைய இயற்கைச் சூழ்நிலையில் முனிவர் இருந்து அந்தியில் செய்யவேண்டிய சந்தியாத்தியானம் செய்து, திருநீறணிந்து, திருவெழுத்தைந்து கணித்து உமையொரு பாகனைப் பூசனைசெய்யக் கருதினர்.

சேல்விழித் தடமாம் பாவை திரைக்கையாற் கொழித்து வீசும்
பால்வளை வாலு கத்தாற் பரிவுட னிலிங்க மாக்கி
நால்வள மலருந் தூவி நம்பனை யருச்சித் தேத்தி
வால்வளை முழங்கி யார்ப்ப வைகறை யெழுந்து போந்தான். 49

பொ-ரை: வைகறையில் எழுந்து ஆற்றின் அலைகள் கொழிக்கும் வெண்மை சூழ்ந்த மணலால் இலிங்கம் அமைத்து கோடு, கொடி, நீர், நிலம் என்னும் நான்கிடத்திற் பெறும் பூக்கள் தூவிச் சங்கம் ஒலிப்ப அருச்சித்து வந்தார்.

கூனவா ரணஞ்சூழ் வாவி குறுமுனி யகலுங் காலைக்
கானவா ரணங்கண் முல்லைக் கானிடைப் பறந்து கூவன்
மோனவா ரணத்தான் சைவ முனிவரு கின்ரு னென்று
தானவா ரணத்தைக் காத்தான் சமையத்தார்க் குணர்த்தன் மானும். 50

பொ - ரை: வளைந்த சங்குகளையுடைய தடாகத்தை நீங்கிக் குறுமுனி வந்தபோது முல்லை நிலத்தில் காட்டுக்கோழிகள் கூவின; அது மௌனத்தை யுடைய வைதிக முனிவன் வருகையை மதநீர் உடைய யானையைக் காத்த மால் நெறியினர்க்கு உணர்த்துவது போன்றிருந்தது.

வி - கு: கூன - கூனுதலையுடைய. வாரணம் - சங்கு, கோழி, யானை. ஆரணன் - வேதமுனி. தானம் - மதநீர்.

தேந்துணர் பூத்த கொன்றை திருப்பள்ளித் தாம நல்கக்
காந்தள்செங் கரத்தா லீச னருச்சனை புரியக் காதன்
மாந்தளிர் கரங்கள் கூப்ப வரிக்குயில் பல்லாண் டோதப்
போந்தளி பயில்பு ராணப் பொழில்பல கடந்து போனன். 51

பொ - ரை: பலசோலைகளைக் கடந்து வந்தார் முனிவர்: அவை, கொன்றை மரங்கள் பூமாலைகளைத்தர, காந்தள்கள் அவற்றைக்கொண்டு சிவனை வழிபட, மாந்தளிர்கள் கைகூப்பித் தொழாநிற்பக் குயில்கள் பல்லாண்டுகூற வண்டுகள் புகுந்து பயிலும் பழைய சோலைகள்.

பம்பிய புளின மெல்லாம் பாவபுண் ணியங்க ளோதும்
கும்பியுங் கொலைசெய் யாது குழகனைப் பூசை செய்யும்
சம்புவும் வலஞ்செய் தேகுஞ் சைவநன் னெறியால் வண்டும்
தும்பியுங் கள்ளுண் ணாத சோலையிற் காலை சேர்ந்தான். 52

பொ - ரை: எழும் புட்கள் எல்லாம் பாவ புண்ணியங்களைக் கூறும்; யானையும் கொலைசெய்யாது, சிவபிரானை வழிபடும்; நரியும் வலமாகச் செல்லும்; சிவநெறியைப் பின்பற்றுதலால் வண்டுகளும் கள் உண்ணாதது சண்பகச்சோலை; ஆங்குக் காலையிற் சென்றார் முனிவர்.

திங்களா றிரண்டுஞ் சூழ்ந்துந் திங்கள்செங் கதிரு டாடாப்
பொங்கரி னிருள்க ளெல்லாம் புரையற விழுங்க வேண்டி
அங்கியு மதியு மாங்கோ ருருவுகொண் டணைந்தா லென்னத்
தங்குசெஞ் சடில மேனித் தவளநீ றிலங்கப் புக்கான். 53

பொ - ரை: சந்திரனும் சூரியனும் பன்னிரண்டு மாதங்களும் அச்சோலை யைச் சூழினும், அவர்கள் உள்ளே நுழையமாட்டாமையால் தங்கியுள்ள பேரிருளைக் குற்றமற விழுங்கவேண்டி அக்கினியும் சந்திரனும் ஒருவடிவுகொண்டு உள்ளே சென்றதுபோல, முனிவர் செஞ்சடையும் வெண்ணீறும் விளங்கும்படி உள்ளே சென்றார்.

தவமொரு வடிவ மாகச் சதுமுகன் வரத்தால் வந்து
திவள்கலை யமுத முண்டு திரைக்கட லாச மித்த
பவர்சடை முனிவற் காகப் பண்டைமால் வடிவு நீங்கிச்
சிவவடி வுதித்த தென்னச் செங்கதி ருதித்த தன்றே. 54

பொ - ரை: நான்முகன் வரத்தால் தவமே உருவெடுத்தாற் போன்று எல்லா நூற்பயனும் உண்டு கடலே உறிஞ்சிய நெருங்கிய சடைமுடியையுடைய முனிவர்க்காக பழைய மாயோன் வடிவுநீங்கிச் சிவவடிவு வந்துற்றது போல, இருள்வடிவு நீங்கிச் செய்ய கதிர்பரப்பிப் பகலவன் தோன்றினன்.

மாதவ ரிடங்க டோறு மறையவர் கிடைக டோறும்
ஓதுவார் கழகந் தோறு மும்பர்வாழ் குலங்க டோறும்
வேதமு மங்க மாறு மிருதியுஞ் சுருதி ஞான
போதமு மொருமூ வாறு புராணமும் பரந்த மாதோ. 55

பொ - ரை: தவமுனிவர் இருக்கைகளிலும், வேதியர் வேதம் ஓதுமிடங்களிலும், நூல்களை ஓதுவார் கல்விபயில் இடங்களிலும் வேதமும் ஆறு அங்கமும் மிருதிகளும், வேதப்பொருள் நிச்சயம் உணர்த்தும் சூத்திரங்களும், பதினெண் புராணங்களும் பரவி விளங்கின.

பெருகிய சுருதி மூலம் பேசிய கிளிக ளோர்பால்
ஒருபசுங் கிளிக்கோர் கிள்ளை யுபநிட முரைப்ப தோர்பால்
அருமறைப் பொருள்கள் சைவ வாகம மணங்க ளோர்பால்
சருகினை யருந்தி நோற்பார் தவமணங் கமழ்வ தோர்பால். 56

பொ - ரை: ஒருபக்கத்தில் கிளிகள் வேத மூலபாடங்களை ஓதின; ஒரு பக்கம் ஒரு கிளிக்கு மற்றொரு கிளி உபநிடதப்பொருள் உரைத்தது; மற்றொரு பக்கம் வேதப்பொருள்களும் சைவாகமப் பொருள்களும் கலந்து மணந்தன; இன்னொரு பக்கலில், சருகருந்தித் தவஞ் செய்வார்தம் தவமணம் விளங்கிற்று.

கரகமா முனியைக் கண்டு கமலமேற் பிரம னீன்ற
வரமக னிவனே யென்னு மழலையங் கிள்ளை யோர்பால்
பிரமன்முற் கற்பத் தானே பின்னுதித் தவனே முன்னிப்
புரமுறைந் தவனே யென்னப் பூவைகள் புகலு மோர்பால். 57

பொ - ரை: ஒருகிளி கமண்டலங் கொண்டுவந்த முனிவரைப் பார்த்துத் தாமரைக்கண் தங்கும் நான்முகன் பெற்ற சிறந்த மகனே இவன் என்னும்; நாகணவாய்ப் பறவைகள் பிரம கற்பத்தின் முன் தோன்றினவனே, பின் தோன்றினவனே, முன் இந்நிலவுலகில் வாழ்ந்தவனே என ஒருபக்கத்திலிருந்து வினவும்.

சந்திர பதத்தை யுன்னிச் சாந்திரா யணஞ்செய் வாரும்
மந்திர பதங்க ளாதி மந்திர முருச்செய் வாரும்
அந்தரத் தமரர் போக மவாவியே யறஞ்செய் வாரும்
இந்திர பதத்தை யெண்ணி யாகங்கள் புரிகின் றாரும். 58

பொ - ரை: சந்திரலோகம்பெறச் சாந்திராயணவிரதம் மேற்கொண்டாரும், மந்திரம், பதம், வர்ணம் என்பவற்றை முறையாக மனனம் செய்வோரும், வானுலக இன்பம் விரும்பி அறம் செய்வாரும், இந்திரபதம் பெறக்கருதி வேள்விகள் செய்வாரும் அச்சோலையில் இருந்தனர்.

கொற்றவ னங்கி வாயு குபேரனீ சான ஞதி
மற்றவர் பதங்கள் வேண்டி வரதனை வலஞ்செய் வாரும்
கற்றவிஞ் சையர்கள் சித்தர் கருடர்கிம் புருட ராதி
நற்றவ ருலகம் வேண்டி நாண்முறை வசிக்கின் ருரும். 59

பொ - ரை: சிலர் திசைக்காவலர் பதங்களைப் பெற வலம் புரிந்தனர் இறைவனை; சிலர் இத்தனை நாள் இங்குத் தங்கி வழிபடுவது என உறுதிசெய்து கொண்டு வித்தியாதரர் முதலிய வாழ்க்கையைப் பெற முயன்ருர்கள்.

பூதலத் தரசை வேட்டுப் புண்ணியம் புரிகின் ருரும்
பாதலத் தரசு வேண்டிப் பன்னகர் நோற்கின் ருரும்
சாதலும் பிறப்பும் வேண்டாச் சரியையர் கிரியை யாரும்
காதலும் வெறுப்பும் நீங்கிக் கதிவிழைந் திருக்கின் ருரும். 60

பொ - ரை: சிலர் இவ்வுலக ஆட்சியைக்கருதிச் சிவபுண்ணியம் செய்தனர்; மற்றும் சிலர் நாகர் வாழும் பாதலத்து அரசை அவாவித் தவம்புரிந்தனர்; பிறப்பிறப்புக்களைக் கடத்தற்கு மற்றும் சிலர் சரியை கிரியைகளை மேற்கொண்டு முயலாநின்றனர். இன்னும் சிலபேர் விருப்பு வெறுப்பு நீங்கிச் சிவகதியைவிரும்பி மோனிகளாய் இருந்தார்கள்.

தாகமா மனித ராயுட் டசமுறை சரிக்குங் காகம்
காகமா முறைகள் பத்துக் கழித்திடுங் கழற்கட் கூகை
கூகையின் முறைகள் பத்தாங் கொடுவிட நாக மந்த
நாகமே யனந்தங் கண்டு ஞானயோ கிருக்கின் ருரும். 61

பொ - ரை: ஆசையுள்ள மக்கள் ஆயுளின் பதின்மடங்கு வாழும் காக்கை; காகத்தின் ஆயுளின் பதின்மடங்கு வாழும் கழற்சிக்காய் போன்ற கண்களையுடைய கூகை; கூகையின் பதின்மடங்கு ஆயுள் உள்ளது கொடிய நஞ்சுடைய நாகம்; அத்தகைய நாகம் என்னும் ஆயுள் எல்லை பலகண்டு ஞானயோகத்து அமர்ந்தவரும் பலர் அங்குக் காணப்பட்டனர்.

வேண்டுவார் வேண்டிற் றெல்லாம் வேண்டுமா றுதவு மெங்கோன்
ஆண்டசெண் பகப்பூங் காவி லதிசய மனைத்து நோக்கா
ஈண்டுமெய்த் தவஞ்செய் யாமன் மேருவி லிமயச் சார்பில்
பூண்டுமுன் கழித்த காலம் போனதை நினைத்து நோவான். 62

பொ - ரை: அகத்தியர், வேண்டியவற்றை வேண்டியவாறு உதவும் திரிகூடநாதர் ஆட்சி கொண்டுள்ள செண்பகச் சோலையின் விம்மிதங்களைக்கண்டு, இங்கிருந்து உண்மைத்தவம் செய்யாமல் மேருவிலும், இமயத்திலும் தவம்பூண்டு பன்னுள் கழித்து விட்டோமே என வருந்தினர்.

மரமெலாம் பறவை யெல்லா மாவெலா மனித ராதி
சரமெலா மசர மெல்லா மமரராய்த் தரித்தல் கண்டான்
புரமெலாம் பரமன் மேவுஞ் சிவபுர மாகக் கண்டான்
கரமுநான் குவிக்க வாணன் கடுக்குநா ளடுக்கு மென்ருன். 63

பொ - ரை : அங்கிருந்த சரம் அசரம் அனைத்தும் தேவர்நிலை பெற்றுத் திகழ்ந்ததைக் கண்டார் முனிவர்; ஆங்கிருந்த ஊர்களெல்லாம் சிவபுரமாகவே விளங்கின; வாணுசுரனைப்போல இரண்டாயிரம் கைகள் பெற்றுத் தொழும் காலமும் வரும் என எண்ணினர்.

அலைகட லடக்குங் கையா னவ்வன மகன்று வெள்ளி
மலைமிசை மணத்தாற் போந்து வந்தசித் திரப்பூங் கங்கை
நிலைபெறத் திரிகூ டத்து நெறிபெற வமைத்தான் மேருச்
சிலைவலார் முடிமேற் சாத்துந் திருப்பள்ளித் தாமம் போல. 64

பொ - ரை : அலைக்கும் கடலைச் சுருக்கும் திருக்கையையுடைய முனிவர் அவ்வனத்தின் நீங்கி, திருக்கயிலைக்கு இறைவன் திருமணங் காண்பதற்குச் சென்றிருந்த சித்திர கங்கை மீண்டுவர அதனைத் திரிகூடமலையில் நிலையாக நெறி பெற்றுப் பாயச்செய்தார்; அது மேருவை வில்லாகக் கொண்டார் திருமுடிமேல் பூமாலையைச் சாத்துவது போன்றிருந்தது.

மலைதரு நெறிகள் கண்டான் வயிரமா வுயிர்கள் யாவும்
மலைதரு நெறிகள் காணுன் வாளரா முழையி னூடு
கலையொடு மானைச் சேர்ந்த ககனத்தம் புலியுங் கண்டான்
கலையொடு மானைச் சேர்ந்த ககனத்தம் புலியுங் கண்டான். 65

பொ - ரை : மலையில் உள்ள வழிகளைக் கண்டார்; உயிர்கள் எல்லாம் பகை உணர்வு கொண்டு போர்புரியும் இயல்பைக் காணவில்லை; ஒளியுள்ள அரவுள்ள முழையில் ஆண்மான் பெண்மான்களோடு உடனிருந்த காட்டுப் புலியைக் கண்டார்; கலைகளோடு மானையும் கொண்ட ஆகாயத்தில் சந்திரனையும் கண்டார்.

அளிவிருப் புடைய சோலை யனைத்துமே யமல மூர்த்தி
ஒளியினைச் சேர்ந்தார் போல வோங்கொளி யொருமை யாலே
வெளிவிருக் கங்க ளென்றும் விண்ணவர் தருக்க ளென்றும்
தெளிவிருக் கங்க மோர்ந்தான் றெளிவிலன் றிகைத்து நின்றுன். 66

பொ - ரை : வண்டுகள் விரும்புதலையுடைய சோலை முழுவதும், சிவப் பேரொளியைச் சேர்ந்த அன்பர்களைப்போல, ஒரே ஒளியாய் ஓங்கும் ஒற்றுமை யாலே மற்றைய மரங்கள் என்றும், தேவர்கள் தருக்கள் என்றும், ஞானத்தைத் தரும் இருக்கும் அங்கமும் ஆய்ந்தவர், தெளியமாட்டாது திகைத்து நின்றார்.

கல்லெலா மிலிங்க மாகக் கனமெலாம் புனல்க டூவ
அல்லுலாஞ் சோலை போதா லருச்சித்துக் கனிக ளாலே
எல்லையி லமுத மேற்ற வினமணி விளக்க மேந்தச்
செல்லெலா முரச மார்க்குஞ் சிவநெறிப் பெருக்கங் கண்டான். 67

பொ - ரை : ஆண்டிருந்த கற்களே இலிங்கமாக, மேகங்கள் நீரைத்தூவ, இருள் செறிந்த சோலை மலர்களால் அருச்சித்துக் கனிகளால் அளவற்ற நிவே

தனத்தை ஏற்பிக்க, உயர்ந்த மாணிக்கங்கள் விளக்காக அமைய, அம்மேகங்கள் முரசுபோல அதிரச் சிவ வழிபாட்டின் மிகுதியை முனிவர் கண்டார்.

பிரமனை யெண்ணு தாரும் பிரளய மெண்ணு வாரும்
நரைதிரை யறியா தாரு நடுவினைப் பிரியா தாரும்
வரவொடு போக்கி லாரு மறப்பொடு நினைப்பி லாரும்
இரவொடு பகலி லாரு மிரவியெங் கெழுமென் பாரும். 68

பொ - ரை: நான்முகனையே மதியாதாரும், பிரளயங்களைக் கணக்கிடு வாரும், நரை திரை மூப்பு இல்லாதாரும், சுழுமுனை நாடியிலேயே கருத் தொன்றி நிற்போரும், பிறப்பு இறப்பு இல்லாதாரும், கேவல சகலங்களைக் கடந்து சுத்தநிலைக்கண் நிற்போரும், இரவும் பகலுங் கடந்து நிற்பாரும், சோலை யுள்ளே எப்போதும் தங்குதலின் ஞாயிற்றின் வருகையினையே அறியாதோரும் ஆங்கிருந்தனர்.

பிங்கலை யிடையி லோடிப் பிரிதரு பிராண வாயு
அங்கலர் சுழுனை நாடி யசைவையற் றடங்கு வாரும்
பொங்கலர் மூல நாடிப் புதுவழி திறந்து மேலாய்ச்
சங்கரன் கமல பாதத் தனிநடங் காண்கின் றாரும். 69

பொ - ரை: வலம் இடம் என்னும் நாசிவழி ஓடிப் பிரிந்து கழியும் பிராண வாயுவை அங்குத் திறக்கப்படும் சுழுனையிற் சென்று பிரியாதபடி செலுத்தி மனம் அடங்கி நிற்பாரும், ஆதாரங்களாகிய விரிந்த அலர்களையுடைய மூலநாடியாகிய சுழுனையிற் சென்று பிரமரந்திரமாகிய புதுவழி திறக்கப்பெற்று மேலே நிராதாரங் கடந்து மீதான வெளியில் இறைவன் திருக்கூத்தைக் கண்டு இன்புற்றிருப் போரும் ஆங்கு இருந்தனர்.

நனவிடை நாடு தோறு நாடாது நாடி மேலாம்
கனவிடைச் சரிக்கின் றாரும் கவலைதீர் சுழுத்தி மேவி
மனநிலை யடக்கு வாரு மனமறத் துரியம் பற்றித்
தனையுணர்ந் ததீத மேவித் தலைவனைத் தேர்கின் றாரும். 70

பொ - ரை: சுத்த சாக்கிரம் தோன்றுந்தோறும் அதுவே முடிவு எனக் கொள்ளாது அதனினும் மேம்பட்ட சுத்த சொப்பனத்தில் நிற்பாரும், கவலை தீர்ந் துள்ள சுழுத்தி நிலைசென்று மனம் அடங்கி நிற்பாரும், யான் எனது என்னும் செருக்கு அற்றுத் துரிய அருள் நிலைபற்றித் தம் இயல்பைத் தெளிய உணர்ந்து, அதீதம் மேவிச் சிவபோகத்து அழுந்துவோரும் ஆண்டு உளர்.

இருமைசே ரொருகோ ணத்தி லெரிதனைக் காலான் மூட்டிப்
பரிதிமண் டலத்தை முட்டிப் படிகடந் தப்பா லேறித்
துருவிமே லனந்த கோடி சுடர்கள்விட் டெறிக்குஞ் சோதி
அருநிலா மண்ட லத்தி லமுதமுண் டுறங்கு வாரும். 71

பொ - ரை: மூலாதாரத்திலுள்ள குண்டலி அங்கியைப் பிராணவாயுவை அங்குச் செலுத்துதலால் எழுப்பி, சூரியமண்டலஞ் சேர்ந்து அப்படியைக்கடந்து மேற்சென்று பரஞ்சோதியைக் கண்டு சந்திரமண்டலத்தில் அமுது தம்நாடிகளை நனைக்க மனோலயம் பெற்றிருப்பாரும் உளர்.

சித்திக ளெட்டும் பெற்றுச் சித்தராய்த் திரிகின் றாரும்
பத்தியான் முத்தி வேண்டிப் பரமயோ கிருக்கின் றாரும்
சத்திநி பாத மென்னுஞ் சதுட்டய வழிச்செல் வாரும்
நித்திய காய சித்தி நிரம்பிவீற் றிருக்கின் றாரும். 72

பொ - ரை: எண்வகைச் சித்திகள் பெற்றுச் சித்தராய் எங்குஞ் செல்வோரும், பத்தி நெறியால் முத்தியை விரும்பி மேலான பத்தியோகத்தில் நிற்பாரும், நால்வகைச் சத்திநிபாதங்களுக்கு ஏற்ப சரியை கிரியாயோக ஞானநெறி நிற்போரும், என்றும் அழியா உடம்பு பெற்று இருப்பவரும் ஆண்டு உளர்.

இரும்பையுஞ் செம்பொன் னாக்கி நரைஞரை யிளைஞ ராக்கிக்
குரும்பைமா முலையா ரோடுங் குகைதொறு மிருக்கின் றாரும்
புரந்தர னளகை வேந்தன் போகமு முவர்த்துப் பொன்னும்
துரும்புநே ராக வெண்ணித் துறவின்பந் துய்க்கின் றாரும். 73

பொ - ரை: இரும்பைப் பொன்னாக்குதலும், முதியோரை இளையவர் ஆக்குதலும் வல்லராய் இளையமாதருடன் கூடிக் குகைகளில் வாழ்கின்றவர்களும், இந்திரன், குபேரன் என்போர் நுகர்ச்சியையும் வேண்டாராய் பொன்னும் சிறு துரும்பும் ஒன்றென எண்ணிக் கழித்துத் துறவான்வரும் இன்பத்தில் உள்ளாரும் காணப்பட்டனர்.

பங்கயத் தவனே யாகப் பலயுகம் பயில்கின் றாரும்
சங்கையே கரத்தி லேந்திச் சக்கரந் தரித்துள் ளாரும்
அங்கையின் மழுமா னேந்தி யமலமுற் றுறைகின் றாரும்
கங்கையார் சிவபு ரத்தார் கயிலையார் வருகின் றாரும். 74

பொ - ரை: நான்முகன் போல உருக்கொண்டு பல யுகம் வாழ்வோரும், திருமால் உருக்கொண்டு உள்ளோரும், உருத்திரர் வடிவுற்ற தூயரும், ஆகாய கங்கையைப் பெற்ற தேவர்களும், திருக்கயிலையில் வாழ்நரும், திரிகூடத்தைக் காண வருகின்றவரும் காணப்பெற்றனர்.

அப்படி யெண்ணி லாதா ரமர்தரு தானங் கண்டான்
இப்படி யேழுந் தாங்க விவர்களி லொருவர் போதும்
மைப்படி கண்ட னென்னை வரித்ததிம் மகிமை யெல்லாம்
கைப்படி நெல்லி போலக் காட்டியாண் டருள வன்றே. 75

பொ - ரை: மேற்கூறியவாறு அளவற்றவர் உள்ள இடங்களை அகத்திய முனிவர் கண்டார்; இந்த உலகு ஏழையும் காக்க இவர்களில் ஒருவரே போதியர்;

சிவபிரான் என்னை இங்கு வரும்படி செய்தது இப்பெருமை முழுவதும் அங்கையில் உள்ள நெல்லிக்கனி போலக் காட்டி ஆட்கொள்ளுதற்கு அன்றோ ! என முனிவர் உணர்ந்தார்.

அம்மவோ திரிகூ டத்தி லதிசய மனந்த கோடி
எம்மனோர் தமக்குள் யானே யெதிர்தொழப் பெற்றே னென்று
விம்மிதப் புளகம் போர்ப்ப மெய்யெலாம் விதிர்ப்பப் பொங்கிச்
செம்மன்மா முனிவன் கையுஞ் சென்னியுந் துளக்கா நின்றான். 76

பொ - ரை: அளவிறந்த விம்மிதங்களைத் திரிகூடத்தில், முனிவர்களுக்குள் யானேகண்டுதொழப்பெற்றேன் என வியப்பும் மெய்சிலிர்ப்பும்பெற்று மகிழ்ச்சிப் பெருக்கால் உடல் நடுக்கம் உற்று முனிவர் கையும் முடியும் அசைத்தனர்.

வி - கு: செம்மல் - சிறந்தோன்.

கானவர் புனமுந் தெய்வக் கடவுளர் வனமும் வேடர்
ஆனவர் சீறூர் வைப்பு மருவியங் கிரியுஞ் சூழ்ந்து
தானவர் முனிவர் சித்தர் சாரத ரியக்கர் பூதர்
வானவர் கணங்க ளார்க்கும் வரிவளை வீதி சார்ந்தான். 77

பொ - ரை: அகத்தியர் வேடருக்கு உரிய கொல்லைகளையும், தேவர்கள் வந்து தங்கும் சோலைகளையும், வேடர் சிற்றூராகிய இடமும் அருவியையுடைய திரிகூடமலையும் வலமாகவந்து, அசுரர், சித்தர், முனிவர், கந்தருவர், இயக்கர், பூதர் முதலியவர் கூட்டமாக ஆரவாரம் செய்யும் சங்கவீதியைச் சார்ந்தான்.

வி - கு: வரி - சங்கிற்கு இனஅடை.

வேறு

நற்றாலத் திருமடந்தை யணிபோலு மணிமாட மறுகு ஞானச்
சொற்றாலத் திருமடந்தை யனையவரு வித்துறையுந் துறைசூழ் வெற்பும்
பொற்றாலத் தமரர்களும் பொன்னகரும் பூதலத்துப் போந்தா லன்ன
குற்றாலத் திருநகருங் கோயிலுங்கோ புரமும் வெற்றிக் கொடியுங் கண்டான்.

பொ - ரை: நல்ல நிலமகளுக்கு அணிபோன்றுள்ள அழகிய மாடவீதிகளும், ஞானத்தைத் தோற்றுவிக்கும் சொல்லுக்கும் நாவிற்கும் தலைவியாகிய கலைமகள் அனைய அருவித்துறையும், அத்துறைகள் சூழும் மலையும், பொன்னகரும், அதன் கண்வாழும் அமரர்களும் ஒருங்கே நிலவுலகத்து வந்தாற்போன்ற குற்றாலத் திருநகரும் திருக்கோயிலும் கோபுரமும் வெற்றிக்கொடியும் முனிவர்கண்டார்.

கண்டலங்கள் களிகூரப் புண்டரிகக் கண்ணனையே போற்கா னீட்டி
விண்டலமு மண்டலமு மளந்தசயத் தம்பமதின் விசேடங் கண்டான்
கொண்டல்கவி தண்டலையு மண்டபமுங் கோயிலுங்கோ புரமு நோக்கி
அண்டகூ டமுங்கூடத் தடுக்கியபொற் குலவரையு மாகக் கண்டான். 79

பொ - ரை: அகத்தியர் திருமாலைப்போல் உயர்ந்து விண்ணும் மண்ணும் அளந்த வெற்றித் தம்பத்தைக் கண்களிப்பக் கண்டார்; மேகம் கவிந்த சோலைகளையும், மண்டபத்தையும், கோயிலையும், கோபுரத்தையும் பார்த்து அண்டமும் அதன்கண் அடுக்கிய பொன்மயமான குலவரைகளும் ஆகக் கருதினர்.

ஒருவாயி லுண்டுமுன்ன ளுமிழ்ந்தானை யுள்ளடக்கி யுலக மூன்றும்
திருவாயி லொருநான்கா லுண்டுமிழுந் திருக்கோயிற் செல்வங் கண்டான்
கருவாயில் கடப்பவர்க்குக் காட்சியிது போதுமெனக் கரங்கள் கூப்பி
இருவாயும் பொன்சொரிய வேத்தினு னெழுகடல்சென் றிறங்கும் வாயான். 80

பொ - ரை: உலகம் மூன்றும் ஒருவாயில் உண்டு உமிழ்ந்த திருமாலை உள்ளடக்கி நான்கு திருவாயில்களால் உலகத்தாரை நுழைந்து மீளச்செய்யும் திருக்கோயிலின் அழகைக்கண்டார்; பிறவியை அறுத்துக்கொள்வதற்கு இக்காட்சி ஒன்றுமே போதும் எனக் கைகூப்பித் தொழுது, ஏழுகடலையும் உண்ட வாயையுடைய அம்முனிவர் தம் பெருவாயால் பொன்போன்ற சொற்களைச் சொரிந்து ஏத்தினர்.

ஓருகத்தி லயனுகி யோருகத்தி லரியாகி யுடைய தேவன்
பேருகத்தி லரனுக வீற்றிருக்குந் தலமிதுவோ பிரமன் மாய
ளுருகத்து மழியாத குற்ருலத் தலஞ்சேர வயனு மெந்தை
பூருவத்தின் புண்ணியமோ யான்புரிந்த மாதவமோ புகுந்த தம்மா. 81

பொ - ரை: ஒரு யுகத்தில் அயனுகவும், மற்ருென்றில் மாயோனுகவும், வேறும் ஒன்றில் அரனுகவும் உடைய நாயகன் வீற்றிருக்கும் தலம் இது; இதனைத் தலைப்படுதற்கு என்தந்தை அயன் முன் செய்த தவமோ அன்றி யானே புரிந்த சிறந்த தவமோதான் காரணமாதல் வேண்டும்.

மருவாய மலர்மாரிச் சண்பகா டவிவளமும் வானந் தாவிக்
குருவாய மணிகொழிக்கும் வடவருவித் திரிகூடக் குவட்டின் சீரும்
திருவாணி யுமைபிறந்த சத்திபீ டமுஞ்சிவத்தின் செயலு மென்னல்
ஒருவாயிற் சொல்லுவதோ மறைகளா யிரம்வாயா லுரைக்கற் பாற்ருே. 82

பொ - ரை: மணமலர் சொரியும் சண்பகவனத்தின் சிறப்பும், வானத்தில் பாய்ந்து நன்னிறமுள்ள மணிகளை ஒதுக்கும் வடவருவி ஒழுகும் திரிகூடமலையின் சிறப்பும், வாணியும் திருவும் தோன்றும் சத்திபீடமும், சிவபிரான் பெருமையும் என் ஒருவாயால் சொல்ல அளவுபட்டன அல்ல; வேதங்கள் ஆயிரம் வகையால் உரைப்பினும் நிரம்புவன அல்ல.

மேருவரை யகந்தனிலும் வெள்ளிவரைப் புறந்தனிலும் விடையெங் கோமா
பாருலகிற் பலகோடி தலமகிமை மறைநூலிற் பயிலுந் தோறும் [ன்
காருலவுந் திரிகூடக் குற்ருலந் தனிலெனக்குக் கருத்தி லாசை
தாருலவு மதிச்சடையா ரறிந்தன்ருே குறித்தவரந் தந்தா ரிந்நாள். 83

பொ-ரை: அடியேன் மேருவில் இருந்தபோதும், வெள்ளிவரையில் இருந்தபோதும் நிலவுலகில் உள்ள சிவத்தலங்களின் மகிமையை வேதங்களால் பயின்றேன்; அப்பயிற்சியால் மேகம்தவழும் திரிகூடக் குற்றாலமே சிறந்தது என எனக்கு விருப்புமிகுந்தமையால், அதனை அறிந்தே முதல்வன் என்னை இங்குச் செல்லுமாறு பணித்தருளினன்.

உலம்பொருதோள் வானவர்க்கா வுயர்தருதென்
திசைபுகுவேற் கூழி தோறும்
சிலம்பலம்ப நடம்புரிவார் குற்றாலங்
குளிதுறையிற் சிதட னுர்க்கு
வலம்புரியின் மணிகிடைத்த வாறுகிடைத்
ததுதமியன் வறிஞ னாகி
இலம்புகுந்து பலியெடுப்பா னெய்துதிர
வியம்போலு மெய்தி னேனால். 84

பொ-ரை: திரண்ட கல்போலும் புயமுடைய தேவர்கள் குறைதீர இங்கே வந்த யான், ஊழிக்காலத்தும் திருக்கூத்தியற்றும் சிவபிரான் திருக்குற்றாலத்திற் குளிக்கும் துறையில் குருடனுக்கு வலம்புரிஈன்ற முத்துக்கிடைத்தாற் போன்றது, இங்கு வரப்பெற்றது; ஒரு வறிஞர் பிச்சை ஏற்கும்போது பொற்காசு எய்தினாற் போலவும் யான் இத்தலத்தை எய்தப்பெற்றேன்.

மாலோக முதலாகச் சுவலோகந் தவலோக மற்றும் வேண்டே
னுலோகந் தவிர்த்த பிரான் சிவலோகந் தனக்குமினி யாசை பூணேன்
பூலோக கயிலாயங் குற்றாலங் கிடைத்ததினிப் போது மீதே
சாலோக சாமீப சாரூப முதலாய்மேற் சாரும் வீடும். 85

பொ-ரை: மகலோகம் முதலாகச் சொல்லப்படும் மேல் உலகங்களையும், சுட்டறிவை நீக்கி வியாபக உணர்வை நல்கும் சிவபிரான்தரும் சிவபுரத்தையும் எய்த இனி ஆசைகொள்ளேன்; நிலவுலகத்தில் திருக்கயிலையாக உள்ள திருக்குற்றாலவாழ்க்கை ஒன்றே போதும்; இதுவே சாலோகம் முதலாக எண்ணப்படும் நால்வகை வீடுபேறும் ஆகும் எனக்கு.

என்றுமனங் களிப்பேற விழிவழியா
னந்தவெள்ள மேற மேருக்
குன்றுபோற் புயந்தடிப்ப வுடல்புளகம்
போர்ப்பவுரை குளற வாங்கு
நின்றுபர வசமாகி முக்கணு
ரமுதில்வைத்த நினைவி னாலே
மன்றின்மா மறையோரை மதமடக்கும்
வினையமெலா மறந்து போந்தான். 86

பொ-ரை: இங்ஙனம் எண்ணி அன்பின்வயப்பட்டு சிவமாகிய திருவமுதைப் பெறச் சென்ற முனிவர் வைணவர்களைச் சபையில் வெல்லக்கருதிய சூழ்ச்சியை மறந்து சென்றார்.

நிலைகிளர்ந்த கோபுரங்கள் பலசிகர
மெனநிரைத்து நெடிய மேரு
மலைகிளர்ந்த தெனக்கிளர்ந்த வலம்புரிச்சங்
கணிக்கோயில் வருங்கால் வேதக்
கலைகடந்த பெரியதமிழ்க் குறுமுனியை
வடதிசையிற் கடைகாப் பாளர்
இலைகிடந்த சூலத்தா னடியார்க்குத்
தடையெனவந் தெதிர்த்தார் மன்னே. 87

பொ - ரை : கோபுரங்களையே பல கொடுமுடிகளாகக் கொண்டு மேருவைப் போன்ற வலம்புரிச் சங்கக் கோயிலின்வாயில் வரும் போது, வேதங்களைக் கரை கண்ட தமிழ் முனிவரை வடக்குவாயிற்காவலன் சூலபாணிக்கு அன்பர் இங்கு வரப்பெறுர் எனத் தடுத்தான்.

துன்னுகடை காப்பவரோ மறையவரோ தடுத்ததெனச் சொல்லா முன்னர்
பன்னுமறை வேதியரே பரந்துதடுப் பதுநோக்கிப் பரிவி லீர்காள்
பின்னுமதிச் சடையார்க்கும் பெருந்திகிரிப் படையார்க்கும் பேதம் யாதோ
மன்னுறுபத் தவதாரத் தநுக்கிரக நிக்கிரக மறந்தீர் கொல்லோ. 88

பொ - ரை : காவலனு மறையவரா தடுப்பது எனத் தெளிதற்கு முன்னே மறையவரே வந்து தடுக்க, முனிவர் கூறுகின்ருர்; அன்பில்லாதவர்களே! சிவ பிரானுக்கும் திருமாலுக்கும் என்ன வேற்றுமை கண்டீர்கள்? திருமால் பத்து அவதாரங்களில் ஐந்தில் சிவாநுக்கிரகமும், மற்றைய ஐந்தில் சிவபிரானுல் தண்டனையும் பெற்ருர் திருமால் என்னும் புராணவரலாற்றை மறந்துவிட்டீரோ!

களபமெதிர் காத்தபிரான் கண்ணிடந்து சாத்தியநாட் கயிலை யாளி
அளவறுசீர்ச் சலந்தரனை யடர்த்தபடை கொடுத்தவரு ளறிந்தி லீரோ
தளவநிகர் குறுமுறுவல் விருந்தைமயற் பிணிநீங்கத் தம்பி ராட்டி
துளவநறும் பச்சிலைமா மருந்தளித்து மாற்றியதுந் தோற்றி டாதோ. 89

பொ - ரை : கஜேந்திரனைக்காத்த திருமால் அச்சக்கரத்தைத் தம் கண் இடந்து மலராகச் சாத்திச் சிவபூசைப்பயனைப்பெற்றதையும், சலந்தரன் மனைவி யாகிய விருந்தை இறந்துபட, அவள்சாம்பரிற் புரண்ட மாலின் மோகத்தை உமையம்மை துளவப் பச்சிலையை உண்டாக்கி நீக்கியதையும் அறியமாட்டீரோ?

பாரோடும் விண்ணேர்கள் பரந்தோடப் புரந்தரனுர் பதிவிட் டோடத்
தேரோடுங் கதிரோட மதியோட விதியோடத் திருமான் மேனி
காரோடத் தொடர்ந்தோடுங் கடல்விடத்தைப் பரமனுண்டு காவா விட்டால்
ஆரோடு நீரிருப்பி ரெங்கோடி யுயிர்பிழைப்பீ ரறிவி லீர்காள். 90

பொ - ரை : யாவரும் ஓடும்படியும் திருமால் மேனி கறுக்கும்படியும் தொடர்ந்து வந்த ஆலாகலவிடத்தைச் சிவன் உண்டிலனேல், நீர் யாரோடு வாழ்ந்திருப்பீர், எங்கோடி உயிர் பிழைப்பீர்கள்? அறிவு மங்கினவர்களே!

ஒன்றுபல நூலுணர்ந்து முணர்விலீ ருமக்குவிரித் துணர்த்தி னூலும்
என்றுமுண ரீருமது நேமியா னறிவனெங்க ளிறைவன் சீர்த்தி
அன்றியுட லுயிர்போல மாலுமீ சனுமிருப்ப தறியீ ரீண்டு
மன்றுளா ரடியரையோ தடுக்கின்றீர் மாயனையே மறுக்கின் றீரால். 91

பொ-ரை: பொருந்திய பல நூல் கற்றும் நல்லொழுக்கத்திற்கு வாயிலாகிய உணர்வில்லாதவர்களாக ஆனீர்கள்; உமக்கு உணர்த்தினும் உணரமாட்டீர்; சிவன் பெருமையைத் திருமால் அறிவர்; அன்றியும், திருமாலும் ஈசனும் உடலும் உயிரும் போன்று பிரிப்பற்றவர்கள் என்பதனையும் அறிகின்றிலீர்; சிவனடியாரைத்தடுப்பது மாயோனையே தடுப்பதுபோல ஆகும்.

கோதமன்கண் ணுவன்பிருகு துருவாசன் புரந்தரற்குக் குலிச மீந்த
மாதவனே முதலோர்கள் சாபத்தாற் பகுத்துணரீர் மடவீ ரென்று
போதமிலா மறையவர்கள் கடைதடுப்பப் புறம்போனான் புவன மூன்றில்
ஆதிபரா மமரரொரு தட்டுநிற்பத் தானொருதட் டமைய நிற்பான். 92

பொ-ரை: முப்புவனங்களிலும் சிவபிரானும் அமரரும் ஒருதட்டில் அமரத் தாம் ஒரு தட்டில் அமர்ந்து சரியாகநின்ற அகத்தியர், கௌதமர் கண்ணுவர் பிருகு துருவாசர் ததீசிமுதலிய முனிவர் சாபத்தால், பகுத்துணர்வு இழந்து பேதைமை உடையீர் ஆனீர் எனக் கூறி, அறிவில்லாத மறையவர்கள் தடுத்தமையால் வெளியே சென்றார்.

வி-கு: ஆதிபரர் அமரர் என்க.

ஆக்குதவ நிட்டைகளில் வலியரே யெனினுமர னடியார் தம்மை
நீக்குமவர் தமைமுழுது நீக்குவனென் பதுகருதி நீக்கிப் போந்தான்
காக்கரிய வைம்பொறிநாற் கரணமுந்தன் வசத்தடக்கிக் காக்கு மேலோன்
ஊக்கமுடை யவனெடுக்கந் தாக்குதகர் பின்வாங்கு மொடுக்கம் போல. 93

பொ-ரை: ஐம்பொறிகளையும் அகக்கரணங்களையும் தம்வழிச்செல நடத்தும் மேலோர், தவயோகங்களிற் சிறந்தோர் எனினும், சிவனடியாரைப் புறக்கணிப்போர் புறக்கணிக்கத்தக்கோர் என எண்ணி, நன்றாகத் தாக்குதற்குப் பின்னால் பெயரும் தகர்போல, புறம் போனார்.

றுத்திரமாம் பரசமையக் குறும்பெறிந்து
சிவசமயக் கொழுகொம் பாகிச்
சத்திவடி வேல்பிடித்த சரவணசம்
பவனிருக்குந் தலம்வி னவிச்
சித்திரகங் காநதியா முத்தரவா
கினிகமலத் திரைக்கை காட்ட
நத்திரைந்து மணிகொழிக்கும் பொன்னிலஞ்சித்
தென்னிலஞ்சி நகர்மேற் செல்வான். 94

பொ - ரை: வஞ்சனையுள்ள பரசமயக் களைகட்டுச் சிவநெறிக்குக் கொழு கொம்பாக உள்ள வேற்கடவுள் இருக்கும் இடம் வினவி, வடக்குமுகம் பாயும் சித்திரகங்கை திரைக்கையால் திசைகுறிக்க, சங்கு ஒலித்து முத்துக்களை ஈனும் அழகியதடாகங்கள் உள்ள தென் இலஞ்சி நகர்க்குச் செல்வார் ஆயினர் முனிவர்.

மல்லிகையும் பித்திகையு மாதவியுந்
தாதகியு மகிழு மாவும்
குல்லைகளு முல்லைகளும் பாதிரியுந்
தாதிரியுங் குரவுங் கோங்கும்
வில்லுவமும் சந்தனமும் புடைசெறிநந்
தனவனங்கள் விபுலந் தோறும்
பல்லவமென் கரங்கூப்பித் தொண்டர்போன்
மலர்சொரிசெண் பகப்பூங் காவில். 95

பொ - ரை: மல்லிகை, சிறுசண்பகம் முதலியவை மகரந்தம் சொரியும், குரா, கோங்கு முதலியவை பக்கத்தே நெருங்கும் நந்தவனங்கள் விரிந்த இடம் தோன்றும் தளிராகிய கைகூப்பித் தொண்டர்போல் மலர்சொரியும் செண்பக வனத்தில்.

வச்சிரத்தின் கானிமிர்த்து மரகதத்தின் கழுத்துவைத்து மடன்முத் தீன்று
நிச்சவயி டூரியமும் புருடரா கமும்பூத்து நீலங் காய்த்து
முச்சிமிசைக் கோமேதம் விளைந்துபவ ளம்பழுத்து முழுத்த பூகம்
பச்சைமணி வேய்ந்ததெனப் பாசடையால் வெளிமேய்ந்த பந்த ரூடே. 96

பொ - ரை: வயிரம்போலக் கால் உயர்த்தி, மரகதம்போலக் கழுத்து அமைத்து, பாளைகள் முத்தைவிரித்து எப்போதும் வைடூரியம் புட்பராகம்போலப் பூத்து, நீலம் போலக்காய்த்து உச்சியில் கோமேதகம் விளைவதாகிப் பவளம் போல் பழுத்த பாக்குமரம் பச்சை மணிகளைக் கோத்து மூடியதெனப் பச்சிலைகளால் வானத்தை மறைக்கும் பந்தரில்.

சுற்றாற்றின் வரிக்கயல்கள் சோலைதொறுங் குதிபாயத் துமிந்து வீழும்
முற்றாற்றின் கனிமுருகக் கடவுள்சரம் பாயசுரர் முடிகள் காட்ட
மற்றாற்றி னிரிந்தேகும் பவளவாய்த் தூவியனம் வன்கூ ரிட்ட
பற்றாற்றுஞ் சிறைவிடுப்ப வானாற்றி னமரர்குழாம் படர்தல் காட்ட. 97

பொ - ரை: சுற்றுகின்ற ஆற்றில் உள்ள கயல்கள் சோலைகளில் குதித்துப் பாய்தலினால் அறுந்துவிழும் முன் உள்ள தாறுகளின் கனிகள், முருகப்பிரான் அம்பு பாய்தலினால் அறுந்துவிழும் அசுரர் முடிகளைக் குறித்தன; வேறுவழியில் சிதறி ஓடும் பவளம் போன்ற வாயும் வெண் தூவியும் உள்ள அன்னங்கள் சிறை விடுத்தபோது அன்புசெய்யும் தேவர் கூட்டம் முருகனை நோக்கி வருதலைக் காட்டின.

மீனவா ளைப்பகடு வெடி தாவப் புடைபோழ்ந்து வீழ்மாங் கொம்பு
தானவா ரணத்திளைய நம்பிவேல் சூர்மாவைத் தடிதல் காட்டக்
கானவா ரணமுமெழிற் கார்மயிலுங் கலந்துவருங் காட்சி யாட்சி
மானகே தனமொருபா லேனைவா கனமொருபால் வருதல் காட்ட. 98

பொ - ரை: ஆண் வாளைமீன் சடக்கெனத் தாவுதலால் பக்கம் பிளந்து விழும் மாங்கொம்பு விநாயகர் தம்பியாகிய முருகன் கைவேல் சூரனாகிய மாவைத் தடிதலைக் காட்டிற்று; காட்டுக்கோழியும் அழகிய மயிலும் கலந்துவரும் காட்சி முருகனது ஆட்சியைக் குறிக்கும் பெருமையுள்ள கொடியும் அவன்றன் வாகனமும் ஒருமருங்கு வருதலைக் குறித்தன.

மந்தமா ருதந்தவழ்ந்து வழிகாட்ட வுபசரித்து வருகென் பார்போல்
சந்தவிசை குயில்காட்டக் கிள்ளைகளா றெழுத்தோதிச் சமையங் காட்டச்
செந்தளிர்கள் கைகாட்ட மந்தார மலர்பொதுளித் தீபங் காட்டக்
கந்தவே ளிடமிதுவென் ருறுபாய் திரைக்கயல்கண் காட்டச் சென்ருன். 99

பொ - ரை: தென்றல் தவழ்ந்து வழிகாட்டிற்று; குயில் தன் இசையால் உபசரித்து வரவேற்றது; கிளிகள் ஆறெழுத்தோதி முருகனை வழிபடுதற்குரிய காலத்தைக் காட்டின; செவ்விய தளிர்கள் கைபோல் அசைந்து வழி ஒதுங்கி நின்றன; மந்தாரமலர் நெருங்கித் தீபம் போன்றன; ஆற்றில் பாயும் கயல்கள் முருகன் இடம் இதுவே எனக் கண்காட்டின; இந்நிலையில் அகத்தியர் இலஞ்சியை நோக்கிச் சென்ருர்.

விண்படர்சண் பகச்சோலை விண்கிழிப்ப விண்ணிழிவி மானம் போந்து
வண்புவனத் திருந்தனைய சிகரசின கரத்துறையும் வானேர் தேவைத்
திண்கொடிவா ரணமுயர்த்த சேவகனைக் குறமடந்தை தெய்வ யானைப்
பெண்கொடியா மிருநிதிக்கு நடுவளர்சிந் தாமணிபோற் பிறங்கு வானை. 100

பொ - ரை: சண்பகச்சோலை ஆகாயத்தைப் பிளந்தமையால் தேவ விமானம் கீழே வந்துற்றது போன்ற தூபிகளையுடைய திருக்கோயிலில் உறையும் தேவசேனபதியை, கோழிக் கொடியுயர்த்த பெருமானை, தெய்வயானை வள்ளியம்மை என்னும் சங்க பதுமநிதிகளுக்கு இடையேயுள்ள சிந்தாமணி போன்ற முருகவேளைக் கண்களிப்பக் கண்டார் முனிவர்.

தானவர்கு லாந்தகனைச் சைவநெறி வைதிகத்தின் ருய்போல் வானை
வானவர்கற் பகக்காவை வானரச மகுடசிகா மணியை மானக்
கானவர்கள் சிறுகுடிச்சம் பந்தனைக்கந் தனைவேதக் கனியை முக்கண்
ஞானமால் வரைத்தோன்று ஞானவா ரியைக்கருணை ஞான வாழ்வை. 101

பொ - ரை: அசுரர்குலத்திற்கு யமன் போன்றவனை, வைதிக சைவத்தை வளர்க்கும் தாயை, வானவர்க்கு வேண்டுவ ஈவோனை, இந்திரன் மணிமுடியில் உள்ள ஒப்பற்ற மணியை, பெருமையுள்ள வேடர்குலத்தில் சம்பந்தஞ் செய்து கொண்டு வள்ளியை மணந்தவனை, கந்தமூர்த்தியை, வேதப்பயனை, சிவபெருமானுகிய ஞானமலையில் உதித்த ஞானவெள்ளத்தை, அருள்ஞானத்தின் திருவுருவைக் கண்டார் முனிவர்.

பன்னிரண்டு பெருங்கதிரு மொருங்குதிக்கு
முதயபருப் பதங்கள் போலத்
தன்னிரண்டு பொற்குழைமேற் குண்டலங்கள்
குலவுதடம் புயத்தி னுனைப்
பொன்னிலங்கு சிமையவட பூதரத்தி
லருவியன்ன புரிநூ லானைத்
தென்னிலஞ்சிப் பெருமானைச் சகலகலைக்
கொருபெருந்தே சிகனைக் கண்டான். 102

பொ - ரை : பன்னிரண்டு ஞாயிறும் பன்னிரண்டு உதயமலைகளில் தோன்றினுற் போல, பன்னிருபுயங்கள்மேல் ஒளிரும் குழையோடுகூடிய குண்டலங்களை உடையானை, பொற்சிகரத்தையுடைய மேருவில் விழும் அருவிபோல உள்ள முப்புரிநூல் புரளும் மார்பினனை, தென்னிலஞ்சி முதல்வனை, சகல கலைக்கும் ஒப்பற்ற ஒண்குருவாக உள்ளவனை அகத்தியர் கண்டார்.

வாகைவேல் கணைகுலிச மங்குசங்கே
தனமபயம் வலங்கோ தண்ட
மேகமா மணிமழுத்தண் டிலங்கியவங்
கியம்வரத மிடப்பா லாக
யோகமா மலர்க்கரங்க ளீராறு
மவுலிகளோ ராறுந் தோன்றத்
தோகையா மணிவரைமேற் பரிதிநிகர்
பரஞ்சுடரைத் தொழுது வீழ்ந்தான். 103

பொ - ரை : மயிலாகிய நீலவரைமேல் தோன்றும் இளமுளை ஞாயிற்றைப் போல, முடிசூட்டிய மூவிரு முகங்களும், கருவிகள் ஏந்திய பன்னிருகைகளும், இரண்டு திருவடிகளும் உடைய ஆறுமாமுகப்பிரானைக்கண்டு இறைஞ்சினர் முனிவர்; முருகப்பெருமான் வலக்கைகளில் முறையே வெற்றிவேலும், அம்பும், வச்சிரமும், தோட்டியும், கோழிக்கொடியும், அபயமுத்திரையும் இருந்தன; இடக் கைகளில் வில், ஒற்றைமணி, மழு, தண்டு, விளங்கும் இன்னிசைக்குழல், வரத முத்திரை என்பன இருந்தன.

விண்குளிர்செய் மதிமுகங்க ளோராறுங்
கருணைபொழி விழியீ ராறும்
பண்குளிர்மா மறைபழுத்த கனிவாயும்
பரிபுரச்செம் பதுமத் தாளும்
கண்குளிரக் கண்டுகனி வாய்குளிர
வாழ்த்திமலர்க் கரங்கள் கூப்பி
எண்குளிரத் தமிழ்முனிவ னிதயமெலாங்
குளிரமகிழ்ந் தேத்து கின்ருன். 104

பொ - ரை : விண்ணவர்களை மகிழ்விக்கும் மதிபோன்ற ஆறுமுகங்களையும், கருணையைப் பொழியாநிற்கும் பன்னிரு கண்களையும், இசைவரிசையோடு

ஓதப்பெறும் மறைகளை வெளிப்படுத்தும் கொவ்வைக்கனி போன்ற வாயையும், சிலம்பு ஒலிக்கும் தாமரைபோன்ற திருவடிகளையும், கண் இன்புறும்படி கண்டு, வாய் குளிர வாழ்த்தி, கைகூப்பித் தொழுது, எண்ணங்களும் உள்ளமும் குளிர்ந் தமையால் திருமுருகன் பொருள்சேர்புகழை எடுத்துத் துதிக்கின்ருர்.

வேலைநெடுங் கடல்குடித்து வீரனெடுங்
குன்றிடித்த வேலி ஞனே
காலைவரு செங்கதிரே மாலைமதி
யேகயிலைக் கடவுள் வாழ்வே
வாலசவுந் தரிகவுரி திருவயிறு
வாய்த்தமுழு மணியே யென்பால்
பாலையுந்தே னையுமதுரப் பாகையும்போன்
மறைப்பொருளைப் பாலித் தானே. 105

பொ - ரை: வேலையாகிய கடலைச் சுவறச்செய்து, தாரகனுக்கு உதவிய கிரௌஞ்சத்தையும் சூரன் மார்பாகிய குன்றையும் துளைத்த வேல் உடையானே; காலை எழுஞாயிறு போன்றவனே; மாலைமதி போன்று இன்பந்தருவானே; சிவ பிரானுக்கு மகிழ்ச்சி ஊட்டும் குமாரனே; இளமையும் அழகும் உள்ள கௌரி பெருது பெற்ற இளம் பூரணனே; எனக்குப் பாலுந் தேனும் பாகும் கலந்தளித் தாற் போல மறைப்பொருளை விளக்கியருளிய ஞான குரவனே வணக்கம்.

விஞ்சையர்க்கு விஞ்ஜைபொழி மேகமே யவுணவிருள் விடியக் கூவும்
செஞ்சேவற் கொடியுயர்த்த சேவகனே தெய்வமடப் பிடியோ டாடும்
குஞ்சரமே வள்ளிபடர் குன்றமே சூரர்பெருங் குலத்தை மாய்ப்ப
அஞ்சுமுக மமையாதென் ருறுமுக மாகவெழுந் தருளி ஞனே. 106

பொ - ரை: வித்தியாதரர்க்குக் கலைகளைப்பொழியும் மேகமே; அசுரராகிய இருள்கெடக் கூவும் சேவற்கொடியோனே; தெய்வயானையோடு விளையாடும் களிறு போன்றவனே; வள்ளியம்மையாகிய கொடிபடரும் குன்றுபோல்வானே; சூரர்குலத்தை அழிக்க அஞ்சுமுகம் அமையா என்று ஆறுமுகம் கொண்டுவந்த பரஞ்சுடரே வணக்கம்.

வேறு

செங்கைவே லுழவா போற்றி தேவர்தந் தலைவா போற்றி
கங்கையாள் புதல்வா போற்றி கார்த்திகைச் சிறுவா போற்றி
பங்கயத் தடஞ்சூழ் செம்பொற் பணிமதி லிலஞ்சி மூதூர்க்
கொங்கலர் கடப்ப மாலைக் குமரதே சிகனே போற்றி. 107

பொ - ரை: வேலேந்திய செங்கையாய், தேவர்கள் தலைவா, காங்கேயனே, கார்த்திகேயனே, தாமரைக் குளம் சூழ்ந்த, செம்பொற்ருெழில் அமைந்த மதிலை யுடைய இலஞ்சியில் எழுந்தருளிய கடம்பணிந்த குமரகுருவே போற்றி.

போற்றியென் றிறைஞ்சி ரோமம் பொடிப்பமெய் துடிப்ப மேனி
மாற்றிலாப் புளகம் போர்ப்ப வாய்தழு தழுப்பப் பாடல்
சாற்றிநின் றேத்து ஞானத் தமிழ்க்குறு முனியை நோக்கி
ஏற்றமாங் கருணை கூர்ந்தா னிலஞ்சிவாழ் குமர மூர்த்தி. 108

பொ - ரை: இங்ஙனம் போற்றி அன்பின்வயப்பட்டு நின்ற அகத்திய முனிவரிடத்து மிக்க கருணை மிகுந்தவன் ஆனன் குமாரக்கடவுள்.

துதிநல முவந்தோ மிந்தத் தோத்திரம் பயில்வோர்க் கென்றும்
கதிநலப் பொருள்பே ரின்பங் கருதின வருளிச் செய்வோம்
மதிவலோய் நினக்கு வேண்டும் வரமினிக் கேண்மோ வென்னப்
பொதியவிழ் கடப்ப மாலைப் புங்கவ னருளக் கும்பன். 109

பொ - ரை: இத்துதிகளை மகிழ்ந்தோம்; இத்துதியை ஓதுவோர்க்கு என்றும் நல்ல ஞானநெறியும் பொருளும் பேரின்பமும் வேண்டிய வரங்களும் அருள்வோம்; நல்லறிவுடையோய், உனக்கு வேண்டும் வரங்களைக்கேள் என்றான் முறுக்கவிழ்கடப்பமாலை அணிந்த முருகன். அகத்தியர் மேல் கூறுகிறார்:

வேறு

உடல்பொரு ளாவிகட் குடைய தேசிகக்
கடவுளே கண்ணுதன் மணஞ்செய் காட்சியும்
நடநவில் காட்சியு நயந்து காண நான்
வடவரை மிசைத்தவம் வருந்தி யாற்றினேன். 110

பொ - ரை: உடல், பொருள், ஆவி மூன்றிற்கும் உரிய ஞானதேசிகனே, சிவபிரான் இமயத்தில் செய்துகொண்ட திருமணக்காட்சியும் அப்பெருமானுடைய திருக்கூத்தும் விரும்பிக் காண மேருவில் தவம்செய்தேன்.

ஆற்றுறு தவத்தினு லகில மீன்றருள்
கோற்றொடி பெருமணக் குழாத்தி லேகினேன்
போற்றுமுன் புவிமகள் பொருமை யாலெனை
ஏற்றுடைப் பரமர்தென் றிசையி லேவினர். 111

பொ - ரை: அத்தவத்தின் பயனுக இமயத்தில் திருமணக் குழுவிற் சென்றிருந்தேன்; திருமணத்தைக்கண்டு போற்றுதற்குமுன் நிலமகள் ஒருபாற் சாய்ந்தமையால் சிவபிரான் என்னை இத்திசைக்கு அனுப்பினர்.

ஏவிய காலையி லிறைவர் நன்னகர்
மேவிய மாயனை விமல னுக்குபு
பூவினற் பூசனை புரிந்து மாமணச்
சேவையு நடனமுந் தெரிசிப் பாயென்றுர். 112

பொ - ரை: அனுப்பும் போது தமது நன்னகராகிய திருக்குற்றுலத்தில் உள்ள விண்டு மூர்த்தியைச் சிவலிங்கமூர்த்தியாக்கி மலர்களால் வழிபட்டு அவ்விரண்டனையும் காணும்படி உத்தரவிட்டனர்.

அன்னவா ருலயத் தடையுங் காலையில்
சன்னிதி மறையவர் தடைசெய் தார்த்தனர்
நின்மலன் றிருவரு ளஞ்சி நீங்கினேன்
இன்னதற் குறுதிநீ யருளென் றேத்தினன். 113

பொ - ரை : அப்படித் திருக்குற்ருலத்தில் திருக்கோயிலில் செல்லும்போது, அங்குள்ள மறையவர் என்னை வரத் தடைசெய்து ஆரவாரஞ் செய்தனர்; இறைவன் திருவருளுக்கு அஞ்சி இங்குவந்தேன்; இதற்கு உறுதியை நீரே அருளல் வேண்டும்என்றனர் முனிவர்.

வேறு

தஞ்சமென மாமுனி தயங்கிமொழி போதில்
அஞ்சலிது கேண்மதி யமைந்தவுப தேசம்
வஞ்சமறை யோரையவர் வஞ்சவுரு வாலே
செஞ்சமுற வேறல்செய மென்றமரர் தேவன். 114

பொ - ரை : உனக்கே அடைக்கலம் என முனிவர் வருந்திக்கூற, திருமுருகன் அஞ்சற்க! இதுகேள்! பொருத்தமான அறிவுரையாவது: கரவுள்ள வேதியர்களை கரவுள்ள வடிவாலே (அவர் போலப் பாகவத வேடங்கொண்டு) திருத்தம் உற வெல்லுதலே உண்மை வெற்றி என மொழிந்து, மேலும்கூறினன்.

கூறுமவர் கோலமொடு கோயிலிடை யேகி
வீறுதமி ழாலரியை வேதமனு வாலே
யாறுபுனை வேணியர ஞதல்புரி பூசை
ஏறுமகு டாகம மெனுவருள்செய் தானல். 115

பொ - ரை : சொல்லப்படும் அவர் கோலமே கொண்டு கோயிலுட் சென்று அரியை மேம்பட்ட தமிழாலும் வேதமந்திரத்தாலும் சிவனுகச்செய்; அச் சிவபிரானுக்குப் பின்னிகழ் வழிபாடு மகுடாகமமுறை ஏறும் என்று அருள் செய்தான்.

அத்தகை யயிற்கடவு ளற்புத முரைப்ப
வித்தக முனித்தலைவன் மெய்ப்புளக முற்று
முத்தனை யருச்சனைசெய் முற்கலை யனைத்தும்
உத்தம வெனக்கரு ளெனத்தொழு துரைத்தான். 116

பொ - ரை : வியப்புத் தோன்ற இம்முறையை வேற்பெம்மான் உரைப்ப, முனிவர் மெய்ப்புளகங்கொண்டு அநாதி முத்தனுகிய சிவபிரானை வழிபடும் மகுடாகம விதிமுறைகளை, உத்தம குருவே, எனக்கு அருள்புரிக எனத் தொழுது வேண்டினர்.

தீதறு முனிக்குயர் சிவாகம மனைத்தும்
ஓதுகலை மற்றுமுப தேசமுணர் வித்தான்
ஆதிபரன் வைத்தருளு மப்பொருளை முன்னுள்
மாதுமை கையிற்குழவி யாயுணரும் வள்ளல். 117

பொ - ரை : பண்டு பரமசிவன் அம்மைக்கு அறிவுறுத்தபோது அம்மை கைக்குழந்தையாயிருந்தே முற்றும் கேட்டுணர்ந்த ஞானவள்ளல், குற்றமற்ற முனிவர்க்கு ஆகமம் முழுவதையும் மற்றும் விரும்பிக்கற்கும் கலைகளுடன் பக்கத்திலிருத்தி உணர்த்தியருளினன்.

ஓத்தவயன் மாலுமுண ராதவுப தேசம்
அத்தன்முரு கேசனநு பூதியொடு பெற்ருன்
மத்தமலே யாசல மகாமுனிவ னம்மா
மெய்த்தவ மலாலுலகின் மிக்கபொரு ளுண்டோ. 118

பொ-ரை: உண்மைத் தவமன்றி மக்கட்கு உறுதி பயக்கவல்ல வேறு பொருள் உலகில் இல்லே; அதனுல், குறுமுனிவர் தமக்குள் ஒத்த நிலேயினராகிய அயனும் மாலும் பெறுதற்கு அரிய அறிவுரையை முருகேசனது அநுபவத்தோடு உடன் பெற்ருர்.

நாதனநு பூதிகலே ஞானநிறை வேறி
மாதவ புராதன மகாமலேய யோகி
ஆதியுப தேசகுரு வானமுரு கேசன்
போதனேய தாடொழுது பூசனேசெய் வானுல். 119

பொ-ரை: பரம்பொருளேத் தலேப்பட்டுணரும் மெய்யுணர்வோடு அதனே விளக்க வல்ல கலேஞானத்தையும் மாதவம் உள்ள பழைய பெரிய அகத்திய முனிவர் கைவரப்பெற்றுத் தமக்கு உயர்ந்த உறுதியை அணுக்கமாக இருத்தி அறிவுறுத்தருளிய குமரகுருபரனேயே அடிதொழுது வழிபடுவார் ஆயினர்.

வேறு

ஐவகையாஞ் சுத்திமுறை கந்ததயி லங்கவிய மமுதைந் தாட்டி
நெய்பொழிந்து தயிர்தேன்பால் கன்னல்கனிச் சாரமிள நீர்தண் சாந்தம்
மெய்வளர்மந் திரகலச முதலாய வபிடேகம் விதியாற் செய்து
கைவருமந் திரபுட்ப மந்த்ரான நிறைவேற்றிக் கலேகள் சாத்தி. 120

பொ-ரை: ஐவகைச் சுத்திசெய்து முறையாக வாசனேத்தைலம், பஞ்ச கௌவியம், பஞ்சாமிருதம், நெய், தயிர், தேன், பால், கருப்பஞ்சாறு, பழச்சாறு, இளநீர், குளிர்ந்த சந்தனம், ஸ்நபனம், முதலாகிய அபிடேகங்களேச்செய்து, மந்திரபுட்பஞ்சாத்தி, திருவொற்ருடைக்கு முன்னர் மந்திரான்னம் நிவேதித்து, உடை ஆடை அணிந்து.

பொருத்துபுரி நூல்புனேந்து மான்மதங்குங் குமங்கலவை புழுகு சாத்தித்
திருத்துமணிப் பூணணிந்து தார்சூட்டிச் சுத்தான்னஞ் சிறப்ப வூட்டிக்
கருப்புரதீ பங்கொடுத்துப் பண்ணியங்கண் முக்கனிகள் கருனே தீம்பால்
வருக்கவகை யமுதேற்றிச் சோடசத்தாற் பணிமாறி மலர்க டூவி. 121

பொ-ரை: முப்புரிநூல் அணிந்து, வாசனேக்கலவைச் சாத்தி, ஆபரணம் அணிந்து, மாலே சூட்டி, சுத்தான்னம் நிவேதித்து, கருப்பூரச் சுடர்காட்டி, பண்ணியம், பழவகை, பொரிக்கறி, பால் முதலியவகைகளே நிவேதித்து, பதினறு வகை உபசாரமும் முற்றி, தத்துவமலர் தூவித் துதிப்பாராயினர்.

வேறு

எந்தாய் போற்றி பரங்கிரியி லிறைவா போற்றி செந்தூர்வாழ்
செந்தா போற்றி பழனிமலைத் தேவே போற்றி தேவேசன்
மைந்தா போற்றி யோகத்தில் வாழ்வே போற்றி சோலைமலைக்
கந்தா போற்றி திருவிலஞ்சிக் கடவுள் போற்றி யெனத்தொழுதான். 122

பொ - ரை: எமக்குத் தந்தையே, திருப்பரங்குன்ற இறைவா, திருச்செந்தூர் வாழ் சேந்தனே, பழனிமலைத் தேவே, இறைவன் மைந்தா, யோகத்தில் காணப்படுவோனே, சோலைமலைக் கந்தசுவாமி, இலஞ்சிவாழ் முருகா வணக்கம்; எம்மைக் காக்க.

வி - கு: போற்றி - வணக்கம்; காக்க என இருபொருளும் பயக்கும்: முன்னைய பொருட்கு அச்சொல் பெயர்; பின்னையதற்குப் போற்றிய என்பதன் விகாரமாகிய வியங்கோள் வினைமுற்று.

தொழுது வணங்கித் துதித்துருகுஞ் சுருதித் தமிழ்மா முனிக்கிரங்கி
முழுதுங் கருத்து நினைத்தவெலா முடிக்கும் படிக்கு வரங்கொடுத்தான்
இழுதுங் குடருந் தசைநிணமு மிறைஞ்சா வவுண ருடல்குடைந்து
கழுதும் பருந்தும் விருந்தருந்தக் கைவே றுரந்த குகப்பெருமான். 123

பொ - ரை: இங்ஙனம் துதித்துத் தொழுத முனிவருக்கு முருகன் அவர் கருத்தில் நினைந்த எல்லாம் முழுவதும் முடிக்கும் வரத்தைக் கொடுத்தான்; இறைஞ்சாத அசுரர் உடலைக் குடைந்து குடர் முதலியவற்றைப் பேய்க்கும் பருந்துக்கும் உணவாகத் தரும்படி கைவேலை அனுப்பிய குகப்பெருமான்தான் அவன்.

குருவாங் குகவே ளருள்பெற்றுக் கும்ப முனியன் றிரவிலொரு
திருவா லுகத்தாற் சிவபூசை செய்து மறுநாட் சிறுகாலை
ஒருவா லுகத்தாற் பூசனைசெய் துபய வடிவு மொன்ருக்கி
இருவா லுகநா யகனெனவே யியற்றி யாரா தனைபுரிந்தான். 124

பொ - ரை: குமாரக்கடவுள் அருள்பெற்று அன்றிரவு வெண் மணலாற் சிவலிங்கம் ஆக்கி வழிபட்டார் முனிவர்; மறுநாள் வைகறையில் அங்ஙனமே வேறொரு இலிங்கம் அமைத்து வழிபட்டுப் பின் இரண்டு வடிவையும் ஒருவடிவாக்கி இருவாலுகநாயகன் எனப் பெயர் சொல்லி மீண்டும் பூசித்தார்.

வேறு

வாலுக ரிருவ ரானர் வடிவினை யொருவ ராக்கிப்
பாலுகந் தருச்சித் தேத்தும் பான்மையே பரிவா யுன்னி
மேலுக மயன்மா லான விமலனை விமல னுக்க
நாலுகம் படைத்தான் மைந்த னனிவிடை கொண்டு போந்தான். 125

பொ - ரை: இருவாலுக நாயகரையே வழிபடும் தன்மையை அன்போடு கருதி, முன் உகங்களில் முறையே அயனும் மாலுமாக இருந்து மக்கள் வழிபாட்டை ஏற்ற மூர்த்தியைச் சிவலிங்கமாக்குவதற்கு விடைபெற்றுச்சென்றார் அயன்மைந்தராகிய அகத்தியனார்.

நாதனே திரிகூ டத்து நான்முகன் முகுந்த னுனன்
ஆதலா லவனைப் போற்று மன்பர்க்கும் வழக்கா மென்று
வேதமா மறைக ளெல்லாம் விரித்தருள் விரிஞ்ச னீன்ற
மாதவன் கணத்திற் கொண்டான் மாதவன் கணத்தர் கோலம். 126

பொ - ரை: வேதங்களை உலகத்திற்குக் கொடுத்த அயன் மகனுகிய சிறந்த தவமுடைய அகத்தியர் வைணவக் குழுவினர் கொள்ளும் கோலத்தைக் கொண்டார்; திரிகூடநகரில் சிவபிரானே அயனுகவும் திருமாலாகவும் இருந்தார்; ஆதலால், உடையானுக்கு அடுத்தது அவன் அடியர்க்கும் அடுக்கும் எனக் கருதி அக்கோலத்தைக் கொண்டார்.

மட்டவிழ் துளப மாலை பவித்திர மாலை பூண்டு
பொட்டணி நுதன்மே லூர்த்த புண்டரந் துலங்கச் சாத்திப்
பட்டவர்த் தனர்கள் சூழப் பரமபா கவத னுகி
எட்டெழுத் தோதி யுள்ளே யுண்மையெட் டெழுத்தை யுன்னி. 127

பொ-ரை: துளவமாலை, தருப்பைமுடிச்சுகள் உள்ள மாலை அணிந்து பொட்டணிதற்குரிய நெற்றியில் மேல் நோக்கிய சந்தனக்குறி விளங்கச் சாத்தி, உத்தரீயம்தரித்தவர்கள் சூழ்ந்துவர, உண்மையானபாகவதர்போன்று வெளியே நாராயண மனுவை உச்சரித்து, அகத்தே உண்மையை எட்டுதற்குச் சாதன மாகிய சிவமூலமனுவை எண்ணி.

காதிடைத் துளவ வேடங் கனககுண் டலங்கள் சாத்தி
ஆதியச் சுதன்கோ விந்த னுலமர் கடவு ளென்ன
ஓதிய பொதுநா மங்க ளுரைத்துநம் பெருமான் சங்க
வீதியிற் புகுவான் போந்தான் வேதியர் சங்க வீதி. 128

பொ - ரை: செவிகளில் துளவ வேடமும் பொற்குண்டலங்களும் அணிந்து, ஆதி, அச்சுதன், கோவிந்தன், ஆலமர்கடவுள் என்னும் பொதுப்பெயர்களை உரைத்து, நம்முதல்வன் சங்கவீதியிற்புகவந்தார்; வேதியர்கூட்டத்தையுடைய தெருவில்.

வி - கு: அச்சுதன் - அழிவில்லாதவன், கோவிந்தன் - இந்துவைக் கண்ணுக உடையவன் எனச்சிவபிரானுக்குக்கொள்க. ஆலமர்கடவுள் - ஆலிலையிற்பள்ளி கொண்டோன், ஆல் நிழலில் இருந்து அறம் உரைத்தோன்.

வரநதி படிந்து சந்தி வந்தனை புரிந்து தேவை
விரைவொடு பணிகு வான்போன் மேவலும் பனவ ரெல்லாம்
குரவனென் றெழுந்து வீழ்ந்து குடுமியஞ் சென்னி தாழ்த்துப்
பரவுவார் பணித லெல்லாம் பகவற்கே யாக வென்பான். 129

பொ - ரை: மேலான சித்திராநதியில் முழுகி, சந்தி வணக்கம் செய்து, விரைவாகத் திருமாலைப் பணியவருவார் போலச் சென்றபோது, வைணவப் பார்ப்பார் எல்லாரும் தம் ஆசிரியன் என்று எழுந்து இறைஞ்சிச் சிகையோடு கூடிய முடியைத் தாழ்த்திப் பரவுவார் ஆயினர்; அவர்தம் வணக்கம் எல்லாம் (முக்கட்) பகவனுக்கே ஆகுக என வாழ்த்தினர்.

பொருவிலோ யாண்டு நின்று போந்தனை யென்பார்க் கெல்லாம்
திருமலை முளரிக் கண்ணன் றிருப்பதி யிருந்தோ முன்செய்
பரிவுறு தவத்தா லீண்டுத் திருமுற்றம் பரவ வந்தோம்
மருவுபூ சனைக்கு வேண்டும் வகையெலாங் கொணர்மி னென்று. 130

பொ - ரை: 'ஒப்பில்லாதவரே! நீர் எங்கிருந்து வருகின்றீர்' என்றார் சிலர்; அவர்களுக்குக் கூறுகின்றார்: திருவேங்கடத்துத் தாமரைக்கண்ணன் திருப்பதியில் இருந்தோம் (திருக்கயிலை அங்கிக்கண்ணன் திருப்பதியில் இருந்தோம்) முன்செய்த தவப்பயனால் இங்குத் திருமுற்றம் பரவ வந்தோம்; பொருந்திய பூசைக்கு வேண்டியவற்றைக் கொணர்க என்று கூறினர்.

வி - கு: திருமலை - திருக்கயிலை. திருவேங்கடம், முளரி - நெருப்பு, தாமரை. வகை - பொருள்கள்.

அருமறை பயில்வோர் வீதி யகன்றுநம் பெருமான் வெற்றித்
திருநெடுங் கொடிநின் றுடுஞ் செயத்தம்ப மிறைஞ்சி யேத்தி
மருமலர்க் கரங்கள் கூப்பி வயிணவர் கணங்கள் சூழ
ஒருநெடு வசந்த வீதி யுயர்வலம் புரிந்து போந்தான். 131

பொ - ரை: இங்ஙனம் கூறிப் பார்ப்பனர் தெருவைக் கடந்து, பெருமானது கொடிமரத்தடியில் வீழ்ந்து இறைஞ்சி, ஏத்தி, கைகூப்பி, வைணவர் கூட்டம் சூழத் தென்றல் வீதியை வலமாகச் சூழ்ந்து வந்தார்.

வேறு

பொருவில்சின கரங்கடவுள் வடிவாக வாயிலைந்தும் பொறிக ளாகத்
திருநெடுமால் வலம்புரியே மறுகாகத் திகிரிமணிச் சிகரமாக
மிருதிபதி னெட்டுமுயர் திருவாயிற் படியாக விளம்பு மூலச்
சுருதிகுறும் பலவாக விளங்குமதி சயம்பரவித் தொழுது போந்தான். 132

பொ - ரை: ஒப்பற்ற திருக்கோயில் சிவனுக்கு மாயோனாகிய உடம்பாக, ஐந்துவாயில்கள் ஐம்பொறிகளாக, திருநெடுமால் ஏந்தியுள்ள வலம்புரிச்சங்கே சங்கவீதியாக, அவர் மற்றொருகையில் ஏந்திய சக்கரம் அழகிய சிகரமாக, பதினெண்மிருதிகளும் திருவாயிற்படியாக, முதல் நூலாகிய வேதமே குறும்பலாவாக விளங்கும் அதிசயத்தைத் துதித்து வணங்கி உட்சென்றார்.

வி - கு: சிவபிரான் திருமாலுக்கு அந்தரியாமி; திருமால் சிவனுக்கு உடம்பு.

வடபெருங்கோ புரவாயில் புகுந்துவயி
ரவரிருக்கை வணங்கி மேருத்
தடவரைசூழ் கதிரவன்போற் கோயில்வலம்
புரிந்துசன்னி தானம் போற்றிக்
குடதிசைவா யிலுக்கிறைவன் வீற்றிருப்பும்
பிறதெய்வக் குழாமும் போற்றிப்
படலைமதி புனைசடிலச் சோமீசற்
பணிந்துபரை பீடம் போற்றி. 133

பொ - ரை: வடக்குக் கோபுரவாயிலில் நுழைந்து, வயிரவர் இருப்பை வணங்கி, மேருவை வலம் வரும் ஞாயிற்றைப்போல வலமாக வந்து, கிழக்கே நோக்கிய திருமுன்பைப் போற்றி, மேற்றிசை வாயிலுக்கு இறைவனுகிய ஐயனுர் இருக்கையும், பிற ஆவரணத்தெய்வங்களையும் போற்றி, விரிந்த சடையில் மதி புனைந்த சோமநாதரைப் பணிந்து பராசத்திபீடத்தைத் தொழுது போற்றி.

வேறு

பொருவரு மாடக் கோயில் புகுதலுந் துவார பாலர்
ஒருவர்நேற் றடைந்தா ரென்ன வொருவர்நா மறியோ மென்ன
இருவரை யமைத்துள் போகி யிணைவிழி களிப்பக் கண்டான்
திருவளர் துளபமார்பிற் செம்பொன்மா மவுலி யானை. 134

பொ - ரை: ஒப்பற்ற மாடக்கோயிலுட் புகுந்தவுடன், வாயில் காப்போரில் ஒருவர் நேற்று வந்தவர்தாம் இவர் என்ன, மற்றொருவர் இவரை நாம் முன் அறியோம் புதியரே என்ன, அவ்விருவரையும் வாய் பேசாதபடி கையால் அமர்த்தி உட்சென்று துளபமாலையும் பொன்முடியும் உடைய திருமாலைக் கண்டார் அகத்தியர்.

கருணையங் கடலாய் மேனி பாசடைக் காடாய்க் கண்வாய்
திருமுகங் கரங்கா லுந்தி பங்கயத் திரள்கள் பூப்ப
ஒருகரம் பணில மேந்தி யொருகரந் திகிரி தாங்கி
இருசுட ருதய நீலத் தடவரை யெனநின் ருனை. 135

பொ - ரை: திருமாலின் தோற்றம், ஒரு கையில் சங்கும் மற்றொன்றில் சக்கரமும் ஏந்தி நின்றமையின், சந்திரனும் ஞாயிறும் இருபக்கத்தில் உதயமாகும் நீலமலைபோல் இருந்தது; திருமேனிப் பச்சிலைக்காடாகவும் கண்ணும், வாயும், முகமும், கைகளும், பாதங்களும், உந்தியும் தாமரைகளாகவும் விளங்கின; மொத்தத்தில் கருணைக்கடலாக அவர் தோற்றம் இருந்தது.

கண்டுதன் மனமுங் கண்ணுங் களிபெறப் பரவ முன்னர்
அண்டர்தம் பெருமான் பூசைக் கந்தணர் கொணர்ந்த யாவும்
கொண்டன னகத்துள் ளாக்கிக் குழுவெலாம் புறத்துப் போக்கித்
திண்டிறற் கோயில் வாயி றிருக்கடைக் காப்புச் செய்து. 136

பொ - ரை: இத்திருவுருவை மகிழ்ச்சி பொங்கப் பரவினர் முனிவர்; தேவர் தம்தலைவன் (இடையர் இறைவன்) பூசனைக்கு வேதியர்கொண்டுவந்த பொருள்கள் எல்லாவற்றையும், மூர்த்தியின் முன்னர், கோயிலுக்கு உள்ளே அமைத்துக் கொண்டு, மக்கள் கூட்டத்தை வெளியே போக்கித் திருக்கோயிலின் திருக்கடையை வலிய தாளிட்டு மூடினர்.

வி - கு: அண்டர் - தேவர், இடையர்.

பச்சைமால் வரைபோன் மேனி பவளமால் வரைபோ லாக
இச்சைகூர் மதத்தாற் கூர்ம வேட்டுவத் தியானஞ் செய்து
செச்சைவெண் ணீறு சாத்தித் திருவக்க மாலை சூட்டி
இச்சையி லொருமை கூர விருமையால் வழுத்தல் செய்வான். 137

பொ - ரை: யோகக்கலை வல்லுநர் செய்யும் ஆமை, வேட்டுவன் தியானஞ் செய்து பச்சைமலையைப் பவளமலைபோலாகச் செய்தார் முனிவர்: அதாவது, நினைந்தும், தொட்டும் திருமால் உருவைச் சிவத்திருவுருவாகச் செய்தார்; பின், சந்தனக் குழம்பும் திருவெண்ணீறும் சாத்தி உருத்திராக்க மாலையும் சூட்டி மன ஒருமையோடு அன்புசெய்து இருபொருள் பயக்கும்படி துதிசெய்வார் ஆயினர்.

முத்தனே முளரிக் கண்ணா மூலமென் றழைத்த வேழப்
பத்தியி னெல்லை காக்கும் பகவனே திகிரி யாளா
கத்தனே யருள்கூற் கொண்ட கந்தரக் கறுப்பி னானே
நத்தணி செவிய கோல நாடுதற் கரிய நம்பி. 138

பொ - ரை: முத்துப்போன்றவனே, தாமரைக் கண்ணனே, ஆதிமூலம் என்றழைத்த யானையின் அன்பளவில் காத்த பகவானே, சக்கரப்படையானே, கர்த்தாவே, அருளைக்கருக்கொண்ட மேகம்போன்ற கரிய நிறத்தனே, சங்கை அணிந்த செவ்விய கோலத்தையுடைய காண்டற்கரிய புருடோத்தமனே.

அநாதிமுத்தனே, அங்கியைக் கண்ணாக உடையானே, வேரில் மென்மைதழைத்த மூங்கிற் பத்திகளையுடைய நெல்லையம்பதிக் காவலனே, திருக் கயிலையில் உள்ளவனே, எல்லா உலகத்திற்கும் கருத்தாவே, அருள் கருக் கொண்டுள்ள நீலகண்டனே, சங்கக் குழையணி காதையுடையானே, இன்ன தன்மையன் என்று அறியவொண்ணா மேம்பாடுடையானே.

அண்டர்தாம் பிழைக்குங் கட்டா லமர்கறைக் கண்ட மேயாய்
அண்டர்தாம் பிழைக்குங் கட்டா லமர்கறைக் கண்ட மேயாய்
வண்டுள வலங்க லார்க்கு மருமத்தே னிதழி யுள்ளாய்
வண்டுள வலங்க லார்க்கு மருமத்தே னிதழி யுள்ளாய். 139

பொ - ரை: இடையர் தாம்பால் இழைக்கும் கட்டால் உரலில் அமரும் வரம்பு உடையாய், தேவர் தாம் உய்யும் வேண்டுகோளால் நஞ்சையுண்டு நிறுத்திய கழுத்தை உடையாய், வளப்பமான துளவமாலை நிறைக்கும் மார்பில் தேன்போலும் இனியஅதரத்தையுடைய திருமகளை உடையாய், வண்டுகள் உள்ள மாலையாகக் கட்டும் தேன் உள்ள கொன்றையை உடையாய்.

ஆழியும் வளையு மேற்பா யணிமணிப் பணிகள் பூண்பாய்
ஆழியும் வளையு மேற்பா யணிமணிப் பணிகள் பூண்பாய்
வாழியந் தரங்க மாக மருவுமா திரையை யாவாய்
வாழியந் தரங்க மாக மருவுமா திரையை யாவாய். 140

பொ - ரை: சக்கரமும் சங்கும் ஏந்தியுள்ளோய், அணிகளாக இரத்தின ஆபரணங்களைப் பூண்பாய், பிச்சைப் பெருமான் கோலத்தில் பெண்கள் நெகிழ்த்த மோதிரமும் வளையலும் ஏற்றுக்கொள்வாய், அழகிய மணிகளைத் தலை யில் உடைய பாம்புகளைப் பூண்டுகொள்வாய், அந்த அரங்கமாகப் பொருந்திய பெரிய அலைகளின் இடத்தாய் ஆவாய், இரகசியமாகப் பொருந்தும் திருவாதிரை நாளை உடையை ஆவாய்.

முத்தலை வரையாய் போற்றி முண்டகக் கண்ணு போற்றி
அத்தனே போற்றி யென்றென் றங்கையைப் பங்க சாதக்
கொத்தென முடிமேற் சாத்திக் குடுமியங் கயிலைக் குன்றில்
உத்தம னருளிச் செய்த வுண்மையைக் கருத்தி லுன்னி. 141

பொ - ரை : திரிகூடமலையை உடையானே போற்றி, தாமரை (நெற்றி)க் கண்ணனே போற்றி, தந்தையே போற்றி என்று, இவ்வாறு போற்றி, தம் அகங் கையைத் தாமரைக்கொத்துப்போல முடிமேல் வைத்து, திருக்கயிலை இறைவன் கூறிய உண்மையை எண்ணி.

வேறு

முறுகுவலம் புரிக்கரத்து மான்குறுகப் பெரியதுழாய் முடியின் மீது
சிறியமதிக் கலைகுறுகத் திலகநுதல் விழிகுறுகச் செழும்பூண் மார்பில்
இறையரவப் பணிகுறுக நிகிலவுல கமுநிறைந்து நீண்ட மேனி
குறுகுகுறு கெனப்பரவித் திருவடிக்கீழ்க் குறுமுனிவன் குறுகுங்காலை. 142

பொ - ரை : திருகலாக உள்ள சங்கம் ஏந்திய கையில் மான் அணுக, துழாய் அணிந்த முடிமீது பிறைமதி அணைய, பொட்டணியும் நெற்றிவிழி உண்டாக, செம்மையான மார்பில் அரவமாகிய அணிகள் வந்து அணைய, உலகம் அளக்க உயர்ந்த வடிவு குறுகு குறுகு எனப் போற்றி, திருவடிக் கீழ்க் குறுமுனிவன் சேர்ந்தபோது.

தவம்பெருக வறம்பெருகப் பொருள்பெருகத்
தெருள்பெருகச் சைவ மோங்கிச்
சுவம்பெருக மனுநீதித் துறைபெருக
நிறைபெருகச் சுருதி வாய்மை
நவம்பெருகச் சரியாதி சதுட்டயங்கள்
நனிபெருக ஞால மெல்லாம்
சிவம்பெருகக் குறுகியருள் பெருகினுன்
குற்றுலத் தேவ தேவன். 143

பொ - ரை : உலகத்தில் தவமும், உறுதிப்பொருள் நான்கும், சிவநெறியும், நன்மையும், கலைஞானத்துறைகளும், சரியை முதலிய சாதனங்களும் பெருகிப் பொங்கும் மங்களம் பெருகத் தன்மேனி குறுகி அருள் பெருகினுன் திருக் குற்றுலத்து மாதேவன்.

வேறு

சித்திறற் கரும்பொன் மேனி செம்பொனும் படிபோற் கும்பன்
பத்தியா லுருகி மாலாம் படிவனே பரம னுனை
சத்துட னசத்துமாகிச் சதசத்து மான ஞானம்
நித்திய நிமலா னந்த நிட்கள சகள மூர்த்தி. 144

பொ - ரை: செம்பொருளும், நிலையில் பொருளும், அவ்விரண்டையும் சார்ந்து இருதிறனும் உடையதாயுள்ள சீவான்மாவும், தூய அறிவின்ப வடிவும், அருவுருவும் எல்லாம் ஆன முதல்வன் சித்துவல்லோரால் இரும்பு பொன்னைப் போல, அகத்தியர் அன்பால் நீலமேனித் திருமால் வடிவுமாறிப் பொன்மேனிப் பரமன் ஆனான்.

ஆர்த்தன சுருதி வேத மதிர்ந்தன தெய்வப் பேரி
தூர்த்தனர் சுரர்பூ மாரி தொழுதன வடியார் சங்கம்
சீர்த்தன வுயிர்க ளெல்லா ந்திரிகூடப் பெருமான் சீர்த்தி
போர்த்தன வுலக மூன்றும் பொலிந்தது திருவெண் ணீறு. 145

பொ - ரை: வேதக்கேள்வி முழங்கிற்று; பேரி அதிர்ந்தது; வானவர் பூமழை பொழிந்தனர்; அடியார் கூட்டங்கள் தொழுதன; உயிர்களெல்லாம் சிறப்பு எய்தின; திரிகூடமுதல்வர் பெருமை மூவுலகும் நிறைந்தது; திருவெண்ணீற்று ஒளி பரவிற்று.

கடுக்கையஞ் சடிலக் குன்றைக் கருணையங் கடலை காணூஉ
நடித்தன முனிவன் பாத நயந்துகூச் செறிந்து ரோமம்
பொடித்தன புளக மேனி போர்த்தன புயமு மார்பும்
தடித்தன மனமும் வாக்குந் தளிர்த்தன தமிழ்ச்சொல் வேதம். 146

பொ - ரை: கொன்றை முடிக்குழகனை, திருவருள் வெள்ளத்தைக் கண்ட வுடன் முனிவர் அன்புவயப்பட்டு ஆனந்த மேலீட்டால் கூத்தாடி தமிழ் வேதத் தாற் பரவினர்.

ஆனந்த வாரி மூழ்கி யநுபூதி விபூதி சாத்தி
ஞானந்தன் வடிவ மான நன்னகர்ச் சிவபி ரானைப்
பூநந்த வனத்திற் பூவாப் பூவினாற் புனித நீரால்
மோனஞ்செய் தியான பூசை முனிவரன் முடித்துப் பின்னும். 147

பொ - ரை: இனி, முனிவர் பூசனைபுரியத் தொடங்கினர்: அருள்ஞானமே வடிவமாகிய திருநகரில் உள்ள பேரின்பச் சிவபிரானை, மோனநிலையில் அகத்தே கண்டு, பேரின்பமாகிய அமுதால் மூழ்குவித்து, அநுபவ ஞானமாகிய திருநீறு சாத்தி, அழகிய நந்தவனத்திற் பூவாத, கொல்லாமை முதலிய எண்வகை மலர் களால் அருச்சித்து, இங்ஙனம் தூய்மை என்னும் நீரால் மானத பூசையை முடித்தார்.

அங்கையா லருச்சித் தேத்த வந்தணர் கொணர்ந்த வெல்லாம்
செங்கையாற் கரகநன்னீர் தெளித்துநற் சுத்தி செய்து
கங்கைநீர் செழுந்தேன் கன்னல் கனிகளுஞ் சுரபி யைந்தும்
சங்கைசே ரமுத மைந்துந் தமிழ்தரு மலையச் சாந்தும். 148

பொ - ரை: புறப்பூசையின் பொருட்டு கொணரப்பெற்ற பொருள்களைத் தமது கமண்டல நீரால் தெளித்துத் தூய்மைசெய்து, கங்கைநீர், தேன், கருப்பஞ் சாறு, பழச்சாறு, பஞ்சகௌவியம், அளவுப்படிகூட்டிய பஞ்சாமிர்தம், தமிழோடு கலந்து மணக்கும் சந்தனக்குழம்பு.

தக்கவா ரமுத மாதி சதவுருத் திரத்தி னுலே
முக்கணு ரமுதை யாட்டி முருகுமான் மதங்கற் பூரம்
மிக்கபூங் கலவைச்சேறு மெழகிவெம் புலித்தோ லாடை
திக்குடை கழித்துப் பொன்னந் திருவுடை மருங்கிற் சாத்தி. 149

பொ-ரை: தகுந்த தபன நன்னீர் முதலியவற்றுல் சத உருத்திர சூக்தம் சொல்லி முக்கட் செல்வரை முழுகுவித்து, வாசனைக்கலவையை இறைவன் திருமேனியிற் சாத்தி, புலித்தோலும் திகம்பரமும் உடையாரைப் பொற்றுகில் உடுப்பித்து.

பனகமா மணிகள் பூண்டு தலைமாலை பரித்து ளாற்குக்
கனகமா பணிகள் பூட்டிக் கடிமலர் மாலை சாத்தி
அனகமா மனுவா லட்ட பாலமு தருத்தி யைந்தாம்
இனமுறு வாசஞ் சேர்த்திப் பாசிலைச் சுருள்க ளேற்றி. 150

பொ-ரை: சர்ப்பாபரணமும் அவற்றின் மணிகளும் தலைமாலையும் பூணும் இறைவனுக்குப் பொன்னணிகள் பூட்டி, மலர்மாலை சாத்தி தூயமந்திரத்தால் காய்ச்சியபாலும் அன்னமும் நிவேதித்து, ஏலம், கத்தூரி, இலவங்கம், சாதிக்காய், பச்சைக்கருப்பூரம் என்பவற்றேடு பாக்கும் வெற்றிலையும் ஏற்பித்து.

செழுமணிச் சங்கக் கோயிற் றிருக்கடைக் காப்பு நீக்கி
எழுமணிச் சங்க நாத மியம்பல முழங்கி யார்ப்பத்
தொழுமணிச் சங்க மெல்லாந் துதிசெய்து பரவி யேத்தக்
கொழுமணிப் பஞ்ச வாசங் குயிற்றிய தூப மேற்றி. 151

பொ-ரை: செழுமையான முத்துக்களைத் தரும் சங்கக் கோயில் திருக்கடைக்காப்பைத் திறந்து மணி, சங்கம், வாச்சியம் என்பவற்றிலிருந்து எழும் முழக்கம் நிரம்ப, உருத்திராக்கத் திருக்கூட்டம் தொழுது பரவ, வளப்பமான அழகிய ஐந்து வாசனைப்பொருளை நெருப்பிலிட்டுப் புகைகாட்டி.

உய்வகை யியற்றுந் தீபஞ் சோடச வுபசா ரங்கள்
செய்வகை முறையி னுற்றி யைவகைச் சைவச் செந்தீ
நெய்வகை புரிந்து பூசை நிரப்பியா யிரத்தெண் வில்வம்
மெய்வகை விளங்கும் வேத விதிதரு மனுவாற் சாத்தி. 152

பொ-ரை: மேன்மை எய்தும்படி விளக்கு முதலிய பதினுறு உபசாரங்களை முறையாகச் செய்து, பின் ஐவகைக் குண்டம் அமைத்துச் சிவாக்கினியில் நெய்பெய்து ஓமித்து, ஆயிரத்தெட்டு வில்வ இதழ்களைத் திருப்பெயர் சொல்லித் திருவடியிற் சாத்தி.

நீலமென் மலர்க டுவி நிமலனை யுவப்பச் செய்து
சாலுமஞ் சனத்தாற் பூவாற் சாத்துமந் திரத்தி னுலும்
பாலமார் விழியார் கையிற் பூசனைப் பயனை நல்கி
மேலகங் குழையக் கண்கள் களிப்பமெய் விகிர்ப்ப நின்றுன். 153

பொ - ரை: நீலமலர்களால் அருச்சித்து இறைவனை மகிழச்செய்து, அமைந்த நீரும் பூவும் மந்திரமும்கொண்டு பூசனைப்பயனை நெற்றிக்கண்ணை யுடைய இறைவனது வரதக் கையில் கொடுத்து, அன்பினுல் உருகி உடல் நடுங்கக் கண் களித்து நின்ருர் முனிவர்.

வி - கு: பாலம் - நெற்றி.

கானமார் பலவின் முக்கட் கனிதனைத் தேனைப் பாலைத்
தேனுெடு நெய்பா லாட்டித் தெரிசிக்கத் தித்தி யாதோ
மோனவா னந்த யோகி முழங்கியேத் தெடுப்ப தானுன்
வானமு மடங்காக் கீர்த்தி மனங்கொண்டு வாய்கொள் ளாமல். 154

பொ - ரை: குறும்பலா அடியில் அமர்ந்த இனிய பொருளாகிய சிவனை நெய் பால் முதலியவற்ருல் அபிடேகித்துக் கண்டபோது பேரின்பம் மேன்மேல் எழுதலால், மோனநிலை கைவந்து இன்ப அனுபவமுறும் மா யோகியாகிய அகத்தியர் சிவபிரானுடைய அளவற்ற புகழை மனங்கொண்டு மொழிகளில் அடங்காமல் உச்ச சுரத்தில் துதிக்கத் தொடங்கினர்.

பராபரா பரம யோகி பராங்கதா பரசு பாணி
நிராமயா நிமலா நித்தா நின்மலா திரிகூ டத்தில்
சராசர மனைத்து மீன்ற தற்பரா சிற்ப ராவென்
ருெராயிர கோடி நாம மெடுத்தெடுத் தோதி யோதி. 155

பொ - ரை: முன்னும் பின்னும் உள்ளோனே (மேலானவரின் மேலோனே) மேலானயோகியே,பிறர்விரும்பாத பாம்பை அணிந்தவனே,மழுஏந்தியகையனே, பாசப்பிணி இல்லாதவனே, தூயோனே, என்றுமுள்ளோனே, திரிகூடத்திருந்து உலகைப்படைத்து அவற்றைக் கடந்து நிற்கும் கடவுளே, அறிவுவடிவாய மேலோனே, என்ருற்போல அளவற்ற திருப்பெயர்களைப் பன்முறையும் எடுத்து ஓதினர்.

பிரமனே போற்றி போற்றி பிரமனு மாலுங் காணுப்
பரமனே போற்றி போற்றி பண்ணவா போற்றி வானோர்
சரமச ரங்களான சண்பகா டவியாய் போற்றி
மரகதக் கொடிசேர் முக்கண் மாணிக்க மலையே போற்றி. 156

பொ - ரை: அயனுய் நிற்பவனே, அயன்மால் அறியா மேலோனே, முனிவனே, வானேரும் பிறவும் பிறருமாய் நிற்கும் சண்பகாடவிக் கடவுளே, மரகதவல்லி படர்ந்த முக்கண்களையுடைய மாணிக்கமலை போன்றவனே வணக்கம், வணக்கம்.

அன்பருக் கன்பா போற்றி யயனுமா யரியு மாகித்
தென்புலக் குறைவு நீங்கச் சிவமென நிறைந்தாய் போற்றி
முன்பிலா நடுவு மில்லா முடிவிலாப் பிரம மான
இன்பமே திருக்குற்ருலத் திறைவனே போற்றி போற்றி. 157

பொ - ரை: அன்பருக்கன்பனே, அயனையும் அரியையும் இடங்கொண்டு தென்திசை நிரம்புதற்குச் சிவம் என நிறைவாய், ஆதி நடு ஈறு இல்லாத பரம் பொருளான பேரின்பமே, திருக்குற்றுலநாதனே போற்றி! போற்றி!

போற்றியென் றேத்தி யேத்திப் புகழ்ந்துசாட் டாங்க மாகத்
தோற்றிநின் றிறைஞ்சு வானைச் சூழ்ந்தமா மறையோ ரெல்லாம்
நீற்றெளி பழுத்த மெய்யு நீண்டபொற் சடையுங் காணு
மாற்றல னிவனே சோர்வு வந்ததென் றுள்ளே போந்தார். 158

பொ - ரை: இங்ஙனம் போற்றித் தொழுது காணப்பட்டு நின்ற முனிவரைச் சூழ்ந்திருந்த வைணவப் பார்ப்பார் திருநீற்று மேனியும் நீள் சடை முடியும் கண்டு இவன் பகைவன் அல்லவா! குறைவு வந்து விட்டதே என்று கோயிலுக்குள்ளே வந்தனர்.

பருவனை யாழி யேந்திப் பங்கயக் காடு பூத்த
கருணையங் கடலைக் காணுர் கனவரைத் திரிகூ டத்தில்
அருளொரு வடிவாய்ப் பூமி யந்தர சுவர்க்க மூன்று
மருவுபே ரொளியா முக்கண் மாணிக்க மலையைக் கண்டார். 159

பொ - ரை: பொன்வினை மலையாகிய திரிகூடத்தில் திருமாலைக் காணுமல், அருளே வடிவாய் மூவுலகிலும் ஊடுருவி நிற்கும் சோதியாகிய முக்கண் மாணிக்க மலையைக் கண்டார் அந்தணர்.

வரதனே கரிய மாலாய் வளர்ந்துசெம் பவள மேனிப்
பரமனே யாதல் கண்டு பணிந்திலர் மறையோ ரெல்லாம்
குரவனு முனிமேற் கோபங் கொண்டன ரிருளே யன்றிக்
கரவுசேர் மனத்தி னுர்க்குக் கதிரொளி பகையே யன்றே. 160

பொ - ரை: மறையோர், வரங்கள் தரும் முதல்வனே முன்னர்க் கரிய மாயோனுய் நீண்டு தோன்றிப் பின் செம்பவளமேனிச் சிவனேயாக இருத்தலைக் கண்டு வழிபடாமல், தேசிகனுகிய முனிவர்மேல் வெகுண்டனர்; கள்ளம் உடையார்க்கு இருளன்றி ஞாயிற்றின் ஒளிபகையாகும் அன்றே. (கள்ளர் ஒளியை விரும்பார் என்றபடி).

மந்திர வடிவாய் நின்ற மாயனை யிலிங்க மாக
இந்திர சாலஞ் செய்தான் யார்கொலோ வென்பார் யாது
தந்திரம் விளைத்தா னென்பர் சைவன்போ னேற்று வந்த
அந்தண னிவனே யென்பா ரறிந்தில மச்சோ வென்பார். 161

பொ - ரை: மாயவித்தை செய்து திருமாலை இலிங்கமாக்கினவன் ஆரோ என்பார் சிலர்; ஏதோ சூழ்ச்சி செய்துள்ளான் என்பார்; சைவன் ஆக நேற்று வந்த அந்தணன் இவனே என்பார்; ஐயோ! இதனைமுன் அறிந்திலமே என்பார்.

நாமமோ குறிபோ லிட்டு ஞானமோ நெறிபோற் பேசித்
தாமமோ துளவஞ் சூடிச் சார்ந்ததும் புணர்ப்போ வென்பார்
காமமோ குறுகிற் றெல்லாங் கள்ளமோ வென்பார் பூசை
ஓமமோ செபமோ பாரீ ருண்மையி லானுக் கென்பார். 162

பொ-ரை: நமது புண்டரம் போல் ஊர்த்துவமாகச் சந்தனமிட்டு, வைதிகநெறிபோல ஞானம்பேசி, துளவமாலை அணிந்து இங்குவந்தது சூழ்ச்சி தானோ என்பார் சிலர்; அன்பு குறுகிற்று, எல்லாம் வஞ்சனைதானு என்பார்; உண்மை இல்லாதானுக்குப் பூசையும் செபமும், உள்ளனவாதலைக் காண்மின் என்பார்.

திருமலை முளரிக் கண்ணன் றிருப்பதி யிருந்தோ மென்ன
இருமலை வாகக் கூறி யெத்தினு னெம்மை யென்பார்
கருமலை யனைய மாலைக் கண்ணுத லாக்கி நம்பால்
பொருமலை விளைத்து நின்றான் பொம்மலைப் பாரீ ரென்பார். 163

பொ–ரை: 'திருமலை, முளரிக்கண்ணன், திருப்பதி இருந்தோம்' என்றாற் போன்ற பெருமலைவு உண்டாகப்பேசி நம்மை ஏமாற்றினன்; திருமாலைச் சிவனாக்கி நமக்கு அழுகையை உண்டுபண்ணும் இவன் பொலிவைப் பார்மின் என்றனர்.

நறுமணித் துளவ மாலை நம்பியை நம்ப னுக்கும்
கறுவுகொண் மனத்தி னானைக் கடைகடந் தேகா முன்னர்
இறுகுறப் பிணிப்போ மென்ன வெழுத்தண்டு பாசத் தோடு
குறுகினர் வலியான் முன்னர்க் கொக்கினத் திரள்போற் கூடி. 164

பொ-ரை: இங்ஙனம் விளைத்த இவனை வெளியே போகாதபடி பிணிப்போம் எனக் கூறிக் கயிறும் தண்டும் மழுவுங்கொண்டு குறுகினர்; வலியான் முன் கொக்கின் கூட்டம் போல.

ஒல்லென வருகை நோக்கி யொருகையிற் றருப்பை வாங்கிச்
செல்வனைத் திருக்குற் றாலத் தேவர்நா யகனை யுன்னி
அல்லெனத் திரண்ட காக மாயிரங் கோடிக் காங்கோர்
கல்லென விடுத்தான் முந்நீர்க் கடலினை யடக்குங் கையால். 165

பொ-ரை: ஆரவாரஞ்செய்து அந்தணர் வருதல் நோக்கி, அகத்தியர் சிவபிரானை நினைத்து, காக்கைக் கூட்டத்தில் கல்லை எறிவதுபோல, கடலைச் சுருக்கிய கையால் ஒரு தருப்பையை எடுத்து ஏவினர்.

விடுத்ததோர் தருப்பை போந்து வேதிய ரடர்ந்து தாக்கும்
படைக்கெதிர் படையாய் மோதிப் படர்தலும் பனவ ரோங்கும்
தொடிக்கரம் வியாதன் மேனுட் சூளுறுங் கரம்போ னிற்ப
அடைக்கலம் பரம யோகி யருளெனக் கபய மென்றார். 166

பொ - ரை: அது வேதியர் நெருங்கித் தாக்கும் படைகளுக்கு எதிர்ப் படையாய் மோதிச் சென்றபோது, வேதியர் கைகள், முன்னுள் பொய்புகன்ற வியாதன் கைபோல், தம்பித்தன; பரமயோகியே, அருளும் உனக்கு அடைக்கலம், எங்களுக்கு அபயம் தருக என வேண்டினர்.

போக்கிலா தலமந் தோடிப் புகலென்ருர்க் கஞ்ச லென்று
தாக்குமந் திரத்தால் விட்ட தருப்பையைச் சாந்தி யென்னும்
நோக்குமந் திரத்தா லாற்றி நூல்புனே மறையோர் தம்மைக்
காக்குமந் திரத்தாற் காத்தான் கடலுண்டு மலேயங் காத்தான். 167

பொ - ரை: எதிர்சென்று தாக்குதற்கு உரிய மந்திரத்தோடு ஏவிய தருப்பையைச் சாந்தி எனச் சொல்லி நோக்கும் மந்திரத்தால் அமைத்து, மறைய வரைக் காக்கும் மந்திரங்கொண்டு காத்தருளினர்; கடலே உண்டு பொதியலில் இருந்த முனிவர்.

அனகர்தாள் பரவி யேத்தி யாடகச் சங்கக் கோயில்
மனவுரைத் தமைத்தா லன்ன மதிற்புறம் வலஞ்செய் காலேப்
பனவர்தங் குழாங்க ளெல்லாம் பனிமதி தொடர்ச கோரத்
தினமெனப் பின்செல் வாரை யியற்றமிழ் முனிவ னேக்கி. 168

பொ - ரை: சிவபிரான் திருவடியைத் தொழுது பொன்மயமான சங்கக் கோயிலே, சங்கைத் தேய்த்து அமைத்தாற்போன்ற மதிற்புறத்தை வலஞ்செய்தார் முனிவர்; அவரைச் சந்திரனேத் தொடரும் சகோரப் பறவைகள் போலப் பின் சென்ற வேதியரை நோக்கி முனிவர் கூறுகின்ருர்.

நாதனுர் சங்க வீதி நயந்துறை தென்மேல் பாலின்
மாதவன் றனேப்பூ சித்து வாழுமின் வாழுங் காலேச்
சீதரன் சமைய மென்றுஞ் சிவபிரான் சமைய மென்றும்
பேதநீர் புரவீ ரல்லீர் பெருமறை வல்லீ ரென்ருன். 169

பொ - ரை: சிவபிரான் விரும்பி உரையும் உட்பிரகாரமாகிய சங்க வீதியில் நிருதி மூலேயில் திருமாலேப் பூசித்து வாழ்மின்; மறைவல்லீர் ஆகலின், அங்ஙனம் வாழும்போது வைணவம் என்றும் சைவம் என்றும் சமயவேறுபாடு பாராட்டாதீர்கள் என்ருர்.

அன்னதே புரிது மென்ன வந்தணர் பரவிச் செல்ல
நன்னகர்ப் பரமர் மாலாய் நண்ணிய நாளி லீசன்
என்னவு மீசா னத்தி லிருந்தருள் கூத்த னெம்மான்
செந்நெறிப் பூசை செய்யுஞ் சிவமறை யவரைக் கூவி. 170

பொ - ரை: அதனேயே விரும்பி மேற்கொள்வோம் எனக்கூறி அந்தணர் சென்றனர்; முன்னர்ச் சிவன் என ஈசானத்தில் இருந்த மூர்த்தியைப் பூசித்து வந்த சிவமறையவரை அழைத்து.

ஆங்கவர் மகார் சிறுர்க ளனைவர்க்கும் வேத நூல்கள்
பாங்குற வுணர்த்தி நாலே ழாகமம் பயிற்றிப் பண்பால்
ஓங்குறு சிவபு ராண முணர்வித்துச் சைவ பூசை
தாங்குசீ ரொழுக்கஞ் சொல்வான் றத்துவ முதலா மன்னே. 171

பொ-ரை: அவர்க்கும் அவர்தம் மக்களாகிய இளைஞர்க்கும் வேதம் ஓதுவித்து, இருபத்தெட்டுச் சிவாகமமும் பயில்வித்து, சிவபுராணங்களும் அறிவுறுத்துத் தத்துவங்களின் இயல்பு முதலாகச் சிவபூசை ஆசாரத்தை அறிவுறுக்கத் தொடங்கினர்.

*மாயோன் பரமனுனசருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — 1442

---

# சிவபூசை விதியுரைத்த சருக்கம்

குதமேலங் குலியிரண்டி லடப்பம் பூப்போற்
குலவுமூ லாதாரங் குறிசேர் நாற்கோண்
இதமுறுசு வாதிட்ட நாபித் தானத்
திளம்பிறைபோன் மணிபூர மியையு முக்கோண்
விதமுறும நாகதமே மார்பு கண்டம்
விசுத்தியாக் கினைபுருவ நடுவில் வட்டம்
மதகயமா முகன்முதலோ ரறுவர் தேவர்
மண்முதலாம் பூதமிவை யாரு தாரம். 1

பொ-ரை: மலவாய்க்குமேல் இரண்டங்குல உயரத்தில் அடப்பம்பூப்போல முக்கோண வடிவிற்றாய் மூலாதாரம் உள்ளது; அதற்குமேல் நாற்கோண வடிவிற்றாய் சுவாதிட்டானம்; கொப்பூழ் இடத்திற்கு நேரே பிறைவடிவாகிய மணிபூரகம்; முக்கோணவகை பொருந்தும் அநாகதம் மார்புக்கு நேரே; கழுத்தில் விசுத்தி; புருவ நடுவில் வட்டவடிவில் ஆஞ்ஞை உளது.

இவற்றுக்குத் தெய்வங்கள் முறையே மூத்த பிள்ளையார், அயன், மால், உருத்திரன், மகேச்சுரர், சதாசிவர் ஆவர்; இவற்றில் மண் முதலிய ஐம்பூதங்கள் அமையும்; (சுவாதிட்டானம் முதலாக மண் முதலியகொண்டு, மூலாதாரத்திற்குக் குண்டலி அங்கியைக்கொள்க: வேறுவகை கூறும் நூல்களும் உள) இவை சுழுமுனை நாடியில் உள்ள ஆறு ஆதாரங்களாம்.

சோதிசிவம் சத்திசதாக் கியமே யீசஞ்
சுத்தவித்தை யெனச்சிவதத் துவமைந் தாகும்
ஆதிகலை காலம்வித்தை நியதி மாயை
யராகமே புருடனென வித்தை யேழாம்
பூதமைந்து பொறியைந்து புலன்க ளைந்து
புகல்கருமேந் திரியமைந்து கரண நான்கும்
பேதவுயிர்த் தத்துவமா மிவையா றுறும்
பிறங்கியவுட் கருவியெனப் பேசு நூலே. 2

பொ-ரை: தத்துவங்கள் சிவதத்துவம், வித்தியா தத்துவம், ஆன்ம தத்துவம் என மூவகைப்படும்; இவை முறையே சுத்தமாயையின் விருத்தியும், அசுத்தமாயையின் திரிபும், பிரகிருதிமாயையின் திரிபும் ஆகும்; பரசிவத்தின் ஞானசத்திக்கு ஆதாரமாகிய சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை என்பவை சிவதத்துவம் அல்லது சுத்ததத்துவம். கலை, காலம், நியதி, வித்தை, அராகம், மாயை, புருடன் என்னும் வித்தியாதத்துவமாம்; பூதம் ஐந்து, தன் மாத்திரை ஐந்து, அறிவுப்பொறி ஐந்து, தொழிற்பொறி ஐந்து, மனம், புத்தி,

ஆங்காரம், சித்தம் என்னும் அந்தக்கரணம் நான்கு ஆக இருபத்து நான்கும் ஆன்மதத்துவம் எனப்படும்; இவைமுப்பத்தாறும் உட்கருவி என ஆகமம் கூறும்.

வி - கு: புலன் - இங்குத் தன்மாத்திரை, சூக்கும பூதம்.

வானிடமாய் நின்றுசெவி யறியுஞ் சத்தம்
வளியிடமா யுடல்பரிசந் தெரிக்கும் வன்னி
தானிடமாய் விழியுருவந் தன்னைக் காணுந்
தண்புனலா லருந்துசுவை தெரிக்குந் தாலு
நானிலத்தால் வருமணத்தை யறியு நாசி
நண்ணுவாக் காதிகள்வா னுதி யாலே
மேனிரலே வசனமொடு கமனந் தானம்
விசர்க்கமா னந்தமிவை விளக்குந் தானே. 3

பொ - ரை: செவி ஆகாயத்தை ஆதாரமாகக் கொண்டு ஒலியை அறியும்; தோல் காற்றை இடமாகக் கொண்டு ஊற்றை அறியும்; கண் அங்கியை ஆதாரமாகக் கொண்டு உருவத்தை அறியும்; நாக்கு நீரை இடமாகக் கொண்டு சுவையை அறியும்; மூக்கு மண்ணை ஆதாரமாகக் கொண்டு நாற்றத்தை அறியும் இவை அறிவுப்பொறிகள்.

வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்னும் தொழிற்பொறிகள் வான் முதலிய பூதங்களை ஆதாரமாகக் கொண்டு முறையே பேச்சு, போக்குவரவு, இடுதல், ஏற்றல், உடம்பினுட் சேரும் அழுக்கை அப்புறப்படுத்தல், விந்து சோணிதங்களை வெளிப்படுத்தி இன்புறுத்தல் என்னும் தொழில்களைச் செய்யும்.

வி - கு: நானிலம் - (நால்வகைப்படும்) மண்.

நினைப்பொடுசஞ் சலமருத்தாற் புரியு நெஞ்ச
நிகழ்கரும நிச்சயிக்குங் கனலாற் புந்தி
புனற்செயலாற் சித்தநினைத் தழியும் பாராற்
புடைத்தெழுமாங் காரமிவை போக்ய காண்டம்
வினைச்செயலின் மிகுதிகலை வித்தை ஞான
மிகுதிநிசஞ் செயுநியதி யராக மிச்சை
கனத்தபலஞ் செயுங்கால மறைக்கு மாயை
கருவிசுற்றும் புருடனிவை போக காண்டம். 4

பொ - ரை: மனம் காற்றின் தன்மையுடையதாய் ஒன்றை நினைத்தலும் ஐயுறுதலும் உடையதாம்; புத்தி அங்கியின் இயல்புடையதாய் ஒரு செயலை இன்னது எனத்துணியும்; சித்தம் புனலின் தன்மையுடையதாய்த் தன்கண் வந்த தொன்றனை மறவாது நினைத்து உட்கொள்ளும்; ஆங்காரம் நிலத்தின் தன்மை உடையதாய் யான், எனது என்று எழுச்சியுறும்; பூதம் முதல் அந்தக் கரணம்வரை எண்ணிய இருபத்து நான்கும் போக்கிய காண்டம் (நுகர்ச்சிக்கு விடயமாகும் தொகுதி) எனப்படும்.

இனி, கலை உயிரின் செயலாற்றலை எழுப்பும்; வித்தை அதன் அறிவாற்றலை எழுப்பும்; அராகம் விழைவாற்றலை விளக்கும்; நியதி நுகர்ச்சியை வரையறுக்கும்;

காலம் நுகர்ச்சியைத் தோற்றுவிக்கும், நிறுத்தும், முடிக்கும்; மாயை மயக்கும்; புருடன் கருவிகளைத் தொழிற்படுத்தும். இந்த ஏழும் போககாண்டம் (போசயித்துரு காண்டம் எனவும்) கூறப்படும்: இவை ஆன்மாவோடு ஒற்றித்துநின்று நுகர்ச்சிக்குக் கருவியாய் உள்ளவை.

சுத்தவித்தை சத்தமுதல் விடய மூட்டுந்
தொழின்மூட்டு மீசுரநேர் செயுஞ்ச தாக்யம்
சத்தியது ருசிப்பிக்குஞ் சிவமே யான்மாத்
தற்செயல்செய் விக்குமிவை பிரேர காண்டம்
ஒத்தசிவ முதலைந்தும் சுத்த மாயை
யுயர்கலா திகளேழுஞ் சுத்தா சுத்தம்
மொய்த்தபார் முதலறுநான் கசுத்த மாயை
முந்துபதி பசுபாச முறையிற் காண்மின். 5

பொ-ரை: சுத்தவித்தை (வித்தை என்னும் வித்தியா தத்துவத்தை அதிட்டித்துச்) சத்தம் முதலிய புறப்பொருள்களை உண்மை அளவில் அறிவதாகிய வாயிற்காட்சியைத் தோற்றுவிக்கும்; ஈசுரம் (அராகத்தை அதிட்டித்து) மனத்தைத் தொழிற்படவைத்து வாயிற்காட்சியைப் பற்றிச் சங்கற்ப விகற்பம் செய்விக்கும்; சாதாக்கியம் புருடன் வாயிலாகப் புத்தியைப்பற்றி மனம்பற்றிய பொருளை நிச்சயிக்கும்; சத்தி கலை கால நியதிகளை அதிட்டித்து ஆங்காரத்தைத் தொழிற்படுத்துவதோடு, வாயில் மனக்காட்சிகளின்பயனைப் புத்திதத்துவத்தின் பரிணமமாகத் தோன்றும் இன்பத்துன்ப மோகங்களை இஃது இன்பம், இது துன்பம், இது மயக்கம் என உணர்ந்து சுவைக்கச் செய்யும்; சிவம் மாயையைச் செலுத்து முகத்தான் உயிரை நான் இன்புறுகின்றேன், துன்புறுகின்றேன், மயங்குகின்றேன் எனத் தன் வேதனையுறச் செய்யும்; சுத்தவித்தைமுதல் ஐந்தும் இங்ஙனம் வித்தியா தத்துவங்களைச் 'செலுத்தி' விழிப்பு நிலையில் பொருள்களின் நுகர்ச்சிக்கு ஏதுவாக நிகழ்தலின் அவை பிரேரககாண்டம் (செலுத்தும்தொகுதி) எனப்படும். சிவம் முதலிய ஐந்தும் சுத்தமாயையின் காரியம்; வித்தியாதத்துவம் ஏழும் சுத்தாசுத்தமாகிய அசுத்த மாயையின் காரியம்; மண்முதல் சித்தம்வரை எண்ணப்பட்ட ஆன்மதத்துவம் இருபத்துநான்கும் அசுத்தம் எனப்படும் பிரகிருதி மாயையின் காரியம் ஆகும்; இனி மேம்பட்ட பதி பசு பாசம் என்பவற்றை முறைப்படக் கூறுகின்றோம்; அறிந்து கொள்ளுங்கள்.

தோலெலும்பு நரம்புமயிர் தசைபார்க் கூறு
சோரிவிந்து மேதைமச்சை நீர்நீர்க் கூறு
மாலுறுநித் திரைபயமா காரஞ் சோம்பு
மைதுனம்வன் னியின்கூறு நடத்த லோடல்
சாலுநிலை யிருத்தல்கிடை காற்றின் கூறு
சலமதமாற் சரியமொடு மோக லோபம்
மேலுயர்வான் கூறிவைக ளிருபா னைந்தும்
வியன்பூத காரியமென் றியம்பு நூலே. 6

பொ-ரை: இனி, தத்துவ காரியங்கள் (தாத்துவிகங்கள்) கூறப்படுகின்றன:

தோல், எலும்பு, நரம்பு, மயிர், தசை - இவை ஐந்தும் பிருதிவியின் கூறு; இரத்தம், விந்து, மேதை, மச்சை, சிறுநீர் - இவை ஐந்தும் நீரின்கூறு; மயக்கம் உள்ள உறக்கம், அச்சம், உணவு, சோம்புதல், புணர்ச்சி - இவ்வைந்தும் அங்கியின்கூறு; நடத்தல், ஓடல், நிற்றல், இருத்தல், கிடத்தல் - இவை காற்றின் கூறு; பொய், செருக்கு, பொருமை, மயக்கம், உலோபம், இவை வானின் கூறு: இவ்விருபத்தைந்தும் பூதகாரியம் எனப்படும்.

பத்தியெழுத் துள்ளொளிசூக் குமைதி யானம்
பைசந்தி யுரையாம லுரைத்தல் பாரின்
மத்திமையாம் வைகரிமற் றெவருங் கேட்ப
வசனித்த லிவைநான்கும் வாக்கா மத்தம்
புத்திரவே டணையுலகே டணைமூன் ருகப்
புகலரிய சாத்துவித மிராச தத்தோ
டொத்ததா மதமுமெனக் குணமூன் ருகும்
உத்தமமத் திமமதம முறையி னுமே. 7

பொ-ரை: சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் நான்கும் வாக்கு எனப்படும்; இவற்றுள், சூக்குமையாவது வரிசைப்படும் எழுத்தின் ஆதிகாரணமாய் அறிவு அளவாய் ஒவ்வொருவர்க்கும் எப்பொழுதும் உள்ள உள்ஒளி: பைசந்தியாவது அவ்வுணர்வு ஏதேனும் ஒரு பொருளைக் குறித்து அதன் உண்மை மாத்திரையின் நிருவிகற்பமாய் அறிதல் (தியானம்); மத்திமை அப்பொருளைச் சவிகற்பமாய், வாக்கிய வடிவில், உன்னுதல்; வைகரி அவ்வுன்னு தலைப் பிராணவாயு தொழில் உடன் புணரச் செப்புதல்: இது பிறர் செவிக்குக் கேட்கும்; முன்னையது செவியில் உருது தன்ருல் மட்டும் உணரப்படுவது; இவை நான்கும் முறையே புருடனையும், சித்தத்தையும், மனம், புத்தி, ஆங்காரம் மூன்றனையும், அவற்ருேடு வாக்காகிய பொறியையும்பற்றி நிகழும் என உணர்ந்துகொள்க: இவை நாதகாரியம் ஆகும். பொருள்பற்றி, மகனைப்பற்றி, இருப்பிடம்பற்றி நிகழும் ஈடணை (இச்சை) மூன்று, குணத்தின்காரியம் சத்துவம், இராசதம், தாமதம் என மேல், நடு, கீழாய் மூன்று வகைப்படும்.

உதானனன நிறைக்குமெங்கும் வியானன் வியாபிக்
குமுறுசமஞ் சமானன்மலம் விடும பானன்
சதாவுயிர்க்கும் பிராணனிவை தெய்வ வாயுத்
தகுதேவ தத்தன்வியர்ப் போடல் கோபம்
விதானகிரி கரன்றும்மன் மயிர்புளகங் கூர்மன்
மிகநீட்டன் மடக்குதல்கொட் டாவி நாகம்
அதாவுயிர்போய்த் தனஞ்செயன்மேல் வெடிப்பித் தேகு
மைந்துகன்ம வாயுவென வாயுப் பத்தாம். 8

பொ-ரை: வாயுக்கள் தெய்வவாயு ஐந்து, கன்மவாயு ஐந்து என இரு வகைப்படும்; முன்னையவை உதானன் வியானன், சமானன், அபானன், பிராணன் எனப்பெயர் பெறும்; இவை முறையே அன்னத்தின் பயனை உடம் பெங்கும் பரவவைத்தல், தோலெங்கும் வியாபித்துப் பரிசத்தை அறிவித்தல்,

எல்லா இயக்கங்களையும் சமன் செய்து உடம்பை ஒரு நிலையில் வைத்தல், மல சலங்களை வெளிப்படுத்தல், எப்போதும் வெளிச்செலவு உள்வரவு செய்து உடம்புக்குக் காவலாக நிலைபெறுதல் என்னும் செயல்களை உடையன; பின்னையவை தேவதத்தன், கிரிகரன், கூர்மன், நாகன், தனஞ்செயன் எனப்பெயர் பெற்று முறையே வியர்ப்பு 'ஓடல்' கோபம்செய்தல், தும்மலும் மயிர் புளகித்தலும் செய்தல், நீட்டல் மடக்கல் செய்தல், கொட்டாவி உண்டுபண்ணுதல், உடம் பினின்று உயிர் போனபின் முடியை வெடிப்பித்துத்தானே நீங்குதல் என்னும் செயல்களை உடையவை ஆகும்.

வி - கு: விதானகிரிகரன் - விரிவுடையகிரிகரன். அதா - தானே. உயிர் போய் - உயிர்போக.

வலப்பாலின் சுழுனையையுய்த் திடப்பான் மாறி
மண்டலமூன் றிடையிடைமா றுடி மேலைத்
தலத்தேறிச் சிரத்துநின்று வலப்பா ஞசித்
தலத்துறும்பிங் கலையிடையு மிடப்பா லற்றே
தலைப்பான்மை மூலநடு நாடி யாகிச்
சடாதார மூடுருவி மேலா தாரம்
நிலத்தேறிப் பிரமரந்த ரத்தை முட்டி
நெடுநாசி யிரண்டிலுறுஞ் சுழுனை நாடி. 9

பொ - ரை: பொருள்களின் ஊற்றமோ, பதிவோ ஏற்படும்போது அவற்றைப்பெற்றுத் தலைக்குக் கொண்டுபோகவும், அங்கு உண்டாகும் எதிரிசைவுகளை ஏற்று உறுப்புக்களுக்குக் கொண்டுபோய்த் தொழிற்படுத்துவது மாக உள்ள நாடிகளில் முதன்மையானவை, பத்து; அவற்றுள் மிக முக்கிய மானவை சுழுமுனை, பிங்கலை, இடைகலை என்பவை; புருடன், காந்தாரி, மத்தி, அலம்புருடன், சிங்நுவை, சங்கினி, குகு என்பவை பிற ஏழு.

இவற்றுள், சுழுமுனை மூலாதாரம் முதல் முடித்துளை (பிரமரந்திரம்) வரை ஆறு ஆதாரம் எனப்படும் முடிச்சுகளை உடையதாய், முடிக்குமேல் சூக்கும மாய் நிராதாரமாய் பன்னிரண்டு அங்குலம் உயர்ந்து நிற்பது; இது நடு நாடி, மேரு, ஆதாரவெற்பு என்னும் பெயர்களால் வழங்கப்பெறும்; ஆறு ஆதாரங் களில் முதலிரண்டும் அக்கினி மண்டலத்திலும், பின் இரண்டும் சூரியமண்டலத் திலும், இறுதி இரண்டும் சந்திரமண்டலத்திலும் உள்ளவை; பிங்கலையும் இடைகலையும் மூலாதாரத்தில் தோன்றி முறையே வலப்பக்கமும் இடப்பக்கமும் எழுந்து, கத்திரிக்கோலைப்போல், ஒவ்வொரு மண்டல முடிவிலும் மாறிப் பின்னி, புருவ நடுவில் சேரும்போது, இடப்பக்கமும் வலப்பக்கமும் ஆக மேலே சென்று முடித்துளையில் முட்டி, முறையே மூக்கின் வலத்துளையிலும், இடத்துளையிலும் போக்குவரவு செய்யும்; சுழுனைநாடி முதன்மையுடையதாய் பிரமரந்திரத்தை முட்டியபின் இருநாசியிலும் போக்குவரவு புரியும்.

வி - கு: மேலைத்தலம் - பிரமரந்திரம். சிரம் - உச்சி.

மூலமுதற் கண்ணளவாம் புருடன்காந் தாரி
முதுசெவியி னளவாகு மத்தியலம் புருடன்
தாலுவிற்சிங் நுவைநாடி நாபியிடைத் தோன்றிச்
சங்கினியே குய்யமுறுங் குகுகுதத்தி னளவா

மேலுமிவை தசநாடி தசவாயுக் குணமூன்
றேடணைகண் மூன்றுபூ தியமிருபத் தைந்து
போலுநால் வாக்குவச னுதியைந்தோ டறுபான்
புறக்கருவி யாகவுந்தத் துவந்தொண்ணூற் ருரே. 10

பொ - ரை: புருடன் காந்தாரி என்னும் நாடிகள் மூலாதாரம் முதல் முறையே வலக்கண் இடக்கண்வரை வந்து நிற்கும்; மத்தி அலம்புருடன் என்பவை மூலாதாரம் முதல் முறையே வலச்செவி இடச்செவிவரை வந்து நிற்கும்; சிங்குவை என்பது அவ்வாறு நாக்குவரை வந்து நிற்கும்; சங்கினி நாடி கொப்பூழிற்ருேன்றி மறைவிடமாகிய குறிவரைசெல்லும்; குகுநாடி அவ்வாறு தோன்றி எருவாய்வரை செல்லும்; தொழிற் பொறிகளுக்கு விடயமாகிய வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம், என்பவையும் புறக்கருவியுள் வைக்கப் படும்; எனவே, நாடிபத்து, வாயுபத்து, குணம்மூன்று, ஈடணைமூன்று, வாக்கு நான்கு, பூதகாரியம் (பூதியம்) இருபத்தைந்து, வசனம் முதலியவை ஐந்து ஆக அறுபதும் புறக்கருவி; இவற்றைத்தத்துவம் முப்பத்தாறுடன் எண்ணக்கருவிகள் மொத்தம் தொண்ணூற்ருறு ஆகும்.

நரம்புதிரந் தோலெலும்பு விந்து மூலம்
நாறுதசை எனவோதுந் தாது வேழாம்
வரம்பறுமோ கங்காம மதங்கு ரோத
மாற்சரிய முலோபமென்றுட் பகைக ளாறும்
அருந்துமன்னம் பிராணன்மனம் விஞ்ஞா னத்தோ
டானந்த மயமெனவுங் கோச மைந்தாம்
புரந்தவன்சே னையைக்கடைதோ றிருத்தி யுள்ளே
புகுதல்போற் புகும்புருட னவத்தை யைந்தே. 11

பொ - ரை: ஏழு தாதுக்களாவன: தோல், குருதி, தசை, என்பு, நரம்பு, நாடி, விந்து என்பவை; உட்பகை ஆறு ஆவன: அறிவின்மை, ஆசை, செருக்கு, பகைமை, பொருமை, இவறன்மை என்பவை; ஐங்கோசம் ஆவன: அன்ன மயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்பவை; இவற்றை முறையே பருவுடம்பு, நுண்ணுடம்பு, குணஉடம்பு, கஞ்சுக உடம்பு, காரியமாயையாகிய காரண உடம்பு எனக்கொள்க.

இனி, அரசன் திருவுலாப் போந்தபின் தன் அரண்மனைக்கண் சென்று அடங்கும்போது சேனைகளையும் பரிசனங்களையும் கடைதோறும் நிறுத்தி இறுதியில் தான் தனியனுக அந்தப்புரத்தில் தன் தேவியோடு கூடித் துயிலுதல் போல, ஆன்மாவும் உலக நுகர்ச்சியாகிய சகல நிலையினின்றும் கேவலம் எனப் படும் தனிமையை நோக்கி இறங்கும்போது நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்னும் ஐந்து நிலைகளை (அவத்தைகளை) உறுவன்; அந்த நிலைகளில் மேல்கூறிய ஐங்கோசங்களில், ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு எனக் குறைந்து முடிவில் ஆனந்தமயகோசம் ஒன்றுடன்மட்டும் இருப்பன் என அறிக.

வி - கு: மூலம் - நாடி, மச்சை எனலும் ஆம். அடைமொழிகள் இன அடைகளாம்.

மாத்திரைகள் பத்துடனிந் திரியம் பத்தும்
வாயுவீ ரைந்துமந்தக் கரண நான்கும்
ஏத்துபுரு டனுநுதலின் முப்பத் தைந்தா
லியைவதுசாக் கிரங்களத்திந் திரியம் பத்தும்
தீர்த்ததுசொப் பனமனத்திற் புருடன் வாயு
சித்தமுறல் சுழுத்திசித்த மொழித்தி ரண்டோ
டார்த்த வுந்தி நிலைதுரிய மவைவிட் டேகி
யணுமூல மலத்துறல தீத மாமே. 12

பொ-ரை: மேற்குறித்து ஐந்துநிலைகளில் ஆன்மாவுடனிருந்து தொழிற்படும் கருவிகள் முப்பத்தைந்து, இருபத்தைந்து, மூன்று, இரண்டு, ஒன்று என எண்ணப்படும்.

நனவுக்கு இடம் புருவநடு; கருவிகள் இருவகைப்பொறிகள் பத்து, புலன் ஐந்து, வசனுதி ஐந்து, (மாத்திரைகள்) வாயுக்கள்பத்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று என்னும் முப்பத்தைந்து. கனவுக்கு இடம் கழுத்து: மேல் எண்ணியவற்றில் பொறிகள்பத்தும் நீங்க எஞ்சியுள்ள இருபத்தைந்தும்கருவிகள். சுழுத்தி எனப்படும் உறக்கத்திற்கு இடம் இதயம்; சித்தம், பிராணன், புருடன் என்னும் மூன்றும் கருவி. பேருறக்கம் எனப்பட்ட துரியத்திற்கு இடம் கொப்பூழ்; பிராணன், புருடன் என்னும் இரண்டும் கருவி. பிராணனையும் விட்டு மூலமலமாகிய ஆணவத்தில் மட்டும் அழுந்தி நிற்கும் புருடன் துரியாதீதநிலை உடையன் எனப்படும்; இடம் மூலாதாரம்.

அவ்வகைய தத்துவங்க ளனைத்து மாயை
அருங்கன்ம மிரண்டாகு நன்மை தீமை
எவ்வமுறச் செம்பிலுறு களிம்பாய் முன்னே
இயலறிவை மறைத்தலா ணவமா மந்தத்
தவ்வலுறு மும்மலத்தி னழுந்து மான்மாச்
சகலங்கே வலஞ்சுத்த வவத்தை யெய்தும்
வவ்வலுறுங் கருவியெலாங் கடந்து மூல
மலத்தழுந்தித் தனியுறல்கே வலமா மன்றே. 13

பொ-ரை: உயிர்க்குச் சுட்டறிவை விளக்குவனவாக மேலே காட்டிய தொண்ணூற்றாறு கருவிகளுக்கும் காரணம் மாயை; இனி, உயிரைப் பிணிக்கும் கன்மமாவது நல்வினை தீவினை என இருவகைப்படும்; இனி, செம்பிற்குக் களிம்பு போல உயிர்க்குப் பண்டுதொட்டே உள்ள இயற்கைக் குற்றமாய் அதன் அறிவாற்றலைத் தடுத்து நிற்பது ஆணவமலம் எனப்படும்.

தம் சத்தி கெடுந்தன்மை வாய்ந்த ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலத்திற் பிணிப்புண்ட ஆன்மாச் சகலம், கேவலம், சுத்தம் என்னும் மூன்று அடிப்படை அவத்தைகளை எய்தும், மாயையின் காரியமாகிய கருவிகளின் தொடர்பின்றி ஆணவமாகிய மூலமலத்தில் அழுந்தித் தனித்து உறும் அறிவு செயலற்ற நிலையே கேவலம் எனப்படும்.

வி - கு : சகலம் - கலையோடுகூடிய நிலை. கேவலம் - தனிமை. தவ்வல் - கெடுதல், குறைதல். வவ்வல் - கவர்தல்; மாயையின் காரியங்கள் உயிர்க்கு அறிவை விளக்கினும் தம் வண்ணமாகக் கவர்ந்து அதன் உண்மையியல்பை மறைக்கும்.

கருவிகர ணங்கள்சில பிரிந்துஞ் சேர்ந்தும்
கவனமுற்று நரகசொர்க்க புவன மூன்றும்
இருவினைப்போ கம்பொசித்தல் சகலா வத்தை
இவையிரண்டும் பிறவிகட்கு வித்தே யாகும்
பொருவரிய திருவருளா லவத்தை யைந்தும்
பொருந்தியதீ தத்துறுதல் சுத்த மாகும்
பெருகிடுமிவ் வழியரனைப் பூசிப் பார்க்கே
பிறங்கியிடும் பூசைவிதி பேசக் கேண்மின். 14

பொ - ரை : கருவிகரணங்களில் சிலபிரிந்தும் கூடியும் வேகமுற்று சுவர்க்க நரக நிலவுலகங்களில் இருவினை நுகர்ச்சியைப்பெறும் நிலை சகல நிலை எனப்படும்; சகலம், கேவலம் இரண்டும் பிறவிக்கே வித்தாக உள்ளவை; ஒப்பரிய இறைவன் திருவருள் ஒளியைப்பெற்று, அங்குச் சகலத்தின் நீங்குதற்கண் உள்ள சுத்தாவத்தை ஐந்தில் அதீதத்துப் பொருந்துதலே சுத்தமாகும்; இங்குக் கூறிய ஞானநெறி சிவபிரானை முறையாக வழிபடுவார்க்கே தெளிவுபடும்; இனி, அவ்வழி பாட்டு முறையைக் கூறுகின்றேன்; கேண்மின் என அகத்தியர் திருக்குற்றாலத்துச் சிவமறையோர்க்குத் தொடர்ந்து கூறுகின்றார்.

### வேறு

பத்தியும் பயமு மன்புநன் னெறியும் பண்புமா சார்மு மொருமைப்
புத்தியுஞ் செனன வாசனை யுடையார் பூசனை புரிவதற் குரியார்
சித்திரப் பொதுவி லாடுமெம் பெருமான் சேவடி யருச்சனைக் கமைந்த
சுத்தியைந் துளவா மவையினிற் பூத மானத சுத்திதத் துவத்தால். 15

பொ - ரை : இறையுணர்வும், அவன் கட்டளைகளை அஞ்சி மேற்கொள்ளுதலும், யாரிடத்தும் அன்பும், நல்லொழுக்கமும், பண்புடைமையும், உயர்ந்தோர் ஒழுகியவாற்றான் ஒழுகுதலும், ஒருநிலைய மனமும், பிறவிப்பழக்கமாக உடையவர்களே சிவபூசை மேற்கொள்ளுதற்கு உரியவர்கள்; சித்திரசபையில் நடம் புரியும் முதல்வன் திருவடி அருச்சனைக்கு முன், அமைவதற்கு உரிய சுத்தி ஆன்ம சுத்தி, இடசுத்தி, பொருள்சுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்திஎன ஐந்து உள்ளன; அவற்றில் ஆன்மசுத்தி என்பது தத்துவங்களின் இயல்புகளை மனத்தால் ஐயந் திரிபின்றித் தெளிவதேயாகும்.

கடிகையோ ரைந்து விடிவதற் கெனவாங் காலைவை கறையினி லெழுந்து
சடுதியி னியன்ற சுத்தியா னீறு தரித்துருத் திரன்சதா சிவனை
வடிவுற நினைந்து தொழுதெழீஇப் புறம்போய் வடகுண பாலலாத் திசையில்
நெடியபொற் சிகரந் தெரிகலா விடத்து நீர்க்கரை பசுநிலை மடங்கா. 16

பொ - ரை: ஞாயிற்றின் தோற்றத்திற்கு ஐந்து நாழிகை உள்ள வைகறைப் போதில் உறக்கத்தினின்றும் விழித்து, விரைவாக இயன்ற அளவு தூய்மையோடு திருநீறு அணிந்து, சீகண்ட முதல்வர் அல்லது சதாசிவ மூர்த்தியைத் திருவுரு மனத்தில் நன்குதோன்றும்படி எண்ணித் தொழுது, பின் வெளியே வடக்கு கிழக்கு அல்லாதது ஒருதிசையிற் சென்று ஆவசியககன்மத்தை முடித்தல் வேண்டும்; அதற்குரிய இடம் திருக்கோபுரம் கண்ணில் தெரியாததாக நீர்க்கரை, பசுக்கள் தங்கும் இடம், மடம், சோலை அல்லாது இருத்தல்வேண்டும்.

விளைநில மறுகம் பூமிநன் னீழல் விடுத்துமேற் சுத்தமே மயானம்
களர்நில மகன்று மதிபசு மறையோர் கதிர்திசை பிறவுநோக் காது
கிளர்தரு நாசி நுதியினை நோக்கிக் கீழொரு திரணமிட் டொலியல்
படர்சிரஞ் சேர்த்தித் தென்றிசை யிரவும் வடதிசை பகலும்பார்த் திருந்து. 17

பொ - ரை: வயல், அறுகுவிளையும் இடம், நல்ல நிழல் உள்ள இடம், மேன்மையும் தூய்மையும் உள்ள இடங்கள், மயானம், களர்நிலம் இவற்றை விடுத்து வேறிடத்து, இருசுடர், பசு, பார்ப்பார் முதலியோரைப் பாராதபடி, மூக்கு நுனியைக் கண்கள் பொருந்த ஒரு துரும்பை நிலத்தில் இட்டு, வஸ்திரத்தால் சிரசைக்கட்டி மூடி இரவில் தெற்கும் பகலில் வடக்கும் நோக்கி யிருந்து மலசலம் கழித்தல் வேண்டும்.

கருத்துரை யகற்றி மலங்கழித் தேமண் செங்கல்காட் டாதியாற் சுத்தி
வருத்திநின் றிடக்கை குறிநிறீஇத் தீர்த்த மலாதநீர்க் கொருமுழம் வதிந்து
பொருத்துகா லல்லா விருதுவி லெடுத்த பூவின்மண் குதத்தினி லைங்கால்
உரைத்திடுங் கோசத் தொருதர மிடக்கைக் கொருபதின் காலென வுரைத்து.

பொ - ரை: வாய்பேசாது மன ஒருமையோடு மலங்கழிக்கவேண்டும்; பின் மண்கட்டி, செங்கல், மரக்குச்சு என்பவற்றுள் ஒன்றால் குதத்தை எச்ச மின்றித் துடைத்துக்கொண்டு, இடக்கையைக் குறிக்கண் நிறுவி, புனிததீர்த்தம் அல்லாத நீர்நிலைக் கரையில், நீருக்கு ஒரு முழதூரம் விலகியிருந்து, மழைக் காலம் அல்லாத காலத்தில் எடுத்துவைத்திருந்த களிப்பு மண்ணைத் தண்ணீர் கூட்டிக் குதத்தில் ஐந்துமுறையும், குறியில் ஒருமுறையும், இடக்கையைப் பத்து முறையும்.

வி - கு: சுத்தி வருத்தி - தூய்வை வருவித்து. உரைத்து - தேய்த்து.

இரண்டுகைக் கெழுகா லிரண்டுதாண் மூலத் தொருதர மெனக்கொடு கழுவி
ஒருங்குறச் சவுச முடித்தபின் பேன முருப்புனல் கொண்டுநன் னிலத்துள்
அருந்திசை வடக்குக் குணக்கிவை நோக்கி யாசம னத்தொழில் புரிந்து
நரந்தமா விருப்பை கடுமுகிழ் கடுக்கை நாவல்பூ லிறலிநா யுருவி. 19

பொ - ரை: இருகைகளையும் ஏழுமுறையும், இரு பாதங்களையும் ஒருமுறையும் தடவித் தண்ணீரால் கழுவித் தூய்மையை முடிக்க; பின் நுரையில்லாத நீரைக் கொண்டு நல்ல நிலத்திருந்து வடக்கு அல்லது கிழக்குத் திசையை நோக்கி ஆசமனம் செய்து பிறகு பல்துலக்குக; நாரத்தை, மா, இருப்பை, கொன்றை, நாவல், பூல், இத்தி, நாயுருவி - இவற்றின் குச்சுகள் பல் துலக்க ஆம்.

சங்குமா தவியே தாதகி செயலை சண்பகம் வன்னியீந் தழிஞ்சில்
பொங்கெழிற் கடம்பு முதலவும் பான்முட் பொருந்திய தருவுமா மவையில்
பங்கமா நற்பான் மரத்தொடு தில்லை பராய்முதற் கழிப்பராண் மரத்தில்
அங்குல மெட்டுத் துறவியேற் கிருகிக் காறிரண் டொருவிரற் பருமை. 20

பொ-ரை: சங்கஞ்செடி முதலியனவும், பால் முள் பொருந்திய மரங்களின் குச்சுகளும் ஆகும்; அவற்றுள் ஆண்மரங்களில் பால்மரம், தில்லை, பராய், முதலியவை குற்றம் எனவும் கழிப்பர்; பற்குச்சு சிறுவிரல் கனம் உடையதாகவும், துறவிகட்கு எட்டங்குலமும் இல்வாழ்வார்க்குப் பன்னிரண்டு அங்குலமும் நீளம் உள்ளதாகவும் கொள்ளவேண்டும்.

அறுதொழி லாள ரல்லவர்க் கொவ்வோ ரங்குல முறையினிற் குறைத்துத்
துறவியர் வடக்குங் கிருகியர் கிழக்குஞ் சொல்லிய திசைகள்பார்த் திருந்து
முறுவன்மா சொழிப்பர் நவமிசங் கிராந்தி முற்றிதி மூவிரண் டுவாக்கள்
பெறுவிதி பாதங் கழிப்பர்மா ணுக்கர் பிறர்தரக் கொள்வர்பற் கொம்பு. 21

பொ-ரை: பார்ப்பனர் அல்லாத ஏனைய மூவர்க்கும் ஒவ்வோர் அங்குலம் சொன்னநீளத்திற் குறைத்துக் கொள்க; துறவிகள் வடக்கும் இல் வாழ்வார் கிழக்கும் பார்த்திருந்து பல்லின் அழுக்கை நீக்குவர்; நவமி, மாதப் பிறப்பு, பிரதமை, சஷ்டி, பூரணை, அமாவாசி, விதிபாத யோகம் என்பவற்றில் பற்கொம்பால் பல்துலக்கார்; மாணுக்கர் போன்ற பிறர் பற்கொம்பு கொண்டு வந்து தர வாங்குவர்.

தந்தகாட் டாதி தருபவ ரில்லாத் தலத்தினும் விலக்குறு தினத்து
மந்தமார் புனிதத் தழையினுல் விளக்க வன்றெனி லுதகம்வாய் வார்த்து
வந்துபன் னிருகா லுமிழ்ந்திட வதனுன் மணிநகை சுத்தியா மதற்பின்
முந்தியா சமன முடித்துநல் விதியான் முறைபெறத் துறையினீ ராடி. 22

பொ-ரை: பற்கொம்பு தருபவர் இல்லாத இடத்திலும், கொம்பினுல், துலக்கலாகாது என விலக்கிய நாட்களினும் அழகிய தூய இலையினுல் பல்லைத் தூய்மை செய்து கொள்க; அன்றிப் பன்னிருமுறை நீரால் வாய் கொப்புளித்த லாலும் பல் தூய்மை எய்தும்; பின் ஆசமனஞ்செய்து விதிப்படி நல்ல நீர்த் துறையில் நீராடுக.

சந்திவந் தனைகள் புரிந்துநீ றணிந்து தக்கசீ ரக்கமா மணியைக்
கந்தரத் தறங்கள் கைக்கணி யருக்கர் கரோடிகை தத்துவ மார்பிற்
பைந்தொடை யரியூர் வடவெழுத் தாகப் படிகந்துப் பாரமூ வகைபொன்
வந்தகோத் தணிக சிரத்தினி லேக மணிகுழை யங்குலி சமையம். 23

பொ-ரை: பின் சந்தி வணக்கஞ்செய்து திருநீறு அணிந்து உருத்திராக்க மணிமாலை அணிக; கழுத்தில் முப்பத்திரண்டு, கைகளில் பன்னிரண்டு, சிரமாலை முப்பத்தாறு; மார்பில் நூற்றெட்டு அல்லது ஐம்பத்தொன்றுளன படிகம், பவளம், முத்து, மூவகைபொன் மணி இவற்றில் கிடைத்ததை உடன் கோத்து அணிக; சிகையில் ஒன்று; செவிகளில் குழையாக அணியும் மணி பதினொன்று.

அறங்கள் முதலியவை எண்மேல் நின்றன. அறங்கள் முப்பத்திரண்டு, அருக்கர் - பன்னிருவர்; தத்துவம் முப்பத்தாறு; அரி ஊர் - திருப்பதி நூற்றெட்டு, வடஎழுத்து - ஐம்பத்தொன்று; அங்குலி சமயம் - ஐந்தும் ஆறும். அங்குலி - கைவிரல்.

சந்திர மவுலி விழிமணி யதிகந்
தரிப்பதிற் சகத்திரம் விசேடம்
சிந்தியா வைந்து பதஞ்சொலிப் புனைந்து
திருக்கடை துறந்துபொற் கோயில்
சுந்தரத் தூபஞ் சுடர்விளக் கியற்றிச்
சுத்திசெய் தெம்பிரான் பூசை
முந்துறு தருப்பை சமிதைமஞ் சனம்பூ
முதற்றிர வியமெலாங் கொண்டு. 24

பொ - ரை : மதியை அணிந்த முடியுடைச் சிவபிரான் மணி அணிவதில் அதிகம் ஆயிரம் சிறப்பு உடைத்து; திருவைந்தெழுத்துச் சொல்லிச் சிவனைச் சிந்தித்து மேற்கூறியபடி அக்கமணி அணிந்து, திருக்கோயில் திருக்கடையைத் திறந்து, திருக்கோயிலில் வாசனைப்புகையும் திருவிளக்கும் விளங்கச் செய்து இடங்களைத் தூய்மை செய்து, பூசைக்கு உரிய தருப்பை, ஓமச்சுள்ளி தூயநீர் மலர் முதலியவற்றை வைத்துக் கொண்டு பூசை செய்க.

வேறு

நித்தியநை மித்தியங்கா மியமாக மூன்றினுநித் தியமாம் பூசை
அத்திதியே தினம் வாரம் பிரதோட மயனம்விழுச் சங்கி ராந்தி
ஒத்திருமண் டலமெனவோ ரொன்பதுநை மித்தியநான் குணர்த்துங் காலை
வைத்தசா னித்தியம்வற் சரபூசை மாத விழா மாத பூசை. 25

பொ - ரை : பூசை நித்தியம் நைமித்திகம் காமியம் என மூவகைப்படும்; இவற்றுள் நித்திய பூசை என்பது அத்திதி, நாள், வாரம், பிரதோடம், அயனம் (உத்தராயணம், தக்ஷிணாயனம்) விஷு, சங்கிராந்தி, அமாவாசி, பூரணை என ஒன்பது; நைமித்திகம் நான்கு ஆவன: சாந்நித்தியபூசை, வருடாபிடேகம், மாத விழா, மாதபூசை என்பவை.

தவனபூ சனைகிருத்தி காதீபந் தீபவளி சங்க பூசை
நவநைவே தனமெனவுங் காமியமோ ரைவகையாய் நடப்ப தாகும்
இவைகளின்ம காசந்தி காலையுச்சி மாலையுடன் யாம நான்காம்
உவகால மருணசந்தி யுழக்காலஞ் சிறுகாலை நிசியோர் நான்கே. 26

பொ - ரை : காமியபூசனை தவனபூசை, கார்த்திகை தீபம், தீபாவளி, சங்க பூசை, புதுநெல் வரும்போது செய்யும் நவநிவேதன பூசை என ஐந்து; இவற்றுள் முதன்மையான காலம் காலை, உச்சி, மாலை, யாமம் என நான்கு; உபகாலம் என்பவை அருணசந்தி, உஷத்காலம், சிறுகாலை, இரவு என்னும் நான்கு.

இன்னவையிற் பூதசுத்தி யிலிங்கசுத்தி மானதமுன் னியற்றி யாவும்
அன்னதினீ ரத்திரத்தாற் புரோக்கித்துக் கயமுகனை யருச்சித் தேத்தி
முன்னுறவா சாரியன்சொன் மந்திரத்தாற் சங்கற்ப முறைமை போற்றிக்
கொன்னுறுசந் தனத்தோயங் கங்கைமுத னதியேழாற் குடம் பூரித்து. 27

பொ - ரை: இக்காலங்களில் பூதசுத்தி இலிங்கசுத்தி முதலாக மானதமாக இயற்றி, அந்த அந்தப் பொருளின்மேல் தண்ணீரை அத்திரமறை சொல்லித் தெளித்து, மூத்த பிள்ளையாரை முதற்கண் வழிபட்டு, முதற்கண் ஆசாரியன் சொல்லிய மறைமொழிகளால் இன்னகாலத்தில் இன்னதை இன்னதற்காகச் செய்கிறேன் என்று தன்நினைவை ஒருநெறிப்படுத்தித் துணிந்து, பெருமையுள்ள சந்தனங்கரைத்த திருமஞ்சனத்தைக் கங்கைமுதல் ஏழு ஆறுகளினின்றும் வருவித்துக் குடத்தை நிரப்பி.

மந்திரத்தாற் புண்ணியயா கம்புரிந்து நவகலச மருங்கு சேர்த்துக்
கந்தநீர்க் கும்பமுதன் முறைசெபித்து நறியபஞ்ச கவியங் கூட்டி
அந்தமுற நெய்தயிர்பால் சர்க்கரைதே னைவகையா வமுதஞ் சேர்த்தி
உந்துசிவ மந்திரத்தா லமைத்துவிதி முறைசாந்தி யோமஞ் செய்து. 28

பொ - ரை: மந்திரங்களால் புனித யாகம்செய்து, புதிய கலசம் பக்கத்தில் அமைத்து, வாசனையுள்ள நீர்க்கலசம் முதலியவற்றை முறையாக அருச்சித்துச் செபித்து, நல்ல பஞ்சகௌவியம் கூட்டி, அழகு பொருந்த நெய், தயிர், பால், சர்க்கரை, தேன் என்பவற்றால் ரசபஞ்சாமிர்தம் கூட்டி, மேலான சிவமந்திரத்தால் செபித்து அமைத்து, முறையாகச் சாந்தி ஓமம்செய்து.

காதலிபா கனைப்பரவிச் சந்தனு தித்தயிலங் கவிய மாட்டித்
தீதறுமை வகையமுத நறுநெய்பா லினியதயிர் செழுந்தேன் கன்னல்
மீதுபல கனிச்சார மிள நீர்ச்சந் தனத்தோயம் விதிநீர்க் கும்பம்
ஆதியபி டேகமிவை யாறிரண்டு மனுவினுவந் தாட்டுங் காலை. 29

பொ - ரை: அம்மையப்பரைத்துதித்து, முதற்கண் சந்தனுதித்தைலமும், பின் பஞ்ச கௌவியமும், அதன்பின் பஞ்சாமிர்தமும், பின் நெய், பால், தயிர், தேன், கருப்பஞ்சாறு, பழச்சாறு, இளநீர், சந்தனக் குழம்பு, விதிப்படி நிறுவிய குடநீர் என்னும் பன்னிரண்டையும் மந்திரம் சொல்லி அபிடேகித்து, அங்ஙனம் அபிடேகிக்கையில்.

கந்ததயி லத்தின்மிசை நெல்லின்மாக் கவியமிசை கனிச்சம் பீரம்
ஐந்தமுத மீதுநெல்லி துப்பின்மேல் வெந்நீரக் காரம் பான்மேல்
பைந்தயிர்பின் சிறுபயறு தேன்மீதிற் புட்பசலம் பரிவாங் கன்னல்
பிந்துகமழ நீர்க்கோட்டம் பஞ்சவில்லம் பலோதகத்தின் பின்ன ராகும். 30

பொ - ரை: வாசனைத் தயிலத்தின் பின் பச்சை அரிசிமா காப்பு, பஞ்ச கௌவியத்தின் பின் எலுமிச்சம்பழச்சாறு பஞ்சகௌவியத்தின் பின் நெல்லிமாத் தண்ணீர், நெய்யின் பின் இளவெந்நீரும் சர்க்கரையும், பாலின்பின் தயிர், பின் சிறுபயற்றுத்தூள், தேனின் பின் புஷ்பம் இட்ட நீர், அன்போடு அபிடேகிக்கும்

கருப்பஞ்சாற்றின் பின் கழுநீர்க்கோட்டம் என்னும் வாசனைப்பொருள்; ஐவகை வில்வங்களைத் தனித் தனியிட்ட நீர் பழச்சாற்றின் பின்னர் ஆகும்.

இன்னவகை மாவிலங்கு நொச்சிவிளா வில்வமறு கிவையா லாட்டி
அன்னதற்பின் பாயசமா மமுதேற்றி யரும்புகைகர்ப் பூர தீபம்
நன்னெறிநீ ராஞ்சனதீ பங்கொடுத்து நனிபெருகு நாளி கேரப்
பின்னர் கந்த தோயமதிற் பின்னரன்ன வபிடேகம் பெரிதி னாட்டி. 31

பொ-ரை: இவ்வாறு மாவிலங்கு, நொச்சி, விளா, வில்வம் அறுகு இவற்றைச் சேர்த்த நீரால் ஆட்டி, அபிடேகமுடிவில் பாயசம் நிவேதித்து, நறும்புகை காட்டி, கருப்பூரச்சுடராகிய ஞானநெறி தரும் நீராஞ்சன விளக்குக் கொடுத்து, பின் தேங்காய்த்திருகல், வாசனைநீர், அதன் பின்னர் அன்ன அபிடேகம் செய்து.

தூபமொடு கருப்புரதீ பங்கொடுத்து வில்லுவநீர் சொரிந்து பின்னர்
மாபணில நீராட்டி நவகும்ப வபிடேக மனுவாற் செய்து
மீபொலிமந் திரபுட்பஞ் சாத்திமந்தி ரானமுயர் வியப்பா லூட்டித்
தாபனபூந் திருமேனி சூழ்ந்துதிரு வொத்தாடை சாத்தி மாதோ. 32

பொ-ரை: நறும்புகையும் கருப்பூரச் சுடரும் காட்டி, வில்வநீர் சங்கநீர் தபனநீர் இவற்றை முறையே அபிடேகித்து, மேன்மையோடு விளங்கும் மந்திர மலர் சாத்தி, திருவொற்றாடை சாத்தும் முன்னர் நிவேதிக்கும் மந்திரான்னம் நிவேதித்து, தவனத்து மலர்மாலையைச் சாத்தித் திருவொற்றாடை கொடுத்து.

பொன்னுடை யுத்தரிக மிசைச்சாத்தி யுபவீதம் புனைந்து சாந்தம்
பன்னீர்குங் குமக்குழம்பு புழுகுமான் மதமெழுகிப் பவரந் தூவிக்
கொன்னுரு மணிமகுடங் கேயூரங் கண்டிகைகுண் டலம்பொற் கோவை
முன்னுர வடம்பலவு மணிந்துமரு மலர்மாலை முறையிற் சாத்தி. 33

பொ-ரை: பொன்னுடையும் உத்தரீயமும் பின் அணிந்து, பூணுநூல் சாத்தி, சந்தனம் பன்னீர் குங்குமப்பூ இவற்றின் கலவை, புழுகு கத்தூரி இவற்றைப்பூசி, வாசனைப் பொடியை மேலே தூவி திருமுடி, வாகுவலயம், கண்டிகை, குழை, பொன்மாலை, முத்துவடம், முதலியவற்றைச் சாத்தியபின் மலர் மாலைகளைப் பொருந்தும்படி அணிந்து.

பொருட்கலத்திற் சுத்தான மமைத்துநிவே தனமுறையிற் புரிந்து தீபம்
கருப்புரத்தா லியற்றியபின் பண்ணியங்கண் முக்கனிகள் கருனை தீம்பால்
வருக்கவகை யமுதேற்றிச் சுருளெடுத்து மணித்தூப தீப மேற்றி
அருட்கவிகை கண்டிசா மரைமுதல பல்லியங்க ளார்ப்ப வேந்தி. 34

பொ-ரை: பொற்கலத்தில் சுத்தான்னம் கொண்டு வந்து நிவேதித்து, கருப்பூரச்சுடர்காட்டி, பண்ணியம், முப்பழம், பொரிக்கறி, இனிப்புள்ள பால் முதலியவற்றை நிவேதித்து, வெற்றிலைச் சுருள்கொடுத்து, நறுந்தூபம் விளக்குக் காட்டி, குடை, கண்ணாடி, சாமரை முதலியவற்றைப் பல வாத்தியங்களின் ஓசையில் ஏற்பித்து.

முற்றுமறை தமிழ்ச்சுருதி பாடலொடு திருச்சின்ன முழங்கத் தேவி
சிற்பரைக்கு மிவ்வாறே யருச்சனைசெய் தாலயஞ்சூழ் தேவுக் கெல்லாம்
பற்பலராற் பூசனைக ளியற்றிவினி யோகமிடல் படிமைப் பூசை
மற்றுளவி சேடபூ சனையுமா கமத்துரைத்த வகையாற் செய்மின். 35

பொ - ரை: ஆரிய வேதம் தமிழ் வேதம் ஓதித் திருச்சின்னம் முழக்குக; அம்மை பராசத்திக்கும், இங்ஙனம் அருச்சனைகளை நிரப்பி, சுற்றுக்கோயில் களுக்குத் தனித்தனிப் பூசகரால் பூசைசெய்வித்துத் திருநீறு முதலியபிரசாதங்களை மற்றவர்கட்குக் கொடுத்தல் நித்தியக் கட்டளைப் பூசையாகும்; வேறு சிறப்பான பூசைகளை ஆகமங்களிற் கண்டு செய்க.

அகமகிழ்ந்து சுத்தசல மபிடேகந் தொறுமிடையி லாட்ட வேண்டும்
நிகழுமதுக் குளவளவை ததிபாலிவ் விருமடங்கு நெய்யாற் பாகம்
திகழுறச்சேர்த் துவதமிர்த மைந்தாகு முயர்திருமஞ் சனமெந் நாளும்
பகலெடுத்த திரவினுமா மிரவெடா ரெடுப்பர்கனல் பசும்பொன் காட்டி. 36

பொ - ரை: ஒவ்வோர் அபிடேகத்தின் பின்னும் சுத்தநீரால் இடை யிடையே ஆட்டவேண்டும்; ஐயமுது சேர்த்தும்போது தேன் ஓர் அளவு, பால், தயிர் இரண்டிரண்டு அளவு, நெய் நான்கு அளவு கொள்க; பகலில் எடுத்த திருமஞ்சனம் இரவினும் ஆகும்; இரவில் திருமஞ்சனம் எடார்; எடுப்பின் பசிய பொன்னைக்காட்டி எடுக்க.

## பூசைக்குரிய பூவும் இலையும்

வேறு

முருகல ரலரி வில்வ மூவிதழ் வில்வம் பற்பம்
உருவநூற் றிதழ்செங் கஞ்ச முயர்ந்தநா யுரிஇ தருப்பை
சுருள்விரி தளவஞ் சாதி தும்பைவெண் காக்க ணஞ்சீர்
பெருகும்வெள் ளெருக்கம் வாசப் பெருந்தும்பை கழுநீர் நீலம். 37

உரைத்தமு வைந்தி லொவ்வொன் றுயிர முயர்ச்சி நீலம்
அருத்தமா மலர்போ லென்றுங் கழுவியுஞ் சாத்த லாகும்
தரித்தபத் திரங்கட் கெல்லாஞ் சதமடங் குயர்ச்சி சாலும்
மருக்கொழுந் ததன்மேல் வில்வ மாயிர மடங்கு மாதோ. 38

பொ - ரை: அலரி, வில்வம், மூவிதழ் வில்வம், தாமரை, செந்தாமரை, நாயுருவி, தருப்பை, முல்லை, சிறுசண்பகம், தும்பை, வெண்காக்கணம், (கருவிளை) வெள்ளெருக்கு, பெருந்தும்பை, செங்கழுநீர், நீலோற்பலம் எனும் பதினைந்தில் ஒவ்வொன்று முன் உள்ளதைவிட ஆயிரமடங்கு உயர்வுடையது; நீலோற்பலத்தை, பொன்மலர்போல ஒருமுறை சாத்தியதைக் கழுவி மீளவும் சாத்தலாம்; இறைவனுக்கு உரிய இலைகளுக்குள் மருக்கொழுந்து நூறுமடங்கு உயர்ந்தது; வில்வம் ஆயிரமடங்கு உயர்ந்தது.

## ஆகமங்கள் இறைவன் அங்கமாதல்

காமியம் பதங்க ணைக்கால் யோகச மசிதஞ் சானு
வாமங்கா ரணந்தி பத்தங் குறங்குசூக் குமம்வாழ் குய்ய
மாமியற் சிந்தி யந்தா னங்குலம் விமல நாற்கை
தூமுது கஞ்சு மானே சுப்பிர பேத முந்தி. 39

விசையமே வயின்சு வாயம் புவந்தனம் வீரங் கண்டம்
நிசுவாசந் துண்ட மார்பு சந்திர ஞான நெற்றி
வசையறு சித்தம் விம்பம் வதனங்க ணாக்கி னேயம்
மிசைபுரோற் கிதமே நாவு ரவுரவ மிலங்கு கன்னம். 40

திரலளி தங்க போலஞ் சென்னியே மகுட மேலைப்
பரமேசந் தரள மாலை பரிவட்டம் வாதுளஞ்சீர்க்
கிரணமா பரணங் காலோத் தரங்கிளர் சாந்த மென்பர்
தருசரு வோத்த மந்தான் பூணூல்சந் தினங்கன் னப்பூண். 41

பொ-ரை: காமிகம் பாதம், யோகசம் கணைக்கால், அசிதம் முழந்தாள், காரணம் இடத்தொடை, தீப்தம் வலத்தொடை, சூக்குமம் குய்யம், சிந்தியம் கைவிரல், விமலம் கை, அஞ்சுமான் முதுகு, சுப்பிரபேதம் கொப்பூழ், விசயம் வயிறு, சுவாயம்புவம் முலை, வீரம் கழுத்து, நிசுவாசம் மூக்கு, சந்திரஞானம் மார்பு, சித்தம் நெற்றி, முகவிம்பம் முகம், ஆக்கினேயம் கண், புரோற்கீதம் நாக்கு, இரௌரவம் காது, இலளிதம் கன்னம், மகுடம் தலை, பரமேசம் முத்து மாலை, வாதுளம் ஆடை, கிரணம் ஆபரணம், காலோத்தரம் சந்தனம், என்பர் பெரியோர். சருவோக்தம் பூணூல், சந்தானம் காதில் அணி குண்டலம்.

எங்குமே நிறைந்தோர்க் கிவ்வா ருகம மிருபத் தெட்டும்
அங்கமே யவைகட் கெல்லா மகுடமே யுத்த மாங்கஞ்
சங்கமே மறுகு சூழ்குற் றாலமே தலங்கட் கெல்லாம்
துங்கமே மகுட பூசை தொன்றுதொட் டமைந்த தன்றே. 42

பொ-ரை: இங்ஙனம் எங்கும் நிறைந்த இறைவனுக்குச் சிவாகமங்கள் இருபத்தெட்டும் அங்கமாகும்; அவற்றுள் மகுடம் (முடி) தலையாய உறுப்பு; சங்கமே வீதியாகச் சூழும் திருக்குற்றாலமே தலங்களுள் தலைசிறந்தது; ஆதலால், மகுடாகம முறையிற் பூசை பண்டுதொட்டு இங்கு அமைந்துள்ளது.

பரவுமா வாக னந்தா பனமுயர் சன்னி தான
நிரோதன மவகுண் டஞ்சீர் முத்திரை நிகழ்பாத் தியம்
பொருவிலா சமன மேயர்க் கியம்விரி புட்பந் தூவல்
வரதனைப் பூசை செய்யுந் தேசிகர் வகையீ ரைந்தே. 43

பொ-ரை: ஆவாகனம், தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம், அவகுண்டனம், முத்திரைகள், பாத்தியம், ஆசமனம், அர்க்கியம், புஷ்பாஞ்சலி என்னும் பத்தும் சிவபூசைசெய்யும் தேசிகர்களிடத்து உணர்தற்கு உரியவை.

## *அபிடேகப் பொருள்களால் வரும்பயன்*

### வேறு

தயிலமா ரோக்கியமாத் திருமகணேக் கம்விசையந் தருஞ்சம் பீர
மியன்மகப்பே ருச்சியமைந் தமிர்தமிரா சதநெல்லி யினிதாஞ் செல்வம்
பயமதுசத் துருநாசந் ததிக்குமகப் பெருகும்வெந்நீர் பல்கும் வாழ்நாள்
உயர்குலோ தகம்பயற்றின் பொடிக்கிராச் சியத்தோட மொழியு மாதோ. 44

பொ-ரை: தயிலம் நோயின்மையைத் தரும்; அரிசிமா திருமகள் நோக்கை வருவிக்கும்; எலுமிச்சம்பழச்சாறு வெற்றியைத்தரும்; நெய் மகப்பேறு உண்டாக்கும்; ஐயமுது இராச்சியம் தரும்; நெல்லி எளிமையிற் செல்வம் வருவிக்கும்; பால் பகையழிவுதரும்; தயிர் மக்கள்பெருக்கு; வெந்நீர் ஆயுளை வளர்க்கும்; சர்க்கரை கலந்தநீர், பயற்றின் பொடி என்பவை அரசு சம்பந்தமான குற்றம் போக்கிக் காக்கும்.

தேனிரா சதங்கருப்பம் பாலினுக்குத் திருமடந்தை சேருஞ் சீதப்
பானீயஞ் செழுங்கழுநீர்க் கோட்டமிவை பிறவிதெறும் பலோத கங்கள்
ஈனபா தகந்தீர்க்கு மியல்பெறுசந் தனத்தோய மிளநீர் தம்மால்
ஆனராச் சியத்தினுக்கு மரசருக்கும் பெரிதுசுக மாகு மன்றே. 45

பொ-ரை: தேன் அரசு ஆட்சிதரும்; கருப்பஞ்சாறு திருமகள் அருள் நோக்கைத்தரும்; குளிர்ந்த உண்ணுநீர் செங்கழுநீர்க் கோட்டம் என்பவை பிறவி நீக்கந்தரும்; பழச்சாறுகள் இழிந்த பாவங்களைப் போக்கும்; சந்தனக் குழம்பு, இளநீர் இவை அரசருக்கும் நாட்டிற்கும் இன்பத்தைத்தரும்.

அன்னமபி டேகமன்ன சமிர்த்திகூ விளத்தோய மதனு லென்றும்
நன்னர்பெறும் புத்திமுத்தி யுண்டாகுஞ் சருவசித்தி நத்தின் றேயம்
சன்மலிசீர் நவகும்ப மிராசசுகம் புவனிசுகஞ் சாந்தி யோமம்
மென்மலர்மந் திரபுட்ப மந்த்ரானங் கொள்ளையதி விருட்டி நீங்கும். 46

பொ-ரை: அன்னபிடேகம் அன்னவிருத்தி தரும்; வில்வ இதழிட்டநீர் என்றும் போக மோக்ஷங்களைத்தரும்; சங்கநீர் எல்லாப் பேறுந்தரும்; நன்மை மிகுந்த நவகும்ப நீர் அரசருக்கு இன்பம் பெருக்கும்; சாந்தி ஓமம் நாட்டிற்கு நன்மைதரும்; மந்திரப்பூவும் மந்திரான்னமும் கொள்ளைநோய் அளவுகடந்த பெயல் என்பவற்றை நீக்கும்.

வத்திரம்வத் திரலாப மலர்மோக்க முபவீத மகத்தின் பேறும்
உத்தமசந் தனக்குழம்பு பெருஞ்செல்வ மமுதேற்ற லுயர்சா ரூபம்
மெய்த்தூப மாசமன மருக்கியஞ்சா னித்தியமாம் விமல மூர்த்தி
மொய்த்தமணி யொலிக்கிராக் கதநிவிர்த்தி தீபமுயர் மோக்க மாகும். 47

பொ-ரை: ஆடையுடுத்தல் ஆடைமிகுதியைத்தரும்; மலர் வீடுபேறு தரும்; பூணநூல் வேள்விப்பயன் நல்கும்; சந்தனக்குழம்பு பெருஞ் செல்வப்

பேறுதரும்; திருஅமுது ஏற்பித்தல் உயர்ந்த சாரூபம்தரும்; நறும்புகை, உண்ணு நீர், முடிக்குத் தெளிக்கும் வாசநீர் முதல்வன் எதிர்ப்பாட்டை விளைவிக்கும்; மணி ஒலி அரக்கர் பீடையை ஒழிக்கும்; விளக்கு வீடுபேறு அளிக்கும்.

அக்கரா லத்தியுயர் சித்திதரு மமலகருப் பூர தீபஞ்
செக்கமலை நோக்குறுநீ ராஞ்சனசத் துருநாசந் திருவெண் ணீறு
தொக்கபுவி யாட்சிதரும் பூமடந்தை யருள்பெருகுஞ் சுருள்கொண் டேத்த
முக்கணன்முன் னுறநடிப்பன் சத்திரஞ்சா மரஞ்சுருதி முதற்பா டற்கே. 48

பொ-ரை: சர்க்கரை கலந்த நீரின் ஆலத்தி உயர்ந்த சித்திகளைத்தரும்; கருப்பூரச் சுடர் திருமகள் நோக்கை உண்டாக்கும்; நீராஞ்சனம் எனப்படும் கருப்பூர ஆலத்தி பகை அழிவைத்தரும்; திருநீற்றுக் காப்புச்செயல் உலக ஆட்சியைத்தரும்; வெற்றிலைச் சுருள் திருமகள் அருள்பெருக்கை விளைக்கும்; கண்ணடிகாட்டி சாமரம் அசைத்தலும், மறைகளைப் பாடலும் இறைவன் திருக் கூத்தைக் காணச்செய்யும்.

மத்தளந்தா னியவிருத்தி கரடிசயம் வளர்படகம் பாவநாசம்
மெய்த்திமிலை தொடர்காமி யம்பலவு நல்விருத்தி விதித்த யாவும்
நித்தமெனி லொருமடங்கு பிரதோடஞ் சதமடங்கு நிகழ்த்துங் காலை
இத்துணையுந் திரிகூடத் தியற்றலா யிரமடங்கென் றிசைக்கும் வேதம். 49

பொ-ரை: மத்தளம்கொட்டல் தானிய விளைவுதரும்; கரடி, படகம் ஒலித்தல் பாவத்தை அழிக்கும்; திமிலைஒலி வேண்டியவற்றைப் பெருக்கும்; இங்ஙனம் கூறியபயன் நித்தபூசையில் ஒருமடங்குபயனும், பிரதோட வழிபாட்டில் நூறுமடங்கும் விளையும்; இவை திரிகூடத்துச் செய்யின் ஆயிரமடங்கு பலன் விளைக்கும் என வேதம் மொழியும்.

வேறு

என்னவா கமங்கள் யாவு மியன்றசீ ரொழுக்கம் யாவும்
முன்னுற வுணர்த்தி மூன்று தீக்கையு முறையின் முற்றி
அன்னவர் தமைப்பொற் பீடத் தமைத்தபி டேகஞ் செய்து
நன்னகர்ப் பெருமான் மூல நாமமந் திரங்க ளோதி. 50

பொ-ரை: இங்ஙனம் ஆகமப்பொருள்நிலை முழுவதையும், பெரியோர்கள் நடந்துவந்த ஒழுக்கங்களையும் முதற்கண் உணர்த்தி, பின் சமயம், விசேடம், நிருவாணம் என்னும் மூன்று தீக்கைகளையும் செய்து, அச்சிவமறையோரைப் பொற்பீடத்திருத்தி ஆசாரியாபிடேகம் செய்து திருக்குற்றாலநகர் மூர்த்தியின் மூலமந்திரமும் திருநாமமந்திரங்களும் சொல்லி.

நித்திய முதல மூன்று நிகழ்சரி யாதி நான்கும்
சுத்தியோ ரைந்தும் பூதி சாதனத் தொடர்புந் தொண்டர்
பத்தியெண் வகையு மைந்து பதமுநாற் கதியு மேலை
அத்துவா வாறுங் கூறி யருச்சனை புரிமி னென்றான். 51

பொ-ரை: நித்திய நைமித்திகம் காமியம் என்னும் மூவகை வழிபாடும், சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கு சாதனங்களையும், தான், இடம், பொருள், மந்திரம், இலிங்கம் என்னும் ஐவகைச் சுத்திகளையும், திருநீற்றுச் சாதன முதலியவற்றையும், எண்வகைப் பத்தியினையும், திருவைந்தெழுத்தும், சாலோக சாமீப சாரூப சாயுச்சியமாகிய நான்கு பயன்களையும், தத்துவம், புவனம், கலை, எழுத்து, பதம், மந்திரம் என்னும் உயிர்கள் வீடுபேறு அடைதற்கு வழியாய் இறைவனால் படைக்கப் பெற்ற அத்துவா (வழி) ஆறனையும் விளக்கி அறிவுறுத்தி, சொன்ன முறையால் முதல்வனை இங்கு வழிபாடு செய்யுங்கள் என ஆணையிட்டனர் அகத்தியர்.

மன்பெருந் திரிகூ டத்து மாயனைப் பரம னாக்கித்
தென்புவிக் கோட்டந் தீர்த்துத் தேவர்மா முனிவர்க் கெல்லாம்
கொன்பெருந் தகைமை பூண்டான் குறுமுனி யம்ம வீசன்
அன்பர்தம் பெருமை தன்னை யாவரே யறிதற் பாலார். 52

பொ-ரை: நிலைபெற்ற திரிகூடத்து "மாயனைப் பர"மனாக்கி, தென் புவியின் மாறுபாட்டை நீக்கி தேவர்க்கும் மாமுனிவர்க்கும் ஆசிரியத்தலைமை பூண்டார் அகத்திய முனிவர்; இறைவன் அன்பர் பெருமையை யாவரானும் வரைந்து அறிதல் கூடுவதன்று.

புரிசடைத் திரிகூ டத்தெம் புனிதனை யின்ன வாறே
தெரிவுறப் பூசை செய்யுஞ் சிவமறை யவருட் டானும்
ஒருவனென் றிருந்து பூசித் தோங்குசீ ரலவ னாதி
வரிசிலைத் திங்க ளீரு வதிந்தனன் மலைய யோகி. 53

பொ-ரை: திரிகூடத்துச் சடைமுடிக் கடவுளை இங்குக் கூறியபடி பூசித்து வரும் மறையவருள் தாமும் ஒருவராக இருந்து பூசனைசெய்து ஆடிமுதல் மார்கழி வரை அங்கு வாழ்ந்தனர் அகத்தியர்.

வி-கு: அலவன் - கடகம், ஆடி. சிலை - தனுசு, மார்கழி.

இதுதமிழ் முனிவன் செய்கை யென்னலு மவனுக் கோதும்
அதிசயப் பரம கீதை யெட்டினு ளசலந் தீர்த்தம்
பதிசிவம் பரைப லாவும் பகர்ந்தனை யிரண்டி லேனக்
கதிதொடர் வேடன் செய்கை கழறெனக் கழறுஞ் சூதன். 54

பொ-ரை: இது தமிழ் முனிவர் பற்றிய வரலாறு எனச் சூதமுனிவர்கூற, கேட்ட முனிவர்கள் அவருக்குப் பரமன் அறிவுறுத்த எட்டுப்பொருள்களில் மலை, தீர்த்தம், நன்னகர், மூர்த்தி, பராசத்திபீடம், பலா என்னும் ஆறன் இயல்பு களைக் கூறி முடித்தனை; எஞ்சியுள்ள இரண்டினுள் பன்றியின் செலவைத் தொடர்ந்த வேடன் செயலைக் கூறியருளல் வேண்டும் என வினவ, சூதர் கூறு கின்றார்.

சிவபூசை விதியுரைத்த சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1496

---

# நதிவீழ்வேடன்
# கதிபெறு சருக்கம்

மருவி மாலை மிகுத்தகை வாரணம்
வெருவி மாலைதென் காந்தளைத் தீயென
ஒருவி மாலைவின் மேற்பிசைந் தூற்றுநீர்
அருவி மாலை யணிதடங் குன்றமே. 1

பொ - ரை: அழகிய பெரிய குன்றத்திற்கு மயக்கம் மிகுந்த தும்பிக்கையை யுடைய யானை வந்தபின், மாலைக்காலத்து அழகிய காந்தள் மலரைத் தீ என்று கருதி அஞ்சி, அவ்விடத்தின் நீங்கி மேகத்தைப் பிசைந்து ஆகாயத்தில் ஊற்று நீர் அருவியாகிய பூமாலை ஆகின்றது.

வி - கு: மாலை - மயக்கம் (ஐசாரியை), மாலைக்காலம், மேகத்தை, (பூ)மாலை.

சூரல் வேலிச் சிறுகுடித் தோகைமார்
வேரல் வேலியில் வேட்டஞ்செய் வேடர்மேன்
மூரல் வேலியிட் டாலென முத்தமார்
சாரல் வேலியங் கொல்லிச் சயிலமே. 2

பொ - ரை: அழகிய கொல்லிமலை அச்சந்தரும் இருள்சூழ்ந்த வேலியை யுடைய சிறுகுடி வேடமகளிர், பிரம்பு வேலியில் மறைந்திருந்து வேட்டையாடும் வேடர்களுக்குத் தங்கள் சிரிப்பாகிய வேலியை அமைத்து வைத்தாற்போல முத்துக்கள் நிறைந்த சாரலாகிய எல்லையை உடையது.

வேறு

அத்த லைப்பெருங் கிரியன ரரியின முறழ்வோர்
மைத்த லைக்கருங் கடல்புரை மேனியர் வடவைக்
கொத்த லைத்தன குஞ்சியர் கொடியபா தகங்கள்
வித்த லைப்புரி வினைப்பெருஞ் சிலைக்கைவே டுவரே. 3

பொ - ரை: அந்த முதன்மையான பெருமலையிலிருந்தவர்கள் சிம்மங்களை ஒத்தவர்; இருட்டு இடமாகிய கடல்நிற மேனியர்; வடவைக் கூட்டத்தின் அசைவு போன்ற தலைமயிர் உடையவர்; பெரும் பாவங்களை விதைத்தலைப் புரியும் செயல் திறனுள்ள வில் வேடர்கள்.

ஐவ னத்தினை யரிதல்போ லகிலொடு சாந்த
மொய்வ னத்தினை யெறிந்தனர் முறைமுறை தெளித்துக்
கொய்வ னத்தினை யழித்திடுங் கிளிக்குலந் துரப்பத்
தெய்வ நத்தினைப் பொருகளக் கிளியினஞ் செறித்தார். 4

பொ-ரை: மலை நெற்பயிரை அரிதல்போல அகிலும் சந்தனமும் உள்ள சோலையையும் வெட்டினர்; முறைமுறையாக விதைத்து அறுவடை செய்யும் தினைப்புனத்தை அழிக்கும் கிளிகளை ஓட்டுவதற்குச் சங்குபோன்ற கழுத்தை யுடைய தம் பெண்களாகிய கிளிகளை காவல் வைத்தனர்.

மருமலர்க்கொரு தாளென நீத்தவஞ் சியரை
அருநிலத்திரு தாள்பெறு மிதணின்மே லமைத்துப்
புருவ விற்களும் பொருவிழிக் கணைகளும் போதா
திருகரத்தினிற் கற்களுங் கவண்களு மீந்தார். 5

பொ-ரை: தாமரைக்கு ஒருதாள்தான் உள்ளது அதனை நீங்கிவந்த திருவைப்போன்ற மகளிரை இரு (பெரிய) தாள் உடைய பரண்மேல் அமைத்து, அவர்தம் புருவமாகிய வில்லும் குழையை முட்டும் கண்களாகிய அம்புகளும் போதா எனக் கருதி அவர்தம் கைகளில் கவணும் கற்களும் கொடுத்தனர்.

இருஞ்செவிக்கிடை யேனலங் கொடிச்சிய ரிசைத்தேன்
அருந்திடத்திரி வாரமு தாசன ரவர்க்கும்
அருந்திடத்தினந் தேடுவ ரரம்பையர் வரைமேல்
விருந்திடத்தினந் தேடுவர் வேள்விவே தியரே. 6

பொ-ரை: தம் பெரிய செவியில் தினைப்புனப் பெண்கள் இசைக்கும் இசைத்தேன் பருக தேவர்கள் கொல்லிமலையில் திரிவர்; அவர்க்குஅமுதுபடைக்க (மருந்தீடுசெய்ய) அரம்பையர் அவரைத்தேடித்திரிவர்; வேள்விசெய்யும் வேதியர் அவியாகிய விருந்தை உண்பிக்கத் தேவரை நாளும் கொல்லிமலையில் தேடுவர்.

குன்றின் மேற்சரு கருந்தியும் வருந்தியுங் குகைவாழ்ந்
தென்று மேயினை யாரெனு முனிவரோ வினையார்
மன்றலோதியர் கிளிகடி மழலைவாய் மொழியின்
ஒன்று தேனிசைக் குருகியே யிளைத்தன ருடலம். 7

பொ-ரை: கொல்லிமலையில் சருகுண்டு வெயில் குளிர் என்பவற்றால் வருந்தி என்றும் இளைக்கமாட்டாத முனிவர் இளம்பருவம் உள்ள பெண்கள் கிளியை ஓட்டும் இனிய வாய் மொழியாகிய தேன் போன்ற இசைக்கு உருகி உடல் இளைத்தனர்.

கனதனத்தியல் சிவந்தவாய்க் கருங்கணி லியரை
வனசரப்படர் வளர்புனங் காக்கவோ வைத்தார்
புனமழிக்கவும் பொருப்பில்வாழ் முனிவர்தந் துறவுத்
தனமழிக்கவுந் தவத்தினை யழிக்கவு மன்றே. 8

பொ-ரை: வேடராகிய யமதூதுவர் கறுத்த அழகிய பெண்களைத் தினைப் புனங்காக்க வைக்கவில்லை, மற்றுத் தினையை அறுக்கவும், மலைவாழ் முனிவர் துறவுத்தன்மையினையும் தவத்தையும் அழிக்கவுமே வைத்தார்கள்.

கொங்கை யாற்கரி நடையினுற் பிடிகுளிர் புனத்து
மங்கை யார்விழி யாற்பிணை சாயலான் மயில்கள்
பொங்கு மின்னிசை யாற்குயி லினமெனப் புகுந்த
செங்கை மேற்கவண் கல்லெலா மிசையினுற் சிதைந்த. 9

பொ-ரை: காவல் மங்கையர் கொங்கையால் களிறும், நடையால் பிடியும் விழியால் பெண்மான்களும், சாயலால் மயில்கள், மிகுந்த இன்னிசையால் குயில்கள் தம் இனம் உள்ளது எனக் கருதித் தினைப்புனத்து வந்தன; அவற்றைத் துரத்தற்கு எடுத்த கல்லெல்லாம் அவர் தம் இசைக்கு உருகிக் கரைந்து அழிந்தன.

கூன லங்குர மதிநுதற் கோதைய ரோச்சும்
பான லங்குர லோசையே பசுங்கிளி யழைப்ப
ஏன லங்குர லழிந்தன விழிந்தன புனமும்
கான லங்குர லடிகளும் பிடிகளுங் கனுல. 10

பொ-ரை: வளைந்த முளைமதிபோன்ற நெற்றியையுடைய பெண்கள் கிளிகளை விரட்டுதற்கு எழுப்பும் பால்போலும் நல்ல வாய்மொழி இசையே கிளிகளை அங்கு அழைத்துவிட்டது; அதனுல் தினைக்கதிர் அழிந்தது; காட்டில் விளங்கும் உரல்போன்ற அடியுள்ள ஆண் யானைகளும் பெண் யானைகளும் நெருங்க புனமும் கெட்டது.

வி-கு: அங்குரமதி - முளை மதி; பால் நல் அம் குரல் எனப் பிரிக்க. குரல் - தினைக்கதிர். கான் அலங்கு உரல் அடி எனப் பிரிக்க.

விருப்பு றும்புன மழிதலு முழிதர விரவிப்
பொருப்ப ரானவர் கானவர் கணத்தொடும் பொதுளிச்
செருப்புந் தோல்களுஞ் செறித்துவார் சிலைகணை பிடித்து
நெருப்புங் காலுமொப் பாமெனத் திசைதொறு நிறைந்தார். 11

பொ-ரை: தினைப்புனம் அழிந்தமையின் வேடர்கள் முல்லை நிலத்துக் கானவரோடு சுழன்று கலந்து நெருங்கி காலுக்குச் செருப்பும் முன் கைக்குத் தோலும் செறித்து வில்லும் அம்பும் ஏந்தி நெருப்போடு காற்றும் சேர்ந்தாற் போல எங்கும் நிறைந்தனர்.

## வேறு

கொம்பு கோடுடை வேடுவர் கூர்வலை
அம்பு வில்லெறி வல்லைய மாடல்வாள்
பம்ப ரூசினர் பைம்புனப் பாவைமார்
வெம்பு ரூரம் விழிப்படை மொய்த்தல்போல். 12

பொ-ரை: தினைப்புனத்துப் பெண்களின் விருப்பத்தைத் தரும் புருவமும் விழியுமாகிய படை மொய்த்தாற்போல, ஊதுகுழலும் சங்கும் உடைய வேடுவர்

வலேயும் அம்பும் வில்லும் எறி ஈட்டியும் வெற்றிதரும் வாளும் நெருங்க வந்து கூடினர்.

வி - கு: கோடு - சங்கு. வல்லேயம் - எறி ஈட்டி. புரூரம் - புருவம்.

மானே யுங்கட மானேயுந் தாக்குவார்
ஆனே யும்பிடி யானேயுஞ் சூழுவார்
ஏனே மாக்கள் சுவடெடுத் தேகுவார்
பூனே போல்வர் புலியெனப் பாய்வரால். 13

பொ-ரை : மானேயும் காட்டுப்பசுவையும் கொல்வர்; யானேகளேவளேத்தனர்; பிறவிலங்குகள் அடிச்சுவடுபற்றிப் பின்தொடர்வர்; பூனேபோல் பதுங்கிப் புலி போல் பாய்வர்.

வேறு

வெடிகு ரற்குல மதகய மெதிர்தலும் வீரர்
அடிவ யிற்றிடை மலேமுழை யசனிபோ னுழைந்து
துடிய டிக்கிடை யோடுபு மருப்பினேத் துமித்து
நெடிய மாலெனக் குத்துவர் மத்தக நெரிய. 14

பொ - ரை: மதயானே எதிர்த்தபோது, வீரர் அதன் அடிவயிற்றில் மலேக் குகையில் நுழையும் இடிபோல நுழைந்து தந்தங்களே வெட்டி நீண்ட திருமால் போல அதன் தலே நெரியும்படி குத்துவர்.

கொல்லு குத்திர வேங்கைமேற் குதித்தலுங் குதியார்
வில்லு குத்திடு கொடுங்கணே விடுத்துவாய் கிழித்துப்
பல்லு குத்துகிர் காலொடுந் துணித்துடல் பதைப்பச்
செல்லு குத்தெனச் செறுபடை வாளினுற் சிதைப்பார். 15

பொ - ரை: கொல்லுதல் வல்ல வஞ்சனேயுடைய வேங்கைப்புலி பாய்ந்து வரினும் தாம் குதித்து ஓடார்; மேகம் மழையைச் சொரிந்தாற்போல வில்லி னின்றும் கணேகளேச்சொரிந்து அதன் வாயைக்கிழித்துப் பற்களேச் சிதறச்செய்து உடல் பதைக்கும்படி வாட்படையால் அதன் நகங்களேக் காலோடு துணித்துச் சிதைப்பர்.

வி - கு: செல் - மேகம். குத்திரம் - வஞ்சனே.

கரடி யைப்பெருங் காரெதிற் சூறைபோற் கதையான்
முரடி ருத்திய முசுண்டியாற் சிரமதின் முருக்கி
ஓரடி முற்புகுந் தீரடி பின்னிழூத் துலேத்துப்
பரடி ருத்திவெங் காலினு லுதைப்பர்மெய் பதைப்ப. 16

பொ - ரை: கரடியை, மேகங்களேச் சூருவளி சிதைப்பதுபோற் சிதைப்பர்; அதன்தலேமீது கதையினுலும் கணுவைக்கப்பட்ட மட்டிப்படையாலும் மோதி ஓரடிமுன் சென்று பின் ஈரடி விலகிச்சென்று அதனே மயங்கச் செய்து கணேக் காலோடு கூடிய காலால் உடல் பதைக்கும்படி உதைப்பர்.

பன்றி யைப்பிறை மருப்பொடுங் கீழிடும் பார்வை
துன்றி நிற்றலி னெதிர்செலா திடர்வலஞ் சுலவி
வென்றி வட்டமு நீளமுஞ் சிலம்பங்கள் விளைத்துச்
சென்றி ருட்கிருண் மலைந்தெனச் சாரிகை திரிவார். 17

பொ-ரை: காட்டுப்பன்றிவரின், அது கோரைப்பற்களோடு கீழ்நோக்கும் உடையது; ஆதலால் எதிர் செலாது, இடமும் வலமுமாகச் சுழன்று வெற்றியைத் தரும் வட்டம் நீளம் என்னும் கருவிப் பயிற்சி முறைகளைப் பின்பற்றி இருளோடு இருள் போர்புரிந்தாற்போல வட்டமாக ஓடுவர்.

தடறு ரீஇக்கொடு வாள்விதிர்த் தெதிர்தலுந் நரியா
மிடறு டைத்ததிர் குரலொடு திசைதிசை விரவக்
கடறு கட்டினர் கைவலை வீசினர் கலந்தார்
இடரு பட்டொரு புவனமுன் குதித்ததோ ரேறுழி. 18

பொ-ரை: உறையினின்றும் கழற்றி வளைந்த வாளை அசைத்தலோடு பேரொலி எழுப்பி எத்திசையிலும் சூழ்ந்து, மந்திரத்தால் விலங்குகள் காட்டை அகலாதபடி கட்டுப்படுத்திக் கைவலையை வீசி மடக்கியபோது, ஒரு பன்றி இடர்ப்பட்டு ஒரு நீர்நிலையில் குதித்தது.

குடபு லத்தினர் வடபுலத் தினர்குண புலத்தோர்
இடம்வ லத்தினும் விலகினர் விலகுரு திவனே
வடபு லத்தெழு கனலியைத் தென்றிசை மறித்தான்
கடவு மஞ்சினைப் பஞ்சவன் வளைத்தமை கடுப்ப. 19

பொ-ரை: மேற்கு வடக்கு கிழக்குத் திசையிலிருந்தோர் இடத்தினும் வலத்தினும் விலகினர்; வேடர் தலைவன் வடக்கே எழுந்த பன்றியைத் தென்றிசையில் தடுத்தான்; அது இந்திரன் ஏவிய மேகத்தைப் பாண்டியன் வளைத்தது போன்றிருந்தது.

வி-கு: கனலி - பன்றி.

புண்கி ளைத்திடப் பல்படை யோச்சினன் பொருவான்
மண்கி ளைத்தெதிர் வருதலும் பொருதல்பின் வாங்கான்
விண்கி ளைக்கிலும் விடானெனச் சூகரம் வெருவிக்
கண்கி ளைத்திடாத் திசைதொறு நுழைந்துபுக் கதுவே. 20

பொ-ரை: பன்றியின் உடலில் புண் உண்டாகும்படி பல படைகளை ஏவினான்; மண்ணைக்கிண்டி எதிர்ந்தபோதிலும் எதிர்த்தற்குப் பின்வாங்கவில்லை; விண்ணிற் பாயினும் இவன் விடான் எனக் கருதி, பன்றி கண்ணுக்கெட்டாத சேய்மைத் திசைதொறும் நுழைந்து சென்றது.

மலைந்த சாரியிற் சரியையர் போல்வலம் வருவான்
அலங்கு பூச்சரஞ் சொரிதலிற் கிரியைய ராவான்
சிலம்பு கான்புகுந் தொளித்தலிற் பொறிபுலன் சேர்த்தி
உலைந்தி டாதொளி யிருத்தலின் யோகிய ரொப்பான். 21

பொ - ரை: வேடர் தலைவன் எதிருன்றி வட்டமாக வருதலின் சரியையாளர்போல வலம் வருவான்; அசையும் பூச்சரங்களை (ஒளிரும் அழகிய சரங்களை)ச் சொரிதலின் கிரியையாளரை ஒத்தான்; மலையும் காடும் புகுந்து தனியிருத்தலினலும், பொறி புலன்களை ஒன்றுபடுத்தி ஒளியில் இருத்தலின் (பிறர் அறியாதிருத்தலின்) யோகியர் போல்வான்.

வேறு

காணுமுன் சகலரைப்போற் சுவடுகண்டாற் பிரளயா கலர்போற் கண்டும்
சேணுகில் விஞ்ஞான கலரைப்போன் மலந்திரியத் திரிய வேடன்
மாணுக்க னெறிபார்க்கும் பாவனையாற் பரிசத்தால் வன்கட் கேழல்
கோணுர்ந்த குண்டமண்ட லாதிகளா னெறிவருத்துங் குரவன் போலும். 22

பொ - ரை: மூவகை உயிர்களை அவற்றின் மலம் பக்குவமாக ஆக ஞான நெறிக்கண் வருவிக்கும் ஞான ஆசாரியன்போல, வேடன் பன்றியைக் காணுமுன் சகலருக்குச் செய்வதுபோலக் குழியும் மண்டலமும் அமைத்து வைத்தும், அதன் அடிச்சுவட்டைக் கண்டபோது பிரளயாகலருக்குப் போலச் சென்று பரிசித்தும், கண்டும் தொலைவில் ஓடிவிடும்போது விஞ்ஞானகலருக்குப் போலத் தன் மனேபாவனையால் அதன் போக்கை எதிர்பார்த்தும், அதனைப் பற்ற முயன்ருன்.

வி - கு: எதிர் நிரல் நிறை.

இனமானின் கணங்கூடிப் பிரியுமிடந் தொறும்பிரியா தேகும் வேடன்
வனமான தத்துவம்விட் டகருேறு மகலாத மலமே போன்ருன்
புனமேறிக் கான்வரைதாய்த் திரிகூடம் புகுமேனம் புகுதாச் சுத்த
நனவேறிக் கனவகன்று சுழுத்திபோய்த் துரியமதை நணுகு வான்போல்.

பொ - ரை: அப்பன்றித் தன் இனத்தோடு கூடிப் பின் அச்சத்தால் பிரியுந்தொறும் அதனைத் தொடர்ந்து சென்ற வேடன் தத்துவங்களோடு கூடி நனவுநிலை எய்திப் பின் அவற்றை நீங்கும்போது ஆன்மாவை அறியாமையில் அழுத்தும் ஆணவம்போன்ருன்; மலத்தால் பற்றப்படாமல் அருளில் அழுந்தி ஆங்குள்ள சுத்த நனவு, கனவு, உறக்கம், துரியம் என்பவற்றைக்கடந்து அதீதத்தைப் போய் அணுகும் சுத்தான்மாவைப்போல, பன்றி திரிகூட எல்லையைத் தலைப்பட்டு, தினைப்புனங்களில் ஏறி, காடும் மலையும் தாண்டிச்சென்று திரிகூடத்தை நண்ணுவதாயிற்று.

வேறு

தாவு நீர்ச்சிவ மதுகங்கை சண்பகத் தடாகம்
வாவி மேற்றடா கத்துலாய் மந்தமா ருதஞ்சூழ்
காவி லெங்கணுஞ் சுலவலாற் கமழ்திரி கூடத்
தேவர் தேவனைத் தேடுமோர் சூகரஞ் சிவணும். 24

பொ - ரை: இப்பன்றி குன்றுகளில் தாவிச்செல்லும் சிவமது கங்கையினையும், செண்பகத் தடாகத்தையும் கடந்து மேலே தடாகத்து உலவி தென்றல் உலவும் சோலைமுழுதும் திரிதலால், முன் சிவபிரான் அடி தேடிய பன்றியை ஒக்கும்.

நிலைய ழிந்துபோய்ப் பள்ளியங் கானிடை நெரிந்து
வலைசு ழிந்துகை வாள்விசை மடுத்துவல் வேடன்
சுலையி லம்பொரீஇ வளைதடி யிழைத்தொரு செழுங்கார்
அலைப டிந்தென வருவியந் தடத்துவீழ்ந் ததுவே. 25

பொ - ரை: தன்நிலைகெட்டு, இருப்பிடமாகிய காட்டில் ஓடி வலையைத் தப்பி எழுந்து வாளின் வேகத்தை ஏற்று வேடனது அம்பு வளைதடிகளினின்றும் தப்பி ஒரு சிவந்த மேகம் கடலிற்படிந்தாற்போலக் குன்றத்தின் அருவியில் வீழ்ந்தது.

வெருவி வீழ்தலும் வேடனுங் கயத்திடை வீழ்ந்தான்
அருவி யந்தடம் புகலென வடைதலா லதுவே
செருவி லேற்றெனச் சென்றெதி ரேற்றதோர் வன்மீன்
பொருவில் சூகர நீந்திநீர் கடந்துபுக் கதுவே. 26

பொ - ரை: பன்றி அஞ்சித் தடாகத்தில் வீழ, வேடனும் பின் தொடர்ந்த வேகத்தில் அத்தடாகத்தில் வீழ்ந்தான்; அவ்வருவித்தடாகமே அடைக்கலமாகப் பன்றி முன் புகுந்தமையால், அத்தடாகம் வேடனைப்போரில் எதிரேற்றாற்போல, ஒரு முதலை அவனை எதிர்கொண்டது; பன்றி நீரைக்கடந்து சென்றது.

வி - கு: வன்மீன் - முதலை.

வால றைந்தெதிர் வாய்மடுத் திடங்கர்மா வலிப்பக்
கோல வெஞ்சிலைப் புனவனுஞ் சினவிமேற் குதித்தான்
ஏல வெங்கர வாளினாற் கிழிக்குமுன் னிவன்றன்
மூல மேனியை யெயிற்றினாற் கிழித்தது முதலை. 27

பொ - ரை: வாலால் அடித்து வாயிற்கொண்டு முதலை இழுத்தபோது வேடன் வெகுண்டு மேலே தாவினான்; பொருந்தும்படி முதலையை அவன் தன் வாளாற்கீறுமுன் அஃது இவனது முதலாகிய உடம்பை பல்லாற் கிழித்தது.

வி - கு: இடங்கர், கர, முதலை - ஒரு பொருட்சொற்கள்.

நிலத்தி லோடுதேர் நீர்புக லரிதுநீள் கயமாஞ்
சலத்தி லோடமுந் தரைபுக லரிதெனுந் தகைத்தால்
வலத்து வேடுவ னிடங்கராற் புனலிடை மாய்ந்தான்
இலக்கு ளார்தமை யெளியரும் வெல்வரே யிடத்தால். 28

பொ - ரை: நிலத்தில் ஓடும்தேர் நீரில் ஓடாது; நீரில் விரைந்துபடரும் ஓடமும் நிலத்தில் படராது என்றாற்போல, நிலத்தில் வலியவேடன் நீரில் முதலையால் மாய்ந்தான்; தமக்குத்தாமே சமமாயினாரையும் இடத்தின் அநுகூலத்தால் எளியரும் வென்றுவிடுவர்.

கொலைசெய் பாதக ஞகியு முயர்திரி கூடத்
தலைசெய் சித்திர நதியினின் மாகநா ளடைந்த
தலைமை யாலுயர் வானமேன் மானமேற் ருவிச்
சிலைசெய் வில்லியார் கயிலைமால் வரையின்மேற் சேர்ந்தான். 29

பொ - ரை: வேடன் பாவியாயினும் திரிகூடத்துச் சித்திராநதியில் மாசி மகத்தில் மூழ்கி இறந்தமையின் ஆகாயத்தில் விமானத்தில் மேருவை வில்லாகக் கொண்ட சிவபிரான் திருக்கயிலையைச் சேர்ந்தான்.

மந்த மாருதந் தவழ்திரி கூடமும் வரதன்
சந்த வார்பொழிற் கயிலையும் வேறெனத் தகுமோ
விந்த மால்வரைத் தடத்துவிழ்ந் திறந்தவ னியல்பால்
அந்த மால்வரைச் சிகரமே லமர்ந்தன னதனுல். 30

பொ - ரை: திரிகூடமலைத் தடாகத்து வீழ்ந்து இறந்தவன் திருக்கயிலைச் சிகரத்துறைதலால், இரு மலைகளும் வேறு எனப்படா.

நிந்தை யார்கொலை வேடுவ னருவி நீர்த் தடத்து
வந்த யாவொழி மகிமையை யுரைத்துமா தவர்காண்
முந்தை யோ துசித் திரப்பொது மகிமையை முனிக்கால்
எந்தை யார்நடங் காட்டலிற் காட்டுது மென்ருன். 31

பொ - ரை: பழி பாவம் பூண்ட வேடன் சித்திராநதியில் வந்து வருத்தம் தீர்ந்த பெருமையை முனிவர்களுக்குச் சூதர் உரைத்து அகத்தியருக்குத் திருநடம் காட்டிய சித்திரப்பொதுவின் பெருமையை இனி விளக்குவோம் என்ருர்.

### வேறு

என்றலு முனிவர் வாழ்த்தி யெழுபவக் கலைகண் மாயத்
தென்றலம் புலிபாய் சாரற் சிவதிரி கூடத் தானை
மன்றன்மா மலர்த்தாள் போற்றி வரங்கொண்ட வானேர் பூசை
நன்றுறப் புரிந்த வாறு நவில்கென நவில்வான் சூதன். 32

பொ - ரை: அப்போது முனிவர்கள் அவரை வாழ்த்தி எழு பிறவியாகிய மான் மாயும்படி தென்றலாகிய புலி பாயும் சாரலையுடைய திரிகூடநாதனை அடி போற்றி வரம்பெற்ற தேவர் வழிபட்ட வரலாற்றைக் கூறுக எனக் கூறலுற்ருர் சூதர்.

நதிவீழ்வேடன் கதிபெறு சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் – 1528

# வானவர் வழிபடு சருக்கம்

நறுமலர் விரிஞ்ச ளுகி நாரண ளுகி வெண்கோட்(டு)
உறுவிடைப் பரனு மான வொருவனை யிருவர் தேடிக்
கறுவினற் காண்கி லானைக் கனிந்துபூ சனையிற் காணப்
பெறுபொருள் கருதிப் போந்தார் பெரியவன் றிரிகூ டத்தில். 1

பொ-ரை: அயனும் அரியும் அரனும்தானே ஆன முதல்வனை இருவர் அகங்காரத்தாற் காணலுற்று ஆற்றல் இழந்தனர்; அவனை வழிபட்டுக் காணப் பெறும் உண்மையைக் கருதித் தேவர் அப்பெருந்தேவனது திரிகூடமலைக்கு வந்தனர்.

தம்பெருஞ் சிவத்து ரோகந் தவிர்த்துவான் பதங்க ளீந்த
நம்பனைத் திருக்குற் றால நாதனைப் பூசித் தேத்த
இம்பரில் வரமுன் வேண்டு மெண்டிசைக் கடவு ளோரும்
உம்பரும் விசும்பா ருக வொருவழி விரவிப் போந்தார். 2

பொ-ரை: முன் சிவநல்வினைகளுக்கு மாருக நடந்து, அப்பெரும் பாவந்தீர்வதற்குத் திருக்குற்றால நாதனை வழிபட்டு இவ்வுலகில் வரம் பல பெற்றோர் எண்திசைக் காவலர் பதங்களைப் பெற்றனர்; அவர்களும் ஏனைத் தேவருமாக மீண்டும் அவ்விறைவனை வழிபடுதற்பொருட்டு வான்வழியாகச் சேர்ந்துவந்தனர்.

கோலமால் வடிவாய் நீண்டார் குறுமுனிக் குறுகி மேனுள்
ஆலமர் கடவு ளாகக் குறுகுமற் புதத்தைக் காண்பான்
காலமோர் முனிவர் சித்தர் கருடர்கிம் புருடர் யாழோர்
மேலமர் புவன மூன்றில் விபுதரு மெழுந்தார் மன்னே. 3

பொ-ரை: திருமால் வடிவாய் நின்ற இறைவன் அகத்தியர் வழிபாட்டிற்கு உருகிச் சிவலிங்க உருவானதைக் காண்பதற்குத் தக்க காலத்தை எண்ணி யிருந்த முனிவர், சித்தர், கருடர், சிம்புருடர் முதலிய சிறந்த அறிஞரும் வழிச் செலவை மேற்கொண்டார்கள்.

அரவணைத் துயிலு மாய னம்புயத் துறைவோன் வானோர்
புரவலன் முதலோ ராய தலைவரும் புலவோர் யாரும்
விரவிமுச் சிகரத் தாலே விதிபதம் விண்டு லோகம்
சுரருறை சுவர்க்க மூன்று மொத்தது சுருதிக் குன்றம். 4

பொ-ரை: வேதவடிவாகிய திரிகூடமலை திருமால் பிரமன் இந்திரன் முதலிய தேவர்கள் தலைவர்களும் தேவர்களும் கலந்து மூன்று கொடுமுடிகளையும்

உடையதாக இருந்தமையின், சத்திய லோகத்தையும் வைகுந்தத்தையும் தேவர் உறை சுவர்க்கத்தையும் ஒத்தது.

விண்பக வெழுமுக் கோட்டு விமலவே தண்ட மேவி
ஒண்பக லுதிக்குங் காலை யுயர்மது கங்கை யாடிச்
செண்பகத் தடாக மூழ்கித் தேனிறால் கிழியக் கோட்டால்
வண்பக டுழக்குஞ் சாரல் வடமுகத் தருவி தோய்ந்தார். 5

பொ - ரை: திரிகூடமலையை அணைந்து, ஞாயிறு தோன்றும் அதிகாலையில் மதுமங்கைத் தீர்த்தத்தில் மூழ்கி, செண்பகத் தடாகத்தில் முழுகி, தேன் அடையை யானை தன் தந்தத்தால் கிழிக்கும் சாரலில் வடவருவியில் மூழ்கினர்.

வி. - கு: வேதண்டம் - மலை; பகடு - யானை.

அருவியந் தரங்கக் கங்கை யாரமு மகிலும் பொன்னும்
குருமணித் திரளு முத்துங் குவைகளாக் கொழித்து வீசத்
திருவல கிடுவார்க் கென்றுந் திருப்பணி யிடைய றாத
பொருவருஞ் சங்க வீதிப் புறம்வலம் புரிந்து போந்தார். 6

பொ - ரை: அருவியாகிய கங்கை சந்தனம், அகில்கட்டைகளையும் பொன் மணி முத்து ஆகியவற்றையும் குவியலாக வீசுதலால் சங்க வீதியில் குப்பைகளை ஒதுக்கும் தொண்டர்க்கு இடையறாத பணி இருக்கும்; அவ்வீதியில் மதிற்புறத்தில் மேற்கூறியவர்கள் வலம் வந்தனர்.

அகமதி லுருவா வாயி லைந்துமைம் பொறிக ளாகச்
சிகரிநாற் கரண மாகச் செழுந்திரு வீதி மூன்றும்
தகுதிமண் டலங்கண் மூன்றாத் தரணியம் பதும பீடந்
திகழ்பரஞ் சோதியான சிவலிங்க வடிவங் கண்டார். 7

பொ - ரை: உள்மதிலே உடம்பாக, வாயில்கள் ஐந்தும் பொறிகளாக, தூபிகளே அந்தக்கரணங்களாக, நல்லவீதிகள் மூன்றும் இறைவன் வீற்றிருக்கும் தாமரையின் இதழ்முனை வட்டமாகிய சூரியமண்டலம், கேசர வட்டமாகிய சோம மண்டலம், கர்ணிகை வட்டமாகிய அங்கி மண்டலம் என்னும் மும்மண்டலமாக, பூமியாகிய ஆதாரசத்தியின்மேல் அமைந்துள்ள இதயத்தாமரையில் விளங்கும் பரஞ்சோதி வடிவான சிவலிங்கத்தைப்பின் கண்டனர்.

துதித்தனர் பாடி யாடித் துள்ளினர் வெள்ளிக் குன்று
மதித்தனர் திரிகூ டத்தை மணிமதில் கோயில் வாயில்
குதித்தனர் கருணை மூர்த்தி குரைகழ லடிக்கீழ்ச் சென்னி
பதித்தன ரின்ப வாரி படிந்தனர் வானோ ரெல்லாம். 8

பொ - ரை: தேவரனைவரும் புகழ்ந்துபாடிக் கூத்தாடி அன்பினால் இன்ப வெள்ளத்தில் அழுந்தினர்; இறைவனைக் கீழேவீழ்ந்து இறைஞ்சினர்.

சேண்மிசைக் கங்கை நீருந் தேவதா ரத்திற் பூத்த
நாண்மலர்த் தொடையுந் தாரு நறுஞ்சினை வீசும் தூசும்
பூண்முதற் காம தேனுப் பொழிதரு பாலுந் தெய்வ
நீண்மணி வடமும் வாரி நெடுந்திரை யமுதும் வாரி. 9

பொ - ரை : ஆகாய கங்கையிலிருந்து நீரும், ஐந்தருக்களில் ஒன்றாகிய தேவதாரத்தின் மலர்களால் அமைந்த மாலை வகைகளும், கற்பக தருதன் அங்கங்களாற் கொடுக்கும் ஆடை பூண் முதலியவும், காமதேனுவின்பாலும், தெய்வ ரத்தினமாலைகளும் கடலமுதும் அள்ளி வாயுக் கொணர்ந்து நிரப்பினன்.

மருந்தினுக் கிறைவன் றூர்ப்ப வருணனீர் தெளிப்ப வீதி
அருக்கர்பல் விளக்க மேந்த வமரர்பூ மாரி தூவத்
திருக்கிளர் திசைக டோறுந் தேவதுந் துபிக ளார்ப்ப
இருக்கினல் வசுக்கள் வாழ்த்த விந்திர னேவல் கேட்ப. 10

பொ - ரை : வருணன் வீதிகளில் நீர்தெளித்தான்; ஆதித்தர் விளக்குகள் ஏந்தினர்; தேவர் மலர்மாரி சொரிந்தனர்; திசைதோறும் தேவமுரசு அதிர்ந்தன; வசுக்கள் மந்திரங்களால் வாழ்த்தினர்; இந்திரன் வேண்டிய பணிசெய்தான்.

மற்றுள திக்கு வேந்தர் மரபினல் வாயில் காப்பக்
கற்றையங் கவரி தெய்வக் கன்னிய ரிரட்ட வேதா
முற்றுள சாந்தி வேள்வி முறைமுறை யியற்றச் செங்கண்
வெற்றியந் திகிரி யானே விமலனைப் பூசை செய்தான். 11

பொ - ரை : ஏனைத் திசைக்காவலர் வாயிலில் காவலிருந்தனர்; தேவ கன்னியர் கவரிவீசினர்; பிரமன் சாந்திவேள்வி இயற்றினன்; திருமால் முறையாகப் பூசித்தனன்.

சீதர னருச்சித் தேத்தத் திசைமுகத் தவனுந் தெய்வப்
போதின லாரா திப்பப் புரந்தரன் முதலோ ரெண்மர்
ஆதவர் வசுக்க ளாதி யமரரே முதலா யுள்ள
மாதவர் புரிந்தார் பூசை வரதனைத் திரிகூ டத்தில். 12

பொ - ரை : திருமால் மலர்தூவிப்புகழ, பிரமனும் தெய்வத்தருமலர்களால் அஞ்சலிசெய்ய, இந்திரன் முதலிய எண்திசைக்காவலர், ஆதித்தர், வசுக்கள் முதலிய தேவர்கள், மற்றும் சிறந்த தவத்தினர் வரங்கள் தரும் முதல்வனைத் திரிகூடத்தில் வழிபட்டனர்.

தெளிதரு பசும்பொன் னூட்டுத் தெய்வதப் பொருளால் விண்ணோர்
நளிதரு பூசை செய்து நாள்பல கழித்து மீசன்
வெளிவரா வகையாற் பண்டு வேழம்பூ சித்த காவில்
அளிபடாப் பூவா னீரா லருச்சனை புரிவ தானர். 13

பொ - ரை : சுவர்க்க நாட்டுச் சிறந்த பொருள்களைக்கொண்டு தேவர் குளிர்ந்த வழிபாட்டைப் பலநாள் செய்தும் இறைவன் வெளிப்படவில்லை; அதனால், அவர் முன் யானைவழிபட்ட சண்பகச்சோலையில் உள்ள வண்டு வீழாத சண்பக மலர்களாலும் நீராலும் வழிபடத் தொடங்கினார்கள்.

பூசனை திருக்குற் றால புரந்தனிற் பொருளாச் செய்து
வாசவ னயன்மால் வானோர் வழிபடா நின்ற காலைத்
தேசமர் திருவெண் ணீறுஞ் செங்கைமான் மழுவும் பச்சைத்
தூசணி மருங்குந் தோன்றத் தோன்றினன் மறைக்குந் தோன்றான். 14

பொ - ரை : திருக்குற்றாலத்தில் சிவவழிபாட்டை உண்மையாகச் செய்து இந்திரன் முதலாயினர் அருள்நெறியில் நின்றபோது, ஒளிபொருந்திய திருநீறும் செம்மையான கைகளில் மான்மழுவும் இடையில் தோலாகிய உடையும் தோன்றும்படி வேதத்திற்கும் வெளிப்படாத முதல்வன் வெளிப்பட்டான்.

கையிலஞ் சலிகள் பூப்பக் கருத்தெலாங் குளிர்ப்ப வானோர்
மெய்யெலாம் புளகம் போர்ப்ப விழிதுளி பொழிய நோக்கித்
தெய்வநீர்த் திரிகூ டத்துத் திரைபொரு சங்கக் கோயில்
சைவமா மணியைக் கண்டு சரணெனச் சரணம் பூண்டார். 15

பொ - ரை : தேவர்கள் திரிகூடத்துத் தெய்வநீர் அலைகள் மோதும் மதில்களையுடைய சங்கக்கோயிற் பெருமானை, அன்பின் வயப்பட்டாராய் அடைக்கலம் எனச் சொல்லித் திருவடிகளில் தம் தலைகள் படும்படி இறைஞ்சினர்.

பூண்டுமா லயனும் யாங்கள் புரிதரு செயல்க டேர்ந்தோர்
நீண்டநின் மவுலி பாதந் தேடநீ டூழி காலம்
ஈண்டுநீ படைத்துக் காத்தா யெமக்குமோ காட்சி தந்தாய்
ஆண்டகை கருணை வாழி வாழியென் றருளிப் போந்தார். 16

பொ - ரை : திருமாலும், அயனும், யாங்கள் எங்களுக்கு உரிய காத்தல் படைத்தல் தொழில்களை விடுத்துச் சலஞ்சாதித்து நின்பெருவடிவின் அடிமுடி தேடியிருந்தபோது, நீயே இங்கெழுந்தருளியிருந்து அத்தொழில்களை உலகில் நடைபெறச் செய்தாய்; அப்படிப்பட்ட எமக்கு இப்பொழுது திருவுருவக் காட்சியை வழங்கியருளுகின்றாய்; உயிர்களை ஆளுந்தகுதியுடைய ஈசனே, நின் கருணைவாழ்க, வாழ்க எனவாழ்த்தி, அவன் ஆணையால் மேல் உலகஞ் சென்றனர்.

வந்தனை புரிந்து வானின் மாலயன் போன பின்னர்ச்
சிந்தனை யமரர் பூசை தினஞ்செயப் பணிப்பா யென்ன
நந்தணி குழையா னேக்கி நன்பகற் புரிந்தீர் நீவிர்
சந்ததங் கங்குற் காலந் தமிழ்முனி புரிக வென்றான். 17

பொ-ரை: அவர்கள் சென்றபின், சிந்தித்தலையுடைய தேவர்கள் யாங்கள் உன்னை இங்கு நாடோறும் வழிபடும்படி அருள்புரிக என வேண்ட, சங்கக்குழை அணிந்த முதல்வன் அவர்களன்பை நோக்கி, நல் பகற்காலத்தில் நீங்கள் வழிபட்டீர் என்று கூறி; இராக்காலத்து அகத்தியன் நம்மை வழிபடுக என்று அருள் புரிந்தார்.

பன்னக ரியக்கர் சித்தர் படிவர்விஞ் சையர்மற் றுள்ளோர்
இந்நகர் விடைமேற் காட்சி யெமக்கரு ளென்ன நாதன்
மன்னுசீர் விழாக்க டோறும் வருகென வருளிச் செய்தான்
அன்னவர் பரவி யேக வருச்சனை தொடுத்தார் விண்ணோர். 18

பொ-ரை: நாகர், இயக்கர், சித்தர், முனிவர், வித்தியாதரர், முதலிய ஏனையர் இங்கு எமக்கு விடைமேற் காட்சி தந்தருள் என வேண்டிக்கொள்ள, நிலைபெற்ற சிறப்பையுடைய விழாக்கள்தோறும் வந்து அக்காட்சியைக் கண்டு இன்புறுக என அருளினர்; அவர்கள் இவ்வாறு அருள்பெற்றுச் சென்றபின், தேவர்கள் அருச்சனை செய்யத் தொடங்கினர்.

### வேறு

தையயனம் வேட்ட வுவாத் தருபூச மகமாகச் சிவனி ராத்ரந்
துய்யபாற் குனத்திருநாண் மேடவிழுப் பரணிதுவட் டாநாட்பௌவம்
வைகாசி மாகவிழா வளரானி முக்கனிகண் மாத பூசை
செய்யபிர தோடமுவாச் சங்கிரமந் திதிவாரந் திங்கள் யாவும். 19

பொ-ரை: உத்தராயணம், விரும்பப்படும் பூரணையோடு பொருந்து(தைப்) பூசம், பூரணையோடு பொருந்தியமகம் (மாசிமகம்), மாசிமாதத்து மகாசிவராத்ரி, பங்குனித் திருவிழா, சித்திரைவிஷு, சித்திரைப் பரணி, சித்திரை நாளோடு பொருந்தும் பூரணை (சித்திரா பௌர்ணமி), வைகாசியில் மகத்திருவிழா, ஆனி மாத முக்கனி அபிடேகம், மாதாந்த வழிபாடுகள், பிரதோஷ விழா, பூரணை, அமாவாசை, மாதப்பிறப்பு, திதியோடுகூடிய வாரம், திங்கள், அமாவாசைபோல் வரும் விசேட நாட்கள் இவற்றை மாதந்தோறும் பின்பற்றி வழிபட்டார்கள்.

தெறும்பலா தவன்மறுகித் தேரோடும் வழிவிலங்கத் திங்கண் மேனி
கறும்பலா வுயர்குவடு முகடுதொடுந் திரிகூடக் கடவுட் சாரல்
குறும்பலாச் சுருதிநிழ லுறைவானைச் சுருதிமொழி கொண்டு பூசை
உறும்பலா கமவிதியான் மதியாறும் புரிந்தமர ரும்பர்ப் போந்தார். 20

பொ-ரை: தக்கன் வேள்வியில் பற்களை இழந்த ஞாயிறு அஞ்சி தேருடன் வழிவிலகும்படி பிறைமதி தன் கறைபடுத்தும் பல்லாகக்கொண்டு உயரும் குவடு அண்டமுகட்டைத் தீண்டும் திரிகூடமலைச் சாரலில் குறும்பலாவாகிய வேத நிழலில் வீற்றிருக்கும் முதல்வனை வேதமந்திரங்களால் பல ஆகம விதிகளின் படி ஆறுமாதங்களாக விரும்பி இடையருது பூசித்துத்தேவர் தம் உலகு புக்கனர்.

வேறு

அராவடம் புனைந்தார் பூசை யமரர்செய் முறையீ தென்று
பராவட நிழலி லெம்மான் பாலுணர்ந் தவன்பாற் பெற்ற
விராவட கலைநூல் வல்லான் வியாதன்மா ணாக்கன் கூறித்
திராவட முனிசெய் பூசை செப்புவான் முனிவர் வேண்ட. 21

பொ - ரை: பாம்பாகிய மாலையை மேற்கொண்ட முதல்வனைத் தேவர் செய்த பூசை முறை இதுவரை கூறப்பட்டது என்று பரவப்படும் வட ஆல் நிழல் அமர்ந்த முதல்வன் கேட்டுணர்ந்த திருநந்தி தேவர் பால் அறியப்பட்ட சுருதிகள் கலக்கும் வடகலை நூல் கற்று வல்லவியாதன் மாணாக்கனாகிய சூதன் கூறித் தமிழ் முனிவர் செய்த பூசை முறையை முனிவர் வேண்டக் கூறத் தொடங்கினர்.

வானவர் வழிபடு சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1549

# குறுமுனி வழிபடு சருக்கம்

சந்தனத்தென் பொதியமுனி சண்பகத்தின்
பசுந்தாது ததைந்து திங்கள்
கந்தரத்தி னரமகளிர் முழைதோறு
நுழைதோறுங் கலவி கூடி
அந்தரத்தி னுடுமகளி ரிரிதல்போன்
மணிசொரியு மருவிச் சாரன்
மந்தரத்து மேருவினும் விரிகூடத்
திரிகூட வரைமேற் சென்முன். 1

பொ - ரை : அகத்தியர் மந்தரமலையினும் மேருவினும் விரிந்த உச்சியை யுடைய திரிகூடத்தின் மேற்சென்றார்; அம் மலைச்சாரலில் அருவிகள் மணிகளை வானில் எறிகின்றன; அது சந்திரன் சண்பகப் பூந்தாது பூசிக்கொண்டு மேக மாகிய அரமகளிரது குகைகள்தோறும் நுழையும்போதெல்லாம் அவனோடு கலந்திருந்து அவன்றன் மனைவியராகிய நட்சத்திரம் எனப்படும் பெண்கள் வானில் ஓடுதல் போலக் காட்சி அளித்தது.

வி - கு: கந்தரத்தின் முழை - மேகமாகிய குகை.

வேறு

உம்பரம ரேசர்தொழு தும்பர்புக வான்மேல்
கொம்பரம ராடல்செய் குறும்பலவில் வாழும்
நம்பரமர் பூசைசெய நன்மலைய யோகி
இம்பரமர் மாதவ ரெழுந்துதொழ வந்தான். 2

பொ - ரை : தேவர்களும் தேவர்கள் தலைவர்களும் இறைவனை வழிபட்டு மேல் உலகம் சென்றபின், நல்ல மலையத்தில் வாழும் யோகியாகிய அகத்தியர் கொம்புகள் ஆகாயத்தில் பொருந்திய அசைதலைச் செய்யும் குறும்பலா அடியில் எழுந்தருளும் நமக்கு உரிய பரமருடைய பூசையைச் செய்தற்பொருட்டு இவ்வுல கத்திலுள்ள மாதவர் எழுந்துதொழா நிற்ப வந்தார்.

சிந்தைகளி கூர்தர வணங்கியெதிர் சென்ற
அந்தணர்கள் சைவரொடு வந்தருவி யாடி
மந்திரவெண் ணீறுசிவ சாதனம் வனைந்து
நந்துமுக வீதியுயர் கோயில்வல நண்ணி. 3

பொ - ரை : மகிழ்ச்சியோடு எதிர்சென்று வணங்கிய சிவப்பிராம்மணர் களோடு கூடிவந்து அருவியில் முழுகி மந்திரமும் மருந்துமாகிய திருவெண்ணீறும் உருத்திராக்கமும் தரித்து உயர்ந்த திருக்கோயில் சங்கமுக வீதிவழியில் வலமாகச் சென்று.

மூன்றுவடி வானவன்முன் ஞன்மறை முழங்கத்
தோன்றியுய ரைந்துவகை சுத்திகள் வருத்தி
ஏன்றநெறி யாறுணரு மெண்வகைசெய் பத்தி
யான்றமறை யோருட னருச்சனை தொடுத்தான். 4

பொ-ரை: மும்மூர்த்திவடிவச் சிவலிங்கமூர்த்தியின்முன் நான்மறை முழங்கச்சென்று, ஐவகைச்சுத்தி செய்து, ஆறு அத்துவாக்கள் உணர்வும் எண் வகைப் பத்தியும் உடைய சிவவேதியருடன் வழிபாட்டைத் தொடங்கினர் அகத்தியர்.

முந்துமகு டாகம மொழிந்தமனு வாலே
கந்ததயி லங்கொடு சொரிந்துகளி கூர
ஐந்துகவி யங்களொடு மைந்தமுத மாட்டி
உந்துமுவர் வாரிதி யடக்குமொரு கையால். 5

பொ-ரை: ஆகமங்களுள் மேம்பட்ட மகுடாகமத்திற் கூறியுள்ள மந்திரங் களைக்கொண்டு முதற்கண் வாசனைத் தயிலத்தால் அபிடேகித்து மகிழ்ச்சியோடு ஆனிடத்தைந்தும், ஐயமுதும் பின் முறையே அபிடேகித்தார்.

மேயகட லாறையு மடக்கிவிடு மாபோல்
நேயமொடு பாறயிர் மதுக்கணிறை கன்னல்
தோயமும் விதிப்படி சொரிந்துபல சார
மாயசுவை யிற்சுவை விளைக்குமுறை யாட்டி. 6

பொ-ரை: உவர்க்கடலை அடக்கிய திருக்கையால், ஏனை ஆறுகடலையும் அடக்கி இறைவன் முடிக்கண் தனித்தனியே சொரிந்தாற்போல, நெய்யோடு, பால், தயிர், தேன், நிறைந்த கருப்பஞ்சாறு என்பவற்றை விதிப்படி பழத்தின் சாருகிய சுவையுடைப்பொருளால் அவையவை தனித்தனி சுவை தோற்றுவிக்கு மாறு இடையிடையே சுத்த நீரும் சொரிந்து அபிடேபித்து.

வி-கு: நேயம் - நெய்; பால் தயிர் மதுக்கள் எனப் பிரிக்க. பலசாரம் - பழச்சாறு; பலம் - பழம்.

மூவகைய சீதவிள நீர்முருகு சாந்தம்
பாவனைசெய் தண்ணளி பயிற்றுமுறை பெய்து
தேவநதி கண்டவட தேசநதி யேழும்
கோவொடு மணிந்தபடி கும்பசல மாட்டி. 7

பொ-ரை: மேலே பச்சை சிவப்பு மஞ்சள் என்னும் மூவகை நிறமுள்ள குளிர்ந்த இளநீர், மணம் உள்ள சந்தனம் என்பவற்றைத் தியானஞ் செய்யும் தண்ணிய அன்பு பயிலும் முறையால் சொரிந்து, ஆகாய கங்கையைக் கண்டு வடநாட்டில் உள்ள ஏழு ஆற்றுநீரால் முன் ஆங்காங்கு அபிடேகித்தது போலத் தபனஞ்செய்த கும்பநீரால் ஆட்டி.

வி-கு: கோ - நீர். கோவொடு - நீரால்.

மாலயர ருக்குமவன் வாழ்பரனை மாமால்
கோலமமை வித்தபடி பொன்னுடை குயிற்றி
நால்வகைய சாந்துபணி நாண்மலர்கள் சாத்திப்
பாலமுத மேற்றிநிறை பல்லிய முழங்க. 8

பொ - ரை: திருமாலைச் சிவனுக்கியமுனிவர் சிவனை மாயோனது கோலம் உடையவனுகச் செய்ததுபோலப் பொன்னுடை அணிந்து, கஸ்தூரி, புழுகு, குங்குமப்பூ, பச்சைக்கருப்பூரம் என்னும் நால்வகை வாசனைப்பொருள் கலந்த சந்தனத்தோடு, ஆபரணம், மலர்கள் என்பவற்றைச்சாத்தி, வாத்தியம் முழங்கப் பாயசம் நிவேதித்தார்.

பேரொளிமுன் னின்றுபல பேதவொளி யெல்லாம்
சீர்பெற நடிக்கும்வகை தீபமுறை யேந்தி
மூரிமறை நாலுமுயர் முத்தமிழு ஞானம்
வாரிபடி கின்றவென வந்துதுதி சாத்தி. 9

பொ - ரை: பரஞ்சோதியின் முன் நின்று பல வேறுபடும் ஒளிகள் சீராக நடித்தாற்போலப் பலவகை விளக்குகளைச் சுழற்றிக்காட்டி, வலிய மறையும் உயர்ந்த முத்தமிழும் வந்து ஞானக்கடலில் தோய்ந்தாற்போல அவற்ருல் துதித்தனர் முனிவர்.

வேறு

திருவாடி யயனமுவாப் பூரஞ் சோதி
சிறப்பைந்தா வணிமூலம் பானு வாரம்
உருளோணஞ் சதுர்த்திபுரட் டையிற்கே தார
முயர்நவராத் திரந்தசமி திருவி ழாக்கள்
பெருமானைப் பசிவிழுத்து லாஞ்சேர் மாகம்
பிறிதுளநித் தியமுதலா வருச்சித் தேத்தி
வருகாலை குறுமுனிசெய் தொழும்பு மன்பும்
வள்ளலார் திருவுளத்தி னிறைவு தோன்றி. 10

பொ-ரை: ஆடிமாதத்தில் தக்ஷிணுயன புண்ணியகாலம், அமாவாசை, பூரணை, பூரம், சுவாதி என்னும் ஐந்து சிறப்புக்கள்; ஆவணியில் மூலம், ஞாயிற்றுக் கிழமைகள், உரோகணி, திருவோணம், சதுர்த்தி என்னும் சிறப்புக்கள்; புரட்டாசி மாதத்தில் கேதார விரதநாள், நவராத்திரி நாட்கள், தசமி திருவிழாக்கள்; ஐப்பசி விஷு, அத்திங்களில்வரும் மகநாள் மற்றுமுள்ள நித்தியம் முதலான எல்லாச் சிறப்பு நாட்களிலும் அந்த அந்த வழிபாடுகளைச் சிறப்பாகச் செய்து துதித்து வந்தபோது, அகத்தியர் செய்த பூசைத்தொண்டும் அன்பும் சிவபிரான் திருவுளத்தில் மகிழ்ச்சியை விளைவித்தன.

வி - கு: உருள் - உரோகணி.

இடப்பாலி னிறைவிதிரு மூலட் டானத்
தெழுந்தருளித் தவவடிவா யிமையோர் போற்றக்
குடப்பாலிற் பவித்திரங்கொண் டருளிப் பூரம்
கொண்டபெருந் தவக்கோல முவந்து வெற்பின்
மடப்பாவைக் கருள்புரிந்து வலப்பால் வைத்து
மலர்வேதன் சடங்கியற்ற வுந்தி பூத்தோன்
கடற்பாலிற் புனல்வார்ப்பக் கருணை மூர்த்தி
கடமுனிக்கு மணக்கோலக் காட்சி தந்தான். 11

பொ - ரை : முதல்வன் இடப்பாகத்தில் உள்ள அம்மை மூலத்தானத்திற்கு எழுந்தருளித் தவக்கோலம்பூண்டு தேவர்கள் துதிக்க, அதற்கு மேலைப்பக்கத்தில் தருப்பை ஆசனத்தில் பெருந்தவக் கோலத்தினளாய் வீற்றிருக்கும் காட்சியைப் பூர நாளில் இறைவன் மகிழ்ந்து காட்சி கொடுத்து, பின் அம்மையைத் தனது வலப்பக்கம் இருத்திப் பிரமன் திருமணச் சடங்கியற்றத் திருமால் குண்டிகை நீர் வார்த்துத்தர ஏற்றருளும் கருணையே வடிவான தன் திருமணக் கோலக் காட்சியை அகத்தியர் கண்டு மகிழ அருள் புரிந்தான்.

வேதவிருக் கந்திருக்கா வணமாம் வேதன்
விதிச்சடங்கு விதிப்பவனு முதகஞ் செய்வோன்
ஆதியுல களந்தவனு முலகுக் கெல்லாம்
ஆக்கமா னவள்வரிசை யியற்று வாளா
நீதிநகர் நன்னகராந் தெய்வக் காவு
நிதியிரண்டும் பணிசெயுமாங் கும்ப னாதி
மாதவரு மமரருங்காண் பவரா மிந்த
மணக்கோலக் காட்சியெவர் வழுத்த வல்லார். 12

பொ - ரை : இத்திருமணத்தில் வேதவடிவாகிய குறும்பலா திருமணப் பந்தர்: பிரமன் விதிப்படி சடங்குகள் இயற்றுவோன்; திருமால் நீர்வார்த்துத் தருகின்றவர்; உலகுக்குச் செல்வ வடிவாகிய திருமகள் வரிசை செய்பவள்; திருக்குற்றாலம் திருமணம் நடைபெறும் இடம்; கற்பகதருவும் சங்கப் பதும நிதிகளும் பணிசெயும் ஆட்கள்; அகத்தியர் முதலிய முனிவரும் தேவர்களும் கண்டு மகிழ்ந்து பேறு பெறுபவர்; இத்திருமணத்தின் பெருமையை யார் அளவு படுத்தி வழுத்த முடியும்.

பொன்னூசல் பாராட்டுந் திருவா ராட்டும்
பொங்குதீ பாவளியும் பூசித் தேத்தித்
தொன்னூலோர் கார்த்திகையிற் சோம வாரம்
துலங்குவிருச் சிகச்சுடர்கார்த் திகைமா தீபம்
மன்னேங்கு திருப்பள்ளி யெழுச்சி பாவை
மார்கழிவி ழாத்திருவா திரைவி சேட
மின்னூசல் விளக்காதி வருட மாத
விசேடமுத னித்தியபூ சனைக ளெல்லாம். 13

பொ - ரை: ஊஞ்சல்விழா, சாந்திவிழா, மகிழ்ச்சிமிகும் தீபாவளி என்பவற்றில் சிறப்பு வழிபாடியற்றி,பழைய நூல்களால் அறியப்படும் கார்த்திகை மாதத் திங்கட்கிழமைகள், அம்மாதத்தில் கார்த்திகை நாளில் ஏற்றப்படும் பெரு விளக்கு, அடுத்த மார்கழி மாதத்தில் நிலைபெற்று ஓங்கும் திருப்பள்ளி எழுச்சி விழாவோடு திருவெம்பாவைவிழா, திருவாதிரைநாள்காட்சி, திருவாதிரையில் மின்னும் அசைதலையுடைய தீபநடனம் முதலாக வருட, மாதச் சிறப்பு முதலாக நித்திய வழிபாடுகள் எல்லாம்.

வேறு

மனமுதற் பொறிகண் மூன்றும் வழிபடக் கடக மாதி
தனுவெனு ந் திங்க ளீருத் தருநிசிப் பூசை யாற்றிச்
சினகரம் வலஞ்செய் தேகிச் செண்பகச் சோலை நோக்கி
முனிவரன் றென்பாற் சென்ருன் முதுகதிர் வடபாற் செல்ல. 14

பொ - ரை: மனமொழி மெய் மூன்றும் ஒரு நெறிப்பட்டு நிற்க, ஆடிமுதல் மார்கழிவரை இராத்திரி வழிபாட்டைச் செய்துவந்து, திருக்கோயிலை வலம்வந்து ஞாயிறு வடக்கே செல்லப்புகும் உத்தராயணம் வந்ததும், அகத்தியர் சண்பகச் சோலைவழியாகத் தெற்கே பொதியிலை நோக்கிச் சென்ருர்.

மேவிய கடவுட் சோலை விரிமகச் சாலை யாக
வாவியே குண்ட மாக மடன்முறுக் கவிழ்ந்த பூகந்
தூவிய பொறிகள் போர்ப்பத் துறுமலர் நறுநெய் வார்ப்பக்
காவியே புகையாக் கஞ்சங் கனலெரி காட்டக் கண்டான். 15

பொ - ரை: சோலை வேள்விச்சாலை; அதில் உள்ள குளங்கள் ஓமக்குழிகள்; பாக்குமரத்தின் மடல்கள் விரியும்போது உதிரும் பூக்கள் பொறிகள்போல் வாவியை மூடின; நெருங்கிய மலர்கள் தேனுகிய நெய்யைச் சொரிந்தன; நீல மலர்கள் புகையாகச் செந்தாமரைகள் அங்கியாகக் காணப்பட்டன.

நின்றவர் பாவச் செந்து
நிலையறக் கரிந்து வீழ
மென்றருச் சோலை நீழல்
வெயிலெனக் காய்தல் கண்டான்
மன்றல்யோ சனைமூன் றுள்ளோர்
வல்வினைத் தளிரெல் லாமோர்
தென்றலங் கன்று மென்று
தின்றுதின் றழித்தல் கண்டான். 16

பொ - ரை: மெல்லிய மரநிழலில் தங்குவோர் பாவமாகிய உயிர்களை அந்நிழலே வெயில் போலக் காய்ந்து அழித்தலைக் கண்டார் முனிவர்; வாசனை கமழும் மூன்று யோசனை தூரத்தில் உள்ளவர் பாவமாகிய தளிர்களைத் தென்றலாகிய மான்கன்று தின்று அழித்தலையும் கண்டார்.

நனிவரை யருவி நன்னீ ரொருதுளி நனையப் போந்து
பனிவரை யனைய பாவம் பறிகொடுப் பவரைக் கண்டான்
மனிதரைத் தேவர் கண்டு வணங்கிய தானங் கண்டான்
முனிவரை யினிதிற் கூவி முதுமகத் தானஞ் சார்ந்தான். 17

பொ-ரை: வளம்மிக்க திரிகூடமலையருவியின் திவலைகளை முடியில் தெறிக்க, இமயமலை போன்ற பாவங்களைக் கழித்துக்கொள்வாரையும் கண்டார்; தேவர்கள் மனிதரைக்கண்டு வணங்கிய இடச் சிறப்பையும் கண்டார்; முனிவர்களை அழைத்துக்கொண்டு உயர்ந்த வேள்வி செய்யும் இடத்திற்குச் சென்றார்.

அன்னதோர் காலை தென்ன னணிபெறும் வேள்விச் சாலை
தென்னணி சம்புத் தீபஞ் சிறிதெனப் பெரிதாச் செய்து
பொன்னணி யூப மேருப் பொறுப்பென நிறுவி யாங்கண்
மன்னுறு திரைகள் போல வரைகள்போற் பொருள்க ளுய்த்தான். 18

பொ-ரை: அப்பொழுது பாண்டியன் வேள்விச்சாலையை அழகு பொருந்திய நாவலந்தீவு சிறியது என்று சொல்லும்படி பெரிதாக அமைத்து, பொன்னல் அலங்கரிக்கப்பெற்ற யாகத்தம்பத்தை மேருவரை போலத் தோன்றுமாறு நிறுவி, அச்சாலையில் கடலும் மலையும்போல வேள்விக்குரிய பொருள்களை வருவித்துச் சேர்த்தான்.

மேனவில் பொருள்கண் முற்றும் விண்ணவர் தருக்க ளீய
வானவர் துதிப்ப வோம மறையவ ரியற்ற மேலோர்
ஆனவர் பிரமத் தான மமைவுற முனிவர் போற்றத்
தானவர் குலங்கள் பாறச் சதமக னிறும்பூ தெய்த. 19

பொ-ரை: மேலாகச் சொல்லப்பட்ட பொருள்கள் எல்லாவற்றையும் கற்பகமரங்கள் கொடுக்க, தேவர்கள்புகழ, வேதியர் தீவளர்க்க, அவர்களுள் முதியோர் பிரமத்தானத்தில் இருப்ப முனிவர் போற்றவும் அசுரர் இனம்தோற்று ஓடவும் இந்திரன் மகிழவும் (பல்வேள்விகளைச் செய்வாராயினர்).

ஓதிய சோதிட் டோம மத்திய மங்கிட் டோமம்
சோதிசேர் வாச பேய மத்திராத் திரகஞ் சோமம்
சாதுரங் காட கஞ்சீர்ச் சிவகாமந் தரும யேந்த்ரம்
ஆதிய சவித்தி ரஞ்சே ரணிமணிப் புண்ட ரீகம். 20

அச்சுவ மேத மாதி நரமேதம் பிரம மேதம்
விச்சுவ தித்தோ டங்கி சசன்மிகு மிராச சூய
மெச்சமிப் பதினெட் டுள்ளு மியன்மறை விதியோர்ந் தோங்கு
முச்சகம் புகழ வைஞ்ஞூ றியாகமு முறையிற் செய்தான். 21

பொ - ரை : சோதிட்டோமம் முதல் இராசசூயம்வரை கூறப்பட்ட பதினெட்டு வேள்விகளுள் வேதவிதிகளை ஆராய்ந்து ஐந்நூறு வேள்விகளை முறையாகச் செய்தனர்.

கொழுமக முகத்துத் தோன்றுங் குரூஉப்புகை யண்ட மூலத்
தெழுபுகைப் படலம் போலும் வலஞ்சுழித் தெழுந்தீ யாங்குக்
கெழுமுதீச் சுடர்கள் போலுங் கிளர்தவக் கும்ப னென்பான்
ஒழுகுதீ வினைகட் கூழி யுருத்திரன் போலு மாதோ. 22

பொ - ரை : வேள்வியினின்றும் எழும் நிறமுள்ள புகை இவ்வண்டத்தின் அடியில் உள்ள புகைப்படலம் போன்றது; வலமாகச் சுழித்து எழும் அங்கி காலாக்கினிருத்திரர் திருமேனியினின்றும் எழும் தீச்சுடர் போன்றது; விளங்கிய தவமுடைய அகத்தியமுனி தொடர்ந்துவரும் தீவினைகளை அழித்தற்கண் ஊழித் தீயை எழுப்பும் காலாக்கினிருத்திரர் போன்றார்.

சோலைவாய்த் திரிகூ டத்துச் சுருதிவேள் வியரு லாவுஞ்
சாலைமூ விருகாற் றேர்க்குச் சாய்ந்தன்றே வொற்றை யாழிக்
காலைவாய்க் கதிரோன் றேருங் கடல்புகு மலையில் வீழு
மாலைவாய் மதியின் றேரும் வானமேன் மான மாமால். 23

பொ - ரை : திரிகூடத்துச் சண்பகச் சோலையில் வேதவேள்வி செய்து முடிக்கும் வேதியர் சாலையினின்றும் அவபிருதஸ்நானஞ் செய்ய ஏறி நடாத்தும் ஆறு உருளையையுடைய தேர்க்குத் தோற்றே ஞாயிற்றின் ஒற்றை உருளைத் தேர் மாலையில் மேலைக்கடலில் அத்தமன மலையில் சென்று மறையும்; சந்திரனது வாகனமும் ஆகாயத்தில் விமானமாய்ச் செல்லும்.

வேறு

ஒருமகம்வா னவர்போகஞ் சதமகமிந்
　　திரபதமா முணராத் தக்கன்
றருமகமொன் றினிற்கழிந்தான் சகரர்தொண் ணூற்
　　றென்பதுஞ்செய் தவர்நா ஞுனர்
பெருமகமைஞ் ஞூறியற்றித் திரிகூடத்
　　தரனருளே பெற்றான் கும்பன்
பொருமகந்தை யற்றார்க்கு முற்றாத
　　கருமமுண்டோ புவன மூன்றில். 24

பொ - ரை : ஒரு வேள்வியைத் தன் முனைப்போடு இயற்றியோர் சுவர்க்க போகம் பெறுவர்; நூறு வேள்வி இந்திர பதம்தரும்; இறைவன் பெருமையை உணராத தக்கன் தான் செய்த ஒரே வேள்வியால் தலை இழந்தான்; தொண்ணூற்றென்பது வேள்வி செய்த சகரரும் தம் கருத்து நிரம்பிப் பின் அழிந்தனர்; கும்ப முனிவர் ஐந்நூறு வேள்விகள் செய்து இறைவன் திருவருளையே பெற்றார்; நற்குணங்களோடு எதிர்த்து வரும் அகந்தை நீங்கினார்க்கு மூவுலகத்தும் முடிவு பெறாத செயல் எதுவும் இல்லை.

வேறு

குறைவறுதெக் கணாவயன மதிக ளாறுங்
கும்பமுனி பூசித்து வேள்வி யாற்றிப்
பெறலருஞ்சீர்த் தவம்புரியுஞ் சாலை சேர்ந்தான்
பேணினருத் தரவயனப் பூசை வானோர்
முறையிதுவா மென்றுணர்த்திச் சவுன காதி
முனிவர்குழாம் புகழ்ந்துநனி வேண்டச் சூதன்
விறல்கெழுசித் திரப்பொதுவந் தரங்கக் கூத்து
வெளியரங்கம் பெறநடித்தல் விளம்பல் செய்வான். 25

பொ - ரை: குறைவில்லாத தக்ஷிணயன மாதங்கள் ஆறும் அகத்தியர் சிவபூசை செய்து பெறுவதற்கு அரிய சிறப்புள்ள தவம் புரிவதற்கு உரிய தவச் சாலையைச் சேர்ந்தார் அகத்தியர்; தேவர்கள் உத்தராயணப் பூசையைச் செய்தனர்; இது நிகழ்ந்த முறை எனச் சூதர் சௌனகாதி முனிவர்க்குக் கூறினர்; மேலும், அவர் வேண்டிக்கொண்டமையின் சூதர் வெற்றி பொருந்திய சித்திர சபையில் மறைந்து செய்யும் நடனத்தை முதல்வன் வெளிப்படக் காட்டிய வரலாற்றைக் கூறலுற்றார்.

குறுமுனி வழிபடு சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1574

# வாசுகி தவம்புரிந்த சருக்கம்

போதவடி வாகியொரு பூதரறி யாத
நாதவெளி வீடுதனி லாடுமொரு நாதன்
ஆதிபரை காணவரு ளாகநட மாடும்
தீதில்பர மானசபை சிற்சபைய தாமால். 1

பொ - ரை: மெய்யுணர்வே வடிவாகி ஓர் உயிரும் அறியமாட்டாத பரமாகாயத்தில் நடம்புரியும் முதல்வன் முற்பட்ட பராசத்தி காணும்படி உலகத்துயிர்கள்மேல் வைத்த அருளினல் திருக்கூத்தியற்றும் குற்றமற்ற மேலான சபை ஞானசபை எனப்படும்.

ஆழிதிரை மண்டுபுன லண்டமிசை தாவ
ஊழியுல கெங்கனு மொழிந்துமொழி யாத
வாழிதிரி கூடவரை மன்றிலர னடல்
வீழியிதழ் மாதலது வேறொருவர் காணர். 2

பொ - ரை: ஊழிக்காலத்தில் கடல்நீர்பொங்கி அண்டங்களைமூட உலகெங்கும் அழியவும் அழியாமல் உள்ள திரிகூடமலைச் சாரலில் உள்ள மன்றத்தில் இறைவன் செய்யும் திருக்கூத்தை அக்காலத்தில் கொவ்வைக்கனி போன்ற இதழையுடைய உமையம்மை அல்லது பிறர் காணமாட்டார்.

வி - கு: வீழி - கொவ்வை(க்கனி).

ஆதலின் மகாபரம ராசியம தன்றே
காதன்மறை யோதுமது காணவெகு மாலாய்
மாதவனு நான்முகனு மாதவ முயன்ருர்
தாதளவு போதுகமழ் சண்பகவ னத்தில். 3

பொ - ரை: ஆதலின், அச்சிற்சபை மிகு மறைவானது, வேதத்தால் ஓதப்படும் அதனைக்காணும் மிகுந்த விருப்பத்தோடு மாயோனும் அயனும் மகரந்தம் சொரியும் மலர்கள் நிறைந்த சண்பகவனத்தில் தங்கிச் சிறந்த தவம் செய்தார்கள்.

மாமகர மாதிமதி யாறுமுயர் வானேர்
பூமக வருச்சனை புரிந்துதம தீசர்
தாமகவு சித்திர சபைத்திரு நடத்தே
யாமக விருப்புட னருந்தவ முயன்ருர். 4

பொ - ரை: சிறந்த தை மாதம் முதல் ஆறுமாதங்களிலும் தேவர்கள் பூவாலும் வேள்வியாலும் வழிபாடியற்றித் தம் முதல்வன் ஆடும் சித்திரசபைத் திருநடத்தின்கண் வளரும் மனவிருப்புடன் அரியதவம் செய்தனர்.

### வேறு

உந்திபூத் தவனும் பூமே லொருவனு மகவா னாதி
அந்தரத் தவருங் கும்ப முனிமுத லறவோர் யாரும்
புந்திசேர் தவத்தி லாசை பூண்டனர் திரிகூ டத்தில்
எந்தையார் நடன பாதத் தியாவரே யாசை பூணார். 5

பொ - ரை: திருமாலும், நான்முகனும், இந்திரன் முதலிய தேவர்களும், அகத்தியர் முதலிய முனிவர் பலரும் துணியப்பட்ட தவத்தில் விருப்பு உடைய ராானார்; திரிகூடத்தில் நடம்புரியும் சிவபிரான் திருவடியில் விருப்பு வைக்காதவர் யார் உளர்?

சிவமது கங்கை மூழ்கிச் செண்பகத் தடாகந் தோய்ந்து
நவமது கங்கை வேய்ந்தார் நனிவட வருவி யாடிப்
பவமது வண்டு வீழாப் பசியசெண் பகக்கா வெங்கும்
தவமது வண்டு போல மொய்த்தனர் தவத்தோர் சங்கம். 6

பொ - ரை: தவஞ்செய்வோர் திருக்கூட்டமாக, தோன்றும் தேனை வண்டுகள் விரும்பாத பசிய சண்பகவனம் முழுதும் தவமாகிய தேனை விரும்பும் வண்டுகள் போலச் சூழ்ந்து நெருங்கினர்; அவர்கள் சிவமதுகங்கையில் மூழ்கி, செண்பகத் தடாகத்தில் பின்னர்முழுகி, புதிதாகிய பிரமனது கபாலத்தைக்கையில் ஏந்திய முதல்வனுக்கு உரிய வடஅருவியில் நன்கு மூழ்கிப் பின் வனத்தில் திரண்டனர்.

அன்னவா றயன்மா லாதி யருந்தவக் குழாங்க ளெல்லாம்
நன்னகர்ப் பரனை வாழ்த்தி நற்றவம் புரியு மேல்வை
பன்னவில் காள கூடப் பஃறலைப் பகுவாய்ப் பாந்தண்
மன்னவர் பரவு மன்னன் வாசுகி யென்பான் மன்னோ. 7

பொ - ரை: இவ்வாறு திருக்குற்றால முதல்வனை அயன் முதலிய தவத்தினர் வாழ்த்தி நல்ல தவம் புரியும்போது, பல்லினிடத்துச் சொல்லப்படும் விஷத்தையுடைய பல தலைகளையும் பிளந்தவாயையும் உடைய நாகத்தலைவர் போற்றும் வாசுகி என்னும் நாகன்.

மதுகையி லறிவின் மிக்க மணிமுடி யனந்த னென்னும்
முதுதவத் துணைவன் மேனாண் முக்கணார் தொல்லைத் தில்லைப்
பொதுநடம் பணிந்தா னென்றும் பிலமுறை தானும் போற்றும்
கதியினை விழைந்து சென்றான் கயிலைமால் வரையின் மீதில். 8

பொ - ரை: வலியிலும் அறிவிலும் மிகுந்த மணி சேர்ந்த முடியையுடைய அனந்தன் என்னும் அரிய தவம் உள்ள தன் துணைவன் முன்னாள் தில்லையம் பதியில் முக்கட்செல்வர் திருநடம் கண்டு பணிந்தான் என்று உட்கொண்டும், பாதலத்தில் உறையும் தானும் அங்ஙனம் கண்டு போற்றும் நெறியினை விரும்பித் திருக்கயிலையின்மீது சென்றான்.

வி - கு: மதுகை - வலி.

பொன்னுயர் பொருப்பு நாதன் புயவரை தனக்கு நாணக்
கொன்னுயர் புரங்கண் மூன்றுங் கோபிக்கக் குணம தானன்
பின்னுமோர் கடலில் வெற்பைப் பிணிசெய்து மருந்துஞ் செய்தான்
மன்னுசீர் வெள்ளிக் குன்றில் வரதனை வணங்கி யேத்தி. 9

பொ - ரை: மேருமலை இறைவன் புயமாகிய மலையைக்கண்டு நாணும்படி முப்புரங்களை வெகுண்டு செல்லக் கயிருக ஆனவன், பின்னும் மந்தரமலையைக் கடலிற்பிணித்து அமுதம் எடுக்கத் துணையாயினன் ஆகிய வாசுகி திருக்கயிலையில் இறைவனைத் தொழுதுபோற்றி.

பொறியுடற் பாவை செய்து புலன்கள்சூத் திரங்க ளாக்கிக்
கறுமனப் பாசம் பூட்டிக் கலாதியேழ் தாளந் தாக்கி
அறிதரு பிரேர கங்க ளைந்தினு லசைத்துப் பேதக்
குறியிரு தருவா லாட்டுங் கூத்தனே சரண மென்ருன். 10

பொ - ரை: ஐம்பொறிகளையுடைய பருவுடம்பாகிய பாவையைச் செய்து, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்புலன்களாகிய நூல்களால் கட்டி, கறுவுதலையுடைய மனமாகிய முதன்மைக்கயிற்ருேடு அவற்றைத்தொடர்புபடுத்தி, கலைமுதலிய வித்தியாதத்துவங்களாகிய தாளங்களால் ஒற்றறுத்து, சிவாகமங் களால் அறியப்படும் சிவதத்துவம் ஐந்தாலும் அசைத்து, பேதமாகிய குறியை உடைய விருப்புவெறுப்புப் பற்றி வரும் இருவினை என்னும் கோல்கொண்டு ஆட்டும் திருக்கூத்தைச் செய்யும் பிரானே அடைக்கலம் என்று மொழிந்தான்.

வேறு

பணியும் பணியின் குலவேந்தைப் பணியின் பணியா ரருணேக்கி
மணிவெஞ் சூட்டுப் பிலவேந்த வரலா றென்னை யெனப் பிறவிப்
பிணியின் மருந்தே யுனைக்காணும் பெற்றி யதனன் மற்றுமொரு
தணிவில் காத லொடும்போ ந்தே னருளாற் சாற்றத் தகுமென்ருன். 11

பொ - ரை: இங்ஙனம் மொழிந்து தொழும் பாம்பு அரசனுகிய வாசுகியைச் சர்ப்பாபரணத்தார் அருளால் நோக்கி, மணியைக்கொண்ட உச்சியையுடைய பாதலமன்னனே, நீ இங்குவரும் நோக்கம்யாது என வினவியருள, பிறவிக்கு மருந்தாகிய பெருமானே, உம்மைக்கண்டு தொழும் தணிவில்லாத அன்பினல் இங்குவந்தேன்; திருவருள் உண்டாயின் அடியேன் விருப்பம் தெரிவிக்கத்தக்கது என்ருன்.

நாத னுரையா யென்றருள நடுங்கி யொடுங்கி வாய்புதைத்துப்
பூத நாதா கங்காளா புனித மறைகள் காணு நின்
பாத நடனந் தனைக்கண்டு பணிந்தா னந்தக் கடலாடும்
காத லுடையே னெனவுரைப்பக் கவுரி முகம்பார்த் தெம்பெருமான். 12

பொ - ரை: இறைவன் அருள்பெற்று, அவன்றன் திருக்கூத்தைக்கண்டு தொழும் விருப்பத்தை விண்ணப்பிக்க, முதல்வன் உமையம்மையை நோக்கிக் கூறுகின்ருர்.

சடைமே லிருக்கும் பிறைக்கொழுந்து தளிர்த்த தெனப்புன் னகைகூர்ந்து
கடைநோக் கருளி னமுதொழுகக் கனிவாய் மலர்ந்தங் கருள்செய்வார்
விடைமேற் காட்சி யடியவர்க்கு வேண்டும் வகையாற் புரிந்தருள்வோம்
நடமேற் புரியும் பெருங்காட்சி நவில்வோம் ஞான காரணத்தால். 13

பொ-ரை: அடியவர்க்கு வேண்டும் வரங்களைத் தரும் நிலையில் விடைமேற் காட்சிதருவோம்; நம் இயல்பை உணர்வதாகிய ஞானம் அருளுதற்பொருட்டுப் பண்டுதொட்டுப் புரிந்துவரும் நடனமாகிய பெருங்காட்சியைத் தவத்தினர்க்குக் காட்டியருள்வோம்.

அனந்த னென்பா னெமைநோக்கி யனந்த முகங்க ளருந்தவங்கண்
மனந்தன் வயமாப் புரிந்தமையான் மற்றோ ருகத்தில் வந்தெய்தும்
சனந்தன் முதலோர் புகழ்தில்லைத் தலத்து நடனந் தொழப்பெற்றான்
கனந்தங் கியமெய்த் தவமவன்போற் புரிநீ யூழி காலமென. 14

பொ-ரை: ஆதிசேடன் எம்மையே தியானித்து, அளவிறந்த உகங்கள் மன ஒருமையோடு அரியதவங்கள் செய்தமையால் வேறு ஓர் உகத்து, சனந்தன் முதலானோர் புகழும் திருத்தில்லையில் நமது திருக்கூத்தைக்கண்டு தொழப் பெற்றான்; பெருமை பொருந்திய மெய்த்தவத்தை அவன்போல் நீயும் புரிக எனப் புன்னகை தோற்ற கடைக்கணித்து மொழிந்தான் முதல்வன்.

பொருப்பின் சிலையா ருரைப்ப வந்தப் புனிதச் சிலைக்கு நாணானான்
பெருக்க யுகங்கள் பலவுமுனைப் பிரிந்து தவங்கள் புரிந்தாற்றேன்
திருக்கண் கண்டார் தீவினையுங் காண்பார் கொல்லோ சிவபெருமான்
அருட்கொண் டடிமை படைத்தனையா லாளக்கடனே எனப்பணிந்தான். 15

பொ-ரை: மேருவில்லார் இங்ஙனம்கூற அம்மேருவில்லுக்கு நாணாக இருந்த வாசுகி, சிவபெருமானே, பலயுகங்கள் உனைப்பிரிந்து தவம்மேற்கொள்ள மனந்தரிக்கவில்லை; உம்மைக் கண்டார்க்குத் தீவினையும் உளவோ? அடிமையாகிய என்னை அருளாற் படைத்தனை; என்னை ஆட்கொள்ளுதல் உமக்குக் கடனே எனச் சொல்லிப் பணிந்தான்.

கிட்டாப் பதவி நடங்காணக் கிடைக்க வேண்டு மெம்பெருமான்
எட்டாக் காலந் தவமியற்ற வியலா தென்பான் றனக்கிரங்கிக்
கட்டா நிரைத்த கலகரும்பு கறியா வண்ணஞ் செறிபாகின்
வட்டாத் திரட்டி வழங்குதல்போற் றிருவாய் மலர்ந்து வழங்குவார். 16

பொ-ரை: திருநடம் காணும் கிட்டாப்பதவி கிடைக்கவேண்டும்; ஆயின், அளவில் காலம் தவம் இயற்றவும் ஆற்றல் இல்லேன் என்ற வாசுகிக்கு இரங்கிக் கூறுகின்றான் முதல்வன்; கட்டாகவுள்ள பல கரும்புகளையும் மென்று சுவைக்க முடியாதவர்க்கு அவற்றின் சாற்றைப் பாகு ஆக்கி வெல்லக் கட்டியாகத் தருவதுபோல் திருவாய்மலர்ந்தருள்கின்றான் முதல்வன்.

பாடும் பூதம் பணிசெய்யப் பயில்பாண் டரங்க மன்றினிடத்
தாடுங் கூத்துங் காளிமத மடக்குங் கூத்துங் கொடுமுயலைச்
சாடுங் கூத்தும் பிறரறியத் தக்க கூத்தா மனைத்துலகுந்
தேடுங் கூத்து நன்னகர்நந் தேவி யறியுந் திருக்கூத்து. 17

பொ - ரை: பூதங்கள் பாடிப்பணிசெய்ய ஆடும் பாண்டரங்கமும், தில்லை மன்றில் ஆடும் கூத்தும், காளியின் செருக்கடக்கும் ஊர்த்துவ நடனமும், தாருகாவனத்தவர் விடுத்த முயலகனை மிதித்து ஆடும் கூத்தும், பிறர் காணச் செய்யும் கூத்துக்கள் ஆகும்; திருக்குற்றால நன்னகரில் நம் தேவிக்குமட்டும் அறியக் காட்டும் கூத்து எல்லா உலகும் அறிய நாடிவரும் கூத்து ஆகும்.

அந்த நடனங் காண்பதற்கா வரியு மயனும் வானோரும்
கொந்து சடிலப் பெருமுனிவர் குழாமும் பொதியிற் குறுமுனியும்
முந்தை யுகங்கள் பலதலத்து முயன்றோர் முயன்று முற்றாமல்
இந்த யுகத்துந் தவம்புரிந்தா ரெமது திரிகூ டத்தணைந்து. 18

பொ - ரை: அந்தக்கூத்தைக் காண அயன் மால் முனிவர் பல உகங்கள் தவம்புரிந்து முற்றுப்பெறாது, இவ்வுகத்தும் திரிகூடத்தில் தவம் புரிகின்றனர்.

வி - கு: கொந்து சடிலம் - கொத்தாகிய சடைப்புரிகள்.

பற்றா யிருந்து பிறதலத்துப் பல்லா யிரம்யாண் டியற்றுபலன்
குற்றா லத்தி லோராண்டிற் கொடுக்கு மெனுமா மறைமொழியால்
உற்றா ரயன்மான் முதலோர்க ளுலப்பில் குளிகை கனலிலிட்டு
வெற்றா யலைந்த வாதியர்கள் வேதிக் குளிகை யடைந்தாற்போல். 19

பொ - ரை: பிற தலங்களில் அன்பாய் இருந்து பல ஆயிரம் ஆண்டுகள் செய்யும் தவப்பயனைக் குற்றாலத்தில் ஓராண்டு தவம் தரும் என்னும் வேதமொழியினால் அயன் மால் முதலோர் அங்குப் போந்தனர்; அளவில்லாத குளிகைகளை நெருப்பிலிட்டு வீணாய் வருந்திய இரசவாதியர் உண்மையாகப் பிற தாழ்ந்த உலோகங்களைப் பொன்னாக்கும் வேதிக்குளிகையைப் பெற்றாற் போன்றது அவர் செயல்.

சந்து மகிலுந் திரைசுருட்டித் தரள மெறிந்து பொன்கொழித்து
நந்து திரட்டுஞ் சித்திரமா நதித்தண் கரையி லிருபாலும்
வந்து தவழ்செண் பகச்சோலை மருவி யிருந்து தவம்புரிவார்
சிந்தை நினைந்த வரமெல்லாஞ் சித்தியாகும் சத்தியமே. 20

பொ - ரை: சந்தன அகிற்கட்டைகளைத் திரைகள் சுமந்துவர முத்துக்களைக் கரையில் வீசி, பொற்றுகள்களைக் கரையில் ஒதுக்கிச் சங்குகளை ஒன்று சேர்க்கும் சித்திர நதியின் இருகரைகளிலும் தென்றல் தவழும் சண்பகச் சோலையிற் பொருந்தியிருந்து தவம்புரிவோர் நினைத்த வரங்கள் அனைத்தும் பெறுவது உறுதி.

வி - கு: வந்து - (தென்றற்) காற்று.

பனக வேந்தே தென்கூடற் பதியின் முதிய வெள்ளிமன்றும்
கனக சபையாம் வெளிமன்று மாலங் காட்டின் மணிமன்று
மனக நிறைதாம் பிரப்பொதுவு மார்க்கும் பொதுவா ந் திரிகூடச்
சனகர் புகழ்சித் திரமன்றந் தனிநம் பரம ரகசியமே. 21

பொ - ரை: பாம்புகளுக்கு அரசே, மதுரையில் உள்ள வெள்ளிமன்றமும், தில்லைச் சிற்றம்பலமாகிய பொற்சபையும், திருவாலங்காட்டில் உள்ள இரத்தின சபையும், திருநெல்வேலியிலுள்ள பாவம் இன்மையைத் தரும் தாமிரசபையும் யார்க்கும் பொதுவாகக் காணத்தக்க சபைகளாம்; சனகர் புகழும் திரிகூடச் சித்திரசபை நாம் தனியாக உளங்கொண்ட மேலான இரகசிய சபையாகும்.

வேறு

ஞாலமே னதிகளெலாம் படிந்தபலன் சித்திரமா நதியே நல்கும்
தாலமே லுயர்புனிதத் தலங்களெலாந் தரும்பேறு தருங்குற் றாலம்
மூலமா ரிலிங்கமெலாம் பரவுபலன் றிரிகூட மூர்த்தி நல்கும்
வாலிதா மத்தலத்தை நோக்கிவரி லடிக்கடியோர் மகப்பே றெய்தும். 22

பொ - ரை: சித்திரநதி பிறநதிகளில் முழுகிய பயன் அனைத்தையும் ஒருங்கே தரும்; திருக்குற்றாலம் உலகில் உள்ள பிற புண்ணியத் தலங்கள் தரும் பயன் அனைத்தையும் ஒருங்கே நல்கும்; திரிகூடத்தில் உள்ள சிவலிங்கமூர்த்தி பிறதலங்களில் உள்ள மூலலிங்கம் அனைத்தையும் தொழுத பயனை ஒருங்கே திரட்டி அளிக்கும்; தூயதாகிய அத்தலத்தை நோக்கிவரும்போது ஒவ்வோர் அடி எடுத்துவைக்கும் தூரத்திற்கும் ஒரு வேள்வி இயற்றிய பயன்கிட்டும்.

வேறு

உருகன் புடையா யறிந்தறியா தொருநா ளவ்வூர் வைகிடினும்
பொருகண் டகமாம் வினைநீங்கப் புகுவார் கயிலை யெனப்புகன்று
மிருகண் டுவின்சீர்க் குலமகற்கா வெங்கூற் றுதைத்த பெருமானர்
வருகண் டகசே தனன்சரிதை வாக்கா லருளி விடைகொடுத்தார். 23

பொ - ரை: மிருகண்டுமுனி மகனாகிய மார்க்கண்டனுக்காக நமனை உதைத்த விசுவேசர், உருகும் அன்பு உடையோனே, அறிந்தோ அறியாமலோ ஒருநாள் திருக்குற்றாலத்தில் தங்கினவர் வருத்தும் காழ்ப்புள்ள வினைமுற்றும் நீங்கத் திருக்கயிலை புகுவர் என உரைத்து, அங்ஙனம் அருள்பெற்ற கண்டக சேதனன் வரலாற்றைத் தம் வாய்மொழியால் உரைத்து வழி அனுப்பினர்.

நஞ்சங் களிக்கும் விழிபாகர் நலஞ்சேர் கருணைக் குருகிமனம்
நஞ்சங் களிக்கும் விடைபெற்று நயப்பா லேகி நதித்தடநீர்
அஞ்சங் களிக்கு மணிகருவா வான்பால் பிறித்துண் டடைகிடக்கும்
அஞ்சங் களிக்குந் திரிகூட புரத்தி லணை ந்தா னரவேந்தல். 24

பொ - ரை: முற்காலத்து நஞ்சை அமுதாகும்படி தலையன்பு செய்த விழி யாளாகிய உமைபாகர் நன்மைபொருந்திய கருணைக்கு அரவுகளிற்சிறந்த வாசுகி உருகி மனம் நைந்து அவ்விடத்து இறைவன் அளித்த விடைபெற்று மகிழ்ச்சி

யோடு வழிச்சென்று ஆற்று நீரில் உள்ள அழகிய சங்குகள் தரும் முத்துக்களை முட்டையெனக் கருதி, பாலைத் தண்ணீரினின்றும் பிரித்துண்டு, அடைகாக்கும் அன்னம் மகிழும் திரிகூட புரத்திற் சேர்ந்தான்.

வி - கு: நஞ்சு அங்கு அளிக்கும், மனம் நஞ்சு, அங்கு அளிக்கும் விடை பெற்று, அம் சங்கு அளிக்கும் மணி, அஞ்சம் களிக்கும் எனப் பிரித்துக் கூட்டிப் பொருள் உரைக்க. அளிக்கும்விழி - பாயினமேகலை என்பதுபோல் பெயரெச்சத் தொடரில் வரும் அன்மொழித் தொகை.

இந்து முடிசேர் திரிகூட மீசர் வடிவென் றேபணிந்தான்
உந்தி பூத்தும் பாரிடந்து முயர்வா னளவு நீண்டதனல்
அந்த நெடுமா லெனத்தொழுதா னலர்பூ மேலாய்த் திசைமுகத்து
வந்து மறைகண் முழங்குதலான் மலரோ னென்ன வணங்கினுன். 25

பொ - ரை: சந்திரன் முடியில் (சிகரத்தில்)சேரும் திரிகூடமலை சிவபிரான் வடிவெனக்கண்டு வாசுகி தொழுதான்; கொப்பூழ் மலரைத் தோற்றியும் (நீர்ச் சுழி விளங்கியும்) பூமியின் அடியிற் சென்றும் உயர்ந்த வானளவு நீண்டமையால் திருமால் வடிவெனவும் கருதித்தொழுதான்; அலர்ந்த பூ தன்மேல் ஆக (பூமேல் இருந்து) நான்கு இடத்துவந்து (நான்முகந்து வந்து) நான்மறைகள் முழங்கு தலால் அயன்வடிவெனவும் கண்டு தொழுதான்.

கூட முயர்வா னகடுரிஞ்சுங் குவட்டி லிருந்து குதிப்பதனல்
ஆட வருவித் தேனுறு வானு றெனவே யதிசயித்தான்
ஈட லரவப் பஃறலையா னிரைத்த மணியா லருவி துணைச்
சேட னெனவே சிறிதயிர்த்தான் சிலையான் மகவா னெனத்திகைத்தான். 26

பொ - ரை: உச்சி உயர்ந்த, ஆகாயத்தின் நடுவைத் தொடும் மலையில் இருந்து விழுதலினல் அசைதலையுடைய தேனுற்றை ஆகாய கங்கை எனவே எண்ணி வியப்புற்றுன் வாசுகி; நீளுதலோடு முழக்கத்தோடு பலவிடத்தும் செல்லுதலால் (நீண்ட அரவத்தின் பலதலைகளால்) வரிசையாய் அமைந்த மணிகளால், அருவியைத் தன் துணைவனுகிய ஆதிசேடனே எனக் கருதிச் சிறிது ஐயுற்றுன்; இந்திர தனுசு காணப்பட்டமையால் இந்திரனே எனத் திகைப் புண்டான்.

அண்ட ரகலா துறைவதனு லளியாப் பொருளு மளிப்பதனல்
வண்டு படாத செண்பகக்கா வளர்கற் பகக்கா வெனமருண்டான்
பண்டை யறங்கள் வளர்ப்பதனல் பச்சை நிறத்தாற் பரைவடிவாக்
கண்டு பணிந்தான் றவப்பள்ளி முனிவர் கணத்தைக் கண்ணுற்றுன். 27

பொ - ரை: தேவர் அகலாதிருப்பதனுலும், அன்பாக வேண்டும் பொருள் எல்லாம் அளித்தலினுலும், வண்டுவிழாத செண்பகவனத்தைக் கற்பகவனம் என மயங்கினுன்; பழைய முப்பத்திரண்டு அறங்களையும் வளர்ப்பதனுலும் பச்சை நிறத்தாலும் அவ்வனத்தைப் பராசத்தியின் வடிவெனவே கண்டு பணிந்தான்; தவம்செய்யும் இடங்களில் முனிவர் கணங்களைக் கண்டான்.

### வேறு

தொழுதகை பணைக ளாகத் துணர்ச்சடை வீழ்து வீழ்த்துப்
பழுமர மெனநிற் பாரும் பரந்துசெல் லெடுப்ப மேனி
முழுதும்வன் மீக மாகி வான்மீகி முனியொப் பாரும்
ஒழுகுடல் பங்கி போர்ப்ப வுரோமச னெனநிற்பாரும். 28

பொ - ரை: தொழும் நிலையில் நிறுத்தப்பட்ட கைகள் கிளைகளாக, கொத்தாகிய சடைகளை விழுதுபோல நீடச்செய்து ஆலமரம் என நிற்பாரும், மேனியில் பரவிச் செல் புற்றை எடுத்தலினால், மேனிமுழுதும் புற்றாகி வான்மீகி முனியை ஒத்தவரும், நீண்ட உடலில் புறமயிர் போர்ப்ப உரோமசமுனியை ஒத்து நிற்பாரும் திரிகூடத்து இருந்தனர்.

ஒருபத மூன்று காலா லொருபத மெழுகா லாக
வருபத மூன்று மோர்ந்து மாதவம் வளர்க்கின் றாரும்
தருபதந் தலைமே லேற்றித் தரையின்மே லிருக்கின் றாரும்
இருபத நிலையே யன்றி யியக்கமற் றுறைகின் றாரும். 29

பொ - ரை: ஒரு பாதத்தை நிலத்தில் ஊன்றி மற்றொரு பாதத்தைத் தூக்கி நிறுத்தி அன்றாடம் வரும் முப்பொழுதும் இறைவனை உள்ளத்தில் ஆய்ந்து சிறந்த தவத்தைப் பெருக்கிக்கொள்வாரும், தம்மைப் புடைபெயர உதவும் இரு பாதங்களையும் தம் தலையின்மேல் ஏறவைத்து அசைவற்று இருக்கின்றாரும், இரண்டு பாதங்களையும் நிலத்தில் ஊன்றி அசைவற்று நிற்பாரும் அங்கு உள்ளனர்.

ஊசிமே லொருதா ளேற்றி யொருவிரன் மேனிற் பாரும்
நாசிமேற் பிராணவாயு நடைதப விருக்கின் றாரும்
வாசிமே லேறி வீதி வலம்புரி மகிமை யாரும்
கூசிமேற் சுடரு மஞ்சக் கொழுஞ்சுட ரெழுப்பு வாரும். 30

பொ - ரை: ஊசி மேல் ஒரு காலை வைத்து ஒரு விரல்மேல் நிற்பாரும், பிராணவாயு நாசியில் நடத்தல் இன்றிக் கும்பகஞ் செய்தே இருக்கின்றாரும், அப்பிராணவாயு சுழுமுனையில் மேல் ஏறிப் பிராசாத ஒளிநெறியில் வலத்தோடு மேற்செல்வோரும், மேலே உள்ள ஞாயிறாகிய சுடரும் கூசி அஞ்சும்படி மூலக் கனலை எழுப்புவாரும் அங்கு மேவினர்.

சருகிலை யருந்து வாருந் தண்புனல் பருகு வாரும்
பரிதியின் கதிருண் பாரும் பவனலைப் பொசிக்கின் றாரும்
வருகனி காய்தின் பாரும் வனத்திடைக் கிழங்கு மூலம்
இருபொழு தொருபோ துண்டு மின்றியு மிருக்கின் றாரும். 31

பொ - ரை: சருகும் இலையும் உணவாகக் கொள்பவரும், தண்ணீரையே உணவாகக்கொள்வாரும், காற்றையே உண்பாரும், காய்கனிகளையே தின்பாரும், ஆங்குள்ள வேர் கிழங்கு என்பவற்றையே இருபொழுது, ஒருபொழுது மட்டும் உண்டும், ஒன்றுமே உண்ணாதும் தவம் புரிவோரும் அங்குப் பொருந்தினர்.

தருக்களாய் நிற்கின் றாருந் தழலிடை சரிக்கின் றாரும்
உருக்கள்போ னிற்கின் றாரு மூணுட னுறக்க மின்றிச்
செருக்குற வடங்கிக் கல்லாய்ச் சிலைகளா யமர்கின் றாரும்
சுருக்கிய வுண்டி யன்றிப் படிவமே சுருங்கா தாரும். 32

பொ-ரை: மரம்போல் நிற்பாரும், நெருப்பில் இயங்குவோரும், சடப் பொருள்கள் போல் நிற்பாரும், உணவும் உறக்கமும் இன்றி மகிழ்ச்சியோடு அடங்கிக் கல் போல, மலை போல இருப்பவர்களும், உண்டி சுருக்கியதன்றி உடல் சுருங்காதவரும் ஆண்டு மேவினர்.

மேருவி லிமயந் தன்னின் மிக்குள கிரிக டம்மில்
பாருள வனங்க ளாதி பற்பல தலங்க டம்மில்
ஓருகந் தவஞ்செய் தாருஞ் சதுர்யுக முளுற்றி னாரும்
ஏருறு மனுவின் வாழ்க்கை யெழுபத்தோ ருகநின் றாரும். 33

பொ-ரை: மேரு, இமயம் முதலிய பிற மலைகளிலும் வனங்களிலும் புண்ணியத் தலங்களிலும் ஓர்யுகம், ஒருசதுர்யுகம்; மனுவந்தரமாகிய சதுர்யுகம் எழுபத்தொன்று என நீண்டகாலம்தவம் இயற்றினோரும் இங்குவந்து உள்ளனர்.

மாயிரும் புவனங் காக்கு மனுக்களீ ரெழுவர் வாழ்க்கை
ஆயிரஞ் சதுர்யு கங்கண் டயன்பகல் கழித்திட்டாரும்
மேயினர் திரிகூ டத்து விரிதவம் புரிகின் றாரைச்
சேயுயர் பாந்தள் வேந்தன் கண்டனன் றிகைத்து நின்றான். 34

பொ-ரை: பெரும் புவனங்களைக்காக்கும் மனுக்கள் பதினல்வர் வாழ்க்கையாகிய ஆயிரம் சதுர்யுகங்கண்டு பிரமனது ஒரு பகலைக் கண்டவர்களும் ஆக முன்கூறிய அனைவரும் திரிகூடத்து வந்து தவம்புரிவதை வாசுகி கண்டு திகைப்பு அடைந்தான்.

இன்னணம் புரிவார் முன்யா னெத்தவம் புரிகேன் முக்கண்
முன்னவன் பணியாற் செய்வேன் முற்றினு முற்றா தேனும்
நன்னகர் வனத்துப் புல்லாய் நனிமர மெனநின் றாலும்
பன்னகப் பிறவிப் பாவம் பறிபடு மென்று தேர்ந்தான். 35

பொ-ரை: இவ்வாறு தவம்புரிவார்முன் யான் எத்தவம் புரியவல்லேன்? சிவபிரான் ஆணையால் எனக்கியன்றதொரு தவத்தை மேற்கொள்வேன்; அது நிறைவெய்தினும் எய்தாது விடினும், திருக்குற்றால நன்னகர்ச் சண்பகவனத்துப் புல்லாக அல்லது மரமாக மிக்கு நின்றாலும் இப்பாம்புப் பிறவிக்கு உரிய பாவம் முற்றும் கழியும் என வாசுகி உணர்ந்தான்.

அந்தமா வனத்து மேவி யருந்தவ வேள்வி யாற்றுஞ்
செந்தமிழ் முனிதாள் போற்றிச் செம்மையஞ் செழுத்தும் பெற்றுச்
சந்ததந் திருவெண் ணீறுஞ் சைவசா தனமும் பூண்டு
நந்தணி குழையார்ப் போற்றி நனிதவக் கிழமை பூண்டான். 36

பொ - ரை : அங்கு வேள்வியாற்றும் அகத்திய முனிவரைப் பணிந்து திருவைந்தெழுத்து உபதேசிக்கப் பெற்றுத் திருவெண்ணீறு உருத்திராக்கம் என்பவற்றை அணிந்து சங்கக் குழையணியும் முதல்வனை வழிபட்டுத் தவ உரிமையை மிக மேற்கொண்டான்.

வனமிசைப் பாந்தள் வேந்தன் வருடமா யிரத்தி ரட்டி
அனிலமா கார மாக வாயிரத் திரட்டி யாண்டு
புனலிலா யிரத்தி ரட்டி பொருப்பிலு மவ்வா ருற்றிக்
கனலிலா யிரத்தி ரட்டி கடுந்தவம் புரியுங் காலே. 37

பொ - ரை : சண்பகவனத்தில், வாசுகி காற்றை உணவாகக்கொண்டு இரண்டாயிரம் யாண்டு தண்ணீரிலும், அத்தனையாண்டு மலையிலும், அத்துணை ஆண்டுகள் அக்கினி நடுவிலும் கடுந்தவம் புரிந்தான்.

தேவர்தந் தேவர் தேவன் றிருவுள மிரங்கி மைதோய்
மாவடு வனைய வுண்கண் மலைமகள் வதன நோக்கிப்
பூவலர் திரிகூ டத்தெம் பொதுநடங் காண வேண்டி
மேவருந் தவஞ்செய் கின்ருர் விரிஞ்சன்மா லாதி விண்ணோர். 38

பொ -ரை : தேவதேவன் மனம் இரங்கி அம்மை முகத்தைப் பார்த்துத் திரிகூடத்தில் நமது திருநடம் காண விரும்பி அயன் மால் முதலிய விண்ணவர் அருந்தவம் புரிகின்றனர்.

கன்மலே மரமாய்ப் புற்ருய்க் கழிந்தனர் முனிவர் வானோர்
சன்மலி பாந்தள் வேந்துந் தவித்தனன் வேள்வி யாற்றித்
தென்மலே முனியுந் தீராத் தவஞ் செய்தான் வாரா யென்ன
நின்மலே யுடனே வெள்ளித் திருமலே நீங்கிப் போந்தான். 39

பொ - ரை: கல், மலே, மரம், புற்று என இருந்து தவம் புரிந்து மிருந்தனர் முனிவரும் வானவரும்; நன்மை மிகுந்த வாசுகியும் அங்ஙனம் தவத்தான் உடல் வருந்தினன்; அகத்தியனும் வேள்வி ஆற்றி முடிவில் தவம் செய்தான்; ஆதலால் அவர்களுக்குக் காட்சிதர நம்முடன் வருக என மொழிந்தார்; உமையம்மை உடன்வரத் திருக்கயிலேயை நீங்கி முதல்வன் தென்திசைக்கு வந்தார்.

வாசுகி தவம்புரிந்த சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1613

# திருநடனச் சருக்கம்

அற்பினு லுறையும் போது மகலுறும் போதும் வெள்ளி
வெற்பினை யகலா னென்ன விடையின்மேற் கொண்டு நாதன்
முற்பெறு தனையன் பின்னு முருகவேண் முன்னு மேகச்
சிற்பரை யுடனே போந்தான் சிவதிரி கூட நோக்கி. 1

பொ - ரை: அன்பினுல் தங்கும் போதும், நீங்கிப் புறப்படும் போதும் வெள்ளி மலையை நீங்குவதில்லை எனும்படி முதல்வன் வெள் விடைமீது ஊர்ந்து உமையம்மையுடன் விநாயகர் பின்னும் முருகன் முன்னுமாகச் செல்ல மங்கல மான திரிகூடமலையை நோக்கி வருவார் ஆயினர்.

நடித்தரு ளெம்பி ரானர் நன்னகர் நணுகுங் காலைப்
படித்தல மிருள்போய்ச் சோதி பரந்தது தவத்தோர்க் கெல்லாம்
துடித்தது வலப்பாற் றிண்டோ டொழுதன சிரமேற் செங்கை
பொடித்தன வுரோம மேனி போர்த்தன புளகப் புள்ளி. 2

பொ - ரை: சிவபிரான் திருக்குற்றுலத்திற்கு வரும்போது உலகில் இருள் நீங்கிப் பேரொளி பரவிற்று; தவஞ்செய்வோர்க்கு வலத்தோள் துடித்தது; அவர் தம் நல்ல கைகள் சிரமேற்குவிந்து எழுந்தன; உரோமங்கள் பொடித்து மேனி சிலிர்த்தார்கள்.

ஞான நா யகனுர் தோன்று நற்குறி யிதுவென் றோர்ந்து
தானமால் வரவு பார்க்குஞ் சாதகத் திரள்கள் போலும்
பானுவி னுதயம் பார்க்கு நேமியம் பறவை போலும்
வானவர் முனிவர் நின்றார் வடபெருந் திசையே நோக்கி. 3

பொ - ரை: சிவபிரான் தோன்றுவதற்கு உரிய முன் அடையாளம் என உணர்ந்து கொடையையுடைய மேகத்தின் வரவுபார்க்கும் சாதகப்புள்போலவும், ஞாயிற்றின் வரவு பார்க்கும் சக்கரவாகப்புள் போலவும் வட திசையை நோக்கி முனிவரும் தேவரும் நின்றனர்.

வி - கு: சாதகம் - வானம்பாடி: மால் - மேகம்.

கருமணி மிடறு மூன்று கண்களும் புயங்க ணுன்கும்
குருமணி வடமுஞ் செம்பொற் கொன்றைமா லையுமுந் நூலும்
மருமமும் பணிலத் தோட்டு மாசுணக் கம்பிக் காதும்
உருவமும் பொலிந்து தோன்றத் தோன்றினு னுமையோர் பாகன். 4

பொ - ரை: உமையொருபாகன் நீலமணிபோன்ற மிடறும், முக்கண்ணும், நான்குபுயமும், உருத்திராக்கமாலையும், கொன்றைமாலையும், முந்நூலும் அணிந்த மார்பும் பாம்பாகிய கம்பியில் கோத்த சங்கக்குழையும் செய்ய திருமேனியும் தோற்றி வெளிப்பட்டான்.

உருக்கிளர் விடைமேற் ரேன்று மும்பர்தம் பிரானுர் ஞானத்
திருக்கிளர் வடிவங் கண்ணிற் காண்டலுந் திரளா னந்தப்
பெருக்கெனும் வாரி தாவிப் பிறவிவேர் மறிந்து வீழுந்
தருக்குலம் போல வீழ்ந்து பணிந்தனர் தவத்தோ ரெல்லாம். 5

பொ - ரை: இங்ஙனம் விடைமேல் இறைவன் தோன்றக் கண்ட தவத்தினர் யாரும் பேரின்ப வெள்ளத்துள் குதித்து பிறவிவேர் அறுந்து கீழேவிழும் மரங்கள் போல நிலத்தில் வீழ்ந்து இறைஞ்சினர்.

இறைஞ்சினர் பணிவார் தம்மை யெழுகவென் றருளா னேக்கி
நறுஞ்சினை மலர்ப்பூஞ் சோலை நன்னகர்த் திரிகூ டத்துக்
குறிஞ்சியஞ் சூரற் சாரற் குறும்பலாச் சுருதி நீழல்
பிறங்குமுத் தரபாற் சென்ருன் பிரணவத் துருவாய் நின்ருன். 6

பொ - ரை: பிரணவவடிவாய் உள்ள சிவபிரான் வணங்கியோரை எழுக என உரைத்து, குறிஞ்சிப் பூவும் பிரம்பும் விளங்கும் சாரலையுடைய குறும்பலா நீழல் உள்ள வடபக்கமாக எழுந்தருளினன்.

தரங்கநீ ருலகுக் கெல்லா ந் தவமலாற் பொருள்வே றுண்டோ
புரந்தர னயன்மா லாதி புலவர்மா முனிவர் காணத்
திரம்பெறு திருக்குற் ருலச் சித்திரப் பொதுவாந் தெய்வம்
அரங்கினி லாடப் போந்தா னகிலமு மாடல் காண்பான். 7

பொ - ரை: உலகத்தைத் தொழிற்படுத்தும் முதல்வன், தேவரும் முனிவரும் காணும்படி சித்திரசபையில் திருக்கூத்தியற்றத் தொடங்கினன்; உலகிற்குச் சார்பாவது தவமே அல்லவா?

வேறு

துங்க வாணனே ராயிரங் கரங்களிற் றுவைக்குமண் முழவோசை
கங்கை மா நதி யாயிர முகம்பொரு கனைகட லெனவார்ப்பச்
செங்கை யாயிரத் திரட்டிபா னுகம்பனுர் திரட்டியூ தியசங்கம்
வங்க வாரிதித் திரைகரத் தாயிரம் வலம்புரி முழக்கேய்ப்ப. 8

பொ - ரை: உயர்ச்சியுள்ள வாணுசுரன் ஆயிரங்கைகளால் ஒப்பனை செய்யப்பெற்ற முழவை முழக்கினன்; கங்கை ஆயிரம் முகத்தால் கடலென முழங்கினள்; கடல் ஆயிரந் திரைக்கரங்கொண்டு வலம்புரிகளை முழங்கினற் போல, பானுகம்பன் இரண்டாயிரம் கைகளால் ஆயிரம் சங்குகளைப்பற்றி ஓசையை எழுப்பினன்.

திவவி யாழ்பயி லிருவரே ழிசைதிருச் செவிதொறு மமுதூற்ற
நவவி யாபகச் சுருதிக ளாயிர நாமங்க ளெடுத்தோத
உவவி வாழ்புனற் சுரநதி திரையலைத் துக்கசீ கரந்தூற்றத்
தவவி யாளமுந் தமிழ்முனிச் சங்கமுந் தனித்தனி களிதூங்க. 9

பொ - ரை : இறைவன் திருச்செவியில் அணிகளாக உள்ள அசுவதரன் கம்பளன் என்னும் யாழ்வல்ல கந்தருவர் ஏழிசை அமுதைச் செவிக்கு ஊற்றினர்; கேண்மையையுடைய, எங்கும் நிறைசுருதிகள் ஆயிரந் திருப்பெயர்களைப் படித்தன; மகிழ்ந்து வாழ்வான் ஆறு அலைகள் அசைவால் எழுப்பிச் சிதறிய திவலைகள் தூறல்போல் தெளிக்கப்பெற்று இன்பஞ் செய்தன; தவஞ்செய் வாசுகியும் அகத்தியர் உடனிருந்த கூட்டமும் தனித்தனி களிப்பு எய்தினர்.

ஒருக ரந்தனிற் படர்கனல் சுடர்விட லொருகரந் துடியார்ப்ப
இருக ரங்களில் வரதமு மபயமு மெவ்வுல கமுங்காப்ப
அருள்ப ரந்தெழு திருவுளக் கருணையா லகிலமுங் குளிர்தூங்கச்
செருகு கொன்றையங் கண்ணிதே னூற்றிடச் செழுமதி நிலவூற்ற. 10

பொ - ரை : இறைவனது ஒரு திருக்கையில் விரிந்த அக்கினி சுடர் விட்டு எரிந்தது; மற்றொருகையில் துடி முழங்கிற்று; கீழ் உள்ள இரு திருக்கைகள் அபய வரதங்களால் எல்லா உலகமும் காத்தன; திருவுளத்தெழுந்த பரந்த பேரருளால் உலகம் எல்லாம் தண்ணிய இன்பம் பெற்றன; சிரமாலையாகிய கொன்றை தேனை ஊற்ற, பிறைமதி நிலவை எறித்தது.

மங்கை யாமளை யிருவிழி களிப்புற வொருபத மலர்தூக்கிக்
கங்கை வாய்விட வொருபதங் குறளன்மேற் கதிகொடு சதிதாக்கிப்
பங்கை யாசனன் றுதிசெய நெடியமாற் கதிசயம் பரந்தேறச்
சங்கை யேந்திய குழைநிலாப் புயவரைத் தடந்தொறுந் தவழ்ந்தேற. 11

பொ - ரை : உமையம்மை காணும்படி ஒரு பாதத்தை உயர்த்தி, கங்கை முழுங்கும்படி மற்றொருபாதத்தை வேகமாக முயலகன்மேல் ஊன்றித் தாள ஒத்து அறுத்து, கிளர்ந்து எழுந்தன; சங்கக் குழைகள் புயந்தோறும் தடவி ஆடத் திருக்கூத்தாடினர்; அயன் துதிசெய்தனன்; திருமால் அதிசயித்தார்.

வேறு

புவன நாயகி தாளமாம் பொற்கலம் பிடித்துத்
திவளம் பாணியாற் பண்ணெனுந் திரளமு தாக்கிப்
பவள வாயினு லின்னிசைச் சுவைபரி மாறத்
தவள வாணிநாற் கவிவள நவரசந் தளிர்ப்ப. 12

பொ - ரை : உமையம்மை தாளமாகிய பொற்கலத்தை அசையும் அழகிய திருக்கையிற் கொண்டு பண்ணாகிய அமுதத்திரளைப் படைத்துத் தன் பவள வாயினால் இன்னிசையைச் சுவைபெறப் பரிமாறினள்; வாணியின் நாற்கவியும் பொருள் வளத்துடன் ஒன்பது சுவையைத் தோற்றுவித்தன.

கருணை மேனிநா ருயிரம் பகலொளி கனல
உருவ வாண்முகச் செழுமதி நகைநிலா வொழுக
இருபெ ரும்பொழு துணர்கலா தியாவருந் திகைப்பக்
குரும ணிக்கழ லடியவர் வினையறக் குமைப்ப. 13

பொ - ரை: கருணையே வடிவாகிய முதல்வன் திருமேனி, நூறுயிரம் ஞாயிற்றின் ஒளியைக் கொண்டிருந்தது; திருமுகமாகிய முழுமதியிலிருந்து புன்னகையாகிய நிலவு ஒழுகிற்று; இதனால் இராப்பகல் எனப் பிரித்துணர மாட்டாது யாவரும் திகைத்தனர்; நிறமுடைய மணிபதித்த வீரக்கழல் அடியவர் வினையை அழித்தது.

திருவி ழிக்கரு ணைக்கட லருண்மடை திறந்து
கருது வார்மனக் கால்வழி கரைபுரண் டேறிப்
பருவ முற்றவர் பக்குவ முறைமுறை பாய்ந்து
சருக சித்துலர் தவமுனிக் காடெலாந் தழைப்ப. 14

பொ - ரை: முதல்வன் திருவிழிகள் கருணைக்கடலின் மடைபோல அருளை ஒழுக்கிற்று; அவ்வருள் ஒழுக்கம் அவனைச் சிந்திப்பார் மனமாகிய வாய்க்காலில் நிரம்பிக் கரைமேற் புரண்டுசென்றது; பருவம் எய்தியவர் பக்குவத்திற்கு ஏற்றபடி முறைமுறையாகப் பாய்ந்து சருகு உண்டு வாடிய தவராகிய காடு தழைக்கச் செய்தது.

வி - கு: அசித்து — உண்டு.

இடம்வ லங்களுந் தெரிந்தில ரிமைப்பிலா விமையோர்
நடமு நிற்றலுங் குறித்தில னுட்டமா யிரத்தோன்
அடைவு சாரிபார்த் தசைவிலன் றிசைமுகத் தவனுங்
கடவு ளோவியப் பொதுவில்வே றேவியங் கடுப்ப. 15

பொ - ரை: கண்ணிமையாத இமையவர் இடம்வலம் என்னும் திசை வேறுபாடு அறிந்திலர்; திருக்கூத்தின் நிகழ்ச்சியும் அதன் நிற்றலும் அறிந்திலன் ஆயிரங்கண்ணனாகிய வாசுகி; முறையான வலது இடது சுழற்சியைக் கண்டு திசைமுகன் அசைவற்று நின்றான்; தெய்வச் சித்திரச்சபையில் தானும் ஓர் ஓவியம் போல நின்றான்.

வேறு

கண்டலப் பொலிவான் மண்டல மூன்றே
கடிமலர் தழைகெழு முடியால்
தண்டலைத் திரளோ சங்கணி குழையாற்
றண்மதி மானமோ மிடற்றால்
கொண்டலைத் தரித்த மேருவோ புயத்தால்
குலவரைத் திரள்களோ வெளியால்
விண்டலத் திந்த்ர சாபமோ வெனவும்
விண்ணவர் மண்ணவர் திகைப்ப. 16

பொ - ரை: முதல்வனுடைய ஞாயிறு அங்கி மதி என்னும் மூன்று கண்களாகிய இடவிளக்கத்தால் மூன்று மண்டலமாகக் காணப்பட்டான்; மணமுள்ள கொன்றை முதலிய மலரும் வில்வதளம் முதலிய இலையும் கொண்ட முடியால் சோலையின் திரட்சியாகக் காணப்பட்டான்; சங்கக்குழையின் ஒளியால் மதி

இவர்ந்து செல்லும் விமானமாகக் காணப்பட்டான்; திருநீலமிடற்றால் மேகத்தை மணந்த மேருவாகக் காட்சி அளித்தான்; புயங்களால் மலைத்திரள்களாயினன்; ஆகாயவடிவாதலால் இந்திரசாலமாகக் காணப்பட்டான்; இங்ஙனம் எல்லாம் பலபடக்கண்டு மண்ணவரும் விண்ணவரும் மருட்கை அடைந்தார்கள்.

அலர்மதிப் பிளவுந் தும்பையந் தொடையு
மறிகலா தளியினஞ் சுழலப்
பொலிதிருச் சாந்து புயல்பொரப் புரிநூல்
பொன்னொளி மின்னொளி பொதுள
விலகிவில் லுமிழுந் தொடியணி புயத்தில்
வெண்டலை மாலைகண் மிளிரக்
கலைமதித் திரளென் றெழுந்துசெங் கரத்துக்
கணபண கங்கணங் கலிப்ப. 17

பொ-ரை: பிறையும் தும்பை மாலையும் முடியிற் கிடத்தலின் வேறுபாடு அறியாது வண்டினம் சுழன்றன; நெற்றியில் உள்ள சாந்துப்பொட்டு மேகத்தை நிகர்ப்ப, முப்புரிநூல் பொன் ஒளியையும் மின்னொளியையும் காட்ட விட்டு விட்டு ஒளிதரும் தொடியணிந்த புயத்தில் வெண்டலை மாலைகள் விளங்குதலின் அவற்றைக் கலைகளையுடைய மதித்திரள்கள் எனக் கருதி திருக்கை வளையாகிய பாம்புகள் முழங்கின.

ஏண்டவ ரிருவர் சிவசிவ சிவனென்
றேத்திட விருவரி லொருவன்
காண்டகவரிய சரணநூ புரங்கள்
கலின்கலின் கலினெனக் கலிப்ப
ஆண்டகை யமரர் சயசய சயவென்
றார்த்திடச் சித்திர சபைக்கே
தாண்டவம் பணிவார் தமக்கெலா முத்தி
தகுந்தகுந் தகுமென நடித்தான். 18

பொ-ரை: வலிய தவத்தினராகிய பதஞ்சலி வியாக்கிரபாதர் சிவ ஒலி செய்து ஏத்தினர்; அயன் அரி என்னும் இருவரில் அரி காணாத திருவடியில் சிலம்புகள் கலின் கலின் என ஒலித்தன; ஆளும் தகுதியுடைய தேவர் வெற்றி வெற்றி எனக் கூறி ஆர்த்தனர்; இவ்வாறெல்லாம் நிகழச் சித்திரசபையில் காண்பவர் தமக்கு எலாம் முத்தி தகும் தகும் தகும் என்பது தோன்ற நடனம் புரிந்தான் முதல்வன்.

வி-கு: ஏண் - வலிமை.

துடித்திர ளமரர் துந்துபித் திரளாஞ்
சோபனக் கவரிபொற் றாளம்
பிடிப்பளாஞ் சுருதி சுருதியா யிரமாம்
பேரிசை வாக்குநா மகளே

படிப்பளா மயன்மா லிமையவர் பரவிப்
பார்ப்பரா மகிலநா யகனே
நடிப்பனும் பொதுவோர் சித்திரப் பொதுவா
நடநவில் காட்சியார் நவில்வார். 19

பொ - ரை: சித்திரமன்றத்தில் எல்லாவுலகுக்குந் தலைவனாகிய சிவபிரானே திருக்கூத்து இயற்றுவோன்; துடிகளின் கூட்டம் தேவர் இயக்கும் துந்துபிக் கூட்டமாம்; மங்கள நாயகியாகிய உமையம்மை தாளம் ஒத்தறுத்துக் காட்டுபவளாம்; ஆயிரம் வேதங்களும் இசையை இசைப்பன; மிடற்று இசையைக் கலைமகளே இசைத்தாள்; அயன் மால் முதலாகிய தேவர்கள் துதித்துக் காண்பவர்கள் எனின் இத்திருநடத்தின் பெருமை யாரால் அளவிட்டுக் கூறமுடியும்.

### வேறு

அங்க ணுவன ததிசயத் திருநட மனந்தமாம் விழிவேண்டும்
நங்க ணுடுதற் கெளிவரு காட்சிநீ நவின்றருளெனப் போற்றிச்
செங்க ணுன்முதற் றேவரேத் றெடுத்தலுந் தெரிதர நடங்காட்டி
எங்க ணுயக னெழிலரி யாசனத் தினிதுவீற் றிருந்தானே. 20

பொ - ரை: அழகிய கண்ணோட்டம் உடைய பெருமானே, உன் அற்புதக் கூத்தைக்காண அளவிறந்த கண்கள் வேண்டும்; எங்கள் சுருங்கிய ஒளியுடைய கண்கள் காணும்படி எளிமையாக நடித்தருளவேண்டும் எனத் திருமால் முதலியோர் துதித்து வேண்டினர்; இறைவன் அவர்களுக்கு விளங்கும்படி திருநடனத்தைக்காட்டிச் சிங்க இருக்கையில் வீற்றிருந்தனர்.

கவரி யேந்தின ரரம்பையர் சனகருங் காசிபன் முதலோரும்
பவரி ருஞ்சடைக் கும்பனும் புயங்கனும் பங்கயத் தயன்மாலும்
எவரு மேபிராற் பரவினர் திருப்பலாண் டிசைத்தனர் திசைத்தேவர்
உவரி போற்பரந் தார்த்தனர் தூர்த்தன ரும்பர்மா மலர்மாரி. 21

பொ - ரை: அரம்பையர் கவரி இரட்டினர்; சனகர், காசிபர், அகத்தியர், வாசுகி, அயன், மால் எவரும் பிரானைப் பரவித் திருப்பல்லாண்டு இசைத்தனர்; எண்திசைத் தேவர் கடல்போல் ஆரவாரஞ் செய்தனர்; தேவர்கள் மலர்மாரி சொரிந்தனர்.

### வேறு

ஈசனை யயனு மாலு மிமையவர் முனிவர் யாரும்
பூசனை புரிந்தார் மன்னோ புடார்ச்சுன புரத்து மூன்று
யோசனை யிடமும் வீரி காத்திட வுயர்பொற் கோயில்
வாசமாம் விசையை காப்ப மணிமதில் வடுகன் காப்ப. 22

பொ - ரை: புடார்ச்சுனபுரத்து மூன்று யோசனை எல்லையைக் காளி காவல் புரிய, செம்பொற் கோயிலைத் துர்க்கை காப்ப, அழகிய மதில்களை ஐயனர் காக்க, தேவரும் முனிவரும் ஈசனை அருச்சனை புரிந்தனர்.

அம்பிகை யிசைமா தங்கி யாதியம் பரனே கூத்தன்
பைம்பணி யரசு மம்பொற் பாதல வாசல் பேரான்
கும்பனே பொதியில் வாசன் குரவர்மால் பிரம னுவான்
உம்பர்துந் துபியி னேசை யொலியருத் தெய்வ மன்றம். 23

பொ - ரை: சிவபிரான் இயற்றும் திருக்கூத்திற்கு உமையே இசைபாடும் பெண்; வாசுகி பிலத்துவார வாயில் காவலன்; அகத்தியர் சபையில் வாழ்பவர்; திருமாலும் பிரமனும் மூத்தோர்; தேவர் இயக்கும் துந்துபியின் ஓசை நீங்காதது மன்றம்.

சயிலநீர்த் திருக்குற் றுலந் தன்னிலற் புதங்கண் டாழித்
துயிலைநீத் திருக்கு மாயன் றென்மைதா னுணரான் போலக்
கயிலைநீத் திருக்கு மாறு கழறெனக் கருதிக் கேட்ப
மயிலைநீத் தரியாப் பாகன் மணிநகை துளக்கிச் சொல்வான். 24

பொ-ரை: மலையின் தன்மைத்தாய திருக்குற்றாலத்தின் வியக்கத்தக்கநிலையைக் கண்டு கடலில் துயிலுதலை விடுத்து வந்துள்ள திருமால் உணராதவனைப்போல, இறைவனைத் திருக்கயிலையை நீங்கி இங்கு இருக்குமாறு என்னை? என வேண்ட, உமையைப் பிரியாத முதல்வன் புன்னகை புரிந்து கூறுகின்றான்.

மாதுமை யிடத்து மீன்ற மழகளி றிடத்தும் வைவேற்
காதல னிடத்தும் வெள்ளிக் கயிலையி னிடத்து மிக்கான்
ஆதரந் திரிகூ டத்தி லமைந்தன முகுந்தா விந்த
வேதரா சியத்தைக் கூறேம் முனக்கினி விளம்பக் கேண்மோ. 25

பொ - ரை: உமையிடத்தும், விநாயகனிடத்தும், முருகனிடத்தும் கயிலையினிடத்தும் வைத்துள்ள விருப்பத்தினும் அதிக விருப்பம் திரிகூடத்தில் வைத்துள்ளோம்; இது வேதத்தினுல் உணர்த்தப்படும் இந்த இரகசியத்தை யாருக்கும் உரையோம்; இப்போது முகுந்தனே, உனக்குக் கூறுகின்றோம், கேள்.

அண்டமு மகண்டம் யாவு மழிவுற வொடுக்கி நாளும்
வண்டணி துளவத் தாரோய் வரன்முறை வகுக்கு நாளும்
ஒண்டொடிப் பரையும் யாமு முறையிட மாத லாலே
தண்டலி னுலகுக் கெல்லாந் தாயகந் திருக்குற் றாலம். 26

பொ - ரை: துளவமாலை அணிந்தோனே, அண்டமும் எல்லாப்பொருள்களையும் ஒடுக்கி மீள முறைப்படி அவற்றை ஆக்கும் நாள்வரை பராசத்தியும் யாவும் இடங்கொண்டு தங்கும் கெடாத இடம் திருக்குற்றாலம்; ஆதலால், இது உலகுக்கெல்லாம் ஆதாரமாவது.

பாரினுக் கநாதி யானுற் பாரொடு ககனந் தாவு
நீரினுக் கரிய தானு னெருப்பொடு சண்ட வாயுப்
போரினைக் கடந்த தானுற் புரையிலா வெமக்கு மெம்பா
ணரியாம் பரைக்குந் தான நன்னக ரல்லா லுண்டோ. 27

பொ - ரை : மண்ணிற்கு முற்பட்டது; நிலனும் வானும் தாவிச்செல்லும் ஊழி நீருக்கும் அழிக்க ஒண்ணுதது; நெருப்பாலும், காற்ருலும் அழியாதது; குறையிலாத எமக்கும் நம்மை நீங்காத பராசத்திக்கும் இடமாவது திருக் குற்ருலமே ஆகும்.

ஆதலா லூழி தோறு மானந்த நடஞ்செய் தானம்
போதருஞ் செயல்கண் மூன்றும் புரிதரு மூலட் டானம்
காதலா யுறையுந் தானங் கயிலைபோற் சிவலோ கம்போல்
ஈதலாற் பிறிதொன் றில்லை யிதுரக சியமே யாமால். 28

பொ-ரை : ஆதலால் ஊழிதோறும் பேரின்பநடனம் செய்யும் இடமாகவும் பண்டுதொட்டு இயற்றப்பெற்றுவரும் முத்தொழிலும் நிகழும் மூலத்தானமும், யாம் விருப்போடு தங்கும் இடம் திருக்கயிலையும் சிவலோகமும்போற் சிறந்த இடம் இத்திருக்குற்ருலத்தலமே ஆகும்.

புலந்தரு தலங்கட் கெல்லாம் புடார்ச்சுன புரமே மேலாம்
நலந்தரு தலமா மென்று நவிற்றலுங் கமலக் கண்ணன்
நிலந்தனிற் காசி யாதி நிகழ்த்திய தலங்கள் யாவும்
பலந்தரா துளவோ வென்னப் பகர்தலும் பரம மூர்த்தி. 29

பொ - ரை : மெய்யுணர்வு தரும் தலங்களுள் புடார்ச்சுனபுரமே மேலான நன்மையைத்தரும் தலம்; என்ருர்; இதைக்கேட்டு மாயோன், உலகில் காசி முதலாகக் கூறப்படும் புண்ணியத் தலங்கள் பயன்தராவோ என; இறைவன் கூறுகின்ருன்.

அருணைகே தாரந் தில்லை காளத்தி யாரூர் காசி
திருமறைக் காடு காஞ்சி செங்காடு வெண்கா டாதி
ஒருதலத் தோரோர் கூறே யுறைகுவந் திரிகூ டத்து
நிருமல வடிவாய் ஞானக் கலையெலா நிரம்பா நிற்பேம். 30

பொ - ரை : திருவருணை முதலிய பிற புண்ணியத் தலங்களில் நாம் நமது ஒவ்வொரு கூற்ருல் (அமிசத்தால்) விளங்கியிருப்போம்; திரிகூடத்தில் தூய அறிவின்பவடிவாய் நம் எல்லாக் கலைகளாலும் நிரம்பி விளங்குவோம்.

மெய்வளர் நதிகட் கெல்லாஞ் சித்திர நதிவி சேடம்
சைவமா தலங்கட் கெல்லாஞ் சண்பகா ரணிய மேலாம்
தெய்வமுத் தலைவெற் பெல்லாஞ் சிவலிங்க வடிவ மெந்தக்
கொய்மலர்த் தருவுந் தேவர் குறும்பலா வேத மூலம். 31

பொ - ரை : மெய்யுணர்வை வளர்க்கும் புண்ணிய நதிகளுள் சித்திரநதி சிறந்தது; சிவதலங்கள் எல்லாவற்றுள்ளும் சண்பக வனத்தையுடைய திருக்குற்ருலம் சிறப்புடைத்து; இங்குத் தெய்வத் தன்மையுடைய முச்சிகர மலை முழுவதும் சிவலிங்க வடிவமே; எல்லா மரங்களும் தேவர்களின் வடிவு; திருக்குறும்பலா வேதமூலமாகிய பிரணவமாகும்.

### வேறு

ஒருதலத்தி லாயிரம்யாண் டுதவுபல னோராண்டி லுதவுங் காசி
அருணைதரு மோராறு திங்களின்முத் திங்களிலே யருளு மாரூர்
இருமதியிற் கேதார மொருமதியிற் கோகருண மேழு நாளில்
திருவளர்நெல் வேலிதரு மொருநாளிற் கொடுத்தருளுந் திருக்குற்றாலம். 32

பொ - ரை: பிற தலங்கள் ஆயிரம் யாண்டு செய்யும் தவப்பயனைக் காசி ஓராண்டுத் தவத்தால் எய்துவிக்கும்; திருஅருணை அப்பயனை ஆறு திங்களில் தரும்; திருவாரூர் மூன்று திங்களில் தரும்; திருக்கேதாரம் இரண்டு திங்களில் தரும்; திருக்கோகருணம் ஒரு மாதத்தில் தரும்; திருநெல்வேலி ஏழு நாட்களில் தரும்; திருக்குற்றாலம் அப்பயனை ஒரு நாளில் எய்துவிக்கும்.

பொங்கேரு சுருதிபயில் குற்சரகோத் திரத்திலொரு புதல்வன் மேனாள்
இங்கேறி வடவருவி படிந்தொருநாட் பலனளிப்ப வீன்ற தாதை
பங்கேறிப் பவர்க்கமெலாங் கடந்தேறிச் சுவர்க்கமெனும் பதம்பெற் றானால்
சங்கேறு தடம்புயத்தாய் சித்திரமா நதிப்பெருமை சாற்ற லாமே. 33

பொ - ரை: உயர்ந்த வேதம் பயிலும் குற்சரகோத்திரத்துத் தோன்றிய ஒருவன் இங்கு முன் ஒரு நாள் வந்து வடவருவியில் முழுகித் தன் ஒரு நாள் தவப்பயனை தன் தந்தைக்குக் கொடுக்க, அத்தந்தை பாவத்தைக் கடந்து நரகத்தைக் கடந்து ஏறிச் சுவர்க்கம் பெற்றான்; சங்கு ஏந்திய புயமுடையோனே, சித்திரநதிப் பெருமை சொல்லொணாதது.

பூவுலகில் வாழ்ந்திருக்குங் காலமெலாம் பாதகமே புரிந்தா ரேனும்
பாவனையா லச்சத்தால் விளையாட்டா லெங்கிருந்தும் பரவி யோர்கால்
தேவரக சியமான திரிகூடந் திசைநோக்கிச் செங்கை கூப்பி
நாவினா லுரைப்பாரேல் வினையொழிந்து நமதுபத நண்ணு வாரே. 34

பொ - ரை: தம் வாழ்நாள் முழுதும் தீவினை பயின்றோரும் அச்சத்தினால் அல்லது விளையாட்டால் தம் நினைவு அளவில் எங்கிருந்தும் திருக்குற்றாலத்தைப் போற்றி ஒருமுறை தேவர்களுமறியாத மேலான இரகசியமாகிய திரிகூடத்தைத் திசைநோக்கிக் கைகூப்பி நாவினால் உரைத்தால் அனைத்து வினைகளும் நீங்கப் பெற்றுச் சிவபதம் அடைவர்.

அப்பரிசு திசைநோக்கிப் பணிந்துபுட்ப
கந்தனெம தருகிற் சேர்ந்தான்
செப்பரிது நெடுமாலே திரிகூடத்
தலமகிமை செகமே லெங்கும்
இப்பதிக்கோ ருவமையிலை யென்பவர்மன்
பதைதக்கிறையா யிமையோ ராவர்
ஒப்புளதென் றுரைப்பவர்கள் கருப்பம்வீழ்த்
தினர்பாவத் துறுவா ரன்றே. 35

பொ - ரை: அவ்வாறு புட்பகந்தன் என்பான் எம்மைத் திசைநோக்கிப் பணிந்து நமது சாமீபபதம் பெற்றான்; திரிகூடத்தின் பெருமை உரையால் அளவிடுதல் அரிது; உலகத்தில் இதற்கு இணையான தலம் இல்லை என்பார் அரசராகிப் பின் தேவர் ஆவர்; அதற்குச் சமம் உண்டு என்பார் மகளிர் கருச் சிதைத்த பாவத்தைப் பெறுவர்.

ஒப்பரிய திரிகூட வுயர்தலத்துக் கொருதலத்தை யுவமை யாகச்
செப்புவோ ரித்தலத்துச் சிவனின்மா லியமிகழ்ச்சி செய்யுந் தீயோர்
இப்பதியி லென்று மெமைப் பூசிப்பார்க் கிடர்புரிவோர் யாவ ரேனும்
தப்பிலா தவனிதனிற் புலையராய்ப் பிறந்துழலத் தகுவா ரன்றே. 36

பொ - ரை: திரிகூடத்துக்கு ஒப்பாக ஒரு தலம் உண்டு என்போரும், திருக்குற்றலத்தில் சிவ நின்மாலியத்தை இகழ்வோரும், இங்கு எமை வழிபடு வோர்க்கு இடர் விளைப்பவரும் எவரேனும் தவறாது பூவுலகில் புலைத்தொழில் உடையராய்ப் பிறந்து வருந்தத்தக்கவரே.

விரிவாக முத்தொழிலும் புரிந்துநா மினிதிருக்கும் விமலத் தானம்
பரிவாகக் காண்பார்கள் பணிவார்கள் மகிமையினைப் பகர்தற் பாற்றே
உரியாரா யெத்தலத்தி லுறைவாருந் துயிலெழுகா லொருகா லேனும்
திரிகூடங் குற்றால மெனநாவி லுரைத்தெழுவார் சிவமே சேர்வார். 37

பொ - ரை: முத்தொழிலையும் நிறைவாகப் புரிந்து நாம் சிறந்துவிளங்கும் தலம் தூய திருக்குற்றலம்; இதனைக் காண்பவர் பணிபவர் பெருமை அளக்க வொண்ணாதது; எங்கு உள்ளவரும் உறங்கி விழிக்கும்போது ஒருமுறை திரிகூடம் குற்றலம் எனச் சொல்லி விழிப்பரேல் அவர் சிவமாந்தன்மை பெறுவர்.

இன்னணமித் தலமகிமை யாதலாற்
கயிலைவிடுத் தெந்த நாளும்
நன்னகர்ச்சின் மயப்பொதுவி னண்ணுதும்யா
மெனப்பரமர் நவின்று ராகப்
பன்னகசா யியுமயனும் பணியரசுங்
குறுமுனியும் பணிவிட் டேகார்
பொன்னகரின் முரசொலியுஞ் சுரர்கணமும்
திருநடமும் பொலிவா மென்றும். 38

பொ - ரை: இஃது இதன்பெருமை யாதலால் யாம் திருக்கயிலையை விடுத்து எந்நாளும் இங்கு ஞானவடிவமாகிய சித்திரசபையில் உறைவோம் என முதல்வன் கூறினன்; சேஷசயனம் உடைய திருமால் அயன் வாசுகி அகத்தியர் என்போர் இங்குத் திருப்பணி செய்தலைவிடுத்து வேறிடம் செல்லார்; என்றும் திருநடமும் தேவதுந்துபி முழக்கும் தேவர்கணங்களும் இங்கு விளங்கும்.

ஆதியாம் பரையலது நன்னகர்ச்சிற் பொதுநடன மாருங் காணர்
காதலாற் சுரமுனிவர் பலகாலந் தவம்புரிந்து கண்ட வாற்றல்
போதினுன் முகன்மூலப் பரைபரம னியந்திரங்கள் பொறித்தா னன்றே
வாதரா யணன்முதலோர் சித்திரமன் றெனுநாமம் வழங்கி னரால். 39

பொ-ரை: திருக்குற்றாலத்துச் சிற்சபைநடனம் ஆதி பராசத்திக்கு அன்றிப் பிறர்க்குக் காட்சிப் படாதிருந்தது; அதனைக் காணும் பெருவிருப்பால் தேவர் முனிவர் பலகாலம் தவம் புரிந்து கண்டனர்; அதனால், தாமரைப் பூவில் தங்கும் அயன்மூலமான பராசத்தி இயந்திரத்தையும், சிவபிரான் இயந்திரத்தையும் அறிந்து எழுதி அமைத்தான்; வியாசர் முதலோர், அக்காரணம் பற்றி, சித்திர சபை என்னும் திருப்பெயரை இம் மன்றிற்கு இட்டார்கள்.

வேதநாத் தமிழ்முனிக்குத் திரிகூடக் கிரிமுதலா வெள்ளி வெற்பின்
பூதநா யகருரைத்த வகைகளெட்டுந் திருநடமும் புகன்றோ மென்று
சூதன்மா தவர்க்குரைப்பக் கண்டகசே தனன்சரிதை சுருதி வாக்கால்
நாதர்வா சுகிக்குரைத்த கதைவிரித்து நவிலுகென நவில்வ தானான். 40

பொ-ரை: வேதம் பயின்ற நாவையுடைய அகத்தியர்க்கு திரிகூடமலை முதலாகச் சிவபிரான் உணர்த்திய எண்வகைப் பெருமையும் திருநடமும் கூறினோம் எனச் சூதர் ஏனைய சிறந்த தவமுனிவர்க்குக்கூற, சிவபிரான் வாசுகிக்கு வேதம் உரைக்கும் திருவாயால் உரைத்தருளிய கண்டகசேதனன் கதையை விரித்து உரைத்தருள்க என மீண்டும் முனிவர் வேண்ட, சூதர் உரைக்கத் தொடங்கினர்.

திருநடனச் சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1653

# கண்டகசேதனச் சருக்கம்

கந்தநறுங் குழல்போலுங் கமழ்சோலை காசினிமான்
வந்தனஞ்செய் மருங்கேய்க்கும் வல்லிசா தங்களெலாம்
பைந்தனமே நிகராகப் பணைத்தோங்கிக் காரகிலும்
சந்தனமுங் குங்குமமுந் தண்பொதியுந் தென்பொதியம். 1

பொ-ரை: பணங்கமழும் சண்பகச் சோலை நிலமகளது நல்ல வாசனையுள்ள கூந்தல் போலும்; கொடிகள் எல்லாம் அவளது வளையும் இடையை ஒக்கும்; தென்பொதியம் அவளது பசிய கொங்கைபோலப் பருத்து நிமிர்ந்து கரிய அகில் சந்தனம் குங்குமம் என்னும் இவற்றது குளிர்ந்த கலவையை மேற்கொள்ளும்.

திரையமுதம் வானுடு சேர்ந்ததெனச் செந்தமிழ்த்தேன்
வரைநெடிய குடுமியினல் வான்கிழிப்ப வதன்வழியே
தரையின்மிசைப் போந்ததெனச் சாய்ந்தருவி பொன்கொழித்துக்
கரைகிழிப்பப் பொருதுகடற் கண்பொருந்தும் தண்பொருந்தம். 2

பொ-ரை: கடலிற்பிறந்த அமுதம் தேவர் உலகத்தைச் சேர்ந்துவிட்டது எனக் கருதி, பொதியமலை தன் சிகரத்தால் ஆகாயத்தைப் பிளவுபடுத்த அவ்வழியில் அவ்வமுதம் நிலத்திற்கு வந்தாற்போலத் தண்ணிய தாமிரவன்னி அருவியாக மலைச்சாரலில் ஒழுகிப் பொன்துகளைக்கொழித்து கரைகள் உடையும்படி அலைகளால் மோதி மீளவும் கடலின்கண் சென்று சேரும்.

கரகமா முனிகரத்துக் கமண்டலோ தகமாகிப்
பரமர்வாழ் முக்களவிற் பாவவிநா சம்புரிந்து
முரகரிக யேந்திரற்கு முத்திதருந் தடந்தாவி
விரகெறிந்த சித்தனுக்கா மெய்ச்சார்ந்தார் பதிசூழ்ந்து. 3

பொ-ரை: தாமிரவன்னி ஆறு அகத்திய முனிவர் கமண்டலத்தினின்றும் வரும் தீர்த்தமாகி, இறைவன் தங்கி முக்களாமரமுள்ள பாவவிநாசம் என்னும் பதியில் மக்கள் பாவத்தைப் போக்கி, திருமாலுக்குப் பணிசெய்த கயேந்திரன் என்னும் யானைக்கு முத்தி தந்த அத்திஆழ்நல்லூர் முத்தி தீர்த்தத்தை நிரப்பிக் கடந்து, நுண்ணறிவைச் செலுத்திய கருவூர்ச் சித்தருக்காகத் திருமேனி சாய்ந்த சிவபிரான் விளங்கும் திருப்புடைமருதூர் பதியைச் சூழ்ந்து செல்லும்.

விஞ்சுதச ரதராமன் பூசனைசெய் மெய்த்தலமும்
மஞ்சுதவழ் சிவசயிலம் வளர்வன்னி யீச்சுரமும்
செஞ்சவா லீச்சுரமுஞ் சேர்கடனை யொருபாங்காய்ப்
பஞ்சலிங்கம் பொலிந்தோங்கும் பச்சாறு மொருபாங்காய். 4

பொ-ரை: பரசுராமனின் மேம்பட்ட தசரதராமன் வழிபட்ட உண்மைத் தலமாகிய கடையமும், சிவசைலமும், ஆழ்வார்குறிச்சிக்குக் கிழக்கே உள்ள அக்கினிஈச்சுரமும் ஒழுங்குடைய வாலீச்சுரமும் உள்ள கடனாநதியை ஒரு பக்கத்திலும், ஐந்து லிங்கம் விளங்கும் துறைகளையுடைய பச்சாற்றை ஒருபக்கமாகவும் கொண்டுசெல்லும்.

வி-கு: வாலீச்சுரம் - வாலி வழிபட்டது; பிரமதேசத்திற்கும் வாகைக் குளத்திற்கும் நடுவில் உள்ளது. கடனாயாறு சிவசைலத்திற்றேன்றி வருவது. பஞ்சலிங்கம் - களக்காட்டுச்சத்தி வாகீசம், பத்தைக் குலசேகரநாதம், பத்மன்ஏரி நெல்லையப்பர், சிங்கிகுளத்துக் கயிலாயநாதர், தேவநல்லூர்ச் சோமநாதர் என்னும் ஐந்து மூர்த்திகள்.

சிவகயிலா யப்பெருமான் செங்கணான் பதிபிறவும்
சுவகயிலா யங்குளிக்குந் துறையாகி நிறையாழி
உவகையினர் திருப்பதிக ளொன்பதினு நம்பருறை
நவகயிலா யங்களினு நடைபெறுந்தாம் பிரபன்னி. 5

பொ-ரை: மற்றும் சிவதலங்களும் மாயோன் பதிகளும் பொருந்தி, நல்ல வகையில் மாதர்கூட்டம் நீராடும் துறைகளையுடையதாகித் திருமால் உறையும் ஒன்பது திருப்பதிகளிலும் சிவன் உறையும் ஒன்பது கயிலாயங்களிலும் நடை பெறுவது.

வி-கு: ஸ்ரீவைகுண்டம், திருத்தொலைவில்மங்கலம், வரகுணமங்கை, புளியன்குடி, பெருங்குளம், தென்திருப்பேரை, திருக்கோளூர், திருக்குருகூர், இரட்டைத்திருப்பதி என்பன நவதிருப்பதிகள்; பிரமதேசம், அரியநாயகிபுரம், சிந்துபூந்துறை, கீழைநத்தம், முரப்பநாடு, ஸ்ரீ வைகுண்டம், திருப்பேரை, சேர்ந்தமங்கலம், கங்கைகொண்டான் என்பன கயிலாயநாதர் உள்ள ஒன்பது கயிலாயங்கள்; செங்கணான் - திருமால். சுவகையில் என்பது எதுகை நோக்கி சுவகயில் என அகாரம் ஐகாரத்தோடு உறழ்ந்து வந்தது.

### வேறு

பொருனைமா நதிப்பூம் பாவை வலம்புரிக் குழிசி பூசி
உருமணி யரிசி வாரி யுலைப்பெய்து துவர்த்தீ மூட்டிக்
கரைகெழு சிறுசோ ருக்கிக் கனைதிரைப் பாவைக் கூட்டித்
திரண்மணற் சிற்றி லாடுஞ் சிந்துபூந் துறையின் பாங்கர். 6

பொ-ரை: பொருனை என்னும் சிறந்த ஆறாகிய பொலிவுடைய பெண் பிள்ளை வலம்புரியாகிய கலத்தைக் கழுவி, நிறம்பொருந்திய முத்தாகிய அரிசியை வாரி உலையிலிட்டு, பவளமாகிய நெருப்பை வளர்த்து, ஓசைபொருந்திய சிறு சோறு அட்டு, ஓசைசெய்யும் அலையாகிய குழந்தைக்கு உண்பித்துச் சிந்து பூந்துறையின் பக்கத்தில் மணற்சிற்றில் அமைத்து விளையாடுவாள்.

நிச்சநீர்ப் பொருனை யாறு நெடியபாற் கடலா வெற்பு
நச்சர வணையாச் சென்னி நனிவைத்துக் கடற்கா னீட்டிப்
பச்சைமால் கிடந்தா லன்ன பசியதண் பழனச் சாலி
இச்சைசேர் கமலச் செல்வி யிருக்கையாந் திருநெல் வேலி. 7

பொ - ரை: நித்தலும் நீர் ஓடும் தாமிரவன்னி நீண்ட பாற்கடலாக, பொதியமலை பாம்பு அணையாகத் தலையை அத்திசையில் வைத்துக் கடல்பக்கம் காலை நீட்டிப் பச்சைவண்ணத் திருமால் கிடந்தாற்போலப் பசுமையையுடைய வயல்களில் உள்ள நெற்பயிரும், அவர்தம் மார்பை இடங்கொண்ட திருமகள் இருக்கை திருநெல்வேலியும் ஆகும்.

கீற்றெளி மதிபோ னெற்றிக் கெவுரிகூ றலது மற்றைக்
கூற்றெளி கரந்தா லென்னக் குலவுபச் சுருவாய் மேனி
நீற்றெளி தனைப்போல் வேணி நிலவொளி தனைப்போற் கங்கை
ஆற்றெளி தனைப்போன் முத்தி னழகுவேய் நிழலில் வாழ்வோன். 8

பொ - ரை: வெண்பிறை போன்ற நெற்றியையுடைய அம்மை வடிவன்றித் தன் வடிவைக் காட்டாதது போல, நிறம் விளங்கும் பச்சை யொன்றேயாய், திருநீற்றெளிபோல் சடையும் நிலவொளிபோற் கங்கையும் ஆற்றின் பளிங்கு நிறம் போன்ற நிறம்வாய்ந்து முத்துக்களின் அழகு பொருந்திய மூங்கில் நிழலில் வாழ்வோன் முதல்வன்.

பரசமை யங்க ளென்னும் பகைதடிந் துலகிற் சைவத்
திரசமை யத்தை நாட்டுஞ் செயவிடைக் கொடிநின் றாட
முரசுகண் டுயிலா வாயின் முகிலினந் துயில்பொற் கோயில்
அரசுசெய் முக்கட் பெம்மா னுளுங்கீழ் வேம்ப நாட்டில். 9

பொ - ரை: பிற சமயங்களாகிய பகையை நீக்கி உலகில் நிலையான சிவநெறியை நிறுவும் வெற்றிக்கொடி அசைய, முரசுஒலி மாறுத வாயிலும் மேகம் படியும் பொற்கோயிலும் உள்ள சிவபிரான் ஆட்சி செய்த கீழைப்பாண்டி நாட்டில்.

இஞ்சிசூழ் சாலி வாடீச் சுரத்துநேர் குடபா லாகச்
செஞ்சியர் தஞ்சை நாடர் செழுந்தமிழ் வழுதி நாடர்
வஞ்சிய ரீழ நாட ரெனவரும் வணிக மாக்கள்
அஞ்சுதே யத்து ளார்க்கு மாவணப் பொதுவோர் மூதூர். 10

பொ - ரை: மதில் சூழ்ந்த திருநெல்வேலிக்கு நேர் மேற்கில் செஞ்சி தேயத்தார், சோழ நாடர், பாண்டி நாடர், சேர நாடர், ஈழ நாடர் எனவரும் ஐந்து நாட்டு வணிகர்களுக்கும் பொதுவாகிய கடைவீதியையுடைய ஒரு பழைய ஊர் உளது.

நீதிசேர் பதியில் வாழு நிறைந்தநால் வருணத் தாரில்
ஓதலா னினங்கள் காத்த லுழவுவா ணிபமே வேட்டல்
ஈதலே யாதி யாறு மியற்றுசீர் வைசியர் தம்மில்
காதல்வா ணிபங்கள் செய்யுங் கவிப்பர்தங் குலத்து வந்தோன். 11

பொ - ரை: அவ்வூரில் வாழ்ந்த நான்கு வருணத்தவரில், ஓதல், பசுக் காத்தல், உழவு, வாணிபம், வேள்வி செய்தல், ஈதல் என்னும் ஆறு தொழிலையும் செய்யும் வைசியரில் கவிப்பர் என்னும் பிரிவில் தோன்றிய ஒருவன் உளனுனன்.

வி - கு: வசியர் என்றும் பாடம். மூவகை வணிகர் பெயரும் இயல்பும் பின்வரும் செய்யுளால் அறிக.

இப்பர் கவிப்பர் பெருங்குடி யாளரென் (று)
ஒப்புடைய மூவர் உரைக்குங்கால் - தப்பில்
மிதியடியே ருணைமிசை நோக்கினர்கள் காணு
நிதியுடையர் என்பர் நிலத்து.

ஈட்டுதல் பகுத்தல் யாவு மிறுவதிற் சிறிதஞ் சாமை
காட்டிய தனிமை யாற்றல் காலத்தோ டொழுகல் கோபம்
ஓட்டுத லிடரிற் றேற லுறுவது தெரித லென்னும்
வாட்டமில் குணங்க ளெட்டு மருவுமா தத்தன் மைந்தன். 12

பொ - ரை: பொருள்களைச் சேர்த்தல், பிரித்துக்கொடுத்தல், அழிவுவரும் போது சிறிதும் அஞ்சாமை, ஒப்பின்றித் தோன்றும் செயல்திறன், காலத்திற்கு ஏற்ப நடத்தல், கோபத்தை விரைவில் தணித்துக் கொள்ளுதல், துன்பம் வந்த போதும் தெளிவாக இருத்தல், பின்வருவதை முன்கூட்டி உணர்தல் என்னும் எட்டும் உடைய மாதத்தன் என்பான் மகன் அவன்.

நகரமேற் பொருள்கள் யாவு நாட்டின்மேற் பொள்கள் யாவும்
சிகரமேற் பொருள்கள் யாவுந் தில்லமேற் பொருள்கள் யாவும்
மகரநீர்ப் பொருள்கள் யாவு மலிதலால் வணிக மாக்கள்
பகர்கரு கூலம் போலும் பரதவன் பண்ட சாலை. 13

பொ - ரை: அவ்வணிகர் தலைவனது பொருள் வைப்பிடம் நகரத்து ஆக்கப் பொருள்களும், நாட்டின் விளைபொருள்களும், மலைபடுபொருள்களும், முல்லை நிலப்பொருள்களும், கடல்படுபொருள்களும் நிரம்பி இருந்தமையால் வணிகர்களது பொக்கிஷம் போல விளங்கிற்று.

வேறு

துகிரும் பொன்னுங் கருப்புர தூளமும்
அகிலுஞ் சாந்தும் வயிரமு மாரமும்
முகிலுஞ் சூழ்மனை முன்றிலின் மாதரார்
நகிலு நெஞ்சு நடம்புரி தோளினன். 14

பொ - ரை: பவளமும், பொன்னும், கருப்புரத்தூளும், அகிலும், சந்தனமும், வைரமும், முத்தும், மேகம் தங்கும் மனை முன்றிலில் உள்ள மாதர்கள் நெஞ்சும் கொங்கையும் தவழும் தோள்களை உடையவன் அவன்.

ஈறி லாநிதி யெய்தின னுயினும்
வீறி நாளும் பொருள்கவர் வேட்கையான்
சீறி யாரு மிகழச் சிறுவிலை
கூறி நாடொறும் விற்குங் கொடுமையான். 15

பொ - ரை: முடிவில்லாத பெருஞ்செல்வம் உடையவனுயினும் மேம்பட்டு என்றும் பிறர்பொருளைக் கவரும் பேராசை உடையவன்; பிறர் இகழும்படி விலையைக் குறைத்துக்கூறி நாடோறும் தன் விற்பனையைப் பெருக்கிக்கொள்ளும் கொடியவன்.

கண்ட மாற்றிக் கருப்புரஞ் சந்தனத்
தண்ட மாற்றித்தண் டேன்கலப் பாற்றியும்
கொண்ட மாற்றுக்கு நான்மடி கூறியும்
பண்ட மாற்றிப் படைக்கும் பொருண்மையான். 16

பொ - ரை: சருக்கரைக் கட்டியைச் செய்தும், கருப்புரம், சந்தனக்கட்டை விற்றும், வாசனைக்கலவை செய்தும், தான்கொண்ட பொருளின் விலையைப் போல நான்கு மடங்கு தன்பொருளுக்கு விலைகூறியும் பண்டமாற்றுதல் செய்து பொருளை ஈட்டுபவன்.

பேய்ப சிக்குப் பெருவிருந் தாமுடல்
நோய்ப சிக்குற நுங்குவ தோர்கிலான்
சேய்ப சிக்கவுஞ் செல்விருந் தேங்கவும்
தாய்ப சிக்கவு முண்ணுந் தறுகணுன். 17

பொ - ரை: இறுதியில் பேய்பசிக்குப் பெருவிருந்தாகும் இவ்வுடம்பின் பசிநோய்க்குச் சிறிது உண்பதை அறம் எனச் சிந்தியாது, குழந்தைகள் பசித்து இருக்கவும், தன்பால் சென்றவிருந்து உணவுகிடைக்காமல் வருந்தவும், தாய் பசிக்கவும் தானே உண்ணும் வன்னெஞ்சம் உடையவன்.

மூவர்க் காகிலு முன்னவர்க் காகிலும்
தேவர்க் காகிலுஞ் சென்னி வணங்கலான்
கோவர்க் காகக் கொடிறுடைப் பார்க்கலால்
யாவர்க் காகிலு மீர்ங்கை விதிர்க்கலான். 18

பொ-ரை: இல்லறம் அல்லாத ஏனை மூன்று நிலையில் உள்ளார்க்காயினும், அந்தணர்க்காயினும் தேவர்க்காயினும் தலைவணங்கிக்கொடான்; கொடுங்கோன்மையுடைய அரசர்க்காகவும், தன் கன்னத்தைப் பிளக்கவல்ல வலியர்க்காகவும் அன்றிப் பிறர் யார்க்கும் ஈரம் பொருந்திய கையினையும் அசைக்கமாட்டான்.

தாப முன்னித் தனம்பல தேடவெத்
தீப மெங்குஞ் சிலசரக் கேற்றுவான்
யூப மன்ன வுடற்கல மீதினும்
பாப மென்னும் பலசரக் கேற்றினுன். 19

பொ - ரை: தன் பேராசையாகிய தீயைத் தணிக்கவேண்டிப் பலவகைச் செல்வங்களைத்தேடிப்பெற எல்லாத்தீவுகளுக்கும் சிற்சில சரக்குகளை மரக்கலங்களில் ஏற்றி அனுப்புவான்; பாய்மரம்போன்ற தன் உடம்பாகிய மரக்கலத்திலும் பாவம் எனப்படும் பலவகைச் சரக்குகளை மிக ஏற்றினுன்.

விண்ட காணியிற் கோடி விளைக்கினும்
கொண்ட கோடியிற் காணி கொடுக்கலான்
மண்ட வான்பொருண் மண்ணிடை தாழ்க்கவே
கண்ட சேதனன் கண்டக சேதனன். 20

பொ - ரை: சொல்லப்பட்ட காணிநிலத்தில் கோடி எனத்தக்க பெரு விளைவைச் செய்யினும் அதனால், தான்பெற்ற கோடி அளவில் சிறு அளவும் பிறருக்குக் கொடான்; நிரம்பும் அந்த உயர்பொருள் எல்லாம் மண்ணிடைப் புதைத்து வைத்தலையே அறிந்த அறிவற்றவன் கண்டகசேதனன் என்பான்.

வேறு

நாற்றிசைப் பண்ட மூன்று திசையினு நடாத்தித் தானோர்
மேற்றிசைக் கொடுபோய் விற்பான் விடைமிசைத் திரளாக் கொண்டு
சேற்றிசைப் பழனஞ் சூழ்ந்த சித்திர நதியாங் கங்கை
யாற்றிசைக் கீழ்பாற் சென்ரு னருக்கனு மேல்பாற் சென்றுன். 21

பொ - ரை: நான்கு திசைகளிலுமிருந்து ஈட்டிய பொருள்களை ஏனைமூன்று திசைகளிலும் அனுப்பிவிட்டுந் தான் மேற்குத்திசையிற்சென்று விற்றலைக்கருதி பொதிமாடுகளின்மேல் மூட்டைகளாகப் பொருள்களை ஏற்றிக்கோண்டு சேறு செய்முழக்கம் உள்ள வயல் சூழ்ந்த சித்திரகங்கையாற்றின் கீழ்பால் சென்றுன்; அப்போது ஞாயிறு மறைந்தது.

ஆக்கிய பொருளுக் கேற்ப வைப்பசி விழுவென் றுங்கே
வாக்கியம் விதிப்பான் போல மறுதினத் துதித்தான் வெய்யோன்
ஊக்கினும் வறியோர் கூழுக் குப்பரி தாகுஞ் செல்வர்
பாக்கியக் கலத்தில் வீழும் பால்பழம் பஞ்ச தாரை. 22

பொ - ரை: தொகுந்துவைத்த பொருளுக்கு ஏற்ப ஐப்பசி விழு இன்று எனப் பஞ்சாங்கம் சொல்பவன போல ஞாயிறு கிழக்கே தோன்றினன்; வறியவர் முயலினும் கூழுக்கு உப்புகிடைத்தல் அரிது; செல்வர் ஏந்தும் பொற்கலத்தில் முயற்சியின்றியும் பாலும் பழமும் சீனியும் தாமே வந்து விழும்.

வி - கு: பஞ்சதாரை—ரசமுடைப் பொருள்; சீனி.

வற்கரைத் தென்பா லாருங் கங்கையில் வடபா லாரும்
கற்கரை மலைநாட் டாருங் கடற்கரைச் சேது வாரும்
அற்கரை யுதய காலத் தறமெனுங் கரும்பிற் சேர்த்த
சற்கரை வட்டா ந் தெய்வச் சண்பகா ரணியஞ் சார்ந்தார். 23

பொ - ரை: வலிய எல்லையையுடைய தெற்குத் திசையில் உள்ளாரும், கங்கையையுடைய வட தேயத்தாரும், கல்லை எல்லையாகவுடைய மலை நாட்டாரும், கடல் எல்லையையுடைய சேதுவில் வாழ்வாரும், இருள் கரைகின்ற விடியலில் அறம் எனும் கரும்பிலிருந்து தெளித்துக்கொண்ட சருக்கரைக்கட்டி போன்ற தெய்வத்தன்மை விளங்கும் சண்பகவனத்தை வந்து அடைந்தார்கள்.

அந்தணர் கவிப்பர் செங்கோ லரசர்வே ளாள ரன்பால்
வந்தவ ருயர்ந்தோர் தாழ்ந்தோர் மற்றைமா னிடரே யன்றி
முந்தைவா னுலகத் தாரு மொய்த்தனர் திரிகூ டத்துச்
சிந்துமா மழைநாள் வாரி திசைதொறும் பரந்தா லென்ன. 24

பொ-ரை: நான்கு வருணத்தாரும், அன்பால் வந்த பிற உயர்வு தாழ்வு உடையோர், மற்றையோர் அன்றி முற்பட்ட தேவர்களும் திரிகூடத்து வந்து நெருங்கினர்; மழைக்காலத்து வெள்ளம் எங்கும் பரவினுற் போல.

சிவமது கங்கைத் தானஞ் சேர்ந்தனர் வானேர் சித்தர்
மவுனர்செண் பகத்த டாகம் வதிந்தனர் புவியின் மாந்தர்
தவவட வருவித் தானஞ் சார்ந்தன ரதனு லவ்வூர்
புவனமந் தரமு மேலாஞ் சுவர்க்கமும் பொருவிற் றன்றே. 25

பொ-ரை: வானவரும் சித்தர்களும் சிவ மதுகங்கையிடத்தை அடைந்தனர்; யோகிகள் சண்பகத்தடாகத்தில் தங்கினர்; உலகர்தவம்பெருக்கும் வடவருவியைச் சார்ந்தனர்; அதனுல், திருக்குற்ருலம் நிலம், புவலோகம் என்னும் அந்தரம், சுவர்க்கம் என்னும் மூவுலகையும் ஒத்தது.

வி-கு: பூ: புவ: சுவ: என்னும் வியாகிருதிகளின் பொருளைக் கருதுக.

சிந்துநீர்த் தரங்கந் தோய்வார் திரைக்கடன் முகுந்த னேர்வார்
உந்திநீர்ச் சுழிபோய் மீள்வா ருந்தியி லுதித்தோ னெப்பார்
இந்திர தனுவிற் சேர்வா ரிமையவர் தலைவ னேய்ப்பார்
மந்திரத் தருவி தோய்வார் வரநதி தரித்தோன் போல்வார். 26

பொ-ரை: சிதறும் நீர்த்திவலைகளையுடைய அலைகளில் மூழ்குவார் கடலில் உறங்கும் திருமாலை ஒத்தனர்; ஆற்றுச் சுழியிற் சென்று மீள்பவர் மாயோன் உந்தியிற்ருேன்றிய நான்முகனை ஒத்தனர்; இந்திரவில் தோன்றும் இடத்தில் மூழ்குவோர் இந்திரனை ஒத்தனர்; மந்திரம் சொல்லி மேலிருந்து விழும் அருவியில் முழுகுவோர் கங்கையை முடியிற்கொண்ட இறைவனை ஒத்தனர்.

நதிபல துறைதோ ருடி நன்னெறி நியதி யாற்றி
முதியவே தியர்க்குத் தூசூண் முழுமணிக் கடகம் பூமி
நிதிபசு விளைவு கன்னி நித்திலம் புரவி யானை
துதிபல தானஞ் செய்தார் சுவர்க்காதி போகம் வேட்டார். 27

பொ-ரை: சுவர்க்கம் முதலிய மேலுலக வாழ்வை விரும்பினவர் சித்திர நதியில் பலதுறைகளில் முழுகி நூல்களில் விதித்தபடி நித்தியகடன்களை முடித்து; உயர்ந்த அந்தணர்க்கு உடை, ஊண், முழுமணி பதித்த கங்கணம், நிலம், பொருள், பசு, நெல் முதலிய தானியங்கள், கன்னியர், முத்து, குதிரை, யானை முதலாகப் புகழப்படும் பல தானங்களைச் செய்தனர்.

எம்பிரா னிமயச் செல்வி யானைமா முகன்வேற் கந்தன்
அம்புயக் கண்ண னாதி தேவரா லயங்கள் பூசை
நம்பன்மெய் யடியார் பூசை நலம்பெறப் புரிந்தார் மன்னோ
வெம்புவிப் பிறவி வேண்டார் மேற்பதம் வேட்டா ரெல்லாம். 28

பொ - ரை : கொடிய பிறவியை இவ்வுலகில் மீளவும் விரும்பாது மேலான பதவிகளை விரும்பினோர் சிவபிரான், உமையம்மை, விநாயகர், முருகன், திருமால் முதலியவர் திருக்கோயிற்பூசையினையும், சிவனடியார் பூசையினையும் உறுதி பெறும் முறையில் விரும்பி மேற்கொண்டனர்.

கொண்டனர் கொள்வோர்க் கெல்லாங் கொடுவிலை கூறி மாறிப்
பண்டமார் பொதியெ லாம்பொற் பலபொதி யாகச் செய்தான்
கண்டக சேத னப்பேர்க் கயவன்கோள் காண வஞ்சி
மண்டுற வொளித்தான் போல வரைதனின் மறைந்தான் வெய்யோன்.

பொ - ரை: தன்னிடம் பொருளை வாங்கினோர் வாங்குவோர் யார்க்கும் மிகுவிலை கூறிப் பண்டங்கள் அமைந்த பொதிகளை பொற்குவை உள்ள பொதி களாகச் செய்த கண்டகசேதனனாகிய கீழோனது கொள்கையைக் காண அஞ்சி கடலில் ஒளித்தவன் போல மேலை மலைச்சாரலின்வழி மறைந்தது ஞாயிறு.

அற்றைநாட் கங்குல் வில்லா வரும்பண்ட மிருந்த வெல்லாம்
பிற்றைநாட் கொடிதா விற்றுப் பிறர்க்கணு வீயான் வைகி
மற்றைநாள் விடியா முன்னம் வளம்பதி சேர்ந்தான் யார்க்கும்
உற்றநா ளுதவாச் செல்வ முவரிநீர்ப் பெருக்கம் போல்வான். 30

பொ - ரை : அன்றிரவு விற்காது தங்கிய பொருள்களையெல்லாம் மறுநாள் மிகுவிலை கூறி விற்றுப் பிறர்க்குச் சிறிதும் ஈதல் இன்றித் தங்கி அடுத்தநாள் விடிவதற்கு முன் தன் ஊர்க்குச் சென்றான்; துன்பம் வந்த காலத்து ஒருவர்க்கும் உதவாத செல்வத்தை உவர்க்கடல் கொண்டுள்ள நீரைப்போலக் கொண்டுள்ள பாதகன்.

கோடிநாட் டவஞ்செய் தார்க்குங் குறுகொணாச் சங்க வீதி
நாடினா னல்லன் றெய்வ நதிக்கரை யிருந்து மந்நீர்
ஆடினா னல்லன் றன்னூ ரணுகினன் பொருளே பின்னும்
தேடினா னிருந்தான் மன்னோ திரவியங் காத்த பேய்போல். 31

பொ - ரை : பலநாள் தவஞ்செய்தார்க்கும் அணையவொண்ணாத சங்க வீதியாகிய இறைவன் பிராகாரத்தை நாடவில்லை; சித்திரகங்கைக் கரையில் இருந்தும் அதில் முழுகவில்லை; தன் ஊர் சென்று மேலும் பொருளை வருந்தித் தேடினான்; பொருளைக்காக்கும் அச்சந்தரும் பூதம்போல.

### வேறு

நாட்கடொறு மூன்சுவைத்து நனிவாயிற் பற்குறுகத்
தாட்கடிய நடைகுறுகித் தளர்ந்துபோ யுடல்குறுக
வாட்கடியன் பாம்புடல்போ லாயுகமுங் குறுகினுன்
தோட்கடிய தண்டேந்தித் தூதுவருங் குறுகினுர். 32

பொ-ரை: நாள்தொறும் ஊன் உண்டு பல் தேய்ந்து காலால் நடக்கும் விரைந்த நடைதளர்ந்து உடலும் வளைந்து நாள்சென்ற ஆட்கடியனுகிய பாம்பு உடல்போலாகி ஆயுளின் எல்லையை அடைந்தான்; தோள்களின் மேல் கொடிய தண்டுகளை ஏந்தி எமதூதர் வந்தனர்.

தாளாண்மைத் தனம்படைத்தாய் தானமே கொடுத்தறியாய்
கோளாண்மைத் துடைப்பம்போற் குவித்தனையிங் கார்க்காகக்
கேளாண்மைத் தருமமிலாக் கெடுமதியோய் வாவென்றுர்
நாளாண்மைக் கொடுவாளா லுயிர்குறைக்கு நமன்றூதர். 33

பொ-ரை: முயற்சியால் பொருள் சேர்த்தாய், தான தருமம் செய்து அறியாய், குப்பையைக்கொள்ளுதல் வல்ல விளக்குமாறுபோலப் பொருளை யாருக்காகச் சேர்த்தாய்? நட்பும் வீரமும் அறமும் இல்லாத கெடுக்கும் அறிவுடையோனே! நம் பின் வருக! என்றுர்; நாளாகிய வீரங்குறிக்கும் வளைந்த வாளால் ஆயுளைக் குறைத்து வரும் காலதூதர்.

அந்தகன்றூ துவரலைப்ப வாவிசோர்ந் தலமருவான்
புந்திகொடி துறத்தேடும் பொருள்களையு மப்பொருள்கள்
வந்துதன துயிர்க்குதவா வாதனையுந் தனக்குவந்த
நிந்தனையுங் குறித்தெண்ணி நினையாதெல் லாநினைவான். 34

பொ-ரை: நமன் தூதர் இங்ஙனம் வருத்த உயிர்சோர்வடைந்து கலங்குபவன் கொடிய நெஞ்சங்கொண்டு ஈட்டிய பொருட்குவியலையும் அவை சிறிதும் இப்போது உதவாத நிலையினையும் அதனுல் தனக்கு வந்த துன்பத்தையும் பழியினையும் சிந்தித்து முன் நினையாத நினைவுகளை உடையன் ஆனுன்.

### வேறு

கொடுமையாப் பொருளைத் தேடிக் குவித்தனன் கவித்த கங்கைச்
சடிலநா யகற்கென் றுலுந் தந்திமா முகற்கென் றுலும்
வடிவுடை யுமைக்கென் றுலும் வாகைவே லவற்கென் றுலும்
நெடியமா தவற்கென் றுலுந் திருப்பணி நிறைத்தே னல்லேன். 35

பொ-ரை: பிறருக்குக் கொடுமைசெய்து பொருளைத் தேடிச் சேர்த்து விட்டேன்; அதனைச் சிவபிரான், உமையம்மை, மூத்தபிள்ளையார், இளைய பிள்ளையார், திருமால் என்பார் யாவர் திருப்பணிக்கும் கொடுத்து உதவினேன் அல்லேன்.

நசையறு வேனிற் கால நடைசாலே தண்ணீர்ப் பந்தர்
திசைதொறும் வைத்தே னல்லேன் செருப்புநற் குடையு மேலோர்க்
கசைவறக் கொடுத்தே னல்லே னன்னசத் திரங்கள் கட்டி
மிசைபவர்க் கெல்லா மன்னம் வேண்டுமா றளித்தே னல்லேன். 36

பொ - ரை: விருப்பத்தைக் கெடுக்கும் வேனிற்காலத்தில் வழிச்சாலேகளில் தண்ணீர்ப்பந்தர் யாண்டும் வைக்கவில்லே; பெரியோர்க்கு அடிநிலேயும் குடையும் அவர் சோர்வுநீங்கும்படி கொடுக்கவும் இல்லே; அன்னசத்திரம் அமைத்து உண்பார்க்கு வேண்டுமாறு உணவளிக்க வில்லே.

வி - கு: மிசைபவர் - உண்பவர்.

நந்தன வனங்கள் வைத்து நாதரா லயங்கட் கெல்லாம்
செந்திருப் பள்ளித் தாமஞ் சேர்வுறச் செய்தே னல்லேன்
அந்தளிர்ப் பனச நெல்லி யாம்பிர நாளி கேரம்
பைந்துணர்ப் பூக மாதி பலமரம் வைத்தே னல்லேன். 37

பொ - ரை: திருநந்தவனம் வைத்து இறைவனுக்குச் சாத்தும் பூமாலேகளேச் சேர்ப்பிக்கவில்லே; பலா, நெல்லி, மா, தெங்கு, பாக்கு முதலிய பயன்படும் பல மரங்களே வைத்து மக்களுக்கு நன்மை செய்யவில்லே.

வாழ்ந்தநா ளடுத்த வீடு வாழ்வுற வாழ்ந்தே னல்லேன்
சூழ்ந்துள கிளேயை யூட்டிச் சுற்றமும் வளர்த்தே னல்லேன்
தாழ்ந்துள குடும்ப மேனுந் தாங்கினே னல்லேன் முன்னுள்
வீழ்ந்துள தரும மேனு மேலுற வளர்த்தே னல்லேன். 38

பொ – ரை: அடுத்த வீடு வாழும்படி நான் வாழவில்லே; சூழ்ந்துள்ள உறவினர் பந்துக்களுக்கு உண்ணக்கொடுத்து அவர்களேக் காக்கவும் இல்லே; தாழ்ந்த குடும்பத்தை ஆதரிக்கவும் இல்லே; முன்னே நடைபெருது நின்றுவிட்ட தருமத்தை எடுத்துப் பின் வளர்க்கவும் இல்லே.

ஓலத்தண் மழைக்கார் கால மொதுக்கிடங் கொடுத்தே னல்லேன்
காலத்திற் பொருளில் லார்க்குக் கன்னிகா தானஞ் செய்யேன்
ஆலத்தை யுண்டார் கோயில் விளக்கிட்டே னல்லே னற்றில்
பாலத்தை முகித்தே னல்லேன் படித்துறை செய்தே னல்லேன். 39

பொ - ரை: பெருமுழக்கத்தோடு மழை பெய்யும் கார்காலத்தில் தங்க ஒதுக்கிடம் ஒருவருக்கும் கொடுக்கவில்லே; பொருளிலார்க்கு உரிய காலத்தில் கன்னிகாதானம் செய்து கொடுத்தேன் அல்லேன்; ஆற்றைக்கடக்கப் பாலத்தை முற்றுவிக்கவில்லே; படித்துறை கட்டிவைக்கவும் இல்லே; திருக்கோயில் விளக்கு ஏற்றவுமில்லே.

தேசிகர்க் கீந்தே னல்லேன் சிவபிரா னடியார்க் கேனும்
பூசுரர் தங்கட் கேனும் போசனங் கொடுத்தே னல்லேன்
பாசநோ யொழிக்குந் தில்லே குற்ருலம் பாவ நாசம்
காசிசே துவிற்செல் வார்க்குக் கைப்பொருள் கொடுத்தே னல்லேன். 40

பொ - ரை: சமயத் தலைவர்களுக்கு உபகரிக்கவில்லை; அடியார்க்கோ அந்தணர்க்கோ உணவு அளிக்கவில்லை; பாசமாகிய துன்ப மூலத்தை ஒழிக்கும் தில்லை, குற்ருலம், பாவநாசம், காசி, சேது, என்னும் தலங்களுக்குச் செல்வார்க்குக் கைப்பொருள் கொடுக்கவில்லை.

தூசிலார் தமக்குத் தூசு சொன்னமில் லார்க்குச் சொன்னம்
ஆசறப் பசித்தோர்க் கன்ன மாகிலு மளித்தே னல்லேன்
ஊசியில் வாசி பார்த்தே னெருபிடி யமுதென் ருலும்
பேசுமென் மனது கூடிப் பிச்சையிட் டுண்டே னல்லேன். 41

பொ - ரை: உடையிலார்க்கு உடையும் பொருளிலார்க்குப் பொருளும் பசித்தோர்க்கு உணவும் அளிக்கவில்லை; ஊசியில் இலாபம் பெற எண்ணினேன்; என்மனம் பொருந்த ஒரு பிடி அன்னமேனும் பிச்சையாக இட்டு உண்ணச் சென்றேன் அல்லேன்.

கட்டினே னல்ல னேனுங் கடவுளா லயங்கள் போற்றி
ஓட்டியோர் வலம்வந் தில்லே னுண்ணுநீர்க் குளங்கள் கூவல்
வெட்டினே னல்லேன் பொல்லேன் வீண்பொருள் விளைத்தே னிப்பால்
முட்டினேன் குனிந்தென் செய்கேன் மொழியநா வெழும்பா தந்தோ. 42

பொ - ரை: திருக்கோயிலைக் கட்டவில்லை எனினும் கட்டிய கோயிலில் அணைந்து, வலம் வரவும் நினைக்கவில்லை; உண்ணும் நீர் தரவல்ல குளம், கிணறு வெட்டவில்லை; பொல்லாத யான் பயனற்ற பொருளைச் சேர்த்தேன்; இப்போது நெருக்குண்டு குனிந்து என்செய்வேன்; பேசவும் நா எழவில்லையே.

நிலையிலா வுடலும் வாழ்வு நிச்சய மென்றே யெண்ணி
அலகிலாக் கொடுமை செய்தே னவத்தைவந் தடுத்த தந்தோ
விலகவோர் தரும மென்னு மெய்த்துணை யில்லாப் பாவி
பலபடச் செய்த பாவம் பலித்ததென் றயர்ந்து சோர்ந்தான். 43

பொ - ரை: நிலையில்லாத உடலும் அதன்கண் கூடி வாழ்வதும் சத்தியம் என எண்ணி அளவற்ற கொடுமைகள் செய்தேன்; மரண நிலை வந்துவிட்டது; ஐயோ! இதனில் தப்புதற்குத் தருமம் என்னும் உண்மைத்துணை யில்லாத பாவி யாகிய யான் பலவகையிற் செய்த பாவத்தின் பயன் விளைந்துவிட்டது என்று தளர்ந்து சோர்ந்தான்.

வேறு

ஏங்கினன் கடுகளவு மீயாதான் மலையளவும்
பாங்கினர் பொருள்கவரப் பார்த்திருந்து பதைத்தாவி
நீங்கின னுயிர்க்குறுதி நீங்காத துணைகாணன்
தாங்கினன் பாவமெனுந் தாங்கரிய பெரும்பாரம். 44

பொ - ரை: சிறிதும் ஈயாது பக்கத்தில் உள்ளார் பொருளை மிகக் கவரப் பார்த்திருந்தவன் ஏங்கிப் பதைத்து இறந்தான்; உயிர்க்கு உறுதியாகிய நீங்காத துணையைக் காணவில்லை; பாவம் என்னும் பெரும் பாரத்தைச் சுமந்தான்.

மன்கிடக்கை யூர்கிடப்பப் பேர்கிடப்ப மனைநிறைந்த
பொன்கிடப்பத் தேடிவைத்த பொருள்கிடப்ப மனைமாதர்
முன்கிடப்ப வொருவருக்கு முதவாத முடையுடலம்
பின்கிடப்பத் தனிபோனுன் செய்தவினை பிடர்பிடிப்ப. 45

பொ-ரை: அவனது நிலையான படுக்கை ஊரில் கிடக்க, பேர் தனித்திருக்க, வீட்டில் உள்ள பொன் பிரிந்துகிடக்க, தேடிவைத்த நுகர்ச்சிப் பொருள்கள் கிடக்க, காதல் உள்ள மனை முன்னே இருக்க, யாருக்கும் உதவாத தீநாற்றமுள்ள உடம்பு பின்னே தனிக்க, தான் செய்த வினை தன்னை உந்துதலால் தான் தனியே போனுன்.

வீக்கினுர் பெரும்பாசம் வெருட்டினுர் பொருபடையால்
தாக்கினுர் நெருப்பாற்றில் தள்ளினுர் மயிர்ப்பாலம்
போக்கினுர் கொடியமுள்ளிற் புரட்டினுர் முரட்டுடல்புண்
ஆக்கினுர் கொடுந்தூத ரந்தகன்முன் கொடுபோனுர். 46

பொ-ரை: பெரிய கயிற்ருல் கட்டி அச்சுறுத்திப் படைகளால் தாக்கி நெருப்பாற்றில் தள்ளினர்; மயிர்ப்பாலத்தில் செல்லச்செலுத்தினர்; முட்களின் மேல் புரட்டி உடம்பைப் புண்ணுக்கி நமன்முன் கொண்டுபோயினர் தூதுவர்.

காலபட ரலைப்பதனைக் கண்டிரங்கிக் கையமைத்து
மேலசைத்த கொடும்பாசக் கட்டவிழ்த்து வியந்திருத்திக்
கோலநகை யமுதளித்துக் குணநிறைசெங் கோற்கடவுள்
சூலமொடு பாசமொடு நின்றதூ துவர்க்குரைப்பான். 47

பொ-ரை: காலதூதர் வருத்துவதைக் கண்டு இரங்கிக் கையால் அடக்கி, மேல் கட்டியிருந்த பாசத்தை அவிழ்த்து, வியந்து இருக்கச்செய்து இன்னகை காட்டி மகிழ்வித்து நற்குணம் நிறைந்த நடுவன் சூலபாசங்களோடு நின்ற தூதர்க்குக் கூறலாயினன்.

பன்னுளும் பாவியிவன் பாவமே புரிந்தாலும்
கொன்னுரு மதிச்சடையார் குற்ருலந் தனிலேகி
முன்னுளிற் பெற்றிருந்தான் மூன்றுநாட் டலவாசம்
எந்நாளிற் புண்ணியமோ விமையவர்க்குங் கிடையாதால். 48

பொ-ரை: பாவியாகிய இவன் பலநாளும் பாவத்தையே மேற்கொண்டு செய்திருப்பினும் சிவனது திருக்குற்ருலத்திற் சென்று மூன்று நாள் தங்கும் செயலைப் புரிந்துளன்; எப்போது இவன் செய்த புண்ணியப்பயனே, தேவர்க்குங் கிடைக்காத தலவாசம் இவனுக்குக் கிடைத்துளது.

நன்னகர்வை கியமூன்று நாளிலொரு நாட்பலனே
முன்னமிவன் செய்தபெரும் பாவமெலா முடித்ததால்
பின்னரொரு நாட்பலன்ருன் பிரான்கயிலை தனிற்சேர்க்கும்
இன்னமொரு நாட்பலனு மிறைவன்மேற் கடனுமால். 49

பொ-ரை: அந்நகரில் ஒருநாள் தங்கிய புண்ணியம் இவன் செய்த பாவமெல்லாம் கெடச்செய்தது; மேலும் ஒரு நாளையவாசம் திருக்கயிலையிற்சேர்த்தற்கு உரியது; மூன்ரும்நாள் தலவாசம் இறைவனுல் ஈடுசெய்ய முடியாத கடனுக உள்ளது.

என்றியம னியம்பியகா லெண்ணரிய கணநாதர்
மன்றலுயர் விமானமொடுந் தோன்றினர் மலர்மாரி
நன்றிவா னவர்பொழிந்தார் நமன்றூத ரதிசயித்தார்
சென்றவனுஞ் சிவபெருமான் கயிலைவரை தனிற்சேர்ந்தான். 50

பொ-ரை: என இயமன் சொல்லும்போது சிவகணநாதர் விமானம் கொண்டு வந்தனர்; தேவர் நல்ல மலர்மாரி பொழிந்தனர்; இயமன்தூதுவர் வியப்புற்ருர்; அவன் விமானத்திற் சென்று திருக்கயிலை சேர்ந்தான்.

இந்தவகை தலவாசத் தியற்கையென வுயர்சூதன்
அந்தணருக் குணர்த்திவட வருவியொரு தினப்பலனுல்
தந்தைநர கினைப்புதல்வன் றவிர்த்தகதை யவர்கேட்ப
முந்தைநா ரணர்க்கரனுர் மொழிந்தபடி மொழிகுவான். 51

பொ-ரை: இது திருக்குற்ருலத் தலவாசத்தின் பெருமை எனச் சூதர் உரைத்தனர்; வடவருவி முழுகி ஒரு நாளைய தவத்தைக் கொடுக்கத் தந்தை நரகினை நீங்கிய கதையை அந்தணர்கள் கேட்க, முன் இக்கதையைச் சிவபிரான் திருமாலுக்கு உரைத்தபடி உரைக்கலுற்ருர்.

கண்டகசேதனச் சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் – 1704

# கவுற்சனச் சருக்கம்

கொண்டையுறு நீலவிழி கொண்டையுறு நீலம்
கெண்டையொடு பாணிபுகு கேணிசெறி சோலைக்
கண்டையல ராடுகிளி கண்டையலர் சொல்வாய்த்
தொண்டைவள நாடுமுயர் தொண்டைவள நாடு. 1

பொ - ரை: தொண்டை வளநாடு சோலைக்கண் தையலார் ஆடுதற்கு நிமித்தமாகிய வளம் உடையது; அத் தையலார்கள் விழிகள் நீண்டிருத்தலின், அவை அவர்தம் கொண்டையை நாடிச்செல்வன எனத் தோன்றுகிறது; அவ் விழிகளைக் கண்டு பகை என்று ஐயுறும் நீலமலர்கள் கெண்டை மீன்களோடு சேர்ந்து நீரில் மறைந்துகொள்கின்றன; அப்படிப்பட்ட கிணறுகள் சோலைகளில் நெருங்கி உள்ளன; கற்கண்டு போன்ற இனிய சொற்களை வெளிப்படுத்தும் அவர்தம் வாயைக் கிளிகள் கொவ்வைக்கனி என எண்ணி அக்கனியின் வளத்தை அவ்வாயிற்பெற நாடுகின்றன.

வி — கு: கொண்டை — மயிர்முடி. கொண்டையுறு - உட்கொண்டு ஐயுறுகின்ற. பாணி - நீர். சோலைக்கண் தையலர் ஆடு எனப் பிரித்துப் பொருள் கொள்க. கண்டை - கற்கண்டு போன்ற சொற்களை, இசையை. தொண்டை - கொவ்வைக்கனி.

நாஞ்சிலுழ வர்க்கெதிர் நடந்துவெடி தாவி
மாஞ்சினை கிழித்துவரி வாளைவிரி பாளைப்
பூஞ்சினை திளைத்துமது ரேசர்கொடி போலும்
காஞ்சிநக ரத்திலழ காஞ்சிநக ரத்தில். 2

பொ - ரை: அந்நாட்டில் உள்ள காஞ்சி மாநகரில் அழகு அமைந்த திருக்கோயிலில் வாளைமீன் மடல் விரிந்த கமுகம்பாளையாகிய உறுப்பில் தங்கி மதுரை இறைவனுக்கு உரிய மீன்கொடிபோலத் தோற்றம் அளிக்கின்றது; வரிகளையுடைய அம்மீன் அதற்குமுன் கலப்பை கொண்டு உழும் உழவர்க்கு எதிரே சென்று அவர் எதிர்ப்பட்டவுடன் சடக்கென மேலே தாவிச்சென்று மாமரச்சினையைக் கிழித்தது.

ஆரமுதை முக்கணழி யாநிதியை மாவின்
சீரமுத வைப்பையிரு செங்கைகொ டணைத்து
வார்பொரு முலைக்குறி வளைக்குறி யமைத்த
ஓர்பரை யறஞ்செயு நகர்க்கொரு மருங்கில். 3

பொ - ரை: மாவடியில் அமர்ந்துள்ள பேரின்பவடிவ முக்கட்செல்வரைத் தழுவிக் குழைத்தருளித் தனக்குறியும் வளைத்தழும்பும் செய்த பராசத்தி முப்பத்து இரண்டு அறங்களையும் வளர்க்கும் இடம் திருக்காமக்கோட்டம்; அதன் ஒரு பக்கத்தில்.

வேறு

ஆனக மொலிக்கும் வீதி யணிகெழு நாட்டி லங்கோர்
தேனகன் சோலை மாலைச் செழித்தசெஞ் சாலி வேலிக்
கோனக ரந்த ணாளன் குற்சர்கோத் திரத்தில் வந்தோன்
மானகஞ் சுகத்தான் வேதம் வடகலை பயின்ற நாவான். 4

பொ-ரை: முரசு முழங்கும் தெருக்களையுடைய அழகிய அந்நாட்டில், வாசனைகமழும் உள்ளிடத்தையுடைய பூஞ்சோலை வரிசைகளையும் செஞ்சாலி விளையும் கழனிகளையும் எல்லையாகவுடைய தலைநகரில் குற்சர் கோத்திரத்தில் தோன்றிய ஓர் அந்தணன் வாழ்ந்தான்; அவன் மானமாகிய சட்டையை மேற் கொண்டவன்; வேதம் முதலிய வட நூற்பயிற்சி உடையவன்.

மரபுசேர் குற்ச னென்னு மறையவன் றனக்குப் பாபர்
இருவரு முச்ச மேறச் சுபரெலா நீச மெய்த
உரகருங் காரி சேயு முதித்திட வுதித்தான் மன்னோ
கரவடன் கவுற்ச னென்பான் கரும்பினி லரும்பு போல்வான். 5

பொ-ரை: இத்தகைய குற்சன் என்னும் அந்தணனுக்குக் கள்ளத்தனம் உள்ள கவுற்சன் என்னும் மகன் கரும்பில் தோன்றும் பூவரும்புபோலத் தோன்றினன்; சனி செவ்வாய் தம் உச்சராசிகளில் இருக்க, புதன், சுக்கிரன் என்னும் இருவரில் ஒருவரும், வியாழன், சந்திரனும் நீச ராசியில் அமைய, சன்மலக்கினத்தில் இராகு கேதுக்களில் ஒருவரும் குளிகனும் இருக்க அம்மகன் பிறந்தான்.

மடமெலா மொன்றாய்ப் பாலன் வடிவெடுத் தெனவே தோன்றிப்
புடவியி லொழுக்க மாதி புண்ணிய நெறிகள் யாவும்
கிடைபடக் கிடந்து பாவங் கிளர்வுறத் தவழ்ந்து பொல்லா
நடலையுங் கொலையுஞ் சூது நடைபெற நடைபெற் றானே. 6

பொ-ரை: அம்மகன் அறியாமையெல்லாம் கூடிக் குழவிவடிவெடுத்தாற் போலத் தோன்றினன்; அவன் கிடந்தபோது உலகில் உள்ள ஒழுக்கம் முதலிய புனிதநெறிகள் கீழ்வீழ்ந்தன; அவன் தவழ்ந்தபோது பாவம் மேம்பட்டுத் தலை எடுத்தது; அவன் நடைகற்ற போது தீயவஞ்சனையும் கொலையும் சூதும் எழுந்து நடந்தன.

அழுதொறுஞ் சீவ கோடி யழுதிட வழுவா னஞ்சொல்
மொழிதொறும் படிறுங் கோளுங் குறளையு மொழியாக் கற்றான்
பழிபுரிந் துயிர்கள்வீட்டும் பயிற்சியே பயின்றான் மாரி
மழைவளர் விழல்போற் காமம் வளர்ந்திட வளர்ந்தான் மன்னோ. 7

பொ-ரை: கவுற்சனன் அழ உயிர்கள் அழும்; பேசுந்தொறும் பொய்யும் அழுக்காற்றான் வரும் சொல்லும், புறங்கூறுதலும் பயின்றான்; உயர்ந்தோர் விலக்கியவற்றை விரும்பிச்செய்து உயிர்க்கொலை புரிதலைப் பயின்றான்; மழையால் வளரும் விழல்புல்போலக் காமவுணர்ச்சி உள்ளத்தில் வளரும்படி வளர்ந்தான்.

முப்புரி நூலுந் தாங்கி முன்சிகை நடர்போற் பூண்டு
குப்பமந் திரங்க ளெல்லாங் குமந்திரம் புகல்வ தானன்
விப்பிர ரோதும் வேதக் கிடையெலாங் கிடையா விட்டான்
செப்புநூல் சிறிது கற்றான் சிறுபுலி கொலைகற் றற்போல். 8

பொ-ரை: பூணூல் பூண்டு முன் சிகையைக் கூத்தாடுபவர் வைத்துக் கொள்வது போல் வைத்துக்கொண்டான்; மக்கள் திரண்டுள்ள இடங்களிலும் அரசமனையிலும் கேடுபயக்கும் மந்திரங்களைச் சொல்லிச் சடங்கு இயற்றினன்; அந்தணர் ஓதும் பாடசாலைகளையெல்லாம் உறங்கும் இடமாகக்கொண்டு பயன் பெருது கைவிட்டான்; பிறர்க்கு எடுத்துக் கூறுவதற்கு ஏற்ற சில நூல்களைக் கற்றான்; புலிக்குட்டி கொலைத்தொழிலைப் பயின்றாற்போன்றது அது.

குரவர்நூ லுணர்த்துங் காலை தருமமார் குலநூல் விட்டுக்
கரவடம் பலிக்குங் காலங் கணித்துமே லறிய வேண்டிப்
பரவுசோ திடமே பன்னிப் பயின்றன னதனா லேலே
புரவலன் பேரத் தாணிப் புரோகிதத் தலைமை பூண்டான். 9

பொ-ரை: உபாத்தியாயர் நூல்களைக் கற்பிக்கும் போது அறங்களைக் கூறும் உயர்ந்த நூற்பொருளைக் கேளாமல் விட்டு, கள்ளம் உடையவனாகத் தன் கருத்திற்கு ஏற்ற நூற்பொருள்களை அறியக்கருதிக் காலம் பார்த்திருந்து, புகழப்படும் சோதிட நூல்களையே பெரிதும் பயின்றுவந்தான்; அதனால், அரசனது பெரிய இருக்கைமண்டபத்தில் புரோகிதர்களுக்குள் தலைவனும் பதவியைப் பெற்றான்.

தேர்ச்சிபோற் பிறன்கோள் கூறித் திரவியந் திரளா யீட்டும்
சார்ச்சியா லரசன் றன்னைத் தன்வயப் படுத்துத் தானும்
சோர்ச்சிசேர் மடவார் சேரித் தூர்த்தர்தம் வயத்த னானன்
கூர்ச்சிவா யரவம் வீழ்த்திக் கோம்பிவாய் வீழும் புட்போல். 10

பொ-ரை: மயில் கூரிய பற்களையுடைய பாம்புகளை வெல்லுந்தன்மைத் தாயினும் பச்சை ஓந்தியிடத்துத் தோற்றுவிடும்; அதுபோல, கவுற்சிகன் எல்லாம் தெரிந்தவன்போலப் பிறர் குறைகளைக்கூறிப் பொருளைப்பெருக ஈட்டிய காரணத்தால் அரசனைத் தன்வயப்படுத்தினன்; ஆயினும் மனச் சோர்வை உண்டு பண்ணும் பரத்தையர் சேரியில் உள்ள காமுகர்கள் வயப்பட்டு நடப்பவன் ஆனன்.

வளர்ந்தநாட் பிரமசாரி யெனும்பெயர் மறுக்க வேண்டிக்
கிளர்ந்தபங் கயத்தின் மீதிற் கிளருமா வடுவை நேரே
பிளந்துவைத் தனைய வுண்கட் பேதையோர் மறையோன் மாதை
இளம்பிடிக் கயம்போற் பற்றி யிராக்கத விவாகஞ் செய்தான். 11

பொ-ரை: தான் பிரமசரியத்தைப் பின்பற்ற விடினும் வளர்ந்த நாட்களில் பிரமசாரி என்னும் பெயர் பெற்றானதலின், அப்பெயரை மாற்றிக்கொள்ள எண்ணி, தாமரை போன்ற முகத்தில் மாவடுவின் பிளவு போன்ற மைதீட்டிய

கண்களையுடைய ஒரு பார்ப்பனக்கன்னியை இளம்பிடியைப் பற்றும் களிற்றைப் போல வலிவு செய்து மணந்து கொண்டான்.

வி - கு: இராக்கதமணம் - கொல்லேறுதழுவுதல், வில் ஏறிடல் போன்ற தன்வலிகாட்டிச் செய்து கொள்ளும் மணம்.

வேட்டக மதுவே காம வேட்டஞ்செய் கான மாக
நாட்டக மணஞ்செய் கோல நாடுவான் புகுந்த மாதர்
கூட்டமான் குலங்க ளாகக் குவைநிதி வலேயாத் தானேர்
காட்டக வேட னகிப் படுப்பதோர் கலேயு மாஞன். 12

பொ - ரை: அவனுக்கு மணஞ் செய்துகொண்ட இல்லமே விலங்குகள் திரியும் வனம் ஆயிற்று; அங்குத் தாம் வைத்த மனத்திற்கு ஏற்பத் தம்மைக் கூடும் அழகிய பன்றியைக் காணவந்த பெண்கள் தொகுதியே மான் கூட்டம் ஆயிற்று; தான் அரசனல் பெற்ற பொருளின் மிகுதியே வலே ஆயிற்று; காட்டில் மறைந்து நின்று பறவைகளைப் பிடிக்கும் வேடனகவும் மான்களைப்புணரும் ஆண் மானகவும் தான் ஆயினன்.

வி - கு: கோலம் - அழகு, பன்றி.

மனுவுக நாளும் வாணண் மாளயஞ் சங்கி ராந்தி
வினவுமட் டகைகண் மேலே விதிபாதந் திருதி யாய
புனிதநாட் டொண்ணூற் ருறும் புணர்முலேத் தடமே யன்றி
இனியநீர்த் தடமுந் தோயா னியன்றதென் புலத்தோர்க் கீயான். 13

பொ - ரை: மனுநாள்கள் பதினன்கு, யுகவாழ் நாள்கள் நான்கு, அமாவாசை பன்னிரண்டு; மாளயநாள் பதினைந்து, மாதப்பிறப்பு நாள்கள் பன்னிரண்டு, அட்டகைநாள் பன்னிரண்டு, விதிபாதயோகம் வரும்நாள் பன்னிரண்டு, வைதிருதி யோகம் வரும்நாள் பதினைந்து ஆக ஓர் ஆண்டில்வரும் புனிதநாட்கள் தொண்ணூற்று ஆறினும் தீர்த்த நீர்த்தடாகத்தில் முழுகித் தென் புலத்தார் கடன் இறுக்காமல் மாதர்களுடைய முலேத்தடமே சேர்ந்து பாவம் ஈட்டினன்.

வி - கு: இந்நாட்களின் விவரத்தை வடவருவிச்சருக்கம் 41ஆம் பாட்டின் உரையிற்காண்க.

பிறந்தநாண் முன்னு வாநாட் பெருநிசி பகலீ ரந்தி
அறந்தரும் விரத நாட்க ளட்டமி தந்தை தாயர்
இறந்தநா ளிருவ ராய விறைவர்நாட் பதினன் காதி
சிறந்தபுண் ணியநா ளெல்லாந் தேனனர் புணர்ச்சி நீங்கான். 14

பொ - ரை: தான் பிறந்தநாள், பூரணை நாட்கள், இரவு, பகல், அந்தி சந்திகள், அறநூல்கள் எடுத்துக்கூறும் கார்த்திகை முதலிய விரதநாட்கள், தன் தந்தை தாய் இறந்ததிதிகள், திருவாதிரை திருவோணம் ஆகிய அரன் அரி நாட்கள், சதுர்த்தசி முதலிய புண்ணியநாட்கள் எல்லாம் மங்கையர் புணர்ச்சியை விடுத்தான் அல்லன்.

தையலார் புணர்ச்சிக் கேகுஞ் சந்தியே சந்தி யாக
மொய்யமை விலங்கு புள்ளின் முறைகளே முறைக ளாக
நையுநுண் ணிடையார் யார்க்கு நலங்களே குலங்க ளாக
மையலே நியம மாக மதனமே யொழுக்க மானுன். 15

பொ-ரை: பெண்களைப் புணரச்செல்லும் சந்திப்பே அவனுக்குச் சந்திக் கடனுயிற்று; வலிபொருந்திய விலங்கும் புள்ளும் புல்லும்முறைகளே அவன் மேற்கொண்ட நியமங்கள் ஆயின; அழகிய பெண்கள் யாவரேனும் அவர்தம் அழகே நற்குலமாயிற்று; அவர்மேல் மயக்கங்கொள்ளுதலே தவமாயிற்று; காம வொழுக்கமே ஒழுக்கமாயிற்று.

சந்திகண் மறந்து சாதித் தருமங்க ளொருவி வேதச்
சிந்தையு மொழிந்து காயத் திரிமுத லயர்த்து மாதர்
உந்தியந் தடத்து மூழ்கி யுயர்முலைச் சாந்தம் பூசி
மந்திர மவர்பா லோதி வணங்குவான் மதனத் தெய்வம். 16

பொ-ரை: கவுற்சனனவன் சந்தியாவந்தன முறைகளை மறந்து, தன் வருணத்திற்கு உரிய ஒழுக்கங்களை நீங்கி, வேதத்தைப்பற்றி நினைத்தலையும் விட்டு, காயத்திரி முதலிய மந்திரங்களை மறந்து, பெண்களின் கொப்பூழ்ச்சுழியில் அழுந்தி, நிமிர்ந்த முலைகளிற்பூசிய சந்தனத்தைத் தன்மார்பில் ஏற்று அவர் களிடத்து ஆலோசனைகளைக் கூறிக் காமனை வழிபடுவான் ஆயினன்.

காலையிற் புனலின் மூழ்கிக் கடன்கழித் தனலு மோம்பி
மேலையிற் கரும முற்றி விதிமுறை தருமம் பேணிச்
சாலையில் விருந்து போற்றித் தன்கிளை யூட்டி யுண்டு
மாலையில் வளர்வார்க் கெல்லாங் களையென வளர்ந்தான் மன்னே. 17

பொ-ரை: அந்தணர்கள் பொதுவாக, காலையில் நீராடி, நித்திய கன்மங்களைச் செய்து, ஓமம் வளர்த்து, பழையமுறையிற் செய்ய வேண்டிய கடன்களை நிரப்பி, அறங்களை முறைப்படிசெய்து, உணவுச்சாலையில் விருந் தினரைப் போற்றித் தம் சுற்றத்தாரையும் உண்பித்துத் தாமும் உண்டு இரவில் துயில்வர்; இத்தகையோர்க்குக் களைபோலக் கவுற்சனன் வளர்ந்தான்.

வேந்தனைச் செங்கோல் செய்யும் விரகினைக் கரவான் மாற்றி
மாந்தர்மேற் கொடுங்கோல் செய்ய மந்திரக் குடிலஞ் செய்தும்
காந்தனைப் பிரியா மாதர் கற்பினைப் பிரித்துந் தன்பால்
போந்தமா மறைச்சி றூர்க்கும் புன்மைபோ திப்ப தானுன். 18

பொ-ரை: நாட்டை ஆண்ட அரசனைச் செங்கோன்மை நிகழ்த்தும் நுண்ணறிவினைத் தன் வஞ்சனை முறைகளால் மாற்றினன் கவுற்சன்; குடிமக்களைக் கொடுங்கோன்மைக்கண் படுத்தும்படி யோசனைகூறி வஞ்சனை செய்தான்; கணவரைப்பிரியாத உள்ளம் படைத்த கற்புடை மாதரைக் கற்பு அழியக் கற்பித் தான்; தன்னை வந்து அடைந்த பார்ப்பனச் சிறுவர்களுக்கும் சிறுமையான போதனைகளைச் செய்தான்.

வி-கு: விரகு - நுண்ணறிவு, குடிலம் - வளைவு, வஞ்சகம்.

பூவையர் செய்யும் பாவம் புருடர்மேற் புருடர் பாவம்
கோவின்மேற் சுமையா மந்தக் கொற்றவன் புரியும் பாவம்
மேவுமே புரோகி தன்பால் வீண்புரோ கிதத்தா லின்னேன்
மூவர்பா தகமுந் தாங்கு முழுச்சுமை தாங்கி போன்ருன். 19

பொ-ரை: மனைவியர் செய்யும் பாவம் கணவரைச்சாரும்; அவ் வாண் மக்கள் செய்யும் பாவம் அரசனைச் சாரும்; அரசன் செய்யும் பாவம் அவனுக்கு அறிவு புகட்டும் புரோகிதனைச் சாரும்; பயனற்ற புரோகிதம் செய்யும் இவன், பெண்டிர் ஆடவர், அரசன் என்னும் மூவர் பாவங்களையும் தாங்கும் சுமைதாங்கி போல் இருந்தான்.

வேறு

மனத்தி லொன்றவ னுரைப்ப தொன்றினை
மறுத்து மொன்றினை நடத்துவான்
இனத்து மங்கையர் முறைத்தி றம்பினன்
இழித்த வஞ்சியர் கலப்பினன்
முனைக்கொ டுஞ்சமர் மறக்கு றும்புகண்
முடித்து நின்றுயிர் வதைத்துளான்
நினைத்து நம்பினர் தமக்கு வஞ்சகம்
நிகழ்ச்சி தங்கிய விகழ்ச்சியான். 20

பொ-ரை: அவன் மனத்தில் நினைப்பது ஒன்று; உரைப்பது வேறென்று; செய்வது அவ்விரண்டினும் வேருக நடத்துவான்; குலமகளிரிடத்து ஒழுங்கி னின்றும் மாறுபட்டு நடந்தான்; இழிமகளிர் சேர்க்கையை உடையன்; எதிர்நின்று போர்புரியும் கொடிய செயல்களில் பாவக்குறும்புகள் செய்து உயிர்களை வதைத் தான்; தன்னை நம்பினவர்களுக்கும் முன் கூட்டிச் சிந்தித்து வஞ்சனை செய்யும் பழியுடையவன்.

வருத்து தம்பன விதத்தி னும்புலை
மருத்தி னும்பிறர் மனைக்குள்வாழ்
பருத்த கொங்கையர் முயக்கி னன்பகை
பழிக்கு நெஞ்சிடை பயப்படான்
அருத்து தண்புனல் குளித்த றிந்திலன்
அலத்த கங்களின் முழுக்கருன்
முருக்கி லங்கிதழ் மதுக்க ளன்றியும்
முதுக்கு டங்களின் மதுக்கொள்வான். 21

பொ-ரை: பிறர் இல்லக்கிழத்தியரைத் தம்பனஞ் செய்தும் இழிந்து மருந்து வைத்தும் முயங்கினன்; பகைக்கும் பழிக்கும் அஞ்சவில்லை; நல்ல தண்ணீரில் குளித்து அறியான்; பெண்கள் காலில் ஊட்டப்படும் செம்பஞ்சுக் குழம்பில் முழுகுவான்; அவர்தம் முருக்க மலர்போன்ற இதழ் அமுதோடு குடங்களில் வைக்கப்படும் பழைய மதுவையும் அருந்துவான்.

வி-கு: அலத்தகம் - செம்பஞ்சுக்குழம்பு.

அடுத்தி டுங்குடி கெடுக்கும் வஞ்சகன்
அருக்கி யம்பலி கொடுத்துணன்
எடுத்த தன்குல முறைக்கு முன்சொலு
மியற்கை யொன்றினு நடப்பிலான்
நடுச்சொ லுஞ்சவை வழக்க ழிந்திட
நடத்து நிந்தனை யிடத்தினன்
மிடுக்கு டன்கன சிவத்த லங்களை
மிகுத்த தொண்டரை யலைத்துளான். 22

பொ-ரை: கவுற்சன் தன்னைச் சாரும் குடியைக் கெடுக்கும் வஞ்சகன்; பெரியோர்க்குச் சிரநீர் தெளித்தலும் வறியோர்க்கு ஈதலும் செய்யாது உண்பவன்; தன் குலத்திற்கு முதன்மையாகச் சொல்லும் எந்த நல்லொழுக்கத்தையும் இகழ்ந்தவன்; நடுவுநிலையில் நின்று முடிவு கூறவேண்டிய அவைகளை அவற்றின் நன்மரபை அழித்து நிந்தனையை ஈட்டுபவன்; சிவத்தலங்களையும் தொண்டர்களையும் வலியுடன் அலைத்துத் தீங்கு புரிந்தான்.

வேறு

கொலைபுரி பாவங் கோடி குருநிந்தை முதல கோடி
புலைமது நுகர்ந்த பாவம் பொய்கள வனந்தங் கோடி
நிலையிலான் காமக் கொள்ளை நிகழ்த்திடில் விண்ணின் மீனை
அலைகடன் மணலை யெண்ணி யறியினு மறியொ ணாதால். 23

பொ-ரை: அளவற்ற கொலைகளைப் புரிந்தான்; குருநிந்தை முதலிய பாவச்செயல்களும் அளப்பில; புலைத்தொழில், மதுவருந்தல், பொய், களவு என்பவையும் அளவிறந்தவை; மனத்தை ஒரு நெறிப்படுத்தாது காமத்திற் செலுத்திய மிகுதி ஆகாய விண்மீன், கடல்மணல் என்பவற்றினும் மிக்கவை.

தரும்பெரும் பாவ மன்றித் தருமமே யறியான் வேட்ட
மருந்துபோன் மனையா டன்னை மணந்தநாட் கண்டா னேனும்
அருந்ததிக் கற்பின் மிக்கா ளரும்பெருந் தவத்தி னாலே
பொருந்துகாற் றடிப்பத் தாழை பூத்தென வயிறு வாய்த்து. 24

பொ-ரை: கவுற்சன் தானே வருவித்துக்கொள்ளும் பாவங்களையன்றிப் புண்ணியங்களை நினைக்கவில்லை; தான் மணந்துகொண்ட அமுதம் போன்றவளை மணஞ்செய்த நாளிற் கண்டானன்றிப் பின் காண எண்ணங்கொள்ளவில்லை; அருந்ததியைப்போன்ற கற்புடைய அவள், காற்றடித்ததனுல் மலரும் தாழை போல, கணவனது ஏகதேசக் கலப்பால் வயிறு வாய்க்கப்பெற்றாள்.

ஓதமா ருவர்நீர் வேலை யொளிர்சங்கி னுதரம் வாய்ப்ப
மேதகு குலத்துத் தோன்றும் விலையிலா முத்தம் போலப்
பாதகன் றனக்கோர் சேயாச் சுகுற்சனைப் பயந்தாள் வேறு
மாதவம் வேண்டுங் கொல்லோ தாரமுங் குருவும் வாய்த்தால். 25

பொ-ரை: உவர்நீர்க் கடலில் உள்ள சங்கு கருக்கொண்டு உயர்ந்த முத்தை ஈன்றாற்போல, பாதகனுக்கு மகன் எனும்படி அவள் சுகுற்சன் என்னும் நல்ல மகனைப் பெற்றாள்; ஒருவனுக்குத் தாரமும் குருவும் முன்னை நல்வினைப் பயனால் வாய்த்துவிட்டால், அவன் சிறந்த தவத்தைப் புரியாதபோதும் தவப்பயன் கிட்டும்.

மைந்தனைப் பயந்தா ளென்று மனக்கொளான் மனையா டன்னை
நிந்தனை புரிவா னன்றி நேர்படான் பரத்தை மாதர்
தொந்தனைத் துவட்சி நீங்கான் சுவைதரு கரும்பின் மேலும்
சிந்தனை புரிவ துண்டோ வேம்பினைத் தின்னுங் கீடம். 26

பொ-ரை: நன்மகனைப் பெற்றும் தன் மனைவியை மனத்துக்கொள்ளாது நிந்தித்து அவள் எதிரில் வாரான் கவுற்சிகன்; பரத்தையர்பால் பழவினையால் செலுத்தப்பட்டு வாடும் வாட்டத்தினின்றும் நீங்கவில்லை; வேப்பிலையைத் தின்னும் புழு பக்கத்தில் கருப்பஞ்சோலை இருப்பினும் அதனைச் சுவைக்கக் கருதாது அல்லவா!

கற்புடை மாதர் தம்மைக் கண்ணினாற் பார்த்த பாவம்
நற்பொருள் கவர்ந்த பாவம் பிறர்மனை நயந்த பாவம்
பற்பல குடிக்குந் தீமை நாவினாற் பகர்ந்த பாவம்
இற்பிழை புரிந்த பாவ மிவையெலாம் வளைந்து சுற்றி. 27

பொ-ரை: கற்புடை மாதர்களைக் காமநோக்குடன் பார்த்த பாவமும், பிறர் முயன்று ஈட்டிய நற்பொருளை வஞ்சித்துக் கவர்ந்த பாவமும், பிறர் மனைவியரைக் காதலித்த பாவமும், பல குடிகளுக்குப் பழிச்சொல் கூறியதனால் வந்த பாவமும், தன் இல்லாளுக்குச் செய்த பாவமும் கவுற்சனை வளைந்து சூழ்ந்தன.

மாமனைக் குரிமை யாட்டி மனங்கொதி கொதித்த வெல்லாம்
தீமையோ னுடலாம் பஞ்சிற் செந்தழற் பொறியாய்ப் பற்றிக்
காமமே வினையாய் முற்றி நாளிலே கழிந்து மேனி
தேமுரம் புழுவார் நாஞ்சிற் கொழுவெனத் தேய்ந்து மாய்ந்தான். 28

பொ-ரை: தன் மனைக்கு உரியவள் மனம் புழுங்கிய வெப்பம் எல்லாம் தீயவனது உடலில், பஞ்சிற்பற்றிய தீப்பொறிகள் போல, பற்றின; காம உணர்ச்சியே தீவினை விளைவாய் முதிர்ந்து, தன் உடம்பு பரற்கல் உள்ள இடத்தில் உழுத கலப்பை தேய்வதுபோல, என்புருக்கி நோயிற்பட்டு முடிவில் இறந்தான்.

வி-கு: தேம்முரப்பு உழுவார் நாஞ்சில் - பரற்கல் உள்ள தேயத்தில் உழுவாரது கலப்பை. தேம் - இடம்.

ஆங்கவ னிறந்த காலை யந்தநாட் டுள்ள மாந்தர்
தீங்கறு பாலின் மூழ்கித் தீவினை தீர்ந்தார் மாதர்
தாங்களு நறுநெய் யாடிச் சருக்கரை வழங்கி யார்த்தார்
ஓங்கின வறங்கள் யாவு முயர்ந்தது தாழ்ந்த பூமி. 29

பொ - ரை : அவன் இறந்தபோது அந்நாட்டு ஆண்மக்கள் பாலில் மூழ்கிப் பாவத்தினின்றும் விடுபட்டனர்; மாதர்களும் நல்ல நெய்யில் முழுகிப் பிறர்க்குச் சருக்கரை வழங்கி ஆரவாரம் செய்தனர்; அறங்கள் தலை எடுத்தன; தாழ்ந்த நிலம் உயர்ந்தது.

அன்னவன் றன்னைக் கால னடுங்கொலைத் தூதர் தாக்கிப்
பின்னுற வலையால் வீசிப் பிடித்தன ரிடித்துத் தண்டால்
முன்னுறப் புடைத்துச் செங்கை மூட்டொடும் பொருந்தச் சேர்த்துப்
பன்னெடும் பாசம் வீக்கிப் பாட்டிடைக் குணிலாற் கொட்டி. 30

பொ - ரை : அவனை இயமதூதர் தாக்கிப் பாசத்தால் வளைத்துப் பற்றினர்; தடியால் இடித்துத் தான் முன்செய்த பாவங்களை நினைத்து வருந்தும்படி அடித்தார்கள். கைகளைப் பொருத்துக்களோடு பொருந்தும்படி சேர்த்துக் கயிற்றால் கட்டிக் கணைக்கால்மேல் குறுந்தடியால் அடித்தனர்.

வி - கு : முன்னுற - நினைக்கும்படி, குணில் - குறுந்தடி.

நடந்தன னிருகால் சோர நலிந்தனர் நூறு காதம்
தொடர்ந்தனர் வெருவி யோடத் துரந்தனர் நூறு காதம்
கிடந்தன னுருண்டு வீழக் கிளர்முடி செடிதொட் டீர்ப்ப
இடந்தொறும் புரியிட் டீர்த்தா ரீரிரு நூறு காதம். 31

பொ - ரை : நூறுகாததூரம் நடந்து கால் சோரும்படி வருத்தினர்; அஞ்சி ஓடும்படி பின்தொடர்ந்து நூறுகாததூரம் துரத்தினர்; கிடந்து உருண்டு வீழவும் விளங்கும் முடியைச் செடிகள் சிக்குண்டு இழுக்கும்படியும் இடந்தோறும் கயிறுகட்டி இருநூறுகாதம் இழுத்தனர்.

வி - கு : நலிந்தனர் நலிவித்தனர் எனப் பிறவினைப் பொருளில் வந்தது.

தூர்த்தன்வா யெறும்பு மீயுந் துதைந்திடப் பரதா ரங்கள்
பார்த்தகண் குடைந்து காகம் பருந்தினங் குருதி மாந்த
வேர்த்துட லயர்ந்து சோர மெய்யெலா நிணங்கள் சோர
ஈர்த்தனர் கொணர்ந்து தூத ரியமமா புரத்தி லுய்த்தார். 32

பொ - ரை : தூர்த்தனாகிய அவன்வாயில் எறும்பும் ஈயும் நெருங்கிமொய்க்க பிறர்மனைவியரைப் பார்த்தகண்களைக் குடைந்து காகமும் பருந்தும் இரத்தத்தைக் குடிக்க, உடல் வியர்த்துச் சோரவும், கொழுப்பு வெளிப்படவும் இழுத்துக் கொணர்ந்து தூதர் இயமனது நகரத்தில் விடுத்தனர்.

வரைபொரு புயமும் பாரத் தண்டமும் வடவை போல
நிரைதரு சிகையுஞ் சீறி நெருப்பெழ விழித்த கண்ணும்
பொருகழற் காலும் வீர தந்தமும் பொலியச் செங்கோல்
அரசுவீற் றிருக்கை கண்டா னச்சமுற் றயர்ந்து வீழ்ந்தான். 33

பொ-ரை: இயமன் மலைபோன்ற புயமும் பெரிய தடியும் வடவைமுக அக்கினிபோலச் சிவந்த தலைமயிரும் நெருப்பெழ வெகுளும் கண்களும் ஒலிக்கும் வீரக்கழலும் வீரப்பற்களும் உடையனுய் அரசுவீற்றிருத்தலைக் கண்டான் கவுற்சன் அஞ்சி அயர்ந்து கீழே விழுந்தான்.

விழுந்தவன் சிகைதொட் டீர்த்து விடுத்தனர் தொழுதார் நிற்பத்
தொழும்பரைத் தரும ராசன் சுருக்கொள வெறித்து நோக்கி
எழும்படர்க் கொடியோன் றன்னை யெற்றுமி னெறிமின் வாளால்
அழுந்துறத் தடிமி னென்ன வசனியே றஞ்ச வார்த்தான். 34

பொ-ரை: கீழே விழுந்தவன் சிகையைப்பற்றி இழுத்து இயமன் முன் விடுத்துத்தொழுது நின்றார்கள் தூதர்கள்; அறத்தெய்வமாகிய இயமன் விரைந்து மருளும்படி நோக்கி, எழுகின்ற அறப்பகையாகிய கொடிய இவனை உதையுங்கள், வாளால் துணிமின், வெட்டுமின் என ஆண் இடிபோல அதிர்ந்து கூறினன்.

சண்டனீ துரைப்ப வோடித் தருக்கினர் கொண்டு போந்தார்
கொண்டல்போ னிறத்தார் பாரக் கூளிபோன் முகத்தார் தீப்போல்
விண்டெரி சிகையார் விண்போல் வெடித்தெழு குரலார் கோபக்
கண்டக ருறுக்கும் வாயார் கனற்பொறி பறக்குங் கண்ணார். 35

பொ-ரை: இங்ஙனம் இயமன் கூறத் தூதர் செருக்கோடு அவனைக் கொண்டுபோயினர்; தூதர்கள் மேகம்போல் கறுத்த நிறமுடையர், பெரியபேய் போன்ற முகம்உடையர், தீப்போல் சுடர்ந்தெழும் சிகையினர், இடிபோல் வெடி படும் குரலினர், கோபமுடைய கீழ்மக்கள், கறுவும் வாயினர், கண்களில் நெருப் புப்பொறி பறக்க விழிப்பவர்.

கொட்டுகோல் கட்டு பாசங் குணில்பெரு முசலந் தண்டம்
வெட்டுவா ளிழுக்குந் தோட்டி தெறிக்கும்வில் குறைக்கு மீர்வாள்
கிட்டிமத் திகைவெஞ் சூலங் கிழிபட வெறியுங் குந்தம்
கட்டழ லிருப்புப் பாவை கப்பண மழுக்க ளன்றி. 36

பொ-ரை: அடிக்கும்கோல், பிணிக்கும் கயிறு, குறுந்தடி, பேர்உலக்கை, தடி, வெட்டுவாள், குத்தி இழுக்கும் அங்குசம், நாண் தெறிக்கும் வில், அரிந்து குறைக்கவல்ல கைவாள், இடுக்கி, சம்மட்டி, கொடிய மூவிலை வேல், கிழிபட எறியும் ஈட்டி, நெருப்பிற் காய்ச்சிய இரும்புப்பாவை, நெருஞ்சில்போல் உள்ள இரும்புமுள், மழு என்பவற்றை உடையராயினர் அத்தூதர்.

ஆட்டிய செக்கும் பூட்டி யரைக்குமெந் திரமுங் குத்தி
நாட்டிய கழுவுங் கவ்வு ஞாளியுங் கடிக்கும் பாம்பும்
பூட்டிய வடமுந் தூக்கும் விட்டமும் பொறியுந் தீயில்
வாட்டிய குறடுங் கோக்குந் தூண்டிலும் வலையுஞ் சூழ. 37

பொ-ரை: உள்ளிட்டு ஆட்டக்கூடிய செக்கு, சேர்த்துச் சுழற்றி அரைக்கும் எந்திரம், குத்தும்படி நாட்டிய கழுமரம், கவ்வவல்ல நாய்கள், கடிக்கும் பாம்பு, சுருக்கிட்ட கயிறும், தொங்கவிடும் விட்டமும், பொறிபறக்கும் தீயிற்காய்ச்சிய குறடும், கோக்கும் தூண்டில் முள்ளும், வலையும் சூழ இருந்தன.

உறுக்குவார் பதகர் தம்மை யுடலிடைப் பாசம் வீக்கி
இறுக்குவார் சினப்பா ரவ்வா றெற்றுவா ரெறிவார் செங்கை
முறுக்குவா ரடிப்பார் தண்டான் மோதுவார் கந்து கந்தா
நொறுக்குவார் கொடுமை யெல்லா நோக்குவான் புலம்ப லுற்றான். 38

பொ-ரை: உரப்புவர், பாவிகளை உடம்பிற் கயிற்றைக்கட்டி இறுக்குவார், கோபிப்பர், உதைப்பர், வெட்டுவர், கையை முறுக்குவார், அடிப்பார், தடியால் மோதுவர், சிற்சில்லாக நொறுக்குவார், இங்ஙனம் தூதர்செய்யும் கடிய தண்டங்களைக் கண்டு அழத்தொடங்கினான்.

இத்தனை கொடிது கால தண்டமென் றுணர்ந்தே னல்லேன்
கொத்தலர் குழலார் மோகக் குறும்பனேன் குரவன் வாக்கும்
சுத்தமென் றுணரேன் றீமை செய்தன னெண்ணில் கோடி
அத்தனை பாவ மல்லா லறஞ்செய்து மறியே னந்தோ. 39

பொ-ரை: இயமதண்டனை இவ்வளவு கொடியது என அன்று உணரவில்லை; மாதர் மயக்கில் ஈடுபட்ட சிறுமையேன் ஆசிரியன் உரையை மெய் என்று உணரவில்லை; அளவிறந்த தீமைகளையே புரிந்தேன்; தருமம் சிறிதும் செய்யவில்லையே! ஐயோ!

கழுவுக்கோ முறுக்கி வீசுங் கவணுக்கோ தறிக்குங் கோர
மழுவுக்கோ துணிக்கும் வீர வாளுக்கோ நரக வாதைப்
புழுவுக்கோ படைக ளோச்சிப் பொருக்கென வளைத்த தூதர்
குழுவுக்கோ வைய கோவென் னுயிர்ப்பலி கொடுப்பே னென்றான். 40

பொ-ரை: என் உயிரை எதற்குப் பலியாகக்கொடுப்பேன்? கழுவுக்கோ, சுழற்றி வீசப்படும் கவணுக்கோ. வெட்டும் அச்சந்தரும் மழுவுக்கோ, துணிபடுத்தும் வீரவாளுக்கோ, நரகவாதை செய்யும் புழுவுக்கோ, கருவிகளை ஓங்கிச் சூழும் தூதர் கூட்டத்திற்கோ? ஐயகோ! என்று பதறி அழுதான்

சிந்தனை கலங்கி யேங்கித் திடுக்கிடக் கையுங் காலும்
புந்தியும் பதறக் கண்ணீர் பொழிதரப் புடைநின் றானை
உந்தினர் பதைப்பத் தாளா லுதைத்தனர் தடிக ளோச்சி
முந்தின ருறுக்கி மீசை முறுக்கின ரொறுக்கு நீரார். 41

பொ-ரை: அறிவு கலங்கி ஏக்கம்கொண்டு அச்சமுடையனாய் கைகால், மனம் நடுங்கக் கண்ணீர் சொரிந்து பக்கத்தில் நின்றான் கவுற்சன்; அவனைப் பதைக்கும்படி எமன்பக்கத்தில் செலுத்தினர்; காலால் உதைத்தனர்; தங்கள் மீசையை முறுக்கி ஊங்காரம் செய்து தண்டனைசெய்யும் முறையில் தடிகளைமேலே ஓங்கி முற்பட்டனர்.

அந்தணர் குலத்தே வந்து மரும்பலி கொடுத்துண் ணாமல்
பொந்தெனப் பொசித்தான் வாயிற் புழுக்களை வாரி யிட்டார்
சந்திகள் குளியான் மேனி தழலிடைக் குளிக்கச் செய்தார்
மந்திர மோதா வாய்க்கு மட்டருப் புலப்பம் வைத்தார். 42

பொ - ரை : அந்தணர் குலத்தில் தோன்றியும் அதிதிபூசை செய்து உண்ணாத அவன் வாயில் புழுக்களை இட்டார்கள்; முச்சந்திகளில் நீரில்முழுகாத அவன் உடம்பை நெருப்பில் மூழ்கும்படி செய்தார்கள்; மந்திரம் சொல்லாத வாயில் முடிவில்லாத அழுகையைச் செய்வித்தார்கள்.

குலமனை மாதர் நெஞ்சங் கொதிகொதித் தயர வோடிப்
பலர்மனை தொறுஞ்சென் றானைப் பலமுனைக் கழுவில் வைத்தார்
உலகினிற் றந்தை தாயார் பசித்திட வுண்ட வாயின்
மலமொடு புழுவும் வாரி வயிறெலா நிரம்ப விட்டார். 43

பொ - ரை : தன் மனைவியாகிய குலமகள் மனம் வருந்தும்படி பிறர்க்கு உரியாரைத்தேடி அலைந்தவனைப் பல முனைகளையுடைய கழுவின்மேல் ஏற்றினர்; தாய்தந்தைப் பசித்திருப்பத் தனித்து உண்ட வாயில் மலமும் புழுவும் இட்டனர்.

வரைநிகர் கற்பு மாதர் வடிவினை நோக்குங் கண்ணில்
நிரைநிரை யாக வூசி நிறுத்தினர் பெரியோர் தம்மை
உரையினு லிகழ்ந்த வாயி லுதைந்துபல் லுகுத்தார் பின்னும்
குரைதரு குருதி சோரக் கொடிறுகள் கிழித்தார் மன்னே. 44

பொ - ரை : மலைபோலத் துளக்கமில் நெஞ்சுடைய கற்புடைய மாதரைக் காமுற்று நோக்கிய கண்களில் வரிசை வரிசையாக ஊசிகளை அழுத்தினர்; சான்றோர்களை இகழ்ந்த வாயிற்பற்களை உதிர்த்தனர்; ஓசையோடு செந்நீர் பெருகும் படி கன்னத்தை உடைத்தனர்.

பிறர்மனைக் கேகுங் காலைப் பிணித்தனர் துணித்து வீழ்த்தார்
மறுமனைக் கொடியைத் தீண்டு மணிக்கரந் துமித்தார் மாதர்
முறைகெடத் தழுவு மெய்யை முசலத்தால் வயிரத் தண்டால்
இறவிற வடித்து வீழ்த்தி யென்பெலா நொறுக்கி னரால். 45

பொ - ரை : பிறர் இல்லாளை நாடிச்சென்ற கால்களைக் கட்டித் துண்டாக்கினர்; அயலான் மனைவியைத் தொட்ட கைகளையும் அறுத்து வீழ்த்தினர்; முறை மாறாக மாதரைத் தழுவிய உடம்பை உலக்கையால், வயிரத்தடியால் எலும்பு நொறுங்கும்படி அடித்தார்கள்.

வேறு

எறிவ ளைக்கை யெளியவன் பாரியை
முறிப டுத்தி முயங்கிய மூடனைத்
தறித றித்துத் தசைதசை யாகவே
தெறிவில் லிட்டுத் தெறித்தனர் திக்கெலாம். 46

பொ - ரை : ஒளியுள்ள வளையல் அணிந்த ஒருத்தியை அவள் கணவன் எளிமை நோக்கி மாறுபடுத்தித் தழுவிய மூடனை உடம்பின் தசைகள் சிதறும்படி துண்டுப்படுத்து, திசையெலாம் தெறிக்கும் வில்லால் சிதறினர்.

மறுவில் காவலின் மாடத்துக் கன்னியை
வெறிம ருந்திட்டு மேவிய பாவியைக்
குறிது ணித்துக் குருதியும் வாய்ப்பெய்து
கறியும் பானமும் போற்கலந் தூட்டினர். 47

பொ - ரை: குற்றமற்ற காவலில் கன்னிமாடத்தில் உள்ளவளை மயக்கும் மருந்துகொடுத்துப் புணர்ந்த பாவியை அவன் ஆண்குறியைத் துணித்து அதனுற் சிந்தும் இரத்தத்தையும் சேர்த்து அவன்வாயில் கறியும் குடிக்கும் நீரும் போல உண்ணவைத்தனர்.

அத்தி ரத்தைப் பொருவிழி யந்நலார்
நித்தி ரைக்குட் கபடஞ்செய் நீசனைப்
பத்தி ரத்திற் பதைப்ப வுறுப்பெலாஞ்
சித்தி ரத்துணி யாக்கினை செய்வித்தார். 48

பொ - ரை: அம்புபோன்ற விழியையுடைய மாதரை அவர்தம் உறக்கத்தில் வஞ்சித்துப் புணர்ந்த இழிஞனை வாளால் சித்திரவதை செய்து இறைவன் ஆணையாகிய ஒறுப்பைச் செய்தனர்.

வருகை பார்த்தயன் மாதரைச் சோர்வுகண்
டிருகை யோச்சித் தழீஇயவன் யாக்கையைச்
சுரிகை யாற்கண்ட துண்டங்க ளாக்கியே
திரிகை யன்றியுஞ் செக்கிலிட் டாட்டினர். 49

பொ - ரை: அயல்மாதர் வருதல்கண்டு அவர் கவனக்குறைவைப் பயன் படுத்தி இருகைகளை நீட்டித் தழுவினவன் உடம்பை ஈரும்வாளால் துணிபடுத்திச் சக்கரத்தில் வைத்துச் சுழற்றுவதன்றிச் செக்கில் இட்டும் ஆட்டினர்.

அநித்த போக மெனுதயன் மாதரைத்
தனித்த கானிற் றழீஇயிதழ்த் தேனுணு
மனித்த னுனை மிருகனை வாய்கொளீஇத்
துனித்த மீனெனத் தூண்டிலிட் டாட்டினர். 50

பொ - ரை: பெண்களை அநுபவிக்கும் நுகர்ச்சி நிலையானதன்று எனக் கருதிவிடாமல், காட்டில் தனித்து உள்ள அயல்மாதரைத்தழுவி வாயமுதைப் பருகின மக்கள் வடிவில் உள்ள விலங்கைத் தூண்டிலை வாயில் கொள்ளும்படி செய்து, அங்ஙனம் வருந்தும் மீனைப்போல, சுழற்றினர்.

நம்ப ருக்கடி யாரைநல் லோர் தமை
அம்பி ருக்குங்கண் ணுரைமற் றுரையும்
வம்பு ரைத்த கொடியவன் வாயிடைச்
செம்பு ருக்கிச் சொரிந்தனர் தீயெழ. 51

பொ - ரை: சிவனடியாரை, நல்லோர்களை, அம்புபோன்ற கண்களை யுடைய பெண்களை, மற்றவர்களைப் பொய்புனைந்து, இழித்துரைத்த கொடியவன் வாயில் தீயெழும்படி செம்பை உருக்கி வார்த்தனர்.

கண்ட வூர்மனைத் தீயிட்ட கள்வன்மெய்
துண்ட மாக்கித் துகில்சுற்றி நெய்கடுஉய்
மண்டு கார்த்திகை வான்பனைத் தீபம்போல்
கொண்ட மேனி யெரியக் கொளுத்தினர். 52

பொ - ரை: தான் எளிதெனக்கண்ட ஊர் மனையில் தீவைத்த கள்வன் உடம்பைத் துணித்து, துணிசுற்றி எண்ணெய் சொரிந்து, நெருங்கிய கார்த்திகையில் பனைமரத்தின்மேல் ஏற்றப்படும் விளக்குப்போல, அத்தீய செயலுக்குக் கருவியாகக் கொண்ட உடம்பைத் தீவைத்துக் கொளுத்தினர்.

நடுக்கு ழப்பிய நாவரிந் தார்சிலர்
வடுக்கள் பேசிய வாய்கிழித் தார்சிலர்
கொடுத்து ணுத குடர்துமித் தார்கொடை
தடுத்த கையைத் தறித்தெறிந் தார்சிலர். 53

பொ - ரை: சிலர் நடுவு நிலையைப் பிறழச்செய்த நாவை அரிந்தனர்; குற்றம் பேசிய வாயைச் சிலர் கிழித்தனர்; கொடுத்துண்ணுது தானே முற்றிலும் உண்ட குடரைச் சிலர் துணித்தனர்; சிலர் பிறர் ஈவதைத் தடுத்த கைகளைத் துணித்து எறிந்தனர்.

புண்ட ரும்பொறிப் போகத்தைப் பொய்யெனக்
கண்டி டாது கணிகையர் காமத்தின்
மிண்ட ளுகி வெறிமது வூனுட
னுண்ட வாயிற் சிலரெரி யூட்டினர். 54

பொ - ரை: பின்னர் மாருத துன்பத்தைத் தரும் பெண்கள் நுகர்ச்சியைப் புரையுள்ளது எனத் தெளியாது, கணிகையரைப் புணர்தலில் தடித்தனம் உடையனுகி வெறியைத்தரும் மதுவுடன் ஊன் உண்டானது வாயில் சிலர் நெருப்பை இட்டனர்.

தாயுந் தந்தையும் போற்பர தாரத்தை
ஆயு மாறின்றிச் சேர்ந்தா னவாவறக்
காயும் வெங்கனற் பாவைகள் காட்டினர்
தோயுந் தோறும் பொறியெனத் துள்ளினன். 55

பொ - ரை: பிறர் மனைவியரைத் தனக்குத் தாய் எனவும் மகள் எனவும் புத்தி பண்ணுமல் புணர்ந்தவனது பெண் ஆசை கெடும்படி, சுடர்ந்து எரி எழும் உலோகத்தாற் செய்த பாவைகளைக் காட்டித் தழுவச் செய்தபோது, அவற்றின் மீது படியுந்தோறும் நெருப்புப் பொறிபோலத் துள்ளிவிலகினன்.

உறுப்பு றுப்பென வீர்ந்து முடலெலாம்
அறுத்த றுத்துத் துணித்து மவலனை
மறுத்து மேனி யிசைத்தும்வன் றூதுவர்
கறுத்து மோய்ந்தனர் கன்மங்க ளோய்ந்தில. 56

பொ - ரை : உடம்பை ஒலி எழும்படி துணித்தும், அறுத்தும் வீணனுக்கு மீள உடம்பாகச் சேர்த்தும், அவனை வெகுண்டும் இயமதூதர் வலிஅடங்கினர்; ஆயினும், அவன் வினைவலி மெலியவில்லை.

கண்டஞ் செய்யுங் கருவிக டேய்ந்தன
தண்ட கால படருஞ் சலித்தனர்
மிண்ட னுவியை மீளவுய்த் தாரரோ
கொண்ட நாலெழு கோடி நரகர்பால். 57

பொ - ரை : துணிக்கும் கருவிகள் தேய்ந்தன; ஒறுக்கும் இயமதூதரும் மனம் சலித்தனர்; அத்தடியன் ஆவியை இருபத்தெட்டு நரகில் உள்ளார்பால் கொடுத்தனர்.

மகுட வெற்றி மறலிதன் னேவலால்
விகட பத்திரன் வெம்பாச பாணியுந்
துகளி லுக்கிரன் றுன்முக னுதியா
முகடு முட்டிய தூதுவர் முன்னினர். 58

பொ - ரை : முடிபுனைந்த வெற்றியையுடைய இயமனது ஆணையால், விகடபத்திரன், கொடியபாசபாணி, குற்றமில்லாத உக்கிரன், துன்முகன் முதலாக அண்டத்து உச்சியை முட்டும் நெடிய தூதுவர் முற்பட்டு வந்தனர்.

கோடி கோடிநி காதக் கொடுமையும்
ஆடி யோடித் தவிப்பவ ராவியும்
தேடி யோடித் தருமஞ்செ யான்கண்டு
வாடி யோடி மறுகலுற் றனரோ. 59

பொ - ரை : அளவற்ற வஞ்சகக்கொடுமையும், ஆடியும் ஓடியும் தவிப்பவர் ஆவிகளையும், நூல்களை நாடி விரைந்து அறஞ்செய்யாத அப்பார்ப்பனன்கண்டு வாட்டமும் ஓட்டமும்கொண்டு மனம் சுழன்றான்.

நம்பி னோரைச் சதித்துநல் லோர்களை
வம்பி யற்றி யடைக்கலம் வஞ்சித்தான்
பம்பி யாவி பதைக்கப் பதைக்கவே
கும்பி பாகத்திற் குப்புறத் தள்ளினர். 60

பொ - ரை : நம்பினவரை வஞ்சித்து, நல்லோர்களுக்குத் தீங்கு செய்து, அடைக்கலப்பொருள்களை வஞ்சித்துக் கவர்ந்த அப்பார்ப்பனன் நெருங்கித் தன் உயிர் பதைபதைக்கும்படி கும்பிபாகம் என்னும் நரகில் தலைகீழாக விழும்படி தள்ளினர்.

சிவத்த லந்திரு மால்வள ராலயந்
தவத்தர் வாழ்மடம் புண்ணிய சாலைகள்
அவத்த மாக வலைத்தவ னுவியைக்
கவற்று பாழ்நர கத்திடை வீழ்த்தினர். 61

பொ-ரை: சிவவிஷ்ணு திருக்கோயில்கள், தவம் செய்வோர் வாழும் மடங்கள், அறச்சாலைகள் என்பவை வீண் ஆகும்படி தொல்லைகள்கொடுத்தவன் உயிரைக் கவலையைத் தரும் பாழ் நரகத்தில் வீழ்த்தினர்.

தேவ தாயங்கள் வேதியர் செய்கண்மேற்
கோவி னுலிறை கூட்டிக் கொடுமைசெய்
பாவி யாவி பதைபடக் குத்தியே
ஏவி னுரெரி வாய்நர கத்திடை. 62

பொ-ரை: தெய்வங்களுக்கு விடப்பட்ட சொத்துக்கள் வேதியர்க்குத் தானஞ்செய்த நிலம் என்பவற்றின்மேல் அரசன் மூலமாக வரிகளை மிகுதியாக்கிக் கொடுமை செய்த பாவியை உயிர் பதைக்கும்படி குத்தி எரிவாய் நரகத்தில் இட்டனர்.

அச்சி வாலய மாறு படித்துறை
மச்ச வாவிகள் சார மலம்விடுந்
துச்ச னுவி துடிக்கத் துடிக்கவே
மிச்சில் வாய்நர கத்திடை வீழ்த்தினர். 63

பொ-ரை: சிறந்த சிவாலயம், ஆற்றுப்படித்துறை, மீன்கள் வளரும் வாவிகள் என்பவற்றிற்குச் சமீபத்தில் மலம் கழித்த கீழ்மகன் ஆவி துடிக்கும்படி எச்சிலே மிகுந்த நரகத்தில் தள்ளினர்.

ஆளும் வேந்தர்க் கநீதிக ளோதியும்
மீள மீளக் குடிக்கிறை மேல்வைத்தும்
கோளு ரைத்துங் குறும்புசெய் கோளனைக்
காள கூட நரகிற் கவிழ்த்தனர். 64

பொ-ரை: அரசனுக்கு அநீதியை நீதி என உணர்த்தியும், மேலும் மேலும் குடிகளுக்கு வரிகளை மிகுதிப்படுத்தியும், புறங்கூறியும் கீழானதன்மையில் நடந்தவனை நஞ்சுமிக்க நரகில் வீழ்த்தினர்.

கூட நின்று குளிர்தரப் பேசியே
கூட கத்தொழில் செய்யுங் கொடியனைக்
கூட சன்மலிக் கும்பியிற் றள்ளியே
கூட மத்திகை கொண்டறைந் தாரரோ. 65

பொ-ரை: உடனிருந்து இனிமையாகப் பேசி வஞ்சனைச்செயல் செய்த கொடியோனை அதற்கு உரிய நரகத்தில் தள்ளிச் சௌக்கால் அடித்தனர்.

முழுக்குஞ் சந்தியு மோனமு மந்தணர்
ஒழுக்க முந்தவிர்த் தூனுண்ட மூடன்மெய்
புழுக்கள் சோர்தரப் புள்ளினங் குத்தவே
நழுக்கு கோர நரகி லழுத்தினர். 66

பொ - ரை: காலங்களில் நீரில் முழுகுதலும், சந்திக்கடன் இறுத்தலும், வேள்வி செய்தல் முதலிய தன்வருணத்திற்கு உரிய ஒழுக்கத்திற் பிறழ்ந்து ஊன் உண்ட அறிவிலியின் உடம்பில் புழுக்கள் தோன்றும்படி பறவைகள் குத்தித் தின்னும் வருத்தந்தரும் கொடிய நரகில் இட்டனர்.

வீழும் புள்ளும் விலங்குங் கொலைசெய்து
வாழுங் காவின் மரங்குறைத் தான்றனை
யாழுங் கும்பி யசிபத் திரமெனும்
போழும் பூழி நரகிடைப் போக்கினர். 67

பொ - ரை: விரும்பிவரும் பறவைகளையும் விலங்குகளையும் கொன்று மக்களுக்கு நிழல் முதலியவை உதவிவரும் சோலையிலுள்ள மரங்களை வெட்டிய பாவியை கும்பி அசிபத்திரம் என்னும் ஆழ்ந்த, உடம்பைப் பிளக்கும் புழுதி மிகுந்த நரகில் எறிந்தனர்.

வேறு

விரகினற் பிறர்பொருள் வலிதின் வெஃகிய
கரவடக் கவடனைக் கால சூத்திர
நரகிடை வீழ்த்தினர் நன்றி கொன்றதால்
இருளெனு நரகிடை யெறிந்திட் டாரரோ. 68

பொ - ரை: திறமையால் பிறர்பொருளைக் கவர விரும்பிய வஞ்சனைக் கால சூத்திர நரகில் தள்ளி, செய்ந்நன்றி கொன்றமைக்காக இருள்சூழ்ந்த இன்னு உலகில் இருக்கவைத்தனர்.

வேறு

மட்டருத் தண்டந் தோறு மாமுனைக் கழுக்க டோறு
நட்டதூ துவரு மோய்ந்தார் நரகமுஞ் சலித்த தன்றிச்
சட்டமார் நமனுங் கூற்றுஞ் சலித்தனர் கவுற்ச னென்பான்
பட்டபா டெளிதோ வம்மா பாவமுஞ் சலித்த தன்றே. 69

பொ - ரை: அளவில்லாத தண்டனைகளும் கழுக்கள் நடுதலும் செய்த தூதுவர் சலித்தனர்; நரகமும் சலித்துவிட்டது; ஒழுங்கில் நிற்கும் நமனும் தூதனும் சலித்தனர்; கவுற்சன் பட்ட துன்பம் அளவற்றது; பாவமும் சலித்தது.

## மகன் செயல்

ஈங்கிவை நிகழுங் காலை யிவன்பெறு சுகுற்ச னென்பான்
பாங்குறு மன்னை சீரார் பழமறைக் குழாத்திற் சார்ந்து
தேங்குநீர்ப் பழனஞ் சூழுந் திருநகர்க் காஞ்சி நண்ணி
யாங்குல வொழுக்கம் பூண்டா னலரிபி னரும்பு போல. 70

பொ - ரை: இங்ஙனம் கவுற்சன் நரகத்துயர் உழக்கும் போது, இவன் மகன் சுகுற்சன் தன்தாய் வீட்டாராகிய மறையவர்களைச் சார்ந்து காஞ்சித் திருநகர் புகுந்து, ஞாயிற்றைக்கண்ட தாமரை அரும்புபோலத் தன்குல ஒழுக்கம் பூண்டு மேம்பட்டான்.

மானமா மறைக ளோதி மறைச்சிறார் கணத்து நூல்கள்
ஞானமாற் சுகுற்ச னென்பா னவில்கின்ற நாளி லவ்வூர்த்
தானமா மறுகு தோறுஞ் சவைதொறுந் தாதை செய்த
ஈனமாம் பழிபா வங்க ளிருசெவி யுளையக் கேட்டான். 71

பொ - ரை: சுகுற்சன் வேதபாடசாலையில் மறைச் சிறுவர்களுடன் பயின்று வரும் நாளில் அந்நகரில் இடந்தோறும் சபைதோறும் தன்தந்தை செய்த பழி பாவங்களைப் பிறர் கூறக் கேட்டு வருந்தினன்.

கோதிலா மறையோ னாகிக் குற்சர்கோத் திரத்தில் வந்தும்
பாதகம் புரிந்தா னந்தோ பாற்கடல் விடம்போற் றோன்றித்
தாதைமுன் புரிந்த பொல்லாத் தவறெலாங் கேட்கி லென்றன்
காதையும் வெதும்பச் சுட்டுக் கருத்தையுங் கருக்கு மாதோ. 72

பொ-ரை: குற்சர் கோத்திரத்தில் குற்றமற்ற மரபில் தோன்றியிருந்தும் தன் தாதை பாற்கடலில் எழுந்த ஆலகாலவிடம்போல் தோன்றினன்; அவன் செயல்களைக் கேட்கும்போது செவிசுட மனம் வேகிறது எனக் கூறினன் சுகுற்சன்.

பகரரும் பாவஞ் செய்தான் பவர்க்கம்வீழ் படரை மாற்றச்
சகரரை மீட்ட சேய்போற் றவஞ்செய வல்லே னல்லேன்
மகவென லவன்பாற் றோன்றும் வன்பழி கழுவ வீதே
திகழுறு நெறியென் றுன்னித் தீர்த்தயாத் திரைமேற் சென்றான். 73

பொ - ரை: சொல்லற்கரிய பாவஞ்செய்த கவுற்சன் நரகில் வீழும் துன்பத்தைப்போக்க சகரர்களை நரகினின்றும் மேலேற்றிய பகீரதன்போல் தவஞ்செய்யும் ஆற்றல் எனக்கு இல்லை; ஆயினும், கவுற்சனுக்கு மகனாகத் தோன்றிய பழி நீங்குதற் பொருட்டுச் செய்யற்பாலது தீர்த்த யாத்திரையே என எண்ணி, அதனை மேற்கொண்டான் சுகுற்சன்.

வி - கு: பவர்க்கம் - நரகம். படர் - துன்பம்.

குளிப்பவர் பாவஞ் சீக்குங் குரைதிரை வார ணசி
தெளிக்குநீர்ச் சோணை வாணி சிந்துநன் மதைகா ளிந்தி
விளித்தெறி தரங்கக் கோதா வரியுங்கா விரியு மாடி
அளிப்புனற் சேது வைகை யரும்பெறற் பொருனை மூழ்கி. 74

பொ-ரை: தன்கண் மூழ்குவோர் பாவத்தைக் கெடுக்கும் வாரணசியிலுள்ள கங்கை, சோணை, சரசுவதி, சிந்து, நன்மதை, யமுனை, தன்கண் வந்த பொருளை ஆழ்த்தி மீள வெளியே எறியும் அலைகளையுடைய கோதாவரி, காவிரி என்பவற்றில் முழுகி, சேது, வைகை, தாம்பிரவன்னி என்பவற்றிலும் முழுகினன்.

தவமது கங்கை யெய்திச் சராசர மான வானோர்
பவமது கங்கை நீத்த படிமையு மாகத் திங்கண்
அவமது கங்கை யாதி நதிகள்சேர் கதியு நோக்கிச்
சிவமது கங்கை பொங்குந் திரிகூடச் சாரல் சார்ந்தான். 75

பொ - ரை: தவமாகிய மதுகம் (தேன்) கையில் வரப்பெற்று, சராசரங்களும் வானேரும் தம்முடைய பாவமாகிய மதுகம் (கைப்பை) கையினின்றும் நீங்கிய தவவேடத்தையும், மாசித்திங்களில் புதுமைவிளேய கங்கை முதலிய பிற ஆறுகள் வந்து சேரும் நெறியினையும் நேரிற்கண்டு சிவமதுகங்கை பெருக்கெடுக்கும் திரிகூடமலைச்சாரலை அடைந்தான் சுகற்சன்.

தருமமே முதல நான்குந் தரணியில் வேட்டோர் யாரும்
வருகெனத் திரைக்கை காட்டி வந்தவர் பவங்க ளோடப்
பொருசிலை யம்பு பூட்டிப் புண்ணியத் திரிகூ டத்தில்
அருளொரு வடிவாய்த் தோன்று மருவிகண் குளிரக் கண்டான். 76

பொ - ரை: அங்குள்ள அருவி உலகில் உள்ள யாரும் அறம் முதலிய நான்கினையும் பெற விரும்புவோர் இங்கு வருக என அலைகளாகிய கையால் காட்டுகின்றது; இந்திர தனுவில் அம்பை (நீரை)ச் சேர்க்கின்றது; புனிதமான திரிகூடத்தில் திருவருளே வடிவெடுத்தாற் போன்றுள்ளது; இதனைக் கண் குளிரும்படி கண்டு மகிழ்ந்தான் அவன்.

வேறு

நாடினன் வடவருவி நண்ணின னதிமகிமை நயந்து பாடி
ஆடின னகங்குளிர்ந்தா னஞ்சலித்தான் விஞ்சுதவ மனந்தங் கோடி
தேடினன் மதுமலர்கள் சிந்தினன் கரமலர்கள் சென்னி மீதில்
சூடினன் திரிகூடச் சிவக்கொழுந்தைத் தொழுதாடித் துள்ளி னுளைல். 77

பொ - ரை: வடவருவியைக்கண்டு சேர்ந்தான்; அதன் பெருமையை விரும்பிப் பாடி ஆடிக் கைகூப்பினன்; மேம்பட்ட அளவில்லாத தவத்தைப் பெற வேண்டி மலர்கள் தூவிச் சிரமேற் கைகூப்பித் தொழுதான்; சிவமூர்த்தியைத் தொழுது அன்பு வயப்பட்டான்.

துங்கமறை பலவோதி யங்கமுறை
பயில்கேள்விச் சுகுற்ச னென்பான்
அங்கமர்ந்து வடவருவித் துறையாடி
வருநாளி லவனை யீன்றேன்
பங்கமுற நரகினிடைப் படுந்துயரு
மவனையிடர் படுத்துந் தூதர்
தங்கள் பெருஞ் சலிப்புமெதிர் காண்டோறும்
யாழ்முனிவன் சலித்து நோக்கி. 78

பொ - ரை: உயர்ந்த பல மறைகளும் ஓதி அதன் அங்கங்களை முறையாகக் கற்றுணர்ந்த சுகுற்சன் இவ்வாறு வடவருவித்துறையில் நீராடி வந்தான்; நாரதர் அந்நாளில் அவன்தந்தை நரகத்தில் துயர் உறுவதையும் எமதூதர்கள் கை சலிப்பதையும் நோக்கிச் சலித்தார்.

மானமார் புலனெடுக்கிக் கண்முகிழ்த்து யோகிருந்து மனதுக் கெட்டா
ஞானமார் விழிதிறந்து பார்த்திடலு மவனழுந்து நரகவாதை
ஆனமா பிரமகற்பந் தொலைந்தாலுந் தொலையாதா லதுவா னலும்
ஈனமார் மறையவனேர் மகவீன்ரு னரவமணி யீன்றதேபோல். 79

பொ-ரை: அவர் கண்மூடி யோகிருந்து யோகக்காட்சியில் காணும் போது, கவுற்சன் செய்த பாவம் பிரமகற்பம் முடிந்தாலும் தொலையாத அளவு மிகுந்திருந்ததையும், கொடிய பாம்பு மணியை ஈன்ருற்போல, அவனுக்கு ஒரு நன்மகன் இருப்பதையும் கண்டார்.

சிவநாமம் புகழ்ந்தமரர் திரண்டாடுந் திரிகூடஞ் சென்று சேர்ந்து
புவனுதி களிலுயர்ந்த புடார்ச்சுனமா புரமேவிப் புனித ரோடும்
நவநாத சித்தரொடும் பத்தரொடுஞ் சித்திரமா நதிதோய் கின்ருன்
அவனலே யிவன்பாவ மகலுமெனத் தெருள்கூர்ந்தா னருளான் மிக்கான். 80

பொ-ரை: அவன்மகன் தேவர்கள் சிவநாமம் சொல்லிக் கூடிப்புகழும் உலகில் முதன்மையான நகரங்களுட் சிறந்த புடார்ச்சுனபுரம் சேர்ந்து புண்ணியர்களும் ஒன்பது சித்தர்களும் பத்தர்களும் முழுகும் சித்திராநதியில் நீராடி வருதலின் அவனல் இவன் பாவம் தீர்தற்கு உரியது என உணர்ந்தார்.

பெரியபிரான் திரிகூட மிவனலே
யாமுமெய்தப் பெறுவோ மென்று
புரிசடிலம் புறத்தசைய மகதியாழ்
பிடித்தமுனி போத லோடும்
குருநிலைமைக் குற்சர்பெருங் குலதீபங்
கண்டுமனங் குழைந்து தாழ்ந்து
பரிவினுட னருக்கியபாத் தியங்கொடுத்து
மலர்தூவிப் பணிந்தான் மன்னே. 81

பொ-ரை: அவனைக் காணும்முறையில் யாமும் திரிகூடம் சென்றுசேர்வோம் எனக் கருதி மகதி யாழ் ஏந்திய முனிவர் விரைந்து, திரிகூடம் வந்தார்; குற்சர் குலவிளக்காகிய சுகுற்சன் அவரைக் கண்டு வணங்கி அடிக்கும் முடிக்கும் உரிய தூநீர் கொடுத்து மலர் தூவிப் பணிந்தான்.

எம்பிரா னெழுந்தருளி வந்தவா றென்னையென வியம்பு மேல்வை
நம்பிநீ யினிதிருப்ப வுந்தைநர கிடைக்கிடக்கை நன்றே வென்று
தும்புருவி னெதிர்பாடற் சுருதியாழ் முனியுரைப்பச் சுகுற்சன் போற்றி
வெம்புபெருந் தாதைதுயர் தீர்க்குமா றருளுகென விளம்ப மேலோன். 82

பொ-ரை: தும்புருவிற்குச்சமமாக இசைமீட்டவல்ல நாரதர் சுகுற்சனுக்கு அவன் தந்தை நரகில் வாடுவதை உணர்த்த, சுகுற்சன் அது தீர்க்கும் வகையை அருளும்படி வேண்டினன்.

யாகமா மறைப்புதல்வ நரகம்விடுத் துந்தைகரை யேற வேண்டில்
பாகமாம் வடவருவி படிந்தவோ ராண்டிலிரு பாகந் தன்னில்
யோகமா முத்தரபா லயனத்தின் மதியாறி லுயர்ந்த மாசி
மாகமா டியபலனிற் பன்னிரண்டாந் திதிப்பலனை வழங்கா யென்றான். 83

பொ - ரை: நீ ஓர் ஆண்டு வடஅருவியில் நீராடி உள்ளாய்; அதில் உத்தராயணத்தில் மாசிமாதத்தில் துவாதசியில் ஆடியதின் பயனைத் தந்தைக்குக் கொடு என்றார்.

என்னநா ரதனுரைப்பச் சுகுற்சனெனும்
பாலனெழுந் திதயங் கூர்ந்து
நன்னகர்ச்சித் திரநதிதோ யோராண்டி
லீரயன நடப்பில் வானோர்
மன்னுமுத்த ராயணத்தின் மதியாறின்
மாகமா மதியின் முன்னும்
பன்னிரண்டாந் திதிப்பலனைச் சனகனுக்கென்
றுதகமுடன் பரிவா லீந்தான். 84

பொ - ரை: கேட்டதும் மாசிமாதத்தில் பூருவபக்கத் துவாதசியில் ஆடிய பயனைத் தன்தந்தைக்கு எனத் தத்தம் செய்தான்.

வி - கு: சனகன் - பெற்றவன்.

## தத்தம் செய்தல்

### வேறு

சுமுக வேதியன் சித்திர நதியிலோர் தினப்பலன் சொரிதாரை
சமர பாதகக் குறும்பெறி புண்ணிய தாரையோ வவன்றாதை
திமிர தாரைதீர் செங்கதிர்த் தாரையோ தீவினை விடந்தீர்க்கும்
அமிர்த தாரையோ வாருயிர்த் தாரையோ யாதென வுணரேமால். 85

பொ - ரை: இன்முகத்தோடு சுகுற்சன் தன் ஒருநாளைய புண்ணியத்தைத் தானம்செய்து வார்த்தநீர்ஒழுக்கு, போட்டியிடும் பாவத்தின் செயலை மடங்கச் செய்யும் புண்ணியத் திரளும் ஆகும்; அவன் தந்தைசெய்த பாவ வல்இருள் துமிக்கும் ஞாயிற்றின் ஒளிக்கற்றை எனலும் ஆகும்; தீவினையாகிய நஞ்சைத் தீர்க்கும் அமுததாரையும் ஆகும்; அரிய உயிர்ப்பைத்தரும் ஆற்றலின் திரளும் ஆகும்.

சுவர்க்க நாடரும் விமானமோ டெழுந்தனர் சுகுற்சனைப் பயந்தானைப்
பவர்க்கம் யாவையுங் கரைமிசை விடுத்தன பயந்தனர் நமன்றூதர்
கவுற்ச னாகிய வேதியர் கொணர்கெனக் காலனுய்த் திடவோடி
அவற்கொ ணர்ந்தனர் தூதுவர் தருமனா ரணிவட திசைமார்க்கம். 86

பொ - ரை: சுவர்க்கத்தில் உள்ளோர் விமானம் கொண்டு புறப்பட்டனர்; நரகங்கள் கவுற்சனைத் தம் கரைக்கண் உய்த்தன; தூதர் அஞ்சினர்; காலன் உத்தரவின்படி அவர் ஓடிச்சென்று கவுற்சனைத் தருமனது ஊரின் வடதிசை வழியில் கொண்டு வந்தனர்.

## நற்சாட்சிகள்

தந்தை தாயரைப் பூசனை புரிந்தவர் தனையரைப் பயந்தோர்கள்
முந்தை மாதுலர் முன்னவ ரியம்பிய முறைமையி னெறிநின்றோர்
சிந்தை வாக்கினுந் தீமையி லாதவர் தெய்வத மிகழாதோர்
அந்த மில்பெருஞ் செல்வரா யுறைதரு மரசவீ திகள்கண்டான். 87

பொ - ரை: கவுற்சன் வந்தவழியில் தாய்தந்தையரை வணங்கினவர்கள், நன்மக்களைப் பெற்றோர், மாமன் முதலிய மூத்தோர் சொல்லைக் கடவாதோர், மனமொழி செயல் தூயராய் வாழ்ந்தவர், தெய்வம் இகழாதோர் என்னும் இவர் பெருஞ்செல்வராய் இன்புடன் வாழும் அரச வீதிகளைக் கண்டான்.

கணவ னைத்தினந் தொழுதெழு மடந்தையர் கணவனோ டுறைவாரும்
துணைவன் மாய்தலி னவனுட னிறந்தவர் துணைவனோ டுறைவாரும்
பிணையி யம்பியுந் துணைவரா யுதவியும் பிறர்பயந் தீர்த்தாரும்
இணையில் செல்வராய் மாடகூ டந்தொறு மினிதுறை தெருக்கண்டான். 88

பொ - ரை: கணவனை நாள்தோறும் தொழுதெழுந்த கற்புடைமகளிர் கணவனோடு இப்போது உறைபவரும். கணவன் முன், இறந்து உடன்கட்டை ஏறி இப்போது உடன் உறைவாரும், தாம் பிணைந்து பொறுப்பைச் சமமாக ஏற்றும், துணைவராய் உதவிசெய்தும் பிறர் அச்சம் தீர்த்து ஆதரித்து இப்போது பெருஞ் செல்வராய் வாழ்வோரும் ஆகிய இவர்கள் மாளிகைகளில் இன்புற்று வாழும் தெருவைக்கணடான்.

தடங்கள் கூபங்கள் கல்வினோர் பலன்படு தருக்கள்சோ லைகள்வைத்தோர்
இடங்க ளில்லவர்க் கில்லிடங் கொடுத்தவ ரெழுமழைக் குளிர்காலம்
படங்கள் போர்வைக ளளித்தவர் கோடைநாட் பாதுகை குடையீந்தோர்
மிடைந்த செல்வரா யுபரிகை தொறுந்தொறும் வீற்றிருப் பனகண்டான். 89

பொ - ரை: குளம் கிணறு தோண்டிப் பிறருக்கு உதவினோர், பயன் உள்ள மரச்சோலைகள் வைத்துப் பாதுகாத்தவர், வீடில்லாதவர்க்கு வீடு வாங்கிக் கொடுத்தோர், மழை குளிர் காலங்களில் உடையும் போர்வையும் கொடுத்தோர், வெயிற்காலத்தில் அடிநிலை, குடைகள் ஈந்தவர் - இப்போது பெருஞ்செல்வராய் மேல் மாளிகைகளில் சிறந்து வாழ்வதைக் கண்டான்.

மானங் காத்தவர் வன்பிழை பொறுத்தவர்
மறையவர்க் கிடர்தீர்த்தோர்
தீன முற்றவர்க் கஞ்சலென் றுதவினோர்
செல்லல்கூர் சிறைமீட்டோர்

பான பாத்திரங் கொடுத்தவர் நிறைதண்ணீர்ப்
பந்தர்பா தையில்வைத்தோர்
சேனை காவல ராய்வளர் மன்றமுஞ்
செச்சையும் பலகண்டான். 90

பொ - ரை : உயிரைக் கொடுத்துத் தம் பெருமையினையும் பிறர் பெருமையினையும் காத்தவர், கொடிய பிழையைப் பொறுத்துக்கொண்டவர்; அந்தணர்க்கு ஏற்பட்ட இடையூற்றைக் களைந்தவர், வறுமை உற்றவர்க்கு அச்சம் தீர்த்து உதவினவர், துன்பம் மிகும் சிறையினின்றும் நல்லோரை மீட்டவர், குடித்தற்குத் தண்ணீர் குவளை கொடுத்தவர், பலர் செல்லும் வழியில் தண்ணீர்ப்பந்தர் அமைத்து நீரும் நிழலும் வழங்கினவர் எனும் இவர் சேனைகாவலராய் வளரும் மன்றங்களும், மேல் மாடங்களும் பல கண்டான்.

தடந்தொ றுந்தமர் பிதுர்ப்பலி யிடுதலிற்
றழைப்பவர் பதங்கண்டான்
இடந்தொ றும்பொலி வளத்தினல் யமபுர
மிதுகொலோ வெனச்சென்ருன்
அடர்ந்த மாநகர் வீதிகள் பலகடந்
தந்தகன் திருக்கோயில்
மடங்கள் சாலைகள் வைத்தவர் தலைமைசெய்
வாய்தலின் வழிக்கொண்டான். 91

பொ - ரை : தீர்த்தங்கள்தோறும் தம் வழியின் வந்தோர் பிதுர்க்கடன் செய்தலினல், தாம் மகிழ்ந்து வாழும் பிதுரர் பதத்தையும் கண்டான்; இடந்தோறும் பல வளங்கள் தழைத்தமையின் இது இயமபுரம் தானே என்று ஐயுறவும் கொண்டான்; நெருங்கிய பல வீதிகளைக்கடந்து அந்தகன் வாயிலை அடைந்தான்; அங்கு, உலகில் மடங்களும் சாலைகளும் வைத்த நல்லோர்கள் தலைமைப் பதவியில் இருந்தனர்.

அன்ன தானமிட் டையமிட் டுண்டவ
ராதுலர் மிடிதீர்த்தோர்
சொன்ன தானமுந் துலங்குகோ தானமுஞ்
சுருதிவே தியர்க்கீந்தோர்
என்ன தானமு மேற்பவர்க் களித்தவ
ரிமையவர் பதமேய்க்கும்
பொன்னின் மண்டபந் தொறுந்தொறுந் தலைவராய்ப்
பொலிந்திருப் பனகண்டான். 92

பொ - ரை : அன்னதானம், ஐயம் இட்டு உண்டோர், இரப்பவர் வறுமையைப்போக்கினவர், பொன், பசு என்பவற்றை ஒழுக்கமுடைய வேதியர்க்குத் தானம் செய்தோர், ஏற்பவர்க்கு எதனையும் கொடுத்தவர் என்போர் தேவர்பதம் போன்ற பொன்செய் மண்டபங்களில் தலைவராய் விளங்குதலைக் கண்டான்.

தருமம் வாழ்த்திட முறைமுறை யிருதுவின் றருதிகள் பணிகேட்பக்
கரண மேலவர் புண்ணியம் பகர்ந்திடக் கானவிஞ் சையர்பாட
வரம டந்தையர் கவரிகா லசைத்திட வமரர்தா னவர்சூழ
நிருபர் போற்றிடத் தென்புலக் கோமக னிறைந்தபே ரவைகண்டான். 93

பொ-ரை: இறுதியில் கவுற்சனன் இயமதருமன் திருவோலக்கம் வீற்றிருக்கும் வளம் நிறைந்த பேரவையைக் கண்டான்; அவனை அறக்கடவுள் வாழ்த்தியது; பருவங்களின் செயல்கள் பணிகேட்டன; கணிதத்தில் வல்லோர் அவரவர் செய்த புண்ணியங்களைக் குறிப்பினின்றும் படித்தார்கள்; இசை வல்லோர் பாடினர்; உயர்ந்த மாதர் கவரியால் காற்றை அசையச் செய்தனர்; தேவரும் அசுரரும் சூழந்திருப்ப அரசர்கள் போற்றினர்.

தேவர் தாபதர் சயசய சயவெனத் திரள்புயத் தடமேருத்
தாவுங் குண்டலங் கதிர்செய முகமதித் தளிர்நகை நிலவூரப்
பூவின் பொன்னரி யாசனத் துறைநமன் புண்ணிய வுருநோக்கிக்
காவ லன்றனக் கிதுகொலோ வடிவெனக் கண்களிப் புறநின்றுன். 94

பொ-ரை: தேவரும் முனிவரும் வெற்றி கூறினர்; உயர்ந்த மலைபோன்ற புயங்களில் காதில் அணிந்த குழைகள் புரண்டு ஒளிவீசின; திருமுகம் நிலவு எறித்தது; பொலிவையுடைய பொற்சிங்காதனத்தில் இங்ஙனம் நமன் அமர்ந்திருக்க, அவன்றன் புனிதமான உருவைநோக்கிக் கண்களிப்ப வியந்து நின்றுன் கவுற்சனன்.

பாவர் சங்கமும் பாவர்வே டமுங்கொடு பாவர்தண் டனஞ்செய்வான்
தேவர் சங்கமுந் தேவர்வே டமுங்கொடு செம்மையோர்க் கருள்செய்வான்
யாவர் பண்பினு நடுநெறி யியற்றலாற் றருமனென் றிவனுமம்
ஆவ தென்றனர் தூதுவர் துதிசெய வதிசயித் தெதிர்சென்றுன். 95

பொ-ரை: எங்கள் தலைவன் பாவிகளுக்குப் பாவ உருக்கொண்டு தண்டனை தருவான்; புண்ணியஞ் செய்தார்க்கு ஒளிமேனிகொண்டு அருள் செய்வான்; யாவரிடத்தும் நடுநிலை குன்றுமையால் தருமன் என்னும் பெயருடையன் எனத் தூதுவர் கூறித் துதிக்க, கவுற்சனன் வியப்புணர்வுடையனுய் இயமதருமன் எதிர்சென்றுன்.

கண்டு போற்றலு நமன்முக மலர்ந்துளங் கனிந்துநின் மகவாலே
தண்ட நீங்கினை சித்திர நதிப்பலன் றருகையா லெனுமேல்வை
அண்ட ரார்த்தனர் துந்துபி யார்த்தன வார்த்தன மலர்மாரி
கொண்ட பொன்மணி மானமே லேற்றினர் குற்சர்கோத் திரத்தானை. 96

பொ-ரை: நமனைக்கண்டு துதித்தபோது, அவன் குற்சர் கோத்திரத்தில் தோன்றியவனைப் பார்த்து, நின்மகன் சித்திரநதியில் மூழ்கிய நல்வினைப் பயனை நினக்குக் கொடுத்தமையால், நரக தண்டனையினின்றும் பிழைத்தனை என முகமலர்ந்து உளங்கனிந்து கூறினன்; உடனே தேவர்கள் பொன்மணி விமான மேல் ஏற்றினர்; அப்போது தேவர் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தனர்; மலர் மாரி பொழிந்தது; முரசு அதிர்ந்தன.

### வேறு

புகப்பெற்ற நரகமெலாங் கரைவிடுப்பத்
தென்புலத்தார் புகழ நீங்கி
இகப்புற்றுன் மறலியும்பின் சென்றுவழி
விடப்பெற்று னிறுமாப் பெய்தி
உகப்புற்றுன் றிரிகூட மெதிர்தொழப்பெற்
றுன்மறையோ னுணர்வான் மிக்க
மகப்பெற்றூர் பெறும்பேறு மற்றெருவர்
பெறுவாரோ வைய மீதில். 97

பொ - ரை: தன்னை விழுங்கிய நரகம் எல்லாம் மீளக் கரைசேர்க்கத் தூதர் புகழ இயமபட்டணத்தை நீங்கப்பெற்றுன்; நமனும் பின் சென்று வழி அனுப்ப பெருமிதமும் மகிழ்ச்சியும் உடையனுய்த் திரிகூடம் நேர் தோன்றத் தொழப்பெற்றுன் மறையவன்; நல்லறிவுள்ள மகப்பேற்றுல் வரும் பயன் பிறி தொன்றுல் கிடைத்தல் அரிது.

அண்டரொடு வானமிசை மானமிசை வருவானை யவன்சீர் மைந்தன்
கண்டுநா ரதற்பரவித் தென்றிசையி லுதிக்குமொரு கதிரோ னென்ன
ஒண்டொடிக்கற் புடையவள்வா யுனைப்பெற்றுன் றனக்குநீ யுவப்பா லீந்த
மண்டுபுனற் சித்திரமா நதிப்பலனின் மகிமையதோ வருவ தென்றுன். 98

பொ - ரை: தேவர்சூழ விமானத்தில் வந்தவனைக் கண்ட அவனுடைய மைந்தன் நாரதருக்குக் காட்டி, இஃதோர் ஞாயிற்றின் உதயம் என அவர் உன்னைக் கற்புடைய மனையாள்மூலம் பெற்ற நின் தந்தையின் வருகையே அது; நீ மகிழ்ந்து கொடுத்த சித்திரநதி முழுக்கின் பயனே அது என அறிவித்தனர்.

அந்தமொழி நிகழாமு னந்தரவி
மானமிழிந் தந்த ணாளன்
வந்துமுனி தாள்பணிந்தான் மைந்தனெழீஇத்
தந்தையடி வணங்கி வீழ்ந்தான்
சந்ததியை யெடுத்தணைத்து வலந்துடிப்ப
மெலிந்தபுயந் தடிப்ப மேலும்
புந்தியெலாங் களிகூற வுச்சிமோந்
துடலமெலாம் புளகம் போர்த்தான். 99

பொ - ரை: இம்மொழி முடிவதற்குள் கவுற்சன் அங்குவந்து இறங்கி நாரதர் அடிபணிய, குற்சன் தன்தந்தை தாள்களில் வீழ்ந்தான்; வீழ்ந்தவனைக் கவுற்சனன் எடுத்தணைத்து உச்சிமோந்து, தன் வலப்பக்கம் தோளும் கண்ணும் துடிப்ப உளம் களிப்புமிக, உடம்பு புளகாங்கிதம் கொள்ள நின்றுன்.

துன்றுதுயர் நெடுங்கால மியமபுரத் துழந்தவெலாஞ் சொல்லி யாங்கு
நின்றுகரை யேற்றியதுந் தருமனுப சரித்ததுவு நிகழ்த்தி யேகி
அன்றுரிமைப் பாலனொடு சென்றருவி படிந்துகட னனைத்து முற்றி
மன்றுளார் திரிகூடத் திருக்கோயில் வலமாக வணங்கிப் போந்தான். 100

பொ - ரை: கவுற்சனன் நான்பட்ட துயரங்களையும் பின்பெற்ற உபசாரங்களையும் மகனுக்குக்கூறி அவனுடன் சென்று சித்திரா நதியில் முழுகிச் செய்கடன்களை முற்றுவித்துத் திரிகூடத் திருக்கோயிலை வலமாக வணங்கிவந்தான்.

தொந்தனைசேர் நரகவா தனையொழித்துத்
தொலையாத சுவர்க்க போகம்
தந்தனையே வடவருவி படிந்தபலன்
றந்தெனச்சீர் தழைப்ப வாழ்த்தி
மைந்தனைவாழ் கென நிறுவி யாழ்முனிவன்
றனைப்பரவி மான மேற்கொண்
டந்தரபல் லியங்கறங்க வருமறையோன்
கற்பகநா டணைந்தான் மன்னே. 101

பொ - ரை: தொடர்ந்துவந்த நரகவாதனையை நீக்கிச் சுவர்க்க போகம் எனக்குக் கொடுத்தாய், மைந்தா! இது வட வருவியில் மூழ்கிய பயனை எனக்குக் கொடுத்தமையால் எனக்கு உற்றது என அவனைவாழ்த்தி அங்கு இருத்தி, நாரதரை வணங்கி, விமானத்தில் பல்லியம் முழங்கச் சுவர்க்கம் புகுந்தான்.

பெட்பகந்தன் வயமாகு மொருமைநா
ரதனுரைப்பப் பெருமை பேணிக்
கொட்பகந்த நிரையமெலா மகன்ருதை
தனக்கொழித்த கொள்கை கூறித்
தட்பகந்த மலர்ச்சோலைத் திரிகூடந்
திசைநோக்கித் தாழ்ந்து வாழ்ந்த
புட்பகந்தன் சீர்கேட்ப வரிக்கரன்போன்
முனிக்கணத்துப் புகல்வான் சூதன். 102

பொ - ரை: சூதமுனிவர் ஆசைக்கு உறையுளாகிய மனத்தைத் தன்வயப் படுத்திய நாரதர் சொற்கேட்டு மகன் தந்தையை நரகினின்றும் மீட்ட இக் கதையைக் கூறிமுடித்து, குளிர்ச்சியும் மணமும் உள்ள சோலைசூழ்ந்த திரிகூட மலையைத் திசைநோக்கித் தொழுதுவந்த புட்பகந்தன் புகழை முனிவர் வினவ, அங்கி ஏந்திய கையையுடைய சிவபிரான்போல் இருந்து அவர்க்கு அதனை உரைக்கத் தொடங்கினர்.

வி - கு: கொட்பு அகந்த - கொட்பு அகத்த; சுழற்சியைத் தம்பாற் கொண்ட (நிரயம்).

*கவுற்சனச் சருக்கம் முற்றிற்று*

ஆகத் திருவிருத்தம் — 1806

---

# புட்பகந்தச் சருக்கம்

ஆடக மாட வீதி யணிகள்பே ரணிக ளாகக்
கோடணை முரச மார்ப்பக் கொடிகொடிப் படையாக் கோலி
நீடல்வா னரசைத் தன்பா னிருபனே வென்ற னென்று
வீடமாப் பொன்னி னாட்டை வென்றது கன்னி நாடு. 1

பொ - ரை: பாண்டிநாடு சோழநாடு தோல்வியுறும்படி மேம்பட்டது எங்ஙனம் எனின்; பொன்னால் அலங்கரிக்கப்பெற்ற மாடவீதி வரிசைகளே சேனைகளின் அணிவகுப்பு; ஒலியைத்தரும் முரசம் முழங்கிற்று; கொடிகளே முன் செல்லும் கொடிப்படை; இவ்வாறு தேவர்அரசனை வென்றவன் பாண்டிய மன்னனே என்பதனால்.

வி. கு: கோடணை - ஒலி.

மாகமார் மாட கூடம் வரைத்திரள் சேனை மான
மேகமார் கொடிக ளீட்டம் விசைத்தெழு சிறக ராக
நாகமார் படங்கு நாட்டி ஞாயிலாஞ் சிகரி வேந்தன்
பாகசா தனன்மே லீட்டும் பாசறை போலு மூதூர். 2

பொ - ரை: வான் அளாவிய மாடம் உள்ள வீடுகளும் குன்றுகளும் படைகளை ஒப்ப, மேகமண்டலத்தைத் தழுவிய கொடிகளின் திரள் சிறகுகளாகத் தோன்ற, மேல் உலகை எட்டும் சீலைவீட்டை எழுப்பி, மதிலாகிய மலைக்கு அரசன் இந்திரன் மேற்செல்வதற்குமுன் ஏற்பாடு செய்யும் பாசறைபோன்றது பழைய கொற்கை என்னும் ஊர்.

பொற்கையார் புலிமா னேந்திப் பொருகையார் குருகை யார்க்கும்
விற்கையார் புற்கை யாராய் விடவடன் மீன மேந்தி
நிற்கையார் நடத்துஞ் செங்கோ னிருபன்வாழ் பேரத் தாணிக்
கொற்கைவா ழந்த ணாளன் குசலனென் றொருவன் மாதோ. 3

பொ - ரை: அழகியகையில் ஒலிக்கும் புலிக்கொடி ஏந்திப் போர்புரியவரும் சோழமன்னரும், பறவைகளைப் பொரும் விற்கொடி ஏந்திவரும் சேரரும் தம் கைகளினின்றும் படைக்கலங்களை வீழ்த்திப் புல்லேந்திச் சரண் அடையும்படி வெற்றியையுடைய மீனக்கொடி ஏந்தி எதிரில் சரணடைந்து நிற்போரைத் தம் விருப்பின்வழி நடத்தவல்ல செங்கோன்மையை உடைய பாண்டிய மன்னன் வாழ்வது; திருவோலக்கம் இருப்பது கொற்கை என்னும் நகரம். அதன்கண் குசலன் என்னும் பெயரினன் ஒருவன் வாழ்ந்து வந்தான்.

ஆறங்க மைந்து வேள்வி யொழுக்கநான் கனன்மூன் றோம்பி
நூறங்கு மிருமை பூண்டு நுவல்கருத் தொருமை வாய்ந்த
பேறங்கி குலத்தோ ரோடும் பிறங்குநூல் பயில்வ தானன்
நாறங்க மறிபா லூட்ட நாகமுங் குதட்டு மாபோல். 4

பொ - ரை : வேதாங்கம் ஆறனையும், வேள்விவகை ஐந்தனையும், ஒழுக்க நிலைகளாகிய நான்கனையும், மூவகை அங்கியையும் காத்து, நூல்களில் கூறப் படும் இருவகைப் பிறப்பைப்பூண்டு, ஒன்றிய கருத்துடையராய் ஒழுகும் முன்னைத் தவத்தாற் பெறும் தீ ஓம்பும் குலத்தாரோடு தானும் சேர்ந்து விளக்கமாகிய முதனூல்களைப் பயின்றான்; எதுபோல எனின், மணங்கமழும் உறுப்பையுடைய மான் பால் உண்பிக்க உண்டு களிக்கும் யானைக்கன்றைப்போல என்க.

உயர்தரு மறைநூ லோதி யோங்குசீர்ப் பிரமஞ் சைவம்
வயிணவங் காந்த மாதி வகைபல புராணம் பன்னி
அயநுகர் குளகு போல வத்திரி மனுவா சிட்டப்
பெயர்தரு சிலநூல் கற்றுச் சமையநூல் பிதற்றா நின்றான். 5

பொ - ரை : உயர்ந்த வேதத்தை ஓதி, பிரமம் முதலிய பலவகை புராணங் களையும் ஆடு குழைகளைத் தின்னுமாறுபோல, அத்திரி முதலியவர் செய்த அற நூல்களையும் வாசிட்டம் முதலிய உபபுராணங்களையும் கற்றுச் சமய நூல்கள் பற்றிப் பல்கால் பேசாநின்றான்.

வேறு

மாவிரதம் பாசுபதம் வருகாளா முகஞ்சைவம்
ஓவில்வயி ரவம்வாம மெனவாறு முட்சமையம்
மேவுநூல் பயின்றேபு மெய்யொழுக்க நெறியஞ்சித்
தாவுபர மதம்பூண்டான் வைதிகமுந் தழுவானால். 6

பொ - ரை : பாசுபதம் முதலிய அகச்சமய நூல்களைக் கற்றுப் பயின்றிருந் தும், உண்மையான ஒழுக்கநெறி நிற்கமுடியாது, வைதிக நெறியையும் பின் பற்றாது புறச்சமய ஒழுக்கம் பூண்டான்.

புறச்சமைய நூல்பொருந்திப் பொருந்தாவை சேடிகமும்
பறத்துமீ மாங்கிசமும் பவுத்தமா ருகமதமும்
மறத்துலோ காயதமும் வரையறுநை யாயிகமும்
பிறர்க்கெலாம் வகைதெரியப் பேசுதற்குங் குருவானான். 7

பொ - ரை : புறச்சமய நூல்களை மனம்பொருந்திக் கற்று, பொருத்தம் இல்லாத வைசேடிகம், கிளர்ந்துஎழும் பூருவமீமாஞ்சை நூலையும், பௌத்தம், ஆருகதம், உலகாயதம், சொற்களை வரையறுக்கும் நையாயிகம் என்பவற்றையும் பிறர்க்கு உணர்த்தும் குருவாயினன்.

வேறு

நூல்பல பயின்றா னேனு நுவலுறு பொருளைத் தேரான்
மேலுறு சமைய நோக்கான் மெய்ப்பொரு ளிதுவென் றோரான்
நால்வகைப் பண்டஞ் சேர்ந்த நனிகரு கூலம் புக்கும்
பாலனை கரும்பு வீழ்த்தி வேம்புகொள் பாலன் போன்றான். 8

பொ - ரை : இங்ஙனம் நூல்கள் பலவற்றைக்கற்றும் அவற்றால் முடித்துக் கூறப்படும் உண்மைப்பொருளைத் தெரிந்துகொள்ளவில்லை; மேலே இவற்றை

மறுக்கும் உண்மைச் சமயத்தின் முடிபை ஆராயவில்லை; நால்நிலப் பொருள்களும் சேர்ந்த மிகுந்த கருவூலத்தை அடைந்தும் பாலொடு கலந்த இனிப்புப் பொருளை விட்டுக் கைப்புப்பொருளை விரும்பி வாங்கும் சிறுவனைப் போன்றான் குசலன்.

ஓதியு முணர்ந்து மேனோர்க் குரைத்துந்தா னுணர்க லாத
பேதையுட் பேதை யாகி மறைக்குலப் பெருமை தீர்ந்தான்
நீதிநூ லுணர்ந்தோ ரோது நெறியினு நில்லா னாதி
வேதவாக் கியங்கள் சொல்லு மெய்யெலாம் பொய்யென் பானால். 9

பொ - ரை: குசலன் நூல்களை ஓதி உணர்ந்து பிறர்க்கு உரைத்தான்; ஆயின், தான் அவ்வழியின் நில்லாத அறிவிற் கடைப்பட்டவன் ஆனான்; தன் மறைக்குலத்திற்கு உரிய பெருமையினையும் இழந்தான்; அற நூல்வழியினும் நில்லாது, வேதத்தொடர்கள் உணர்த்தும் மெய்ப்பொருள்களைப் பொய் என்பானாயினன்.

பூதல மன்றி வேறோர் புவனமு மில்லைப் பூமேன்
யாதுமங் குதிக்குஞ் செய்கை யியற்கையே படைப்போ னில்லைத்
தீதற நிற்ற லுனு மியற்கையே திருமா லில்லைச்
சாதலு மிதுவே யன்றிச் சம்புவு மில்லை யென்பான். 10

பொ - ரை: நிலஉலகம் அன்றி வேறு மேல்கீழ் உலகுகள் இல்லை; உலகில் உள்ள பொருள் தம் இயற்கையால் தோன்றும், நிற்கும், பின் மறையும்; இவற்றைச் செயற்கை என்றலும், அதுபற்றிப் படைக்கவும் காக்கவும் அழிக்கவும் கடவுளர் உள்ளனர் என்றலும் சரியன்று.

இங்கிவன் கிழக்கு வேறு யெனக்குமேற் காத லாலே
அங்கமர் திசைவே றில்லை யத்திசைத் தேவு மில்லை
துங்கமுன் வினையு மில்லை தோற்றிடுஞ் செயல்க ளிங்கே
பங்கமாய்க் கழித லாலே பாவபுண் ணியமு மில்லை. 11

பொ - ரை: ஒருவனுக்குக் கிழக்கு எனப்படுவது, மற்றொருவனுக்கு மேற்கு ஆகிறது; ஆதலால் திசை என ஒருபொருளுமில்லை; திசைக்கடவுளரும் இல்லை; உயர்ச்சியையுடைய முன்னைவினை என்பதும் பொய்; இங்கு இயற்றப்படும் செயல்கள் இங்கேயே அழியக்காண்கின்றோம்; ஆதலால், இச்செயல்கள் புண்ணியபாவம் என மேலைக்குவரும் என்பதும் பொய்யே.

கறந்தபான் முலைபு காது கழிகனி மரம்பு காதால்
இறந்தவர் பிறப்ப தில்லை யிறந்தவ ருயிர்கள் கீழ்மேற்
பறந்திடக் காண்ப தில்லை பவர்க்கமு மதனா லில்லை
சிறந்ததோர் சுவர்க்க மில்லை தெய்வமு மில்லை யென்பான். 12

பொ - ரை: கறந்தபால் மீளமடியில் புகுவதில்லை; மரத்தினின்றும் வீழ்ந்த கனி மீள மரத்தில் புகுவதில்லை; ஆதலால், இறந்தவர் மீளப் பிறப்பார் என்பது பொருத்தம் அன்று; இறந்தவர் உயிர்கள் கீழோ மேலோ பறந்து

செல்வதையும் கண்டோர் இல்லை; ஆதலால் நரக சுவர்க்கங்களும் அருவமாகிய தெய்வமும் இல்லை. பவர்க்கம் - நரகம்.

அந்தணர் முதலோர் நால்வ ரவர்களிற் றாழ்ந்தா ரென்ன
வந்தபல் குலம்வே றில்லை வடிவுவே றிலதா லாருந்
தந்தமக் கிசைந்த போகந் தாமநு பவித்தன் முத்தி
நந்துறத் துறவு பூண்டு நலிவது நரக மென்பான். 13

பொ - ரை: அந்தணர் முதலிய சாதிகளில் தாழ்ந்தவர் என உள்ள பல குலங்கள் இல்லை; காரணம் யாவருக்கும் வடிவு ஒத்திருத்தலே ஆகும்; ஆரேனும் தம்தமக்கு இசைந்த முறையில் நுகர்ச்சியை உடையராதலே வீட்டின்பம் ஆகும்; இந்நுகர்ச்சி குறையும்படி துறவு முதலிய கொள்கைகளை மேற்கொண்டு துன்புறு வதே நரகம் ஆகும். இங்ஙனம் குசலன் திறம்படப் பேசினன்.

அறநெறி யுடலுக் கேற்ப வுண்டுடுத் தநுப வித்தல்
மறநெறி பசியா லாகம் வருந்திநோன் பிருத்த லென்று
திறநெறி போலக் கூறிச் செந்நெறித் தலைநின் றூரைப்
புறநெறி யந்த காரம் புகுத்துதல் கரும மானுன். 14

பொ - ரை: அவரவர் உடலின் இயல்புக்கு ஏற்றபடி உண்டு உடுத்து களித்தலே அறநெறி; பசியால் உடம்பை வருத்தி விரதம் காத்தலே பாவநெறி ஆகும்; இங்ஙனம் ஆராய்ச்சிபோன்ற நெறிகளைக்கூறி மரபின்படி நல்வழியிற் செல்வோரை புறச்சமயங்களாகிய இருள் உலகில் வீழ்த்துதலையே தனக்கு உரிய செயலாக மேற்கொண்டான் குசலன்.

பெருங்குல மறையோர் தம்மைப் பெருமைசேர் தரும நீதி
அருங்கலைப் பயிற்சி மாற்றி யநங்கநூல் பயிலச் செய்தும்
பரந்துநீர் காலை மாலை படிந்துநீ றணிவார் தம்மைத்
திருந்திள வெந்நீ ராடிச் செஞ்சாந்து புனையச் செய்தும். 15

பொ - ரை: உயர்குடிப்பிறப்புள்ள மறையவர்களை மிருதிநூல் பயிற்சிக்குப் பதில் காமநூல் பயிலச் செய்தான்; பரவிச்சென்று காலை மாலை தண்ணீரில் முழுகுவோரை, அதனை மாற்றி வெந்நீரில் முழுகச்செய்து சிவந்தசந்தனம் பூசிக்கொள்ளச் செய்தான்.

ஓமமேற் சொரியு நெய்யை யுண்டிமேற் சொரியப் பண்ணி
ஆமள வருந்தச் செய்து மாடவர் மடவார்க் கென்றும்
காமமே வினையா மூட்டிக் கன்மமு நெறியு நீக்கித்
தாமவே தியரை யெல்லாந் தான்விழும் படுகர் வீழ்த்தான். 16

பொ - ரை: ஓமத்தில் அவிசாகத் தரும் நெய்யை உணவிற் சேர்த்துக் கொள்ளச் செய்தான்; முடிந்த அளவு உணவை அருந்தச் செய்தான்; ஆட வர்க்கும் மகளிர்க்கும் காம வொழுக்கத்தையே செயலாக மூளச்செய்தான்; செய்யவேண்டிய வைதிக கன்மங்களையும் மரபையும் மாற்றினன்; தாமரை மாலை அணியும் வேதியரைத் தான் வீழும் நரகக் குழியில் உடன் வீழும்படி செய்து வந்தான்.

அங்கணர் செங்க ணூர்தம் மாலயந் தேவர் கோட்டம்
எங்கணும் பரவச் செய்வார்க் கெதிரெதிர் தடையாச் செல்வான்
கங்கைகோ தமிகா ளிந்தி கன்னிதண் பொருனை யாடத்
தங்களின் விரும்பிச் செல்வார் தம்மெதிர் தும்மா நிற்பான். 17

பொ - ரை: சிவபெருமான், திருமால், வேறு தெய்வம் என்பவர் தம் கோயில்களுக்குச் செல்வார் எதிரே தான் அவசகுனமாகச் செல்வான்; கங்கை, கோதாவரி, யமுனை, கன்னியாகுமரி, தாமிரவன்னி என்பவற்றில் ஆடும் நோக்கத்துடன் புறப்படுவார்க்கு எதிராகத் தும்முவான்.

எந்தையார் திருக்குற் றால மிறைஞ்சுவா னேகு வாரை
அந்திகள் சந்தி தோறு மரும்பெருந் தினங்க டோறும்
சந்திக ணியமந் தோறுந் தடுப்பது நியம மானான்
புந்திமே லறிவாம் பாலைப் புலனெனுங் கமரில் வீழ்த்தோன். 18

பொ - ரை: திருக்குற்றாலம் தொழச்செல்வாரை அந்தி சந்திகளிலும் நல்ல நாட்களிலும் நாற்சந்தி முச்சந்தி ஐஞ்சந்தி என்னும் இடங்களிலும் நெடுந் தெருவிலும் தடுப்பதே முறையாகக் கொண்டான்; புத்தியில் விளங்கும் உணர்வெனும் பாலைப் புறவிடயங்கள் என்னும் நில வெடிப்பில் உகுத்தவன் குசலன்.

பாவனை செயலி ரண்டிற் பத்தியாற் பயத்தான் மற்று
மேவரும் விளையாட் டாலு மேலவர் கீழோ ரேனும்
தேவர்கோன் றிரிகூ டத்தைத் திசைநோக்கிப் புகழ்ந்து போற்றில்
யாவரு முத்தி சேர்வ ரென்றுநூ லுணர்ந்து மோரான். 19

பொ - ரை: மனத்து நினைவால் அல்லது செயலால் அன்பால் அல்லது அச்சத்தால், மேலோராயினும் கீழோராயினும் திரிகூடத்தைத் திசைநோக்கி வாழ்த்தி வணங்கின் வீடுபேறடைவர் என நூல்களால் அறிந்திருந்தும் அவ்வுண்மையைச் சிந்தியாதவன் ஆனான்.

புக்குள நகரத் தாரை விலக்குறல் புரிவா னன்றி
மிக்குள புறநாட் டுள்ளார் விண்ணுளார் மண்ணி லுள்ளார்
திக்குளார் திரிகூ டத்திற் செல்வது விலக்க லாற்றான்
கைக்குளார் மறைக்க வல்லார் ககனமேற் கதிரோன் றன்னை. 20

பொ - ரை: தான்புகுந்துள்ள நகர மக்களைத்தான் இவன் தடுக்க முடிந்தது; பிறரைத் தடுக்க முடியவில்லை. ஆகாயத்தில் விளங்கும் ஞாயிற்றைக் கையால் யாரேனும் மறைக்கக் கூடுமோ?

புரிதரு சந்தி யோமம் புண்ணிய வொழுக்க நீக்கிப்
பரிவொடு வினவு வாரைப் பரமத நூலால் வென்று
திரிதலா லெதிர்வே றின்றித் தீமையோ னவ்வூர்க் கெல்லாம்
ஒருவனு யுயிர்கட் கெல்லா முறுகண்செய் களைபோ லானான். 21

பொ - ரை: விரும்பிச் செய்யத்தக்க சந்தி ஓமம் புனித ஒழுக்கம் என்பவற்றை விலக்கித் தன்னை அன்போடு வினவுவாரை வேற்றுச் சமய நூல் கொண்டு வென்று திரிந்தான்; அவ்வூர்க்கெல்லாம் நன்மக்களாகிய பயிர்க்குக் களைபோல் இருந்தான்.

வி - கு: உறுகண் - துன்பம்.

வாரணி தனத்தார் மோக மடமையோ னிவ்வா ருகக்
காரணி பொழிற்சோ ணாட்டுக் காவிரி வடதீ ரத்துத்
தாரணி புகழு மேன்மைச் சைவமா மறைவல் லாளன்
ஆரண மிருதி யங்க மாகமம் புராண மோர்ந்தான். 22

பொ - ரை: கச்சு அணிந்த மார்பையுடைய மாதர் மயக்கில் வீழ்ந்த குசலன் இங்ஙனம் இருந்தான்; அஞ்ஞான்று, சோழநாட்டில் காவிரி ஆற்றின் வடகரையில் வாழ்ந்த சைவமறையோர் ஒருவர் வேதங்களையும் அதன் அங்க உபாங்கங்களையும் குற்றமறக் கற்றுணர்ந்தார் உளரானார்.

கவனமார் மக்கண் மாதர் கைப்பொருள் சுற்ற மாதி
புவனமேல் வாழ்க்கை யெல்லாம் பொய்யென வுணர்ந்த மெய்யான்
பவநெறி யுலக மாயைப் படரிரு ளொதுங்க வுண்மைச்
சிவநெறி விளக்கு ஞானச் செங்கதி ருதயம் போல்வான். 23

பொ - ரை: நம் மனத்தைக் கவரும் மக்கள் மனைவி கைப்பொருள் முதலிய அனைத்தும் நிலையாதவை என்பதை உணர்ந்தவர்; பிறவியில் உய்க்கும் மாயையாகிய இருளை நீக்கிச் சிவநெறியை விளக்கும் காலைஎழும் செங்கதிரவன் போன்று விளங்கினார்.

காயிகம் வாசி கஞ்சீர் கருதுமா னதமென் றேது
மாயமுப் பாலுண் மேலா மரும்பெறற் செயல்க ளுன்னிப்
பாயுநீர் நதிக ளாடல் பரமனைப் பணிதல் வாழ்த்தல்
மேயசீர்த் தியான மென்னும் விதிமுறை மதியி னோர்ந்து. 24

பொ - ரை: மனமொழி மெய்களால் உயர்ந்த அரிய நற்செயல்களைச் செய்தல் கருதித் தீர்த்தங்களில் மூழ்குதல், பரமனைத் தொழுதல், வாழ்த்தல், நினைத்தல் என்னும் நல்லறங்களைத் தன் தெளிந்த அறிவில் ஆராய்ந்து கடைப்பிடித்தார்.

கங்கையே முதலாந் தீர்த்தங் கடவுளா லயங்கட் கேகல்
அங்கநிச் சயமி லாதா லரிதென வுணர்ந்து ஞாலம்
தங்குமெய்த் தீர்த்த மெல்லாந் தருபலந் திரிகூ டத்தில்
பொங்குசித் திரப்பூங் கங்கை தருமெனும் புராண முன்னி. 25

பொ - ரை: கங்கையிற் சென்றாடுதல் தலயாத்திரை முதலியவை யாக்கை நிலையாமையால் கைகூடல் அரிது; திரிகூடத்தில் சித்திரநதியில் ஆடுதல் எல்லாப் பயனையும் கொடுக்கவல்லது எனப் புராணத்தால் உணர்ந்தார்.

தக்கசீர்ப் புதலாய்ப் புல்லாய்த் தருக்களாய் விலங்காய்த் தேவாய்
மக்களாய்த் தவங்கள் செய்யு மாதலந் திருக்குற் றாலம்
முக்கட வுளரு மான மூர்த்தியே பலவின் மூர்த்தி
ஒக்கமூ வகையி னுலு முயர்ந்ததத் தலமே யென்று. 26

பொ - ரை: உயிர்கள் செடி, புல், மரம், விலங்கு, தேவர், மக்கள் என்னும் பிறப்புக்களைப் பொருந்தித் தவம்புரியும் சிறந்த இடம் திருக்குற்றாலமே; அங்குள்ள சிவலிங்க மூர்த்தியே மும்மூர்த்திகளுமானேன்; மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றினுலும் உயர்ந்தது திரிகூடத்தலமே என்னும் முடிவிற்கு வந்தார்.

புனிதமார் தலத்துக் கேகும் புண்ணிய விரதம் பூண்டு
கனைபுனற் பொன்னி யாடிக் கடவுளர்ப் போற்றி வையை
குனிதிரைச் சேது மூழ்கிக் குமரவேள் செந்தூர் போற்றி
மனுநெறிக் கொற்கை மேவி மறையவர் வீதி சார்ந்தான். 27

பொ - ரை: சிவத்தலங்களுக்குச் சென்று தொழும் புனிதக்கொள்கையை மேற்கொண்டு, முழக்கம் செய்யும் காவிரியில் நீராடி, அதன் கரையில் உள்ள மூர்த்திகளைத் தொழுது வையையிலும், வளைந்த அலைகள் மோதும் சேதுத் துறையிலும் மூழ்கி, குமாரக்கடவுள் எழுந்தருளியுள்ள திருச்செந்தூர் தொழுது கொற்கை சென்று வேதியர் வீதியுள் புக்கார்.

சார்தலுஞ் சைவ வேடந் தனைப்பொருக் குசல னென்பான்
வார்தரு வெண்ணீ ருடி மணியக்க வடங்கள் பூண்டாய்
கூர்தரு மறையோன் போல்வாய் கோலம்வே றெடுத்த வாற்ருல்
ஓர்தரு சுருதி யங்க முணர்ந்திலை போலு மென்ருன். 28

பொ - ரை: இங்ஙனம் வந்த மறையவரின் சைவத்திருவேடத்தைக்கண்டு பொருத குசலன் உரைப்பானுயினன்: வெண்ணீறணிந்து உருத்திராக்கம் அணிந்துள்ளாய், நீ மறையவனுய்க் காண்கின்ருய், ஆயினும் வேற்றுக்கோலம் பூண்டிருத்தலின் ஆராயப்படும் சுருதிகளையும் அதன் அங்கங்களையும் உணர்ந் தாய் அல்லைபோலும் என்ருன்,

நீதிநூ லுணர்ந்தார் செய்கை நிகழ்த்திடில் வெளியா மென்ன
ஓதினன் சைவ வேத னேதலுங் குசலன் சீறி
வாதியேல் வருதி யென்ருன் வருமவர் தருக்க நோக்கி
வேதியர் திரண்டா ரங்கோர் விசாலமண் டபத்து நாப்பண். 29

பொ - ரை: அனைவர்க்கும் அறங்கூறும் வேதம் உணர்ந்தார் செய்கை இன்னது எனக் கண்டு தெளியின் உண்மை வெளியாகும் என்ருர் மறையவர்: அதனைக் கேட்டுக் குசலன் வெகுண்டு பேச்சில் வல்லையேல் வருக என்ருன்; இருவர் விவாதமும் கேட்டு இடமகன்ற மண்டபத்தின் நடுவில் அனைத்து வேதியரும் திரண்டு கூடினர்.

நாதனைப் பரவா வண்ணா நாதனை நெறிவே ருக்கும்
போதனைக் குசலன் வாய்மை புகல்வது புணர்ப்போ வென்பார்
சாதனைக் கள்வர் சோரந் தனைவெளிப் படுத்த வந்த
சோதனைக் கணிதர் போலத் தோன்றினன் மறையோ னென்பார். 30

பொ-ரை: சிவபிரானை போற்ருதபடி மக்கள் நாவை வேற்று நெறியில் செலுத்தும் கல்வி உள்ள குசலன் இங்குப் பேச இருப்பது சூழ்ச்சியாக இருக்கும் என்றனர் சிலர்; தங்கள் கருத்தை முடிக்கவல்ல வஞ்சகர்களது கள்ளத்தனத்தை வெளிப்படுத்த வந்த ஆய்வுவல்ல சோதிடர்போல சோழநாட்டு அந்தணன் இங்கு வந்தனன் என்பார் சிலர்.

காதிய மறையோன் கல்விக் கடலென்பார் குசல னென்பான்
ஓதிய நாவாய் வீறின் றடக்கவு முரியோ னென்பார்
ஆதலி னிரண்டு மின்றே யவையகத் தறிவோ மென்பார்
நீதிநூ னெறியில் வென்ருர் நெறியில்யா நிற்போ மென்பார். 31

பொ-ரை: பேச்சில் வல்ல சோழநாட்டு மறையவன் கல்விக்கடலை நீந்தினவன் என்பார் சிலர்; குசலனது நூல்களைக் கற்ற நாக்கு வாய் என்பவற்றின் பெருமிதத்தை அடக்கவும் வல்லன் இவ்வந்தணன் என்பார் சிலர்; ஆதலினுல் இவ்வவையில் மேற்கூறிய இரண்டனையும் யாம் காண்போம் என்றனர் சிலர்; முறையினுல் நூற்பொருள்பற்றி வென்றவர் முடித்துக்கூறும் நெறியில் நாம் நிற்போம் என்பார் பலர்.

அந்தண ரிவ்வா ருக வருமறைச் சைவ வேதன்
வந்தன னிருந்தா னோர்பால் வைதிகச் சவையி னூடே
கொந்துசேர் சமைய வாதர் குழாத்தொடுங் கங்குற் கூட்டம்
இந்துவை யெதிர்ந்தா லென்ன வெதிர்ந்தனன் குசலன் மாதோ. 32

பொ-ரை: அந்தணர்கள் இவ்வாறு பேசிக்கொள்ளும் நிலையில் வைதிக சைவத்தை அறிந்த சைவ அந்தணன் அந்த வைதிக சபையில் ஓர் மருங்கு வந்து இருந்தான்; குசலன் கூட்டமாகத்திரண்ட சமயக்கணக்கர் குழுக்களோடு அவ்வந்தணனை எதிர்த்து நின்றனன்; அது முழுநிலவை இருட்கூட்டங்கள் எதிர்த்தாற் போன்றிருந்தது.

இயம்புதற் கெதிரா விட்டா னெண்ணிலா மதத்தோர் தம்மை
நயம்பெறு சைவ வேத னன்கென வவரைக் கூவிச்
சயம்பெறு மறைநூ லாலே சமையநூல் பலவும் வென்று
வியன்பெறு மறிவி லாதீர் வெறுவிதி னெழுக வென்ருன். 33

பொ-ரை: குசலன் சைவமறையவனுக்கு எதிராக வாதிடும்படி அளவற்ற சமயக்கணக்கர்களை ஏவினுன்; நூலின் நன்மையைப்பெற்ற சைவவேதியன் நல்லது என அவரை அழைத்து மேன்மை பொருந்திய வேதத் தொடர்கள் கொண்டு அவர்தம் சமய நூற் கொள்கைகள் பலவற்றையும் வென்ருன்; விரிவுடைய அறிவில்லாதவர்களே நும் கொள்கைகள் பயனற்றனவாய் முடிதலின் நீங்கள் இனிச் செல்லலாம் என்று அனுப்பினுன்.

ஆங்கவ ரெழுந்த காலை யரியமா மறையோ ரெல்லாம்
பாங்குசேர் சைவ வேதன் பரிவுசே ருரையி னாலே
தாங்குப தேசம் பெற்றுச் சைவவை திகங்கள் சார்ந்தார்
வாங்குசீர்த் தமிழ்நா டெல்லாம் வாய்மையா லுயர்ந்த வன்றே. 34

பொ-ரை: இவ்வாறு சமய வாதிகள் சென்ற பிறகு அங்கிருந்த வேதியர் அனைவரும் சோழநாட்டுச் சைவவேதியனது அன்புகலந்த மொழிகளாலே உறுதியை உணர்ந்து சிவநெறியினையும் வைதிக ஒழுக்கத்தினையும் கடைப்பிடித்தனர்; பிறநாட்டின் சிறப்புக்களைத் தன்னுடையதாகப் பெற்றுப் பாண்டி நாட்டுத் தலங்களெல்லாம் சைவ வாய்மையால் உயர்ச்சி உற்றன.

வளர்ந்தது திருவெண் ணீறு வஞ்சகர் வெருவி யோடத்
தளர்ந்தது சமைய பேதஞ் சைவவை திகங்க ளோங்கிக்
கிளர்ந்தது மேலோர் சங்கங் கிளைத்தது நியதி நீதி
அளந்தது புவன மூன்று மஞ்ஞலஞ் செழுத்தின் செல்வம். 35

பொ-ரை: எங்கும் திருவெண்ணீற்றொளி வளர்ந்தது; வஞ்சகர்கள் அஞ்சி ஓடும்படி சமயப்பிணக்குகள் தளர்ந்தன; வைதிக சைவம் மிக்கு விளங்கிற்று; மேலோர் அவைகள் பெருகின; சாத்திர வரம்பிற்குட்பட்ட நீதி மக்கள் உள்ளத்தை அளவுபடுத்தியது; திருவைந்தெழுத்தின் பொருண்மை மூன்று உலகங்களினும் சென்றது.

அண்ணினு ரிவ்வா றுக வறிவிலாக் குசல னென்பான்
கண்ணினுற் கண்டா லன்றிக் கடவுளைக் கருதே னென்றான்
புண்ணிய நூலாற் காணப் பொறியிலாய் மறலி தூதர்
நண்ணுதீ வினையிற் காண்டி நாளையென் றெழுந்தான் மேலோன். 36

பொ-ரை: தனக்கு உடந்தையாக வந்தவர்கள் தோல்வி உற்றமையால் அறிவை இழந்த குசலன் கண்டாலன்றி கடவுள் உண்மையைக் கொள்ளேன் என்றான்; சைவ வேதியர் கூறுவார்: "தூய நூல்கள்மூலம் உண்மையைக் காணும் விதியில்லாதவன் நீ நாளையதினத்தில் உன்னை அடைந்துள்ள தீவினை யின் வலியினால் எமதூதர்களைக் காண்பாய்" எனக்கூறி அவ்விடத்தின் நீங்கினார்.

சைவமா தவர்கள் சூழச் சங்கமா மறையோர் போற்ற
மெய்வளர் சுருதி யார்ப்ப விறற்சிவ மறையோ னேகிப்
பொய்வளர் மனத்தார்க் கெட்டாப் புனிதனைத் திரிகூ டத்துத்
தெய்வநா யகனைப் போற்றித் திருவருள் பெற்றுப் போந்தான். 37

பொ-ரை: சைவ மாதவர்களும் கூட்டமாகிய மறையவர்களும் சூழ்ந்து போற்றவும், மெய்ம்மையைத் தெரிவிக்கின்ற வேதத்தொடர்கள் ஒலிக்கவும் சிவ வேதியர் மேற்சென்று பொய்யர்க்கு எட்டாத திரிகூட முதல்வனைத் தொழுது போற்றி திருவருள்பெற்றுச் சென்றார்.

வேறு

கேழ்பெருகுஞ் சிவமறையோன் றனைவணங்குங் கேள்வியினர்
வாழ்வுபடைத் தினிதுயர்ந்தார் வணக்கவணங் காக்கழைபோல்
தாழ்வுபடைத் தான்குசலன் செல்வம்போய்த் தடுமாறி
ஆழ்கடலிற் கலங்கவிழ்த்த நாய்கன்போ லலமந்தான். 38

பொ - ரை: ஒளி பொருந்திய சிவ மறையவரைத் தொழுது பின்பற்றிய அந்நகரமாந்தர் அனைவரும் நல் வாழ்வுபெற்று உயர்ந்தார்கள்; வளைக்க வளையாத மூங்கில்போல் குசலன் பிறர்க்கு அடிமைப்பட்டுத் தன் செல்வத்தை இழந்து தடுமாறி நடுக்கடலில் மரக்கலத்தைக் கவிழ்த்துக்கொண்ட வணிகன்போல் கவலையுற்றான்.

ஏயுநான் மறைப்பொருளைத் தெய்வத்தை யிகழ்ந்துரைத்த
வாயிலுறு சுவைக்கலந்து வறுமையாற் பசியுழந்து
நோயினா லுருவழிந்து நோக்குவார் புறம்பழிப்பத்
தாயனார் புறந்தள்ளச் சந்தியிற்பந் தாயினான். 39

பொ - ரை: நான்மறைப் பொருளையும் தெய்வத்தையும் இகழ்ந்துரைத்த குசலன் உண்ணுதற்கு சுவையுடைப் பொருளைப் பெறாது அங்கலாய்த்தான்; வறுமையாலும் பசியாலும் நோயினாலும் தன் உடலும் மனமும் உருக்கெடக் காண்போர் புறக்கணிக்கத் தனக்கே சார்பாயினார் புறத்தே ஒதுக்க சந்தியில் கிடக்கும் பந்துபோல் பலராலும் இழிக்கப்பட்டான்.

ஏற்பதற்கோர் சவியின்றி யையமிடு வாருமின்றி
ஊர்ப்புறமா மம்பலத்தி லுழன்றுபிணி யாற்சுழன்று
தீர்ப்பதற்கோர் செயலின்றித் தெண்ணீரென் றேதவித்துப்
பார்ப்பதற்கோர் துணையின்றி யாவிபதை பதைத்திறந்தான். 40

பொ - ரை: பிச்சையிடுவாருமின்றி ஏற்றற்குரிய வலிமையும் இன்றி ஊர்ப்புறத்தில் உள்ள பொது இடத்தில் திரிந்து நோயாலும் பசியாலும் வருந்தி யாருடைய துணையும் இன்றி பதை பதைத்து இறந்தான் குசலன்.

இறந்தானைக் காலபட ரிரும்பாசத் தாலிறுக்கிப்
பறந்தாடக் காலதண்டங் கொடுபுடைத்துப் படிவமெலாந்
துறந்தாட மூவிலைவேல் கொடுசுழற்றிச் சுழல்விழியை
மறந்தாவுங் கருங்காகம் வளைந்துகுத்தக் கொடுபோனார். 41

பொ - ரை: இங்ஙனம் இறந்த குசலனை இயமதூதர் பாசத்தால் இறுக்கி ஓடும்படியாகத்தண்டினால் புடைத்து உடம்பெல்லாம் குத்தும்படி சூலத்தால் சுழற்றி சுழலும் அவன் விழிகளைக் காக்கைகள் குத்தும்படி நரகத்திற்குக்கொண்டு போனார்கள்.

இவ்வாறு கொடுபோங்கா லிவன்புரிந்த கொடுவினையும்
அவ்வாறு மறையவன்சொற் சூளுநினைத் தயர்காலைச்
செவ்வாறு திரிகூடத் தெல்லையதோ வடுத்ததென
வெவ்வாறு கொடுதிருப்பி நமன்றூதர் விலக்கினரால். 42

பொ - ரை : இப்படி எமதூதர் கொண்டு சென்றபோது தான் செய்த கொடுவினைகளையும், சிவவேதியன் முன்னர் கூறிய ஆணையையும் குசலன் நினைத்து வருந்தினுன்; அப்போது திரிகூடமலையின் எல்லை சிறிது தூரத்தில் நேரேவந்தது; எமதூதர்கள் அவன் கொடியவன் ஆதலால் அவ்வெல்லையிற் செல்லாதபடி மாற்றிச் சென்ருர்கள்.

அருண்மறையோன் மொழிக்கிணங்கா னலைத்திடுந்தூ துவர்மொழி
பொருவிலிள மையிற்பயின்ற காந்தத்தின் பொருளுணர்ந்து [யால்
கருதரியார் திரிகூடங் கதிதருமென் பதுகுறித்தான்
குருமொழியை யிகழ்ந்தார்க்குத் தண்டமே குருவாமால். 43

பொ - ரை : சிவவேதியனது நல்லுரையை முன்னர் குசலன் கேட்கவில்லை இப்போது தூதுவர் தமக்குள் கூறிக்கொண்ட மொழியால் தான் இளமையிற் பயின்ற காந்தபுராணத்தின் பொருளை நினைவு கூர்ந்து திரிகூடம் முத்தியைத் தரும் என்பதை நினைத்தான்; ஆசாரியனது மொழியை இகழ்ந்தோர்க்கு தண்டனையே குருவாக நின்று உண்மையை உணர்த்தும் என்பது இதனுல் அறியப்படும்.

சுறுக்கினுற் பணிவதற்கோ தூதர்வரிந் திடுகயிற்றின்
இறுக்கினுல் விழிபிதுங்கி யிருகரமுங் கூடாதால்
உறுப்பயர்ந்து வீழ்வார்போல் வீழ்ந்தொருக்காற் றிரிகூடம்
குறிப்பினுற் றிசைநோக்கிக் குற்ருல மெனத் தொழுதான். 44

பொ - ரை : விரைந்து வணங்குதற்கு தூதர் கட்டிய கயிற்றின் பிணிப்பால் கைகள் குவியவில்லை; உடல் இளைத்து நிலத்தில் வீழ்வாரைப்போல குசலன் வீழ்ந்து திரிகூடத்தை தன், கருத்தினுல் திசை நோக்கி திருக்குற்ருலம் என மொழிந்து தொழுதான்.

குற்ருல மென்றொருக்காற் கூறுதமிழ்ச் சுருதிமொழி
நற்ருலந் தனிற்பெருகி நாலுதிக்கி னும்பரந்து
பொற்ருலந் தனைநிறைத்துக் கயிலாயப் பொருப்புறையும்
முற்ருல நிழலமர்ந்தார் திருச்செவியின் முழங்கியதால். 45

பொ - ரை : திருக்குற்ருலம் என்று ஒருமுறை கூறப்பட்ட தமிழ் மறையில் வரும் புனிதமொழி நல்ல இவ்வுலகில் ஒலியலையாக பெருகி நான்கு திசையிலும் பரவி பொன்னுலகத்தையும் நிறைத்துத் திருக்கையிலாய மலையில் தங்கியுள்ள ஆல் நிழற் கடவுள் திருச்செவியில் உற்றது.

வி - கு : நற்ருலம் பொற்ருலம் என்பவற்றில் தலம் எனும் சொல் தாலம் என நீண்டது.

ஒருக்கான் முன் பணிவதற்கா வீழ்ந்தானை யுடனுறுக்கி
யிருக்காலும் விழாம லெழுவயிரங் கொடுபுடைப்பார்
செருக்கான்முன் பிணித்தவடந் தெறித்தோடச் சிவபெருமான்
அருட்பாலின் முழங்கியதா லந்தரதுந் துபியோசை. 46

பொ - ரை: முன் ஒருமுறை பணிவதற்கு வீழ்ந்தவனை உடனே அதட்டி மேலும் விழாதபடி வச்சிரத்தடியால் தூதர் அடித்தனர்; அப்போது முன்னே பிணித்த பாசம் அறுந்து ஓடிற்று; சிவபிரான் திருவருளால் தேவமுரசு அதிர்ந்தது.

தேவமுர சதிர்தலுமே தென்புலத்தார் விடுத்தகன்றார்
பாவமெலா மெங்கோடிப் பறந்ததோ பதகனுக்கு
மேவரிய புண்ணியங்கள் விளைந்தவா றென்சொல்கேன்
யாவரே திரிகூடத் தெந்தைபிரா னருளறிவார். 47

பொ - ரை: தேவமுரசு ஒலித்தவுடன் எமதூதர் விட்டு விலகினர்; பாவியாகிய குசலனுடைய பாவங்களெல்லாம் நீறுகிவிட்டன; கிடைத்தற்கரிய சிவபுண்ணியங்கள் பெரிதும் விளைந்தன; திரிகூட முதல்வனது திருவருளினை அறிவார் உலகத்தில் இல்லை.

தூசினுற் பொன்னணியார் சூழ்மலரான் மறையோனைத்
தேசினு லலங்காரஞ் செய்தார்கள் சிவகணத்தார்
வீசினு ரரமகளிர் வெண்கவரி சாமரைகள்
ஆசிகூ றினர்முனிவோ ரண்டர்பூ மழைபொழிந்தார். 48

பொ - ரை: சிவ கணத்தவர்கள் பொன் குற்றமுடையது ஆதலால் அதனுல் குசலனை அணிசெய்யாது நல்ல மலர்களால் அவனை அலங்கரித்தார்கள்; தேவ மகளிர் வெண்கவரியும் சாமரைகளும் அசைத்தனர்; முனிவர்கள் வாழ்த்தினர்; தேவர்கள் கற்பக பூமாரி பொழிந்தனர்.

மாவாசத் தொடைமலரு மானமிசைச் செறிமலருங்
காவாணர் சொரிமலருந் திசைதோறுங் கமழ்வதனுல்
பூவாணர் புகழ்குசலன் புட்பகந்தப் பெயரினனுய்த்
தேவாதி தேவனுறை கயிலாயஞ் சேர்ந்தணைந்தான். 49

பொ - ரை: வண்டுகள் விரும்பும் மணமுள்ள மலர்மாலைகளும் விமானத்தில் உள்ள மலர்களும் தேவர்கள் சொரிந்தமலரும் எல்லாத் திசைகளிலும் மணம் வீசின; பூமியில் வாழ்வோரால் புகழப்படும் குசலன் புட்பகந்தன் என்னும் பெயரைப் பெற்று திருக்கயிலையைச் சேர்ந்தான்.

போந்துசரண் பரவலுமே புத்தேளி ரிப்பதவி
நீந்தரிய கொடும்பாவிக் கென்னெனவே நிகழ்த்துதலுங்
காய்ந்துகொடுந் தூதருயிர் கொடுபோங்காற் கரங்குவித்துச்
சேர்ந்ததிசை குறித்தெமது திரிகூடந் தொழுதனுல். 50

பொ - ரை: திருக்கயிலையைச் சேர்ந்து குசலன் சிவபிரான் திருவடியை போற்றி நின்றபோது அங்கிருந்த தேவர்கள் இச்சிவகதி கொடிய பாவிக்கு எவ்வாறு கிடைத்தது என்னும் வினவை எழுப்பினர்; அப்போது சிவபிரான் கூறுவாராயினர்: குசலனது நுண்ணுடலை எமதூதர்கள் வருத்தம் செய்து கொண்டுபோன போது இக்குசலன் தன் கைகளைக் கூப்பி யாம் இருக்கும் திசை நோக்கித் தொழுதான்; அதனல் இவனுக்கு இப்பேறு கிடைத்தது.

அச்சத்தால் விளையாட்டா லார்வத்தா லாரேனுஞ்
செச்சைத்தார் கமழ்தருநந் திரிகூடந் திசைநோக்கி
நிச்சத்தாற் பணிவாரேற் பாவமெலா நெரிந்தோட
உச்சத்தா லுயர்கயிலை யெமதுபதத் துறைவாரே. 51

பொ - ரை: அச்சத்தால் அல்லது விளையாட்டால் அல்லது அன்பினல் யாரேனும் சந்திரனையும் கொன்றையையும் முடிக்கு அணிந்த நம் திரிகூடமலையை திசை நோக்கி உறுதியாக வணங்கினல் அவர்பாவமெல்லாம் நீங்கி மிகவுயர்ந்த நமது திருக்கயிலையை அடைவார்கள்.

ஆதலாற் பெறுவதிவ னழியாத பதவியென
நாதன ரருளுதலு நண்ணுசிவ கணமாகிப்
பூதநா யகர்கயிலை புனிதர்பதம் பிரியாமல்
வேதன்மால் பெறவரிய பதம்பெற்றுன் வியன்மறையோன். 52

பொ - ரை: இக்காரணம்பற்றி இக்குசலன் அழியாத பதவியைப்பெற்றுன் என்று சிவபிரான் அருளிச் செய்தார்; குசலனும் சிவகணங்களுள் ஒன்றுகி சிவபிரான் திருவடியை நீங்காது உறையும் பதவியைப்பெற்றுன்; இப்பதம் திருமாலும் பிரமனும் பெறுதற்கரியதாகும்.

விதுவுண்டார் புனைசடையார் விறலரிக்குச் சித்திரப்பூம்
பொதுவுண்டார் திருநடத்துப் புகன்றதிது வெனப்புகன்று
மதுவுண்டா னுயிர்மீட்ட மகிமைகூ றெனச்செவிகட்
கிதுவுண்டாட் டெனமுனிவன் யாகமுனி வர்க்கிசைப்பான். 53

பொ-ரை: சந்திரன் பொருந்திய கொன்றைமாலையை அணிந்த சிவபிரான் சித்திர சபையில் நிறைந்து திருநடனம் செய்த காலத்து இவ்வரலாற்றை அவர் திருமாலுக்கு உரைத்தார் என சூதமுனிவர் வரலாற்றை முடித்தனர்; மதுவை உண்டவனது உயிரைமீட்டபெருமையைக்கூறுக என முனிவர்கள் சூதமுனிவரை மேலும் வேண்டிக்கொண்டனர்; அவர்தம் செவிக்கு விருந்தாக பின்வரும் வரலாற்றைச் சூதமுனிவர் கூறுகின்றுர்.

புட்பகந்தச் சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1859

# தருமசாமிச் சருக்கம்

மாப்பழுக்கும் பொதும்பர்தொறு மலைபழுத்த தெனத்தோன்றிக்
காப்பழுக்காய்க் குலைசிதறிக் கண்ணேணரி கடுத்தசினை
மீப்பழுக்கண் மிசைத்தாவும் வெய்யவன்றேர்க் கால்வழுகத்
தேப்பழுக்கு முயர்பெருமைத் திருவழுதி வளநாடு. 1

பொ - ரை: மரச்செறிவுகளில் மாமரம் பழுக்கும் போதெல்லாம், மலை பழுத்து உதிர்கின்றது எனக் காணப்பட்டுச் சோலைகளில் பாக்குக் குலைகள் சிதறி மூங்கில் ஏணிபோன்று தோன்றும் வளார்களாகிய மேலே உள்ள படிகளில் தேன்சொரியும் வளப்பம் உடையது பாண்டிநாடு; பகலவன் தேர்க் கால் இதனுல் வழுக்கும்.

வி - கு: பழுக்காய் - பாக்கு. பழுக்கள் - படிகள்.

தொழுதிவள நாட்டணியாந் தொகைமணிக்கு முகமணியாய்
எழுதிவள நாட்டுமுலை யிந்திரைமந் திரமாகிக்
கொழுதிவள நாட்டமெனக் கோமடந்தை முகமெனவாழ்
வழுதிவள நாட்டுறையு மறைவாணர் குலதிலகன். 2

பொ - ரை: பாண்டிநாடு கூட்டமாகிய நாடுகளுள் நடுத்தலைமணிபோன்றது; தொய்யில் எழுதி அழகை நிறுவும் தனத்தையுடைய திருமகளுடைய இருக்கையாகவும், செழுமை விளக்கமுள்ள கண்போலவும் உள்ளது; நிலமகட்கு முகம்போலவும் உள்ளது; அதில் மறைக்குலத்தில் சிறந்தோன் ஒருவன் வாழ்ந்தான்.

வி - கு: தொழுதி - கூட்டம். மந்திரம் - வீடு. கொழு - செழுமையான. திவளநாட்டம் - விளக்கமுள்ளகண்.

அந்திபகற் புனலாடிக் கடன்கழிப்ப தறமாகப்
புந்தியுற வாச்சிரமம் போற்றுவது பொருளாக
இந்துவணி சடையாரை யேத்துதல்பே ரின்பமதா
முந்துநெறி யிவைமூன்றுந் தரித்தனைய முந்நூலான். 3

பொ - ரை: அந்தியும் நண்பகலும் நீராடிக் கடன் முடித்தல் அறம்; கருத்தொன்றிப் பிரமசரியம் காப்பது பொருள்; மதிமுடிக் கடவுளை வழிபடுவதே பேரின்பம்; இம் மூன்றனையும் மூன்று நூலாகத்தரித்தாற்போன்ற முந்நூல் உடையான்.

ஒருநெறியு மிருபிறப்பு முத்தழலு முயர்நான்கு
சுருதிகளு மைந்துவகை வேள்வியுஞ்செய் தொழிலாறும்
கருதுமெழு பவமுணர்ந்த காட்சியுமெண் டிசைமதிப்பும்
பெருகுநவ தாரணையும் பெற்றசிவ சாமியென்பான். 4

பொ - ரை: அம்மறையவன் பெயர் சிவசாமி; ஒப்பற்ற சிவநெறியைப் பற்றி இருபிறப்பு முத்தழல் நான்மறை ஐவகை வேள்வி அறுதொழில்கள் என்பவற்றை உடையவன்; எழுவகைப் பிறப்பின் இயல்பை உணர்ந்தவன்; எண் திசையிலேயும் புகழ் உடையவன்; ஒன்பது வகைப்பட்ட தாரணையில் தன் மனத்தை நிறுத்த வல்லவன்.

பன்னமடைக் காயெதிரிற் பாலர்போற் பழவடிசின்
மன்னிடத்தில் விருத்தர்போன் மான்றோற்கு மாமுனிபோற்
பொன்னனையா ரிதழ்த்தேனிற் பூந்தேனிற் புனவேங்கை
முன்னுறுதேன் போற்பிரம சரியமுடித் தொழுகுநாள். 5

பொ - ரை: வெற்றிலைப் பாக்கில் பாலரைப்போல் விருப்பங்கொள்ளான்; பழைய உணவு இருக்கும் இடத்தில் முதியோர்போல விருப்பங்கொள்ளான்; மான்தோலை பூணுதற்கண் வியாசர்போல இருந்தான்; பெண்கள் கலவியில் வேங்கைமரப் பூவின் தேனை அவாவாத வண்டுபோல விருப்பங்கொள்ளான்; இவ்வாறு முதல் நிலையாகிய பிரம்மசரியத்தை நிறைவேற்றி ஒழுகினான்.

கோதிலா நிறைகேள்விக் குரவனடி யிணைபரவி
ஆதியா மறைவகுத்த வாச்சிரம மொருநான்கின்
ஊதியங்க ளிம்மையினு மறுமையினு முதவுமது
யாதுபுக லெனக்கேட்ப வாங்கவனு மெடுத்துரைப்பான். 6

பொ - ரை: குற்றமற்ற கேள்வியையுடைய ஆசிரியனிடத்து வினவினான்: வேதங்கள் கூறும் நான்குவகை நிலைகளுள் இம்மையிலும் மறுமையிலும் ஆக்கம் பயப்பது யாது என வினவினான்; ஆசிரியன் பின்வருமாறு விடை கூறினான்.

பேதையர்பான் முகம்பாரா தோதல்பிர மச்சரியம்
காதலியை மணம்புணர்ந்து வாழ்தல்கா ருகத்தியமாம்
மாதரொடு வனத்துறைந்து நோற்பதுவா னப்பிரத்தம்
ஓதுமிவை மூன்றுமொழித் தொன்றுணர்தல் சந்யாசம். 7

பொ - ரை: திருமணத்தைக் கருதாது வேதத்தையும் அங்கங்களையும் ஓதி உணர்தல் பிரமசரியநிலை; ஒத்த அன்புடைய மாதரை மணந்து அறவாழ்வு வாழ்தல் இல்லறநிலை; மனைவியோடு வனத்துச்சென்று தவம்புரிதல் வானப்ரத்தம்; இவை மூன்றையும்விட்டு பரம்பொருளை உணர்தல் சன்னியாசம்.

வி - கு: ஒன்று - பரம்பொருள்.

முன்னிரவி யுடன்மடவார் முகம்பார்ப்பார் மறைபாரார்
நென்னலமு தடைக்காய்கைந் நெகிழார்செந் தேனிகழார்
முன்னுசிகை முஞ்சியுடன் மான்ருேலுங் கைவிடுவார்
துன்னுபிர மச்சரியத் திருந்தாலுந் தூர்த்தரே. 8

பொ - ரை: எழுந்தவுடன் சூரியனையும் மாதர்முகத்தையும் பார்க்கின்றவர் வேதத்தைப் பார்க்கமாட்டார்; 'சூரியனைப்பார்த்தல் என்றது வைகறையில் எழாதவர் என்றபடி' நேற்றைய உணவாகிய பழஞ்சோறும் வெற்றிலை பாக்கையும் விடாதவரும், தேனை இகழாதவரும் பிரம்மசரியத்திற்கு அடையாளமாகிய சிகையையும் நாணல் முடிச்சையும் மான் தோலையும் கைவிடுவோர் ஆவர்; இன்னோர் பிரம்மசரியத்து இருந்தாலும் ஒழுக்கங் கெட்டவராகவே கருதப்படுவர்.

பதித்துணைவி நீராடிற் பன்னிருநாட் படிகடவார்
விதித்தகுல தருமம்விடார் பிறர்மனையை விரும்பலுரூர்
துதிப்பமனை யறத்திருந்துந் துறவோரே துறவோராய்க்
கதித்தமனஞ் சுழிபட்டா ரிருவகைக்குங் கழிபட்டார். 9

பொ - ரை: தன்வீட்டில் வாழ்க்கைத்துணைவி இருதுஸ்நானம் செய்தால் பின்வரும் பன்னிரண்டு நாட்களிலும் தன் வீட்டைவிட்டு செல்லமாட்டார்கள், மிருதிகளில் விதித்த குலதர்மங்களைப் பின்பற்றுவர், பிறர்மனையை விரும்ப மாட்டார்; இத்தகையோர் யாவரும் போற்றும்படி இல்லறத்து வாழ்ந்தாலும் துறவோர் எனவே சிறப்பிக்கப்பெறுவர். இனி துறவறம் பூண்டும் நெறிப்பட வேண்டிய மனம் அங்ஙனம் நெறிப்படாது சுழலுதலை உடையோராயின் அவர் இரண்டு அறங்களிலிருந்தும் வீட்சியுற்றவரே ஆவர்.

இத்தகைய நால்வர்களின் மூவருக்கு மிறந்தார்க்கும்
அத்தமுத லற்ருர்க்கு மாதார மாதலினல்
உத்தமமா மில்லறமே வாழ்வினுக்கு முயர்கதிக்கும்
வித்துமாந் துறவறத்தின் வேருமா மெனும்வேதம். 10

பொ ரை: இந்த நால்வர்களில் இல்லறமுடையோர் ஏனை மூவருக்கும் ஆதாரமாய் இருப்பர்; மேலும் தென்புலத்தாருக்கும், பொருள் சுற்றம் முதலியன இல்லாத வறியவருக்கும் சார்பாக உள்ளவர் ஆதலினல் வேதம் சிறந்த இல்லறமே இம்மை வாழ்விற்கும் மறுமை இன்பத்திற்கும் வித்து எனவும் துறவறத்திற்கு வேர் எனவும் கூறும்.

தருமமெனும் பண்டமிடுஞ் சகடமா மனைவாழ்க்கை
கருமநுகம் பிணித்துமனைக் காதலியுந் தானுமென
இருவராய் முறைசெலுத்தி னெத்துணைத்தூ ரமுஞ்செல்லும்
ஒருவராய்ப் பூண்டிழுப்பி னேரிறையுஞ் செல்லாதால். 11

பொ - ரை: தருமம் என்று சொல்லப்படும் சரக்கை ஏற்றி உள்ள வண்டியாகிய இல்வாழ்க்கையை கடமைகள் என்னும் நுகத்தடியில் தானும் தன் மனைவியும் என்னும் இருவருமாய் தம்மைப் பிணித்துக்கொண்டு முறையாக இழுத்துச்

சென்றால் எவ்வளவு தூரமும் செல்லும்; 'இம்மை மறுமை வீடு எனும் மூன்றையும் பயக்கும் என்றபடி' இங்ஙனமன்றி ஆடவனே அன்றி மனைவியோ மட்டும் கடமைகளைப் பூண்டு செலுத்தினால் இல்லறமாகிய வண்டி ஒரு சிறிதும் நகராது.

விறல்பூண்ட வுயிர்க்குறுதி யிம்மைமறு மையும்வீடும்
அறமூன்றும் பொருளிரண்டு மின்பமொன்று மளிக்குமவை
துறவேலா தில்லறத்தின் றொக்காகு மெனமறையோன்
பொறைபூண்ட மனைக்கிசைந்த மாதரிலக் கணம்புகல்வான். 12

பொ - ரை: வெற்றியையுடைய உயிர்க்கு உறுதியான இம்மையின்பம் மறுமையில் உயர்கதி பின்வரும் வீடு என்னும் மூன்றாகும்; இவற்றுள் அறம் மூன்றையும் தரவல்லது; பொருள் இம்மை மறுமை இரண்டனையும் தரும் இன்பம் இம்மை ஒன்றனையே தரும்; இவற்றைத் துறவறம் ஏற்று செலுத்தாது; இல்லறத்தில் மூன்றும் ஒருங்கேகூடி அமையும், எனக்கூறினர் ஆசிரியர். பின்னர் பொறுமையுள்ள மனைவாழ்க்கைக்குரிய கன்னிகையினது இலக்கணத்தைக் கூறத்தொடங்கினர்.

வேறு

தோடலர்பங் கயமிருதாள் புறவடிபுத் தகம்பரடு துணைத்த ராசால்
ஆடல்பெறு குதிகனகப் பந்துகணைக் காலரவ மலவன் சானு
நீடரம்பை தொடைகுறங்கு கரிக்கைகொடி யிடைமணித்தேர் நிதம்ப நாபி
நாடுநீர்ச் சுழியுதர மாலமயி ரொழுங்குமுலை நாளங் கஞ்சம். 13

பொ - ரை: உள்ளங்கால் மலர்ந்த தாமரை போலச் சிவந்திருத்தல் வேண்டும்; புற அடி புத்தகம் போலும்; பரடு தராசுதட்டுகளைப்போல் சமனாக அமையும்; வெற்றியைத்தரும் குதிக்கால் பொற்பந்து போலும்; கணைக்கால் பாம்புபோலும்; முழங்கால் இணைப்பு நண்டுபோலும்; அடித்தொடை வாழை போலும்; தொடையின் முன்பாகம் யானைத் துதிக்கைபோலும்; இடைபூங்கொடி போலும்; நிதம்பம் தேர்போல்வது; நாபி நீர்ச்சுழி போன்றது; வயிறு ஆல் இலைபோலும்; உந்தியினின்று மேல் எழும் மயிர் ஒழுங்கு தாமரைத்தண்டு போலும்; தனங்கள் தாமரை அரும்புபோலும்.

வி - கு: கஞ்சம் - தாமரை அரும்பு, தாளம்.

விரல்பலவங் கிளிமூக்கு வள்ளுகிர்செங் கரங்காந்தள் வீணை முன்கை
வரையிருதோள் வளைமிடறு வள்ளைகுழை குமிழ்மூக்கு வதன ந் திங்கள்
இருகவுள்கண் ணடிநாட்டங் கருங்குவளை முல்லைநகை யிதழ்செவ் வாம்பல்
ஒருபிறைபு மிருசிலையு நுதல்புருவம் பருவமுகி லுயர்மென் கூந்தல். 14

பொ - ரை: விரல்கள் மாந்தளிர்; கூரிய நகம் கிளிமூக்கு; சிவந்தகைகள் காந்தள்; முன்கை வீணை; இருதோள்கள் மூங்கில்; கழுத்து சங்கு; காதுகள் வள்ளை; மூக்கு குமிழம்பூ; முகம் முழுநிலா; இரு கன்னம் கண்ணாடி; கண்கள் நீலோற்பலம்; பற்கள் முல்லை அரும்பு; வாய்இதழ்கள் செவ்வல்லியின் இதழ்கள்; நெற்றி பிறைமதி; புருவங்கள் இருசிலைகள்; நீண்ட கறுத்த கூந்தல் நீருண்ட மேகம் - போல அமைக.

வி - கு: பலவம் - (பல்லவம்) - தளிர்.

கருமைசூழ் தருமோதி கண்ணுகச் செம்மையுகிர் கால்கை நாவாய்
பொருவருகட் கடையாக வெண்மைமணி முறுவல்பொறி பொன்மையாக
ஒருமைமயிர் நுதிநாடி நாவாக விருமையுயர் புருவ மாக
மருவுகடி தடமுலைகண் பெருமைநகை சிறுமையிடை வறுமை யாக. 15

பொ - ரை : கூந்தலும், கண்களும் கரியன; நகம், கால், கை, நா, வாய், தப்பற்ற கடைக்கண் சிவந்திருப்பன; முத்தம்போன்ற பற்கள் வெண்மையாக அமையும்; உடம்பில் உள்ள தேமல் பொன்னிறம் உடைய; மயிர்நுனி பிளவு படாது ஒருமை உடைத்தாதல் வேண்டும்; நாடியும் நாவும் அங்ஙனமே; புருவங்கள் பிளவுபட்டுக் கூடாமல் இருக்க, கடிதடமும் முலையும் கண்ணும் பெரியவாக, பற்கள் சிறுத்திருத்தல் வேண்டும்; இடை இல்லை என்னும்படி அமைக.

கால்விரல்க ணீளாது குறுகாது நெருங்காது கலந்திடாது
சேல்வரைசங் கமுங்கொடியு நடுவிரனேக் கியவரையுஞ் சீரி தாகும்
மேலிருகை விரனெடிதாய் நேரியதாய் நெருங்கிவிரி கமலஞ் சங்கம்
போலவரை கிடந்துதுரும் பிடைகிடவாப் பொம்மன்முலைப் பூவை யாமால்.

பொ - ரை : கால்விரல்கள் நீளுதல் குறுகுதல் நெருங்குதல் கலத்தல் இன்றி இருத்தல்வேண்டும்; மச்சரேகை, சங்கரேகை, கொடிரேகையும் நடுவிரலை நோக்கிய ரேகைகளும் நல்லவை; இருகைவிரல்கள் நீண்டு நேர்மையுடையனவாய் நெருங்கி, கமலம் சங்கம் போன்ற ரேகைகளை உடையனவாய் இருத்தல் வேண்டும்; தனங்கள் ஈர்க்கு இடை நுழையாதபடி நெருங்கிப் பொலிவு உடையனவாய் இருத்தல்வேண்டும்.

என்புநரம் பெழலாகா வெவ்வுறுப்பு முரோமமைம்பா லின்றி யாகா
மென்கடிநா லாறுகள நான்குநுதன் மூன்றிரண்டு விரலா நாடி
நன்குபெறு மளவாகிக் கூந்தலிரு குழைமூக்கு நாட்ட நீண்டு
பொன்பொலிவு நிறைபொறையும் பனிமொழியு முடையளெனிற் பூவை
[யாமால். 17

பொ - ரை : எவ்வுறுப்பினும் எலும்பும் நரம்பும் தோன்றுதன ஆதல் வேண்டும்; கூந்தலன்றி உடம்பில் உரோமம்கூடா; கடிதடம் இருபத்துநான்கு அங்குலி, கழுத்து நான்கு அங்குலி, நெற்றி மூன்று அங்குலி, நாசி இரண்டு அங்குலி அளவின ஆதல்வேண்டும்; கூந்தல், இருசெவிகள், கண்கள் நீண்டு இருத்தல்வேண்டும்; திருமகள் அழகும், நிறைந்தபொறுமையும், இன்மொழியும் அமைந்தவள் நல்லாள் ஆவள்.

இன்னவகை யிலக்கணங்கள் குறையாம லொன்பதின்மே லாண்டேறுமல்
பன்னிரண்டு பகர்குணத்தின் முறைமேவி நிறைமேவும் படிமை வாய்ந்த
கன்னியே மணம்புரிதற் குரியளா முலகுதனிற் கடிசேர் மன்றல்
முன்னர்மறை யொருநான்கும் வகுத்துரைத்த விருநான்கு மொழியக்
[கேண்மோ. 18

பொ - ரை : இத்தகைய உடல் உறுப்பிலக்கணம் அமைந்து, ஆண்டு ஒன்புதற்கு மேல் ஏறுமல், சிறுகாலை அட்டில்புகல் முதலிய பன்னிரண்டு

குணங்கள் பொருந்தி நிறைந்த நல்லொழுக்கம் வாய்ந்த கன்னியே மணம்புரிதற்கு உரியவள்; இனி மறைகள் விதித்த பாதுகாப்பையுடைய எண்வகை மணங்கள் இவை எனக் கூறுவேம்.

வி - கு: படிமை - நல்லொழுக்கம்; பன்னிரண்டு குணங்கள் இவை என்பதைத் திருநகரப்படலம் 31-ஆம் செய்யுளிற் கண்டுகொள்க.

வேறு

இருவரு மிணங்கு களவுகந் தருவ மனந்தரி லிணங்கல்பை சாசம்
பெருவலி யதனுல் மருவுத லரக்கம் பேரிலக் கெய்தலே யசுரம்
பொருளுகந் தளித்த லாரிடம் பிரசா பத்தியம் பொருள்கொளா தளித்தல்
அருமகம் வேட்பித் தளித்தலே தெய்வ மழைத்தெதிர் கொடுத்தலே பிரமம்.

பொ - ரை: அவனும் அவளும் மனம்கலந்து பிறர் அறியாதபடி இணங்குதல் கந்தருவம்; உறங்கும்போது அவள் கருத்தின்றிப் புணர்தல் பைசாசம்; விருப்பம் இல்லாதாரை வலிந்து புணர்தல் இராக்கதம்; பெற்றவர்கள் குறிக்கும் ஓர் அரியசெயலை வீரத்தாற்செய்து பெண்ணை மணத்தல் அசுரமணம்; பொருளை விரும்பி மகளை ஈதல் ஆரிடம்; பொருளைக் கொள்ளாது மகட்கொடை செய்தல் பிரசாபத்தியம்; உலகறியத் தீ வேட்டு அதன் முன்னர் மகளைக் கொடுத்தல் தெய்வ மணம்; தக்க கற்றுவல்லோனை அழைத்து மகளைக்கொடுத்தல் பிரமமணம் எனப்படும்.

வேறு

ஆதலாற் பிரமமதே யதிகமெனப் புகல்குரவ னருளைப் போற்றி
ஓதலாண் டறுநான்கி னிரட்டிபிர மச்சரிய முளுற்றி ளுனை
வேதபா ரகனெருவ னிலக்கணஞ்சேர் தன்மகளை மிளிர்பொன் பூட்டிக்
கோதிலா மூவேழு குலமுமுய்ய விதிமுறையிற் கொடுத்தான் மன்னே. 20

பொ - ரை: இவற்றுள் பிரமமணமே உயர்ந்தது என ஆசிரியன் கூறினன்; இவற்றைக்கேட்டு நாற்பத்தெட்டு யாண்டு பிரமசரியம் காத்த சிவசாமி என்பானுக்கு வேதத்தின் கரைகடந்த ஓர் அந்தணன் தன் மகளை உடல் முழுவதும் பொன் அணிகளால் அணிசெய்வித்துத் தன் மூவேழ் குலமும் உய்தி பெறும்படி கன்னிகாதானம் செய்துகொடுத்தான்.

வேறு

மின்னினிடை யன்னநடை விம்பவிதழ்க் கும்பமுலைக்
கன்னன்மொழிப் புனிதவதி காதன்மணம் வேட்டுவந்து
முன்னவனுஞ் சிவசாமி முப்பொழுதுங் குறைமுடித்து
மன்னியமுத் தழல்வளர்த்து மனையறஞ்செய் துறையுநாள். 21

பொ - ரை: மின்னல் போன்ற இடையையும், அன்னம் போன்ற நடையினையும், கொவ்வைக்கனி போன்ற வாய் இதழ்களையும், குடம் போன்ற முலைகளையும், கரும்பு போன்ற இனிய மொழியினையும் உடைய புனிதவதியைக் காதலால் மணந்துவந்து கல்வி கேள்விகளில் மேம்பட்ட சிவசாமி என்பான்

முப்போதும் செய் கடன்களைக் குறைவின்றி முடித்து, முத்தழலும் ஓம்பி இல் வாழ்க்கையைச் செய்து வந்தபோது.

பெருவாரி சூழுலகிற் பிறர்தன்னைப் பேணுங்கால்
அருநாணம் பழிநாண மறிவுகொடை மடமென்னும்
இருநாணு மிருமடமு மிசைவானை வசமாக்க
ஒருநாண முதலமருந் தோரைந்து மெனவுணர்வாள். 22

பொ - ரை: சிவசாமி இருநாணம் இருமடங்களை உடையவன்; அவை யாவன: உலகில் பிறர் தன்னைப் பாராட்டும்போது நாணுதலும், பழிக்கு நாணு தலும் என்பவை இருவகை நாண்; எல்லாம் அறிந்தும் அறியாதவன் போலுதல் அறிவு மடம்; தான் இயல்பாற் பிறர்க்கு ஒரு பொருளைக் கொடுத்து, அதுபற்றிக் கருதாமை கொடை மடம்; இவனை, வசப்படுத்தும் மருந்து நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்பனவும் பொறிவழிச் செல்லும் ஐந்து அவாவினையும் தன்கண் நிகழாமற் காத்தலும் ஆகும் என உணர்ந்தவள் அவன் மனைவி.

மட நாண மெனுமியற்கை மாறும லருட்கணவன்
உடனுக வுவந்துறைத லூராண்மை யென நான்கும்
கடனுக வுறப்பெற்றுள் கன நாணு மலர்க்கூந்தல்
விட நாணும் வரிவிழியாண் மேலொன்றுன் மனந்தளர்வாள். 23

பொ - ரை: மேகத்தைப் போன்ற கூந்தலும் நஞ்சை நாணும்படி செய்யும் கண்களும் உடையாள் மடம், நாணம், இவற்றிற்குக் கேடின்றிக் கணவனுடன் மகிழ்ந்து உறைதல், ஊக்கம் உடைமை என்னும் நான்கும் உடையாள்; வேறு ஒருகருத்தால் மனத்தளர்ச்சி உடையள் ஆனுள்.

பதியின்வாழ் புனிதவதி கொழுநனடி பணிந்தொருநாள்
நிதியிலா தவரிளமை நீரிலா நெடுவாவி
நதியிலா வள நகர நரபதியி லாநாடு
மதியிலா வுயர்வான மக்களிலா மனையென்றுள். 24

பொ - ரை: ஒரு நாள் புனிதவதி கணவனைப் பணிந்து, செல்வமில்லாதவர் இளமையும், நீரில்லாத வாவியும், ஆறில்லாத வளநகரமும், அரசன் இல்லாத நாடும், நிலவில்லாத ஆகாயமும் போன்றது மக்கள் இல்லாத வீடு என்றுள்.

பைந்தொடிகூ றலுமறையோன் பண்டைநாண் முனிவர்கடன்
முந்துபிர மச்சரிய முயன்றுகழித் தோமனையால்
செந்தழன்மா மகம்புரிந்து தேவர்பெருங் கடன்கழித்தோம்
மைந்தனுற் பிதுர்க்கடன்கள் கழிப்பதினி வழக்கென்பான். 25

பொ - ரை: கணவன் கேட்டு முன்பிரமசரியத்தால் முனிவர்க்குச் செய்யும் கடமை நிரம்பிற்று; இல்லத்தில் செய்யும் முத்தீ வேள்வியால் தேவர்கடன் முடிக்கப்பெற்றது; இனி மகப்பேற்றுல் பிதிரர்கடன் முடிப்பது வழக்கே எனக் கூறினன்.

மெய்ந்நெறிசேர் மகவேண்டின் மிக்கதவஞ் செயல்வேண்டும்
முன்னெறிமெய்த் தவம்புரிதல் சிறுபொழுதின் முடியாதால்
இந்நெறியே யெய்துகமென் றியன்மறையோன் மனைவியுடன்
சென்னிமிசை யாறணிந்தார் தலம்பரவச் சென்றணைவான். 26

பொ - ரை: மெய்ந்நெறியில் சேரும் மகப்பேறு வேண்டின் மேலான தவத்தைப் புரிதல் வேண்டும்; பழையமுறைப்படி தவம்புரிதல் சிலநாட்களில் முடிவதன்று; ஆதலால், சிவதல யாத்திரையே செய்யற்பாலது என்று மனைவியுடன் அதனை மேற்கொண்டான்.

கூடல்பூ வணம்புதுவை கொடுங்குன்றம் புனவாயில்
ஏடகந்தென் கானப்பே ரிராமசே துச்சுழியல்
ஆடானை பரங்குன்ற மாப்பனூர் நெல்லைமுதல்
தேடரிய தலம்பரவிக் குற்றாலஞ் சென்றணைந்தான். 27

பொ - ரை: மதுரை, திருப்பூவணம், திருப்பூர்முதலிய தலங்கள் பணிந்து திருக்குற்றாலம் சென்று சேர்ந்தான்.

சீதமுகில் கண்படுக்குந் திரிகூடத் தெய்வவரை
வேதம்போ லாகமம்போன் மெய்ப்பொருள்போன் மேலான
போதம்போன் மந்திரம்போற் புண்ணியம்போற் பூதலத்தோர்
மாதவம்போற் பொலிந்தோங்கும் வடவருவித் துறைகண்டான். 28

பொ - ரை: மேகங்கள் படியும் திரிகூடவரையில் வேதம், ஆகமம், முதற் பொருள், உயர்ஞானம், மந்திரம், புண்ணியம் என்பவற்றைப்போன்ற வட வருவித்துறை விளங்குவதைக் கண்டான்.

தருப்பைவலக் கையிலேந்திச் சங்கற்ப முறைபோற்றிப்
பருப்பதத்தை முதல்வணங்கித் தடாகத்திற் படிந்தேறி
உருத்திரமா மனுவோதி யோங்குநூல் விதிமுறையே
திருத்தகுபூ சனைபுரிந்து சித்திரகங் கையைப்பரவி. 29

பொ - ரை: சிவசாமி என்னும் அந்தணன் தருப்பையை வலக்கையில் எடுத்துச் சங்கற்பம் சொல்லிக்கொண்டு திரிகூடமலையை முதற்கண் வணங்கி அருவியின் அடிப்பக்கத்தில் உள்ள தடாகத்தில் முழுகிக்கரையேறித் திருவுருத்திர சூக்தம் கணித்து உயர்ந்த சிவாகம முறைப்படி சிவபூசை செய்துமுடித்துச் சித்திரகங்கையைத் துதித்தான்.

அறையோசை யணங்கோசை யந்தரபல் லியங்கறங்கு
முறையோசை வலம்புரிகண் முழக்கோசை முகிலோசை
மறையோசை மாதவர்கள் வானவர்க ளுவந்தாடுந்
துறையோசை செவிகுளிர்ப்பத் தொழுதருவித் தடங்குளித்தான். 30

பொ-ரை: அலைகள் பாறைகளில் மோதுதலால் எழும் ஓசை, தேவமகளிர் பாடும் ஓசை, தேவமுரசுகளின் முறையான ஓசை, சங்கங்களின் முழக்கம், மேக முழக்கம், வேத ஒலி, முனிவரும் தேவரும் நீராடுவதால் துறைகளில் எழும் ஓசை என்பவை செவிக்கு இனிமைசெய்ய, முதல்வன் திருவருளைக்கருதித் தொழுது அருவித்தடாகத்தில் குளித்தான்.

அருவிநீர் படிந்திடுங்கா லரும்பாவங் கழுநீராய்
வெருவியிரிந் தோடுதலால் வெவ்வினைவென் றவனானான்
தருபுலனென் றியநிலையாற் றன்னையுணர்ந் தவனானான்
உருவிலொளி தெரிசனத்தா லொருபொருள்கண் டவனானான். 31

பொ-ரை: அருவியில் முழுகும்போது பாவங்கள் கழுவப்பட்டு நீங்குதலின் அந்தணன் வினைகளை வென்றவன் ஆயினன்; ஐம்பொறிகளையும் அடக்கி மனம் ஒன்றி நிற்றலின், ஆன்மஞானம் உடையவன் ஆனான்; நிறம் பொருந்திய வான வில்லைக் காணப்பெற்றமையின், நீலமேனி வாலிழைபாகத்து ஒரு முதலைக் கண்டவன் ஆனான்.

அங்கருவிப் புனலாடி யருநியமக் குறைமுடித்துப்
பொங்குசீ ரக்கமணி புண்ணியவெண் ணீறணிந்து
திங்களணி திரிகூடச் சிவபிரா னடிவணங்கி
மங்கலஞ்சேர் திருவாக்கான் மகவரம்பெற் றேகினான். 32

பொ-ரை: இங்ஙனம் அருவிப்புனல்படிந்து கடன்களை முடித்துத் திருவெண்ணீறு உருத்திராக்க மணிமாலை அணிந்து திரிகூடத்து மதிமுடிக் கடவுளைத்தொழுது, அசரீரியால் மகவரம் பெற்றுச்சென்றான் அந்தணன்.

பதிமேவிச் சிலநாளிற் பதுமைநிகர் புனிதவதி
கதிமேவுந் திருவயிறு கருப்பமுற விருப்பமுற
மதியாறு புகுந்தவுடன் மதியாறு புனைந்தசடை
முதியார்பொன் னடிபரவிச் சீமந்த முறைபுரிந்தான். 33

பொ-ரை: அவன் தன் நகர்க்குச் சென்ற சிலநாளில் திருமகள்போன்ற அவன் மனைவி வயிறு வாய்க்கப்பெற்றாள்; ஆறுமாதம் ஆனவுடன் கங்கையும் மதியும் புனைந்த முன்னவனார் அடிபரவிச் சீமந்தம் செய்தார்கள்.

பங்கயமா முகம்வெளுப்பப் பசுநரம்பு தளதளப்பத்
துங்கநடை தளர்ந்துவரத் துடிமருங்கு வளர்ந்துவரப்
பொங்குமுட லயர்ச்சிவரப் புளித்தவூண் முயற்சிவரத்
திங்களது நிறைந்துவரத் திருவயிறு நொந்துவர. 34

பொ-ரை: மாதங்கள் செல்லச் செல்லத் தாய்முகம் விளர்த்தது; உடம்பு பொலிவெய்திப் பச்சைநரம்பு தோன்றியது; நடைதளர, இடை வளர்ந்துவர உடம்பில் அயர்ச்சி மிகுந்தது; புளிப்பான உணவில் விருப்பம் உண்டாயிற்று; திருவயிறு நொந்து வந்தது.

நிற்குமுயர் சாதிநெறி நீதிவரம் பும்பெருக
நற்கவிமா லவனுதிப்ப வமரர்குரு நனிபார்ப்பச்
சற்கரும வைதிகமுஞ் சைவநெறி யுந்தழைப்பக்
கற்கர்கோத் திரம்விளங்கக் காதன்மக வைப்பயந்தாள். 35

பொ - ரை: அந்தணர்குலமும் நீதியும் தழைக்கவும், சுக்கிரனும் புதனும் ஒரே ராசியில் சேர்ந்திருப்ப, வியாழன் பார்வைபொருந்த வேதநெறியும் சைவத் துறையும் விளக்கம் எய்தக் கற்கர்கோத்திரம் மேம்பாடு உற நன்மகவைப் பெற்றாள்.

பிறந்தநா ணீராட்டிச் சாதகன்மம் பெரிதியற்றி
நிறைந்தபதி னொருதினத்து நாமகன்ம நிறைவேற்றிச்
சிறந்தபெருந் தருமமெலா நிறைவேறு செய்கையினல்
அறந்தழைக்கும் பெயர்தரும சாமியென வறைவித்தான். 36

பொ - ரை: பிறந்தவுடன் குழவியை நீராட்டி, சாதகன்மம் செய்து, பதினோராம் நாள் பெயரிட்டு, சிறந்த தருமங்கள் தழைக்கவும் அறம்வளரவும் தருமசாமி என்னும் பெயரால் அழைத்தார்கள்.

வேண்டுமதி யொருநான்கின் மறுகினிடை மிதிப்பித்துத்
தாண்டுமதி யிருமூன்றில் வாயுறையின் சடங்கியற்றி
யாண்டுமூன் றினிற்சவுள மையாண்டின் முந்நூலுங்
காண்டகைய முறையியற்றிக் கலைபலவும் பயில்வித்தான். 37

பொ - ரை: நான்கு திங்களில் தெருவைக்கடக்கவைத்து, ஆறுதிங்களில் அன்னம் உண்பித்து, மூவாண்டில் சென்னி மயிர் நீக்குவினைசெய்து, ஐந்தாவது ஆண்டில் உபநயனம் செய்வித்துக் கலைகளைப்பயில்வித்தனர்.

இருக்கினெடு தயித்திரியஞ் சாமமதர் வணமென்னும்
பெருக்கமறை நான்கோதி மந்திரஞ்சந் தோபிசிதி
நிருத்தஞ்சோ திடநிகண்டு வியாகரண மெனநிகழ்த்தும்
அருத்தியா றங்கமுணர்ந் தாகமத்தின் வகைதெரிந்து. 38

பொ - ரை: நான்மறை ஓதி ஆறங்கமும் ஆகமங்களும் குமாரன் கற்று உணர்ந்தான்.

வாராகம் வாயவிய மச்சம்வா மனம்பதுமங்
காருடமாற் கண்டேயங் காந்தம்வயி ணவஞ்சைவங்
கூர்மமே பாகவதங் குலவுபவி டியமிலிங்கம்
பேர்பிரம கைவர்த்தம் பிரமாண்ட மாக்நேயம். 39

இன்னவகை யாயபதி னெண்புரா ணம்பயின்று
மெய்ந்நெறிசேர் மிருதிகளும் விரித்தோதி மறைச்சிறுவன்
சொன்னகலை மதிக்கொழுந்து நெய்சொரியுஞ் சுடர்க்கொழுந்தாய்த்
தன்னையன்றிப் பிறிதொருவர் தனக்குநிக ரிலையானன். 40

பொ - ரை: பதினெண்புராணம், மிருதிகள் பயின்று கலைஅறிவு நெய் சொரியப்பெற்ற தீக்கொழுந்தென ஓங்கிவளர ஈடும் எடுப்பும் இலகைச் சிறந்தான்.

பொன்னழகு குண்டலமும் புயத்தழகு புரிநூலும்
முன்னழகு நிறைந்தமதி முகத்தழகு முடித்தசிகைப்
பின்னழகுங் காணுதொரு மடவாரைப் பேசுவதென்
கன்னலெனுஞ் சிலைபிடித்த காமனுங்கா முறவளர்ந்தான். 41

பொ - ரை: அழகிய பொற்குண்டலம், அழகிய புயத்தின்மேல் வெண்புரி முந்நூல், முன்னே முகத்தழகு, பின்னே சிகையாக முடித்தகுடுமி அழகு - இவற்றைக்கண்டு கரும்புவில் ஏந்திய மன்மதனும் பெண்மையை அவாவுவன்; பெண்டிரைப்பற்றி என் கூறுவது? இங்ஙனம் அழகுவளரத் தருமசாமி வளர்ந்தான்.

ஆளையாண் மதிமருட்டு மடங்காத மெய்வடிவும்
நாளைநா ளதிசயிப்பக் கற்றநல மும்பார்த்துக்
காளையாம் புதல்வனுக்குக் காதலா லருமறையோன்
வாளைநேர் விழிமாதை வதுவைமணம் புரிவித்தான். 42

பொ - ரை: ஆளுக்கு ஆள் - எல்லோரையும் என்றபடி - அறிவைமயக்கி வியப்பூட்டும் உடல்வனப்பு, நாளுக்குநாள் வளராநிற்கும் கலைநலன் என்னும் இவற்றைக்கண்டு சிவசாமி என்னும் மறையவன் காளைப்பருவம் எய்தியிருந்த தன்மகனுக்குக் குலம் குணம் அழகு முதலியவற்றிற் சிறந்த ஒரு கன்னியைப் பேரன்போடு மணம்புரிவித்து மகிழ்ந்தான்.

வி-கு: ஆளை ஆள் மதிமருட்டுதல் - ஆடவரைப் பெண்மை அவாவுவித்தல்: உருபுமயக்கம்.

நாட்டகத்தி லுயர்குடியா யுயர்குடியி னனிவேட்டு
வேட்டகத்தும் பிறந்தகத்து மேன்மேலுஞ் சிறப்பெடுப்பத்
தோட்டகத்து வனருகமு நீலமுமோர் துறைபூத்த
கோட்டகத்து வெறியாடுங் கோலமது கரமானன். 43

பொ - ரை: தருமசாமி நாட்டில் தான் உயர்குடிப் பிறப்பு உடையன்; மணம்செய்துகொண்ட குடியும் அத்தகையதே; ஆதலால், ஈரிடத்தும் சீர்வரிசைகள் செய்யப்பெற்றான்; இதழ்களையுடைய தாமரையும் நீலமும் ஒரே துறையில் பூத்திருப்ப அந்நீர்க்கரையில் தங்கி மதுவை நுகரும் அழகிய வண்டுபோல் ஆனன்.

வி - கு: வனருகம் - தாமரை, அது கை, முலை முதலியவற்றையும், நீலம் கண்களையும், ஒருதுறை மனைவியையும் குறித்து நின்றன.

அழகின லுயர்குலத்தா னுலும் பெருங்காமக்
குழகினற் சீருணத்தின் குடப்பால்போற் குணந்திரிந்து
பழகிடா மூர்க்கரொடும் பழகினன் கல்வியெனுங்
கழகமாம் பெரும்பயிர்க்கு மூடமெனுங் களைமூட. 44

பொ - ரை: தருமசாமி உயர்குலத்தான் ஆயினும், அழகும் காமத்தை விளக்கும் இளமையும் காரணமாகச் செம்பு பாத்திரத்தில்வைத்த பால் தன் குணம் கெடுதல் போலத் தன் குணம் மாறிப் பழகத்தகாத முரடரோடு பழகுவான் ஆயினன்; கல்விபயிலும் இடத்தில் வளரும் நற்பயிர்க்கு மூடத்தனம் எனப் படும் களைவந்து மூடுவதாயிற்று.

முதியமறை நூல்விடுத்து மோகமத நூல்பயிற்றி
அதரமுதற் பதினொன்று மமுதநிலை பதினைந்தும்
இதமுறுமா லிங்கனமு மெண்ணரில்கர ணமுந்தெரிப்பான்
பதுமினிசித் தினிமுதலாம் பாவையரைத் துருவுவான். 45

பொ - ரை: பழைய வேதப் பயிற்சியை விட்டு மயக்கம்தரும் காமநூல் பயின்றான்; அதரமுதலாகச் சும்பனம் செய்யும் உறுப்புக்கள் பதினொன்றும், தட்டுதல் முதலிய செயல்களால் காம உணர்ச்சியை மகளிர்க்கு எழுப்புதற்கு உரிய அமுதம் பொருந்திய உறுப்புக்கள் பதினைந்தினையும் இன்பஞ்செய்யும் தழுவும் முறைகளும் அளவற்ற அகப்புறச் செயல்களையும் ஆய்ந்து தெளிவான் ஆயினன்; பதுமினி சித்தினி முதலாகச் சொல்லப்படும் மகளிர் பிரிவுகளையும் ஆராய்வான்.

அந்நாட்டி லொருமடந்தை யனங்கமோ கினியாவாள்
மின்னனை துருவெடுத்து மேகமெனுங் குழன்முடித்துத்
தென்னாடு வளம்பார்க்க வந்ததனை யாடிரும்பப்
பொன்னாடு தனிற்போகாள் பொம்மன்முலை கனத்ததனால். 46

பொ - ரை: அந்நாட்டில் மன்மதனையும் மயக்கக்கூடியவள்; மின்னல் உரு வெடுத்து மேகத்தைக் கூந்தலாக முடித்துத் தென்னாட்டின் வளப்பத்தைக் காண வந்தாற் போன்றவள்; பருத்த தனத்தின் கனத்தால் பொன்னாட்டின்மேல் ஏறிச் செல்லாதவள் ஆனாள்.

பிடியிருக்குஞ் சிறுநடையாள் பெருங்காம னபிடேக
முடியிருக்குங் கனதனத்தாண் முத்திருக்குங் குறுநகையாள்
துடியிருக்குஞ் சிற்றிடையாள் சூதுபெருங் குடிலமெலாம்
குடியிருக்கும் படைவிழியாள் குமரிருக்குஞ் சசிபோல்வாள். 47

பொ - ரை: யானை நடையாள்; மன்மதனது முடிபோன்ற கனதனம் உடையாள்; முத்துப்போன்ற பற்களை உடையாள்; துடி போன்ற இடை உடையாள்; சூதும் வஞ்சனையும் அமைந்த வாள் போன்ற கண் உடையாள் இந்திரர் பலரை மணந்தும் கன்னிமை மாறாத சசி போன்றவள் நிலவுலகில்.

வி - கு: குமர் - கன்னிமை.

முலைவேழ முன்காப்ப மூரிமதன் பின்காப்ப
வலைவீசுங் கலகவிழி வாள்களிரு புறங்காப்ப
அலையாழி சூழுலகை யாணைவசத் தாலடக்கிக்
கலைவேலிக் குள்ளாக வரசிருக்குங் கடிதடத்தாள். 48

பொ - ரை: அவளுடைய அல்குல் சேலையாகிய அரணின்கண் அரசு செலுத்தியது; அநன் ஆணை உலகை வசப்படுத்தியது; முலைகளாகிய யானைப் படை முன்சென்று காத்தன; பெருமையுடைய மன்மதன் பின்பக்கம் காத்தான்; கண்டாரைச் சிக்குண்ணச் செய்யும் கண்களாகிய வாட்படை இருபுறமும் காத்தன.

தூயசிலை கரும்புருவந் தோளிணைகள் கரும்புருவம்
தேயுமிடை தடித்துவருந் திரளுமுலை தடித்துவரும்
காயுமத னுடுபிறந்தாள் கமடமுது கிருபுறந்தாள்
சாயலொரு மேனகையா டளவரும்பு மேனகையாள். 49

பொ - ரை: அவள்தன் கரும் புருவம் தூய சிலைபோன்றது; இருதோள்கள் கரும்பின் வடிவு உடையன; நுண்ணிய இடை மின்னல்போலும்; திரண்ட முலைகள் பருத்துவளரும்; காமநோயைத் தரும் மன்மதனோடு உடன்பிறந்தவளை ஒப்பாள்; புறந்தாள்கள் ஆமை முதுகு போன்றவை; மென்மையால் மேனகை போன்றவள்; முல்லையரும்பு போன்ற மேன்மையுள்ள பற்களை உடையாள்.

பாடலாற் கருங்குயிலைப் பணிகொண்டாள் பரிமளப்பூங்
காடெலாம் பூங்குழலாற் கைவிலைகொண் டாள்கடல்சூழ்
நாடெலாம் பணிகொளவோ நாகநாட் டரம்பையரை
ஆடலாற் பணிகொளவோ வரங்கேறத் தொடங்கினுள். 50

பொ - ரை: குயிலின் இன்னுசையையுடையாள்; பரிமளமுள்ள பூஞ்சோலை முழுதினையும் தன் கூந்தலால் சிறுவிலைக்கு வாங்கிவிட்டாள்; நிலவுலகத்தையும் தேவர் உலகத்தையும் பணிகொள்ளப் புகுவாள்போல் நடன அரங்கேற்றம் செய்யத் தொடங்கினுள்.

கங்கர்சோ னகர்கலிங்கர் துளுக்குடகர் கருநாடர்
சிங்களர்சா வகர்கொல்லர் தெலுங்கர்கோ சலர்சீனர்
வங்கர்கூ விளர்மகதர் வார்பொழிற்க டாரர்முதல்
கொங்கணரு நிறைந்ததமிழ்க் கொற்கையார் பெருஞ்சபையில். 51

பொ - ரை: பாண்டிய மன்னன் தலைநகரத்துள் ஒன்றாகிய கொற்கையிற் கூடிய அரங்கில் பிறநாட்டினர் அனைவரும் வந்திருந்தனர்.

அன்னமோ வானுட்டி லரம்பையோ முனிவோரை
இன்னமோர் முறைமயக்க வெழுந்தமோ கினிதானே
சொன்னமோ மதனிரதி தோற்றமோ சிலைக்காமன்
சின்னமோ மடமாதர் தீபமோ வெனப்புகுந்தாள். 52

பொ - ரை: அவ்வரங்கில் அம்மங்கை புகுந்தபோது, அன்னம் தேவ அரம்பை, முனிவரை முன் மயக்கவந்த மோகினி, தங்கப்பாவை, இரதி மன்மதன் கொண்ட வெற்றிச் சின்னம், மகளிர்க்குள் விளக்கு எனக் கருத நேர்ந்தது.

புட்படுக்குங் கொலைவேடர் புதலூடு மறைவதெனத்
திட்பமுறுஞ் சதிபார்த்துச் சமரிக்கைத் திரைமறைந்து
மட்புலத்தா டவரிதய மச்சமெலாங் கண்வலையால்
உட்படுக்கச் சிலைக்காம னொளியிருப்ப வெளிப்போந்தாள். 53

பொ-ரை: பறவைகளைப்பற்றும் கொல்லுதற்றொழில் உடைய வேடர் புதரில் மறைவது போல, தன் மருங்கு உள்ள திரைச்சீலையுள் மறைந்திருந்து காமப்போர் புரிவாளாகிய அப்பெண் திண்ணமாகிய தாள ஒத்தைப்பார்த்து வெளியே வந்தாள்; மண்ணுலகத்தில் உள்ள ஆண்மக்கள் மனமாகிய மீன்களை அவள் கண்ணாகிய வலையுட்படுத்துவதற்குக் கரும்புச்சிலையையுடைய மன்மதன் அவளை இடமாகக்கொண்டு மறைந்திருந்தான்.

பத்தியிசைக் காம்போதி தோடிபயி ரவிபாடத்
தித்திசிறு முகவீணை சீங்குழல்கின் னரமிழற்ற
மத்தளங்க ளிருபுறமும் பரதமுறை வகுத்தியம்பத்
தத்தளங்க தளங்கவெனத் தாளமுறை முறைமுழங்க. 54

பொ-ரை: சுவரவரிசைகளை உடைய காம்போதி தோடி பயிரவி முதலிய கனராகங்கள் பாடப்பெற்றன; தித்தி என ஒலிக்கும் சிறுமுகவீணை சீங்குழல் கின்னரயாழ் என்பன ஒத்து இசைத்தன; இருமருங்கும் மத்தளங்கள் பரத நடன முறையைக் காலவரையுட்படுத்திக் காட்டின; தாளங்கள் தத்தளங்க தளங்க என முழங்கின.

பிள்ளையார் கவித்துவமும் பேரணியு மஞ்சலியும்
தள்ளரிய சலாந்தருவுஞ் சவுதவிகற் பமுங்காட்டி
தெள்ளியசெக் கணியாடிக் குச்சரா திகள்சேர்த்துக்
கள்ளவிழி போராடக் கையிலபி நயமெடுத்தாள். 55

பொ-ரை: பிள்ளையார்துதி, பேரணி, அஞ்சலி, சலாந்தரு, சவுத வேறு பாடுகள் பாட்டுக்களில் காட்டப்பெற்றன; தெளிவான செக்கணி நடனம் முன்னரும் அதைச்சார்ந்து குச்சரம் முதலியவும் ஆடப்பெற்றன; கண்டார்க்கும் காமம் விளைக்கும் கண்விழிகள் கைமெய்காட்டுகளின் வழிப்பிறழ்ந்து இயங்கும் படி லாசியம் என்னும் கூத்து ஆடினாள்.

மண்ணின்மேற் பெயர்ந்தாளோ வானின்மேற் குதித்தாளோ
கண்ணின்மேற் கலந்தாளோ கருத்தின்மேற் புகுந்தாளோ
பண்ணின்மேல் வரிச்சுரும்போ தும்பியோ படர்மயிலோ
விண்ணின்மே லுருப்பசியோ மேனகையோ வெனநடித்தாள். 56

பொ-ரை: மண்ணில் வந்தவளோ, ஆகாயத்தில் தாவியவளோ, காண் பார்கண்ணும் மனமும் நுழைந்தவளோ என்னும்படி இசையினால் பெண் ஆண் வண்டுகள்போலவும் சாயலால் மயில் போலவும் வனப்பால் ஊர்வசி மேனகை போலவும் நடித்தாள்.

தாள்வீசும் பவுரிதொறுஞ் சதிவீசு மணிச்சிலம்பு
வேள்வீசும் பொருகணைக்கு வில்வீசுங் குனிபுருவந்
தோள்வீசுந் தொறுங்கனகத் தொடிவீசுங் கதிர்ப்பிரபை
வாள்வீசுங் கலகவிழி வலைவீசுந் தவத்தோரை. 57

பொ - ரை : காலைப் பெயர்த்து வீசி ஆடும் பவுரிக் கூத்தில் மணிகள் பதித்து சிலம்பு தன் ஓசையால் தாள ஒத்தைக் காட்டும்; அவள்தன் வளைந்த புருவம் மன்மதன் விடும் பாணங்களுக்கு வில்லாக வளைந்தும் நிமிர்ந்தும் துணைபுரியும்; கைகளைவீசி ஆடுந்தோறும் அவற்றில் அணிந்துள்ள பொன்வளையல்கள் பல் கதிரை விரிக்கும்; வாள்போல் பிறழும் கண்கள் தவவொழுக்கம் உடையார் இடத்தும் வலையைவீசும்.

கொட்டமிடு மன்னரெலாங் கொம்பனு ளிசைவலையில்
பெட்டலையு மிருசெவியா மசுணமாப் பிறித்தாலும்
கட்டழகா மதுவிழ்ந்த கண்வண்டு பிறித்தாலும்
வட்டமுலைக் கிடைநுழைந்த மனம்பிறிக்க மாட்டாரால். 58

பொ - ரை : செல்வச் செருக்குள்ள அரசர்கள் அம்மாதரின் இசைவலையிற் சிக்குண்ணும்; தம் இரு செவிகளாகிய அசுணப்பறவைகளை ஓர் ஒருகால் மீட்பர்; அவளுடைய கட்டழகாகிய தேனில் வீழ்ந்த கண்களாகிய வண்டுகளையும் அங்ஙனம் மீட்பர்; ஆனால், வட்டமான அவள் முலைகளிடையே நுழைந்த மனத்தை மீட்கமுடியாதவர் ஆயினர்.

அச்சிருந்த தேவரம்பை யனங்கமோ கினிபார்வை
நச்சிருந்த கணைகாதிற் கொப்பிருந்து நனிதடுப்ப
எச்சிருந்த கொடியிடையை யிடையவருத் தியமுலையைக்
கச்சிருந்து தடுத்ததனற் பிழைத்தனர்கா வலரெல்லாம். 59

பொ - ரை : பெண்வடிவிற்கு முன்மாதிரியான, தேவ அரம்பைபோன்ற, அநங்கமோகினியின் நஞ்சுகலந்த கண்களாகிய பாணங்களின் வேகத்தை அவள் செவியிலிருந்த கொப்பு தடுத்தது; எய்த்திருந்த இடையை மேலும் வருத்திய முலைகளைக் கச்சு இருந்து தடுத்தது; இல்லையேல், அரசர்கள் அன்று உயிர் பிழைத்திரார்.

மின்னுடைய சிற்றிடையாள் வியந்தாடு மவைக்களத்துத்
தன்னுடைய தோழரொடுந் தருமசா மியுமிருந்தான்
பொன்னுடைய திதலைமுலைப் பூவுலகின் மடவார்க்குள்
என்னுடைய மனங்கவர்ந்தா ளிவளென்றே யதிசயித்தான். 60

பொ - ரை: மின்போன்ற இடையையுடையாள் வியப்பித்து ஆடும் அரங்கில் தருமசாமியும் தோழர்களுடன் இருந்தான்; உலகில் பொன்னிறத் தேமல் பொருந்திய முலை நல்லார்களுள் இவள் ஒருத்தியே என் மனத்தைக் கவர்ந்தவள் என்று வியந்தான்.

பேசையிலும் பார்க்கையிலும் பேரனங்க மோகினிக்கும்
ஆசையிவன் மேலிருக்கு மாளுலுந் தன்மனத்தை
வேசையெனுங் குலத்தொழிலால் விலக்கிநா டகம்புரிந்தாள்
காசையும்பொன் னேயுநயந்தார் காமனையு நயப்பாரே. 61

பொ - ரை: பேசும்போதும் காணும்போதும் அநங்கமோகினிக்கும் தருமசாமிமேல் ஆசை அகத்தே உண்டு; ஆயினும், அவள் பரத்தையர் குலத்தவள் ஆதலால் தன் மனத்தைக் கட்டுப்படுத்தி நாடகம் புரிந்தாள். காசையும் அழகையும் விரும்புவோர் மன்மதனையும் விரும்பார்.

வேறு

சென்றகா செனவே யாடல் செலுத்தியெண் டிசையு ளோரை
வென்றன ளுலகை யெல்லாம் வெல்லுவ ளெனவே வேந்தர்
நன்றெண வரிசை கோடி நல்கினர் பூரை பூரை
என்றன ரெழுந்தார் மேலோ ரேங்கினர் காமப் பாலோர். 62

பொ - ரை: செல்லும் காசைப்போலத் தன் கூத்தை ஆடிக்காட்டி இவ்வுலகை வென்றனள்; மற்றுலகங்களையும் வெல்வாள் என மகிழ்ச்சி தெரிவித்து அரசர்கள் அளவற்ற வரிசைகள் செய்தனர்; பெரியோர்கள் போதும் போதும் எனக் கூறி அவையினின்றும் புறப்பட்டனர்; காமப்பகுதியில் உழல்வோர் ஏங்கினர்; அவளைப் பெற்று நுகரவேண்டும் என.

வேறு

கொட்டுறுநா டகக்கணிகை கூத்தொழிந்த வவைக்கூட்டம்
விட்டுடையுங் குளநீர்போல் வீற்றுவீற் ருயேகி
இட்டுணர் வளம்போன்ற தேந்திழைபோய் மனைபுகுந்தாள்
மட்டரு மயல்பூண்டார் வலைபுகுந்த கலைபோன்றார். 63

பொ - ரை: முழக்கங்களோடு ஆடிய கணிகையின் கூத்தாட்டு அவைக் கூட்டம் கரைமுறிந்த குளநீர்போல் வேறு வேறு திசைகளில் சென்று மறைய, இட்டு உண்ணாதவர் செல்வம் முடிவிற் பயனின்றிக் கெடுவதுபோல அவை வெறித்து நின்றது; மோகினி தன் வீடு புகுந்தாள்; வலைப்பட்ட மான்போன்ற காமுகர் அளவுபடாத மயக்கம் கொண்டனர்.

அரங்காடல் கூடியபின் னவள்காமக் குளிர்பிடித்துக்
குரங்காட லெனச்சுழல்வார் குழாநோக்கிக் கொடுங்குழையாள்
வரங்காணுஞ் சிவசாமி மைந்தனுக்கே யெதிர்கொண்டாள்
தரங்காணு மீன்பார்த்துத் தப்பவிடாக் குருகதுபோல். 64

பொ - ரை: அரங்கேற்றம் ஆனபின் அவள்மேல் கொண்ட காமக் குளிரால் குரங்குகளைப்போல நிலையின்றி மனஞ் சுழலும் காமுகர் கூட்டத்தைப் பார்த்து, அவ்வளைந்த குழையாள் உயர்வு தோன்றும் தருமசாமியையே எதிர் கொண்டாள்; தகுதிவாய்ந்த மீனைக் கண்டு தப்பவிடாத பறவையைப்போல.

## வேறு

மெல்லெனச் சிலம்பு தண்டை கிண்கிணி மிழற்றப் பாவை
ஒல்லென வெதிர்கொண் டேகி வருகென வுருகப் பேசும்
சொல்லெனுஞ் சுவையைத் தூண்டிற் சுவைகொளு மீன்போன் மாந்திக்
கல்லெனும் வளைக்கை பற்றிக் கணிகைதன் மனையிற் போனன். 65

பொ-ரை: காலணிகள் ஒலிக்க எதிர்சென்று வருக எனச் சொல்லிய அனங்கமோகினியின் சொற்சுவையாகிய தூண்டில்மீனை விழுங்கித் தருமசாமி அவள்தன் ஒலிக்கும் வளைக்கையைப் பற்றிக்கொண்டு அவள் வீட்டில் நுழைந்தான்.

ஆடக மனைகை வேலி யணையொரு கொப்ப மாகச்
சேடியர் வேட ராகச் செழுமறைக் களிறு சேர்ப்ப
நாடகத் தாயோர் பாகாய் நாணெனுந் தோட்டி பூட்ட
வாடிய மருங்குல் வல்லி தளையிடும் வல்லி போன்றுள். 66

பொ-ரை: பொன்னல் அணிசெய்யப்பெற்ற கணிகையின் வீடு எனும் சிறுவேலியுள் மெத்தையாகிய படுகுழியில் தருமசாமியாகிய யானையை தோழியாகிய வேடர்கள் சேர்ப்பிக்க தாய்க் கிழவி பாகனக இருந்து பிரிவதற்கு நாணுதலாகிய அங்குசத்தைப் பூட்ட மெலிந்த குளிர்ச்சி பொருந்திய இடையாளாகிய அனங்கமோகினி அவனுக்குப் பாசக்கயிறு ஆனுள்.

பொன்னெளிர் வாரை மீறிப் புணர்முலை பிதுங்கிப் பாதித்
துன்னெளி தோன்ற நின்றுள் சுடரொளிப் பதங்கம் போன்றுன்
மின்னெளி விண்ணில் வீழு மீனெளி விரக வேசை
தன்னெளி நோக்கு வாரோ தமதொளி வளர்க்கு மேலோர். 67

பொ-ரை: அனங்கமோகினி பொன்னிற வார் அணிந்து தன் முலைகள் பாதிவெளிப்படும்படி நெருங்கிய ஒளிவிளங்க நின்றுள்; தருமசாமி சுடரொளியில் மயங்கி வீழும் விட்டில் போன்றுன்; தம் அறிவையும் புகழையும் வளர்க்கும் உயர்ந்தோர் மின் ஒளி பரவும் ஆகாயத்தில் பாய்ந்து மறையும் கொள்ளிவட்டக் கற்களின் ஒளிபோன்ற காம உணர்ச்சியை உண்டுபண்ணும் கணிகையரின் அழகை நோக்கமாட்டார்.

விரைமல ரனிச்சப் போதின் மெல்லிய வுனது பாதம்
தரைமிசைத் தரித்து நிற்கி லென்னுளந் தரியா தென்பான்
உரைதனிற் குறிப்பு நோக்கி யொருவினர் சிலதி மார்கள்
அரியபொற் கபாடம் பூட்டி மெல்லிய லணைமேற் சேர்ந்தாள். 68

பொ-ரை: அனிச்சப்பூப் போன்ற உன் அகங்கால் நிலத்தில் நிற்கப் பொறேன் என்றுன் தருமசாமி; பேச்சில் நிகழ்ந்த உட்கருத்தை எண்ணித் தோழியர் விலகினர்; கதவைத்தாளிட்டு மெத்தையில் இருந்தாள் அனங்கமோகினி.

நறைமலர்த் தாமஞ் சூட்டி நானமும் புழுகு மாட்டி
முறைமுறை சுருள்க ணல்கி மோகன நயங்கள் செய்வாள்
பிறையுகிர்க் குறிக ளாதி புறத்தொழிற் கலவி யெல்லாம்
துறைபயில் காம நூலின் சூத்திர வுரைபோற் கொள்வான். 69

பொ - ரை: தருமசாமிக்கு மாலைகள் அணிந்து கத்தூரி, புனுகு பூசி வெற்றிலைச்சுருள் மடித்துக்கொடுத்து மயங்கவைக்கும் இன்பச்செயல்களைச் செய்தாள்; நகக்குறியிடுதல் முதலிய புறச்செயல்களைக் காமநூல் மூலமும் உரையும் பற்றிச்செய்வான் ஆயினன் தருமசாமி.

மங்கைதன் மதனப் பார்வை வழிச்சென்று மலர்த்தா ணீவித்
தங்கிய வுதர ரோமச் சங்கிலி சார மாக்கிக்
கொங்கைமால் வரைமற் ருவிக் குழலிசைத் தேனீ யோச்சிச்
செங்கனி யிதழ்த்தே னீட்டி வேட்டுவச் சிறுவன் போன்ருன். 70

பொ - ரை: அனங்கமோகினி நோக்கின் வழிநின்று, அவள்பாதம் வருடி, வயிற்றின் உரோம வரிசையே ஏறுசாரமாகக் கொண்டு முலைகளாகிய குன்று களில் பாய்ந்து, மிடற்ருெலியால் தேனீக்களை நீக்கி வாயிதழ்த் தேன் அருந்தி வேட்டுவப்பிள்ளை போன்ருன்.

கடிகமழ் கனிவாய் மள்ளக் கள்ளுண்டு மயங்கித் தேங்கி
வெடிதரு புழுகு நானம் விரைகமழ் சேற்ருற் கொங்கைத்
தடவரை வழுக்கி ரோமச் சாரமுந் தரியா துந்தி
மடுவெனுஞ் சுழிவீழ்ந் தாசை மாப்பெருங் கடலி லாழ்ந்தான். 71

பொ - ரை: வாய் ஊறலாகிய கள்உண்டு, மயங்கி வாசனைக்கலவைச் சேறு பூசப்பெற்ற முலைகளில் வழுக்கி உரோமச்சாரம் தாங்காது வீழ்த்த உந்திச் சுழியாகிய மடுவில் வீழ்ந்து காமக்கடலில் மூழ்கினன்.

முத்தரிச் சிலம்பு கொஞ்ச முகிண்முலை குழைய மோகம்
வித்தரிக் கின்ற தெல்லாம் வியன்பொருட் பங்கி வாங்கும்
கத்தரி யென்ப தோரான் கன்னியென் னுயிர்நீ யென்ருன்
புத்தரி விழிகள் சேப்பப் புலந்தன ளூடல்வே றென்று. 72

பொ - ரை: முத்துக்களை அரிகளாகக் கொண்ட காற்சிலம்பு ஒலிக்க முலைகுழைய மயக்கம் பெருக்குவதெல்லாம் நிறைந்த பொருளாகிய தலைமயிரை வெட்டிக்கொள்ளும் கத்தரி என்று நினையாது, கன்னியே நீ என் உயிர்தான் என்ருன்; புதிய செவ்வரிகளையுடைய கண்கள் சிவந்து நீ உடலால் வேறுதானே என்றுகூறி ஊடினள்.

அலத்தக மலர்த்தா ணீவி யாடலா லூட னீக்கி
நலப்பெருஞ் சுவைகண் மாந்தி நடக்குநான் மறையோன் றன்னைக்
கலத்தலி னிடங்க டோறுங் களிதரு புலவி மூட்டிப்
புலத்தலி னிடங்க டோறும் பொருள்பல கவர்வ தாளள். 73

பொ - ரை: செம்பஞ்சுக் குழம்பு ஊட்டிய பாதம்வருடிப் புணர்ந்து ஊடலைத் தணித்து, அவளைப் பலவகையில் சுவைத்து ஒழுகிய அந்தணச் சிறுவனை புணருந்தோறும் இன்பம் செய்யும் புலவியைத் தோற்றுவித்து, புலவிதோறும் அவனுடைய பொருள்களைக் கவர்வாள் ஆனாள்.

வேறு

மோகமெனும் பசாசத்தான் மிகத்தளைந்து முலைச்சுவட்டு
நாகமதால் வசப்படுத்தி நகக்குறியங் குசமழுத்தி
மாகடைக்க ணோரிசத்தான் மறைக்களிற்றை மதமடக்கிப்
போகமெனுங் கவளமவன் பொருளளவில் புரிகின்றாள். 74

பொ - ரை: மயக்கம் என்னும் இரும்புச் சங்கிலியால் கட்டி, சுவடுபடும் முலைகளாகிய யானைகளால் மறையவனாகிய யானையை வசப்படுத்தி, நகக்குறியாகிய அங்குசத்தால் நெறிப்படுத்தி, கடைக்கண்ணாகிய பாணத்தால் அவன் மதத்தை அடக்கி அவன் கொடுக்கும் பொருளின் அளவிற்கு ஏற்பப் போகம் என்னும் கவளத்தை அவனுக்குக் கொடுத்துவந்தாள்.

ஓமமே மந்திரமே யொவ்வொன்றாக் குறைந்துவரக்
காமமே நிறைவாகக் கருமமெனுந் துணைபிரிந்து
பூமலர்வெங் கணைமதனை வென்றபுரி நூன்மார்பன்
வாமமே கலைநிதம்ப வாளரவான் மதிதோற்றான். 75

பொ - ரை: மன்மதனை வென்ற அழகுடைய தருமசாமி ஓமாக்கினி மந்திரம் முதலியவற்றை மறந்து காம உணர்ச்சி பெருகி நல்வினைகளாகிய துணையைப் பிரிந்தான்; அழகிய மேகலையாள் அல்குலாகிய அரவால் தன் அறிவாகிய சந்திரன் மறைக்கப்பட்டான்.

திவளுறுதன் மனையிலன்றித் தேவரமு தளித்தாலுங்
கவர்வதென வொருபொழுதுங் கருதாத நெறியாளன்
பவளவிதழ்க் கனிபாலைப் பருகும்விருப் பதுபோல
அவண்மனையிற் கனிபாலு மருந்துவது பொருந்தினான். 76

பொ - ரை: விளக்கம் உள்ள தன் வீட்டில் செய்ததன்றித் தேவர் அமுதம் போன்றவற்றையும் பிறர்தர உண்ணுதான், அனங்கமோகினியின் கொவ்வைக் கனிபோன்ற இதழ் ஊறலை மாந்துவதுபோல அவள் வீட்டில் கொடுத்த பால் பழங்களையும் நுகர்வான் ஆனான்.

எண்ணுவது மதனகலை யெழுதுவது முலைத்தொய்யில்
உண்ணுவது வாயமுத முறங்குவது தனதடமேல்
பண்ணுசெப மந்திரமும் பாவைசெவி மந்திரமே
தண்ணளியான் குளிக்குநீர் சந்தமுலைப் பனிநீரே. 77

பொ - ரை: எண்ணுவது காமநூற்பொருள்; எழுதுவது மோகினி முலைமேல் சந்தனத்தால்; உண்ணுவது அவள் வாய் ஊறல்; உறங்குவது அவள்

முலையாகிய மலைச்சரிவில்; தான் செபிக்கும் மந்திரம் அவள் தனக்குக் கூறிவரும் இரகசியங்கள்; அவள் முலைமேல் அணிந்த சந்தனக் கலவைப் பனிநீரே அந்தணன் குளிக்கும் நீராம்.

கைப்பொருளெ லாங்கொடுத்துக் கல்விகேள் விகண்முதலாம்
மெய்ப்பொருளைக் கைவிடுத்து வேசைமுலைப் போகமெனும்
பொய்ப்பொருளே கைக்கொண்டான் பொதுமாதர் மயல்பூண்டால்
எப்பொருளுந் தெளிந்தாருந் தெளிவரோ விருநிலத்தில். 78

பொ-ரை: கைப்பொருள் முழுவதும் கொடுத்து, கல்வி கேள்விகளால் பெற்ற மெய்ப்பொருளைவிடுத்து, கணிகையின் முலைப்போகமாகிய - பொய்ப் பொருளையே கைக்கொண்டான்; பொதுமகளிர்மேல் மயக்கம் கொண்டார் முன் எப்பொருளைத்தெளிய உணர்ந்திருப்பினும் அத்தெளிவுணர்வை இழப்பர்.

தந்தையாஞ் சிவசாமி தன்கிரகத் தனம்போயும்
முந்தையார் தேடிவைத்த முதல்போயுந் தான்வேட்ட
சிந்தையார் மனைவிபொருட் சீதனங்கள் போயுமுடை
கந்தையாய்ப் போயுமொரு கணிகையார் மயல்போக்கான். 79

பொ-ரை: தந்தை நல்வழியில் ஈட்டிய பொருளும், முன்னோர்வைத்த பொருளும், தான்மணந்த மணத்திற்கு இயைந்த மனைவிகொண்டுவந்தபொருளும் எல்லாம் இழந்தான் தருமசாமி; கணிகைமேல் நிறைந்த மயக்கத்தைக் கடிய வில்லை.

விஞ்சையாற் பொருள்கவர்ந்து விரைந்துபகல் வரப்போனன்
கஞ்சமலர்த் தார்மார்பன் கங்குலினும் வரக்காணுள்
உஞ்சலார் கனங்குழையா ளுழையரொடு நறவருந்தி
மஞ்சணையும் பஞ்சணைமேன் மயில்போலத் துயில்கூர்ந்தாள். 80

பொ-ரை: ஒரு நாள் தன் வித்தையால் பொருள் ஈட்டிப் பகற்போதில் வருவதாகச்சொல்லிச் சென்றான் தாமரை மாலை அணிவோனாகிய மறையவன்; இரவிலும் வரவில்லை; ஊசலாடும் கனவிய குழையுடையாள் உடனிருந்தாரோடு மது அருந்தி அழகிய பஞ்சணையில் மயில் போலச் சாய்ந்து உறங்கினள்.

ஆரணங்கள் பயின்மறையோ னருங்கலைகள் விரித்தோதிக்
காரிணங்கு மலர்க்குழலாள் கனதனத்தின் பொருட்டாகப்
போரிணங்கு மன்னவர்பாற் போந்துகன தனம்வாங்கிப்
பாரிணங்குந் துயிலாளைப் பாராமல் வந்தணைந்தான். 81

பொ-ரை: கரியகூந்தலாளுடைய பருத்த தனத்தின் பொருட்டுத் தருமசாமி தான் கற்றவித்தைகளைப் போர் ஏற்கும் மன்னவர் அவையில்விரித்துக் கூறி மிக்கபொருள் பெற்று உலகம் வயப்படும் துயில் என்னும் மாதரைப் பொருட் படுத்தாமல் அனங்கமோகினிபால் வந்து சேர்ந்தான்.

### வேறு

பொருள்கொடு வரும்வேதன் புகல்கலை மதிசோர
மருள்செயு முகமான மதியொடு குழல்சோர
இருளிடை கலைசோர விரவிடை துயில்வாளை
அருள்பெற விதமாக வடிவரு டுவதானான். 82

பொ - ரை: இங்ஙனம் பொருள் கொண்டு வேதியன் கலையறிவு மயங்கும் படி மயக்கும் தன் முகமதியோடு கூந்தல் சோரும்படி இருளை ஓட்டும் பீதாம்பரச் சேலை சோரும்படி இரவில் உறங்குவாளை அவள் அருள் பெறுவதற்கு இதமாக அடியைத் தொட்டுத் தடவினான்.

தண்டைக ளணிகாலைச் சரணென வருடாமுன்
வண்டுளர் தருகாலை மலரென மலர்கின்றாள்
திண்டிறன் மறையோனைத் தெளிகல ளழிதேறல்
உண்டிடும் வெறியாலே யுரைகுள றுவதானாள். 83

பொ - ரை: தண்டையை அணிந்த காலை அடைக்கலம் எனக் கூறி வருடத் தொடங்கியவுடன் வண்டு முரலும் காலைமலரும் மலர்போலக் கண்விழித்தவள்; மறையவனை இன்னான் எனத் தெளியாது, அறிவை அழிக்கும் கள் உண்ட மயக் கத்தால் மொழி குழறினாள்.

சுருதியின் மறையோனுஞ் சுரநெறி வருதாகம்
பெரிதென வுரையாமுன் பிணைவிழி மடமாது
சிரகம தறியாதே தேறல்பெய் ததுபாலின்
கரகம தெனவீந்தாள் களகள வெனவுண்டான். 84

பொ - ரை: மறையவன் பாலைநிலத்தில் வருவோர்போலத் தனக்குக் காமவேட்கை பெரிதென உரையாமுன் கள் உள்ள பாத்திரத்தைப் பால் வைத்த பாத்திரமாகக் கருதிக் கொடுக்க அவனும் களகள ஓசை எழக் குடித்தான்.

உண்டபின் மதுவேயோ வுதவினை யெனலோடுங்
கண்டில னெனவேங்கிக் கைநெறிப் பவள்போன்றாள்
கொண்டவன் வெறிமேலாக் குலைதலு மவளேதும்
விண்டில ளயல்போனாள் வேசைய ருறவாமோ. 85

பொ - ரை: உண்டபின், மதுவையா கொடுத்தாய் எனவினவ, தெரிந்தி லன் எனக் கைந்நெறிப்பவள்போல இருந்தாள்; தருமசாமி கள்வெறி மிக்குச் சோர்ந்தான்; அவள் ஒன்றும் கூறாமல் அயல் சென்றாள்; கணிகையர் உறவு எங்ஙனம் துணைசெய்யும்?

மனநிலை தடுமாறி வரவர மருளேறிக்
கனவென மொழிசோரக் கலையொடு நிலைசோரத்
தனியொரு துணையாகத் தரைமல ரணையாக
நினைவயர் விலதாலே நிறையறி வினர்போல்வான். 86

பொ-ரை: மனம் தளர்ந்து மயக்கம் மிகுந்து கனவுபோல உரைகுழறத் தன் உடை நெகிழத் தரையே ஒப்பற்ற துணையாக அதையே மலர் அணையாகக் கொண்டு வீழ்ந்து நினைவு சோர்தலின்றி உறுதிப்பாடுள்ள அறிவினர் போல் ஆனான்.

வேறு

புணர்ப்புநீர் வெறிமிகுந்து பொறிமயங்கிக் கிடந்துழல்வான்
உணர்ச்சிதோன் றியபொழுதி லுள்ளமெலா நடுநடுங்கிக்
குணத்தினாற் கல்வியினாற் குலத்தினா லுயர்மறையோன்
கணத்தினாற் புலைபுகுந்த கன்மத்தாற் புலம்புறுவான். 87

பொ-ரை: மாதர் கலவியின் குணத்தினால் மயக்கம் மிகுந்து அறிவு மயங்கி உழல்பவன் உண்மை உணர்ச்சி வந்தபோது உளம் நடுங்கினான்; குணம் கல்வி குலத்தால் உயர்ந்த மறையோன் கீழோர் கூட்டம்பற்றிக் கீழ்ச் சாதித் தன்மை அடைந்தவன் குடித்தொழிலால் புலம்பினான்.

சீறூரிற் குடிவாழ்வுஞ் சிறியாரைச் சேருதலும்
ஊறுநீர்க் கிணறுதக மாடுதலு முயர்கேள்வி
வீறிலார் கூட்டுறவுந் தாசிவே சையர்நலமும்
மாறிடா நிரையமெனு மனுநூலு முணர்ந்துணரேன். 88

பொ-ரை: சிற்றூரில் வாழ்தலும், சிறியார் சேர்க்கையும், ஊறும் நீரையுடைய கிணற்றின் தண்ணீரில் முழுகுதலும், உயர்ந்த கல்வி கேள்வியாகிய சிறப்பில்லார் கூட்டமும், தாசி வேசையர் இன்பம் நுகர்தலும் மாறா நரகம் பயக்கும் என்னும் மனுநூல் விதியை நினைத்திலேன்.

தூர்த்தைபா லின்பமெலாந் துன்பமெனு மேலோர்கள்
வார்த்தையே கேளாமன் மதியழிந்து மதுநுகர்ந்தேன்
கூர்த்தசீ ரறநெறியுங் குலமுறையுந் தவறுனேன்
பார்த்தபோ திகமுமிலை பரமுமிலை யாயினதால். 89

பொ-ரை: வியபிசாரிபால் பெறலுறும் இன்பம் துன்பமேயாய் முடியும் என்னும் மேலோர் சொற் கேளாமல் அறிவுகெட்டு மது நுகர்ந்தேன்; கண் கண்ட பௌதிக இன்பமும் இல்லை ஆயிற்று; மறுமை இன்பமும் இல்லையாயிற்று.

முத்தனைய குறுநகையாண் மோகத்தாற் குலநெறிகள்
அத்தனையுங் கைவிட்டே னறிவழிந்து மதுவுண்டேன்
பித்தனையே போலானேன் பெரும்பாவந் தொலையவினி
எத்தனைகா லஞ்செலுமோ வென்செய்கே னெனவயர்ந்தான். 90

பொ-ரை: அழகிய பற்களையுடையாள்மேல் வைத்த மயக்கத்தால் குல நெறி விடுத்து அறிவழிந்து மது உண்டேன்; பித்தன் ஆனேன்; இப்பாவம்தீர எவ்வளவு காலம் செல்லுமோ; என் செய்வேன் எனச் சோர்ந்தான்.

வன்புலையர் மதுநுகர்ந்தான் மாசுடையின் மாசெனப்போம்
பண்புடையா னுயர்குலத்தான் மதுவுண்ட பான்மையினல்
வெண்புடைவை தனிலழுக்கு விரைந்தேறும் படிபிறரும்
கண்புதைப்ப வுருவழிந்து கருமதிபோற் கறையடைந்தான். 91

பொ-ரை: தாழ்ந்தோர் மது அருந்துவது அழுக்கு உடையில் கறை பட்டாற்போல, நற்பண்புள்ள உயர்குலத்தானுகிய தான் மது உண்டது தூய வெண் புடைவையில்பட்ட அழுக்குப்போல, கண்டோர் கண்களை மூடிக்கொள் ளும்படி தன் அழகிழந்து கருமதிபோல மேகநோய் உற்றுன்.

வந்துவளைந் ததுபாவ மிம்மைபோன் மறுமையினும்
தொந்தமாய்த் தொடருமிது தொலைப்பதே கருமமெனப்
புந்தியுணர்ந் தாடரவம் புண்பட்டா லெனமறுகிப்
பந்திமறை யாகமநூற் பண்டிதர்வா ழவைபுகுந்தான். 92

பொ-ரை: இம்மைக்கண் வந்து சூழ்ந்தபாவம் மறுமையினும் தொடர்ச்சி உள்ளதாகும்; இதற்கு விரைந்து கழுவாய் தேடவேண்டும் என எண்ணி அரவம் புண்பட்டாற் போல மனம் கவன்று ஆகம நூல்வல்லார் அவையை நாடிச்சென்றுன்.

பாக்கியமா மறைவல்லீர் பாலெனவு நறவெனவும்
தேக்கியபாத் திரபேதந் தெரியாமன் மதுநுகர்ந்தேன்
வாக்கியமா மனுநெறியால் வல்வினையேன் பெரும்பாவம்
போக்கியவா றருள்புரிவீர் சரணமெனப் போய்ப்பணிந்தான். 93

பொ-ரை: செல்வமறைவல்லீர்களே! வைத்த பாத்திர வேறுபாடு தெரியாமல் பால் எனக் கருதிக் கள் உண்டு விட்டேன்; மனுநெறிப்படி இதற்குக் கழுவாய் உரைத்தருளவேண்டும்; உமக்கு அடியேன் அடைக்கலம் எனப் பணிந்தான்.

நண்ணியசீர் மறைக்குலத்தோர் நறவுண்டே னெனவுரைக்கும்
தண்ணியசொற் கேளாமுன் றடங்கையாற் செவிபுதைத்துப்
புண்ணியர்வாழ் மன்றகத்து வருவாய்கொல் புலைநெறியோய்
கண்ணினெதிர் நில்லாதே கடிதகல்வா யெனமுனிந்தார். 94

பொ-ரை: மறையவன் கள் உண்டேன் எனக்கூறிய தாழ்ந்த சொல்லைக் கேட்டற்குமுன், அவையினர் தம் செவிகளைப் பொத்திக்கொண்டு; கீழோய், இவ்வவையில் நீ வரத்தகாது, எதிர்நில்லாது விலகு என்றனர்.

விஞ்சைதேர் மறைவாணர் வெகுண்டுரைப்ப மெய்ந்நடுங்கி
அஞ்சவிடந் தனையறியா தருந்திவருந் தியகாலைத்
துஞ்சுமுன் மருந்தூட்டித் துடைப்பதன்றித் தூநெறியீர்
தஞ்சமெனுங் குழவிதனைத் தந்தைதாய் தள்ளுவரோ. 95

பொ-ரை: அவையினர் வெகுண்டுரைத்தபோது தருமசாமி, அறியாது நஞ்சு அயின்ற குழவியைத் தாய் தந்தையர் மருந்து உண்பித்துக் குற்றம் கடிதல் அன்றிக் குழவியைத் தள்ளுவரோ என்றுன்.

பிள்ளைமையே னறியாது பிழைத்தமையைப் பொறுப்பதினித்
தெள்ளிமையோர் கடனென்னத் திரும்பவுஞ்சென் றடிபணிந்தான்
உள்ளமிசை யவரிரங்கி யுறுபாவ மொழிப்பதற்கு
விள்ளரிய சுருதிகளின் மிருதிவிரித் துரைக்கின்றார். 96

பொ - ரை: பிள்ளைமையால் தவறு அறியாது தவறு செய்துவிட்ட என்னைப் பெரியோர்கள் பொறுத்து அடிமை கொள்ளவேண்டும் எனக் கூறி மீண்டும் இறைஞ்சினன்; அவர் இரக்கம் கொண்டு உற்ற பாவம் ஒழிப்பதற்கு அரும்பொருள் மறைவிதிகளை மிருதி நூல்கொண்டு விரித்துரைத்தனர்.

வீருய பவக்கடலின் வீழ்ந்தவரைத் தவவரம்பில்
ஏருமலழுத்துசுழி யறிவுவெளிக் கிருட்படலம்
தூருய கொடுநரகி னழுத்திவிடுந் தோட்டிகதி
பேருன வழியடைக்குங் கதவமே பெருநறவூண். 97

பொ - ரை: கள் உண்ணல் பெரிய பிறவிக்கடலில் வீழ்ந்தவரை தவமாகிய கரைசேராதவகை சுழற்றி அழுத்தும் நீர்ச்சுழிபோல்வது; அறிவாகிய ஆகாயத்திற்கு இருட்கூட்டம்; பழியாகிய கொடு நரகில் செலுத்தும் அங்குசம்; வீட்டு நெறியை வழியடைக்கும் கதவம்.

எவ்வமுற நுகர்ந்தாரை யியம்புவதென் னுங்கவரைக்
கவ்வையுறப் புகன்றாலுங் கண்டாலும் பெரும்பாவம்
மெய்வளரு நெறியோர்கள் விலக்குவது விலக்காத
பொய்வழியை விரும்பினரும் விரும்பாத புலைமதுவே. 98

பொ - ரை: பொய்ந்நெறி நிற்பாரும் விரும்பாதது கீழாகிய கள்ளுண்; துன்பம் மிகும்படி அதனை உண்டவரைப்பற்றி என் கூறுவது? அவர்களைப் பழியுறும்படி பேசினும், காணினும் பாவம் உண்டாகும்; மெய்ந்நெறி நிற்போரால் விலக்கப்படுவது அது.

பின்னவருண் டாலவரே பெரும்புலையர் வணிகரொடு
மன்னவரு முண்டாரேன் மற்றையவ ரினுங்கடையர்
அன்னவர்க்கே யவையாகி லம்புவிக்குக் கடவுளராம்
முன்னவர்க்கு மதுவருந்தன் முறைமையோ மடைமையோய். 99

பொ - ரை: நாலாம் வருணத்தார் உண்டாலே அவர் புலையர் ஆவர்; வணிகரும் மன்னரும் உண்டால் அவரினும் கடையராவர்; பூதேவர் எனப்படும் மறையவர்க்கு மது அருந்தல் கூடுவதோ! மடமையோய்.

வெய்யகுல மூவரைப்போல் வேதியரைச் சிரந்துணித்தல்
வைதிகத்தின் முறையன்றுன் மறையவர்போல் விழிகுறைக்கில்
கையகலா திப்பாவங் கள்ளுண்ட வாய்நிறைய
நெய்யைநெருப் பெழக்காய்ச்சி யுண்ண நீங் கிடுமென்றார். 100

பொ - ரை: ஏனை மூவரைப்போல் கொலைத்தண்டனையை அந்தணர்க்குக் கொடுப்பது மரபன்று; மறையவர்க்குச் செய்யத் தகும் கண்ணை வாங்குதலால்

இப்பாவம் தீராது; கள்ளுண்ட வாய்நிறைய நெய்யை நெருப்பெழக் காய்ச்சி உண்பிக்க இப்பாவம் நீங்கும் என்றனர்.

என்றுகூ டியுங்காய மிறப்பதே நிச்சயமாம்
குன்றுபோற் கடல்போல வந்துகூ டியபாவம்
துன்றுபெரும் பிறவிதொறுந் தொடருமெனிற் சுமந்தாற்றேன்
கன்றுமுடற் சும்மையொடு மிம்மையிலே கழிகவினி. 101

பொ-ரை: எத்தனை நாளானாலும் உடம்பு அழிவதே; மலையும் கடலும் போல வந்து சேர்ந்த பாவம் பின்வரும் பிறவிதொறும் தொடரும்; ஆதலால் பாவச் சுமையைத் தாங்கமுடியாதவன் ஆகின்றேன்; இவ்வுடற்சுமையோடு பாவச்சுமையும் ஒருங்கே கழிந்தொழிக என்ருன் தருமசாமி.

## வேறு

ஆகுவ துரைத்தல் செய்வீ ரெளியனேன் செய்த தீமை
போகுவ தாகி லீதே புரிகுவன் விரைவி னென்னப்
பாகுறத் தரும சாமி பகர்தலும் பகைசேர் தூர்த்தர்
வேகுறச் சிரக நெய்யை வெந்தழ லுலேமே லுய்த்தார். 102

பொ-ரை: செய்யத்தகுவதைக் கூறுங்கள், எளியேன் செய்த பாவம் தீரும் எனின் நீர் கூறியதையே மேற்கொண்டு செய்வேன்; எனப் பக்குவமாகச் சொன்னுன்; பகைவராகிய தூர்த்தர் வருந்தும்படி பாத்திரத்தில் நெய்யை நெருப்பு உலையில் இட்டனர்.

அந்தணர் சபையி னுப்ப ணழலின்மேற் கொதிக்கு நெய்யும்
நிந்தனை பருகித் தீர நின்றனன் றுணிவு நோக்கா
நொந்தனர் கண்டோ ரெல்லா நுடங்கினர் கேட்டோ ரெல்லாம்
வந்தனர் நின்ருே ரெல்லா மறுகினர் மறுகு தோறும். 103

பொ-ரை: அந்தணர் சபையில் நெருப்பின்மேல் கொதிக்கும் நெய்யும், அதைப் பருகி நிந்தனை திரத் துணிந்த தருமசாமியின் துணிவும் நோக்கினர் வருந்தினர்; கேட்டோர் வாடினர்; வீதிதோறும் வந்து சூழ்ந்தோர் எல்லோரும் மனம் கவன்றனர்.

கண்டவர் கொதிப்ப தானுர் கனலின்மேற் கொதிக்கு நெய்யை
உண்டவர் பிழைப்ப ரோவி துரைப்பரோ மறையோ ரென்பார்
கொண்டதோர் பிழைக்கு வேறு கூறிமாற் றும லீது
விண்டன ரந்த ணாளர் மெத்தவுங் கொடியோ ரென்பார். 104

பொ-ரை: நெருப்பின்மேல் கொதித்த நெய்யைக் கண்டவர் வருந்தினர்; இதனை உண்பவர் பிழைப்பரோ? இதனையோ மறையோர் உரைத்தார் என்றனர்; செய்த பிழைக்கு வேறு கழுவாய் கூறி மாற்றுமல் இதனை உரைத்த மறையோர் மிகக் கொடியவர் என்றனர்.

அழகுபோய்க் குலம்போ யின்னே ஞவியும் போமே யென்பார்
பழவினைப் பயனே வேட்ட பாவைதன் விதியோ வென்பார்
சுழல்விழிப் பரத்தை மாரைத் தொட்டபா தகமோ வென்பார்
மழவிடை யனையாற் கிந்த வல்வினை வருமோ வென்பார். 105

பொ - ரை: இவன் அழகும் குலமும் நீங்கிவிட்டன; இனி இவன் உயிரும் நீங்குமே என்றனர்; முன்னைவினைப்பயன் இதுவோ, அன்றி இவனை மணந்த வள் விதியோ என்றனர்; பரத்தையரைத் தொட்டபாவம் இப்படி முடிந்ததோ என்றனர்; இளங்காளையைப் போன்ருனுக்கு இக்கொடிய வினை வருமோ என்றனர்.

தாமமா மறையோன் பேரிற் சாருமோ பாவ மென்பார்
நாமமே யமுதென் றிட்டு நஞ்சுண் டால் விடுமோ வென்பார்
வாமமேன் மதுவுண் டாலும் வழக்கென்பார் மயக்கி வீணில்
காமமோ கொடுத்த தென்பார் கன்மமோ பலித்த தென்பார். 106

பொ - ரை: ஒழுங்குள்ள மறையவன்மேல் இப்பாவம் சாருமோ; அமுது என்று பெயரிட்டு நஞ்சை அயின்ருல் கொல்லாது விடுமோ; வாமநெறியில் மதுவுண்டால் அது தவருகாதே, காமம் அன்ரே மயக்கி இந்நிலையைக் கொடுத் தது; வந்தது கன்மம்போலும் என்றனர்.

கன்னியம் பிராயந் தன்னிற் கடிமண மாலை சூட்டும்
பன்னிதன் சோக தாகம் பார்க்கவும் படுமோ வென்பார்
முன்னையில் வினையோ வென்பார் முடிவிலாத் தவஞ்செய் தீன்ற
அன்னையும் பிதாவுங் கேட்கி லென்படா ரச்சோ வென்பார். 107

பொ - ரை: மணமாலை சூட்டிய மனைவியின் ஆர்வமும் துன்பமும் காணத் தக்கதாக இருக்குமோ? முன்வினையோ? அளவிறந்த தவஞ்செய்துபெற்ற தாய் தந்தையர் இதைக்கேட்கில் என்ன பாடுபடுவார்கள்? என்றனர்.

திருமகம் புரிந்த வேதச் செல்விக்கும் சிவசா மிக்கும்
பெருமக விரண்டு மூன்று பிறந்தது முண்டோ வென்பார்
ஒருமகன் மருந்து போல வுதித்தனன் தவத்தா லென்பார்
பொருவரும் பாவ மெய்யேற் புண்ணியம் பொய்யோ வென்பார். 108

பொ - ரை: மணவேள்வி செய்துகொண்ட வேதவல்லிக்கும் சிவசாமிக் கும் ஒரே மகன் அல்லனே இவன்? பாவம் பயன்தருவது உண்மையாயின், புண்ணியம் பயன்தராதோ? என்றனர்.

மலங்கினர் சிலர்கள் வாடி மயங்கினர் சிலர்கள் சூழ்போய்
உலம்பினர் தருமசாமி யுயிர்க்குறு மலக்க ணேக்கிப்
புலம்பினர் சிலர்கள் கண்ணீர் பொழிந்தனர் சிலர்க ளாவி
கலங்கினர் சிலர்க ளேங்கிக் கரைந்தனர் சிலர்கண் மாதோ. 109

பொ - ரை: சிலர் கண்ணீர் ததும்ப நின்றனர்; சிலர் வாடிமயங்கினர்; சிலர் புறம்சென்று மனத்தை அடக்கினர்; தருமசாமி துன்பம்கண்டு சிலர் புலம்பினர்; சிலர் கண்ணீர் பொழிந்தனர்; சிலர் ஏங்கி மனம் கரைந்தனர்.

அந்தண ரிருந்த வாறே யயர்ந்தன ரயலா ரெல்லாம்
பந்தமுற் றுலைந்து வீழ்ந்தார் பகைவரும் பதைத்தா ரானுன்
மைந்தனுக் கிடையூ றுன வன்மொழி செவியிற் கேட்கும்
தந்தைதாய் துயர மெம்மாற் சாற்றுதற் கெளிதோ வம்மா. 110

பொ - ரை: அந்தணர் இருந்தபடியே மயங்கினர்; பிறர் பற்றால் கட்டுற்று அறிவழிந்து வீழ்ந்து பதைத்தனர்; இங்ஙனமாயின், தம்மகனுக்குற்ற கொடுமொழியைக் கேட்கும் தந்தை தாய் துயரத்தை எப்படிக் கூறுவது?

மணவினை செயுநா ளன்றி மற்றைநா ளறியா ளேனும்
கணவன துயிர்போ மாகி லென்னுயிர் கழிப்பே னென்று
துணிவுட னெழுந்தாள் பாரி தோழிய ரிரங்கி யேங்கக்
குணனுடைக் கற்பு மாதர் கொள்கையை விலக்க லாமோ. 111

பொ - ரை: தருமசாமி மனைவி மணவினை நாளில் அன்றிப் பின் கணவனைக்கூடி யறியாளேனும், தன்கணவன் உயிர்போனால் தானும் உயிரைவிடுவேன் எனத் துணிந்தாள்; தோழியர் இரங்கி ஏங்கினர்; நற்பண்பு வாய்ந்த கற்புடை மாதர் கொள்கையை யாரால் விலக்கமுடியும்?

சேயிழை துணிவு மன்னோன் சிந்தையி லொழிவு நோக்கித்
தாயரு மழுதார் தந்தை தமர்களு மழுதார் நல்லோர்
தீயரு மழுதார் மூத்தோர் சிறியரு மழுதார் கூற்றும்
பேய்களு மழுத வானற் பின்னையார் சலித்த ழாதார். 112

பொ - ரை: மனைவியின் துணிவும் தருமசாமியின் துளக்கமற்ற நிலையும் கண்டு தாய்தந்தை உறவினர் நல்லோர் தீயோர் சிறியோர் மூத்தோர் இவர்களுடன் கூற்றுவனும் பேயும் சலித்து அழுதனர்.

உரங்கெழு தரும சாமி யுயிர்க்குறு மிடுக்க ணோக்கி
இரங்கின புள்ளு மாவு மேங்கின திசையுந் தேவும்
புரங்களு நகரு நாடும் புவனமும் வனமுங் காடு
மரங்களு மிரும்புங் கல்லு மலைகளு முருகிற் றன்றே. 113

பொ - ரை: மனத்திட்பம் உள்ள தருமசாமி உயிர்க்கு வந்த இறுதி குறித்துப் பறவை முதல் பலவும் இரங்கி உருகின.

கோவென வுலக மேங்கக் குழாத்திடை யந்த ணாளர்
வாவெனக் கொடுப்ப வாங்கி மழுவெனக் காய்ந்த நெய்யை
ஆவெனப் பருகா முன்ன ரடற்கரி காத்த நேமித்
தேவென மகதிவீணைத் தெய்வமா முனிவன் வந்தான். 114

பொ-ரை: உலகம் ஐயகோ என இரங்க, அந்தணர் தருமசாமியை வா என அழைத்து மழுவெனக் காய்ந்த நெய்யைக் கொடுப்ப, அவனும் ஆவெனப்பருகத் தொடங்கினன், யானையைக்காத்த திருமால்போல் நாரதர் அங்குத் தோன்றினர்.

அஞ்சலென் றொருகை காட்டி யருளிரு விழியிற் காட்டிச்
சஞ்சலந் தரும சாமி தருபெரு வினைக்குக் காட்டி
கஞ்சமென் கரத்து நெய்யைக் கனலெரிக் குணவு காட்டி
எஞ்சிநின் றவர்கட் கெல்லா மின்னுயிர் காட்டி நின்றான். 115

பொ-ரை: ஒரு கையால் அபயம் கொடுத்து இரு கண்களால் அருளைப் பொழிந்து தருமசாமி வினைக்குக் கலக்கம் உண்டுபண்ணி தன் தாமரைக்கையால் நெய்யை நெருப்பிற் சொரிந்து, மனக்குறையுடையார் அனைவர்க்கும் இன்னுயிர் கொடுத்து நின்றார்.

எழுந்தன ரிருந்தோ ரெல்லா மெதிர்ந்தனர் நின்றோ ரெல்லாம்
தொழுந்தவ முனிவ னுங்குத் தோன்றலு மந்நாட் டுள்ளோர்
விழுந்துயர்க் கடலுஞ் செவ்வேள் வேல்கண்ட கடலா யன்றேன்
அழுங்குர லொலியும் வான்சே ரனிலம்போ லடங்கிற் றன்றே. 116

பொ-ரை: நாரதமுனிவரைக் கண்டோருள் இருந்தவர் எழுந்தார்; நின்றவர் எதிர்கொண்டார்; துயர்க்கடல் செவ்வேள் வேல்கண்ட கடல்போல் வற்றிவிட்டது; மக்கள் அழுகுரல் ஆகாயத்தில் அடங்கும் காற்றைப்போலாயிற்று.

நாதமார் மகதி வீணை நாரத முனிவ னந்த
வேதவே தியரை நோக்கி வேள்விமுத் தழல்வல் லீர்காள்
கோதமார் கனலிற் காய்ந்து கொதிக்குநெய் யவனுக் கீந்தீர்
யாதவன் செய்த பாவ மென்னலும் வணங்கி யன்னோர். 117

பொ-ரை: நாரதர் அந்தணர்களை நோக்கிக் குற்றம் பொருந்திய நெருப்பிற்காய்ச்சிய நெய்யை இவனுக்குக் கொடுத்தீர்களே, இவன் செய்த குற்றம் என்ன என வினவினர்.

வேதநூல் பயிலும் வாயில் வெம்புலை மதுவை யுண்ட
பாதக னிவனே யென்றார் பகர்தலு முயிரை மாய்த்தோ
பேதகம் புரிவீர் பாவம் பிறிதொரு நெறியான் மாற்றப்
போதக மறியீர் கொல்லோ கற்றதும் பொய்யோ வென்றான். 118

பொ-ரை: வேதம் பயிலும் வாயில் புலைக்கள்ளை உண்ட பாதகன் இவன் என்றார்; உயிரை மாய்த்தா பாவத்தைப் பிரிப்பது? வேறுவழி இல்லையா? நீங்கள் கற்றதும் கைகொடுக்க வில்லையோ? என்றார் முனிவர்.

வி-கு: போதகம் - ஞானம்.

என்னலும் பனவர் போற்றி யிருங்குல வணிகர் வேந்தர்
பின்னவர் மதுவுண் டாலும் பெரும்பழி துடைக்க மாட்டார்
முன்னவ னிவனேயுண்ட முதுபழி முனிநீ யன்றி
அன்னவா கனன்வந் தாலு மகற்றுவ தரிதே யென்றூர். 119

பொ - ரை : அந்தணர் மன்னவர் முதலிய முச்சாதியினர் கள்உண்டாலும் கழுவாய் தேடிக்கொள்ளமாட்டார்; மறையவனுகிய இவன் உண்ட பழியை நீ அன்றிப் பிரமன் வந்தும் நீக்குதல் அரிது என்றனர்.

விப்பிர ருரைப்ப யாழோன் வியனகை புரிந்து பாவம்
இப்படி யனந்த கோடி யென்னினுந் தீர்க்குந் தீர்த்தம்
செப்பருங் குடபா லாங்கோர் தெய்வமால் வரைக்கே யுண்டு
கைப்படு நெல்லி போலக் காட்டுது முலகங் காண. 120

பொ - ரை : நாரதர் கேட்டு நகைத்து பாவங்கள் இதுபோல எண்ணற்றன வாயினும் தீர்ந்துவிடும் தீர்த்தம் மேற்கேஉள்ள ஒருதெய்வமலைக்கண் உள்ளது; உலகங்காண அதனைத் தெளிய உணர்த்துவோம்.

வி - கு : தெய்வமால்வரை - திரிகூடமலை.

துங்கபத் திரிகா வேரி சோணை நன் மதைகா ளிந்தி
கங்கையே முதலா வந்து கலந்துநன் மாக மாடும்
பொங்குதே னருவி பாவம் போக்குதல் காட்டு கின்றோம்
இங்குளா ரெழுக வென்று னெழுந்தனர் வழுதி நாடர். 121

பொ - ரை : கங்கை முதலான ஆறுகள் எல்லாம் மாசிமாதத்தில் தம் பாவம் கழுவவந்து மூழ்கும்; பொங்கி எழும் தேன் அருவி அப்பாவங்களைப் போக்குதலைக் கண்கூடாகக் காட்டுவேம்; உடன் வருக என, பாண்டி நாட்டினர் அவருடன் புறப்பட்டனர்.

அந்தரத் தமரர் போற்று மாதியாழ் முனிவ னேகக்
கந்தரப் பொதியச் சாரல் கடந்துபொன் னுலகத் தோரும்
நந்தரத் தவர்போல் வாழ நன்னகர்ப் பதியின் மேவிச்
சந்தனக் குரவ வேலிச் சண்பகச் சோலை சார்ந்தார். 122

பொ - ரை : தேவரும் போற்றும் நாரதர் முன்செல்ல, குகையையுடைய பொதியமலைச்சாரல் கடந்து, தேவரும் நம்மைப்போல வந்துவாழும் திருக்குற்றால நகரம் அணுகிச் சந்தனக் குராமரங்களை எல்லைகளாக உடைய சண்பகச் சோலையைச் சார்ந்தனர்.

சிலையெடுத் தம்பு தூவித் தெவ்வினை யடர்த்துச் சைவத்
தலையெடுப் பவர்தம் பாவத் தறுகண்மான் படமுக் கோட்டு
மலையெடுத் தெறியும் வெள்ளி வலையெனச் சுலவி மேன்மேல்
அலையெடுத் தெறியுந் தெய்வ வருவிகண் குளிரக் கண்டார். 123

பொ - ரை: மேன்மேலும் அலைகள் வீசும் தெய்வ அருவியைக் கண்டனர்; அது சிவநெறியில் உயர்ந்து நிற்போர்தம் பாவமாகிய விலங்கு இறக்குப்படி திரிகூடமலை எடுத்துவீசும் வெள்ளிவலைபோலச் சூழ்ந்து காணப்பட்டது; சித்திர தனுசைக் காட்டிப் பாணம் செலுத்திப் பகையாகிய வினையை அடர்ப்பதாகவும் இருந்தது.

வி - கு: சிலை - ஒலி, வானவில். அம்பு - நீர், பாணம். தெவ்வினை - பகையாகிய வினை. சுலவல் - சுழலல்.

அற்றைநாள் விரத மாக வாங்கவர் குழாத்து வைகி
மற்றைநாட் சுத்தி செய்து மகதியாழ் முனிவ னேகக்
கற்றைவார் சடையி னுரைக் கருத்துற வணங்கி யேத்திப்
பொற்றைநீர்ப் பெருந்த டாகம் புகுந்தனன் தரும சாமி. 124

பொ - ரை: அன்றிரவு உண்ணுதிருந்து அம்முனிவர் கூட்டத்துள்தங்கி, மறுநாள் காலை தூய்மை செய்து கொண்டு நாரதமுனிவர் முன்செல்லச் சடைமுடிக்கடவுளை மனம் பொருந்த தொழுது துதித்துத் திரிகூடமலையில் இருந்த தடாகத்துள் முழுகினன் தருமசாமி.

பவித்திரந் தருப்பை தாங்கிப் பணிந்துசங் கற்ப மோதித்
தவப்பெரு வருண மாதி பகர்ந்துநீர்த் தடாக மூழ்கிச்
செவித்திடு மூல முன்னிச் சிவநாம நவின்று செங்கை
குவித்துமா மலர்க டூவிக் குளிர்வட வருவி சார்ந்தான். 125

பொ - ரை: பவித்திரமும் தருப்பையும் ஏந்தி ஆனைமுகக்கடவுளைப் பணிந்து சங்கற்பம் சொல்லி மிக் உயர்ந்த வாருணசூக்தம் முதலியவற்றை ஓதித் தடாகத்தில் முழுகித் தான் முறையாகச் செபிக்கும் சிவமூலமந்திரம் கணித்துப் பிற சிவநாமங்களைச்சொல்லிக் கைகூப்பி மலர்தூவி வணங்கி வட வருவிக்குச் சென்றான்.

படிந்தனன் படியா முன்னம் பாய்திரை யருவிச் சீயம்
தடிந்தது பலவே ழத்தைச் சாய்ந்தது கழு நீர்ச் சோரி
வடிந்தது பாவக் கங்குன் மறையவன் றனக்குக் காலம்
விடிந்தது விடிந்த தென்னும் வெண்டிரை முழக்க மெங்கும். 126

பொ - ரை: வடவருவியில் மூழ்கினன்; உடனே, பிறவியாகிய யானையை அருவியாகிய சிம்மம் வெட்டிக்கொன்றது; பாவமாகிய சோரி கழிந்தது; பாவமாகிய இருள் புலர்ந்தது;தருமசாமிக்கு இருந்தகெட்டகாலம் தீர்ந்தது தீர்ந்தது என அலைகள் ஒலித்தன.

வாளரா வரம்போ லுண்கண் மாதரான் மதுவுண் பாவங்
காளராத் திரிபோன் மேனி கறுத்துரு வழிந்து போந்தான்
ஆளராப் புனைந்தார் செந்தே னருவிதோய்ந் தகன்ற போதில்
கோளராத் தீண்டி நீத்த கொழுங்கதிர் மதிபோ லானான். 127

பொ - ரை: அரவல்குலையும் அரம்போன்ற மை தீட்டிய கண்களையும் உடைய அனங்கமோகினியால் மது உண்டபாவத்தால் கறுத்த இரவுபோல் மேனி கருகி அழகழிந்துவந்த தருமசாமி சிவபிரானது செந்தேன் அருவி தோய்ந்து எழுந்தபின் அரவாகிய கோளால் பற்றப்பட்டுப் பின் விடுபட்ட ஒள்ளிய கிரணங்களையுடைய சந்திரனைப்போல் சுடர்ந்தான்.

வி - கு: வாள் அரா அரம் - ஒள்ளிய அராவப்பட்ட அரம் எனலுமாம்.

பார்த்தனர் தீர்த்த மேன்மை பரவினர் முனிதாள் போற்றி
ஆர்த்தனர் வழுதி நாட ரரவொலி யெழுந்து வானம்
தூர்த்தது சுரர்பூ மாரி சொரிந்தனர் புவன மூன்றும்
போர்த்தன சிவபி ரானூர் புடார்ச்சுன புரத்தின் சீர்த்தி. 128

பொ - ரை: பாண்டிநாட்டினர் தீர்த்தத்தின் உயர்வைக்கண்டு நாரதரைப் போற்றினர்; அவர்தம் அர அர ஒலி வானத்தை நிறைத்தது; தேவர் பூமாரி சொரிந்தனர்; புடார்ச்சுன புரத்தின் புகழ் மூவுலகும் நிரம்பிற்று.

தெய்வநீ றணிந்து சைவ வைதிகச் செய்கை யாற்றிச்
சைவவே தியர்கு ழாத்துத் தவநெறித் தரும சாமி
மெய்வளர் திரிகூ டத்து விமலனைப் பணிந்து போற்றிப்
பொய்வளர் மதுவுண் பாவம் போக்கிமெய்ப் புனித னானான். 129

பொ - ரை: திருநீறணிந்து வைதிகக் கிரியைகள் செய்து சைவ வேதியர் கூட்டத்துட்சென்று திரிகூட முதல்வனைப் பணிந்த தருமசாமி கள் உண்டபாவம் நீங்கித் தூயன் ஆனான்.

வந்தனைக் கிளைஞர் சூழ மகதியாழ் முனியைப் போற்றி
நிந்தனை யொழித்தா யாவி நிறுத்தினை திரிகூ டத்துத்
தந்தனை சீவன் முத்தி தவிர்த்தனை பிறவித் துன்பம்
எந்தைநின் னருட்குக் கைம்மா றென்செய்கே னளிய னென்றான். 130

பொ - ரை: தொழாநின்ற உறவினர் சூழத் தருமசாமி நாரதமுனிவரைப் போற்றிப் பழிநீக்கி உயிரைக் காத்துத் திரிகூடத்தில் சீவன்முத்தி நிலையினையும் கைவரச்செய்தனை; பிறவியைப் போக்கினை; அன்பனாகிய யான் என்ன கைம்மாறு செய்யமுடியும்?

உந்தைமுன் குறும்ப லாவி லொருவனைப் பரவி யுன்னைத்
தந்தன னுனக்கு மந்தத் தருமங்கை தரலா லீண்டு
வந்தனை பாவந் தீர்த்தாய் வாழிய வென்று வாழ்த்திப்
பந்தனை தவிர்த்த நல்யாழ்ப் பண்ணவன் விண்ணிற் போனான். 131

பொ - ரை: உன் தந்தை குறும்பலாமுதல்வனைப் பணிந்தே உன்னைப் பெற்றான்; அப்புண்ணியம் உனக்குத் துணையிருந்தமையால் இங்கு வந்து பாவத்தைக் கழுவினாய்; நீ வாழ்க என வாழ்த்தி நாரதர் வான்வழிச் சென்றனர்.

புந்திசேர் மகதி யாழோன் பொருட்டினுண் டெய்தப் பெற்று
வந்தனை வழுதி நாடர் மாதவம் பெற்றுப் போந்தார்
சிந்தனை புரியுந் தோறுஞ் சிவதிரி கூடத் தீர்த்தம்
அந்தணன் பாவந் தீர்த்த வதிசயந் துதிசெய் வாரால். 132

பொ - ரை: நாரதரால் அங்கு எய்தி வந்தனைசெய்த பாண்டி நாட்டினர் சிறந்த தவம் நிரம்பிச் சென்றனர்; சிந்திக்குந்தோறும் தருமசாமிக்குக் கழுவாய் நேர்ந்ததை வியப்புடன் மக்கள் போற்றுவர்.

வி - கு: வந்தனை - வணக்கம்.

மெய்கண்ட திரிகூ டத்தை விடுத்தினி வீடு தேடல்
கைகண்ட நவநீ தத்தைக் கழித்துநெய் தேட லென்னப்
பைகொண்ட பணியி னரைப் பணிந்துமெய்த் தரும சாமி
மைகொண்ட பணிலக் கோயின் மதுத்துணர் சூழ்வண் டானன். 133

பொ - ரை: கண்கண்ட திரிகூடத்தை விடுத்து வேறு வழியில் வீடுபெற முயலுதல் கையில் உள்ள வெண்ணெயைப் போக்கி நெய்யைப்பெற முயலுதல் போலும் என்று எண்ணி அரவணி சடைமுடிக் கடவுளைப் பணிந்து மேகந் தங்கும் சங்கக் கோயிலாகிய பூங்கொத்தைச் சூழும் வண்டுபோன்றான் தருமசாமி.

நன்னக ரமர்ந்து முக்க ணயக னடிகள் பேணி
அன்னவ னருளி னலே யருமறை யந்த ணளன்
மின்னணி விமான மேவி விஞ்சையர் பரவத் தெய்வக்
கன்னியர் கவரி வீசக் கயிலைமால் வரையிற் சேர்ந்தான். 134

பொ - ரை: திருக்குற்றால நகரில் தங்கி வாழ்ந்து சிவனடி போற்றி அவன் அருளால் தெய்வ விமானம் பெற்றுத் திருக்கயிலையை நண்ணினன்.

மாதிரு நதியின் றன்மை மகிமையி தென்று சூதன்
ஓதலும் வீதிக் கெல்லா முயர்தரு பணில வீதி
பேதநாற் றுவார மன்றிப் பெரும்பிலத் துவாரந் தோன்றும்
நீதமுந் தெய்வக் காப்பு நிகழ்த்தென நிகழ்த்தல் செய்வான். 135

பொ - ரை: சிறந்த பெருநதியின் பெருமை இது என்று சூதமுனிவர் கூற, வீதிகளில் சிறந்த சங்கவீதியின் வாயில்களன்றிப் பிலத்துவாரம் தோன்றும் நியதமும், தெய்வங்கள் காக்கும் இயல்பும் கூறுக என முனிவர் வேண்டக் கூறுகின்றார்.

அயனது வடிவ மாகி யகிலமும் படைத்த நாதன்
சயனமா லான தாலந் தடங்கையிற் படைக டம்மில்
வியனமர் பணிலங் கோயில் வீதியு மான தப்பால்
புயல்கெழு சிகர மாகப் பொலிந்தது தடங்கை யாழி. 136

பொ - ரை: அயன் வடிவாகி உலகெலாம் படைத்த இறைவன் கிடந்த கோலத்தையுடைய திருமாலானதால்: அவர் கைகளில் உள்ள படைகளில்

பெருமையுடைய சங்கம் திருக்கோயிலும் வீதியுமாய் அமைந்தது; பின் அவர் கையில் உள்ள சக்கரம் மேகங்கள் படியும் கோபுரமுடிஆயிற்று.

பத்திமால் சங்கக் கோயில் பயின்மறை நான்கும் வாயில்
சித்திரப் பொதுவின் முன்னுட் செழும்பில வேந்தன் போந்த
அத்திரு வாய்த லொன்றே யாகவு மைந்தாம் வாயின்
முத்தமிழ் முனியும் பாந்தண் முனிக்கணத் தணித்தாய் நிற்பன். 137

பொ-ரை: அன்புள்ள திருமால் சங்கமாகிய கோயிலுக்கு மறை நான்கும் வாயில் ஆகும்; சித்திர சபையில் முன்னர் வாசுகிவந்த வாயில் உடன் சேரத் திருவாயில் ஐந்தாகும்; அகத்தியனும் பதஞ்சலிமுனிவர் வாசுகி என்போர்க்கு அணிமையில் நிற்பர்.

இருவர்செய் தவத்தா லன்றோ விமையவர் பேரி யார்ப்ப
ஒருவரு முணரா மன்றி லுணர்தர நடித்தா னெங்கோன்
பெருசிலை யிராம னந்தப் பொதுநடம் பரவி மேனாள்
அருள்பெறு தகையால் வென்று னரக்கரை யமர ருய்ய. 138

பொ-ரை: வாசுகியும் அகத்தியரும் செய்த தவத்தால்தான் யாரும் உணர் வரிய சித்திரசபையில் இறைவன் திருக்கூத்தை இயற்றியருளினன்; இராமன் அத்திருநடம் கும்பிட்டே அருள்பெற்றுத் தேவர் உய்யும்படி அரக்கரை வென்றான்.

மூலமாம் வடக்கு வாய்தன் முகத்தது சங்கக் கோயில்
நாலுமா மறைத்து வார நாற்பெருங் கணங்கள் காப்பாம்
கோலநீள் பிலத்து வாரங் கொற்றவா சுகியே காப்பன்
மேலவாய் தலுக்கு வேந்தன் வேந்தன்மெய்க் கணங்கட் கெல்லாம். 139

பொ-ரை: முதலாவதாகிய வடக்கு வாயிலை முகமாக உடையது சங்கக் கோயில்; நான்கு மறைகளாகிய நான்கு வாயில்கள் உருத்திரர், ஆதித்தர், வசுக்கள், மருத்துக்கள் என்னும் நாற்பெருங் கணங்களாற் காக்கப்பெறும்; அழகிய பிலவாயிலை வாசுகி காப்பன்; மேலை வாயிலுக்குக் காவல் கணங்கட்குத் தலைவனாகிய ஐயன்.

வாலையா யுலகை யீன்ற வல்லியைக் கயிலை நாதர்
நீலியென் றுரைத்த வாற்று னீத்தகா ளிதத்துத் தோன்றுஞ்
சூலியா லயத்தைக் காப்பள் சூழ்மதில் வடுகன் காப்பன்
கோலமா காளி பஞ்சக் குரோசமா நகரங் காப்பள். 140

பொ-ரை: இளம் பருவத்தினளாயிருந்தே உலகைத் தந்த முதல்வியை இறைவன் நீலி என்று அழைத்தமையால், அக்கறுப்புச் சட்டையை அம்மை கழித்துக்கொள்ள அதில் உண்டான கௌசுகி அல்லது காளி திருக்கோயிலைப் புரப்பள்; வயிரவர் மதில்களைக் காப்பர்; ஏழு மாதர்களுள் ஒருத்தியாகிய மாகாளி ஐங்குரோச எல்லையினை எத்திசையினும் உடைய திருக்குற்றால நகரைக் காப்பள்.

சாலிசூழ் தலங்கள் யாவுஞ் சாதவா கனத்தன் காப்பன்
மூலமா தவர்கள் வாழு முதுவரைத் திரிகூ டத்தை
மாலுநான் முகனுங் காப்பர் மறைகளுங் காக்கு மாழி
வேலைதா வுகங்கட் கெல்லாம் விமலையாம் பரையே காப்பள். 141

பொ - ரை: நெற்பயிர் சூழும் தலங்கள் எல்லாம் பூதவாகனத்தனாகிய இறைவன் காப்பில் இருக்கும்; ஆதி இருடிகள் தங்கிவாழும் திரிகூடத்தைத் திருமாலும் நான்முகனும் காப்பர்; மறைகளும் திரிகூடத்தைக் காக்கும்; ஆழ்ந்த கடல் வரப்பையுடைய உலகங்கள் அனைத்தையும் பாசத்தின் நீங்கிய பராசத்தியே காப்பள்.

வேறு

ஆதலான் மன்னுசரா சரமாகத் திரிகூடத் தமர ரெல்லாம்
காதலா லுறைவரவ ணுறைவார்மேற் றீவினைகள் கலவா தென்றும்
சாதலாம் பொழுதிலுமை செண்பகப்பூங் கோதைகர தலத்தி லேந்தப்
பூதநா யகனருளா லனைத்துயிர்க்கு முபதேசம் புகல்வான் மன்னோ. 142

பொ - ரை: இங்ஙனமாகலின், பொருந்திய சரங்களும் அசரங்களுமாக ஆங்குத் தேவரெல்லாம் தங்குவர்; அங்ஙனம் உறைவார்மேல் தீவினைகள் வந்து தாக்கமாட்டா; ஒருவர் இறக்கும்போது செண்பகப்பூங்கோதை அம்மை திருக் கையில் தலையை ஏந்த சிவபிரான் திருவருளால் சிவமூலமந்திரம் உபதேசிப்பர்.

விரிந்தநான் மறைக்கடங்காக் குற்றாலத்
தலமகிமை விரித்தி யானுந்
தெரிந்தவா றுமக்குரைத்தே னெனக்காம
முதலாய தெவ்வை வேரோ
டரிந்தமா தவச்சூதன் வியாதனரு
ளாலுணர்த்தி யறிவா லிந்நூல்
பொருந்தவே யுரைப்போர்கள் கேட்போர்கள்
பலனெடுத்துப் புகல்வ தானன். 143

பொ - ரை: நான்மறைக்கும் அடங்காத பெருமையினையுடைய திருக்குற்றாலத் தலப்பெருமையைச் சூதமுனிவர் வியாசர் திருவருளால் இங்ஙனம் உணர்த்தி, அறிவோடு பொருந்த இப்புராணத்தை உரைப்போர் கேட்போர் எய்தும் பயனை மேலும் கூறலுற்றார்; சூதர் காமம்முதலிய அறுபகையை வேரோடு களைந்தவர்.

தருமசாமிச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 2002

# நூற்பயனுரைத்த சருக்கம்

இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும்
வானிரவி யெழுந்தா லன்றிக்
கருதுநிலப் பல்பொருளுங் காண்டலரி
தாமுலகிற் கண்போல் யாரும்
பெருகியசெல் வமுமறிவும் பெற்றாலும்
நூற்கேள்வி பெறுவார்க் கன்றித்
திருவளர்புண் ணியபாவ மிம்மைமறு
மையும்வீடுந் தெரியா தன்றே. 1

பொ - ரை: முகத்தில் இருவிழிகள் பெற்றவர்க்கும் ஞாயிற்றின் ஒளியால் அன்றிப் பொருள்கள் காணப்படமாட்டா; அங்ஙனமே, உலகில் கண்போல யாரும் செல்வமும் இயற்கை யறிவும் பெற்றிருந்தாலும் நூற்கல்வி கேள்வியான் அன்றி இம்மை மறுமை இருவினை வீடு என்பவை உணரப்படா.

ஆதிமறை நூலோதி வீடுபே
றெய்துவர்க ளந்த ணாளர்
சாதிமனு வேந்தருக்கும் வைசியர்க்கு
முணர்த்துமறைச் சார்பா லெய்து
நீதியிலா விப்பிரமங் கையர்சதுர்த்தர்
பிறர்க்குமறை நிகழ்த்தொ ணாதால்
ஓதியபு ராணமவர்க் குறுதிநூ
லெனவுரைப்ப ருறுதி நூலோர். 2

பொ - ரை: அந்தணர் மறைகளை ஓதி வீடுபேறு எய்துவர்; மன்னர் வணிகர்க்கு மறையின் சார்பு நூல்களாகிய மிருதி முதலியவற்றால் நற்பேறு கிடைக்கும்; வேதம் ஓதும் அதிகாரம் இல்லாத பார்ப்பனப் பெண்டிர் நான்காம் வருணத்தவர் என்போர்க்குப் புராணங்களே உறுதி நூல்களாம்.

வேர்புணர்ந்து நுனிக்கனிதே றுறவியினில்
லறத்திருந்து வீடாள் வார்க்குஞ்
சார்புணர்ந்து சார்புகெடச் சனகமெனத்
துறவறஞ்சேர் தவத்தி னோர்க்கும்
ஓர்புடைநின் றொருபொருளை யூகம்போற்
பற்றிவிடா வுணர்வி னோர்க்கும்
போர்புரியைம் புலப்பேயை நேரறிவிற்
செலுத்துநூல் புராண நூலே. 3

பொ - ரை: மரத்தின் வேரை முன்சேர்ந்து பின் அதன் நுனியில் உள்ள கனியை முயன்று பெறும் எறும்பைப்போல இல்வாழ்க்கையிலிருந்தே வீட்டு நெறியை ஆள்வோர்க்கும், தமக்குச் சார்பாகிய முதற்பொருளை உணர்ந்து அகப்பற்றுப் புறப்பற்றுக் கெட அட்டைபோலப் பற்றி நிற்கும் துறவறத் தவத்தினர்க்கும், ஒருமருங்கு நின்று குரங்குபோல் முதல்வன் திருவடியைப் பற்றி விடாத பத்தர்களுக்கும் எதிர்த்து நடக்கும் ஐம்பொறிகளாகிய பேய்களை நேரான அறிவு நெறியிற் செலுத்தும் நூல் புராணமே ஆகும்.

தாளாண்மை யில்லாதார் வேளாண்மை
செலுத்துவதுந் தரைமே லென்றும்
வேளாண்மை யில்லாதார் மனைவாழ்க்கை
செலுத்துவதும் விசையம் வேட்டு
வாளாண்மை யில்லாதார் மண்டுசமர்க்
கேறுவதும் வளர்பு ராணங்
கேளாதார் கதிவிழைவும் விழியிலார்
வழிநடக்குங் கிரம மாமால். 4

பொ - ரை: முயற்சியின்றி வேளாண்மை விழைவதும், வேளாண்மையின்றி இல்லறத்தில் நிற்பதும், வாளை ஆளுதல் இன்றி வெற்றியை விரும்பிப் போர்க்குச் செல்வதும், புராணம் கேளாது உயர்கதியிற் செல்ல நினைப்பதும் விழியின்றி வழி நடப்பதை ஒக்கும்.

இந்நெறியில் வூர்க்கெனவோர்ந் தேகுவார்க்
கவ்வூர்சென் றெய்த லாகும்
பன்னெறியிற் சுழல்வார்கள் படுகர்தொறும்
வீழ்வதன்றிப் பதியிற் சேரார்
புன்னெறிசேர் பசுநூல்க ளவையெல்லாம்
பல்பாசப் புரையில் வீழ்த்துஞ்
செந்நெறியாற் சிவபெருமா னருணெறியிற்
செலுத்துவது சிவபு ராணம். 5

பொ - ரை: குறித்த ஊர்க்கு உரிய வழியை முன்தெரிந்து செல்வோர் அவ்வூரைச் சேர்வர்; அவ்வப்போது எதிர்ப்படும் வழிகளிற் செல்வோர் பள்ளத்தில் வீழ்வதன்றிக் குறித்த ஊருக்குச் செல்லார்; கீழ் நெறிகளை உணர்த்தும் பசுநூல்களைப் பின்பற்றின் உலக பாசத்திலே சேர்த்தும்; சிவபுராணம் நேர் நெறியால் விரைந்து திருவருளைப் பெறுவிக்கும்.

வேறுநினை யார்பிறிது மொழிகேளார்
விளையாடார் விழிக டுங்கார்
மாறுபடு திசைநோக்கார் மற்றொருசொல்
லுரையாடார் வள்ள லார்நூல்
கூறுமவர் முகநோக்கிக் கோடாம
லிருந்துசெவி கொடுத்துக் கேட்பார்
ஆறுசுவை தெரித்தமுத முண்பவர்போற்
சொற்சுவைக ளருந்தி மாதோ. 6

பொ - ரை : சிவபுராணத்தின் பொருள் விளக்கம் செய்யும் ஆசிரியன் முகம் நோக்கியிருந்து செவி கொடுத்துக் கேட்போர் அறுசுவை உண்டி அருந்துவோர்போல் சொல் நயமும் பொருள் நயமும் நுகர்ந்து பயன்பெறுவர்: அவர் வேறொரு கருத்திற்கு இடம்கொடார்; வேற்று உரைகளைக்கேளார்: விளையாட்டும், உறக்கமும், மாறான நெறிகளையும், உரைகளையும் விலக்குவர்.

வி - கு : வள்ளலார் நூல் - சிவபுராணம்.

புணர்த்துசயம் புத்தலங்க ளொன்றுமுத
  ஞன்களவே புனித மாகுங்
குணக்குமுதற் றிசைதோறுங் குற்றால
  மெல்லைபஞ்சக் குரோச மென்பர்
உணர்த்துநூ லத்தலத்திற் பயிலுமவ
  ருயர்கதியு முலகோர் வாழ்த்தும்
இணக்குசரா சரவடிவாய்த் தவம்புரிவா
  னவர்வாழ்த்து மெய்து வாரால். 7

பொ - ரை : மக்களை நன்னெறிக்கண் செலுத்தும் சிவத்தலங்கள் கிழக்கு முதல் நான்கு திசையிலும் ஒரு கூப்பிடுதூரம் முதல் நான்கு கூப்பிடுதூரம்வரை புனிதம் உடையவை; இது பொதுவாக உள்ளது; ஆயின் திருக்குற்றாலத்தின் புனித எல்லை ஐந்து குரோசம் ஆகும்; இத்தலத்தில் சிவபுராணம் கேட்போர் உயர்ந்தோர் வாழ்த்தும்; சராசரமாய் இங்கு உள்ள தேவர் வாழ்த்தும் பெற்று உயர்கதியைப் பெறுவர்.

வி - கு : சுயம்பு - தானே தோன்றும் இயல்பு உள்ள சிவபிரான். ஒன்று - ஒரு கூப்பிடுதூரம். குரோசம் - கூப்பிடுதூரம், இரண்டுகல் தூரம் என்பர்.

வேறு

அண்டர்நா யகர்பு ராணம் பயில்வதா லயங்கள் யாறு
மண்டப மரங்கந் தெற்றி மடந்தடம் வேள்விச் சாலை
தண்டலை நல்லோர் தங்கண் மனைச்சார்பு சுத்தி செய்து
தொண்டராற் பொறித்த வேடு துலங்குபொற் பீட மேற்றி. 8

பொ - ரை : சிவபுராணம் கேட்டற்கு உரிய இடங்கள் திருக்கோயில், ஆற்றங்கரை, மண்டபம், மன்றம், திண்ணை, மடம், தடாகக்கரை, யாகசாலை, நந்தவனம், நல்லோர்தம் இல்லம்; தக்கோரால் எழுதப்பெற்ற சுவடியை தூய்மை செய்த இடத்தில் உயர்ந்த அழகிய பீடத்தில் வைக்கவேண்டும்.

வாசனை மலர்க ளுற்றி மணிவிளக் கேற்றி யேற்ற
பூசனை புரிந்து நூலின் பொருள்விரித் துரைக்கின் றுரை
ஆசனத் திருத்திப் போற்றி யாங்கவர்க் கியைவ நல்கித்
தேசுற விருந்து கேட்பார் செல்வமும் வீடும் வேட்பார். 9

பொ - ரை : நறுமணமுள்ள பூமாலைகளைத் தொங்கவிட்டு, அழகிய விளக்கேற்றி, சுவடியை மலர்தூவி வழிபட்டு, பொருள் சொல்லுவோரை உயர்ந்த

இருக்கையில் இருக்கச்செய்து வணங்கி இயையும் அளவு பொருள் கொடுத்துத் தெளிவுணர்வுடன் இருந்து கேட்கவேண்டும்; இங்ஙனம் கேட்போர் செல்வமும் வீடும் பெறுவர்.

வி - கு : வேட்பார் - விரும்புவோர், அஃதாவது பெறுவர் என்றபடி.

வேறு

நன்னகர்மெய்த் தலமகிமை யெந்நாட்டி
லெங்கிருந்து நவில்வோர் கேட்போர்
இந்நகரை யரியபெருந் தவத்தினு
லெய்தினர்பே றெய்தி வாழ்வார்
அன்னநூல் பயிலிடத்து முனிவர்வா
னவர்நிறைவ ரறங்க ளோங்குஞ்
செந்நெல்முதற் பயிர்தழைப்ப வந்நாடு
மழைவளத்தாற் செழிக்கு மாதோ. 10

பொ - ரை : இத்தலத்தின் பெருமையை வேறு எந்நாட்டில் எவ்விடத்து உரைப்போரும் கேட்போரும் முன்னைத்தவத்தால் இங்கு எய்தினோர் பெறும்பேறு அடைவர்; இத்தலபுராணம் பயிலும் இடத்து முனிவரும் வானவரும் வந்து தங்குவர்; அதனால் அறம் ஓங்கும்; அந்நாட்டில் மழைவளம் மிகுந்து செந்நெல் முதலியவை விளைந்து செல்வமும் செழிப்பும் வளரும்.

விரதமுறு தினமாகின் மேவுபல
ஞென்றுபத்தாம் வேள்வி யாகில்
சரதமுறு சதமகப்பே றெய்துமா
யிரமடங்காந் தவத்தோர்க் காகில்
வரதனுயர் திரிகூட மான்மியத்தைப்
பிதிர்தினத்தின் மகிழ்ந்து கேட்கின்
நரகொழிந்து தென்புலத்தார் சுவர்க்கஞ்சேர்ந்
திவர்க்காசி நல்க வாழ்வார். 11

பொ - ரை : விரதநாளில் ஓதில் பதின்மடங்கு பயன் உண்டாகும்; வேள்விச்சாலையில் ஓதில் உண்மையாக நூறு வேள்விப்பயன் கிட்டும்; தவத்தினர்க்கு அத்தவத்தை ஆயிரம்மடங்கு பெருக்கும்; பிதிர்நாளில் திரிகூடநகர்ப் பெருமையைக் கேட்பின், அவர்தம் நரகை நீக்கிச் சுவர்க்கம் சேர்ப்பித்து இவர்க்கு வாழ்த்து கூறவைக்கும்.

மிகையினர் மிகைதீருங் குற்றாலத்
தலமகிமை விரும்பிக் கேட்கிற்
பகையினு லுடைந்தவர்கண் முனைவராய்ப்
பகைதடிந்து பதியிற் சேர்வார்
வகையினு லொருதினத்தில் வறுமைபோ
மிருதினத்தில் வாழ்வு சேரும்
தொகையினன் முத்தினமுங் கேட்போர்க
ளெய்துவர்கள் சுவர்க்க போகம். 12

பொ - ரை : இதனைக் கேட்பார்க்குப் பகை இராது; தோற்றவர் தலைவராகி தம் பகையை வென்று தம் சொந்த ஊர்க்கு வரப்பெறுவர்; ஒரு தினம் கேட்பின் வறுமை நீங்கும்; இருதினம் கேட்பின் செல்வவாழ்வு கிட்டும்; மூன்று நாள் கேட்டோர்க்குச் சுவர்க்க நுகர்ச்சி உண்டாகும்.

வேறு

முன்னமறை யவர்கேட்பின் முதுமறையோ தியபலனும்
அன்னவரே லவர்க்கடங்கு மறுமன்னர் வளநாடு
நன்னர்வை சியர்கேட்பி னவநிதியும் பெரிதோங்கும்
பின்னவரே லேர்பலவாப் பெரும்பூமி பலிப்பெய்தும். 13

பொ - ரை : நால் வருணத்தாரும் ஓதின், அவர் முறையே வேதம் ஓதிய பயனும், பகையரசர் வளநாடும், நவநிதியும், நல்விளையுளும் பெறுவர்.

கன்னியர்கா ளையராகிற் கவின்மாலை மணம்பெறுவர்
பன்னியரே லறிவுடைய பாலகரைப் பெற்றெடுப்பர்
சென்னிமிசை யாறணிவார் திரிகூடச் சீர்கேட்பின்
இந்நிலமே லெவரேனு நினைத்தவர மெய்துவார். 14

பொ - ரை : கன்னியரும் காளையரும் இதனை ஓதின் மணவாழ்வு பெறுவர்; மணம் புரிந்தோர் மகப்பேறு எய்துவர்; யார் கேட்பினும் நினைத்த வரம் பெறுவர்.

பேய்கொண்டார் பேயகலும் பிணிகொண்டார் பிணிநீங்கும்
காய்கின்ற பழவினைபோம் வருவினையுங் கழிந்தோடும்
சாய்கின்ற மதிச்சடையார் குற்றாலத் தலமகிமை
வாய்கொண்டு புகல்வார்க்கு மனமுவந்து கேட்பார்க்கும். 15

பித்தரா னவர்க்குமனப் பித்தொழியும் பீடைகள்போம்
சித்தரா னவர்காய சித்திமுத லெய்திடுவார்
பத்தரா னவர்மேலும் பரமஞா னம்பெருகி
முத்தரா குவர்பனச மூர்த்திமான் மியங்கேட்பின். 16

பொ - ரை : இத்தல புராணத்தை உரைப்போருக்கும் கேட்போருக்கும் பேய், பிணி கோட்பட்டவர் அவை நீங்கப்பெறுவர்; சஞ்சிதமும் ஆகாமியமும் தாமே விலகும்; குறும்பலாநாதர் புராணம் கேட்பார்க்குப் பித்தும் பீடையும் நீங்கும்; சித்தர்கள் காயசித்தி பெறுவர்; பத்தர் உயர்ஞானம்பெற்று முத்தராவர்.

கல்லார்க்கு நிறைகல்வி கற்றார்க்கு மேலொழுக்கம்
பொல்லார்க்குக் குணமாட்சி புத்தியில்லார்க் குயர்போதம்
வல்லார்க்குஞ் செயல்புரிய மாட்டார்க்கும் பொருளாக்கம்
எல்லாச்செல் வமுநல்கு மெந்தைபுடார்ச் சுனபுரநூல். 17

பொ - ரை : புடார்ச்சுனபுரம் எனப்படும் திருக்குற்றாலத் தலபுராணம் கல்லாதவர்க்குக் கல்வியினையும், கற்றார்க்கு நல்லொழுக்கத்தினையும், தீயோர்க்கு

நற்குணங்களையும், அறிவு குறைந்தவர்க்கு நல்லறிவையும், எளியவர்க்கு நிறை செல்வத்தையும் வருவிக்கும்.

அற்போலுங் குழற்கௌரி யொருபாக மகலாத
சிற்போதப் பெருமானுர் திரிகூடச் சிவபுர நூல்
பொற்போடு விரிப்பார்க்கும் புத்தகத்திற் பொறிப்பார்க்கும்
கற்போர்க்கும் கேட்போர்க்கும் பயில்வோர்க்கும் கதிதருமே. 18

பொ - ரை: மாதொரு பாகங்கொண்ட ஞானமூர்த்தியின் புகழ் விளக்கும் இப்புராணம் உரைப்பார், எழுதுவார், கற்போர் கேட்போர் அனைவர்க்கும் சிவ கதியைத்தரும்.

தனிவழிக்குத் துணையாகுஞ் சகலபிணிக் கொருமருந்தாய்
இனியபெரும் பேரின்ப மிம்மைமறு மையுங்கொடுக்கும்
முனைமுகத்தில் வென்றிதரு முக்கணுர் திரிகூடப்
பனுவலுறு தோத்திரத்தைப் பாடத்தாற் பயில்வோர்க்கே. 19

பொ - ரை: இதன்கண் உள்ள தோத்திரப்பாக்களை மனப்பாடம் செய்து சிந்திப்போர்க்கு அவை வழித்துணையாகவும் மருந்தாகவும் இம்மை மறுமை இன்பந்தரும் சாதனமாகவும், பகையைக் கடக்கும் கருவியாகவும் நின்று அவ்வப் பயன் விளைக்கும்.

திருக்குற்று லப்பெருமான் சிவநூலை மனைதனில்வைத்
தருச்சிப்பார் சிவலிங்க மருச்சனைசெய் பலன்பெறுவார்
விருப்பத்தா லவ்வேடு வைத்திருக்கும் வியன்மனையில்
பெருக்கத்தா லுயர்செல்வ மேன்மேலும் பெருகுமால். 20

பொ - ரை: திருக்குற்றுலத் தலபுராணத்தை அருச்சித்தல் சிவார்ச்சனைக் குச் சமமாகும்; அதை வைத்திருக்கும் வீட்டில் செல்வம் மேன்மேலும் பெருகும்படி திருவருள் பெருகும்.

சிந்துரத்தின் பணியுவந்தார் திரிகூட மென்றொருக்கால்
அந்தரத்தின் வீழ்பவன்கேட் டமரர்பதம் பெற்றனனுல்
மந்திரம்போற் பதந்தோறும் வழுத்துநூல் கேட்பவர்சீர்
நந்தரத்தோ ராலெடுத்து நவிலுதற்கு மெளிதாமோ. 21

பொ - ரை: யானையின் பூசனையை ஏற்று அருள்புரிந்த சிவபெருமானது குற்றுலம் என்று ஒருமுறை சொல்லக் கேட்டான் ஒருவன் கீழே விழாமல் தேவர் பதம் பெற்றுன்; வேதத்தைப்போலக் காலந்தோறும் இதனைக் கேட்பவர் சிறப்பை நம்மைப்போன்ருர் அளந்துரைத்தல் இயலாது.

வி - கு: பதம் - பின்னையது காலம்: பருவம் என்னும் பொருள் உடையது. நம் தரத்தோர் எனப் பிரிக்க.

**வேறு**

நத்தமே சதுரங் கூர்ம நளினஞ்சக் கரமென் ருய
உத்தமா லயமோ ரைந்தி லுயர்ந்தது பணிலக் கோயில்
வைத்ததாம் பிரம்பொன் வெள்ளி சித்திர மணிமன் றைந்தில்
சித்திரப் பொதுவே மேலாஞ் சிற்பொது வென்னும் வேதம். 22

பொ - ரை: திருக்கோயில்கள் சங்கவடிவம், சதுரம், யாமைவடிவம், தாமரைவடிவம், வட்டம் என்னும் ஐந்துவடிவில் அமைக்கப்பெறும்; இவற்றுள் சங்கவடிவம் சிறந்தது; இரத்தினசபை முதலிய ஐந்து சபைகளுள் சித்திரசபையே மேலாகிய ஞானசபை என வேதம் கூறும்.

பரைமுதற் சுயம்பு வைந்து பலாமுதல் விசேட மைந்து
தெரிசன மோர்பா ஸைந்து தேவரா சியமோ ரைந்து
மருவுகாப் பைந்தோ டைந்து வாய்தலோ ரைந்து முத்தி
அருளைந்து திருக்குற்ருலத் தற்புத மனந்த மின்னும். 23

பொ - ரை: திருக்குற்ருலத்தில் முடிவில்லாத அற்புதங்கள் உள்ளன; பரை முதலாகத் தானே தோன்றிய குறிகள் ஐந்து; பலா முதலாகத் தெய்விகம் விளங்கும் சிறப்புக்கள் ஐந்து; ஓரிடத்துக் காண உள்ள அற்புதக் காட்சிகள் ஐந்து; தேவரகசியம் ஐந்து; பொருந்தியுள்ள காப்பு பத்து; வாயில்கள் ஐந்து; அருளாற் பெறும் முத்தி ஐந்து என்பவை; அவற்றுட் சில.

அருவியிந் திரசா பங்க ளாடலின் கழுநீர்த் தோற்றம்
சுருதியம் பலத்துத் தெய்வ துந்துபி முழக்க மாதி
பரைபெருங் கருப்ப மெய்திப் பகவரைப் பெறுத லெம்மான்
திருவெழுத் துணர்த்த லென்னச் சிவரக சியமோ ரைந்தே. 24

பொ - ரை: அருவியில் தோன்றும் வானவிற்கள், மூழ்குவோர் பாவம் கழுவப்பட்டுக் கழிதல், வேதமுடிவில் உணர்த்தப்பெறும் சிற்சபையில் நிகழும் முரசொலி, ஆதியாகிய பராசத்தி கருக்கொண்டு மும்மூர்த்திகளாகிய பகவரைப் பெறுதல், இறப்போர் செவியில் இறைவன் திருவைந்தெழுத்து உணர்த்துதல் என்பவை ஐந்தும் சிவரகசியமாகும்.

பரைபரன் மதுகங் கேசன் பரவுசோ மேசன் கூத்தன்
தெரிவருஞ் சுயம்பு வைந்தாஞ் சிகரம்வெற் பருவி சம்பு
கரிமுகக் கடவு ளென்னக் காட்சிமற் ருேர்பா ஸைந்து
விரிமறை யயன்மால் காரி விசையைமா காளி சாத்தன். 25

பரைசிவ கணங்கள் காப்புப் பாந்தள்வேந் துடனீ ரைந்தாம்
வரைபலா மூர்த்தி தீர்த்தம் வளர்தலம் விசேட மைந்து
தெரிசனம் பிறப்பி றப்புச் சிந்தனை திருக்குற் ருலப்
பெருகுகீர்த் தனங்கள் கேட்பார் பேறெண முத்தி யைந்தாம். 26

பொ - ரை: பராசத்திபீடம், மூலஇலிங்கம், கங்கை தேனுற்பூசித்த மதுகங்கேசன் என்னும் இலிங்கம், சோமலிங்கம், மூலலிங்கத்திற்கு வடபக்கத்துள்ள கூத்தலிங்கம் என்பவை விளங்க வரும் தாமே தோன்றியவையாகிய சுயம்புகள் ஐந்தாகும்; ஓரிடத்திருந்து காணநிற்பனவாகிய ஐந்தாவன: உச்சி, மலை, அருவி, இலிங்கமூர்த்தி, மூத்தபிள்ளையார் என்பவை; காவல் பத்தாவன: பலவாகவிரிந்த வேதம், பிரமன், திருமால், இந்திரன், துர்க்கை, காளி, ஐயனர், பராசத்தி, சிவகணங்கள், வாசுகி என்போரால் நிகழ்பவை; மலை, குறும்பலா, சிவலிங்கமூர்த்தி, தீர்த்தம், தலம் என்பன ஐந்து விசேடமாம்; தரிசனத்தால், பிறப்புப்பற்றிய சிந்தனையால், இறப்புப்பற்றிய சிந்தனையால், திருக்குற்றாலத்தின் புகழுரைகளைக் கூறலால், கேட்டலால் வரும் பேறுகளாகிய முத்தியும் ஐந்து.

வி - கு: கேட்பார் எனவே உரைப்பாரும் கொள்ளப்படும்.

விம்மிதம் புளகம் போர்த்தல் விழிப்புனன் மொழிதள் ளாடல்
செம்மைசேர் சரியை யாதி திருத்தொண்டு துதிதி யானம்
அம்மவோ திருப்ப ணிக்கென் றீட்டுவ தழித்துண் ணுமை
எம்மையா ளுடையான் றெண்ட ரெண்வகைப் பத்தி மாதோ. 27

பொ - ரை: தொண்டர்களுக்கு அடையாளமாகிய எண்வகைப் பத்திகள் ஆவன: மகிழ்ச்சிக்கு அடையாளமாகிய உடல் விம்முதல், உரோமம் சிலிர்த்தல், இன்பக்கண்ணீர் விடல், மொழிதடுமாறல், சரியை முதலிய திருத்தொண்டில் ஈடுபடுதல், துதித்தல், இறைவனைத் தியானித்தல், திருப்பணிக்குச் சேர்த்த பொருளை விற்று உடல் வளர்க்காமை என்பவை எண்வகைப் பத்தி ஆகும்.

ஆடலந் திரிகூ டத்தி லற்புத மனைத்து மோர்ந்து
பாடலம் புனை ந்த தேவைப் பத்தியெண் வகையி னுலே
தாடொழூந் தவத்தோர் தம்மைச் சரணெனச் சரணம் பூண்டு
நாடொறுந் தொழுவா ரன்றோ நாந்தொழுங் கடவு ளாரே. 28

பொ - ரை: இறைவன் திருநடம் புரியும் திரிகூடநகரின் அற்புதங்களைச் சிந்தித்து உணர்ந்து பாதிரிமலரை அணியும் சிவபெருமானை எண்வகைப் பத்தியால் தொழும் தவத்தோர் திருவடிகளை அடைக்கலமாகக் கொள்ளும் தொண்டர்க்குத் தொண்டரே யாம்தொழும் கடவுளர் ஆவர்.

நிருமலர் திருக்குற் றாலந் தருவது நிசமே முத்தி
அருவிபாய் திரிகூ டத்தை யணுகுநாண் மட்டு மன்றோ
பெருவினை யவர்பா னிற்கப் பெறுவதென் றியம்பிச் சூதன்
திருமுனிக் கணங்கள் சூழச் சித்தராச் சிரமஞ் சேர்ந்தான். 29

பொ - ரை: திருக்குற்றாலம் தன்னைச் சார்ந்தார்க்கு முத்திதருவது உண்மையாம்; திரிகூடத்தை அணுகும் வரையில்தான் ஒருவர்பால் வினை நிற்கும்; அணுகினதும் அவை நீறுபடும், எனச் சூதமுனிவர் மொழிந்து முனிவர் ஆச்சிரமத்தை நணுகினர்.

சூதமா முனிவ னேகச் சூழ்மக முனிவ ரெல்லாம்
வேதரா சியமாந் தொன்னூல் வியாதனு லுணர்ந்த மேலோன்
நாதனுர் புராணத் துள்ளு நன்னகர்ச் சிவபு ராணம்
ஓதலாற் பதியி னுண்மை யுணர்ந்தன மும்ந்தோ மென்றார். 30

பொ - ரை: பின்னர், இருந்த முனிவர்கள் வேதத்தின் மறைபொருளை விளக்கும் புராணங்களை வியாசர்மூலம் உணர்ந்த சூதர் சிவபுராணங்களுள் வைத்துத் திருக்குற்றாலத் தலபுராணத்தை நமக்கு ஓதுவித்தமையால் நாம் பதியின் இயல்பை நன்கு உணர்ந்தோம் என்றனர்.

வி - கு: தொன்னூல் - புராணம்.

சவுனக ராதி யாகச் சயம்புகுற் றாலந் தன்னை
மவுனரா மெண்ப தெண்ணு யிரவரும் வந்து காண்பான்
கவனமேற் காதல் பூண்டார் கற்பகப் பொதும்பர் சூழும்
பவனமேற் காதல் பூண்ட பாரிடத் தவர்போன் மன்னே. 31

பொ - ரை: சவுனகர் முதலிய எண்ணாயிரம் மோன முனிவர்களும் திருக் குற்றாலத்தைக் காணத் தம்மனத்தில் விருப்பம் மிக்கனர்; பூமியில் உள்ளார் சுவர்க்கம் புக எண்ணுதல் போல.

வி - கு: கவனம் - அச்செயல் செய்யும் மனம்.

பெருமையேந் திரநேர் வாவிப் பெருவன முனிவர் சென்மக்
கருமையேந் திரமா சாலங் கடத்துவான் மணியு முத்தும்
இருமையேந் திரவி சோம னெறிக்குமா மலையங் கொல்லி
ஒருமையேந் திரஞ்சூழ் முக்கோட் டுயர்திரி கூடஞ் சார்ந்தார். 32

பொ - ரை: பெருமையினையுடைய அயனால் மண்டலித்து விடப்பெற்ற தருப்பை நேமியாகிய எந்திரத்தால் கொடுக்கப்பெற்ற நைமிசவன முனிவர் பிறப்பின் மூலமாகிய பெரிய இந்திரசாலத்தைக் கடத்தற்பொருட்டு பொதியில், கொல்லி, பெரிய மயேந்திரம் என்பவற்றால் சூழப்பெற்ற திரிகூடம் சென்று சேர்ந்தனர்; அங்கு மணியும் முத்தும் முறையே சூரியனைப்போலவும் சந்திரனைப் போலவும் ஒளிதருவன.

வி - கு: இருமை - பெருமை, அல்லது இரண்டு. பெருமை எந்திரம் நேர்—பெருமையுடைய தருப்பையாலான சக்கரத்தால் உண்டாகிய.

வேறு

மேகாங்கக் கந்தரத்தார் திரிகூ டத்தில்
வியன்சிலையெ லாமிலிங்க வடிவா மென்றே
ஏகாங்கந் துவிதாங்கந் திரிவி தாங்க
மெனுமுறையி னீளிடையில் வணங்கி யேகி

வாகார்ந்த வடவரைசூழ் வானோர் போல
வடவருவித் தடஞ்சாரல் வலங்கொண் டேகிப்
பாகார்ந்த புகழ்பரவிச் சாமீ பத்தில்
பஞ்சாங்க மட்டாங்கம் பணிந்து போந்தார். 33

பொ - ரை: மேகத்தின் கருநிறம் பொருந்திய கழுத்தை உடைய சிவபிரான் விரும்பும் திரிகூட மலையில் பெருமையுள்ள கல் எல்லாம் சிவலிங்கம் ஆகும் எனக் கொண்டு முனிவர்கள் சேய்மையில் கண்டபோதே ஓர் உறுப்பு, ஈருறுப்பு, மூவுறுப்புக்களால் வணங்கி வந்து, மாமேருவைத் தேவர் வலம் வருதல் போல, திரிகூடமலையை வலமாக வந்து சமீபத்தில் ஐந்து உறுப்பு எட்டுறுப்புக்கள் நிலத்திற்படிய வணங்கித் துதித்து அணைந்தார்கள்.

சிரம்வணங்க லேகாங்கம் வலக்கை சென்னி
சேர்வணக்கந் துவிதாங்க முடியின் மீதில்
கரமிரண்டு முறத்தொழுத திரிவி தாங்கம்
கரஞ்சானு சென்னிநில முறல்பஞ் சாங்கம்
உரமூக்குப் பாணிசிரஞ் செவிவாய் நாட்ட
முயர்சானு வெனுமிருநான் குறுப்புந் தோயச்
சரணநிலந் தோயாமற் குய்யம் பார்மேற்
சாராம லிறைஞ்சுதல்சாட் டாங்க மாமால். 34

பொ - ரை: தலையால் வணங்குதல் ஓர் உறுப்பு வணக்கம்; வலக்கையைச் சென்னியிற் சேர்த்து வணங்கல் ஈருறுப்பு வணக்கம்; முடிமீது இருகைகளைச் சேர்த்து வணங்குதல் மூவுறுப்பு வணக்கம்; கைகள், முழந்தாள்கள், முடி என்பவை நிலத்திற்பொருந்த இறைஞ்சுதல் ஐந்துறுப்பு; மார்பு, மூக்கு, கை, தலை, வாய், கண், முழங்கால்கள் என்னும் எட்டுறுப்பும் நிலத்திற்படிய, பாதங்களும் ஆண்குறியும் நிலத்திற் படாமல் இறைஞ்சுதல் சாட்டாங்க வணக்கம் அல்லது எட்டுறுப்பு இறைஞ்சுதல் ஆகும்.

### வேறு

சித்திர கங்கை மூலச் சிவமது கங்கை மேவி
உத்தர கங்கை பூசை யுகந்தமை பாடி யாடிக்
குத்திர மகன்ற சீலக் கொள்கையர் போந்தார் மன்னோ
அத்திர மகன்ற சாபத் தருவிசெண் பகத்த டாகம். 35

பொ - ரை: சித்திரகங்கை, தொடக்கமாகிய சிவமதுகங்கை, என்பவற்றில் நீராடி, வடகங்கையின் வழிபாட்டை இறைவன் ஏற்றுக்கொண்ட வரலாற்றைப் பாடிக் களித்து, வஞ்சனையில்லாத ஒழுக்கமுடைய முனிவர்கள் அம்பில்லாத வில்லாகிய வானவில்லைக் காட்டும் அருவியால் உண்டாகிய செண்பகத் தடாகத்திற்கு வந்தார்கள்.

கண்டன ரருவி யாடிக் களித்தனர் நியதி யாற்றி
அண்டர்தம் பிராட்டி கோயி லணுகினர் பரவி யார்வம்
கொண்டனர் குகைக டோறுங் குழுமினர் காய கற்பம்
உண்டன ரயன்மால் கற்ப முறைவரோ டுறைந்தா ரங்கண். 36

பொ - ரை: அருவியைக்கண்டு முழுகி மகிழ்ந்து திருநீறு அணிதல் முதலிய நியமங்களை முடித்து உமையம்மை திருக்கோயிலுட் சென்றனர் முனிவர்கள்; அம்மையை அன்பு மீதூர்ந்து போற்றி, குகைகள்தோறும் காயகற்பம் உண்டு கற்பகாலமாக உறையும் சித்தர்களோடு அங்குத் தங்கினர்.

சீரிள வேனிற் காலஞ் சித்திரைப் பௌவம் வெய்யோன்
சாரும்வெப் பஞ்சிச் சாயை தாள்புகுந் தொளிக்குங் காலை
மாரிபொன் மழைமந் தாரம் வாடையூ டாட நோக்கி
ஆரிய முனிவ ரங்கோ ரதிசயம் பயப்ப நின்றார். 37

பொ - ரை: சிறப்புடைய இளவேனிற் காலத்தில் சித்திரைப் பூரணையில், நண்பகலில் நிழலும் ஞாயிற்றின் வெப்பத்திற்கு அஞ்சி ஒருவன் அடியின்கீழ் மறையும் நேரத்தில், மேகம் மஞ்சள் நிற மழை சொரிய, தென்றல் மந்தாரமலர் மணம் வீச இருப்பதை வடநாட்டு முனிவர்கள் கண்டு அதிசயித்தனர்.

வேறு

நின்றனர்முன் னிருந்தவர்கள் பன்னிருவர்
நிறைகேள்வி நிபுணர் போற்ற
மன்றலிசைக் கந்தருவர் விஞ்சையர்சித்
திரர்பரவ வானோர் வாழ்த்தத்
தென்றலொரு புறந்தவழக் கொண்டலொரு
புறந்தவழச் சீதம் போர்ப்ப
வென்றிமுனி வரர்சூழத் திசைகடொறுந்
தமிழ்மணப்ப வேத நாற. 38

பொ - ரை: அந்நிலையில் அப்பெருந்தவத்தர்முன் அகத்தியமுனிவர் தவமும் கேள்வியும் உள்ள தொல்காப்பியர் முதல் பன்னிருவர் போற்ற, இசைவல்ல கந்தருவர் முதலியோர் புகழ, தென்றலும் கீழ்க்காற்றும் பக்கத்தில் குளிர்ச்சியை உண்டுபண்ண, திசைதோறும் முனிவர் சூழ்ந்து தமிழும் வேதமும் ஓத வெளிப்பட்டு வந்தார்.

குண்டலமுங் குழைகாதுந் திருமுகமு
நயனமுங்கோ டீர பார
மண்டலமுஞ் செபவடமுங் கமண்டலமும்
புத்தகமு மகர வாரி
உண்டலர்ந்த கனிவாயு மொளிபிறங்கப்
பரிதிதென்பா லுதித்தா லென்ன
முண்டகத்தி லயனீன்ற முதியகும்ப
சம்பவமா முனிவன் வந்தான். 39

பொ - ரை: அவர் குண்டலம் அணிந்த குழைந்த செவி, திருமுகம், கண்கள், சடைவட்டம், செபவடம், கமண்டலம், புத்தகம், கடலை யுண்ட கனிந்த திருவாய் என்பவை ஒளிசெய்ய, தென்றிசையில் ஞாயிறு எழுந்தாற்போலத் தோன்றினர்.

வி - கு: கும்பசம்பவமுனிவர் - குடத்திற்றோன்றிய அகத்தியர்.

வந்ததமிழ் முனிக்கணத்தை நின்றமக முனிக்கணத்தோர் வணங்கி வாழ்த்தி
அந்தண்மலர் கொடுபோற்றிப் பாற்கடல்சேர் மதுக்கடல்போ லளவ ளாவிச்
சிந்துரவா ணுதற்கவுரி திரிபுரைபா லமரர்புரி சிறப்புப் போற்றி
விந்தமலை யடர்த்தோனைக் கண்டுகளிப் புடன்பரவி விடைபெற் றூரால். 40

பொ - ரை: வந்த தமிழ் முனிவர் குழாத்தை நின்ற பெருமுனிவர் குழாம் வாழ்த்தி, மலர்தூவித் தொழுது, பாற்கடலுள் தேன்கடல் கலந்தாற்போல விரவி அளவளாவினர்; திலகம் அணிந்த நெற்றியையுடைய உமையம்மைக்குத் தேவர்கள் செய்யும் சிறப்புக்களைப் புகழ்ந்து, அகத்தியரைக் கண்டு மகிழ்ந்து போற்றி விடைபெற்றனர்.

வி - கு: விந்தமலை அடர்த்தோன் - அகத்தியன்.

வேறு

சண்பகத் தடாக நீங்கிச் சந்தனத் தடாக மூழ்கி
விண்புலத் தமர ரெல்லா மிசைபுல மொருவி யாடும்
வண்புலத் திரிகூ டத்து வடபுலத் தருவிச் சாரல்
கண்புலங் களிப்பக் கண்டார் கங்கைமேற் காதல் விண்டார். 41

பொ - ரை: அம்முனிவர்கள் பின் சந்தனத்தடாகத்தில் மூழ்கினர்; தேவர்கள் எல்லாம் தாம் போகம் நுகரும் வானத்தின் நீங்கி, ஆகாயத்தைப் பொருந்தும் அந்த திரிகூடத்தில் உள்ள வட அருவியைக் கண்களிப்பக் கண்டார்கள்; தாம் விரும்பியிருந்த கங்கையின்மேல் பற்று நெகிழ்ந்தார்கள்.

வி - கு: மிசை - போகம்நுகரும்; வண்புல் (பொருந்தும்) அத்திரிகூடம் என்க.

ஆடின ரருவி வெண்ணீ றணிந்தன ரக்க மாலை
சூடினர் சூதன் வாய்மை துதித்தனர் கயிலை யென்றே
நாடினர் திரிகூ டத்தை நைமிசா ரணிய வாசர்
பாடினர் வசந்த வீதித் தெய்வதம் பரவிச் செல்வார். 42

பொ-ரை: வடவருவியில் நீராடி நியமஞ்செய்து சூதமுனிவர் கூறியவற்றைப் புகழ்ந்து திரிகூடத்தைத் திருக்கயிலை என்றே கொண்டனர் நைமிசவன முனிவர்; வசந்த வீதியில் கடவுளர் பரவிச்சென்றனர்.

பரிதிசூழ் வடக்கு வாய்தற் பாரகோ புரம்ப ராவி
மிருதிகள் பதினெட் டாய வியன்படி வணங்கிச் சங்கத்
தெருவலம் புரிவா னுள்போய்ச் சிற்பரை பீடங் கம்பம்
சுருதியாங் குறும்ப லாவைத் தொழுதெழீஇக் கரங்கள் கூப்பி. 43

பொ-ரை: ஞாயிறு சுற்றிச்செல்லும், உயர்ந்த வடக்கு வாயிற்கோபுரத்தைப் போற்றி, பதினெட்டு மிருதிகளாகிய படிகளை வணங்கி, சங்க வீதியை வலம்வருவதற்கு உள்ளே சென்று பராசத்தி பீடம், கொடிக்கம்பம், வேதவடிவக் குறும்பலா இவற்றை இறைஞ்சி எழுந்தார்கள்; பின்னை கூப்பி.

வேறு

பற்றுத பிறைநுதலுங் குறுநகையுங் கயல்விழியும் பவள வாயும்
முற்றுத குவிமுலையுந் துகிலுடையு மகிலாண்ட முழுது மீன்ற
சிற்றுலின் றிருவயிறுஞ் செல்விகுழல் வாய்மொழித்தாய் செம்பொற் றாளும்
குற்றாலத் தெந்தைபிரான் மகிழுமணக் கோலமுங்கண் குளிரக் கண்டார். 44

பொ - ரை : அழகிய திருவுருக்கொண்ட குழல்வாய் மொழியம்மையைக் கேசாதிபாதம் கண்டு போற்றிச் சிவபிரானது திருமணக்கோலமும் கண்குளிரக் கண்டார்கள்.

வேறு

கண்டருள் பெற்றுச் சத்தி கணபதி பதம்ப ராவி
விண்டுவைப் பணிந்து ஞான விசையைதாள் பாவி மன்றல்
கொண்டருள் குழகற் போற்றிக் குடதிசை வாயில் காவல்
அண்டனைத் தொழுது சோம சேகர னடியிற் றாழ்ந்து. 45

பொ - ரை : திருவருள்பெற்று, சத்திகணபதி, திருமால், துர்க்கை என்னும் மூர்த்திகளைத் தொழுது போற்றி, திருமணக்கோல மூர்த்தியைப் போற்றி, மேற்கு வாயிற் காவலரைத் தொழுது விடைபெற்றுச் சந்திரசேகரப்பெருமானைப் போற்றினர்.

சிவமுதற் கடவுட் பஞ்ச தெரிசனம் பெற்றுக் கற்றை
அவிர்சடைக் கும்ப யோனி யடிபணிந் தரவின் வேந்தைப்
பவனமே லரசை வாழ்த்திப் பயிரவ ரிருக்கை போற்றிப்
புவனநா யகரை யீன்ற புகழ்ப்பரை பீடம் போற்றி. 46

பொ - ரை : சிவம் முதலாகிய ஐந்து காட்சியைக் காணப்பெற்று, சடை முடியை உடைய அகத்தியரைப் பணிந்தனர்; பின் வாசுகி, இந்திரன், வயிரவர், திரிமூர்த்திகளைப் பயந்த பராசத்திபீடம் இவற்றைப்போற்றினர்.

உம்பர்தந் தேவர் மூவ ருயர்பெருந் தொட்டில் போற்றிக்
கம்பமுற் றிம்பர் தாழ்ந்து கயமுகத் தவனை யேத்தித்
தம்பமார் துவார பாலர் தாளிணை தொழுது நந்தி
அம்புயப் பதம்ப ராவி யாயிரங் கதிரை வாழ்த்தி. 47

பொ - ரை : திரிமூர்த்திகள் குழவிகளாக ஆடிய தொட்டிலைப் போற்றினர்; உடல் நடுக்கம் உண்டாக நிலத்தில் வீழ்ந்து இறைஞ்சினர்; விநாயகரையும், ஆதாரமாகவுள்ள வாயில் காவலர்களையும், திருநந்திதேவர், சூரியன் என் போரையும் போற்றித் தொழுது வாழ்த்தினர்.

சிந்தைசெய் நால்வர்க் காகத் தெக்கண முகமாந் தேவை
முந்துற வணங்கிக் காளி முதலினோ ரெழுவர்ப் போற்றித்
தந்திமா முகனை வாழ்த்திச் சண்முக னிருப்ப நாப்பண்
எந்தையா ரணங்கோர் பாலா யிருந்தருள் கோலம் போற்றி. 48

பொ - ரை: பின், சனகர் முதலிய நால்வர்க்கு யோகிருந்து உணர்த்தும் தக்கணாமூர்த்தியைப் போற்றி, பின் சத்த கன்னியர், விநாயகர், சோமாஸ்கந்தர் என்னும் மூர்த்திகளை முறையே தொழுதனர்.

துவரிதழ்க் கமலை பாதந் தொழுதுபா ரதியைப் போற்றி
உவரிதூ ளெழவே வாங்கு மொருவனைத் தெய்வ யானை
கவிரிதழ்க் குறக்கோ மாட்டி கணவனைப் பணிந்து போற்றிச்
சவுரியை வணங்கி வாழ்த்திச் சந்திரன் றனைப்ப ராவி. 49

பொ - ரை: பின் இலக்குமி, கலைமகள், கடல் சுவற வேல் விட்ட வள்ளி யம்மை தெய்வயானை நாயகராகிய திருமுருகன், சூரியன், சந்திரன் என்போரை முறையே பணிந்து போற்றினர் முனிவர்கள்.

வேறு

அத்திமுக னடிபரவி யாலயம்புக் குமைபாடத்
தித்திதிமி யெனநடிக்குந் தேவேச னடிவணங்கிக்
கொத்திதழிச் சடையானைக் குறுமுனிக்காக் குழைந்தானை
முத்திதரும் பரஞ்சுடரைக் கண்டார்கண் முதுதவத்தோர். 50

பொ - ரை: பின், யானைமுகக்கடவுளைத் தொழுது கோயிலினுட்சென்று கூத்தப்பிரானை அடிதொழுது, பரமுத்தியைக் கொடுத்தருளும் பரஞ்சுடராகிய சிவலிங்கமூர்த்தியைக் கண்டு தொழுதார்கள்.

இலைகாணு வருள்பூத்த கற்பகத்தை யிமையவரும்
தலைகாணுத் திரிகூடச் சாரலுறை தனிச்சுடரை
அலைகாணு வருட்கடலைக் காணுதொறு மருந்தவத்தோர்
நிலைகாணுப் பேரின்ப வெள்ளத்தே நிலைதிளைத்தார். 51

வள்ளலா ரருள்வாரி படிந்துமேல் வழிந்தொழுகும்
வெள்ளமே யெனத்தாரை விழிபொழிய மொழிகுழற
உள்ளமே கரையழிய வுவட்டெடுத்தா னந்தவெள்ளம்
துள்ளவாய் தழுதழுப்ப விதழ்துடிப்ப வாழ்த்தினர். 52

பொ - ரை: இறைவன் கருணைக்கடலில் முழுகி, அவ்வெள்ளத்தின் ஒழுக்குப்போன்ற இன்பக்கண்ணீர் வழிய நின்று, மொழிகுழற உள்ளங்குளிர்ந்து நாத்தழுதழுப்ப இதழ்கள் துடிக்க நின்று சிவபிரானை வாழ்த்துவாராயினர்.

வி - கு: இலை - இடைக்குறை. அருள்வாரி - கருணைக்கடல்.

வேறு

கங்கைவார் சடையாய் போற்றி கவுரிபங் குடையாய் போற்றி
பங்கையா சனத்தாய் போற்றி பதுமலோ சனத்தாய் போற்றி
அங்கையா யுதங்கண் மாற்றி யகங்கையின் மழுமா னேற்ற
செங்கையாய் திருக்குற் றாலச் சிவபெரு மானே போற்றி. 53

பொ-ரை: கங்கையை நீண்ட சடையில் மறைய வைத்தவன், கௌரி யம்மை ஒருபாகங் கொண்டவன், தாமரை இருக்கையில் அயனுக உள்ளவன், தாமரைக்கண்ணன், தன் முன்காலத்தில் இருந்த சங்கு, சக்கரம், வில், பாணம், தண்டு என்னும் ஐந்து கருவிகளை மாற்றித் தன் அகங்கையில் மழுவையும் மானையும் ஏற்றவன். திருக்குற்ருலத்திலுள்ள சிவபிரான் - இப்படி இங்கு உள்ள முதல்வனுக்கு வணக்கங்கள்.

வி-கு: அங்கு ஐயாயுதங்கள் எனப் பிரிக்க.

உகந்தொறு மயன்மால் பூசை யுகந்துவீற் றிருந்தாய் போற்றி
முகந்தனி லிமையா முக்கண் முகந்தமுச் சுடராய் போற்றி
இகந்தனிற் பரத்தி லின்ப மிசைக்குநன் னகராய் போற்றி
சகந்தனில் வினைவண் டாடாச் சண்பகா டவியாய் போற்றி. 54

பொ-ரை: உகங்கள்தோறும் திருமால் அயன் என்போரால் வழிபடப் படுபவன், முகத்தில் முச்சுடர்களை இமையாத முக்கண்களாக உடையவன், இம்மை மறுமைகளில் இன்பத்தைச் சேர்க்கும் திருக்குற்ருல நன்னகர் வீற்றிருப்பவன், உலகில் வினையும் வண்டும் வந்துசேராத சண்பகவனத்தை உடையவன் ஆகிய இறைவனுக்கு வணக்கங்கள்.

திண்ணிய வேள்வி யாற்றிச் சிவநெறி யாற்ருத் தக்கன்
பண்ணிய தரும மெல்லாம் பாவமா முடித்தாய் போற்றி
நண்ணிய கொலையை வேட்டு நதியில்வீழ் வேடன் பாவம்
புண்ணிய மாக்கி நோக்கிப் புனிதவீ டளித்தாய் போற்றி. 55

பொ-ரை: நல்ல வேள்வியைச் சிவநெறிக்கு மாறுபடச் செய்த தக்கன் செய்த அறங்களைப் பாவமாக மாற்றினவன், பசியினுல் நரியைக் கொலைசெய்யச் சென்று அருவியில் வீழ்ந்த வேடனது பாவத்தைப் புண்ணியமாக்கி அருள் செய்து தூய வீடு அளித்தவன் ஆகிய பெருமானுக்கு வணக்கங்கள்.

பவமது கழுநீ ராகப் பறிபடப் படிந்தோர் தங்கள்
அவமது கழுவுந் தெய்வ வருவியந் துறையாய் போற்றி
நவமதுச் சொரிந்து கங்கை நங்கைநின் பதம்பூ சித்த
சிவமது கங்கை தங்குஞ் சித்திர நதியாய் போற்றி. 56

பொ-ரை: தன்கண் மூழ்குவோர் பாவங்களைக் கழுநீராகக் கழியச்செய்து துன்பம் போக்கும் தெய்வ அருவித்துறையை உடையோன், கங்கை புதிய தேன் கொண்டு வழிபடப்பெற்ற சித்திரா ஆற்றங்கரையில் அமர்ந்தோன் ஆகிய கடவுளுக்கு வணக்கங்கள்.

மறையவன் பிறவி நோயை மருத்தினு லொழித்தாய் போற்றி
துறைதனிற் படிந்தோன் றந்தை தொன்னர கொழித்தாய் போற்றி
முறைசெயா வணிகன் பாவ முடித்தமுத் தினத்தாய் போற்றி
குறுமுனிக் குருகி யன்று குறுகிய குழகா போற்றி. 57

பொ-ரை: ஆத்திரேயனது பிறவிப்பிணியைத் தென்றற்காற்ருல் நீக்கினவன், சித்திராநதித் துறையில் மூழ்கி நியமஞ்செய்த சுகுற்சனுடைய தந்தையின் நரகைத் தீர்த்தவன், மூன்று நாட்களில் தவறிழைத்த கண்டகசேதனது பாவத்தைத் தீர்த்தவன், அகத்திய முனிவர் விருப்பத்திற்கு இசைந்து சிவலிங்க மாகக் குறுகியவன் ஆகிய பகவனுக்கு வணக்கம்.

பாதகப் புட்பகந்தன் பரிபவ மொழித்தாய் போற்றி
போதக மெறிந்த நீரும் பூசையா வுவந்தாய் போற்றி
பேதமா மதுவை யுண்டான் பெரும்பழி துடைத்தாய் போற்றி
கோதகல் வேத மூலக் குறும்பலா வுடையாய் போற்றி. 58

பொ-ரை: பாவம்புரிந்த புட்பகந்தனது மனத்துயரை நீக்கினவனும், யானை தன் இயல்பால் வீசிய நீரைப் பூசையாக ஏற்று அருள் புரிந்தவனும், தகாத கள்ளுண்ட தருமசாமியின் பெரும்பழியைத் தீர்த்தவனும் ஆகிய குற்றமற்ற ஆதிநூலாகிய வேதவடிவக் குறும்பலா அடியில் விளங்கும் சிவபிரானுக்கு வணக்கம்.

கிரிவலம் வந்த யானை கிளர்பவ மொழித்தாய் போற்றி
விரிவலம் புரியாஞ் சங்க வீதியாய் போற்றி வேடன்
நரிவலம் புரியக் கண்டு நற்பத மளித்தாய் போற்றி
புரிசடைத் திருக்குற் ருலப் புண்ணிய புனிதா போற்றி. 59

பொ-ரை: திருக்குற்ருலமலையை வலம்வந்த யானையின் மிக்க பாவத்தை நீக்கியவன், விரிந்த வலம்புரிச் சங்கு வடிவ வீதியை உடையவன், நரி வலம்புரிய அருள்புரிந்தவன், முறுக்கிய சடைமுடிக் குற்ருலநாதன் ஆகிய ஈசனுக்கு வணக்கம்.

திரிகூட மென்னு நாமஞ் செவியில்வீழ் தலுமோர் தீயோன்
எரிகூடு நரகில் வீழா தெடுத்தருள் கருணை போற்றி
பரிவான விலிங்கஞ் சாத்தும் பரிவட்டங் கவர்ந்த பார்ப்பான்
புரிவான சிவத்து ரோகம் போற்றிய புனிதா போற்றி. 60

பொ-ரை: எரிவாய் நரகில் விழவிருந்த குசலன் என்பான் திரிகூடம் என்ற பெயர் கேட்ட துணையால் அவனை உய்யக்கொண்டவன், அன்பால் இலிங்கத்திற்குச் சாத்த உதவிய பரிவட்டத்தைக் கவர்ந்த பார்ப்பானது சிவ அபராதத்தைப்போக்கி அருள்புரிந்த முதல்வன் - அவன்கருணைக்கு வணக்கம்,

வானவர் பாவந் தீர்த்த மகிமையாய் போற்றி பார்த்தன்
போனசம் புடத்தைக் காட்டும் புடார்ச்சுன புரத்தாய் போற்றி
ஆனசீர்க் குரோச மைந்தி னடைந்திடு முயிர்கட் கெல்லாம்
ஞானமந் திரத்தை யோது நற்குரு வமலா போற்றி. 61

பொ-ரை: தேவர்கள் பாவம்தீர்த்த பெரியோன், அருச்சுனன் இழந்த சம்புடத்தைத் திரும்பக்கொடுத்த புடார்ச்சுன புரந்தரன், ஐந்து கூப்பிடு தூரத்தில் உயிர் நீப்போர் செவியில் சிவமந்திரம் சொல்லி நன்னெறிக்கு உய்க்கும் அருள் ஆசிரியன் ஆகிய தேவதேவனுக்கு வணக்கம்.

சத்திபீ டத்தின் மேவுந் தாரகப் பிரமம் போற்றி
முத்திதந் தருள வேண்டி முளைத்தருண் முதலே போற்றி
அத்திர விழிபண் பாட வந்தரப் பேரி யார்ப்பச்
சித்திர சபையி லாடுந் தெய்வநா யகனே போற்றி. 62

பொ - ரை: சத்திபீடத்தில் விளங்கும் பிரணவப் பெரும் பொருளுக்கு வணக்கம்; யாவருக்கும் எளிதில் முத்தி தருவதற்குத் தானே முளைத்த அருளாளனுக்கு வணக்கம்; அம்புபோன்ற விழியினையுடைய உமையம்மை இசைபாட தேவ துந்துபி முழங்கச் சித்திரசபையில் திருக்கூத்தியற்றும் தெய்வநாயகனுக்கு வணக்கம்.

வேறு

என்றுபுகழ் முனிவரெலா மிதயதா மரைமலரச்
சென்றுகரத் தாமரைகள் சென்னிமேற் குவிவதனல்
மன்றவுல கனைத்துமொரு வண்ணமாய் நின்றபிரான்
அன்றுபகல் வண்ணமுட னந்திவண்ண மாகினன். 63

பொ - ரை: இங்ஙனம் துதித்து நின்ற முனிவர்கள் நெஞ்சக்கமலம் மலரவும், அவர்கள் தம் கைம்மலர்களை முடிமேல் உயர்த்திக் கூப்புதலாலும், உறுதி உலகெலாம் ஒரே வகையில் மாறுதலின்றி உள்ள செம்பொருளாகிய சிவபிரான் அன்று பகல் வண்ணமும் மாலை வண்ணமும் ஒருங்கே கொண்டான்.

அண்டர்குழாம் பணிவானைப் பரவியருள் பெற்றேகித்
தொண்டர்குழாந் தனைப்பரவித் தண்டீசன் றுணைப்பதங்கள்
கண்டுகுழாத் தொடும்வணங்கி நந்தீசன் கழல்போற்றிக்
கொண்டல்குழாஞ் செயும்பணிலக் கோயில்வலங் கொடுபோந்தார். 64

பொ - ரை: தேவர் கூட்டத்தாற் போற்றப்படும் சிவபிரானை இவ்வாறு போற்றி வழிபட்டு, அறுபத்து மூவர், சண்டீசன் என்போரை வணங்கி, திருநந்தி தேவர் திருவடிகளைத் தொழுது, மேகக்கூட்டம் படியும் சங்கக்கோயிலை வலங் கொண்டு வந்தனர் முனிவர்.

சரமசரந் தொறுநிறைந்த தனிமுதல்சங் காலயமும்
சிரமபதம் பெயர்த்தாடுஞ் சித்திரமன் றமும்பரவிப்
பிரமபதஞ் சுவர்க்கபதம் விண்டுபதங் களிற்பெரிதாம்
பரமபதத் திருப்பார்போ லிருந்தார்செண் பகவனத்தில். 65

பொ - ரை: இயங்கியற் பொருளும் நிலையியற் பொருளும் போற்றும் ஒப்பற்ற முதல்வனது சங்கத்திருக்கோயிலையும், வேத சிரத்தின் கண்ணதாகிய திருவடியை எடுத்து ஆடும் சித்திரசபையையும் போற்றி சுவர்க்கம் முதலியவற்றினும் மேம்பட்ட சிவபோகத்திருப்பார்போல் சண்பகவனத்தில் களிப்புற்று இருந்தனர்.

ஆறுமடங் கவிர்வேணி யண்ணலார் பலதலமும்
கூறுமடங் கலிற்சூதன் குறிப்பினு லெடுத்துரைத்த
வீறுமடங் கலுங்களிறும் விளையாடுந் திரிகூடம்
நூறுமடங் கதிகமென நோக்கியதி சயித்திருந்தார். 66

பொ - ரை : கங்கைநதி ஒடுங்கும் சடைமுடிக் கடவுள் கொண்ட ஏனைய பல தலங்களினும் சிங்கம்போல வீற்றிருந்து சூதமுனிவர் புகழ்ந்துரைத்த, பெருமையுடைய சிங்கமும் யானையும் ஒன்றுகூடி விளையாடும் திரிகூடத்தலம் நூறு மடங்கு உயர்ந்தது எனப் பெருமிதங்கொண்டு ஆங்கிருந்தனர்.

குருந்துமணங் கமழ்சாரற் குற்றாலந் தனிற்பலநாள்
இருந்துபழ வினைநீங்கி யெந்தைபிரா னருள்பெற்றுத்
திருந்துசிவ மறையவர்பால் விடைபெற்றுச் செழுந்தவத்தோர்
பொருந்தும்வள நைமிசா ரணியத்திற் போந்தனரால். 67

பொ - ரை : குருந்தமலர் மணக்கும் திருக்குற்றாலத்திற் பன்னாள் தங்கித் தம் பழவினைகள் முழுவதும் நீங்கித் தூயராய், சிவபிரான்கண் விடைபெற்று அவனை வழிபடும் சிவமறையவர்பால் தஞ்செலவைக் கூறிக்கொண்டு தவமுனிவர்கள் தமக்கு உரிய நைமிசவனம் சென்றணைந்தனர்.

ஆதிபிரான் வெண்ணீறு மஞ்செழுத்து மோங்குகநாற்
சாதிநெறி வேதநெறி சைவநெறி யுந்தழைக்க
மாதரார் கற்புநெறி வளர்கமா நிலமதன்மேல்
நீதிமனு வேந்தர்நெறி நீடூழி வாழுகவே. 68

பொ - ரை: சிவபிரானுக்கு உரிய திருநீறும் திருவைந்தெழுத்தும் மக்கள் புறத்தும் அகத்தும் நின்று விளங்குக! வேத நெறியும், பிறப்பு நெறியும், சைவ நெறியும் தழைக்க! மகளிர்க்கு உரிய கற்புநெறி வளர்க! நிலவுலகில் மனுமுறைப்படி நீதிசெலுத்தும் அரசர் நீடூழி வாழ்க!

நூற்பயனுரைத்த சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் —2070

காப்புச் செய்யுள் — 2

சிவரகசிய காண்டம் முற்றிற்று

திருக்குற்றாலத் தலபுராணம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்

---

உ

மதுரைத் தமிழ்ச்சங்க நூற்பரிசோதகர்

திரு. மு. ரா. அருணாசலக்கவிராயர் அவர்கள் இயற்றிய

## நூற்சிறப்புப்பாயிரம்

---

அரியபெருங் காப்பியத்தின் இலக்கணங்கட்
கிலக்கியமீ தாமென் றோதற்
குரியதிருக் குற்றாலத் தலபுரா
ணம்பாடி உய்ந்தான் வண்மைப்
பெரியவே ளாளர்குல சிகாமணியாய்
மேலகரம் பிறங்கு சீர்த்தித்
தெரியலணி திரிகூட ராசப்பக்
கவிராச செல்வன் மன்னோ.

உ

# செய்யுள் முதற்குறிப்பகராதி

[எண் பக்க எண்]

# பிழையும் - திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 10 | 9 | என்பவற்றைத் | என்பவற்றையும் |
| ,, | 23 | ராக்கேயம் | ராக்நேயம் |
| 11 | 28 | நைமிசாரணியத்து | நைமிசாரணியத்துப் |
| 18 | 1 | கடலின்க | கடலின்கண் |
| 29 | 18 | புலவர் | புலவர்க்கும் |
| 52 | 30 | மூனிர்கவ | முனிவர்க |
| 54 | 7 | உண்டாகும். | உண்டாகும் |
| 62 | 2 | வளர்த்தோங்கி | வளர்ந்தோங்கி |
| 64 | 38 | எழுதிக்கரியமை | எழுதி கரிய மை |
| 87 | 2 | திருதராட்டினனை | திருதராட்டிரனை |
| ,, | 19 | சிசுபாலன் | கம்சன் |
| 88 | 27 | அரிசிலை | வரிசிலை |
| 100 | 16 | மூழுகுவோர் | முழுகுவோர் |
| 101 | 36 | மகாலய | மகாளய |
| 144 | 2 | சூரிய | சந்திர |
| 216 | 10 | ஓறுத்தினர் | ஓறுத்தனர் |
| 237 | 27 | அள்னமிட்டார் | அன்னமிட்டார் |
| 261 | 7 | ஓடி | ஓடி |
| 264 | 5 | வலவன் | வலன் |
| 283 | 14 | செய்கைதள் | செய்கை தன் |
| 296 | 16 | முற்றங்களுமும் | முற்றங்களும் |
| 303 | 1 | முதல்வன் | முதல்வர் |
| 307 | 3 | படைத்தானை | படைத்தாளை |
| 309 | 4 | செய்தான் | செய்தாள் |
| 319 | 27 | மேலை | மேகலை |
| 321 | 33 | எயதாத | எய்தாத |
| 324 | 34 | அந்திமாலை | ஆத்திமாலை |
| 341 | 18 | யைஞ்செழுத்தை | யஞ்செழுத்தை |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 348 | 17 | இடமும் | இடத்தையும் |
| ,, | 18 | மலேயும் | மலேயையும் |
| ,, | 19 | சார்ந்தான் | சார்ந்தார் |
| 371 | 11 | பொதியலில் | பொதியிலில் |
| 373 | 32 | என்னும் | என்பவை |
| 378 | 35 | உறுவன் | உறும் |
| 387 | 13 | சந்தினம் | சந்தானம் |
| 394 | 8 | வளைத்தனர் | வளைப்பர் |
| 397 | 25 | கர | கரா |
| 399 | 25 | சிம்புருடர் | கிம்புருடர் |
| 406 | 24 | அபிடேபித்து | அபிடேகித்து |
| 425 | 21 | முழுங்கும்படி | முழங்கும்படி |
| 426 | 22 | வாசுகி | இந்திரன் |
| ,, | 32 | திந்ர | திந்த்ர |
| 428 | 14 | ரேத்றெடுத்தலு | ரேத்தெடுத்தலு |
| 437 | 16 | பொள்கள் | பொருள்கள் |
| 481 | 8 | பெற்றப் பாண்டி | பெற்ற பாண்டி |
| 490 | 6 | தப்பற்ற | ஒப்பற்ற |
| 524 | 7 | அன்னவரே | மன்னவரே |
| 530 | 17 | திரர்பரவ | தியர்பரவ |

